58 சிந்தித் தாளிது செறியெயிற் றரிவைய துருவாய்ப்
பந்தித் தாகிய பழவினை கெடுகெனப் படிற்றால்
வந்தித் தியான்கொண்ட வடிவினின் மனநிறை பழித்தா
ளுந்தித் திங்கர் நோன்புகை விடுமிவ ளெனவே. (௪௯)

59 யாம நீங்கலு மாசன்ற ளொருமக ளுரைசால்
காம லேகைதன் னுருவொடு திருவெனத் தோன்றித்
தாமஞ் சாந்துதண் மலரின்ன பலகொண்டு துணைசால்
சேமங் காவல சேவடி போற்றெனச் சென்றாள். (௫௦)

60 வணங்கி வந்திடம் வலங்கொண்டு வழிபடு பொழுதிற்
கணங்க டாம்பல கடன்சொல்லிக் கலத்தெடுத் தேத்தித்
துணங்கை யாடத்தன் றுகிலிடை மேகலை துளங்க
வணங்கு மெய்யவ ளருந்தவ னுழைவர நினைந்தாள். (௫௧)

61 காவ லாளருங் கடையிறந் திவண்வர வொழிக
வேவ லாளரு மிதற்கெய்து மியல்துறை முயல்க
கூவி யான்குறை யுளதெனக் குறுகுமின் னமரென்
றேவில் பல்புக ழுறுதவ னறியநின் றுரைக்கும். (௫௨)

62 ஆண்டைக் கோட்டத்தை யணைந்ததோ ரகலிலை யால
மாண்டைக் காயதோர் பாழுத லிருந்தமா தவனைக்
காண்டக் காயென்செய் கருவினை தணிக்கெனப் பணிந்தாள்
வேண்டிக் கொண்டவவ் வியத்தகு விளக்குரு வுடையாள்.

என் செய்கருவினை - என்னாற் செய்யப்பட்ட பாபவினை. (௫௩)

வேறு

63 வேண்டிய வுருவுத னாலும் வேட்கைசெய் புருவத னாலுங்
காண்டகு மடவா ருருவங் காமுறு வதுநனி தாங்கி
யீண்டிய மிகுகுணத் திறைவ னியல்பினை யெனையது நினையா
நீண்டதோர் கொடியயற் கொடிபோ னிறைதவ வருளென நின்றாள்.

64 உடம்பொடு முயிரிடை மிடைந்த வொற்றுமை வேற்றுமை விகற்பிற்
றொடர்ந்தபல் வினைகளைத் துணிக்குஞ் சுதநெறி முறைமையு மறிவான்
படர்ந்ததன் யோகினை நிறுவிப் பணிந்தவட் காசிடை மொழிந்தா
னிடம்பக மகளிவள் பெரிது மிராசபுத் திரியல ளெனவே.

இடம்பகமகள் - பேய்மகள். (௫௫)

65 என்னை யீண்டைக்கு வரவென் றருந்தவன் வினவலு மெழிலார்
பொன்னனாள் புடைபெயர்த் திட்ட பொலங்கல மனங்கலக்குவபோன்
மின்னொளி யோடுற மிழற்ற மிழற்றுவகிளியென மொழிந்தாள்
முன்னநான் பரவிய வரங்கண் முடிகுறை கொடுப்பதற் கெனவே.

முடிகுறை - குறை முடித்தற்குக் கொடுக்கும் பிரார்த்தனை. (௫௬)

66 யாது நீகொண்ட வரமென் றருந்தவ னியல்பினின் வினவ
வேதினாட் டுறைபெங்க ளிறைமே லியல்பின்றி யெழவொழி கெனவே
போதுசாந் தவியொடு புகையும் பொருந்திய பொருந்தெய்வக்கெனலு
மோதிஞா னியிது வாயி னுரையழ கீதென மொழிந்தான். (௫௭)

67 தோடுகொண் டொருசெவி விளங்கத் துளங்குவ மகரமொன் றுடைப்
பாடுவண் டொடுசுரும் பாற்றப் பலகலம் வயிரவில் வீச
வாடுகொம் பனையவ ளுரைக்கு மச்சமோ பெரிதுடைத் தடிகள்
காடுகண் டாற்பிறர்க் கறியேன் கவற்றுவ தொக்குமீ தெனக்கே.

68 மணிநகு நெடுமுடி மறவேன் மன்னவன் மகளெனின் மடவா
யணிநகை யாயமோ டாடி யரும்பெறற் சுற்றமோ டிருப்பாய்
பிணிமிகு பேய்வன மிதனுட் பேதுற லொருதலை பிறவோ
துணிவொடு துறந்தவர்க் கல்லாற் றுன்னுதற் கரிதிது பிறர்க்கே.

பிற, ஓ என்பன - இடைச் சொற்கள். (௫௯)

69 வேணுவோ டினையன பிறவும் வியப்புறு பெருவனம் வினவிற்
பேணுதற் கரிதிது பெரிதும் பிணிதரு பேய்வன மெனவே
வாணுதன் மயிர்குளித் துரைக்கும் மாதவத் தடிகளென் றுனுங்
காணுதற் கரியன வுருவங் கண்டறி வனகளு முளவோ.

வேணு - மூங்கில். (௬௦)

70 புக்கிருந் தொருமனை யுறைவார்போவதும் வருவதுங் கண்டான்
மக்களுந் தாயருந் தம்முள் மருள்வதும் வெருள்வது முளதோ
மிக்கபல் கதிகளு ளுயிரின் மெய்ம்மையு முணர்ந்தவர்க் கரிதே
யொக்குமற் றவையுள வேனு முரைப்பது பொருத்தமின் றெமக்கே.

71 சந்திர முனிவர னுரைப்பத் தளிரியல் சாவுகள் சாரா
மந்திர முளதெனி னடிகள் மனத்தொடு பணிமின மெனவே
யந்தரத் தவர்களும் வணங்கு மருந்தவ னவையுனை யடையா
விந்திரன் வேண்டினும் பேய்க ளென்னமற் றிலங்கிழை மடவோள்

சந்திர முனிவரன் - முனிசந்திர பட்டாரகன். சாவு - பேய். (௬௨)

72 துப்படு துவரிதழ் துடிக்குந் துகிலிடை யகலல்கு றுளக்குஞ்
செப்படு வனமுலை செறிக்குஞ் சிதரரி மழைக்கணுஞ் சிறைக்கு
மொப்படு துடியிடை யொசிக்கு முவ்வுறு மதிமுக முழற்று
மிப்படி யவளிவை செயலு மிவையெனை யெமக்கென வுரைத்தான்.

கண்ணுஞ் சிறைக்கும் - கண்சுழல விழிக்கும். (௬௨)

73 காதின கனகப்பைந் தோடுங் கைவெள் வளைகளுங் கழுத்
தாதின வினமலர் பலவுந் தலையன நிலமிசை யுதிரப்
போதன புணரரி நெடுங்கண் புனல்வரப் பூந்துகிற் புடையா
வேதனை பெரிதுடைத் தடிகள் விளிகவிப் பிறப்பென வுரைத்தாள்.

74 பிறவியும் பிறவியுட் பிறக்கும் பிணியுமப் பிணியினைத் துணிக்கும்
மறவியின் மருந்துமம் மருந்தின் மாட்சியுங் கேட்குறின் மடவா
யறவிய மனத்தினை யாகி யலங்கழித் தொழிலொழிந் தடங்கி
யுறவினை யோம்பினை யிருவென் றுயர்தவ னுரைத்தது மிருந்தாள்.

அறவியமனம் - தர்மத்தோடு பொருந்திய மனம். அலங்கழித் தொழில் - அலவலைத் தொழில். உறவி - பிராணி. (௬௪)

வேறு

75 நாற்கதி யுள்ள நரகரை நாஞ்சொல்லின் மூன்றுவகைக்
காற்று வலையங்க ளேந்து நிரையக் கதிநிலந்தா
மேற்ற நிகோதத்தி னிம்ப ரிருளி னிருளிருண்மே
லாற்றப் புகையள றூர்மணற் கூர்ம்பர லாய்மணியே.

ஏற்ற [1]நிகோதத்தி னிம்பர் - கீழ்தொடங்கி மேலேயேற நிகோதத்திற்கிப் பால். இருளினி......மணியே - தமஸ்தமப் பிரபை முதலாக ரத்னப்பிரபையிறுதி யாக [2]வேழுநரக படலங்கள் சொன்னவாறு. (௬௬)

76 ஏழா யவைவிரிந் தெண்பத்து நான்குநூ றாயிரமாம்
போழா மவற்றப் புரையின் விகற்பமும் பொற்றொடியாய்
கீழா ரலிகண் முழுச்செவி கின்னர்க ளெண்ணிகந்த
வூழாம் பிறப்பு முவ்வாதமல் லாருரு வொப்பினரே. (௬௭)

நாற்பத்தொன்பது புரையுள்ளு மெண்பத்துநான்கு நூறாயிரம் ஆவாசங்களுள வென்றவாறு. கீழார் - ஏழா நரகத்தார். கின்னர் - கிர்ஷ்ணவர்ணத்தார்.

1 நிகோதம் - ஏழா நரகத்திற்கும் கீழே இருக்கும் நரகலோகம்.

2 ஏழு நரகங்களும் கீழ் இருந்து தமத்தமப் பிரபை, தமப்பிரபை, தூமப் பிரபை, பங்கப்பிரபை, வாலுகாப்பிரபை, சர்க்கராப்பிரபை, ரத்னப்பிரபை எனப் பெயர் பெறும்.

77 விலங்கின் வகையும் விரிவன யான்சொல்ல வேண்டுதியே
லலங்கலம் பூணா யிருவகை யாமவை யென்கொ லென்னின்
நிலங்களி னிற்பவுஞ் செல்பவு மாமென நிற்பனதா
மிலம்பட லின்றியிவ் வையகத் தைந்தா யியன்றனவே.

¹நிற்பவுஞ் செல்பவும் - ஸ்தாவரமும், ஜங்கமமும். இலம்படலின்றி - ²நாளிகையும், ³பாஹ்யமுமாகிய லோகத் தெவ்வழியுமுளதா யென்றவாறு. (௬௮)

78 இயங்கு வனவு மிருபொறி யையறி வெல்லையவாய்
மயங்கியிம் மத்திம நல்லுல கத்தன மற்றிவற்று
ளையம்படு நாவின மூக்கில நந்து முரண்முதலா
வயங்கியங் கோடிய ⁴வாயிரண் டாய வறிவினவே.

முரள் - சிப்பி. (௬௯)

79 உண்ணி முகுட்டை யெறும்பெறி தேண்முத லாவுடைய
வெண்ணில்பல் கோடிய வாயவ் விரண்டொடு மூக்குடைய
கண்ணிய ⁵மூவறி வாமவை பெற்றுற் கருணமிலா
நண்ணிய வண்டொடு தேனீ யனையவு ⁶நாலறிவே.

கருணம் - செவி. (௭௦)

80 இறப்பப்பல் காலின வெட்டி னிரண்டிரண் டேயிழிந்த
பறப்ப நடப்ப தவழ்வன ஊர்வன பற்பலவாச்
சிறப்புடை யிந்திய ⁷மைந்தென வந்த செவியுடைய
மறப்பில் கடலொடு தீவினு மல்கிய பல்விலங்கே.

எட்டுக்காலுடையன - வருடை. ஆறு காலுடையன - கழிப்பாம்பு. (௭௧)

81 வெப்பமுந் தட்பமு மிக்குவிரவிய யோனியவாய்ச்
செப்புவ செப்பில செய்கைக ளாற்றம செய்வினையைத்
துப்பன போர்த்தும் பொடித்தும் பொரித்துமுன் றோன்றுவன
வொப்பவு மொப்பி லுடம்புடம் பேகொண் டுழல்வனவும்.

---

1 ஓரறிவின; "புல்லு மரனு மோரறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" தொல் - பொரு - மா. 28.

2 நாளிகை - த்ரஸ நாளிகை. 3 பாஹ்யம் - வெளி.

4 "நந்து முரளு மீரறி வினவே" தொல் - பொரு - மா. 29.

5 "சிதலு மெறும்பு மூவறி வினவே" ஷை 30.

6 "நண்டுந் தும்பியு நான்கறி வினவே" ஷை 31.

7 "மாவு மாக்களு மையறி வினவே" ஷை 32.

"வெப்பமு......யவாய்" என்பது - உபய யோனி சொன்னவாறு. செப்புவ செப்பில வென்பது - பேசும் விலங்கும், பேசாவிலங்கும்; பேசும் விலங்காவன - சொற்கற்றுப் பேசுங் கிளி முதலாயின. போர்த்தல் - மாப்போர்வை. பொடித்தல் - [1]ஸம்மூர்ச்சனை. பொரிப்பன - முட்டை. (௭௨)

82 நல்லவர் தீயவர் திப்பிய ரொப்பில் குமானுயரோ
டல்லவ ருள்ளூறுத் தாடவ ரைவரு ளாதியினர்
சொல்லுக தன்மையென் பாயெனிற் சொல்லுவன் பல்வகையாற்
புல்லிய போகப் பெருநிலந் தன்னைப் பொருந்தினரே.

நல்லவ........ரைவருள் - சுமனுஷ்யர், தர்மனுஷ்யர், திவ்யமனுஷ்யர், குமனுஷ்யர், பிரகிருதி மனுஷ்யர் என ஐந்து வகையர். (௭௩)

83 தீமா னுயர்திறந் தேற்றிடற் பின் சிறுநிலத்தார்
கோமான் முதலார் குணங்களிற் குன்றிய குற்றத்தராய்த்
தாமாம் பெரிய தவந்தலை நிற்பினுந் தன்மைபெறு
ராமான் மடப்பிணை யன்னமென் னோக்கி யவர்திறமே.

சிறுநிலம் - ம்லேச்ச கண்டங்கள். கோமான்.....குற்றத்தர் - க்ஷத்திரியர் முதலாயுள்ள எல்லா வர்ணத்துள்ளாரும் தர்மானுஷ்டானம்பண்ணார். தாமாம்... பெறுர் - மகாதபசுக்களைப் பண்ணில் முக்தராகார். (௭௪)

84 திப்பிய ரென்னப் படுபவர் தீர்த்தந் திறப்பவரு
மப்பிய புண்ணியத் தாழிய ராழிய ரையவரும்
வெப்பிய வான்செலவ் விஞ்சைய ரெஞ்சலில் வெள்ளியரும்
பப்பிய ரேயவர் பான்மை வினவினும் பைந்தொடியே. (௭௫)

85 கோலமி னென்றற் குமானுயர் தம்மைடங் கூறுவன்கேள்
வால்முங் கோடும் வளைபல்லும் பெற்ற வடிவினராய்ச்
சீலமுங் காட்சியுந் தீண்டல ரந்தரத் தீவினுள்ளார்
நீலமும் வேலுங் கயலு நிகர்த்த நெடுங்கண்ணினாய். (௭௬)

86 மானுய ரென்னப் படுபவர் தாமா விதையமென்னுங்
கானுயர் சோலைக் கரும நிலத்தார் கருவினைபோய்த்
தானுய ரின்பந் தவத்தாற் றலைப்படுந் தன்மையினோர்
வானுயர் தோன்றல் வளர்பிறை யேசிய வாணுதலாய்.

(இ - ள்.) மனுஷ்யரென்று சொல்லப் படுவார், பெரிய விதேக மென்னு நாமத்தினையும், நறு நாற்ற முடைத்தாயுயர்ந்த பொழிலினையு முடைய கர்ம பூமி

1 ஸம்மூர்ச்சனை - மூன்று வகைப் பிறப்புக்களில் ஒன்று.

களில் [1]சரம தேகதாரிகள் ஒழியத் தர்மானுஷ்டானத்தாற் கர்மம் பண்ணுதற்குச் சக்தியுடையார்; ஆகாசத் துயர்ந்த தோற்றத்தையுடைய வளர் பிறையையேசிய வொளியுடைய நுதலா யென்றவாறு.

மானுய ரென்னப் படுவாரிவரெனவே, பரதைராவதங்கள் கர்ம பூமியான காலத்து, மனுஷ்யரும் மனுஷ்யரே யாவர், விதேகத்தார் போல நியதகர்ம பூமியிற் பிறந்திலரெனினு மென்பது. (எஎ)

87 தூமாண் பவணர் வியந்தரர் சோதிடர் கற்பருப்பால்
வேமா னியரென வைவரித் தேவர் விரித்துரைப்பிற்
றீமாண் குமரரோ டிறைவர் முன்னவ ரன்னவர்பின்
பூமாண் புனைகுழ லாய்க்கினிச் சொல்லற்பொல் லாதுகொல்லாம்.

பவணர், வியந்தரர், ஜோதிஷ்கர், கல்பவாசியர், கல்பாதீத ரெனத் தேவரை வகையர். உப்பால் வேமானிய ரென்றது - கல்பாதீதராகிய வைமானிகரை. தீமாண் குமரர் - அக்கினி குமாரர். (எஅ)

88 இன்குர லார்முத லாறும ரிரு விவருமெண்மர்
பொன்பிதிர்ந் தன்ன பொறிசுணங் காகத்துப் பூண்முலையா
யென்றனு மீரிழு தாரழு லுற்றுங் கினைபவரே
நின்றிறம் பின்னறி வாமறங் கேளென நேர்ந்தனளே.

"இன்குரலார்.........மெண்ம" ரென்றது - கின்னரர் முதலாகப் பிசாசங்களாகிய நீங்களீருக வியந்தரர் எண் வகையர் என்று நீலகேசியாரை [2]நிர்த்தேசித்தவாறு. (எகூ)

89 அந்தர வாட்கையர் சோதிடர் தாங்களு மைவகையர்
சந்திரர் சூரியர் கோளவர் நாளவ ரல்லவராய்
மந்தர மாமலை தன்னை வலமுறை சூழ்பவருஞ்
சிந்துபு நின்றுசெல் லாதே விளங்குந் திறலவரும். (அ0)

90 ஆரண னச்சுதன் சோதம னந்தமு மாதியுமாய்ப்
பாரணை நல்ல பதினறு கற்பத் தவரவர்மே
லோரிண ராயமும் மூன்றொன்ப தைந்துக ளுள்ளுறைவோர்
வீரியர் வைமா னிகரெனக் கொண்ணீ விளங்கிழையாய்.

---

1 சரம தேகதாரிகள் - முத்திக்கு முன்னுள்ள கடைசி சரீரத்தை யுடையவர்கள்.

2 நிர்த்தேசித்தல் - தெளிவித்தல்.

பாரணை - பாரித்தல். பாரணை நல்ல-நீராலே நன்றாகிய. ஓரிணையாகிய மும்மூன்று - ஒரு கொத்தாகிய வொன்பது; இது [1]நவக்கிரைவேயகஞ் சொன்னவாறு. ஒன்பது - [2]நவாணுதிசை. ஐந்து [3]பஞ்சாநுத்தரம். (௮௧)

வேறு

91 இப்படிப் பிற விபு
ளொப்பி றிய நாரகர்
துப்பரிய மா துயர்
செப்பு வாஞ் சிறிதினி. (௮௨)

92 ஈரி ருள்ளி னர்கடம்
பேர ளவ்வைஞ் ஞாறுவி
லோரு மோச னையவை
யூறும் வேத னையரே.

ஈரிருளாவது - [4]தமஸ்தமப் பிரபை.பேரள...வில் - [5]உத்ஸேதம் ஐஞ்ஞாறுவில்; ஐஞ்ஞாறு யோஜனை யெழுந்து விழுவர். (௮௩)

93 காள மான மெய்கடாம்
வாள வாய்க ளாற்பல
கீள வாப வாயினும்
மீளு மேனி நீரினே.

நீரினே - நீர்க்கீற்றுப்போல. (௮௪)

94 மல்லவர் மறஞ் செய்தூஉ
கொல்ல வாவ வல்லமெய்
பல்ல வாவு முள்ளன
சொல்ல வாவ வல்லவே.

மல்லவர் - வலியுடையவர். மறஞ்செய்து - [6](கொலைசெய்து). பல்லவா - பலவவர்கள். (௮௫)

---

1 நவக்கிரைவே யகம் - அகமிந்திர தேவலோகத்தின் ஒரு பாகம்; விவரம் விசேடக் குறிப்பிற் காண்க.

2 நவாணுதிசை - அகமிந்திர தேவலோகத்தின் ஒரு பகுதி; விவரம் விசேடக் குறிப்பிற் காண்க.

3 பஞ்சாநுத்தரம் - விஜயா, வைஜயந்தா, ஜயந்தா, அபராஜிதா, சர்வார்த்த சித்தி என்பன. இவை நாவணு திசைகளுக்குமேல் இருப்பன.

4 தமஸ்தமப் பிரபை - ஏழாவது நரகம். 5 உத்ஸேதம் - உயரம்.

6 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

95 பண்டை வேரி யர்கடாங்
கண்டுகண் கனல்க ளாய்
மண்டிமா மறஞ் செய்ப
வெண்ட வப்பல வுமே.

வேரியர்கள் - சத்துருக்கள். எண்டவப் பல - எண்ணிறந்த பல. (௮௬)

96 பேடி வேத னைபெரி
தோடி யூரு மாதலாற்
சேடி யாடு வன்மையிற்
கூடி யாவ தில்லையே.

பேடி வேதனை - நபுஞ்சக வேதனை. சேடியா......தில்லையே - பெண்ணு மாணுமன்மையிற் [1]பிரதீகாரமில்லை. (௮௭)

97 கொன்ற பாவ மென்றுமுன்
றின்ற பாவ மென்றுதீச்
சென்று வேவ வாயினு
ணின்று கூவ வாக்குவார். (௮௮)

98 உண்ண வாவ நீரெனக்
கண்ண வாவ வாபவர்
நண்ண லாவ வல்லதே
ரெண்ண லாவ தில்லையே.

கண்......பவர் - கண்ணவாவுமவர். (௮௯)

99 கரிவ கன்றி நின்றகம்
பொரிவ பொங்கி வீழ்ந்தழைத்
தெரிவ வின்ன மாதுயர்
பரிபவரு மில்லை யே. (௯௦)

100 அங்கு வெங் கனலினுட்
டங்கியுந் தலைத் தலை
பொங்கி யும்பு கைபுக
நுங்கியு நுகர்வ வே.

அங்கு - நரகத்துள். (௯௧)

1 பிரதீகாரம் - சேர்க்கை.

101 ஓச னைய பல்லுயிர்
வீவினை யுற வருங்
காய்சினக் கடு விடம்
பேசினார்க் கரு ணல. (௯௨

102 சாதிவே தனை யவை
யாதி யாக வாறினு
மோதி நாண மல்லன
நீதியிற் சுருங்கு மே.

ஓதிநாண மல்லன - 1அவதிஞானமல்லாதன. (௯௩)

வேறு

103 நலங்க ளில்பி றவிபு ணஞ்சுறு ரகர்கள்பின்
விலங்கின்வே தனைகளும் விரிக்கல்வேண் டும்மெனிற்
கலங்கியோன் றொன்றினைக் கண்டுகாற் றென்னப்போ
மலங்கிநின் றும்மனம் மன்னுமந் சங்களே. (௯௪)

வேறு

104 தண்ணென் மாம ழையினாற் றும ழிந்து ழல்பவும்
புண்ணி னுல ழியமெய்ப் போரி டைப்பு குத்தவு
முண்ணல் கார ணத்தினு லோட்டி யிட்டோ ருக்கவு
மெண்ணில் பல்வ லையினு மிழக்கு மவ்வு யிர்களே. (௯௫)

105 வேத வாதி யர்கடம் வேள்வி வாய விட்டவும்
பூத தேவர் கட்கெனப் புல்வி யோர்கள் கொல்லவு
மோது நோய்ம ருந்தெனவ் வூட்டு தற்கு ரைப்பவுஞ்
சாத லால்வ ரும்மிடர் தாமெ னைப்ப லவுமே. (௯௬)

வேறு

106 நடுக்கமுறு நாற்கதியு ளரர்கள்படுந் துன்ப
மெடுக்கிலவை தாமிரண்டு பாகினவு மாகு
மடக்கமிலர்க் காவனவு மன்றிப்பொது வென்றும்
வடுப்பிளவு வாட்பகழி வாட்டியவொண் கண்ணாய்.

இரண்டு 2பாகினவுமா மென்னு மும்மையாலிரண்டின்றி அநேக பிரகாரமு மாம்; அவை வந்தவழிக் கண்டு கொள்க. (௯௭)

---

1 அவதிஞானம் - இறந்தகால எதிர்காலங்களிலும், தூரத்திலும் நடக்கும் சம்பவங்களையும் அறியும் அறிவு.

2 பாகு - பகுப்பு; வகை; முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

107 தீவினைசெய் வாயிலொடு செற்றமனக் குற்றம்
மாவினையி னும்வெகுளி மானமொடு மாய
மோவினையிற் பற்றவல மச்சமொடு மற்று
மாவனவெ லாமடக்க மில்லவர்த நோவே.

தீவினை செய்வாயில்-வேட்டை முதலியவாகிய பாவக்கிரியைகள் செய்வுழி யும் வெகுதுக்கமாம். (கூஅ)

108 இழுக்கலுறு தீக்கதியி லுய்க்குமென வெண்ணார்
விழுக்குலங்கள் மாசுபடு மென்பதனை வேண்டார்
புழுக்குலங்க ளானிறைத்த போர்வையென வோரா
ரழுக்குடம்பிற் கேகெடுவ ராடவர்க ளந்தோ. (கூகூ)

வேறு

109 மதுவொன்றுங் கோதை மலரன்ன கண்ணாய்
பொதுவென்ற நோயும் புணர்ந்திரண்டு பாகா
மிதுவென் றிடையூ றிரண்டாய் விரியு
மதுவன்றி மெய்ப்பிணியு மூன்று யலரும். (க00)

110 பெடையூடு சாயற் பிணையன்ன நோக்கி
யிடையூ றிரண்டு மினியாவை யென்னி
னடையா வுயிரதுவு மல்லதுவு மன்ன
நடையாய் முதலதுவு நாற்பூத மாமே.

பெடை [1]யூடு சாயல் - மயிற்பெடை யொத்தசாயல். அடையாவுயிரது - அஜீவனைப்பற்றி வருவது; அல்லது, ஜீவனைப்பற்றி வருவது. (க0க)

111 பெருமழையு நீரும் பெரிதெறியுங் காற்றுங்
கருமலையுங் கல்லுங் கடுநவையு நஞ்சுஞ்
செருமலையும் பல்படையுஞ் செந்தீயும் வந்திங்
குருமிடியு மெல்லா முயிரல்ல வூறே. (க0உ)

112 செத்துவங்க டாக்கிச் செயிரின னங்குதலும்
மக்கள்ப லவகையின் மன்னு [2]மலைகொலையுந்
துக்கஞ்செய் பல்விலங்கிற் றோன்று மிடையூறு
மொக்க விவைமூன்று முயிருடைய வூறே.

செத்துவங்கள் - பிசாசங்கள். (க0ங)

1 ஊடு - உவமவாசகம். 2 அலைகொலை - துன்புறுத்துங் கொலை.

113 தீர்வனவுந் தீராத் திறத்தனவுஞ் செய்ம்மருந்தி
னார்வனவும் போலா [1]துவசமத்தி னுய்ப்பனவும்
பார்வினவுங் காணு மவைமூன்று கூற்றவா
நேர்வனவே யாகு நிழறிகழும் பூணாய்.

தீர்வன......பனவும் - சாத்யம், அசாத்யம், [2]யாப்யம். (கக௩)

114 நல்லாய்நா ரின்றிப்பே நாமுன் விரிசெய்த
வெல்லா விமையோர்க்கு மென்று மிறுதிசார்ந்
தல்லா லகன்றுன்ப மாகா நுமரன்றிப்
பொல்லா தவர்களுறு மல்லைப் பகலுறுங்கால்.

நாரின்றி - சிம்பின்றி. "இறுதி சார்ந்தல்......மாகா" என்பது - [3]ஆயுரா வஸான காலத்துக் கண்ணிமைத்தல் முதலாவுடைய மரண சின்னங்களைக்கண்டு மகா துக்கங்களை அனுபவித்தலல்லது, அவர்கட்கு வேறு துக்க முளவாகா வென்றவாறு.

"நாமுன......கால்"[4] (என்பது)—பிசாசங்களாகிய உங்களை யொழிய வெல்லாத் தேவர்களுக்கும் பெரும்பான்மையும் [5]சம சதுர ஸம்ஸ்தானமும், [6]தேஜபத்ம சுக்ல லேஸ்யைகளுமே யாதலால் [7](அவர்கள்) [8]சர்வாங்கோ பாங்க சுந்தரராயழகியர்கள்; நீங்களோ விரூபமும, பயங்கரமும், [9]துர்லேஸ்யா பரிணத முமாகிய சரீரத்தினை யுடைமையிற் பொல்லாதி ரென்றவாறு. இன்னும், நீங் களே பிரசவாகார முதலாகிய துஷ்பிரதேசங்களை ஆஸ்ரித்து நிற்றலிற்றூய்மை யில்லாதீர்; நீங்களெவற்றும் பசியும், பிறர்க்கேவல் செய்தலும் முதலாகவுடைய துக்கங்களையுடையீர்; நீங்களே பரபீடை பண்ணும் பொல்லாத் தீக்குணமுடை யீர்; ஒழிந்த தேவர்கள் நல்லரென்றவாறு. (கக௪)

115 தீயே யெனவெவர்க்குஞ் செல்லல் பலவாக்கி
வேயே புரைதோளாய் மிக்க விடமெங்கும்

1 உவசமம் - அடங்கி நிற்றல்.

2 யாப்யம் - ஊர்தல்.

3 ஆயுராவஸானம் - ஆயுஷ்ய முடிவு.

4 விடுபட்டதற்குக் கூட்டப் பட்டது.

5 சமசதுரஸம்ஸ்தானம் - சரீர அமைப்புக்களில் ஒருவிதம்; விசேடக் குறிப்பிற் காண்க.

6 தேஜ, பத்ம, சுக்ல,லேஸ்யை-மூன்றுவித சுபலேஸ்யைகள்;வி.கு.காண்க.

7 விட்டதற்குக் கூட்டப் பட்டது.

8 சர்வாங்கோபாங்கம் - சரீரம், உறுப்புக்கள் முதலிய வெல்லாம்.

9 துர்லேஸ்யா பரிணதம் - அசுப லேஸ்யைகளான நீல, கிருஷ்ண, கபோத லேஸ்யைகளின் தோற்றம்.

பேயே யெனப்பட்டுப் பேறு தனசெய்வர்
நீயே யெனினல்லை நின்போல்வ ரன்றே.

"மிக்க...பட்டு" என்பது - [1]வியான முதலாயினவின்றி மனுஷ்ய லோகமாகிய விவ்விடத்துமிக்குப் பேயென்றிகழப்பட் டென்றவாறு. (௫௦௧)

116 பேர்தற் கரும்பிணி தாமிவை யப்பிணி
தீர்தற் குரிய திரியோக மருந்திவை
யோர்தற் றெளிவொ டொழுக்க மிவையுண்டார்
பேர்த்தப்பிணி யுட்பிறவார் பெரிதின்ப முற்றே.

திரியோக மருந்து - மூன்று கூடிய மருந்து. "ஓர்த...யுண்டார்" என்பது-நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கமிவை உபயோகித்தார். திரியோக மருந்தென்றதனாற் றனித்தனி நன்ஞான முதலாகிய மூன்றும் பிறவி நோய் தீர்க்கு மருந்தாகாவென்றவாறு; என்னை? நன்ஞானமே மருந்தாயின், நன்ஞானம் பிறந்தபொழுதே முக்தனாதல்வேண்டும்; அன்றியும் கர்மகாரியமாகிய வியாதி முதலாயின விலவாதலும் வேண்டும்; இனித் தீஞானமே சம்சார காரணமாதல் வேண்டும்; வேண்ட, பாசித்தாந்தங்களாகிய [2]ஏகாந்த மதங்களை யறிதல் சம்சார காரணமாதல்வேண்டும்; [3]உபேக்ஷாரூபத்தாலறிதல் சம்சார காரணமன்றெனில் [4]சிரத்தாரூபத்தாலறியினல்லது [5]அநேகாந்த ஞானமும் முக்தி ஹேதுவாகாதாம்; ஆதலால், [6]சம்யக்தர்சன விகலமாகிய [7]சம்யக்ஞானம் முத்திஹேதுவாகாதாம்; ஆகில், இவ்விரண்டுமே யமையும்; நல்லொழுக்கம் வேண்டாவெனில், அழகிதன்று, பிறிதொரு வியாபாரமின்றி யிவ்விரண்டுமேயாய் நிகழ்தல் நல்லொழுக்கமாதலின்; என்னை?

[8]"வின்வற விருமையும் விளங்கத் தன்னுளே
யொள்ளிதிற் றரித்தலை யொழுக்க மென்ப"

என்றாராகலின்.

இனி நற்காட்சியே வீடுபெறு நெறியெனலுமாகாது, நன்ஞானமொழிய நற்காட்சி கூடாமையின். என்னை? அறிந்தே சிரத்தை பண்ணவேண்டு மாதலின்.

---

1 வியானம் - ஊர்தி; விமானம்.
2 ஏகாந்த மதம் - ஒரே பக்ஷத்தையேபற்றி வரும்மதம்.
3 உபேக்ஷாரூபம் - வேண்டாத தன்மை.
4 சிரத்தாரூபம் - நம்பிக்கையாந் தன்மை.
5 அநேகாந்தஞானம் - பல பக்ஷத்தைப்பற்றித் தோன்றும் ஞானம்.
6 சம்யக்தரிசனவிகலமாகிய - நற்காட்சிக்கு வேறான.
7 சம்யக்ஞானம் - நன்ஞானம்
8 சீவகசிந்தாமணி - 2845.

இனி நல்லொழுக்கமே பிறவிநோய் தீர்க்கு மருந்தெனலுமாகாது; என்னை? அறிந்து தெளிந்தே யொழுகவேண்டலின். இனி நன்ஞானம், நற்காட்சி யென்னு மிரண்டுமெப்பொழுது மொருங்கு நிற்றலே நல்லொழுக்கமாதலினும்.

ஆதலினிம்மூன்றுங் கூடியே மருந்தாமென்பது. 'திரியோக மருந்திவை' யெனப் பன்மையாற் கூறியவதனால் நற்காட்சி முதலான மும்மையும் [1]நிச்சய வியவகாரம் எனவும், [2]சகலம் விகலம் எனவும் பல்வேறு வகைப்படும். அன்றி யும், "திரியோக மருந்து ஓர்த்தெளிவோ டொழுக்கமிவை" யெனக் கூட்டி யின், "இவை யுண்டார் பேர்த்தப் பிணியுள்" எனப் பொருளுரைக்கவமையும்.

வேறு

117 மாமெனத்த நோக்கி மருந்தென் றவைமூன்றி னுள்ளும
ஞானத்தி னன்மை தனிகேட்குவை யாயி னக்கா
ஆனத்தை யின்றி யுயிராதிய வுள் பொருள்க
டானற் குணர்த லிதுவாமதன றத்து வட்டே.

உயிராதியவுள் பொருள்— [3]பஞ்சாஸ்திகாயம், [4]ஷட்திரவ்யம், [5]சப்த தத் துவம், [6]அஷ்டபதார்த்தம், [7]நவபதார்த்தம் என்பன; அவை உயிர்முதலாக வோதப்படுதலின். இவை யிற்றின் விரிவு வந்தவழிக் கண்டுகொள்க. (கoஅ)

வேறு

118 காண்டலு மல்லதே யளவை காண்டன்முன்
பூண்டவைம் பொறிமன மவதி புண்ணிய
மாண்டகு மனப்பரி யாயங் கேவல
நாண்டகு மிவையவ நருவ நண்ணிறைய்.

முனவே, "மாமெனத்த நோக்கி" என்னுங் [8]காதையுளுயிராதி பொரு [9]ணற்குணர்தல் நன்ஞான மென்றுரித்து தொடங்கி, "காட்ட நடவனவை" என்

1 நிச்சயவியவகாரம் - நிச்சய ரத்தினத்திரயமும், வியவகார ரத்தினத்திரய மும்.

2 சகலம்விகலம் - ஷை

3 பஞ்சாஸ்திகாயம் - ஜீவ, அஜீவ, தர்ம, அதர்ம, ஆகாசமெனவைந்தும்.

4 ஷட்திரவ்யம் - பஞ்சாஸ்தி காயங்களோடு காலமுங் கூடிய ஆறு.

5 சப்ததத்துவம் - ஜீவ, அஜீவ, ஆஸ்ரவ, ஸம்வர, நிர்ஜர, பந்த, மோக்ஷ மென வேழாம்.

6 அஷ்டபதார்த்தம் - 121 ஆம் செய்யுளுரையிற் காண்க.

7 நவபதார்த்தம் - சப்த தத்துவங்களோடு பாவபுண்ணிய மிரண்டுஞ் சேர்ந்த வொன்பதாம்.

8 காதை - செய்யுள்; இதனைச் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களிற் காண்க.

9 நற்கு - நன்கு "அது நற்குணர்ந்தனையாயின்" புறம்-121

னுங் காதையளவு முயிராதி பொருள்களை யளக்குமளவை வேறுபாடு கூறு கின்றார்.

காண்டல் - பிரத்தியக்ஷம். அல்லது - பிறிது ; பரோக்ஷம். இவ்விரண்டும் பொருள்களை யளக்குமளவை. பொறி, மனம், அவதி, மனப்பர்யய, கேவல பிரத்தியக்ஷம் - இந்திரிய பிரத்தியக்ஷம், மானஸ பிரத்தியக்ஷம், அவதி பிரத்தியக்ஷம், மனப்பர்யய பிரத்தியக்ஷம், கேவல பிரத்தியக்ஷமென விவ்வாறும். அஃதேல், காண்டலாவது, கண்முதல் இந்திரியங்களைப்பற்றி வருவதன்றே; மானஸ பிரத்தியக்ஷ முதலாயின காண்டலாயினவா றென்னையெனின், அஃதன்று; காண்டலென்பது விளங்கவறிதல். என்னை ?

"வேதங் கரைகண்டான், காலமூன்று மவைகண்டு கூறியவன், கண்டுரைப்பின், சூத்திரப் பொருள் கண்டான்."

> [1]"செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
> ருயிரிற் றலைப்பிரிந்த வூன்"

என்பனபோல வென்பது. 'பூண்டவைம் பொறிமன' மென்றமையால், அவதி மனப்பர்யய கேவல பிரத்தியக்ஷங்கள்போல இந்திரிய பிரத்தியக்ஷமும், அநிந்திரிய பிரத்தியக்ஷமும் பெருவிளக்கமென றுகொள்க. 'புண்ணிய மாண்டரு மனப்பரியாய' மென்றதனுல், மனப்பர்யய ஞானம் அவதியிற் பெருவிளக்க முடைத்தாய்த் தபோதனர்கண்ணே சம்பவிப்பதாமென்பது.

இனி இந்திரிய பிரத்யக்ஷமாவது-கண் முதலாகிய இந்திரியங்களால் நிலமுதலாகிய புறப்பொருள் பற்றிப் பிறக்கும் ஞானம். மானஸ பிரத்யக்ஷமாவது - சுகாதிஸ்வரூபம் விஷயமாகவும், ஸ்மரணுதி ஞானங்களுடைய ஸ்வரூபம் விஷயமாகவும் பிறக்கும் ஞானம். அவதிபிரத்யக்ஷமாவது - அவதி [2]ஞாஞவரணீயம், [3] வீர்யாந்தராயமென்னும் கர்மங்களுடைய [4]க்ஷயோபசமத்தால் [5]ரூபிதிரவ்யம் பற்றி விளங்கத் தான் மிக்குப் பிறக்கும் ஞானம். மனப்பர்யய பிரத்யக்ஷமாவது - மனப்பர்யயஞாஞவரணீயம் வீரியாந்தராயமென்னுங் கர்மங்களது க்ஷயோபசமத்தால் பிறர் மனத்து நினைத்தபொருளைப்பற்றி மிக்குப் பெருகிய விளக்கத்ததாகிப் பிறக்கும் ஞானம். கேவல பிரத்யக்ஷமாவது - ஞாஞவரணீயம், [6]தர்சஞவரணீயம், [7]மோஹநீயம், [8]அந்தராயமென்னும் காதிகர்மங்கள் ஒழிவறக்கெட்ட

---

1 திருக்குறள் - புலான்மறுத்தல் 8.
2 ஞாஞவரணீயம் - ஞானத்தை மறைக்குங் கர்மம்.
3 வீர்யாந்தராயம்-வீரியத்தைத் தடுக்குங் கர்மம் ; அந்தராயத்தினுட் பிரிவு.
4 க்ஷயோபசமம் - அறக்கெடுதலும், அடங்குதலும்.
5 ரூபிதிரவ்யம் - ரூபத்தோடு கூடிய பொருள்.
6 தர்சஞவரணீயம் - காட்சியை மறைக்குங் கர்மம்.
7 மோஹநீயம் - மயக்கம்.
8 அந்தராயம் - எட்டுவித கர்மங்களிலொன்று ; தடுக்கும் இயல்புடையது.

வழிப் பிறப்பதாகிய ஜீவாதி சகல பதார்த்தங்களையும், [1]காலத்திரய கோசரமாகிய வற்றின் நிகழ்ச்சிகளையும், [2]ஸாதனக்ரம வ்யாகாதத்தினீங்க ஏக க்ஷணத்தே [3]ஸாக்ஷாத்கரிப்பதாய், விளக்கத்துக்குத் தலைவரம்பாய், விளக்க முடைத்தாகிய பகவத் அர்கத் பரமேஸ்வரனது திவ்யஞானமாகும்.

விளக்கமாவது - கர்மங்களது நீக்கத்துக்குத் தக்கவாறு ஆத்மாவின்கட் பிறக்கும் [4]விசுத்தி. (கOக)

119 நினைவு மீட்டுணர் வூக நேர்தரு
புனைவுசே ரனுமை பொய்யின்மை மெய்யுரை
முனைவர்தம் மாகம மொழிபு மாகுமென்
றனையன காட்சியி லளவை யைந்துமே.

இது, பரோக்ஷப் பிரமாண பேதஞ் சொல்லுகின்றது.

நினைவு - ஸ்மரணம். மீட்டுணர்வு - பிரத்யபிஞ்ஞானம். ஊகம் - தர்க்கம். புனைவு சேரனுமை - பேணப்படுமனுமானம். பொய்யினீங்கி மெய்யாகிய ஆப்த வாக்கியமாகிய ஆகமம் எனப் பரோக்ஷப் பிரமாணம் ஐந்துமாகு மென்றவாறு.

அவற்றுள் ஸ்மரணமாவது - அதுவென விறந்தது தோற்றுவிக்கும் ஞானம். பிரத்யபிஞ்ஞானமாவது - அதுவே யிது, யானேயவன், அவனே யிவன், அதுவே போலுமிது, ஆபோலு மாமா வென்பன முதலாகிய [5]பிரதீதிகளை யுடையவாய் அபேதமும், [6]ஸாத்ருஶ்ய மு முதலாகிய விஷயங்களைப்பற்றிப்பிறக்கும் மீட்டுணர்ச்சியாகும். தர்க்கமாவது - இதனை யொழியவிது கூடாதென்பது முதலாகிய பிரதீதிகளை யுடைத்தாகி விசாரத்தாற் பிறப்பதாகிய ஞானமாகும். அநுமானமாவது - ஸாத்யத்தை யொழிய ஸம்பவியாதாகிய ஸாதனத்தால் ஸாத்யத்தைப்பற்றிப் பிறக்கும் ஞானமாகும்.

[7]ஸாதனந்தான் இருவகைத்து, விதிஸாதனம், பிரதிஷேதஸாதனம் என. அவற்றுள் விதிஸாதனம் இருவகைத்து, தர்மிவிதிஸாதனம், தர்மிவிசேஷ விதிஸாதனம் என. அவற்றுள் தர்மிவிதிஸாதனமாவது-

---

1 காலத்திரயகோசரம் - திரிகாலவுணர்ச்சி.

2 ஸாதனக்ரம வியாகாதம் - கருவி, முறை, தடை.

3 ஸாக்ஷாத் கரித்தல் - பிரத்தியக்ஷமாகவறிதல்.

4 விசுத்தி - பரிசுத்தமான ஞானவொளி.

5 பிரதீதி - ஞானம்.

6 ஸாத்ருஶ்ய - ஸமானமான.

7 ஸாதனந்தான் இருவகைத்து, விதிஸாதனம், பிரதிஷேதஸாதனம் என. அவற்றுள் விதிஸாதனம் இருவகைத்து, தர்மிவிதி ஸாதனம், தர்மிவிசேஷ விதிசாதனம் என. அவற்றுள் தர்மி விதிஸாதனமாவது

ஸந்தி பஹிரர்த்தா: ஸாதந தூஷண ப்ரயோகாத்; ஸந்தி ப்ரமாணாநி இஷ்ட ஸாதநாத் என்பன. இவற்றுள் ஸாத்யமாவன-பஹிரர்த்தஸத்பாவமும், ப்ரமாணஸத்பாவமும். ஸாதநமாவன - ஸாதநதூஷண ப்ரயோகமும், இஷ்ட ஸாதநமும். இனி ஸாத்யமாகிய பஹிரர்த்தஸத்பாவத்தை யொழிய ஸாதநமாகியஸாதநதூஷணப்ரயோகங் கூடாதாம். என்னை ? ஸாதநதூஷணப்ரயோகங்கடாம் பஹிரர்த்தங்களாதலின். இவ்வாறே யொழிந்த ஸாதநங்களிலும் அவிநாபாவ மறிந்துகொள்க.

1இனி தர்மிவிசேஷவிதிஸாதந மிருவகைத்து: தர்மியுட னொன்றுவதும், தர்மியில் வேறாயதூஉமென. அவற்றுள் தர்மியுடனொன்றுவது தானுமிருவகைத்து.—த்ருஷ்டாந்தமில்லதூஉம், த்ருஷ்டாந்தமுடையதூஉமென. அவற்றுள்த்ருஷ்டாந்தமில்லது-ஸர்வமநேகாந்தாத்மகம் ஸத்வாத் என்பது. இவ்விடத்து தர்மியாவது-ஸர்வஶப்தவாச்யம், அநேகாந்தாத்மகத்வ மாகிய தர்மத்தையுடையதாகையால். இவ்வழி ஸத்வமென்னும் ஹேது தர்மியுடனொன்றாகியவாறு காண்க. மேல் வருவனவற்றையு மிவ்வாறே யறிந்து கொள்க.

2இனி த்ருஷ்டாந்த முடையது தானு மிருவகைத்து, த்ருஷ்டாந்தம் யாவற்றினுஞ் செல்வதூஉம், செல்லாததூஉமென. அவற்றுள் த்ருஷ்டாந்தம்

---

ஸந்தி பகிரர்த்தா: ஸாதன தூஷண பிரயோகாத, ஸந்தி பிரமாணாநி இஷ்டசாதனாத் என்பன. இவற்றுள் ஸாத்யமாவன, பகிரர்த்தஸத்பாவமும், பிரமாண ஸத்பாவமும். ஸாதனமாவன, ஸாதன தூஷணப் பிரயோகமும், இஷ்டசாதனமும். இனி, ஸாத்யமாகிய பகிரர்த்தஸத்பாவத்தை யொழிய ஸாதனமாகிய ஸாதன தூஷண பிரயோகங் கூடாதாம். என்னை ? ஸாதனதூஷண பிரயோகங்கடாம் பகிரர்த்தங்களாதலின். இவ்வாறே ஒழிந்த ஸாதனங்களிலும் அவிநாபாவ மறிந்து கொள்க.

1 இனி, தர்மி விசேஷ விதிஸாதன மிருவகைத்து, தர்மியுடனொன்றுவதும் தர்மியில் வேறாயதூஉமென. அவற்றுள் தர்மியுடனொன்றுவதுதானு மிருவகைத்து, திருஷ்டாந்த மில்லதூஉம், திருஷ்டாந்த முடையதூஉமென. அவற்றுள் திருஷ்டாந்த மில்லது - ஸர்வம் அநேகாந்தாத்மகம் ஸத்வாத் என்பது. இவ்விடத்து தர்மியாவது - ஸர்வ ஸப்தவாச்சியம், அநேகாந்தாத்மகத்துவமாகிய தர்மத்தையுடைய தாகையால். இவ்வழி சத்வ மெனனும் ஹேது தர்மியுடன் ஒன்றாகியவாறு காண்க. மேல்வருவனவற்றையு மிவ்வாறே யறிந்து கொள்க.

2 இனி, திருஷ்டாந்தமுடையது தானுமிருவகைத்து, திருஷ்டாந்தம் யாவற்றினும் செல்வதூஉம், செல்லாததூஉமென. அவற்றுள் திருஷ்டாந்தம்

யாவற்றினுஞ் செல்வது-அநித்ய: ஸப்த: க்ருதகத்வாத் கடவத் என்பது. இவ்வழி க்ருதகத்வம் என்னும் ஸாதநம் த்ருஷ்டாந்தமாகிய கடத்திலே யன்றி மற்றும் அநித்தியமாகிய மின்னும்,வில்லும்,காட்டுப்பூவு முதலாகிய வற்றினுஞ் சென்றவாறு காண்க. இனிச் செல்லாதது - அநித்ய: ஸப்த: ப்ரயத்நாநந்தரீயகத்வாத் கடவத் என்பது. இது கடத்திற்போல அநித்யமாகிய மேகத்வநி மின்னு, வில்லு முதலாயினவற்றுட் செல்லாதவாறு காண்க. இத்துணையும் தர்மியோ டொன்றாகிய ஸாதந பேதஞ் சொன்னவாறு.

1இனி தர்மியுடன் வேறாகிய ஸாதநம், கார்யம், காரணம், அகார்ய காரண மெனப் பல்வேறு வகைப்படும். அவற்றுள் கார்யம் - ஸாதநம் அக்நிரத்ர தூமாத் என்பது.ஸாத்யமாகிய அக்நிக்கு கார்யமாகிய தூமம் ஸாதநம். காரணஸாதநம் - வ்ருஷ்டி பவிஷ்யதி மேகோந்நதி விசேஷாத் [2] (என்பது.) அகார்ய காரணம இருவகைத்து. ஸாத்யத்துடன ஸமஸமயம், பின்னஸமயம் என. ஸமஸமயம் ரூபமஸ்தி ரஸாத் [3] (என்பது.) பின்ந ஸமயம் - உதேஷ்யதி[4] சகடம் க்ருத்திகோதயாத்[5] (என்பது.) இவையெல்லாம் விதிஸாதநவிசேஷண மென்றுணர்க.

---

யாவற்றினும் செல்வது, அநித்திய: ஸப்த: க்ரதகத்வாத் கடவது எனபது ; இவ்வழி க்ரதகத்வம் என்னும் ஸாதனம் திருஷ்டாந்தமாகிய கடத்திலேயன்றி மற்றும் அநித்யமாகிய மினனும், வில்லும், காட்டுப் பூவமுதலாயின வற்றினுஞ் சென்றவாறு காண்க. இனி, செல்லாதது, அநித்ய: சப்த: பிரயத்நாந்த ரீயத வாத் கடவது என்பது ; இது, கடத்திற்போல அநித்தியமாகிய மேகத்துவனி, மின்னு, வில்லு முதலாயினவற்றுட் செல்லாதவாறு காண்க. இத்துணையும் தர்மியோடொனறாகிய ஸாதன பேதஞ் சொனனவாறு.

1 இனி, தாமியுடன் வேறாகிய ஸாதனம, கார்யம், காரணம்,அகாரியகாரண மெனப்பல் வேறு வகைப்படும். அவற்றுள் காரியஸாதனம் அக்கினி ரஸ்து தூமாத் என்பது ; ஸாத்யமாகிய அக்கினிக்குக் காரியமாகிய தூமம் சாதனம். காரணசாதனம், வ்ருஷ்டிர் பவிஷ்தி மேகோன்னதி விசேஷாத் என்பது. அகார்யகாரணம் இருவகைத்து, ஸாத்தியத்துடன் ஸமஸமயம், பின்னஸமய மென ; ஸமஸமயம் ரூபம் அஸ்தி ரஸாத என்பது ; பினன ஸமயம் உதேஷ்யதி சகடம் கிருத்திகோதயாத் என்பது. இவையெல்லாம் விதிசாதன விசேஷ மென்றுணர்க.

2 விடுபட்டதற்குச் சேர்க்கப் பட்டது.
3 விட்டதற்குக் கூட்டப் பட்டது.
4 சகடம் - ரோகணி.
5 விட்டதற்குக் கூட்டப் பட்டது.

[1]இனி, ப்ரதிஷேதஸாதநமு மிருவகைத்து,-விதிரூபம், ப்ரதிஷேதரூபம் என. அவற்றுள் விதிரூபம் பலவகைப்படும், விருத்தம், விருத்த கார்யம், விருத்த காரணம், அகார்ய காரணம் என. அவற்றுள் விருத்தம்- நாஸ்த்யத்ர ஶீதஸ்பர்ஶோ வஹ்நே: என்பது. நாஸ்த்யத்ர ஶீதஸ்பர்ஶோ தூமாத் என்பது விருத்தகார்யம். நாஸ்ய ரோமஹர்ஷாதிவிஶேஷா: ஸந்நிஹிததஹநவிஶேஷாத் என்பது விருத்த காரணம். அகார்ய காரணம் விருத்த வியாப்த முதலாகப் பல்வேறு வகைப்படும். விருத்த வியாப்தமாவது - நாஸ்தி பாவேஷு ஸர்வதைகாந்த: ஸத்வாத் என்பது. என்னே? ஸர்வதைகாந்த விருத்தமாவது, அநேகாந்தம் அதனோடு வியாப்தமாகையால். விருத்த ஸஹசரமாவது—நாஸ்த்யஸ்ய மிதயாஜ்ஞாநம் ஸம்யக்தர்ஶநாத் என்பது. என்னே? மித்யாஜ்ஞாந விரோதியாகிய ஸம்யக்ஜ்ஞாநத்தோடு ஸஹசரமாகையால். விருத்தஸஹசர காரணமாவது - நாஸ்த்யஸ்ய மித்யாஜ்ஞாநம் தத்வாதிகமாத் என்பது; என்னே? மித்யாஜ்ஞாந விரோதியாகிய ஸம்யக்ஜ்ஞாநஸஹசரமாகிய ஸம்யக்தர்ஶநத்துக்கு தத்வாதிகமம் காரணமாகையால். விருத்த ஸஹசரகார்யமாவது—நாஸ்த்யஸ்ய மித்யாஜ்ஞாநம் அநுகம்பாஸ்திக்யாதே: என்பது; என்னே? அநுகம்பாதி ஸம்யக்தர்ஶநகார்யமாகையால். இத்துணையும் விதிரூபமான ப்ரதிஷேதஸாதநம்.

1 இனி, பிரதிஷேத ஸாதனமு மிருவகைத்து, விதிரூபமும், பிரதி ஷேத ரூபமுமென. அவற்றுள் விதிரூபம் பலவகைப் படும் விருத்தம், விருத்த காரியம், விருத்த காரணம், காரியகாரணமென. அவற்றுள் விருத் தம் - நாஸ்தியத்ர சீதஸ்பரிஸோ வஹ்நே: என்பது. நாஸ்தியத்ர சீதஸ் பரிஸோதூமாத் என்பது விருத்த காரியம். நஅயம் முஙிபர பீடா கா: கபா ஊத்வாத் என்பது விருத்த காரணம். அகாரிய காரணம் விருத்தவ்யாப்த முத லாகப் பல்வேறு வகைப்படும். விருத்தவ்வியாப்தமாவது - நாஸ்தி பாவேஷுஸர் வதைகாந்த ஸத்வாத் என்பது; என்னே ? ஸர்வதைகாந்த விருத்தமாவது, அநே காந்தம் ; அதனோடு வியாப்தமாகையால். விருத்த ஸஹசரமாவது - நாஸ்திமு னோர் மித்யாக்ஞானம் ஸம்யக் தர்சநாத் என்பது ; என்னே ? மித்யாக்ஞான விரோ தியாகிய ஸம்யக் ஞானத்தோடு ஸஹசர மாகையால். விருத்தஸஹசர காரண மாவது - நாஸ்தி முனோர் மித்யாக் ஞானம் தத்வாதிகமாத் என்பது ; என்னே ? மித்யாக் ஞான விரோதியாகிய, ஸம்யக்ஞான ஸஹசரமாகிய ஸம்யக்தர்சனத் துக்கு தத்வாதிகமம் காரணமாகையால்: விருத்தஸஹசர காரியமாவது நாஸ்திமு னோர்மித்தியாக் ஞானம் அநுகம்பா ஆஸ்திக் கியாதேகே என்பது ; என்னே ? அநுகம்பாதி ஸம்யக் தர்சனகாரிய மாகையால். இத்துணையும் விதி ரூபமான பிரதி ஷேதசாதனம்.

[1]இனி ப்ரதிஷேதரூப ப்ரதிஷேதஸாதநம் பல வகைப்படும். அவற்றுள் ஸ்வபாவாநுபலம்பமாவது - நாஸ்தி போதாத்மநி நிருபாதிமத்வம் அநுபலம்பாத். கரமஸ்தக விஷாணவத் என்பது. காரணாநுபலம்பமாவது - நாத்ர க்ருஹபாக ஸம்பவ: பாவகாநுபலப்தே:[2] (என்பது.) கார்யாநுபலம்பமாவது — நாத்ர ஶரீரே புத்திவ்யாபாராதி விஶேஷாநுபலப்தே: என்பது. வ்யாபகாநுபலப்தியாவது - நாஸ்த்யத்ர ஶிம்ஶபா வ்ருக்ஷாநுபலப்தே: என்பது; என்னை? ஶிம்ஶபையுள்ளளவும் வ்ருக்ஷம் செல்லுமாகையால். ஸஹசராநுபலப்தியாவது — நாஸ்த்யஸ்ய தத்வஜ்ஞானம் ஸம்யக்தர்ஶநாபாவாத் என்பது.

நபவிஷ்யதி முஹூர்த்தாந்தே ஶகடோதய:
க்ருத்திகோதயாநுபலப்தே:

என்பது - பூர்வசராநுபலப்தி:

முஹூர்த்தாத் ப்ராக் நோதகாத் பரணி க்ருத்திகோதயாநுபலப்தே: என்பது - உத்தரசராநுபலப்தி:. இவ்வாறே யொழிந்தனவு மறிந்து கொள்க.

[3] புனைவுசேரனுமை யெனுந்தனுற் புனையப்படா அநுமானங்களு முள. அவை யாவன : ஹேத்வாபாஸங்களாற் பிறக்கும் அநுமானம்.

---

1 இனி, பிரதிஷேத ரூப பிரதிஷேத சாதனம் பல வகைப்படும். அவற்றுள் ஸ்வபாவாநுபலம்பமாவது-நாஸ்திபோதாத்மநி நிருபாதிமத்வம் அநுபலம்பாத். கர மஸ்தக விஷாணவத் என்பது. காரணாநுபலம்பமாவது - நாத்ரக்ருஹபாக சம்பவ: பாவகாநுபலப்தே: என்பது. கார்யாநுபலம்பமாவது - நாத்ர ஶரீரே புத்திவியாபார திவிசேஷாநுபலப்தே: என்பது. வியாபகாநுபலப்தி யாவது - நாஸ்தியஸ்தர ஶிம்சபாவிருக்ஷாநுபலப்தே: என்பது; என்னை? ஶிம்சபையுள்ளளவும் விருக்ஷம் செல்லுமாகையால். ஸஹசாராநுபலப்தியாவது-நாஸ்தியஸ்யத்வக் ஞானம்ஸம்யக்தர்சனபாவாத் என்பது. நபவிஷ்யதி முகூர்த்தாந்தே ஸகோடோதய: கிருத்திகோதயாநுபலப்தே: என்பது பூர்வசாராநுபலத்தி:. முகூர்த்தாத் ப்ராக்நோத காத்பாணி கிருத்தியகாதயாநு பலப்தே: என்பது உத்தாராநுபலப்தி:. இவ்வாறே யொழிந்தனவு மறிந்து கொள்க.

2 விடுபட்டதற்குக் கூட்டப்பட்டது.

3 ‘புனைவுசே ரனுமை’ என்பதனுல் புனையப்படா அனுமானங்களுமுள; அவையாவன: ஹேத்வாபாஸங்களாற் பிறக்கு மனுமானம்.

ஹேத்வாபாஸங்கள் மூன்று வகைப்படும் - அஸித்தம், அநைகாந்திகம், விருத்தம் என. அவற்றுள் அஸித்த மென்பது,- ஸ்வரூபாஸித்தம், அக்ஞாநாஸித்தம் ஸந்திக்தாஸித்தம் என மூன்று வகைத்து. ஸ்வரூபாஸித்தமாவது - அநித்யஶ்ஶப்த: சாக்ஷுஷத்வாத் என்பது. என்னை? ஶப்தத்திற்கு சக்ஷுஸ்ஸோடு சம்பந்த மில்லாமையின. அக்ஞாநாஸித்தமாவது - அநித்யஶ்ஶப்த: க்ருதகத்வாத் என்பது முதலாயின. ஸந்திக்தாஸித்தியாவது, தூம மென்னலுமாய் பாஷ்ப மென்னவுமாகிய பூதஸங்காதத்தை ஹேது வாகப் புணர்த்தாற்போல்வன.

1அநைகாந்திகம் இருவகைத்து,- நிஶ்சிதவ்யபிசாரி யெனவும், ஸம்பவவ்யபிசாரி யெனவும். அவற்றுள் நிஶ்சிதவ்யபிசாரியாவது - பக்வாந்யேதாந்யாம்ரபலாநி ஏகஶாகாப்ரபவத்வாத் உபயுக்தபலவத் என்பதூஉம், ஸ்யாமஸ்தத்புத்ரத்வாத் இதரதத்புத்ரவத் என்பதூஉமாம். இனி ஸம்பவவ்யபிசாரியாவது-விவாதாபந்ந: புருஷ: கிஞ்சிஜ்ஞோ ராகாதிமத்வாத் என்பது. என்னை? வக்த்ர முண்டாயில் ஜ்ஞானம் மிகமிக வக்த்ரத்வம் மிகுதல் கூடாதாம்.

2இனி விருத்தமாவது-ஸாத்ய மில்லாத விடத்திலேயே வருவது. அது பலவகைத்து. அவற்றுள் தர்மவிபரீதஸாதனமாவது - நீலத்ஜ்ஞாந

---

ஹேத்வாபாஸங்கள் மூன்றுவகைப்படும், அஸித்தம், அநேகாந்திகம், விருத்தம என. அவற்றுள் அஸித்த மென்பது - ஸ்வரூபாஸித்தம், அக்ஞாந ஸித்தம், ஸந்திக்தாஸித்தம் என மூன்று வகைத்து. ஸ்வரூபாஸித்தமாவது-அநித்யசப்த: சாக்ஷுஸத்வாத் என்பது; என்னை? சப்தத்திற்கு சக்ஷுஸோடு சம்பந்த மில்லாமையின். அக்ஞாந ஸித்தமாவது - அநித்ய சப்த: க்ருதகத்வாத் என்பது முதலாயின. ஸந்திக்தாஸித்தியாவது - தூபமென்னலுமாய் பாஷ்ப மென்னவுமாகிய பூதஸங்காதத்தை ஹேதுவாகப் புணர்த்தாற் போல்வது.

1 அநைகாந்தம் இருவகைத்து, நிச்சித வியபிசாரியெனவும், ஸம்பவத் வியபிசாரி யெனவும். அவற்றுள், நிச்சித வியபிசாரியாவது - பக்வானி ஏதானி ஆம்பலானி ஏகசாகாப்ரபவத்வாத் உப யுக்த பலவத் என்பதூஉம், ஸச்யாம: தத்புத்ரத் வாத் இதரதத் புத்திரவத் எனபதூஉமாம். இனி, ஸம்பவத் வியபிசாரியாவது - விவாதாபன்ன புருஷ: கிஞ்சிக்ஞோ ராகாதி மத்வாத் எனபது; என்னை? வக்கிர முண்டாகில் ஞானம் மிக மிக வக்ரத்துவம் மிகுதல் கூடாதாம்.

2 இனி, விருத்தமாவது - ஸாத்யமில்லாத விடத்திலே வருவது; அது பலவகைத்து. அவற்றுள் தர்ம விபரீத ஸாதனமாவது - நீலத்தஞான

யோபேத꞉ ஸகோபலம்ப நியமாத் த்வி சந்த்ரவத் என்பது. என்னை? கூடக்காண்ட லென்பதிரண்டுக் கல்லது சம்பவியாமையால், சந்திர மண்டலத்தையு மிரண்டாகக் காண்கின்ற பொழுதிலல்லது ஸகோலம்ப மின்மையால். தர்மவிபரீத ஸாதனமாவது-க்ஷணபங்கம் ஸாதிப்பனவாகப் பிறர் சொல்லும் ஸத்வ முதலாயின. என்னை? ஸத்வமாவது அர்த்தக்கிரியையோடு கூடியதன்றே? உத்பத்தி க்ஷணத்தே நசிக்கின்றது. அர்த்தக்கிரியாஸமர்த்த மின்மையின்; ஸத்வம் அர்த்தக்கிரியாஸமர்த்தமாகிய அநேகாந்தத்தை சாதிக்கு மாதலின். விருத்தாவ்யபிசாரியாவது-அநித்ய꞉ சப்த꞉ க்ருதகத்வாத் கடவத் என்பது நிரன்வய விநாசமாகிய அனித்யத்வம் சாதிப்பதாகப் பிரயோகித்த க்ரதகத்வம் ஸவிநாசான்யமாகிய நித்யத்தை சாதிப்பதாகிய ப்ரத்யபிஜ்ஞாபானத்வம் எனனும் ஹேதுவினை விட்டு நீங்காதாகையால். இவ்வண்ணம் மொழிந்த ஹேத்வாபாஸங்களுங் கண்டு கொள்க.

1இனி ஆகமப்பிரமாணமாவது - ஸகலவிகலாப்த ப்ரகாசிதமாகி பூர்வாபரவிரோதமும் த்ருஷ்டேஷ்ட விரோதமுமின்றி ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களோடு அவிஸம்வாதியாகிய பரமாகம வசனமாகும். "பொய்யின்மை" யென்றதனாற் பிரமாண்யமும், "மெய்யுரை" யென்றதனுன் மெய்ப்பொருள் கூறலுங் கொள்க. அவை ஜைநாகமத்துக்கன்றிப் பிற சாஸ்

---

யோபேத꞉ ஸகோபலம்ப நியமாத் த்வி சந்த்ரவத் எனபது; என்னை? கூடக் காண்டலென்ப திரண்டுக் கல்லது ஸம்பவியாமையால் சந்திரமண்டலத்தையு மிரண்டாகக்காண்கின்ற பொழுதிலல்லது ஸகோலம்ப மின்மையால்; தர்மவிபரீத ஸாதனமாவது - க்ஷணபங்கம் ஸாதிப்பனவாகப் பிறர் சொல்லும் ஸத்துவ முதலாயின; என்னை? ஸத்துவமாவது அர்த்தக் கிரியையோடு கூடியதன்றே, உத்பத்திக்ஷணத்தே நசிக்கின்றது. அர்த்தக் கிரியாஸமர்த்த மன்மையின் ஸத்வம் அர்த்தக் கிரியாஸமர்த்தமாகிய அநேகாந்தத்தை ஸாதிக்கு மாதலின். விருத்தாவியபிசாரியாவது அநித்ய꞉ சப்த꞉ கிருதகத்வாத் கடவது என்பது; நிரன்வய விநாசமாகிய அநித்யத்வம் ஸாதிப்பதாகப் பிரயோகித்த கிருதகத்வம் ஸவிநாஸான்யமாகிய நித்யத்தை ஸாதிப்பதாகிய பிரத்யபிஜ்ஞாய மானத்துவ மென்னும் ஹேதுவினை விட்டு நீங்காதாகையால். இவ்வண்ணம் ஒழிந்த ஹேத்வாபாஸங்களுங் கண்டு கொள்க.

1 இனி, ஆகமப் பிரமாணவாவது - ஸகலவிகலாப்த பிரகாசிதமாகி பூர்வாபாவிரோதமும், திருஷ்டேஷ்ட விரோதமு மின்றிப் பிரத்தியக்ஷாதி ப்ரமாணங்களோடு அவிசம்வாதியாகிய பரமாகம வசனமாகும். 'பொய்யின்மை' யென்றதனல் ப்ராமாண்யமும், 'மெய்யுரை' யென்றதனுன் மெய்ப்பொருள் கூறலுங் கொள்க. அவை ஜைனுகமத்துக் கன்றிப் பிறசாஸ்

திரங்களிற் கூடாமை மேலே யதாவஸரஞ் சொல்லுதூஉம். அஃதேல் அநுமானத்துக்கும் ஆகமத்துக்கும் ஆபாசம் தப்பிறை கூறினர். ப்ரத்யக்ஷாபாஸங் கூருதவாறென்னை யெனின், அந்தரங்கமலோதயத்தாலும், நயநதோஷத்தாலும், ஆஸுப்ரமணநௌயாநாதிகளாலும், மரீசிகாதோய ஜ்ஞாந முதலாயினவும், த்விசந்த்ரப்ராந்தி முதலாயினவும், பூப்ரமணமும், பர்வதாகமனமு முதலாகிய ப்ரத்யக்ஷாபாஸங்கள் இந்த்ரிய ப்ரத்யக்ஷத்தல்லது ஒழிந்த ப்ரத்யக்ஷங்களிலில்லாமையிற் கூறிற்றிலர். கூறிற்றிலர் என்னும் ஒப்பின முடித்தலென்னுந் தந்திர யுக்தியா லவையுந் தந்துரைக்கப்படும். ப்ரத்யக்ஷமும் பரோக்ஷமுமாகிய ப்ரமாணங்களின் விரிவுங் கடாவிடை யுள்ளுறுத்தனவு நியாய நூல் வல்லார் வாய்க் கேட்டுணர்க. ஈண்டுரைப்பிற் பெருகும். (கக0)

வேறு

120 வைப்பு நயனள வைபுகு வாயி லென்றும்
பொய்ப்பி லுயிரே பொருவில் குண மார்க்கணை
செப்பி னிவற்றிற் றிரியாதுள் புகுப வாயி
னெப்பில் பெருமை புணர்விற்குயர் மாட்சி யாமே.

லௌகிக பிரமாண முணர்த்தி, இதனல் லோகோத்தர பிரமாணமுணர்த்து கின்றார்.

வைப்பென்பது-பெயர் வகையானும், வடிவு வகையானும், பொருள் வகையானும், குறிப்பு வகையானும் ஒரு பொருளை யுணர்வது. என்னை ?

1"பெயரினும் பிழம்பினும் பொருளினுங் குறிப்பினுஞ்
செப்புவ தொன்றினை வைப்பின தியல்பே"

என்றாராகலின். நயமாவது - ஒரு வஸ்துவின்கணின்ற அநேக தர்மங்களில்

---

திரங்களிற் கூடாமை மேலே யதாவசரம் சொல்லுதூஉம். அஃதேல், அனுமானத்துக்கும், ஆகமத்துக்கும் ஆபாசம் தப்பிறை கூறினர்; பிரத்யக்ஷாபாசம் கூருதவாறென்னை யெனின் அந்தரங்க மலோதயத்தாலும், நயன தோஷத்தாலும் ஆஸுப்ரமண நௌயானதிகளானும், மரீசிகாதோய ஞான முதலாயினவும், துவிசந்திர பிராந்தி முதலாயினவும், பூமிபிரமணமும், பர்வதாகமனமும் முதலாகிய பிரத்யக்ஷாபாசங்கள் இந்திரிய பிரத்யக்ஷத்தல்லது ஒழிந்த பிரத்யக்ஷங்களில்லாமையின் கூறிற்றிலர். கூறிற்றிலர் என்னும் ஒப்பின முடித்த லென்னும் தந்திர யுத்தியால் அவையும் தந்துரைக்கப்படும். பிரத்தியக்ஷமும் பரோக்ஷமுமாகிய பிரமாணங்களின் விரிவும், கடாவிடை யுள்ளுறுத்தனவும் நியாயநூல் வல்லார் வாய்க் கேட்டுணர்க ; ஈண்டுரைப்பிற் பெருகும்.

1 தத்வார்த்த சூத்திரம் 1-வது அத்தியாயம், 5-வது சூத்திர மொழி பெயர்ப்பு ; தமிழ்நூல் விளங்கவில்லை.

[1]விவக்ஷிதமாகியதொரு தர்மத்தினற் பிறிதை நோக்குதலும், நீக்குதலுமின்றி வஸ்துவை யறிவதாகும். என்னை?

> [2]"பிறிதினை விலக்கலு மாட்டலு மின்றி
> யொருபொரு ளுரைப்பது சுட்டெனப் படும்"

என்றாராகலின. அளவையாவது - ஒரு வஸ்துவின்கட் கிடந்த அநேக தர்மங்களுட் சிறப்பித்துச் சொல்லப்பட்டதொரு தர்மத்தினற் சில தர்மங்களை நீக்கியும் நீக்காதும் வஸ்துவையறிவதாகும். என்னை?

> [3]"சிறப்பினு லொருபொருள் செப்பலு மளவை
> விலக்கலு மாட்டலுந் தொகைச்சொல லியல்பே"

என்றாராகலின். புகுவாயிலாவது - அநுயோகம்; அஃதாவது, சுட்டு முதலாகிய வெட்டு வகையாலு மொரு பொருளை யறிவதாகும். என்னை?

> [4]"சுட்டே கிழமை கருவி காலம்
> மித்துணை யிடம்பய னிகழ்ச்சி யென்றாங்
> கிப்படி வருவது சுட்டுமுதற் செப்பே"

என்றாராகலின. இத்துணையாலும் [5]வியாபி பிரமாணஞ் சொன்னவாறு. பொய்யிலுயிரென்றது - ஜீவஸ்தானம் பதினான்குஞ் சொன்னவாறு; அவையாவன: [6]ஸூக்ஷ்மைகேந்திரியபர்யாப்தகாது முதலாகக் கிடந்தன. இந்தப் பிரமாணம் ஜீவராசியை ஜீவநிலை கருவியாக வுணர்வது. பொருவில் குணமென்றது - [7]குணஸ்தானம் பதினாலுஞ் சொன்னவாறு. அவையாவன: மித்தியாதிருஷ்டி முதலாயின; இந்தப் பிரமாணம் ஜீவராசியைக் குணநிலை கருவியாக வுணர்வதாம். [8]மார்க்கணை யென்றது - மார்க்கணஸ்தானம் பதினான்

---

1 விவக்ஷிதம் - வேறாகக் குறிக்கப்பட்ட.

2 விளக்கா மேற்கோள்.

3 ௸

4 ௸

5 வியாபி பிரமாணம் - வியாபி கருவியாலா முணர்ச்சி.

6 ஸூக்ஷ்ம ஏகேந்திரிய பரியாப்தகம் - பூரண வளர்ச்சியுடைய ஓரறிவுள்ள சூட்சுமஜீவன்.

7 குணஸ்தானம் - மித்தியா திருஷ்டி, ஸாஸாதன ஸம்யக் திருஷ்டி, ஸம்யக் மித்யா திருஷ்டி, அஸம்யத, தேசஸம்யத, பிரமத்த, அப்பிரமத்த, அபூர்வகரண, அநிவிருத்திகரண, ஸூக்ஷ்ம சாம்பராய, உபஸாந்தகஷாய, க்ஷீண கஷாய, சயோகிகேவலி, அயோகிகேவலி என்னும் குணஸ்தானங்கள் பதினான்குமாம்.

8 மார்க்கணை - மார்கணஸ்தானம் - 14, கதி, இந்திரிய, காய, யோக, வேத, கஷாய, ஞாந, ஸம்யம, தரிசன, லேச்யா, பவ்ய, ஸம்யக்த்வ, ஸக்ஞா, அஹார என.

குஞ் சொன்னவாறு ; அவை : 1கதிமுதலாகக் கிடந்தன ; இந்தப் பிரமாணம் கதிமுதலாகிய கருவிகளாக ஜீவராசியை யுணர்வதாம்.

இனி, 'வைப்பு நயனளவை' யெனத் தலைதடுமாறாகவோதியவதனால், 2ஸதாநுயோகமுங் கொள்க. அவை 3ஸத்து முதலாகக் கிடந்தன ; இவை 4அவ்யாபிப்ரமாணம்; இவற்றிடை விரிவுங் காவிடை யுள்ளுறுத்தனவும், உதாஹரணங்களும் மெய்ந்நூல் வல்லாரவாய்க் கேட்டுணர்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

இந்தப் பிரமாணங்களாற் றிரியாமலுணர்தல் நன்ஞானத்துக்கு நன்மை யென்றவாறு. திரியாமலுணர்தலாவது - 5மூடஸம்சயவிபர்யாஸமாகிய திரிவுபடாமலுணருகை யென்றவாறு. இந்தப் பிரமாணங்களாலுணர்வது நன்ஞானமெனவே, பிரமாணமாவது நன்ஞான மென்றவாறாயிற்று ; என்னை? இந்திரியங்களும், லிங்கங்களு முதலாகிய அசேதனங்கள் பிரமாணமல்லவோ வெனின், அல்ல; அவை பிரமாணமாகிய ஸம்யக ஞானத்துக்குச் சாலக முதலாயினபோலத் துணைக்காரண மெனறு கொள்க. (ககக)

121 காட்சி வகைதான் கடவண் முதலாய
மாட்சி யமைந்த பொருளெட்டு மனத்து வைத்து
மீட்சி யிலதாய் விரிந்துந்திய வின்ப வெள்ள
வேட்கை பதுவாந் தெளிவென் றனர்வென் றவரே.

இதனால் நற்காட்சி யிலக்கணங் கூறுகின்றார்.

காட்சி யிலக்கணமாவதுதான் - ஆப்தன் முதலாகிய நன்கமைந்த பதார்த்தங்களெட்டையும் முன் சொன்ன பிரமாணங்களாலுணர்ந்து, அந்தப் பதார்த்தங்கண் மிசை மீளாதாய்ப் பரந்து சென்ற ஆனந்த ரூபமாகிய பக்தியென்னும் பெயருடைய 6ச்ரத்தான மென்றருளிச் செய்தனர் கர்ம சத்துருஜயம் பண்ணிய விறைவரென்றவாறு.

ஆப்தாத் யஷ்ட பதார்த்தமாவன - ஆப்தன், ஆகமம், பதார்த்தம், பிரமாணம், பிரவர்த்தி, லிங்கம், சாரித்ரம், பலம் என்பன. மாட்சியமைந்த வென்பதனால், மாட்சியமையா அஷ்டபதார்த்தமுமுள ; அவை ஆப்தாபாஸ முதலாயின ; அவையெல்லாம் 7யதாவஸர மேலேசொல்லுதும். (ககஉ)

122 மூந்துற்ற மூடப் புலிமூன்றும் பிழைத்த பின்னை
யன்பச்ச மாசை யுலகோடிலிங் காத்த ரொப்பு

1 கதி - சதுர்க்கதி.
2 ஸதாநுயோகம் - ஸத் முதலியவற்றால் பொருளையறிவது.
3 தத்துவார்த்த சூத்திரம் அத். I சூ. 8. பார்க்க.
4 அவ்யாபி பிரமாணம்-வியாபியல்லாத வேறு கருவியாலுணருமுணர்ச்சி.
5 மூடசம்சய விபரியாஸம் - அஞ்ஞானம், சந்தேகம், பிராந்தம்.
6 சிரத்தானம் - காட்சி.
7 யதாவஸரம் - காலம் நேர்ந்தபோது.

மென்பெற்று மேத்த விலராயெண் மயத்து நீங்க
லின்புற்ற காட்சி யுடையார்க்கியல் பாகு மன்றே.

என்பதனால், முன் சொன்ன நற்காட்சிக்கு உருமழ்வுகள் கூறுகின்றார்.

தர்சனத்தை யழிக்குமிடத்து, மூன்றாற்றவருவனவாகிய மூடமென்கின்ற பலிகண் மூன்றிற்கும் பிழைத்தலரிது; பிழைத்த பின்னைக் காமமே, பயமே, ஆசையே, லோகவியவகாரமே, துர்லிங்கிகளே, ஆப்தாபாஸரே யென்றிவரை யாதானுமொரு பெருந் திருப்பெறினும் வணங்குதலிலராகி 1அஷ்டஸ்மயங்க ணீங்குதல் சிரத்தானுரூபத்ததாகிய சம்யக்தரிசன முடையார்க்கு லக்ஷணமாகு மென்றவாறு என்னை?

2" மூவகை மூடமு மெட்டு மயங்களுந்
தோவகையிற் காட்சிக்க ணில்"

3" அவ்வியப மாறு மகன்றது நற்காட்சி
செவ்விதிற் காப்பா னிடை"

என்றாராகலின். மூட மூன்றாவன - லோக மூடம், பாஷண்ட மூடம், தேவதா மூடம் என்பன. என்னை?

4 𑌆𑌪𑌗𑌾𑌸𑌾𑌗𑌰𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌚𑌯𑌃 𑌸𑌿𑌕𑌤𑌾𑌶𑍍𑌮𑌨𑌾𑌮𑍍
𑌗𑌿𑌰𑌿𑌪𑌾𑌤𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌪𑌾𑌤𑌶𑍍𑌚 𑌲𑍋𑌕𑌮𑍂𑌢𑌂 𑌨𑌿𑌗𑌦𑍍𑌯𑌤𑍇 ॥
𑌸𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌾𑌰𑌮𑍍𑌭𑌹𑌿𑌂𑌸𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌾𑌮𑍍
𑌪𑌾𑌷𑌣𑍍𑌡𑌿𑌨𑌾𑌂 𑌪𑍁𑌰𑌸𑍍𑌕𑌾𑌰𑍋 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑌾𑌷𑌣𑍍𑌡𑌿𑌮𑍋𑌹𑌨𑌮𑍍
𑌵𑌰𑍋𑌪𑌲𑌿𑌪𑍍𑌸𑌯𑌾𑌶𑌾𑌵𑌾𑌨𑍍 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌮𑌲𑍀𑌮𑌸𑌾𑌃
𑌦𑍇𑌵𑌤𑌾 𑌯𑌦𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 𑌦𑍇𑌵𑌤𑌾𑌮𑍂𑌢𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

என்றாராகலின். லோகத்தினது மூடம் லோகமூட மென்பதாயின் ஒழிந்தனவும் லோக மூடமேயாய் மூடமொன்றாதல் வேண்டும்; அஃதன்றிப் பாஷண்டிகள் விஷயமாகவும், தேவதா விஷயமாகவும் வந்த மூடங்களை வேறோதினவாறு போல வொழிந்த ஆகமமே, பதார்த்தமே, பிரமாணமே, பிரவிருத்தியே, சாரித்திரமே, பலமே, தானமே, பூஜையே யென்றிவை முதலாகிய பொருள்களைப் பற்றி வரும் மூடங்களையும் வேறோதின் மூடங்களுக்கு வரையறை யில்லையாம்; இஃதென்னை? மூன்று வகையுளடங்கியவாறெனின், ஸம்யக்தர்சனத்தைக் கெடுக்குமிடத்துச் சிறப்புடைய பாஷண்டி மூடமும், தேவதாமூடமு மெடுத்தோதி யொழிந்த மூடங்களுக்கு வரையறை யின்மையினவை லோக

1 அஷ்டஸ்மயங்கள் - எட்டு விதகர்வம்; அவை ஞானம், பூஜை, குலம், ஜாதி, பலம், ரித்தி, தபம், சரீரம்.

2 அருங்கலச் செப்பு. 3 அருங்கலச் செப்பு.

4 இரத்தின கரண்டக சிராவகாசாரம் - 22, 24, 23.

கூடமெனத் தொகுத் தோதப்பட்டன போலும். இவற்றினுட்பமெல்லாம் மெய்ந்நூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இனி, மூடத்திரயங்கள் நீக்கினன் துர்லிங்கிகளிடம், துர் ஆப்தரிடம் வணங்காதலின், இவ்விரண்டு வணக்கமும் வேறோத வேண்டிய தென்னை யெனின், மூடத்தினீக்கினன் பாஷண்டிகளைத் தபோதனரென்றும், ஹரிஹரா பத்த 1பூரணாதிகளை ஆப்தரென்றும் பத்திபண்ணுமென்பதல்லது, அவரை வணங்காமெனப்படு பெறப்படாதாகலின் வேறோதல் வேண்டும். அன்றியும் வணக்கப்படும் நடுதேவதைகளை யன்றி வணங்குந் தீவணக்க மாத்திர மொழி தற்குக் கூறினாம். இனி, அஷ்டஸ்மயமாவன :

2. “ஜ்ஞானம் பூஜாம் குலம் ஜாதிம் பலம்ருத்திம் தபோ வபு:
அஷ்டாவாச்ரித்ய மானித்வம் ஸ்மயமாஹுர்கதஸ்மயா: ”

என்பதனுற் றெரிக. (க௨௨)

123 ஐயுற்றல் வேட்கை புவர்ப்பே மயக்கி யாது மின்மை
செய்குற்ற நீக்க றிரிந்தாரை நிறுத்த லின்றிப்
பொய்யற்ற காதற் பொருவில்லறங் காட்ட லெட்டுக்
கையுற்ற வாயில் லதுகாட்சியின் மாட்சி யாமே.

என்பதனுள் முன்சொன்ன மூடாத்தி நீக்கிய சம்யக்தர்சனத்துக்கு அங்கங்கள் கூறுகின்றார்.

பரமாகமத்துச் சொல்லப்பட்ட ஆப்தாதி யஷ்டபதார்த்தங்களை ஆகமத்துச் சொன்னபடி யொழிய வேறொருபடி கூடாதென்று இரும்புண்ட நீர்போலத் தெளியாது, ஐயப்படுதலே, கர்மபரவசமும் 3நச்வரமும், துக்கங்களானிடை யிடைப்படுவதும், பாபத்துக்கு வித்துமாகிய ஸம்சார சுகத்திலே வேட்கையே, ஸ்வபாவத்தால் 4அசுசியுடைதாகிலும் ரத்ன திரயத்தால் பரிசுத்தமாகிய தர்மத்துள் ளாரது சரீரத்திலே வருகின்ற உவர்ப்பே, துக்கங்களுக்குப் பெருவழியாகிய துர்மார்க்கத்திலும் அந்த துர்மார்க்கத்தில் நிற்கின்ற ஜனங்களுழையுமுண்டாகிய நன்குமதித்தலுங் கலத்தலும் புகழ்தலுமென்னும் மயக்கே யென்றிந்நானகு மொழிவற விலதாதலும், ஸ்வபாவசுத்தமாகிய சன்மார்க்கத்துக்கு ஒரு தோஷ மில்லையேனும் சன்மார்க்கத்தை ஆஸ்ரித்த பாலரும் அசக்தருமாகிய ஜனங் களாற் செய்யப்பட்ட குற்றங்களை நீக்குதலே, தர்சனத்திலாதல், சாரித்திரத்தி லாதல் திரிந்தாரை யாதானுமொரு உபாயத்தினுற்றிரியாமை நிறுத்தலே, சத்தர் மத்துள்ளா ருழைப் பிறிதொரு காரணமின்றி யுண்டாகிய வஞ்சனை யற்ற காதலே, லோகத்துள்ளாருழை யுண்டாகிய அஞ்ஞானங்களை நீக்கி, சத்தர்மத்துப் பெருமை காட்டலே யென்றிவை நான்குங் கூடுதலுமென்றிவ் வெட்டங்களுமுங்

1 பூரணன் - ஆஜீவகமதஸ்தாபகன்.
2 இரத்தின காண்டக சிராவகாசாரம். 25.
3 நச்வரம் - நாசமடைதல். 4 அசுசி - மலம்.

சம்சார நிர்மூலனம் பண்ணும் சம்யக்சாரித்திரத்தினது லக்ஷணமாமென்றவாறு. (ககசு)

126 யோக மிவற்றை யுடைத்தன்றே யுயிர்க ளெல்லாம்
மாக விசும்பி னவர்தமமொடு மன்ன ருமாய்ப்
போக நுகர்ந்து பொருந்தாவினை புல்ல லின்றி
யேகாந்த லின்ப மிவைந்தாவிரு மில்லை நல்லாய்.

போகம் - பதகூட மொன்றாகிய ஔஷதம். ஏக நல்லின்பம் - இணையில்லாத ஆநந்த சுகம். (ககஎ)

வேறு

127 பிறவியா மாறும் பிணியாந் திறமும்
மறவிதா னில்லா மருந்தாம் வகையுந்
திறவியாள் கேட்டுத் தெரிந்துள்ளங் கொள்ள
1 வறவியான் றானு மறவமிர்த மீந்தான். (ககஅ)

வேறு

128 வண்டவாம் வார்குழலும் வாளெயிறும் பூண்முலையுந்
தொண்டைவாய் நன்னலமுந் தோளுந் துடியிடையும்
கண்டவாங் காமுகரும் யாமுங் கணநரியும்
விண்டவாக் கொண்டுணரின் வேறுவே றமன்றே.

“விண்டவாக்......மன்றே” வென்பது - காமுகர் சுகஹேதுவாக வுணர்வர்; தபோதனர் சப்ததாது மயமாகிய [2]மலபிண்டமென்று புத்தி பண்ணுவர்; நரி முதலாயின பக்ஷணமென்று புத்தி பண்ணுமென்றவாறு. (ககக)

129 கரையவா வாங்குங் கயமகன் கைத்தூண்டி
லிரையவாப் பன்மீ னிடருறுவ தேபோல்
[3]நுரையவா நுண்டுகிலு மேகலையுஞ் சூழ்ந்த
வரையவாய்ப் பட்டார்க்கு மாழ்துயரே கண்டீர்.

“கரையவா......மகன்” - கரையிலேற வாங்குங் கயமகன். (கஉ0)

130 மட்டார் மலர்புனைவும் வாணெடுங்கண் மையணிவும்
பட்டார் கலையுடையும் பல்வளையும் பைந்தோடு

---

1 அறவியான் - அறமுடையான்; “அறவிநாவா யாங்குள தாகலின்” - மணிமேகலை.

2 இக்கருத்து இறையனா ரகப்பொரு ளுரையில் வந்துளது.

3 நுரையவா நுண்டுகில்-நுரைபோலும் விரும்பும் நுண்ணிய ஆடை; நுரையை வெள்ளிய ஆடைக்குவமை கூறல் மரபு; “நுரைகிழித்தனைய நொய்ம்மை நுண்டுகில்” என சிந்தாமணி 699ஆம் செய்யுளில் வருதல் காண்க.

நட்டாரை யெல்லா நரகுக்கே புக்கு [1]நாய்க்
கொட்டார்த்தார் செய்யுங் கோலங்கள் வண்ணம். (கஉச)

131 ஆடினாய் நான மணிந்தாய் கலன்மாலை
சூடினா யேனுஞ் சுணங்கார் வனமுலைபா
பூடினா யாக வொழுக்கூற்றைப் பல்பண்டம்
மூடினாய் தோலின் முகம னுரையேனே. (கஉஉ)

132 மின்போ னுடங்கிடையும் வேயேய் திரடோளு
மென்றே யிலைமகிழ்ந்திங் கென்முன்னே வந்தாயாற்
புன்றோலும் பல்லென்பும் போர்த்த புறங்காட்டி
னன்றே புறைவ வவற்றான் மருள்வேனோ. (கஉ௬)

133 மெழுகுருகு மண்பாவை மேதையான் [2]காய்த்தி
பொழுகுருகு செம்பொன்னு ளண்ணிறைந்த தேபோற்
ழுகுருக மெய்காட்டிப் பொல்லாத போக்கி
பழுகுருவு கொண்டா ளறவமிர்த முண்டாள். (கஉச)

வேறு

134 காய்வ செயினுங் குழவிக்கட் கவன்று [3]கழிகண்ணோட்டத்தாற்
றாய்தன் முலையி லமுதூட்டுந் தகைய னறவோன் றானென்று
மாய வுருவ மாறித்தன் மற்றை யுருவ மேகொண்டு
பேயேன் செய்த பிழையெல்லாம் பெரும பொறுவென றிறைஞ்சினான்.

காய்வ செய்யினுந் தன் முலை யூட்டுந்தாய் தகையன் என்று கூட்டுக. ()

135 [4]முழங்கு முன்னீர் வையத்து முனிதக் கார்தம் முன்னின்று
வழங்க வாட்ட மொழிவர்க்கீ [5]மன்னும் பொறுத வகையுண்டோ
வழுங்க லென்ற வறவோன்ற னலர்கொள் பாதம் பெரிதேத்தித்
தொழுங்கை யாளக் குணக்குன்றைத் துதிப்ப னென்று தொடங்கினான்

---

1 நாய்க் கொட்டார்த்தார் - நாய்ச் சரீரத்தைை அலங்கரிப்பவர்; கொட்டு - சரீரம்; ஆர்த்தல் - அணிதல், அதாவது அலங்கரித்தல்.

2 காய்த்தி - காய்ச்சி.

3 கழிகண்ணோட்டம் - பதிற்றுப்பத்தில் வந்துளது.

4 முழங்கு முன்னீர் - ஒலிக்கின்ற சமுத்திரம்; இது முன்னீரென்றும், முந்நீரென்றும் சொல்லப்படும். முன்னீர் - பழைய நீர்; முந்நீர் - மூன்று தனைமை. “முனைநீர்க்கனைகடல்” சிந். 511. “முந்நீர்ப் பிறந்த” சிந். 5.

5 மன்னும் - அசை.

“முனிதக்கார்........பண்டோ” வென்பது - 1வெறுக்கப்பட்டார் முன்னின்று பிழையுடன்பட்டு வழக்கச் சான்றோர் வெறுப்பொழிவர்; ஆகையால், அது பொருத வகையுண்டோ வென்றறிந்து பொறுத்தே மென்றவாறு. (கஉசா)

136 வெள்ள மாரி தரித்தோய்நீ வினையின் வாயி லடைத்தோய்நீ
யுள்ள மாட்சி யுடையோய்நீ யுயப்போம் வண்ண முரைத்தோய்நீ
2 நள்ளென் யாமத் தியான்செய்த நவைக ளெல்லா நனிகண்டு
மெள்ள லில்லாப் பெரியோய்நின் னிணையில் பாத மணைவல்யான்.

137 மூட மூன்று முரைத்தோய்நீ மூரண்செப் தோற்ற முனிந்தோய்நீ
வீடுக் கட்டும் விரித்தோய்நீ வினையி னின்பம் வெறுத்தோய்நீ
காடு கிளர்ந்து காட்டியான் கலக்க வொன்றுங் கலங்காத
பாடற் கரிய பெரியோய்நின் பழிப்பில் பாதம் பணிவல்யான்.

138 அல்லற் பிறவி யகன்றோய்நீ யாசை வெவ்வே ரறுத்தோய்நீ
வெல்லற் கரிய வனங்கனைமெய் வெண்ணீ றாக வெகுண்டோய்நீ
கொல்லக் கருதி வந்தேனைக் குணங்க ளாலே வணங்குவித்த
சொல்லற் கரிய பெரியோய்நின் றோமில் பாதந் தொழுவல்யான்.

139 உடம்பின் மெய்ம்மை புணர்ந்தோய்நீ யுறங்க லார்வ மறுத்தோய்நீ
யிடங்கொ ளின்னை வினையெல்லா மெரிக்கும் வாயில் விரித்தோய்நீ
யடங்க லில்லேற் கருளிறை லறங்கூர் மாரி பொழிந்தோய்நின்
றடங்கொள் செந்தா மரையடியென் றலைய வேயென் றலையவே.

வேறு

140 தடம்படு மாரி தலைத்தலை நூற
விடம்படு பல்லுயிர் மெய்வழி யேற
வுடம்பொடு வேறெனு மோர்ப்பினை யாகி
யடங்கிய நின்னடி யஞ்சலி செய்வேன். (கஙக)

141 கல்லுரு கக்கடுங் காற்றெறி போதினி
னல்லிருள் கூர்சுடு காட்டிட மாகப்
பல்வினை யும்பறிப் போய்நின பாதம்
நல்வினை யிற்றொழு வேனினி நாளும். (கஙஉ)

142 மங்குன் மழைபொழி மாரிபெய்ந் நாளிற்
கங்குலெண் ணில்லங் கவலைசெய் காட்டு

1 இக்கருத்து புறநானூற்றில் வந்துளது.
2 நள்ளென்யாமம் - நடுராத்திரி.

ளங்கு மியங்கல னென்றிருந் தோய்நின்
பங்கயம் போல்வன பாதம் பணிவேன். (கருங)

143 இற்றவர் தம்முட றின்றிட யாமம்
முற்ற நரிமுர லும்முது காட்டிட்
பற்றற வேநினை வோயிரு பாதஞ்
சுற்றுபு யான்விதி யிற்றொழு வேனே. (கருச)

144 திண்டிறல் சேர்சிறு பேயறை கீறி
வெண்டலை யால்விளை யாடிய காட்டு
ளெண்டிக நற்பெரிப் போய்நின பாதம்
வண்டறை பூவொடு வந்தனை செய்வேன். (கருரு)

145 பிணங்க ளிடையிடை போழு மிடத்
தணங்கு துணங்கைசெய் தாடிய காட்டிட்
துணங்க ளுடையன துன்றுத வில்லாய்
வணங்குவ னின்னடி வைகலி னானும்.

2 துணங்கைசெய்தாடல் - கைகோத் தாடுமாட்டு. (கருசு)

146 நுனித்தகு நன்னெறி நோக்கின ளாகி
முனிப்பிறை யோனடி மும்மையி னேத்திப்
பனிக்கட லன்னதோர் பாவமுஞ் செய்தே
னினிச்செய்வ தென்னுரை யாயெனக் கென்றாள்.

முனிப்பிறையோன் - சந்திரமுனி. மும்மையினேத்தி - மனோவாக் காயங்களால் துதித்து. (கருஎ)

வேறு

147 விலங்கு வெங்கர காதிக டம்முள்
விளிந்துதோன் றிவிழு நோயொடு முற்றுக்
கலங்கி யெங்குங் கண்ணில வாகிக்
கவலைவெள் ளக்கட விற்குளித் தாழு

---

1 அறைகீறி - கம்பர் கூறியுள்ளார்.

2 துணங்கை - விலாப்புடைத் தாடலுமாம்; திருமுருகாற்றுப் படையில் இவ்வேறுபாடு காணப்படுகிறது.

நலங்களில் லாவுயிர் தங்களுக் கெல்லா
நடுக்கநீக் கியுயர் நன்னிலை யீயுந்
சலங்களில் லாப்பெரி யோன்சரண் கொண்ணீ
சனங்கட் கெல்லா மவன்சர ணென்றான்.

சலங்களில்லாப் பெரியோன் - அருகத் பரமேஸ்வரன். (க௪அ)

148 உய்தல் வாயுரைத் தாயதன் மேலு
மூயிருள் ளிட் டபல வுள்பொருள் சொன்னாப்
நைதலில் லாத்தெளி வோடுநன் ஞான
நானுங்கொண் டேனுன் னற்குண மெல்லாம்
பெய்துதந் தாய்பிழைத் தேற்கினி தாவோர்
பிராயச்சித் தம்பெரி யோயரு ளென்னச்
செய்த தீமை கெடக்கட னாட்டிற்
சினவ ரன்னெறி யேதெருட் டென்றான்.

"நைத.....கொண்டேன்" என்பது - ஸம்யக்தர்சனமும், ஸம்யக்ஞான மும் கொண்டேனென்றவாறு. ஸம்யக் சாரித்திரம் தேவ ஜாதிக்கு ஸம்பவி யாமையிற் கொண்டிலள். (க௪௯)

வேறு

149 யாஅ தடிக ளதருளா லருந்துய ரகல்வகை யதனான்
மாஅ துடையடி யிவைதா மறவலெ னெனவலங் கொண்டு
வேஎ தடவியன் மலைமேல் விரிகதிர் மணிவிளக் காதி
தீஇதடு தலை விலங்குஞ் சினகர முவகையிற் சென்றாள்.

"யாஅ........அதனா" வென்பது - அடிகள தருளா லருந்துயரினீங்கினே னென்பது. யாதொன்று - அது காரணத்தாலென்றவாறு. வேதண்டமென் பது - வெள்ளியம் பெருமலை; 'வேதண்ட' மென்பது, 'வேதட' மென்றாயிற் றுச் செய்யுள் விகாரத்தால். "சினகா.....சென்றாள்" - சித்தகூட சைத்யால யத்துச் சென்றாளென்றவாறு. (க௫௦)

நீலகேசித் திரட்டில் நீலகேசி நெறிதலைப்பட்ட
1சீலவானது தருமவுரைச்சருக்கம் முற்றும்.



1 சீலவான் - முனிச் சந்திரர்.

## இரண்டாவது

# குண்டலகேசி வாதச் சருக்கம்

150 கொல்லை முல்லைபைங் கோங்கு குருந்தங் கோடறன் குரவ
நல்ல மல்லிகை நறவம் ஞாழல் தாழைபுன் னாகம்
பல்லி தழ்ப்பனிக் குவளை பானல் பாதிரி பிறவு
மெல்லி யின்மல ரேந்தி யிறைவன [1]திடவகைக் கெழுந்தாள்.

151 நீட்சி [2]யோக்கமோ டகல நினையநின் றெங்கணு நோக்கி
மாட்சி யால்வலங் கொண்டு மாதவத் திறைவனிற் பிழைபாக்
காட்சி யேயினனி லெல்லாக் கதவமுந் திறக்கெனத் திறப்ப
வாட்சி மூவுல குடைய வடிகட மடியிணை தொழுதாள்.

"நீட்சி.....அகலம்" என்பது - சித்தகூட சைத்யாலயம் தெற்கு வடக்கு நீட்சி காதம்; உயரமுக்காற்காதம்; அகல மரைக்காதம் [3]திருப்பாழி வடிவிற்று.

152 அத்தி யாளியோ டாமா னட்ட மங்கல மரிய
பத்தி பாவைபல் பறவை பயில்கொடி திமிசொடு பிறவும்
வித்த கம்பெரி துடைய விசித்திர வுருவகன் மலராற்
சித்த நன்னெறி பயந்தான் றிருவடிக் கருச்சனை செய்தாள்.

எனபது - ஆனைமுதலாகச் சொல்லப்பட்ட ரூபங்களாகப் புஷ்பத்தால் அர்ச்சித்தாள். (௩)

153 தூமஞ் சாந்தொடு சுண்ணந் துதியொடு பரவு தொழுதே
தாமந் தாழ்தர நாற்றித தத்துவ தரிசிய துருவே
யாமென் றையென வியந்தாங் கன்ன வாயிரத் தொரெண்
ணாம நல்லிசை தொடுத்து நாதகி தங்களை நவிற்றும். (௪)

154 கன்று காலனைக் கடந்தாய் காதற் காமனைக் கடிந்தாய்
தொன்று மூத்தலைத் துறந்தாய் [4]தோற்ற மாக்கட லிறந்தா
யொன்ற நோய்பகை யொருங்கே யுடைந்து வெங்களத் துதிர
வென்றி ருந்தனை நீயே வீரர்தம் வீரர்க்கும் வீரா. (௫)

---

1 இடவகை - கோயில்.
2 ஓக்கம - உயரம். 3 திருப்பாழி - அழகிய குகை.
4 தோற்றமாக்கடல்-பிறவிப்பெருங்கடல்; திருக்குறள-கடவுள் வாழ்த்து 10.

155 சாத னைப்சரை பிறவி தாஞ்செய் தீவினைக் கடலுண்
மாது பருழுந் துறுகோப் மறுகு மன்னுயிர்க் கெல்லாந்
தீதி னன்னெறி பயந்து திரைசெய் நீள்கரை யொருவிப்
போத ரும்புணை படைத்தாய் புலவர்தம் புலவர்க்கும் புலவா.

156 அரிய வாயின செய்திட் டமரர் துந்துபி யறைந்து
பரிய பூமழை பொழியப் பொன்னெயில் மண்டிலம் புதைந்த
விரிகொ டண்டளிர்ப் பிண்டி மரநிழ லிருந்திரு வினையும்
பிரியும் பெற்றியை யுரைத்தாய் பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய்.

157 பொங்கு சாமரை யேந்திப் புடைபுடை யியக்கர்நின் றிரட்டச்
சிங்க வாசன திருந்து தெளிந்தொளி மண்டில நிழற்றத்
திங்கள் [1]முக்குடை கவிப்பத் தேவர்தந் திருந்தவை தெருள
[2]வங்க பூவம தறைந்தா யறிவர்தம் மறிவர்க்கு மறிவா. (அ)

158 உளறி யாவது முணரா யுறல்வகை யிதுவென வுரைத்தி
கூறு வேறெனக் கூறாய் குரன்முர சனையதோர் குணத்தைச்
சேற லுள்ளமு மில்லையாய்த் திருமலர் மிசையடி யிடுதி
தேறு மாறென்னை நின்னைத் தேவர்தந் தேவர்க்குந் தேவா. (௯)

159 கண்ணி னொன்றுங் காணாய் காணவு முளபொரு ளொருங்கே
பெண்ணு மல்லவுஞ் சாராய் பிரிதலில் பேரின்ப முடையை
யுண்ணல் யாவது மில்லா யொளிதிக ழுருவமஃ துனதா
லெண்ணில் யார்நினை யுணர்வா ரிறைவர்தம் மிறைவர்க்கு மிறைவா

160 சொற்றி யாவதுங் கேளாய் சுதநயந் துணிவுமங் குரைத்தி
கற்றி யாவது மில்லையாய்க் கடையில்பல் பொருளுணர் வுடையை
பற்றி யாவது மில்லையாய்ப் பரந்தவெண் செல்வமு முடையை
முற்ற யார்நினை யுணர்வார் முனைவர்தம் முனைவர்க்கு முனைவா.

161 அன்மை யாரவர் தாந்தா மறிந்தன வுரைத்தபொய் யாக்கி
நின்மை யாகிய ஞான நிகழ்ச்சி நீவிரித் துரைத்த
சொன்மை யாரிடை தெரிந்தார் தொடர்வினை முழுவதுஞ் சுடுநின்
றன்மை யார்பிற ரறிவார் தலைவர்தந் தலைவர்க்குந் தலைவா. (கஉ)

---

1 முக்குடை - சந்திராதித்யம், நித்ய விநோதம், சகல பாஸனம் என்பன.

2 அங்க பூவம் - அங்காகமமும், பூர்வாகமமும்.

162 ஆதி [1]பந்தளப் பரிய வருகந்த பகவர்த மறந்சால்
சேதி யம்புக்க வர்[2]தந திருந்தடி களைப்பெருந் துதிசெர்
போதி யிற்பணிந் திருந்தாள் புன்னெறி தாம்பல வுற்றுள்
யாதுகொ றென்று மென்னை லடர்க்கப் பாலது வென்றாள். (௬௩)

வேறு

163 ஊன்றின்ற விழுக்கென்று முயிர்கொன்று முளதென்று
ஞேன்றலை புநோன்பென்று ஞேக்குடைய கணிகையரோ
போன்றிருந்து பொதியறுக்கும் புத்தன்றன் புன்னெறியை
யான்சென்றஃ தடிப்படுப்ப னறக்கருமட் டிதுவென்றாள்.

இதனால் நீலகேசியாது உள்ள நிகழ்ச்சி யுணர்த்துகின்றார்.

(இதன் பொருள்) [3]“ தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதூனுண்பான் ” எனவும், [4]‘ ஊனுண் டுயிர்கட் கருளுடைய னென்பானும் ” மெனவும், [5]“ விலைப் பாலிற் கொண்டூன் மிசைவதூஉங் குற்றம் ” எனவும், [6]“ஊனைத்தின் றூனைப் பெருக்குதன முன்னின்று ” எனவும் சான்றோராவிகழப்பட்ட மாம்ச பக்ஷணம் குற்றமன்றென்றான் ; என்னை ?

[7]“ மாம்ஸஸ்ய மரணம் நாஸ்தி நாஸ்தி மாம்ஸஸ்ய வேதநா
வேதநாமரணாபாவாத் நாஸ்தி தோஷோ மாம்ஸபக்ஷணே ”

[8] (என்பதால்). இகலோகத்துக் கர்மங்களைச்செய்து, பரலோகத்துச் சென்று பல மனுபவிக்கு முயிருளதாயினன்றே தர்மானுஷ்டானம் வேண்டுவது ; அந்த வுயிரையு முளதென்றான் ; என்னை ?

[9]“ [illegible]
[illegible]
[illegible]
[illegible] ”

எனவும்,

---

1 அந்து - அந்தம் ; கடைக்குறை விகாரம்.

2 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

3 திருக்குறள் - புலான் மறுத்தல். 1.

4 திரிகடுகம் 37.     5 நான்மணிக் கடிகை 26.

6 இன்னா நாற்பது 23.     7 பௌத்த நூல் சுலோகம்.

8 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.   9 இந்நூல் 11-வது பக்கம் பார்க்க.

1" [illegible] "

எனவும் சொல்லுதலின். அநஶநாதி பாஹ்யாப் யந்தர தவசுக்களைத் தப லென்றன்; என்னை? ஸ்நானபானதாம்பூலாதிகள் சேவித்து, 2" காயந்தன்னை வருத்தற்றவ மென்பாய், மூபிட்டுப் புழுக்காய் முழங்கையைத், தேயாய் தீயிற் சுடா" யென்றிங்ஙனஞ் சொல்லுமாகலின்.

ஆதலாலிப்படி யழகுடைய கணிகா ஜனங்கள் போல மனுஷ்யருடைய 3 குணநிதிப்பொதி கவரும் புத்தனது அஸத்யமாகிய மார்க்கத்தினை யழித்து, ஜின ஶாஸனத்தை விளக்குவேன்; முந்துறவிது தர்மகார்யமென்று நினைந்தா ளென்றவாறு. (கச)

164 மண்டலத்தி னோக்குவாள் மடுத்ததன தவதியாற்
கண்டனடான் 4காம்பிலிக் காவலன் கடைமுகத்தோர்
தண்டமைய பொழில்நாவற் சாகைநட் டுரைபெறக்
குண்டலகே சிப்பெயரைக் குறியாக வேகொண்டாள். (கரு)

165 தருமத்திற் றிரிவில்லா டயாச்செய்தற் பொருட்டாக
நிருமித்த வகையினதா நெடுநகரை வலஞ்செய்து
திருமுத்தப் பிடிகைக்கட் சித்தரையுஞ் சிந்தித்தோர்
5பெருமுத்தப் பெண்ணுருவங் கொண்டியைந்த பெற்றியளாய்.

166 அந்தரமே யாறுச்சென் றழனுதிவே லரசர்கட்
கிந்திரனே போன்றிருந்த விறைமகனை திடமெய்திக்
கந்திருவ மகளென்யான் காவலனைக் காண்குறுவேன்
வந்திருந்த துரைவிரைந்து வாயிலோ யெனச்சொன்னாள். ()

167 கருங்களிறுங் கலிமாவுங் கந்தோடு பந்தியவே
நெருங்குபுபோய் நீருண்ணு தேர்பண்ணு நெடுங்கடைக்குப்
பெரும்படையுஞ் சாராதிப் 6பெண்பாலி மரநட்டிங்
கிருந்ததன் றிறத்தினை லெனக்கரிது புகலென்றான். (கஅ)

---

1 இந்நூல் 11-வது பக்கம் பார்க்க.

2 புத்த வாதச் சருக்கத்திலும் வந்துளது.

3 குணநிதிப் பொதிகவரும் - குணமாகிய திரவிய மூட்டையைக் கவருகின்ற.

4 காம்பிலி - தென் பாஞ்சால தேசத்து ராஜதானிப் பட்டணங்களுளொன்று; கன்னிங்ஹாம் புராதன இந்திய பூகோளம் - 704-ம் பக்கம்.

5 பெருமுத்தப்பெண் - பெருமை பொருந்திய தாபஸப் பெண்.

6 'பெண்பாலிம் மரநட்டு' என்றும் பிரதி பேத முண்டு.

168 வாயிலோ னுரைகேட்டு வடிக்கண்ணாள் முகநோக்கிக்
கோயிலையான் புகவிலக்குந் துறையென்னை முறைதிருத்தும்
பூசலிங் குடையையோ பொருளிழவோ வுயிரிழவோ
நீயிலையார் புதனடற்கு நிமித்தமிங் கென்னென்றாள். (க௯)

169 என்கருமம் வினவுதியே [1]லிங்கியரு ளென்னேநூ
நன்குரைப்பார்த் தரல்வேண்டி நாவற்கொம் பிதுநட்டே
னுன்கரும நீசெய்வாய் நுழைந்தறிவு முடையையேல்
மன்பெரியான் றிருந்தவைபண் மாற்றந்தா வெனச்சொன்னாள்.

170 அப்படித்தே யெனின்வாயி லடைப்பொழிக யானேதே
ரெப்படியு மியங்குகநும் மிறைமகற்கு மிசைமினென்
றிப்படியா லிவையுரையா விலைநாவ லிறுத்திட்டா
டுப்போடு கனிதொண்டை துயில்கொண்ட துவர்வாயாள். (உக)

171 வேந்தனு மதுகேட்டே வியமுபிர்த்த வவைபனுப்ப்
பூந்தடங்க ணல்லார் புகுதுக வெனப்புகலும
போந்திருக்க வெனவிருக்கை பொருந்தியவா றவரவர்கட்
கீந்துலகத் தியற்கையு மினிதினிற் செய்திருந்தான். (உஉ)

172 முதலவனோ டவனூலு மந்நூலின் முடிபொருளு
நுதலிய பொருணிகழ்வு நுங்கோளு மெமக்கறியத்
திதலைமா ணல்குலீர் தெருட்டுமி னெனச்சொன்னா
னதலையும் பெருங்கதவ மடைப் பொழித்திட் டலவேலோன்.

173 நன்றாக வுரைத்தனைநீ நரதேவ நின்னவையுள்
வென்றார்க்கோர் விழுப்பொருளுந் தோற்றார்க்கோர் பெருந்துயரு
மொன்றாக வுரையாக்கா லுரையேன்யா னெனச்சொன்னாள்
குன்றாத மதிமுகத்துக் குண்டலமா கேசியே. (உச)

174 அறத்தகைய வரசனு மதுகேட்டாங் கவர்க்குரைப்பான்
சிறப்பயர்வ னன்றாக வென்றார்கட் கின்றேயான்
புறப்படுப்பன் றோற்றாரைப் பொல்லாங்கு செய்தென்றாற்
கிறப்பவும் பெரிதுவந்தா ரிலங்கிழையா ரிருவருமே. (உ௫

175 வேனிரைத்த விரிதானை வேத்தவையார் வியப்பெய்தக்
கோனுரைத்த வுரைகேட்டே குண்டலமா கேசியுந்

1 இலிங்கியர் - தபசிகள்.

தானுரைத்தாள் தான்வேண்டுந் தலைவனூற் பொருணிகழ்ச்சி
தேனிரைத்த கருங்குழலா ளானும்பின் றெருட்டினாள்.

"தேனிரைத்த கருங்குழலாள்" என்பது - நீலகேசியாரைச் சொன்ன வாறு. (௨௬)

176 ஆதிதான் பெரியனு பறக்கெடு மளவெல்லா
மூதியமே லார்ந்தவ னறந்தரும மேயுரைத்தான்
[1]யாதனினுந் தான்வேண்டா னயலார்க்கே துன்புற்றான்
போதியா னெடியிறைவன் பொருந்திறு நயக்கொள்வான்.

என்பதனால், குண்டலகேசி தான வேண்டும் சுகதனது சுவரூபஞ் சொல்லு கின்றாள். அஃதாவது: முன்பேதான பெருமைக்கணின்றானாகிப் பொனாக கேடாகிய மோக்ஷத்தைத் தானடையுமளவுஞ் செல்லப் பிறர்க்கு ஹிதமே சிந்தித் தான; பிராணிகளுக்கெல்லாம் மிக்க தர்மத்தையே மொழிந்தான்; தனக்கொரு நன்மையும் வேண்டானாகிப் பிறர்க்கே நன்மையாக வழுந்தான்; தன்னைச் சரண மாக வடைந்தாரை ரக்ஷிப்பான; புத்தன்; நமக்கிறைவனென்றவாறு.

இதனான், [2]"முன்றான் பெருமைக்கணின்றான்" என்னுங் காதையை அநு வதித்தவாறு. (௨எ)

177 மூன்றுரைத்தான் முன்னூலு மந்நூலின் முடிபொருடா
னைந்துரைப்பி னுருவுழப் பறிவோடு குறிசெய்கை
சிந்தனைகட் செலவோடு வரவுமே நிலையில்ல
தந்துரைப்பி னெரிநுதிபோற் றங்கெடு நிகழ்வென்றாள்.

இதனால், நூலும், பொருளும், நிகழ்ச்சியுங் கூறுகின்றாள்.

முன் சொல்லப்பட்ட சுகதன் விநயபிடகம், சூத்ரபிடகம், அபிதர்மபிடகம் என்னும் மூன்று நூலுஞ் சொன்னான்; அந்நூலின் கண் முடிவுடைய பொருளைந் துரைத்தான்; அவையாவன: [3]ரூப ஸ்கந்தமும், [4]வேதனா ஸ்கந்தமும், [5]விக்ஞான ஸ்கந்தமும், [6]ஸஞ்ஞா ஸ்கந்தமும், [7]ஸம்ஸ்கார ஸ்கந்தமும் என்பன.

1 'யாதனின்' என்பது திருக்குறளிற் பிரயோகிக்கப்பட்டுளது - துறவு. 1.

2 குண்டலகேசிச் செய்யுள்; வீரசோழியத்து உதாரணங் காட்டப்பட் டுள்ளது.

3 ரூப ஸ்கந்தம் - உருவாகிய மூலப்பொருள்.

4 வேதனா ஸ்கந்தம் - உழப்பு.

5 விக்ஞான ஸ்கந்தம் - அறிவு.

6 ஸஞ்ஞா ஸ்கந்தம் - குறி.

7 ஸம்ஸ்கார ஸ்கந்தம் - வினை; இவற்றின் விவரம் புத்த வாதச் சருக்கத் திற் காண்க.

ணிறப்பு நூறாயிரங்கற்ப காலம் பிறர்க் குழந்தானாதலின், முன் பெருமைக் கணின்றானென்று சொல்லப்பட்டதெனின், முன் பெருமைக்குத் தலைவராம் பாகிப் பெருமை பெற்றானாயிலவன், பின்ப பிறர்க் குழக்கின்றதனான் முடிக்குங் கருமம் யாவதாம்? முன்ப பெறாத புத்தத்வம் பெற்றானென்று காட்டுதியாயின், முன்பு பெருமைக்குத் தலைவராம்பாகிய பெருமை பெறாது, அது வேண்டிப் பிறர்க் குழந்தானாதலிற், 'றனக்கென் றொன்றானு முன்னா' னென்பது பிழைக்கும். அலைதன்றி இவன் புத்தத்வம் வேண்டிப் பிறர்க் குழந்தானல்லன; இவன் பிறர்க் குழக்கப் புத்தத்வம் தானே வருமென்றற்கட் புத்தத்வம் வருவதறிந் தழக்குமோ வறியாதழக்குமோ? அறிந்தழக்குமெனில், புத்தத்வம் வேண்டி யுழந்தானுடறுதி வேண்டி யுழந்தானும்; அறியாதழக்கில் ஞானக்குறைபாடும், தர்மக் குறைபாடு முடைமையிற் பெருமையிலனும். ஆக, 'முன்றான பெருமைக்கணின்றா' னென்பது பிழையென்றார்க்குத் தர்மங் கொண்டது கருதிப் பெருமைக்கணின்றானென்றதல்லது, பிறிதொரு பெருமையிலனெனின், இவ்வாறு பெருமை கொள்ளின், ஊரில் விழுந்தமுதாயதின்று, பிறர்க்குழுது, செய்த்தலைக் கிடந்து, புத்த தர்மங்கொண்டு கிலேசிக்கின்ற சண்டாளர் முதலாயினாரும் பெருமைக்கணிற்றன் முதலாவுடைய ஆப்தராக வேண்டுமென்றவாறு.

இத்துணையும், "முன்றான் பெருமைக்கணின்றா" னென்பது பிழையென்று, அதற்குக் குற்றங் கூறியவாறு. (௩௧)

181 தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க வென்பதனை
யூன்கொடுமை யுரைத்தானஃ துணர்ந்திலனே யாகாதோ
தான்கெடு மளவெல்லா நினைந்துரைத்த தத்துவந்தான்
மான்கடியு நோக்கினாய் வழியறக்கெட் டொழிவதோ.

இதனான், நன்குணராமையும், குணனே மொழியாமையு முணர்த்துகின்றார்.

1 "தான் கெடினுந் தக்கார்கே டெண்ணற்க" வென்னும் பாட்டினையறியாதே, தானூன்றின்ன வேண்டிக் கொடுமையுரைத்தான் நன்குணர்ந்திலனும். அதுவென்றது - நன்கு; என்னையெனிற் பலரும் மாம்சமுண்பாருண்டாயினல்லது நமக்கு மாம்சமுண்டலரிதென்னுங் கருத்தினா லங்காடியிற்பட்ட வூனுண்பார்க்குக் குற்றமில்லையென்றான்; என்றலுமே 2 அர்த்தவாஞ்சாபராகிய ஜனங்களால் வதிக்கப்பட்டு ஸர்வதிர்யக்குகளும் நசித்தனவாதலிற் றன் வயிற்று நிமித்தமாகப் பிற ஜீவன்களுக்கு நிலைநிற்குங் கேட்டினை யுரைத்தான். ஆதலின், நன்கு நினைத்தானல்லனென்பது. இவ்வாறு பிற ஜீவன்களுக்குக் கேடுரைத்தமையிற் குணமொழிந்தானு மாகானென்பது. எங்ஙனமோவெனின், ஓரரசன் றன் பரி ஜனங்களை யழைத்து, 'இன்ன தேசத்துள்ளார் தலைகொடு வந்தார்க்கு அர்த்தங்கொடுத்து வாங்குக' வென்றான்; அவன் நன்கு நினைந்தானுங் குண

1 நாலடியார் - பொறையுடைமை - பாட்டு 10.

2 அர்த்த வாஞ்சாபரர் - பொருளாசை யுடையவர்.

மொழிந்தானு மாகாதவாறுபோல இவனும், "நரமாம்சாதி யொழிந்த, ஒழிந்த மாம்சம் விலை கொடுத்து வாங்குக" வென்றானாதலில் இவனும் நன்கு நினைந்தா னுங் குணமொழிந்தானு மாகானென்பது. என்னை? இவன் உலகுய்யக்கொள்வான் வேண்டித் தத்வோபதேசம் பண்ணினானாதலின், நன்கு நினைந்தானுங் குண மொழிந்தானு மாகானோவெனின், ஆகான. தன்னை ஆஸ்ரித்தார்க்கு[1] ஸந்தான நாசம் சொல்லுவதோ தத்வோபதேசமாவது? தத்வோபதேச மாகாதென்றவாறு.

துக்கரூபமாகிய சம்சாரத்து வர்த்திப்பதில் பொன்றக்கேடழகிதெனில். சம்சாரத்து துக்கமுளதேயெனினும் தபசாலும், தானத்தாலு முண்டாவதாகிய சுவர்க்காதி சௌக்கியங்களு முளவாகலில் நசித்த லழகிதன்றென்பது. ஆதலா லொருமுறை[2] ஸ்ரக் சந்தன வனிதாதிகளாற் சுகித்தும், ஒருமுறை ரோகாதி களால் துக்கித்தும் திரிவானொருவனைச் சாமருந்துண்ணென் றுபதேசிப்பதே போலும் சுகதனது தர்மோபதேசமென்பது.

இதனாலு மிவன் நன்கு நினைந்தானுங் குணமொழிந்தானு மாகானென்பது.

[3]"எஞ்சிய சொல்லி னெய்த வைத்த" லென்பதனால், 'அறியாதே' என னுஞ் சொல் வருவித்து, 'தான் ......ற்கவென்பதனை யறியாதே' யெனப் பொரு ளுரைக்கப்பட்டது. (௯௨)

152 வழிவாழக் கெடுகின்றார் மாந்தருண் மேலாயார்
பழிபாவ மோராதான் பற்றினார்ப் பாழ்செய்வான்
ஒழிபாவி தலைவனென் றுரைப்பதனை யுலகத்தார்
கிழியோடு மாறுக்கா சென்றான்சொற் கேட்பவோ.

இதுவும் அப் பொருண் மேற்று.

மக்களுண் மேம்பட்டார், தம்மை யடைந்தார்க்குக் கேடுவாராமை வேண்டித் தாங் கெடுவர். சுகதன், தன்னை ஆஸ்ரித்தாரைக் கெடுக்கின்றானாதலாற் பழியும் பாவமு மோராதானொருபாவி; இவனைத் தலைவனென்றுரைப்ப தொழி; இவன் வாக்யம் விஸ்வசிக்கப்படாது; பரீக்ஷித்துப் பாராது, "கிழியொடு மாறுவிக்காசு" என்ற வண்ணக்கன் வாக்யத்தை விஸ்வசித்துக் கேட்பரோ வுலகத்தாரென்ற வாறு.

இவன், ஆஸ்ரித்த ஜனங்களைக் கெடுத்தவாறென்னெனில், முற் சொன்ன பொன்றக்கேடுமொன்று. அன்றியும், இவனை ஆஸ்ரித்த ஜனங்களன்றே புத்ர ரும், தாரமும்? அவருட் புத்ரரைப் பிராமணர்க்கு அடிமையாகக் கொடுத்து அல் லல் கண்டான். என்னை?

1 ஸந்தான நாசம் - ஒழிவறக் கெடுதலாகிய நிர்வாணம்.

2 ஸ்ரக் - மாலை.

3 நன்னூல் பாயிரம் - உத்தி சூத்திர அடி.

1 "வண்டுளங்கொள் பூங்குழலாள் காதலனே யுன்றன்
மக்களைத்தா சத்தொழிற்கு மற்றொருத்த ரில்லென்
றெண்டுளங்கச் சிந்தையனோர் பார்ப்பனத்தி யூர்க்க
ளீரத்தலுமே நீர்கொடுத்தீர் கொடுத்தலுமத் தீயோன்
கண்டுளங்க நும்முகப்பே யாங்கவர்க ளம்மைக்
கடக்கொடியா லேபுடைத்துக் கானகலும் போது
மண்டுளங்கிற் றெங்ஙனே நீர்துளங்க விட்டீர்
மனந்துளங்கு மாலெங்கள் வானோர் பிரானே."

எனவும், "புடை புதல்வர் புனையிழையர்" எனவுஞ் சொல்லுதலினென்பது. புத்ரரிடர்ப்பட வேண்டிக் கொடுத்தானல்லன், மறுக்க மாட்டாமை கொடுத்தானெனின், ஆடு முதலாயின கொல்விப்பாரும் அவையிடர்ப்பட வேண்டிக் கொல்விக்கின்றாரல்லர்; கறிவிருப்பினாற் கொல்விப்பர்; அவரும் நன்கு நினைந்தாருங் குணமொழிந்தாரு மாகல்வேண்டுமாதலால், இவன்றீங்கு நினைப்பானுந் தீங் குரைப்பானுமே யாமென்பது. இனி யொருவண்ணக்கன் ஒருவனோடு வெறுத் திருக்குமவன், ஒருநாள் ஓரிறைக்கு ஒரு கிழியிற் காசு கட்டிக்கொண்டுவந்து, 2வண்ணக்கனுக்குக் காட்ட, அவனால் வெறுப்பினால் பரீக்ஷியாது கிழியொடு மாறு தென்றான். என்னை? சகல ஜனங்களும் தர்ஜித்து, அவனது வசனங்கொண்டிலர்; அதுபோல இவனும் ராகாதி தோஷங்கெடா ஞானாதி குணந்தரித்தும், மோக்ஷமென்றது சர்வ சூன்யம் மோக்ஷமென்றான; அதுவன்றியுங் கொடுக்கப் படுவதுங் கொடுக்கப்படாததுமென்றது பிரார்த்தித்தனவெல்லாங் கொடுக்க வென்றுஞ் சொன்னான். ஆதலால், இவன் வசனங் கொள்ளப்படாதென்பது.

உபமானத்து வந்தது உபமேயத்தும் வருமாதலில் சுகதவசனம் விசுவசிக் கப்படாதென்று சொல்லப்பட்டது. (௬௬)

183 நுனைத்தலைய நுண்மயிரை நுனியுறீஇ விதிர்த்திட்டா
லனைத்துணைய தடங்கடலு மறக்கிடந்த பிறந்துழப்பு
நினைக்குங்காற் பிறர்க்கேயா மென்றியா னீயன்று
பனைத்துணைய பெரும்பாவ மவன்செய்தா னாகானே.

இது, பிறர்க்குறுதிக் குழந்தானென்றதற்குக் குற்றங்கூறும்.

கூர்த்த தலையையுடைய நுண்மயிரினது நுனையினாற்றோய்த்து, சமுத்திர ஜலமுழுவதும் பிந்துக் குற்றினா லெத்துணைப் பிந்துப் பிறக்கும், அப்பிந்துக் களினளவாகிய சமுத்திர ஜலங்களையு மிவ்வாறே பிந்து வாக்கினா லெத்துணைப் பிந்துப் பிறக்கும், அத்துணை ஜனனம் பிறந்து, பிறர்க்குழந்தானென்று நீ சொல் லுதியாயிற் பெண்பினாய்! சுகதன் அவ்வளவான பாபமெல்லாஞ் செய்தானா மென்றவாறு.

---

1 புத்தவாதச் சருக்கம் 104-ஆம் செய்யுளுரையிலும் வந்துளது.
2 நாணய பரிசோதகன்.

ஓகாரம் எதிர்மறை. எனவே இவன் பாபம் செய்தானல்லன். 'இன்ன தேசத்தார் தலைகொடு வந்தார்க்கு அர்த்தம் கொடுக்க' வென்ற அரசனைப்போல, இவனும் 'யோக்யமாம்சம் கொடுவந்தார்க்குப் பொருள்கொடுத்துக்கொள்க' என்று உபாயத்தினாற் கொலைசெய்தானன்றே யாதலால், இவன் மகா பாதகியா மென்பது.

இனி, அரசனை யந்தத் தேசத்துள்ளார் செற்றங்கொண்டவாறுபோல, பசுவை நிமித்தமாகக் கொலையுண்ட ஜீவன்களிற் பேயாய்ப் பிறந்த ஜீவன், இவன் மேற் செற்றங்கொண்டு, 'நம்மை உபாயத்தினாற் கொல்வித்தானை நாமுமுபாயத்தினாற் கொல்விப்போ' மென்று, கொடை பரீக்ஷித்தன் மேலிட்டும், இரத்தன் மேலிட்டுங் கொல்வித்துத் துன்பறுவித்தனபோலுமல்லது, ஒருகா லுரைபார்த்து இன்னது மாற்றென்று அறுதியிட்டபொன் பின்னுரைக்க வேண்டாதவாறு போல, ஒரு ஜனனத்துப் பரீக்ஷித் தறுதியிடப்பட்ட வினை யன்றானே பல காற் பரீக்ஷிக்க வேண்டுவதில்லை யென்பது. (௧௮௩)

184 துன்பந்தான் றீவினையின் வழித்தோன்றுந் துன்பமே-
யென்பதனை நமரோடு மெப்பொழுது முரைப்பவாற்
பின்புந்தான் பிறர்பிறக்கும் பிறந்துழப்பே யாக்கினு
லனபினான் முன்செய்த தருவினையே யாகாதோ.

இதுவுமது.

"நமரோட...வால்" என்றது - "துன்பந் தீவினையின் பயனல்லவே" யென்னுங் காதையால் ஜைனருடைய [1]காயக்லேச தபசு பழித்தவாறு சொல்லிற்று. "பின்புந்தான...கினால்" என்பது அருளுடையாராய்ப் பாவத்திற் கஞ்சினரை [2]அஞ்சங்கங்களுங் கூடினல்லது கொலையில்லையென்றும், காற்றொன்னிற் கிழ்ப்பட்டது களவாகாதென்றும், எட்காய் நீள மழுந்த வையாவிடிற் கடலாதென்றும், இவ்வாறுபதேசித்து, பாபங்களிற் செலுத்திப் பிறர்க்குச் சம்சார துக்கத்தைப் பண்ணினானென்றவாறு. (௧௮௪)

185 தனக்கொன்றும் பயனின்றித் [3]தளையாளென் றுன்வருந்தி
யெனைப்பெருங் குப்பையு மெருச்சுமப்பாற் கண்டக்கால்
நினைப்பதொன் றுடைத்தவன் செய் நெடும்பாவ நிச்சலும்
மனக்கினிதா வவன்றன்னை யாள்வார்மாண் புரையாயோ.

---

1 காயக்லேசம் - பிணி, மூப்பு முதலியவற்றால் தேகம் நலிந்து. சாதல் திண்ணமென்றறிந்துழி ஆகார ஔஷதாதிகளால் சரீரத்தை ஓம்பாதொழிதல்.

2 அஞ்சங்கம் - வீதல், வீவதுபிராதல், அக்குறிகோடல், காய்தல், கோறல் எனபனவாம்; புத்தவாதச்சருக்கம், "ஒன்றனின்ற வுயிரை" என்ற செய்யுளிற் காண்க.

3 தளையாள் - தாஸன்.

இது தனக்கொரு பயனின்றிப் பிறர்க்குழந்தானுயினுந் தலைமையிலனென்பதற்குத் திருஷ்டாந்தங் கூறுகின்றது.

"வினைப்ப.....யே" என்பது - எருச்சுமக்கின்றான் பாவஞ் செய்தானென்பதும், அவனையாள்வான செய்த புண்ணியமுமாகிய வினைவடைத்துலகம் நீயதுரையாயோவென்பது.

இனி, இவன்றனக்கொரு பயனின்றி யுழந்தானென்பதும் பெறப்பட்டாது, புத்தத்வ முதலாயின பெற்றானுதலினென்பது. (௩௬)

186 அவ்வகையா லுழக்கின்றா னயலார்கள் படுகின்ற
வெவ்வகையில் வேரிடரை யொழிப்பதன் பொருட்டாக
இவ்வகையா லருள்செய்யு மென்பதனை யெடுத்துரைத்தாள்
கொவ்வையந் துவர்ச்செவ்வாய்க் குண்டலமா கேசியே.

இது, பாபஞ்செய்து துன்பமுழக்கின்றானல்லன; அருள் காரணத்தால் துன்புறுகின்றானென்பது விளக்கும். அவ்வகையுழல்கின்ற புத்தனிவ்வகையா லருள்செய்யுமெனக் கூட்டுக. (௩௭)

187 அருளினாற் பிறர்க்குழக்கு மவனென்ற வவ்வுரையைப்
புரளல்நீ பிறப்பொழியும் பொழுதின்க ணவ்வருளைப்
பொருளன்மை கண்டானோ புற்கலர்தா முலர்ந்தாரோ
தெருளநீ யுரைத்துக்காண் டிருந்தவையா ரிடையென்றாள்.

இதுவும், அருளாற் பிறர்க்குழக்கினானென்பதற்குக் குற்றங் கூறுகின்றது.

அருளினா லிவன் பிறர்க்குழக்கின்றானென்பதனை நீ பிறழா தொழி; இவன் கையற நசிக்கின்ற காலத்து, அருளைப் பொருளன்றென்று விட்டானோ? பற்கலராகிய முத்திபெறுவா ரெல்லாருமடைய முத்திபெற்றாரோ? இவனெல்லாரையு மொழிவறவொடாது முக்தனாக வேண்டிய தென்னை சொல்லிக்கா ணென்றவாறு.

அன்றியுமிவன் அருளினாற் பிறர்க் குழக்கின்ற வழிப் பிறரான் கர்ம வசனாகி யுழக்குமோ? ஸ்வேச்சையாலுழக்குமோ? பிறன் கர்மவசத்தாலுழக்குமெனின், தனையாளனை தாசனைப்போலப் பெருமையிலன்.

இனி, ஸ்வேச்சையாற் பிறர்க்குழக்குமெனி லிவன் நரகத்துத் துன்புறுவாருடைய துன்பங்களைத் தான்கொண்டு அவர்க்குத் தன் புத்தத்வத்தைக் கொடுத்தல்வேண்டும். தான் பொருளுடையானுமாகித் தன்னாற் செய்யப்படுவதுமாகிய விது செய்யானெனி லருளிலனாம். அவ்வாறு செய்யுமேயெனி லிவற்கென்றும் நரகத்துன்பமொழியாதாம், நரகத்துப் புகுவா ரொழிவின்மையான். அன்றியுமொருவர்க்கும் பாபந்தவிர வேண்டுவதுமில்லை, பாப பலமாகிய துன்

சங்கிருவ ருளரெனினு மவரின்முன் னவையிரே
நங்கருமமு முலைப்பித்து நாம்போது மெனாக்காள்.

இது, ஒழியாம லுய்யக்கொண்டா னென்பதற்குக் குண்டலகேசி சொன்ன அர்த்தத்தைத் துஷிக்கின்றது.

அங்கிருவரென்பார்— [1]ஆர்யாவலோகனும், மைத்ரபாகுவுமென்பர். இனி, இவ்வாறன்றித் தர்மமும், சாஸ்திரமுமென்பது மொன்று. என்னை ?

“ கண்டாரை யுய்க்கொண்டான் காண்பார்க்குச் சார்வானான்
கண்டவாக் கடைப்பட்டார் காண்கவென் றுரைவைத்தா
னுண்டாகை யலகுய்யக் கொள்கென்றவ் வெடுத்துக்கோ
ளுண்டாக விவவைகையா லுய்க்கொண்ட தாகாதோ ”

என்றமையின். தர்மம் சாஸ்திரத்தால் சித்திப்பதாம்.

“ இங்கி......தெளிகிற்பார் ” என்பது—உலகத்து ஜீவன்கள் துன்புறுவது கண்டு. கருணைமிகுதியா லொழியாம லுய்க்கொள்வனென்று கைவந்த முக்தியை விட்டுச் சம்சாரத்து[2] பரிபிரமிக்கின்றான், சிலரையெடுத்து ஒழிந்தாரை வேறு சிலரெடுக்கின்றாரென்றும், யான் சொல்லிய சாஸ்திரத்தின் வழி யொழுகிப் பிழைப்பாரென்றும் நினைத்துத் தான் முக்தனாயினானென்று நீ சொல்லி னிவ னருளுடைய னென்றியாவர் தெளிவாரென்றவாறு.

இதன் பொருள் : பண்ணியவான்களாகிய சிலரை எடுத்து, ஒழிந்தாரைத் துன்புறக்கண்டுவிட்டுப் போதலிலிவன் கர்ம வசத்தாலுழந்தான் கருணையாலன் றென்றவாறு. ஒழிந்தாரையுமுய்யக் கொண்டானவன், அவர்கட்குத் துக்க நீங்கு தற்குபாயமாகிய சாஸ்திரஞ் சொன்னமையினெனின், பலிக்கறுக்கக் கட்டுண்டு போகாநின்றதோ ராட்டினை யொருவன் றளைந்தோடித் தப்பவல்லையாயிற் றப் பென்றது போலு மிவன் சாஸ்திரஞ் சொல்லி யுய்யக் கொண்டதென்பது. இவ் வாறு செய்யின் முன்பே இந்தச் சாஸ்திரத்தைச் செய்து தான் துன்புறாதே முக்தனாதலே சாலுமென்பது.

“ நங்க......க்காள் ” என்பது - அவர்கணம்மை வந்து கெடுப்பதன்முன் போவோமென்றவாறு ; அதவா[3] அவர்கள் வருமளவும் நாம் யதேஷ்டம் சரிக்கப் போவோமென்றவாறுமாம். (௩௦)

190 முன்கொன்றான் றன்றாயை முழுமெய்யும் போர்த்திருந்து
தின்கின்றான் பிணம்வீடுந் தெருட்டுங்காற் சூனியமே
யென்கின்றா னிவன்போல்வா ரிறைவரில் லெனவுரைப்பாய்
தன்கன்று சாக்கறப்பான் றயாப்பிறிதிற் குடையவனே.

1 இப்பெயர், வீரசோழியம் பதிகத்திற் கூறப்பட்டுளது.

2 பரிபிரமித்தல் - சுழலல்.

3 அல்லது.

நிருவுமவ னருளிலனென்பது கூறும்.

"மூன்......ருயை" யென்பது-இவன் பிறக்கின்ற காலத்து மாதாவினது வலமருங்குலாற் பிறந்தான்; அவளும் ஆறு நாட் குற்றுயிரோடு கிடந்து ஏழா நாளிறந்தாள். இது பத்தமாதாக்கள் யாவர்க்கு மொக்கும். என்னை?

> "உலும்பினி வனத்து ளொண்குழைத் தேவி
> வலம்படு மருங்குல் வடுநோ யாரும
> லான்றே னவ்வழித் தோன்றின னுதவி
> னீன்றோ ளேழுநா ளின்னுயிர் வைத்தாள்"

எனபது [1]பிம்பஸார கதை யென்னுங் காவ்யம்; பௌத்தருடையது; அதன்கட் கண்டு கொள்க. அன்றியும்,

> "புத்தன்றாய் ஞெண்டிப்பி வாழை புனமூங்கில்
> கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி—நித்தநீடம்
> வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட
> சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு."

என்னும் லோக வசனத்தாலுங் கொள்க.

"தின்...—பிண" மென்பது—அன்புசெய்யப்பட்டார் துன்புகண்டன்றே யன்புடையாரிரங்குவது; அதுபோல அருள் செய்யப்பட்ட பிராணிகளது சரீரங்கள் சோர்ந்து கிடப்பது கண்டால் அருளுடையா ரருள் செய்பவன்றே; இவனருளில்லாமையினன்றே பிணந்தின்கின்ற தென்பது; ஆதலினருளிலன்.

> [2]"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது னுண்பா
> னெங்ஙன மாளு மருள்"

என்பதுங் கொள்க.

"வீடும்......கின்றான்" என்பது—மோக்ஷமாவது சர்வசூன்ய மென்றான்; என்று, தானும் மாம்ஸபக்ஷண தாம்பூல ஸேவாதி செய்தான்; செய்ய, புத்தராகிய ஜனங்கள் மோக்ஷ சுகமென்பது ஒன்றில்லை, ஸம்ஸாரசுகமே சுகமென்று லோகாயதனைப்போல [3]யதேஷ்டமாசரித்து, துர்க்கதியுள் வீழ்ந்து துன்பமுற்றனர். ஆதலாற் பிராணிகளை, இது சொல்லித் துன்புறுவித்தானென்பது. ஆதலாலுமருளிலன்.

"தன்......பான்" என்பது—தன் புத்திராதிக்கு அல்லல்கண்டா னெனறவாறு.

---

1 பிம்பசார கதை - பௌத்த நூல்.

2 திருக்குறள் - புலான் மறுத்தல். 1.

3 யதேஷ்டம் சரித்து - இஷ்டப்படி நடந்து.

நிக்காரணன் பிறிதொன்றிற்குத் தயவுடையனல்லன். இவனை யொப்பார் ஆப்தரில்லையென்பாய் மேலைக் காதைகட் சொல்லுமாதலினொ டொத்தி யென்றவாறு. (௬௧)

191 கண்ணொடுகா திவையிலள் கரந்தன முலையிரண்டு
முண்ணும்வா யுதட்டோடு மூக்கில ளுறுநோய்த்தி
பெண்ணழகிற் கிவள்பிறராற் பேசவும் படுவாளோ
வெண்ணுங்கா லென்பேதை யெனவுரைக்கு மவனொத்தாள். ()

192 பருவரலொன் றிலன்றாயைப் பழுப்பறித்தான் றலைவனிவள்
கருவரைமேற் றன்கணவன் காலனையுங் கவிழ்த்திட்டா
ளிருவரையும் போல்வாரிவ் விருநிலத்தின் மேலெங்கும்
பெருவழியார் பேருளார் பிறர்யாரே யெனநக்காள்.

பெருவழியார்—பெரிய அடிப்பாடுடையார். (௬௨)

193 ஒண்ணுதலா யுன்றலைவ னொழிவின்றி யுணர்கலான்
கண்முதலா வுடையவிக் கருவியிற் கண்டுகேட்
டெண்ணியு முணர்தலா விலைசுமக்கு மொருவன்போ
னுண்ணுர்வு தனக்கில்லா னுரைத்ததுதா னூலாமோ.

இது, ஒழிவின்றி யுணராத சுகதன சொல்லியது நூலாகாதென்று நூற் குற்றங் கூறும்.

என்னை? ஒழிவின்றி யுணராதவா றேதெனில், அது கடவுள் வாழ்த்தினுட் சொல்லிப்போந்தாம். அன்றியும் இவனுடைய ஞானம் உற்பத்திக்ஷணத்தே நசிக்குமாதலிற் பிறிதொன்றை யுணரமாட்டாதென்பது. அன்றியும் கண்முதலாவுடைக் கருவியாலும், மனத்தால் விசாரித்தும் பொதுமையாலொட்டி யுணர்தலா விலைவாணிகனைப்போல நுண்ணுணர்வு தனக்கில்லாதான் சொன்னது நூலாகாதென்றவாறு. என்னை? நுண்ணுணர் விலாமையெனின், ஒன்றையறிந்தப் பொதுவகையா லொட்டி ஸ்தூலமாக வுணர்வதல்லது, பொதுவுஞ் சிறப்புமாகிய பொருட்டன்மையெல்லா முணராமையினென்பது. என்னை?

"ஒன்றொன்று புணர்ந்தானே லுலந்தில பொருளென்பா
யொன்றறிந்தப் பொதுவகையா லொட்டினு னெனமொழிந்தா"

யெனவும்,

"பொதுவினு லொருங்குணரு மிகுதியான் முறையுணரு"

மெனவும்,

"எப்பொரு ளாயினு மெப்பொழு தாயினு
மப்பொழு தறிகுற்று லறிகிற்கு மிலக்கணத்தா

லெப்பொருளு மறிந்தானென் றேத்துத லல்லாக்கா
லெப்பொருளு மறிவுக் கியைந்திருந்த தென்னாமோ"

எனவுஞ் சொல்லுதலின். இவற்றான் மிகுதியால் முடைமையுடைமையு மெனபது விசேஷ வகையாலடையவே யொரோவொரோ விசேஷமாக வறிடமென்றவாறு. எனவே யொரு பொருளின் விசேஷமும் முற்றவறியானும். ஆகவே நுண் ணுணர்விலனு மென்பது. (௩௩)

194 ஐங்கந்த மெனல்பிழைப்பா மறிவின்வே றுதலாற்
1சிங்குந்தன் குறிப்புழப்புச் செய்கைபென் றிவைமூன்று
மிங்கொன்று முருவினோ டிரண்டென்றே யிகவுரைத்தாய்
சங்கந்தா மல்லவேற் றத்துவமுந் தலைப்பட்டாய்.

இது, பஞ்சஸ்கந்தமாகிய பதார்த்தத்திற்குத் தூஷணஞ் சொல்லும்.

அஃதாவது: பஞ்சஸ்கந்தம் பொருளென்பது பிழையாம். என்னை? அறி விற் பின்னமாகையால். குறிப்பும், உழப்பும் செய்கையும் கெட்டன. குறிப் புழப்புஞ் செய்கைகளின வேறுதலாலிக்கொன்றாகிய வறிவுகெட்டது. கெட, ரூபஸ்கந்தமொன்றுமே பொருளாயிற்றாதலால் - அஃதாமாறு குறிகுறியாதறி வின் வேறுதலால் இவ்வாறாகிய ரூபஸ்கந்தம்போல; உழப்புழவாது அறிவின வேறுதலால் ரூபஸ்கந்தம்போல; செய்கை செய்யாது அறிவின் வேறாகையால் ரூபஸ்கந்தம்போல எனவும், அறிவறியாது குறிப்புழப்புச் செய்கைகளின் வேறா கையால் இவ்வாறாகிய ரூபஸ்கந்தம்போல என்றும் சொல்லிக்கொள்க.

"இங்கொன்று" மென்றது - 2ப்ரஸ்துதமாகிய ஞானத்தை. 'இவை மூன்று மிங்கொன்றும் சிங்கு' மெனக் கூட்டுக.

இனி, இவ்வாறன்றி ரூபஸ்கந்த மொழித்தொழிந்த நான்கிற்குமொரு வேற் றுமை வேண்டினையாயில் ரூபம் அரூபமென விரண்டாகக்கொள்; மிக வுரைத்த வளே! இரண்டாகக் கொண்டவழித் தத்துவ மறிந்தாடமாதி யென்றவாறு.

சங்கமென்பது - ஒற்றுமை; 3ஸங்க மென்றவாறு. நான்கை யொன்றாக்கி அரூபமெனனுமா றெனவெனின, எட்டை யொன்றாக்கி ரூபஸ்கந்தமென்ற வாறு போலக் கொள்ளெனபது. என்னை?

4 " [illegible]
[illegible] "

என்பதாகலினென்பது. (௩௪)

1 சிங்கும் - அழியும்.
2 பிரஸ்துதம் - சொல்லப்பட்ட.
3 சங்கம்.
4 ஒரு பத்த நூற்காதை.

195 முன்னைத்தன் முழுக்கேடு முழுக்கேட்டின் வழித்தோன்றும்
பின்னைத்தன் பிறிதறிவும் பெயர்த்துரைத்தல் பெரும்பேதா
யென்னெக்கு மெனிமென்று நிற்புகுந்தா னிடையிராத்
தன்னைத்தந் தெனைக்கொண்டு தான்சென்றா னெனலன்றே.

இது, நிகழ்ச்சியாகிய க்ஷணபங்கத்துக்குக் குற்றங்கூறுகின்றது.

புத்தன் க்ஷணபங்கஞ் சொல்லுகின்றவிடத்து, [1]ஸ்வக்ஷணபங்கம் கேட்டார்க்குச் சொல்லுவான, பூர்வக்ஷணவர்த்தி யாகிய யான் கையறக் கெட்டேன்; அபரக்ஷணவர்த்தியாகிய யானவனின் அத்யந்தம் அந்நியனென்றான். இவ்வாறு முன்புண்டாகிய தன் முழுக்கேட்டினையும், பின்புண்டாகிய தனது அந்யத்வமுஞ் சொல்கின்ற சுகதன் யாரேபோலுமோவெனில், ஒரு தேவதத்தன் கள்வனை யறியாதான், கள்வராவார் பகலி லில்லந்தோறும் புகுந்து பார்த்துப் போகி இரவு வந்து பொருள் களவு காண்பரெனபது கேட்டு, பிக்ஷை புகுந்தில்லந்தோறும் பார்த்துப் போகாநின்ற தபோதனனைக் கண்டு கள்வனென்றஞ்சிக் கிடந்தான், நித்திராவசத்தாற்றன் வஸ்திரங் கழலத் தடவிப்பார்த்து, வஸ்திரங்காணமையிற் கள்வனென்று கூப்பிட்டான்; கூப்பிட எல்லோருமோடிவந்து கள்வனெங்குற்றானென்னத் தன்னைவிட்டுவைத் தென்னைக்கொண்டு போனானென்று சொன்னானவனேபோலு மென்றவாறு. (சசு)

196 கள்ளனுந் தானேயாய்க் கையாப்புண் டவனேபோ
லுள்ளந்தா னின்றவற்றை யுணர்ந்தவற்றே டறக்கெட்டிங்
கெள்ளனைத்து மில்லென்றா லிறப்பறித லெவனொருந்
தெள்ளியாய் தெளிந்திருந்து சிந்தித்துக் காணாயோ.

இதுவுமது.

"என்...யோ" என்பது - பூர்வக்ஷண சித்த மொழிவறக்கெட்டு இல்லையாயின், அபரக்ஷணசித்தம் அத்யந்தம் பின்னமாயிற் பூர்வக்ஷணசித்தவிருத்தி யறியுமாறென்? விசாரியா யென்றது. (சஎ)

197 கோன்பட்டான் குந்தத்தாற் குத்துண்டா னேனுதி
தான்பட்டான் தனவிரன் தப்பியோ டவனருகே
யான்பட்டே னென்பவன்போல் யாத்திருந்தே சொல்லுதியாற்
றான்பட்டான் பட்டார்க்குத் தன்பாட்டை யுரைக்குமோ.

இதுவுமது.

புத்தன் ஸ்வக்ஷண பங்கங் கேட்டார்க்கு யான் பூர்வ க்ஷணத்தே நசித்தேனென்றதற்குத் திருஷ்டாந்தஞ் சொன்னவாறு.

---

1 சுவக்ஷண பங்கம் -

யுத்தத்துப் படப்புக்குத் தப்பி மீண்டு கலங்கி வந்தானொரு[1] ஹடனை யுத்தத்துப்பட்டார் யாரென்று கேட்க அவனிவ்வாறு சொன்னவன்போலு மென்றவாறு. (சஅ)

198 பிறைபிறப்பும் பிள்ளைகடம் பிறப்பினைப் பெடுத்துரைப்பின்
மறைபொருள்கள் வெளிப்பட்டா மன்னுந்தாங் கருதுபவாற்
குறையென்னை வான்வயிற்றுற் குண்டலமா கேசியித்
தறையகத்துப் பிறப்புரைத்தாற் றத்துவமாக் கொள்வாமோ.

இது[2] அஸத்துத்பத்திக்குக் காட்டிய திருஷ்டாந்தந் தூஷிக்கும்.

உத்தரக்ஷணத்தே தோன்றுவது ஸத்தோ அஸத்தோ? ஸத்தெனிற் க்ஷணபங்கமில்லையாம்; அஸத்தெனில் முயற்கோடு முதலாயின தோன்ற வேண்டுமென்றார்க்குத்[3] தோன்றுவதுளதாயிற் சூல் கன்னிக்குளதா மென்பதனால், பிறைப் பிறப்பும், பிள்ளைகள் பிறப்புங் கூறுகின்றார். அவை மறை பொருள் வெளிப்பட்டன; [4] கிருஷ்ணவிமானத்தால் மறைக்கப்பட்ட சந்திரனும், கர்மவசத்தால்[5] பாலபர்யாயஸ்வபாவத்தாற் றோன்றிய சேயும் பண்டே வெளிப்பட்டன. அஸத்துத் தோன்றில் வானிற்றோன்றவேண்டும், வயிற்றிற் றோன்றவென்றுமில்லை யென்றவாறு. (சக)

199 பின்னசந் தானமும் பிறிதில்சந் தானமு
மின்னவென் றிரண்டுரைத தெத்துணையோ பொழுதோதிச்
சொன்னதன் பொருளெல்லாஞ் சுவடின்றி யறக்கெடுத்தற்
கன்னதே யெனிலாத லாழி [6]காட் டாகாதோ.

இது, பூர்வக்ஷண சித்தவிருத்தி யறிதலருமை கூறுகின்றது.

பூர்வக்ஷண சித்தங் கையறக் கெட்டதாயிற் பூர்வக்ஷண விருத்தி யறியுமா றென்னை? அறியில் அந்நிய சித்தமு மறிகவெனை, [7] பின்னஸந்தானத்து பூர்வக்ஷண சித்த விருத்தி யறியலாகாது; ஏக சந்தான மாதலிற் பூர்வக்ஷண சித்த விருத்தி உத்தரக்ஷண சித்த மறியுமென்று குண்டலகேசி சொல்ல, பூர்வக்ஷண சித்தத்திற்கும், உத்தரக்ஷண சித்தத்திற்கு மொற்றுமை யுண்டோ வறிந்த வாறென்னென்று கேட்க, பூர்வ சித்தங் கையறக் கெட்டபின் உத்தரசித்தம் பிறத்தலில் ஒற்றுமை யில்லையென, ஒற்றுமையில்லாமைக்கு நீ சொன்ன இரண்டு

1 (ஹ) படன் - போர் வீரன.
2 அஸத்துத்பத்தி - இல்லாதது உண்டாதல்.
3 தோன்றுவது - சத்து.
4 கிருஷ்ண விமானம் - கரிய விமானம்.
5 பாலபாயாய ஸ்வபாவம் - பாலியத்தன்மை.
6 காட்டு - தேடுதல்.
7 பின்ன ஸந்தானம் - வேறான சந்தானம்.

சந்தானமு மொக்குமாயின், இச்சுலாவுரை சொல்லியது [1]ஆதனுழி காட்டோ டொக்கு மென்றவாறு.

அஃதாவது :—ஒருவ னொருமோதிரங்கெடுத் தொருவனைத் தேடப்போக விட வவன் வந்து சொல்லுவான்: பொய்கைக்கரைதேடி யாற்றங்கரை தேடி மரங் களடி யெல்லாந்தேடி யொரு சருகிலே கிடந்ததனை யெடுத்துப் பார்த்தேனக்குக் கண்டிலேனென்றான் ; அவன், கண்டு கொடுவந்தேனென்று சொல்லுவான் போலச் சில சொல்லிப் பின்பு கண்டிலேனென்றானவன் போலுமென்றவாறு.

200 எண்ணிலாப் பலகந்த மிடைபறு தென்றுரைப்பிற்
கண்ணுற தொன்றுதலாற் கலப்பிலவா மாகவே
திண்ணிதா மிடையறவு தீண்டுமேற் றிரணொன்று
பண்ணாதன் முடிந்ததற்கே டரியதே போலுமால்.

நீ துவமது.

தேசகாலங்களா லிடையிடாததனை ஏகஸந்தானமெனறே னென்றற்காக, எண்ணின்றிப் பூர்வோத்தர க்ஷணங்களிற் றோன்றுகின்ற பஞ்ச ஸ்கந்த பிண் டங்கள் பலவுமிடையறுமென்று சொல்லுதியாயிற் பூர்வோத்தர சித்தங்கடோன் றுகின்றது, அந்யோந்யம் ஸ்பரிசித்துப் பிறக்குமோ? ஸ்பரிசியாதே பிறக்குமோ? ஸ்பரிசியாதே பிறக்கில், ஸம்பந்த மினமையாலிடையறவு திண்ணிதாம் ; ஸ்பரி சித்துப் பிறக்கில் பூர்வசித்தம், உத்தர சித்தந் தோனறுந் துணையு நின்று அத னொடு ஸபரிசித்து, அதுவுந் தனனுத்தரசித்தம் வருந்துணையு நின்று ஸ்பரி சித்து, இவ்வண்ணமே யெல்லாச்சித்தங்களும் அந்யோந்யம் [2]ஸ்பரிசிக்க அத்வித ஞானரூபமாகிய ஆத்மஸித்தியுமாய் சித்தங்களுக்கு அத்யந்தம் நாசம் சம் பவித்தலு மரி தென்றவாறு. (௫க)

201 வாசனையி னுமெனினும் வழியதனின் முதலதொன்
றாசனைத்து மில்லையே லறிந்துரைப்பு மரிதரோ
பேசிலைநீ யுளதெனினும் பெருந்தாமத் துண்ணூல்போல்
[3]லோசனையி னெடியதோ ருயிருரைத்தா யாகாயோ.

இதுவுமது.

வாசனையால் பூர்வசித்த க்ஷண விருத்தி யறியலாமெனினும் உத்தரசித்தத் துப் பூர்வசித்தத்துள்ள தொன்று வந்ததோ இல்லையோ ? இல்லையெனில், அபர சித்தத்தாற் பூர்வசித்த க்ஷணவிருத்தி யறிந்து சொல்லுதலரிது. இனி, பூர்வ சித்தத்துள்ள தொரு வாசனை உத்தர சித்தத்து வந்துளதாயில் [4]முக்தா தாமந்

1 ஆதனுழி காட்டு - மூடனை மோதிரந் தேடி வந்துரைத்தல்.

2 ஸ்பரிஸிக்க அத்வித ஞானரூபமாகிய ஆத்ம சித்தியுமாய் சித்தங்களுக்கு.

3 லோசனை - பார்க்கப்படுவது.

4 முக்தாதாமம் - முத்துமாலை.

தொடுத்த நூல்போலத் தூச்சமன்றி யிருப்பதொரு ஆத்ம திரவ்யத்தை வாசனை யென்னும் பெயரினாற் சொன்னா யாகாயோ, தாக்கேடு சொன்னா யானையோ? வென்றவாறு. (௫௨)

202 [1]பாதிரிப்பூப் புத்தோடு பாழ்ப்பினுந்தான் பல்வட்டம்
காதுரித்தாங் கேடின்மை யென்பதுநின் றத்துவமோ
போதுரைத்த வோடுநீர் போலுடம்பு பொன்றினும்
மூதுரைத்த வாசம்போன் முடிவுயிர்க்கே யாகாதோ.

இது, மேலதற் கெடுத்துக்காட்டு.

(இ - ள்.) பாதிரிப்பூவும், புத்தோடு முதலாயின நசிக்கவும் நாற்றங் கெடாது பூவினின்று மோட்டினும், ஓட்டினின்று நீரினும் வந்தவாறு போல பூர்வசித்தத் துள்ளதொரு வாசனை கெடாது உத்தரசித்தத்து வருமென்பது நினக்குத் தத்துவமோ? தத்துவமாயினோருடம்பு நசிக்க வோருடம்பில் வருவதொரு ஜீவனுக்கு முடிவாகாதோ வென்றவாறு. (௫௩)

203 சித்திதான் சென்றதே யென்றியே லத்தன்றிப்
பொத்திநீ புரைக்கின்ற பொருளோடா றாகாவோ
வத்திதா னதுவன்றி யைந்துமே யாயினும்
பித்தியாய் முழுக்கேடு பேசினா யாகாயோ.

(இ - ள்.) ஸந்தானம் வாசனையென்ப தவிர்ந்து, சத்தி யென்பதொனறு பூர்வசித்தத்தில் நின்றும் உத்தரசித்தத் தேறச் சென்றதெனின், சத்தியாவது பஞ்ச ஸ்கந்தபிண்டத்து னொன்றோ வேறோ? வேறெனில் ஐந்துகந்த மன்றி ஆறாவது மொரு பொருளுண்டாக வேண்டும். அஃதன்றி சத்தியாவது, பஞ்சஸ்கந்த பிண்டந்தானே; வேறில்லையெனில், பூர்வ பிண்டத்து நின்றதொரு சத்திகெடாதே உத்தரபிண்டத்தேற வந்ததாயின், நீபித்தேறிச் சர்வசூன்யஞ் சொனனாயாகுதி; வார்த்தை விநாசரூபமா மென்றவாறு. (௫௪)

204 அலைபலவே யுரைத்தாளென் றருகிருந்தோர் கருதுதலுந்
தலைவனால் பொருணிகழ்ச்சி தங்கண்மேற் குற்றங்க
ணிலைபெற வுரைத்தின்மை நிறுத்துவன்யா னென்றுதன்
தலைவனீ பொருள்களை தானொட்ட [2]லுறவினால்.

(இ - ள்.) குண்டல கேசி சொல்லிய ஆப்த, ஆகம, பதார்த்த நிகழ்ச்சிகளை நீலகேசியார் [3]நிரவத்ய பிரகாரத்தால் தூஷிப்ப [4]ஸமீபஸ்தராகிய சபா ஜனங

1 நாலடியார் கல்வி 9-ஆம் பாட்டில் இது கூறப்படுகிறது.

2 உறவினால் - பிரியத்தால்-

3 நிரவத்ய பிரகாரம் - குற்றமற்ற விதம்.

4 ஸமீபஸ்தர்.

களெல்லாங் குண்டலகேசி [1]ப்ரத்யுத்தரத்தாஞ் சொல்லாதவாறு பல குற்றங்களுஞ் சொன்னானென்று நீலகேசியாரை நன்கு மதிப்ப, குண்டலகேசியும் நீலகேசியார் சொன்ன குற்றங்களை பின்மை செய்து நிறுத்தவேண்டி, சுகதனது தான மகிமையினை நாட்டலுற் றென்றவாறு. (௫௩)

205 கண்கொடுத்தான் றடிகொடுத்தான்
கயப்புலிக்குத் தற்கொடுத்தான்
பெண்கொடுத்தா னுடம்பினையும்
பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான்
மண்கொடுத்தான் மகக்கொடுத்தான்
மன்னுந்தற் சேர்ந்தார்க்கு
விண்கொடுத்தா னவன்கொடுத்த
விரித்துரைப்பன் கேளென்றாள்.

(இ - ள்.) கண் முதலாகச் சொல்லப்பட்டனவெல்லாம் பரோபகாரமாகக் கொடுத்தான்; மற்றுமவனே கொடுத்தனவெல்லாம் விரித்துச் சொல்லுவன் கேளென்று சொன்னாளென்றவாறு.

"மிக்கதனங் களைமாரி மூன்றும் பெய்யும்
வெங்களிற்றை மிகுசிந்தா மணியை மேனி
யொககவரிந் தொருகூற்றை யிரண்டு கண்ணை
யொளிதிகழுந் திருமுடியை யுடம்பி லூனை
யெக்கிவிழுங் குருதிதனை யாசு தன்னை
யின்னுயிர்போற் றேவியையீன் றெடுத்த செல்வ
மக்களைவந் திரந்தவர்க்கு மகிழ்ந்தே யீயும்
வானவர்தா முறைந்தபதி [2]மாணா வூரே."

என்பதனால் அவன் கொடை யறிக. (௫௪)

வேறு

206 ஏதி லாரிடர் தீர்க்கு மெமவிறை
சாத கம்மிவை யென்று தலைத்தலை
யோதி னானின் றொருபக லெல்லையுங்
கோதை வார்குழற் குண்டல கேசியே.

(இ - ள்.) பரதுக்க துக்கியாகிப் பிறருடைய வியசனங்கள் தீர்க்கும் சுகதன் நாலெண்ணிறப்பு நூறாயிரங் கற்பகாலம் பிறக்குழந்த ஜாதகங்களிவை யென்று

---

1 பிரதியுத்தரம்.

2 மாணாவூர் - ஒரு புத்த ஸ்தலம்

கெடும் பொழுதெல்லா மவன் பிறந்த பிறப்புக்களைக் குண்டலகேசி சொன்னா ளென்றவாறு.

" வானடும் பரியாயு மரிண மாடம்
வனக்கேழற் களிறா மெண்காற் பண்மான்
றானாயு மனையெருமை யொருத்த லாடுந்
தடக்கையினங் களிறாயுஞ்[1] சடங்க மாட
மீனாயு முயலாயு மன்னமாயு
மயிலாயும் பிறவாயும் வெல்லுஞ் சிங்க
மானாடக் கொலைகளவ கட்பொய் காமம்
வரைந்தவர்தா முறைந்தபதி மானா னாரே "

என்பதனாலவன் பிறப்பறிக. (௫௭)

207 நூலு நாரு மிசைத்தன வொத்தலா
னீலகேசி நெடுங்க ணாள்சொல்லு
மாலும் பேயு முடையவர் செய்கையே
போலு நீசொன்ன புத்தர் சரிதையே.

(இ - ள்.) நூலு நாரும் புனைந்தாற்போல அயுக்தமாதலிற் பித்தும் பேயு முடையார் வசனம் போலும் சுகதனது தான வசனமென்றவாறு. அயுக்தி மேலே சொல்லுவர். (௫௮)

208 போழுங் கண்ணுந் தலையுந் தடிகளுந்
தாழ மின்றி யிவைதம்மி னேவென
வாழு மாந்த ருழைவரு வாரில்லை
கூழன் றன்னுழை யேகொளச் சொல்பவோ.

(இ - ள்.) சரீரத்திற் பாதி முதலாகச் சொல்லப்பட்ட விவை யொருத் தருழை யொருத்தரிரப்பனவல்ல வாதலி னிவன்பாற்சென றிவை யிரப்பாரில்லை யென்றவாறு.

தாழமின்றி - தாழாது. கூழன் - தெளிவில்லாதவன். (௫௯)

209 பிளத்த லுள்ளிட்ட வாய்ச்செல் வதிந்திர
னளத்தற் கேலவன் றானறி யும்பிற
னுளத்தை யோரல னேலவன் றேவனுக்
கிளத்த[2] றானோர் கிழமையும் போலுமே.

---

1 சடங்கம் - ஊர்க்குருவி.

2 ஓர் கிழமை - ஒருதலை யுரிமை; பக்ஷபாதம்.

(இ - ள்.) மேலைக்காதையு ளிரக்கும் உஸ்துவல்லவிவன் கொடுத்தனவென. இக்காதையா லிந்திர னிவனைப் பரீக்ஷித்தற்கு இவ்வாறு சென்று வேண்டு மெனில், அவன் இந்திரனுயின் பிறர் சித்தவிருத்தியறிபம்; அறியானுயிலவன் இந்திரனென்பது பக்ஷபாத மெனறவாறு. (௯0)

210 யாவ னுயினு மன்னவ னின்மையிற்
றேவ னென்று தெளியுந் தெளிந்தபின்
சாவ னென்பதோர் சங்கையு மின்றியே
யிவ னென்பதோ ரிச்சையுந் தோன்றுமே.

(இ - ள்.) பிளக்கப்பட்டுப் பாதிச் சரீரமாய் வருவாரும், தலையின்றியுடலேயா யவனிருந்த விடந்தேடி வருவாரும் உலகத்தின்மையின், அது தேவர்களது மாய மென்பது யாவனுயினுமறியும்; அறிந்தால் அருள் தோன்றாதன்றே; இடாப்படுவாரைக் கண்டாலன்றே யருடோன்றுவது? இவ்வாறாக சுகதன் ஆத்ம ஹத்யைப் பண்ணிப் பேதைமையாற் றலைகொடுத்தா னன்ளா லன்றெனபது. (௯௧)

211 உறுதி யல்ல துணர்வுடை யான்றனக்
கிறுதி யேயென்று மிந்திர னெண்ணலன்
[1]மறுதி யின்மையின் மாணிழை நீயெங்குப்
பெறுதி முன்னொடு பின்னியை யாதவே.

(இ - ள்.) இந்திரன் புத்தனை ஞானவானுகப் புத்திபண்ணி யிருப்பானுகி லிவனுக்கு நன்மை செய்வதல்லது, கொலை செய்யான்; பிளத்தல், தலையரிதல் செய்வதாலிவன் மரித்து ஜீவியானுதலால். குண்டலகேசி! நீ யிந்த பூர்வாபர விரோதியாதியாயின வெங்கே பெற்றுச் சொல்லுதி யென்றவாறு. என்னை? பூர்வாபர விரோதமெனில், ஒருகாலிந்திரனிவன்மே லன்பினுற் சந்திரமண்டலத்து முயல்பொறித்தானென்றும் பிறிதொருகாலிவனைக் கொடைபரீக்ஷித்தன் மேலிட்டுக் கொன்றுனென்றுங் கூறுதல். கொலை செய்ததுமன்பினு லென்னி லழகிதன்று; அன்புடையார் கொலை செய்யாராகலின். (௯௨)

212 ஆத [2]னுற்குறந் தாங்கெழு வான்றும்ம
வேத மில்சுட ரேற்றொரு தாமென்றுன்
சாத கம்மிவற் றுனருள் சாதிப்பா
ளேதி னுர்க்கு முணர் [3]வொருப் பாயதே.

இது, பௌத்தரது சித்தவிருத்தி கூறும். (௯௩)

---

1 மறுதி - மாறுதல்.

2 ஆன்கு × ஆற்கு = பசுவில்; உருப மயக்கம்; உறத்தல்—கறத்தல்.

3 ஒருப்பு—ஒற்றுமை.

213 எருது பாலின்மை யெண்ணலன் றம்மலே
கருது மாதனுங் கண்முத லாயின
தருத லல்லது தங்குறை யிதெனுர்
மருதின் வாழ்பகை யானவிம் மாந்தரே.

இது, மேலைக் காதைக்குப் பொருளுரைக்கும்.

"கண்...தெனுர்"—கண் முதலாயின கொடுத்தானென்று அருள்சாதிப்பதல்லது, கண் முதலாயின வேண்டிக் குறையிரப்பாரில்லை பிறர்க்குப் பயன்படாமையினென்பது புத்தி பண்ணுர் மருது வெட்டும் சாக்கியர் என்றவாறு. (கச)

214 பாக மேபிளந் தாற்பர காயமோன்
ருகு மேயென வீவதஃ [1]தாதன்மை
காக மேயுண்ணுங் கண்ணுமற் றன்னதே
யேக மெய்யும்வின் டாவியை யார்களே.

இது. பத்தனது பேதமை கூறுகின்றது.

ஒரு சரீரத்துப் பிளப்புப் பிறிதொரு சரீரத்து ஒன்றுமெனப் பிளந்து கொடுப்பது பேதமையாம்; கண் கொடுத்தது மப்படியே; ஒரு சரீரந் தன்னிலு மொட்டற வரிந்தாலொனருது; காகமுண்டு போமென்றவாறு. (சுரு)

215 உள்ளந் தானிரு பாகினு முண்மையாற்
கொள்கின் றுனிவ னேகொல்லு வான்றனை
யெள்ளி நேரு மறிவில்லை யேற்பிணங்
கொள்ளென் றீர்ந்து கொடுப்பினுங் கூடுமோ.

இது. புத்தனது கொடைக் குற்றங் கூறும்.

இவன் சரீரத்துப் பாதி கொடுக்கின், கொடுக்கின்ற பாதியிலு மற்றைப் பாதியிலும் ஞான முண்டாதலிலிவன், உந்த பிளவைத் தன் பிளவோ டொட்டிக் கொண்டாளும். இனி, கொடுக்கின்ற பாதியிலும் ஞான மில்லையெனில் பாதி பிணமாமன்றே யது பொருந்துமோ? பொருந்தில் ஒரு சவத்தைப் பிளந்து கொடுக்க வமையாதோ? தான் துக்கப்பட்டுச் சாவவேண்டுமோ? என்றவாறு. ()

216 கூறு கூறுசெய் தாலுடம் புள்ளுயிர்
வேறு வேறு செலல்வெளி றுக்கொளாய்
பாறு வாயுரைக் கும்பா மாத்தங்க
டேறு வாருள ரோதெருண் டார்களே.

இது, கொடுக்கின்ற பாதியி லுணர்வுண்டென்றற்கட் குற்றங் கூறும். (கஎ)

---

1 ஆதன்மை—அறிவின்மை.

217 புத்த ஞர்வண்ணங் கண்ட புனையிழை
சித்த னேயென்னைச் சேர்மின மென்றவி
னத்த கன்னருள் செய்கல னைய்விடின்
மத்த கம்பிளந் தானென்றன் மாயமே.

இது. புத்தனது கொடைக்கின்மை சொல்லும்.

புத்தனுர் தம்மழகுகண் டாதரித்துக் காமபீடையால் வருந்தி யென்னை ரக்ஷிக்கவேணு மென்றாளை யருள்செய்யாராயிற் றமது தலையரிந்து முடல்பிளந்துங் கொடுத்தாரென்பது பொய் யென்றவாறு. என்னை? ரக்ஷித்தற் கெளிதுமாகி, ரக்ஷிக்கப்பட்டார்க்குந் தமக்கும் பிரயோஜனப்படுவதுமாகி 1ஸந்தாபம் போக்குதலாற் கிருபாவிஷயமுமாகியவிது செய்யாராகில், இவை யித்துணையுமில்லாதது செய்யக் கூடாமையினென்பது. கிருபாவிஷய மெனினுங் காமதோஷ பீதியாற் செய்யாரெனில், கிருபாவிஷயமுமன்றி ஹிம்ஸா தோஷமும் பண்ணுவதாகிய சிரச்சேதாதி செய்தவாறென் னென்பது.

கிருபாவிஷய மல்லாமையாவது - தலை முதலாயின போயு முயிரோடிருந்து வியசனப்படுவாரில்லை யன்றே? மாயத்தாலன்றே யவ்வாறு வந்து வேண்டியது அதற்குக் கிருபை பண்ண வேண்டுமோ? என்பது.

இனி, ஹிம்ஸா தோஷமாவது—ஆத்ம ஹத்யைப் பண்ணுவது. ஆத்மஹத்யை பாப மெனபதற்கு ஸல்லேகனை தூஷித்தது ஞாபகம். (சுஅ

218 ஆவ தின்மை யறிந்து மவத்தமே
சாவ தேயுங்கள் சத்துவர் சால்பெனிற்
காவல் பூண்ட கணவனே டமத்தின்
வேம வட்டும் விழுக்குண மாங்கொலோ.

இது, புத்தனது பேதமை கூறுகின்றது.

தமக்கும் பிறர்க்கும் ஆவதொரு பயனின்மை யறிந்தும் வியர்த்தமே சாகைநுங்கள் போதி சத்துவர்க்குப் பெருமை யெனில், பர்த்தாவினது சவத்தோடு தீப்பாய்ந்து சாமவளுக்குங் குணமாமன்றோ வென்றவாறு.

என்னை? தனக்கும் பிறர்க்கும் பிரயோஜன மில்லாமையெனில், தலையரிதன் முதலாயின கிருபாவிஷயமல்லாமையில் செய்வானுக்கு தர்மமில்லை 2 "க்ருபாமூலோஹிதர்ம:" என்பதாகலின். செய்வானுக்கு மரணமாக்குதலில் அர்த்த காமங்களுமில்லை யாதலிற் றனக்குப் பயனில்லை. இனிப் பிறர்க்குத் தலை முதலாயினவற்ருலொரு பிரயோஜனமு மில்லை யாதலினிருதிறத்தார்க்கும் பயனில்லை யென்பது. என்னை பிரயோஜன மில்லாதவறெனில், இவனரிந்து கொடுத்ததலை, அவன் கழுத்திலொட்டா தாகையாலும்

1 ஸந்தாபம் - துக்கம்.

2 க்ருபா மூலோபவேத்தர்ம: - கிருபைக்கு மூலம் தர்மம்.

தலை யொழியவு மவனிடை வந்து தலைவேண்டுதலின் ஒழிந்த காரியங்களுந் தலை யொழிய முடிபு மாதலானு மென்பது. அன்றியுமிவன் தனக்கும் பிறர்க்கும் பய னின்றித் தலை யரிந்து செத்தது யாதே போலுமோ வெனில், ஒருவனொரு 1 பிக்ஷுணிகைக்கு 2ஸ்நிக்தனாகி அவள் நோய் கொண்டு தீர்ந்து குளித்த வகையால், அவள் வாசலிற் றன்றலையரிந்து தூக்கினு னதுவேபோலு மென்றவாறு. என்னை ?

" தனக்கும் பிறர்க்கும் பயனின்றிப் புத்த
னெனைத்துத் துயரு முழத்தல்—கனப்பிணிய
னீங்கித்தன் கூத்தி குளித்தா ளெனவாதன
றாக்கத் தலையரிந் தற்று. "

" மிக்க தனங்களை மாரி......மாறாதே " என்பது முதலாயினவற்றாலி வன் கொடை யறிந்து கொள்க. (கக)

219 சாந்தி யாகத தரும முரைப்புழிக்
காந்தி பாலியைக் கண்டு கலகன்று
னேந்தி வெம்படை பாலெறிந் தாற்கிடம்
போழ்ந்து கொண்டதும் பொய்யினுட் பொய்யன்றே.

(இ - ள்.) கலஹ னென்னும் ராஜா, தனது அந்தப்புரத்தோடு வநவிஹா ரணம் பண்ணுகின்றான் ஒரு தேவியது மடியிற் சார்ந்து நித்திரை பண்ணு கிற்ப, ஒழிந்த தேவியரெல்லாரும் போய் க்ஷாந்தி பாலி யென்னும் 3 பிக்ஷுவின பால் தர்மங்கேட் புழி, நித்திரை நீங்கிய அரசன், 'தேவிமாரெங்கே?' என்று கேட்ப, மடிகொடுத்திருந்த தேவி சொல்லுவாள்: ' அவர்களெல்லோரும் ஒரு சாக்யனோடே போனார்'ளெனக் கோபித்துச் சென்று க்ஷாந்திபாலியை வேலாலெறிய, அவனை 4 அவீசி யென்னும் நரகம் அவ்வழி வந்து அக்கினிஜ் வாலையாகிக் கொண்டு புக்கதென்று சொல்லுங் கதைபு மிக்க பொய் யென்ற வாறு. என்னை? அவீசியென்னும் நரக மிவ்வழி வாராது இடமாகையால், கங கைக்கரை காவிரிக்கரையில் வாராதவாறு போலவென்பது ; 5துஷித விமான மிவ் வழி வாராதவாறுபோல வெனவும் அமையும். அன்றியுமிந்த க்ஷாந்திபாலி யென் பான் போதிசத்துவ னன்றே? அவன் முன் நரகம் வருதல் கூடுமோ? வரில்,

" முந்தியொரு பூமலர் முடித்துளதா யக்கால்
வெந்நரக த்திடரை வீட்டுமென வந்த
நந்தவடி யிட்டவடி நாதனடி தன்மேற்
சிந்தைசெய்மி னேதிலடி சிந்தியன்மி னென்றான் "

என்பதனல், புத்தன் காலிட்ட வடியின் கீழ் நரக ஜ்வாலை யவியுமென்பதன்றே? அதனோடு மலையுமென்பது. (௭௦)

---

1 பிக்ஷுணிகை - பௌத்த சந்நியாசினி. 2 ஸ்நிக்தன - சிநேகன்.

3 பிக்ஷு - பௌத்த சந்நியாசி. 4 அவீசி - ஒரு நரகம்.

5 துஷித விமானம் - ஒருவித தேவலோக விமானம்.

220 யானை புள்ளர செங்குள தங்கெலாம்
வான நின்று வழிபடல் காண்டுமான்
மீனு மல்லவும் வேதனை யெய்துழி
தான தாதற் றாதாகதர் தன்மையோ.

உத்தம லக்ஷணத்த தாகிய கஜேந்திர னின்றவுழித் திங்கள் மும்மாரி பெய்யு மென்னும் உலகவாத முண்டன்றே? மீனைப் பிறந்தவழிப் பொய்கைநீர் வற்றி யொழிந்த மீன்களுந் தானுந் அன்புற மழை பெய்ததுவும் [1]தாதாகத சக்தியா லென்ன வேண்டுவதில்லைப் பிறவாற்றாலுமா மென்றவாறு. (எக)

221 குரங்கு மாயவை கொல்லிய செல்வுழி
யிரங்கி யேயுயக் கொண்டது மென்றியாற்
குரங்கு நேர்குதி யாக்குரங் கெங்குள
மரங்கள் பாய்ந்திடு மாண்பின வல்லவோ.

என்பது, புத்தன் குரங்காய்ப் பிறந்த காலத்துப் பசியால் வருந்துவது கண்டு இந்திரன் ஒரு யாற்றங்கரை யொரு தேமா நிர்மித்துக் கொடுப்ப, மாம்பழமுண்டு செல்கின்ற காலத்து, நீருள் விழுந்ததொரு மாம்பழ மெடுத்தானொருவன் அரசனுக்குக் கொடுப்ப, அதுகண்டரசனு மிம்மாவினை யாராய்ந்து, குரங்குகள் வர்த்திக்கு மா வென்றறிந்து குரங்குகளை யெல்லாம் வதிக்கவென, அஃதறிந்து புத்த வானரம் அரையிலொரு கொடிகட்டிப் பெருகுகின்ற யாற்றுக்கரையிற்பாய, அக் கொடியெட்டாது யாற்றிற் சிறிதொழியச் சென்றுமாள, அத்துணையுநீண்டு அக் கரையோர் புதல்பற்றிக் கிடப்ப வொழிந்த குரங்குகளெல்லா மோரோ வொன்றாகக்கொடியாலு மிவன் முதுகாலு மேறிப்போயின வென்றதற்கண், ஒரு குரங் கோர் பாதி நீளங் குதியாத குரங்குமுளவோ? ஒரு மரத்தினின் றொரு மரத்தினெடு நீளம் பாய்வனவன்றோ வென்றவாறு. (எஉ)

222 சீல நல்லவர் நீள்குவர் சேணினிற்
கோல மில்குரங் காட்டிக்கொல் வார்களைக்
காலுங் கையு மெழற்கெனக் காண்கிலான்
வாலை நீட்டிக் கிடத்தறன் மாட்சியோ.

புத்தவானரம் சக்திமானாதலின் மிக நீளும்; அத்துணைநீள மொழிந்த குரங்கு பாய மாட்டாவெனிற் சக்திமானே யெனிற் குரங்கு கொல்ல வருவானைக் காலுங் கையு மெழாதபடி பண்ணவமையு மென்றவாறு. (எ௩)

223 தாய்க்கொன் றான்றங்கு செங்குரு திப்புனல்
பேய்க்கொன் றீதல் பெருங்கொடை யென்பதை

---

1 தாதாகதசக்தி - புத்தசக்தி (ததாகதருக்குரிய சக்தி).

வாய்க்கின் றுயினி மானுயர் டாகெலா
[1]நாய்க்கென் றுவீது நல்லற மாங்கொலோ.

இது, சுகதனது தானம் தூஷிக்கும்.

மாதாவைக் கொன்ற பாபிஷ்டனாதலால் நல்லோரிவனுழைத் தானங் கொள்ளாமையில், பேய்க்கு அது விரும்பும் தன் சரீர ரக்தங்கொடுத்தா னென்றற்கண் பாத்ரமுந் தேயமுந் தாதாவு நன்றாயினன்றே தானமாவது? மாதாவைக் கொன்றான் தாதாவாகவும், அசுத்தமும், பாபஹேதுவுமாகிய ரக்தந் தேயமாகவும், சர்வ ஜன பீடை பண்ணும் பேய் பாத்ரமாகவு மிவ்வாறு வருவதுந் தானமோ?

" [illegible] |
[illegible] "

என்பது புத்த வாக்யமன்றோ? இவர் தாமே இவ்வாறு செய்தவரென்னின், அது சொன்னாரேனும், யாவரேயினும் யாவர்க்காயினும் யாதொன்றைக் கொடுப்பதே தானமெனில், லோகத்து யாவர்க்கும் தானம் வாய்த்தது; [2]பஹிர்கமிக்குங் காலத்து, நாய்க்குக் கொடுக்கின்றேமென நினைந்துவிட நல்ல தர்மமாமோ வென்றவாறு. (எச)

224 யான்செ யும்பொரு ளென்றங்கொ ரேகாந்தன்
தான்செய் திட்டனன் சாதக கற்பங்கள்
மான்செய் நோக்கி மதிப்பொழி நீயெனக்
கோன்சொ ன்னது குண்டல கேசிக்கே.

உத்தரமின்றித் திகைத்திருந்த குண்டலகேசிக்குச் சபாபதியாகிய ராஜன் சொல்லுவான்: ஏகாந்தவாதி யொருவன் அயுக்தமே யெனினுஞ் சிலர் செய்தற்கரியன செய்தேனென்று சொன்னால் எல்லாரு மதிப்பார்கள் என்று சொன்னான் போலும்; இதனை நீ புத்திபண்ண வேண்டுவதில்லை யென்று சொன்னானென்றவாறு. (எரு)

வேறு

225 மூயலுரை யிதுவென மூடிக் கொண்டிருந்
தயலவர்க் குரைப்பவ ராத ரல்லரோ
புயலிருங் கூந்தலி பொருந்தச் சொல்லினாள்
[3]வியலவ ருரையொடு விரோத மில்லையே.

புயலிருங் கூந்தலி - நீலகேசியார். (எசு)

---

1 "நாய்க்கென்று யீது" என்றும் பாடபேதம்.

2 பகிர்கமிக்கும் - மலங்கழிக்கும்.

3 வியலவருரை - பெருமை யுடையார் சொல்.

226 அரசிறை யிதுசொல வவையி ஞர்களு
முரைசெறி வுடையன வுரைத்த நீர்மையண்
முரைசொடு நெடுங்கொடி முழங்க நாட்டுக
விரைவொடு படுகென வேந்த னேயினன். (எஎ)

வேறு

227 இருப்பதென் னினியன்று யிதுநமக் குரைத்தார்யார்
சுருக்கினைக் கடிதாகச் சொல்லெனக் கெனவோடுந்
திருக்கிளர் மதிலுஞ்சைத் தென்றிசை யகனகரு
ளருக்கசந் திரனென்னு மவாச்சிய னெனச்சொன்னாள்.

அவாச்சியன் - பௌத்தன். (எஅ)

வேறு

228 கட்டுரை பலசொல்லிக் காவல் நெடுங்கடை காவலைமுன்
னட்டிவ ணகரிடை நகைசெய்து புகுந்தவிந் நன்னுதலை
வட்டிகொள் பறைகொட்டி வழுவுரை பலசொல்லி வாரலென்று
பெட்டன பலசெய்து பெருநகர் வாயிலைப் புறப்படுத்தார்.

வட்டிகொள் பறை - உரத்த பறை. பெட்டன பல செய்து - வேண்டினர் வேண்டின வண்ணம் அலக் கழித்து. (எக)

229 புனத்திடை நறுமலர்ப் பூங்கொடி யன்னதோர் பொற்பினளாய்
யெனைப்பல நூல்களு மியல்பினி னறிபவ ளேதமில்லாள்
தனக்கினி யான்செயற் பாலது தானென்னை யெனவுரைத்தா
னினத்தகை யேற்றரி யிடியுறு மேறெனு மிவற்றை யொப்பான்.

230 ஆண்டகை யரசிறை யதுசொல்லக் கேட்டவவ் வறத்தகையா
ளுண்டல னணிபிற புனைவெனு நினைவிலன் றினையனைத்தும்
வேண்டல னிலனொடு விழுநிதி யினையவும் விறற்றகையா
யீண்டினி யறநெறி யுறுகென வேந்திறை யியம்பினனே. (அக)

231 வந்தது மிதுபொருண் மன்னவ யானென நன்னுதலா
ளிந்திர னனையநின் னிறைமையி னறநெறி யிகழலென்றுங்
கந்தர நெறிசெலற் காயிழை யரசனை விடுத்தருக்க
சந்திர னிருந்தவத் திசைமுன்னித் தளிரிய ளெழுந்தாள்.

நீலகேசித் திரட்டில் குண்டலகேசி வாதச்சருக்கம் முற்றும். ()



மூன்றாவது

# அருக்கசந்திர வாதச் சருக்கம்

232 உஞ்சை மாநக ரெய்தின னாயத
னிஞ்சி மாட்சியு மெல்லையில் செம்மனு
மஞ்சு தோய்நெடு மாடமும் வீதியு
மஞ்சி லோதி யவையவை கண்டபின். (க)

233 பருக்கை மால்களி யானைப்பல் வேந்தரு
மிருக்க போதக னென்னும் பெருமையான்
றருக்க நீட்டமுந் தன்னிக ரில்லவ
னருக்க சந்திர னென்னு மவாச்சியன்.

பருக்கை—பருத்த கை. (உ)

234 போதி சத்துவர் புத்த ரெனப்படு
நீதி யிற்பெரி யாரன நீர்மையா
ரோதி நூன்மும்மை யொப்ப வுணர்ந்தவன்
வாதி கட்கோர் வயப்புலி யேறனான். (௩)

235 மாட மோங்கி மழைநுழைந் தின்குயில்
பாடு பூம்பொழிற் பாங்கரோர் பள்ளியுட்
பீட மேறிப் பெருந்தகை யார்க்கெலாம்
வீடு பேறும் வினையு முரைப்புழி.

மழை நுழைந்து—மேக படலங்களை யுருவி. (ச)

236 சென்று தானெய்திச் சிற்பிடத் தாற்புக்குத்
துன்று நீண்மணித் தூணணிக் கெண்ணென
நின்று நீலவைம் பாற்பெய ராளுமங்
கொன்று பல்வகை யோத்துரை கேட்டனள்.

சிற்பிடத்தால்—அவர்களறியாமை. எண்—தாராதேவிப் பாவை. (ரு)

237 கொள்ளு மாறுந்தன் கோரகை யுட்கஞ்சி
மொள்ளு மாறு முதுகு நெளித்துண்டு
னள்ளு மாறு மணமெடுத் திட்டவை
மெள்ள மெள்ள விழுங்கு மவைகளும்.

கொள்ளுமாறு—அர்த்த பரிக்கிரஹம் பண்ணுமாறு. கோரகை—கஞ்சி குடிபாத்திரம். (சு)

238 வழிக்கு மாறுந்தம் மண்டையி னுண்டுமன்
னொழிக்கு மாறுமஃ தூட்டு மவைகளும்
மழிக்கு மாறுந் தலைகளை மையிட்டு
விழிக்கு மாறும் வினைய விதியினால். (எ)

239 இனைய வேசொல்லி யிட்ட தலையராய்
வினைய நூலை வியப்பெய்து வார்க்கெலா
மனைய தேது மறநெறி யென்றனள்
முனைவன் றன்னெறி முன்ன முணர்ந்தவள். (அ)

240 அவ்வு ரையம ரானுய ராசனச்
செவ்வ ரைம்மிசைத் தீத்திரள் போல்பவ
னிவ்வு ரையிவ ணென்னெனச் சொல்லினன்
றெவ்வ ரைத்திறல் வாட்டிய திண்மையான். (கூ)

241 வீரஞ் செய்து விழியல் வினயநூல்
போர தஃதேல் பெரிது மழகிதே
யோரு மஃதோ ருறுவினை யென்பதைத்
தேரச் சொல்லுநின் றிண்பொரு ளென்றனள்.

வினயநூல் போதஃதேல்—வினயாக்குதவில் வினய நூலென்று பெயர் பெற்றது. (கo)

242 வினைய தாகிய பெற்றி விரித்துநீ
தினையி னேருந் தெருட்டெனக் கென்னவே
யனைய வவ்விர தத்தோ டறிசல
மினைய கேளென் றெடுத்தன சொல்லுமே.

அவ்விரதமு மறிசலமு மென்பது : அவ்விரதமாவது—இந்த மார்க்கானுஷ்டானம் பண்ணாத விரதஹானி யென்றல். அறிசலம் - நெஞ்சறி வஞ்சனை.(கக)

243 தன்னை யீந்ததும் தாரங்க ளீந்தது
மன்ன தன்பொருள் கேட்டறங் கொண்டவன்
மன்னு மில்லயன் மாந்தரைக் காணுமேற்
பின்னைச் செய்வன பேசலு மாகுமோ.

(இ - ள்.) புத்தன் செய்தன யாவும் தர்மமேயென்று தன்னெஞ்சிற் கொண்டாராயிற் புத்தனார் தம்மைக் கொடுத்ததும், தாரங் கொடுத்ததுங் கேட்டுப் புத்த

தர்சனங் கொண்டான், தனது ஸ்திரீயைக் காமத்தார்க்குக் கொடாததென்னோ வென்பது.

இஃதறிசலம். இது தர்மமென்னும் புத்தியுண்டாயிற் கொடுக்கவேண்டும், கொடாமையிற் றர்மமென்னுங் கருத்தில்லை; இல்லையென்னுமது தர்மமாகக் கொண்டு குலாவுதலின். தர்ம புத்தியாற் கொடுக்கில் அவ்விரதம்; என்னை? தனனுடைய ஸ்திரீயைப் பிறர் அனுபவிக்க விசைதலிற் பிறனது பரதாராஸேவைக் கும், ஸ்திரீயது பரபுருஷ வஸ்காரத்துக்கு முடன்படுதலின். (௧௨)

244 காம மூரிற் கணிகைய ரோடன்ன
தூய்மை யுண்மையிற் றோற்றங் கரந்தவட்
சேம மாவகைச் செல்கமற் றென்பதும்
வாம நூலின் மறைபொரு ளல்ல வோ.

(இ-ள்) காம மேற்கொள்ளுமாயிற் கணிகா ஜனங்களைப்போலப் பற்றுடைத்தும், வெற்றிலை தின்றும், பலகாற் குளித்து மிவ்வாறு தூய்மையுண்டாதலிற் செம்படம் பள்ளியுள் ளிட்டுவைத்து வேறொரு புடைவை யுடுத்துப் போர்த்துத் தம்மை யறியாதபடி போய்த் தம்மை யறியாக் கணிகையரைத் தீண்டுகவென்பது பௌத்தரது விநயபிடகத்து பிரசித்தம். தங் [1]நிகாயத்துச் சென்று உபாய பிர காரத்தா லாராய்ந்து கொள்க. இவ்வாறு செய்ய வேண்டுமென்றே முறகொண்டு தாம்பூல சேவை முதலாயின விதிக்கலானும், சரீரத்துளவாகிய காமசின்னம் மறைத்தற்குச் சீவரம் போர்த்தலானும் அறிசலமும் அவ்விரதமுமாமென்பது.

சீவரம் போர்த்தது மத்யம தேசத்தாசாரமன்றோ? இந்தத் தேசத்து மூத் தார்முன் னிளையார் போர்வை வாங்குவது போல; என்னை?

"மூத்தார்முன் மத்தியத்தார் போற்போர்வை போர்த்திட்டான்
வாய்த்திரா வகைவேண்டித் துவர்துன்னம் வகுத்திட்டான்"

என்பதாகலினெனின், அதுவுமோ ரறிசல வார்த்தை; தான்றலைவனாதலிற் பிறர்க்காசாரஞ் செய்யுமோ? தனக்கன்றே யொழிந்தா ராசாரஞ் செய்வதென் பது. அன்றெனில், புத்தத்வம் பெற்றிருக்கும் தன் ஞானநிகளைத் தொழல் வேண்டாதோ வென்பது. (௧௩)

245 சிங்க தத்த ரெனப்படுந் தேரனார்
சங்க போதியி லாள்கட் டயாச்செய
விங்கி தென்னென வேழாய் தவசிகட்
கெங்கெங் கா[2]யி லெனவுரைத் தானரோ.

(இ - ள்.) சிங்கதத்த ரென்பாரொரு ஸ்தவிரர், [3]ஸம்வா வாஸத்துப் போதியின்கணின்ற பிக்ஷுணியை தயாச் செய்யப்புகப் போதியாரடிக ளருகே

1 நிகாயம் - வாசஸ்தானம். 2 இல் - அருமையானது.
3 சங்காவாசத்து.

யாமோ விதென்னென்றாட்கு, தவஷிகட்கு யாக்குமா மரிதிற் பெறுதவீ னென்று னென்றவாறு. இது, அறிசலம். இதுவும் பௌத்த நிகாயத்துச் சென்று உபாயத்திலறிக. (கச)

246 யாது மில்லை யுயிரென் றறநெறி
யோதி னைவ் வுயிரிலி தன்னொடு
வேத னைதணிப் பான் [1]வினை வீட்டிற்குஞ்
சாத னைநிற்குஞ் சத்துவ னமென்றீர்.

(இ - ள்.) புன்றலை மாகனை ரென்பாரொரு போதிசத்துவா, ஒருவருமறியாமல் ராத்திரி சமயத்து வெள்ளை போர்த்துப் போய், எங்கும் ஸம்பவியாமல் மீள்வார், அசரணையாய்ப் புறந்திண்ணையிற் கிடந்து நோய்கொண் டிறந்தாளைச் சென்று புணர, அவ்வாறு முன்பே போய்ப் பிண மென்றறிந்தும் பின்னவ் வழிச் சென்ற ஸங்கத்தார், இது சபமன்றேவெனப் பேதாய் சர்வம் அநாத்மகம் என்று பாவிப்பதறியாயோ? இனியேனு மறிதியென்று சிக்ஷித்தாரென்பதொரு கதை. இதுவுமாராய்ந்தறிந்து கொள்க. "உயிரிலி தன்னொடு வேதனை தணிப்பான் வேண்டி யாது மில்லையுயிர்" எனக் கூட்டுக. (கடு)

247 சித்த மோடிக் கலங்கித் திரியாத
நத்தம் பெற்றது நற்றவ மேற்கொண்டான்
[2]பத்தின் மேலும் பழிசெய்யு மேற்பள்ளி
வத்தன் கண்டீர் வழக்கின்கட் கூரியீர்.

நத்தம் - இராத்திரி. பள்ளிவத்தன் - பள்ளியிற் புகப்பெறுான். (கசா)

248 போதி யாருரு வெய்திய புற்கலர்
வேதி யாற்கிடந் தாருள ராயினுன்
ஞாதி யாரென நாட்டிய கூட்டமு
மோதி வைத்ததொன் றுண்மை யுணர்த்துமால்.

(இ - ள்.) புத்த வேஷங் கொண்ட சாக்கியன் காமத்தாற் றன்புறில் ஞாதியரோடு நாட்டியதொரு கூட்டமும் வினயபிடகத்துச் சொல்லப்பட்டதொன்றுண்டென்றவாறு.

ஞாதி - பிக்ஷுணி; அதாவது, புதிதாகத் தவம்பட்டபிக்ஷுணியாளையக்குழுவுள்ளா ரொருஸங்கத்தார் தயாச் செய்யப்புக, பிக்ஷுணியும் பேதைமையாற் கொலைகளவுகட்காம மாகா தென்றன்றே சொல்லுவதென, பிக்ஷுவுஞ் சொல்லுவார்: நீ வினையபிடகத்து மெய்ம்மை யறிந்திலை போலும்! வினயமாவது கேட்பாயாக: வினயந்தான் [3]உலகவஜ்ஜமும், [4]பண்ணத்திவஜ்ஜமு

1 வினை வீடு - வினை நீங்குகை.
2 இதன் விவரம் 249-ம் செய்யுளிற் கூறப்பட்டுளது.
3 உலகவர்ஜியம். 4 பிரக்ஞப்திவர்ஜியம்.

மென விரண்டு ; அவற்றுள் லோக வஜ்ஜிதமாவது—லோக வியவஹாரத்துக்கு லோகந் தவிர்ந்தது தவிர்தல் ; ஸர்வஜ்ஞ வஜ்ஜிதமாவது—ஸர்வான் தனது திவ்ய ஞானத்தாற் குற்றமுண்டென்று கடிந்தன கடிதல். அவற்றுள் லோக வஜ்ஜியமான வினையமன்றே, கொலைகளவு கட்காமம் பொய்யென்பன ; என்னை ?

"நிலைபெற வெல்லாரு நீத்தன களைந்தனவுந்
தலைவரு மிழுக்கெனத் தவிர்ந்தனவு மவையென்று
னிலைபெற வெல்லாரு நீத்தனயா வென்றுள்
கொலைகளவு கட்காமம் பொய்யெனக் கூறினான்."

என்பதாகலின் காமங் குற்றமுடைத்தோ ? அன்றியும் எட்காய் நீளங் காமமா மென்பது முண்டன்றே ; அன்றியும் மந்திரயானம் மஹாயானங்களுட் கள்ளுண்ட ஸங்கத்தார் வீணிருப்பரோ வென்றிவை முதலாயினவை காட்டித் தேற்றிப் பின்னையும் பொருள்களெல்லாம் க்ஷணந்தோறும் கெடுகின்றன வாதலிற் காம மாடினானுந் தத்க்ஷணத்தே [1]நிரவசேஷமாகக் கெடுமன்றே? கெடுதலிற் கர்மபந்தனுதலும், பலானுபவமும் அவனுக்குண்டோ ? நித்யாநித்யாத்மக மென்னினன்றே ஆதலாம். கொலை முதலாயின பரமார்த்த வகையாய்க் குற்றமில்லாமையி னன்றே லோகவர்ஜ்யமென வியவஹாரத்தாற் கொண்டதென்றிவை முதலாயின சொல்லி யவளைத் தயாச்செய்தா ரென்பதோர் கதை. இதுவு முபாயத்தாலறிக. (கஎ)

249 ஆரம் பிச்சி யலிவிலங் கவ்வுருச்
சீரிற் கொத்தாள் கணிகை [2]தெருண்டாள்பெண்
ணொரு மில்லா ளுயிரிலி யூமையுந்
தார மாக்கொண்டி ரென்றல் சலமதோ.

இச் சொல்லப்பட்ட பத்திடமு மொழியக் காமமாடி நீக்கப்படுவன ; அவ்வாறு நீக்கி இராத்திரியில் சீவரமிட்டு வைத்து, நீலவாடை போர்த்துச் சென்ற ஸம்வத்தார் அது தன்னையே வேஷமாக்கி நீலபட ரென்பதோர் பேதங்கண்டாரதுவு மறிந்து கொள்க.

அவ்வுரு—ஹிக்ஷுணி. சீரிற்கொத்தாள்—மறை பொத்திடாதாள். தெருண்டாள் பெண்—உபாஸக ஸ்திரீ. ஒருமில்லாள்—ஒருத்தருமில்லாள் ; அசரணை. ஆரம்பிச்சி—உவட்டாச்சி. (கஅ)

250 பிறந்த வில்லினுள் வாழ்க்கை பிழைப்பெனு
மறங்கொண் டான்கொண் டவாச்சிய வேடத்தாற்
சிறந்த வல்லன சிங்கின வெங்கணுந்
துறந்த வான்பொருள் சொல்லவும் வல்லையோ.

---

1 நிரவசேஷம் - முற்றும். 2 தெருண்டாள் - தெளிந்தவள்.

(இ - ள்.) நீ ஸம்ஸாரத்து வர்த்திப்பது பிழையென்று சாக்கிய வேஷங் கொண்டதனுற் பொல்லாதன பலவு நின்னைச் சிக்கினவல்லது இல்வாழ்க்கையிற் பார்க்கத் துறந்த தின்னதென்று சொல்லவல்லேயோ வென்றவாறு.

சிங்கின - சிக்கின; பற்றின. பற்றுதலாவது—எட்டுச் சீவரம் வேண்டும்; அன்றியும், கிளிக்கத்தியே, கத்திரிகையே, சுண்ணும்புச் செப்பே, வெற்றிலைப் பெட்டியே, பாக்குப் பையே, பல்லுத்துடைக்கப் பாளை முதலாயினவே, தலை வழிக்கக் கத்தியே, தீட்டுக்கல்லே, குடையே, செருப்பே, மண்டையே, கெண்டியே, இவற்றுறையே, சுழற்றியே, தோலே, தண்ணீர்க் கொப்பே என்றிவை முதலாயின வெல்லாம் நீ தவம் பட்டுத் தேடினவன்றே? இவற்றினுடைய 1 ஆர்ஜநரக்ஷணங்களால் வரும் பாபமும், பழியும், துக்கமும் எல்லையிலவன்றே? இவை யெல்லா நுன்னைச் சிக்கின வென்றவாறு. (கக)

251 உரைப்ப போருளுண்பன மீனொடூன்
றிரைப்ப மெல்லணை செய்வ விழுத்தவங்
கரைப்ப தீவினை கண்டது சூனியம்
புரைப்பின் மார்க்கம் பொருத்த முடைத்தரோ.

(இ - ள்.) அருளுடையோ மென்று சொல்லுப, ஊன்றின்ப; 2 "அருளாட்சி யாங்கில்லை யூன்றின்பவர்க்கு" என்றலின்; பஞ்சணை மெத்தையிற் கிடப்ப, தவஞ் செய்ப; பாவங் கெடுப்ப, சூன்யங் காண்ப வென்றவாறு.

சூனியங் காண்டலாவது - சகல பதார்த்தங்களுமில்லை யென்பதாம். பௌத்தாது மதம் 3 விஜ்ஞாநாத்வைதமுஞ் சொல்லும்; அதுவும் விஜ்ஞாநமொழிய ஒழிந்தன சூன்யமென்று சொல்லும்; அன்றியும், பொருள் 4க்ஷணநச்வர மன்றே யாதலாலொரு சித்தத்தினுளகாலத்து முன் புள்ளன கேடுற்றதானு, மேலுள்ளன பிறவாமலானும் சூன்யமாயின; கண்ட சித்தந்தானும் அசேதனமாகிய சரீரத்துப் பிறவாதன்றே? பிறக்கில் லோகாயதமாமன்றே? இந்த சித்தத்திற்கு ஆதாரமாகிய பரமார்த்தமாகிய 5ஜீவ த்ரவ்ய மின்மையிற் சித்தமென்ப தொன்றில்லையாம்.

இனி, 6பதார்த்த க்ஷணத்வம்ஸி யென்றதனுல் புண்ணியபாப கர்மங்களைச் செய்தலும், செய்தவனே அனுபவித்தலுமின்மையில் இஹலோக பரலோக மில்லையாம். இவ்வாறே நிரூபிக்கச் சர்வ சூன்யமே நிலை நிற்பதாம்.

1 ஆர்ஜநரக்ஷணம் - ஈட்டல், காத்தல்.
2 திருக்குறள் - புலான் மறுத்தல். ௨.
3 விஞ்ஞானுத்வைதம்.
4 க்ஷணநச்வரம் – க்ஷணபங்கம்.
5 ஜீவதிரவ்யம்.
6 பதார்த்தம் க்ஷணத்வம்ஸி - பொருள் க்ஷணபங்கம்.

1 "ஸர்வ மஸ்த்விதி வக்தவ்யா மாதௌ தத்வகவேஷிண:
பஸ்சாத வகதார்தஸ்ய பாவக்ராஹோ நிவர்த்ததே॥"

பதனுலுங் கொள்க. (௨௦)

வேறு

252 எல்லா மசுசியு மென்ப [2]வனவா
லல்லா லழுக்குற் றவனடிக் கேத்தலர்
சொல்லார் சுகமுஞ் சுகத னவனென்று
பல்லார் வருத்தம் பழுதெனப் பண்ணுப.

(இ - ள்.) சர்வம் அசுசி யென்று சொல்லுப. ஆதலால், புஷ்ப முதலாயின வும் அசுசியெனறு சொல்லலுமாம்; ஆயினும், புஷ்பங்கொண்டு பூஜிக்கின்றனர். ஓபாதிமலமிட்டுப் பூஜிக்கின்றிலர். சர்வம் துக்கமென்று பாவியாநின்று புத் தனைச் சுகதனென்று சொல்லுப; பிறாது தபசு வருத்தத்திற்குக் காரணமென் றுந் தங்கள் தபசு சுகமுடைத்தென்றுஞ்சொல்லுபவென்றவாறு. [3]வாந்தி தோற் றினுல் [4]ஆஸ்யசுத்தி பண்ணுமையில் நமக்கு [5]அசுசித்வ முளதன்றோ வெனில், [6]க்ருஹஸ்தரா யுள்ளாரும் வாந்தி தோற்றினுல் யோக்யஜலம்பெறுத பொழுது [7]ஜுகுப்ஸை யைப் பொறுத்து யோக்ய ஜலம்பெற்றால் சுத்தி பண்ணுமாறுபோல யோக்யமான காலத்து கிரகஸ்தாாற் கொடுக்கப்பட்ட யோக்கிய ஜலம் பெற்றால் ஆஸ்ய சுத்திசெய்து பின்பு தமது அநுஷ்டானுதி செய்ப. அவ் வளவும் மௌநங் கொண்டிருப்பது ஆஸ்யசுத்தி செய்யவேணுமென்னு நிர்ப் பந்தமன்றே; ஆதலாலிவர்கட்கு அசுசித்வமில்லை யென்பது. (௨௧)

253 நிலையா வெனச்சொல்லி நேர்ப பொருடேய
மலையோ ரனையநன் மாட மெடுப்ப
விலையே யுயிரென் றிறந்த நினைப
புலைசே யமர்ந்தவர் புத்தியின் வண்ணமே.

(இ - ள்.) சர்வமு மனித்தியமென்று சொல்லி [8]அர்த்தம் நேர்ப, மாடமெடுப்ப; ஆத்மாவில்லையென்ப, யான் முன் முயலாயினேனென்று மீட்டுணர்ப வென்றவாறு. (௨௨)

---

1 ஸர்வ மஸ்த்விதி வக்தவ்யா மாதௌ தத்வகவேஷிண:
பஸ்சாத வகதார்தஸ்ய பாவக்ராஹோ நிவர்த்ததே.

2 வனலா என்றும் பாட பேதம்.

3 சர்த்தி - வாந்தி.

4 ஆஸ்யசுத்தி - வாய் கழுவுதல்.

5 அசுசித்வம்.

6 கிருகஸ்தர்.

7 ஜுகுப்ஸை - அருவருப்பு.

8 அர்த்தம் - பொருள்.

254 மயித்திரம் பாவித்து மற்றவற் றானை
யசிப்பன வேபோ லமர்ந்திருந் துண்ணுஞ்
சயித்தியங் காணித் தலையினை முட்டும்
பயித்தியங் கொண்டவர் பண்புமஃ தொக்கும்.

(இ - ள்.) சர்வ ஜீவன்களோடு மைத்ரீ பாவிப்ப, அவற்றின் மாம்ஸங்களை பக்ஷிப்ப ; புள்ளுவருந் தம்மால் வளர்க்கப்பட்ட தீபகமாகிய புள்ளு மிருகமுந் தின்னுரன்றே, பௌத்தரே மித்திர மாம்ஸம் பக்ஷிப்பரென்பது போந்தது. அசிப்பனபோல—சோறு முதலாயின போல. இனி, புத்த பிரதிமைய தாலய முந் தொழுப ; ஆதலாற் பிததேறினுர் செய்கை போலும் பௌத்தாதுசெய்கை யெனறவாறு.

பக்தி பண்ணப்படுபவனுகிய புத்தனது பிரதிமையிருந்த கோயில் வந்திக் கப்படில், அருள் செய்யப்பட்ட பிராணிகளது சபமழிக்கப்படாதன்றே? அத னைத் தின்றழிப்ப வென்பது. (உ௩)

255 புத்த ருருவுக்கும் போலிக்கும் போலியை
மத்தகத் தேத்தி வணங்கி வழிபடுஞ்
செத்த பொழுதினச் சேந்தடி மென்றிடு
மத்த னுடைய வருள்வகை வண்ணம்.

(இ - ள்) புத்தனது சரீரம் போல்வதாகிய பிரதிமைக்குப் போலியன்றே புத்த சித்ரஞ் சித்ராஹாஸங்கள் ; அவற்றை வணங்குவர் ; அவை சுவ ரினும், படத்தினும் பண்ணினவு மெழுதினவுமாம். அவன் போதிசத்துவனு கிய காலத்து தர்மோபதேசார்த்தமாக வெடுத்த வுடம்புபோலு முடம்புகளை ஹக்ஷிப் பது நன்னருளுடைமை. இப்பொழுது அநாமுதபுத்தர் போதிசத்துவராகி வர்த்திக்கவுங்கூடுமன்றே? அதனுலும் மாம்ஸந் துறக்கல் வேண்டும். புத்தனது எலும்பாகிய யாதா. ஆழ்வாரைப்போலவென்பது. (உ௪)

வேறு

256 பேனருக் கூறை பெருமுடுகு நாறுமேற் றுக்கந் துக்க
மானரு நோக்கி மணற்சுமையுந் தான்பெரிதாற் றுக்கந் துக்கங்
கூனிருக் கண்டாலுங் கொள்ள முடியாதேற் றுக்கந்துக்கந்
தானரு பஃறொழிலுந் தான்றுக்க வாதலாற் சருவ்வந் துக்கம்.

மானரு நோக்கி மணற்சுமையாவது-ஹிக்ஷுணிகளுக்குப் பிழை புகுந்தால், பிராயச்சித்தம் புத்தர்கோயின் முற்றத்திற்கு மணற்சுமக்கை. ஹிக்ஷுக்களுக்கு பிராயச்சித்தம் - நந்தவனத்துக்கு இறைக்கை. இதுவுமறிந்துகொள்க. பஃ றொழில் - துன்னத் தொழில் முதலாயின. (உ௫)

வேறு

257 பொய்போத்திச் சொல்லினவும் போங்கூலி கொண்டனவும்
வையத்தஞ் சுட்டனவும் வாழ்மருது கொன்றனவுங்
கையத்தி னானுக்கே கன்றிக் கலாய்த்தனவு
மையத்தை யின்றி யடுப வாலோ
வழல்நரகத் துள்ளே படுப வாலோ.

பொய் பொத்திச் சொல்லினவும், போங்கூலி கொண்டனவும் பீலிமுருந்தை நுறுக்கி மாயத்தாற்சென்று ஸ்ரீமான்கள் மேற்றூவி புத்தர் யாதுநுமது சரீரத்து வீழ்ந்தன விவையென்று காட்டி நீர் புத்தர் பக்தரென்று சொல்லுதலும், முயன்முதலாயினவாகி ஆசனமேறி அறவுரை சொல்லுதலும், இணையெருதின்றி யோரொரு துடையாளொருவன் பேரீரம்விழுந் துழப்பெறாது வருந்துவது கண்டு, அருளா லொழிந்த வெருதினது துன்பம் பாராதுழுதானைப் புழுதி பொன்னாயிற்றென்றலும், தலை முதலாயின கொடுத்தாரென்றலும், தாது ஆழ்வார் ஒரு தேசத்து நின்றும் ஒரு தேசத்து வந்தாரென்றும். மஹா மேருக்களைப் பிடுங்கிப் பாரிட்டு மேனின்றுலாவினனென்று மிவ்வாறு வருவன. அவையெல்லா மறிந்துகொள்க.

“ போங்க......னவும் ”—தர்மகார்யாதிக்குப் போம்போது கூலிகொண்டு போதல் ; இதுவு மாராய்ந்து கொள்க. கையத்தினென்பது - கீழ்மையாலென்றவாறு. இவையெல்லாமறிசலமும், அவ்விருதமு மாகியவாறு கவிதோறுமறிந்து கொள்க. (உசு)

258 பற்றே மிகப்பெருக்கிப் பஃறொடர்ப்பா டேயாக்கி
யற்றீர்போற் காட்டி யடைக்கலமே வவ்வுநீர்
பெற்றீரே பேயுடம் பன்றேற் பெரும்பாலு
மெற்றே யிருணரகிற் கீர்க்கு மாலோ
விரக்கமொன் றில்லீரை யீர்க்கு மாலோ. (உஎ)

வேறு

259 ஆங்கவ ளறங்கூறக் கேட்ட வவாச்சியன்றான்
றேங்கம ழொலி கோதாய் சித்தமே யல்லதில்லைத்
தீங்கொழுக் கென்றதெல்லாந் தீவினை யென்னல் வேண்டார்
பூங்கமழ் காராடை போர்த்தவெம் புத்தரென்றான். (உஅ)

260 துத்தலே வேண்டி நின்று தோங்தொடர்ப் பாடு நீக்காய்
சித்தமே நல்ல தென்றாற் றேற்றனு மாவ துண்டோ

கத்திகொண் டில்லில் வாழ்பேய் காறலே வேறு செய்து
குத்துவ தின்னும் போழ்திற் கூடுமோ நன்மை யேடா.

தோங்தொடர்ப்பாடு நீக்காய் - குற்றமிக்க பரிக்கிரஹ நீக்காது. (உக)

261 உள்ளமும் பாயி ரம்மு மொக்குமேல் வீடு முண்டாங்
கொள்ளுமேற் குற்ற மஃதாக் கூடுமே பற்று மாங்கண்
விள்ளுமேல் வேற தாய வேடமு மன்ன தேயாங்
கள்ளமே சொல்லி நின்று கன்றினுற் காட்ட லாமோ.

(இ - ள்.) அகப்பற்றும், புறப்பற்றும் நீக்கி, உள்ளும் புறம்பு மொக்கில் மோக்ஷமா மென்றவாறு. அஃதன்றி யிருவழியும் பற்றுண்டெனில் மேன் மேலும் பற்ருமம்; உள்ளும் புறம்பும் பற்றில்லையேற் பற்றற வேஷங் கொள்ள வமையும். அஃதன்றிப் புறப்பற்றுண்டாயினு முட்பற்றில்லையென்பது கள வாம். புறம்பு புகையுண்டாயி லுள் ளழ லுண்டாயினவாறுபோலப் புறம்பு அல்பபரிக்கிரக முண்டெனினும் உள்ளும் மகாபரிக்கிரக முண்டாமென்பது. ()

262 புனைந்துநீ சொல்லும் வீடும் போகவுண் டாக தந்தே
நினைந்துநாங் காணி னெல்லா நின்றதொன் றில்லை யென்றுற்
றுனைந்துதா னுண்மை நன்று சூனிய மாதற் கென்றுட்
கினைந்தினைந் தேங்கி நல்லா யென்செயற் பால தென்றான்.

(இ - ள்.) பொன்றக் கேடாகிய மோக்ஷமுண்டாக; உண்டேயெனினும், அது நினக்கு ஸம்பவிப்பதன்று, சுகதனுக்கு மிற்றைவரை ஸம்பவியாமையில். என்னை? அவன் பஞ்சஸ்கந்த ரூபனன்றே; அவற்றுள் தாதுவாகிய ரூபஸ்கந்தங் கெடாமையி லொழிந்த ஸ்கந்தங்களுங் கெடாமை பெறுதலினென்பது. ஆதலா லது போவதாக. அதுவொழிய வேறொரு மோக்ஷந் தந்தேன்; அஃதெவ்வா றெனில், க்ஷணந்தோறுங் கெடுகின்றநின் சித்தங்கள் யாவும் பின் பிறவாவன்றே? பிறக்கிற் கேடில்லையாமன்றே? ஆதலாற் சித்தங்களெல்லாம் உத்பன்னமான க்ஷணத்திலே மோக்ஷிக்கின்றவன்றே? பொன்றக்கெட்ட சித்தத்திற்கும் பிற வாமையே யன்றே முக்தியாவது? பிறவாமைக்குப் பூர்வ சித்தங்களு மொக்கு மன்றே? சித்தங்களுக்கு ஆதாரமாகி சம்சாரியு முக்தனுமாக நின்றதொரு ஆத்மதிரவ்யமில்லையன்றே? ஆதலாலென்பது. இந்த மோக்ஷமே நினக்கமை யும்; கையறக்கெட்டு சம்சார சுகத்தையு மிழப்பதிற்றானுளனாய் நின்று க்ஷணந்தோறு முக்தனுவதே நன்றென, அர்க்கசந்திரனுந் தன் மித்யாத்வத்தி னீங்கி, யானிங் நெடு நாளெல்லா மென்செய்தேனுயினே னென்று பச்சாத்தாபப் பட்டு, இனி யென்ன செய்யத் தகுமென்று நீலகேசியாரைப் பணிந்து கேட்டா னென்றவாறு. (௩௧)

1 துனைந்து - விரைந்து.

263 செத்தவ ரப்பொழுதே தேவருட் செல்ப வேனு
மத்தலை யின்பநோக்கா ரஞ்சுவ மாக்க ளந்தோ
தொத்துள வாகவென்னான் சூனிய வீடு சொன்ன
புத்தனை நோதுமத்த புலம்பனீ போக வென்றாள். (௬௨)

264 புன்னெறி யவைகளெல்லாம் போக்கிய பாக்கி யத்தாய்
நன்னெறி நன்ஞானங் காட்சியு நன்கு கொண்டென்
சொன்னெறி திரிவாயேற் சோர்வில்பே ரின்ப மெய்தி
மன்னுதி யென்றுமற்றுங் கூறினாண் மாத ராளே. (௬௩)

265 காட்டுழல்[1] களிநல்யானை கால்கையி னோர்ப்பித் தேறித்
தோட்டியிட் டேர்வதேபோற் சூரிய சோமன் றானும்
வாட்டடங் கண்ணிநல்லாள் வாக்கெனுந் தூக்க யிற்றாற்
பூட்டுபு கொள்ளப்பட்டான் போதியார்க் காதி யன்னான்.

சூரிய சோமன் = அர்க்க சந்திரன். (௬௪)

வேறு

266 அருக்கமா சந்திரனை யறங்கொளீஇ யாங்கவனை
யிருக்கும்வா யொருப்படுத்திங் கீதுநனக் குரைத்தாரைப்
பொருக்கநீ சொல்லென்னப் புத்தனார் முதன் [2]மாணி
முருக்குவாய் சென்றவனும மொக்கல னெனச்சொன்னான்.

இருக்கும்வாயொருப்படுத்தென்பது - தர்மானுஷ்டானம் பண்ணுமாறு ஒற்றுமை கொளுத்தி யென்றவாறு.

பொருக்க - கடுக. (௬௫)

நீலகேசித் திரட்டில் அருக்க சந்திரவாதச் சருக்கம் முற்றும்

---

1 'காட்டுளா' என்றும் பாடபேதம். 2 மாணி - மாணவன்.

நான்காவது

# மொக்கல வாதச் சருக்கம்



267 நீவருத லொழியென்று நிறைபதும புரத்துக்கே
மாதிரந்தா னெறியாக மனம்போலச் சென்றெய்தி
மூதுரையுங் காரணமு முழுதெழுதி யழகிதாய்ப்
போதுகளும் பொன்மணலும் புனைந்தினிய பொலிவிற்றாய்.

பொன்மணல் - அழகிய மணல். (க)

268 கொடிமகரக் கோபுரமும் நெடுமதிலுங் குடிஞைகளுந்
தொடிமகரத் தூணிரையுஞ் சொலற்கரியதாய்ச் சுவர்க்கத்தின்
படிமகரப் படிமையதப் பள்ளிகண் டளியள் போய்க்
கடிமகரக் கடல்கடந்து கலந்தந்த நலமென்றாள்.

கொடிமகரக் கோபுரம்-கொடிகட்டி மகர வுருவெய்திய கோபுரம். குடிஞை-ஞாயில். "தொடி......யும்" - பூண்கட்டிய மகர வுடைத் தூண். மகரப்படிமை யுடைய பள்ளி. கடிமகரம் - மிக்க மகர மீன். (உ)

269 ஒழுக்கமுங் கல்விகளு முரைத்தனவே யொப்பனக
ளிழுக்கில்லாப் பெருந்தவத்தி [1]லிங்கிகளைத் தான்கண்டு
முழுத்தாள தாய்ப்பள்ளி முற்றத்தோ ரரைமரத்தின்
குழுக்கொம்பர் பிடித்தொருகாற் குஞ்சித்து நின்றுதான்.

உரை.... .பன - முன் சொன்னவற்றோ டொப்பன. முழுத்தாளது - சேதிக்கப்படாதது. (ங)

270 துன்னஞ்செய் தாடையைத் துவர்தோய்த்துக் கொட்டியும்
பொன்னஞ்செய் [2]பத்தங்கப் புகையூட்டிக் கைசெய்து
தன்னமு டளித்தாய தலைசொறியு மிடையிலையா
லென்னவற்றி னும்பயனை யெனக்கறிய வுரையென்றாள்.

தன்னம் - சிறிது. (ச)

271 ஆங்கவ ளதுவுரைப்ப வதற்குரிய மறுமாற்றந்
தாங்களு முரைக்கில்லார் தலைசாய்த்தங் கிருந்தார
மூங்கைமையான் மொழிகொண்டேன் மொக்கலநற் றேரயான்
பாங்கினல் வினவுவன் படிறின்றி யுரையென்றாள்.

---

1 இலிங்கம் - அடையாளம்; இலிங்கி - துறவி. 2 பத்தங்கம் - தசாங்கம்.

(இ - ள்.) நீலகேசியார் சொன்னதற்கு மறுமாற்றங் கொடாது மூங்கைகள் போலத் தலைசாய்த்திருந்தார். [1]முக்தஸ்விர ! மாற்றங் கொடுப்பாயாக; யான் கேட்பனவற்றை வஞ்சனையின்றிச் சொல்லுவாயாக வென்று சொன்னாளென்ற வாறு.

'மொழி கொண்டேல்' என்புழி, எல் - இடைச்சொல். 'மூங்கையால்' என்புழி, ஆல் - உடனிகழ்ச்சிப் பொருண்மேல் வந்தது. 'மூங்கைத் தன்மை யுடன் றலைசாய்த்'தென வுரைக்க. (௫)

272 வீடிற்கே யெனின்ஞானம் வேண்டாதே முடியுமாற்
பீடிற்கே யெனினின்னிற் பெருஞ்செல்வர் திருந்தினார்
மூடிற்றின் பயனென்னை யெனவினவ மொக்கலனு
மூடிற்றுஞ் சிறிதுளதா லுருவறிதற் கெனமொழிந்தான்.

(இ - ள்.) புடவை கொண்டு கிழித்து மகத நாட்டுச் சித்திரவறைக் கண்ணறைபோலத் துன்னஞ் செய்து, மருதந்துவர் தோய்த்துக் கொட்டி யிவ்வாறு பகு கிலேசத்தாற் போர்க்கின்றது மோக்ஷார்த்தமெனில், ஞானுதியொழிய விவ்வாறு போர்ப்பார் யாவர்க்கு மோக்ஷமுண்டாம். ஞானுதியோடு கூடிய சீவரம் மோக்ஷ சாதனமெனின், அது பொருந்தாது. என்னை ?

"போர்த்த லுடை நீக்குதலின் பொடித்துகள் மெய்பூசல்
கூர்த்தபனி யாற்றுதல் குளித்தழலு ணிற்றல்
சார்த்தரிடு பிச்சையர் சடைத்தலைய ராதல்
வார்த்தைபிற செய்தவ மடிந்தமன மென்றான்"

என்பதனால் போர்த்தல் மோக்ஷார்த்த மன்றென்று சொல்லி, இதுபொழுது ஞானுதியோடு கூடிய போர்வை மோக்ஷசாதனமெனில், ஒழிந்தனவும் ஞானுதியோடு கூடிய வழி மோக்ஷசாதனமாதலில் அவை நின்னால் உபேக்ஷிக்கப்படா வாம். அன்றியும்,

"மூர்த்தார்முன் மத்தியத்தார் போற்போர்வை போர்த்திட்டான்
வாய்த்திரா வகைவேண்டித் துவர்துன்னம் வகுத்திட்டான்."

என்பதனால் மத்திய தேசத்துக்கு ஆசாரமாகப் போர்த்தானென்பது சொல்லி யிதுபொழுது ஞானுதியோடு கூடிய போர்வை மோக்ஷஸாதனமெனில், மத்யம தேசத்தார் காமினிஜன ஸன்னிதானத்துச் செய்யும் ஆசார முதலாயின மோக்ஷ ஸாதனமாம். ஆதலாற் போர்வை மோக்ஷஸாதனமன்றென்பது. [2]பகுமதி நிமித்த மாகப் போர்த்தேனெனில், போர்வை யொழியவும் ஸ்ரீமான்களாயினார் பகுஜன ஸம்மதராகின்றனர். ஆதலால், நீர்போர்த்த காரணமென்னெனப் போர்த்தன வுஞ் சிறிது பயனுடைத்து வேஷ மறிதற்கென்று சொன்னானென்றவாறு. (௬)

---

1 முக்தான் - மொக்கலன். 2 பகுமதி - மதிப்பு.

273 படைப்பெளிதாற் கேடரிதாற் பலகள்வர் [1]நவையாரா
லுடைக்கியைந்த வொலியிற்று லூன்றருவார்க் குணர்த்துமால்
[2] விடக்கமர்ந்த வுள்ளத்தாய் வேடமு மறிவிக்குந்
தொடர்ப்பாடும் பெரிதன்றாற் றொட்டைநீ பூணியோ.

வேஷமறியப் போர்த்தா யாகில் கிலேச காரணமாகிய விதனைவிட்டுச் சற்றைகையைப் பூணு யென்றவாறு. [3]தொட்டு - [4]சற்கை; (சக்கை?) (எ)

274 பொன்கொண்டா ராயினும் போர்வைபூச் செனிற்புலையன்
வன்கண்மை யாற்செய்த வஞ்சமே யெனவளைப்பர்
தன்றன்மை யாகிய தான்பழிப்பார் தாமுளரோ
வென்கண்டு வந்திங்க ணிதுகொண்டா யெனச்சொன்னாள்.

(இ - ள்.) கண்டபோது பொன்னாயிருந்ததாயினு முள்ளுப்பிறிதொன்றாகி மேற் பொன்பூசிற்றாயிற் பொன்மேற் கண்டேமென்றிராது கொடுத்தானைப் பிடிப்பர்; அதுபோல வேஷ நன்றேயெனினு முட் குற்றமுண்டெனி லிகழ்வர். ஸ்வபாவ சுத்தமாகிய சுவர்ணங் [5]கும்பியுட் கிடப்பினும் பழியார். அவ்வாறே வேஷ மலமாயிருந்ததேயெனினும் ராகாதி சித்த தோஷமில்லையாகில் ஸ்துதிப்பர். ஆதலால், பருக்லேஸமும், பருபரிக்கிரஹமும், பரு [6]காம்க்ஷைக்கும், பரு பாபத்திற்கும் நிமித்தமுமாகிய விப்போர்வையில், தபசுக்குடலாக என்ன நன்மை கண்டிது சொன்னு யென்றவாறு.

பருக்லேஸம் - துன்னஞ் செய்தல் முதலாயின. பருபரிக்கிரஹம் - சீவரத்திற்குப் புடவை, இது ஒலித்தற்கு உவர், புழுக்குப்பானை, விறகு முதலாயின, ஊசி சாடு முதலாயின, மருதம்பூ முதலாயின, இவை கோடற்கு வேண்டும் ஸாதனங்க ளிவ்வாறு வருவன வெல்லையில. இப்படி வஸ்திரம் பிரதி இரண்டு படிவேண்டும்.

பருகாம்க்ஷையாவது - நல்ல புடவை கண்டாலிது சீவரத்துக்காமென்றும், நல்ல சீவரங்கண்டால் நமக்கில்லையேயென்றும், இவ்வாறு சீவர முதலாயின ஓதப் பட்டன யாவற்றிலும் வரும் காம்க்ஷை.

பருபாபமாவது - காம்க்ஷையாலும், சீரைப்பேன் முதலாயினவற்றுக்கும், விறகு மருதம்பூ முதலாயினவற்றிலுள்ள ஜீவன்களுக்கும்வரும் ஹிம்சையாலுமா மென்பது.

---

1 நவையார் - அபகரியார்; "கடு நவைப்பட்டோர்" சிலப்பதிகாரம் இந்திரவி - 125.

2 விடக்கு - ஊன்.

3 'தொடு' என்னும் முதனிலைத் தொழிற் பெயரடியாப் பிறந்தது; தோடு குறுக்கல் விகாரம் பெற்றதெனினுமாம்.

4 சற்கை - தோல். 5 கும்பி - மலம்.

6 காம்க்ஷை - ஐம்பொறிகளானும் நுகரும் இன்பத்தினுக்கு ஆசைப்படுதல்.

கோவண மாத்திரமான பரிக்கிரஹத்திற் குற்றமில்லையெனிலதுவுங் குற்ற முடைத்து. என்னை ?[1] ஆர்ஜன ரக்ஷண வியாபாரமும், ராகாதியும் மற்றுங் கோவணத்திற்குங் கோடி பொருளுக்கு மொக்குமாதலி லென்பது. தேடுதல், காத்தன் முதலிய செய்கைகள்,

"கோடி பொருளோடு கோவணக் கொத்திடுங்
கோடி யுழவான கொணரு மொருமக
னோடி யுழலுமோர் கோவணக் கோர்மகன"

என்பதாகலின். (அ)

275 உண்ணன்மை தவமென்றங் குறுப்பெல்லா மறைக்கின்றாய்
திண்ணென்ற மனமிலைநீ சிறைபலவுஞ் செய்தலாற்
பெண்ணென்றும் பிறவென்றும் தானோக்கிப் பெரும்பேதாய்
கண்ணன்றோ வுள்ளத்தைக் கலக்குவன வவைகாவாய்.

(இ - ள்)[2] "போர்த்தலுடை.........மென்றான்" எனபதனு லுண்ணன் மையே தவமாவது, போர்வையாற் பயனில்லையென்று பினனும் போர்த்துழல் கின்றாய்; நீ யொருவாறுந் திண்ணென்ற மனமுடையை யல்லை; புத்திவிகாரத் தா லங்க விகாரம் பிறக்குமென்று சிறைபலவுஞ் செய்தாயாகையால், இனிப் பெண் முதலாயின காட்டிப் புத்தி விகாரத்தையு மங்க விகாரத்தையும் பண் ணுவனவாகிய கண்களையு மூடிப் பரிகரி யென்றவாறு. (க)

276 பெண்பாலார் கண்டக்காற் பேதுறுவ ரெனவுரைப்பாய்
திண்பான்மை யவர்க்கழியச் சிதைபுநின் றவமாயின்
மண்பாலா ரவருள்ள மாண்புளதா யுரையாரா
லெண்பாலும் படாதாகி யிழுக்குநின் குணமந்தோ.

(இ - ள்.) சரீர சௌந்தரியங் கண்டு வனிதா ஜனங்க ளுள்ளழிவாரென்று போர்த்தே னென்றற்கண் ணுனக்கு விகாரமில்லை யெனினும் . ஸ்திரீகளுள்ள மழிய நின்தவ மழியுமெனில் [3]ஹத ! நினக் கொருகாலுந் தவ முளதாகா தென்றவாறு. (௧௦)

277 இழுக்கினு மிழத்தியா விடறினு மதுவேயால்
விழுக்கலமால் விலைபெரிதால் வினைக்கேடாந் தொழிறருமா

1 ஆர்ஜனம் - ஈட்டல்.
2 இது, 272-ஆம் செய்யுளுரையில் மேற்கோளாக வந்துளது
3 ஹத - அந்தோ !

லொழுக்கிற்கு முரித்தன்றா ணேரிடையூ றுடன்கொடுக்கும்
வழுக்கின்றித் தவஞ்செய்யின் மண்டையாற் பயனென்னே.

தபசு பண்ணுவார்க்கு இவ்வாறு பகுதக்க நிமித்தமாகிய மண்டையாற் பய னென் னென்றவாறு.

"வினைக்கேடா......மால்" - ஆஞாணுபியோமமாகிய மண் தேடுகையே, பிச்சையே யென்றிவை முதலாகிய தொழில்கள். (கக)

278 நிறந்தூய்தா நீரினால் வாய்தூய்தாம் பாகாற்
[1]பறைந்துபோய் மெல்கோலாற் பல்லெலாந் தூயவாம்
புறந்தூய்மை செய்தக்கால் புரிவுள்ளந் தூய்தாமே
லறந்தூய்மை கணிகையர்க்கே யாற்றவு முளதாமால்.

(இ - ள்) சீவரத்திற்கும், மண்டைக்கும் பயனுரைச்க மாட்டாணுகிக் கோபத் தால் யாங்கள் யாது செய்யினு மிவ்வாறு துய்யோமெனை, இவற்றால் வருந் தூய் மை ஞணிகா ஜனங்கட்கு முண்டென்றவாறு. (கஉ)

279 சவருடைய மனைவாழ்க்கை யெனப்போந்து தவம்புரிந்தாய்
பவருடைய விறகிறுத்துப் பலகலங்க ளொருப்படுத்துற்
றுவரோடு பல்கூறை யுடன்புழுக்கி யொலித்திடுநீ
துவரடுதி பூவடுதி சோறடலே முனிந்தாயோ.

சவர் - குற்றம். பவர் - [2]புறஞ்செப்பு. (கங)

280 வண்ணாரந் துன்னார [3]மச்சிகமே கச்சாரஞ்
சண்ணார மெனப்பிறவுந் தவத்துள்நீ கற்றனவா
லெண்ணார்ந்த [4]காரங்க ளில்லகத்தே பயின்றாயே
லுண்ணாயே வயிறார [5]வோர்ப்பொன்று மிலையேகாண்.

மச்சிகம் - நாவிதம். கச்சாரம் - கச்சுக் குத்துதல். சண்ணாரம்-குடை குத்து தல். பிறவுமெனை றதனால் குயத் தொழில், சக்கிலியர் தொழிலுங் கொள்க. (கச)

281 சிறந்தாய்க்கீ துரைக்கலாஞ் சிந்தனையை முடிப்பதே
துறந்தார்க்குக் கடனாகிற் சோறலாற் பிறவேண்டா
விறந்தார்க்கு மெதிரார்க்கு [6]மிவட்காலத் துள்ளார்வான்
பிறந்தார்க்கு மிதுவன்றிப் பிறிதொன்று சொல்லாயோ. (கரு)

---

1 பறைந்து - தேய்ந்து.

2 புறஞ்செப்பு - மேற்பிடிப்பு; அதாவது, வலியபாகம்.

3 மச்சிகம் - மஞ்சிகம்; வலித்தல் விகாரம். 4 காரங்கள் - காரியங்கள்.

5 ஓர்ப்பு - விரதம்; அதாவது, தவம். 6 இவட்காலம் - இக்காலம்.

282 உண்டியா லுடம்புளதா லுடம்பினா லுணர்வாமென்
றெண்டிசையும் பரந்திசைப்ப வீதுனக்கே தெரியாதோ
தண்டியாய்க் கழியாது தவஞ்செய்த லுறுதியேற்
[1]பண்டியாற் போக்குநின் பஃறொடர்ப்பா டெனச்சொன்னாள்.

தண்டியாய் - [2]தறும்பனாய். (கசு)

283 அருளுடையா ளுரைப்பக்கேட் டாங்காரித் தவனுந்தன்
பொருளுடைமைத் தருக்கினும் புன்ஞானக் களிப்பினு
மருளுடையார் மதிப்பினு மாற்றந்தான் செயற்பொருட்டா
விருளுடைந்த கூந்தலா ளிட்டத்தை யெண்ணுவான்.

இரு......லாள் - நீலகேசியார். (கஎ)

284 தாணென்று நன்றென்று டன்றன்மை யுருவென்று
ளாணென்னத் தெளிந்ததுதா னுருகத மேமன்னு
முரணின்ற துண்மையான் மொக்கலனு முனிந்துரைப்பா
னிரணியனைப் போல்வந்திங் கிடர்ப்பட்டா யென்றானே.

தாண் - சுத்த சுவர்ணம். இரணி......னே - இரணியனென்பா னொரு வாதியை யான் வென்றேன், அவனைப் போல நீயும் அகப்பட்டிடர்ப்பட்டா யென்றவாறு. (கஅ)

285 என்றாலும் வெலப்பட்டா ரிருவருள ரிங்கவரைச்
சொன்னாலு மறிதிநீ துடிகடியு மிடையுடைய
கொன்னுணு நெடுவேற்கட் குண்டலமா கேசியு
மன்னனுக் கறமுரைத்த வருக்கமா சந்திரனும்.

நின்னலொருவனே வெல்லப்பட்டானயிலென்னலிருவர் வெல்லப்பட்டா ரென்றவாறு. (ககூ)

286 என்றானை முகநோக்கி யிதுபெரிதும் பொய்த்தனைநீ
யொன்றாத கொள்கையா ருலகினுள யாவரையும்
வென்றாள்மற் றிவள் [3]சம்பு விரதியாய்த் திரிந்தெங்குந்
தன்றாரம் பிறர்க்கீந்தான் றருமங்கொ டென்றாய்.

குண்டலகேசி யென்பாளொரு வைசிய கன்னிகை. இவளொரு நாள் [4]பிராஸாத ஸ்தலத்து, விளையாடுகின்றாளாக, ஒரு [5]கிதவப வைசிய புத்ரன்கான

1 பண்டி - வயிறு ; இங்கு வயிற்றிற்குரிய உணவை யுணர்த்திற்று.
2 தறும்பன் - தடியன், குறும்பன். 3 சம்பு - நாவல்.
4 பிரா ஸாத ஸ்தலம் - மாளிகை. 5 கிதவப - குற்றவாளி.

னெனபானிவன், பௌத்த தர்சனங்கொண்டு, பல வழியுஞ் சோர விருத்தி பண்ணிச் செல்வானை, அரசன் வதிக்கவென்றேவச் சிறைப்பட்டுப் போகின்றானை, முன் சொன்ன குண்டலகேசி கண்டு காமபரவசையாக, அதனை யறிந்து, அவளுடைய பிதா, ராஜாவைக் கண்டு யாதானு மோருபாயத்தால் மீட்டு இவனுக்குக் குண்டலகேசி யென்னும் கன்னிகையினை விவாஹவிதியாற் கொடுத்தினிது செல்கின்ற காலத்தொருநாள், [1]ப்ரணயகலஹத்து ந[illegible]க்கிரோவத்தால் நீ கள்வனன்றோவென்று குண்டலகேசிசொல்ல, காளனுந் தன்னுள்ளத்தே சினங்கொண்டு பின் பொருநாள், [2]வித்யாஸாதன [3]வ்யாஜத்தா லிவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத்தேறி, நீ யெனனை யிவ்வாறு சொல்லுதலில் யானுன்னைக் கொல்லத்துணிந்தே னென்னக் குண்டலகேசியும், 'தற்கொல்வியை முற் கொல்லிய' வென்பதனறே, இவனை யான கொல்வேனென நினைந்து, "யான் சாகிறேனுகிலும்மை வலங்கொண்டு சாவ" வென வதற் கியைந்தகாளனை வலங் கொள்கின்றாள், வரையினின்றும் விழ நூக்கினள். நூக்கக் காளனும் புத்த ஸ்மரணத்தினுல் மோக்ஷித்தனன். குண்டலகேசியும் ஹர்தரு விரஹ துக்கிதையாகித் துறப்பனென நினைந்து பரசமயங்களெல்லாம் நாவல் நட்டு ஜயித்து, பௌத்த தர்சனங்கொண்டு முக்தி பெற்றனளாகலின், அவளை வென்றேனென்று மிகவும் பொய்யுரைத்தனை யென்று சொல்லி யென்றவாறு. (௨0)

287 வேதியரை முதலாக வெலப்பட்டா ரிவரிவரென்
றோதியாங் கவையவைதா மிவையிவையென் றுரைப்பக்கேட்
டாதிகா லாவணத்து ளார்கதரை வென்றதனை
நீதியா லுரைத்தியே னின்னையான் வெல்லேனோ.

(இ - ள்.) வைதிகர் முதலாகிய வெல்லாச் சமயிகளையும் அவள் வென்றவாறு சொல்லாநின்று ஆருகத சமயத்து, நாத குப்தரென்பாரை ஆவணமென்னு நகரத்து வென்றாளென்பது கேட்ட நீலகேசியாரும், குண்டலகேசி நாதகுப்தனை ஆவணத்து வென்றமுறையானே நீ சொனனையாயினின்னை யிது பொழுது யான் வெல்லேனோ வெனறவாறு.

ஓகார மொழியிசை ; குண்டலகேசியை வென்றவாறு சொல்லவேண்டுமோ வென்ப தொழிந்ததாகலின். (௨௧)

288 எனக்கேட்டாங் கெடுத்துரைப்பா னிந்திரர்க டொழப்படுவான்
றனக்காய தர்மமு மதர்மமுங் காலமுங்
[4]கனப்பாட்டிற் காயமே யுயிருருவே புண்ணியமே
நினைக்குங்காற் பாவமே கட்டுவீ டெனநிறுத்தி.

1 பிரணய கலகம் - ஊடல் கலகம் ; பிணங்குதல்.
2 வித்யாசாதனம் - வித்தை சாதித்தல்.
3 வியாஜம் - போலிக் காரணம். 4 கனப்பாடு - அகலமான இடம்.

(இ - ள்.) இந்திரர்களால் தொழப்படுவோன் இறைவன். தர்மமும், அதாமமும், காலமும், ஆகாசமும், ஜீவனும், புத்கலமும், புண்ணியமும், பாவமும், பந்தமும், மோக்ஷமும இவை பொருளென்று நிறுத்தி யென றவாறு. (உஉ)

289 இப்பொருட்க ணிகழ்ச்சியு மிவையிவையா மெனவிரித்துச்
செப்பினு னுதன்றன் சிந்தைக் கெழுந்தவா
றப்பொருளு மந்நிகழ்வு மவையவையா வறியாதே
[1]வப்பிள வனமுலையார் மணல்விளையாட் டதுவேபோல்.

இதனுற், "றன்புறத்த" வென்னுங்காதை சொல்லப்பட்டது.

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட பொருட்கணிகழ்ச்சி யிவையிவையென வப்பொருளையு மப்பொருள் நிகழ்ச்சியையும் பட்டாங்கறியாது தன் சிந்தையிற் றோனறின தோற்றினவாறே விரிததுச செப்பினுன, கச்சணிந்த விளமுலை மடவாருடைய மணல்விளையாட்டுப்போல வென்றவாறு. அஃதாவது, புழுதி சோருகவுங் கல்லுக்கறியாகவு மிவவாறு விளையாடுவது. அதுபோல ஆபாஸ மாகச் சொன்னுனென்றவாறு. (உரு)

290 மொக்கலனு மிதுகூற முல்லைநா றிருங்குழலா
ணக்கனளா யிதுகூறு நாதன தியல்பறியா
யிக்கிரமத் திந்திர னிருடிகளைத் தேவியரைத்
தக்கதாத் தொழுதக்கா லவர்தலைவ ரெனலாமோ.

(இ - ள்.) உ-ஹூறநுபூர்வபக்ஷமுபந்யாசித்தவாறு கேட்டுமுல்லை மணங்க மழுங்குழலினையுடையாராகிய நீலகேசியாா மிகவுஞ் சிரித்துச்சொல்லுவார்: ஆப்த லக்ஷணமறியாதா யிதுவோ ஆப்தலக்ஷணமாவது? இந்திரனிருடிகளையுந் தன் தேவிமாரையுந் தொழாறே? தொழினு மவர் தலைவராவரோ? வென்றவாறு.

இக்கிரமத்தா னுதனியல்பறியாயெனக் கூட்டுக. அவன் சொன்ன ஆப்த லக்ஷணத்திற்கின்மை செய்தவாறு. (உசு)

291 எந்தலைவ ரியல்பொடுநூ லின்னணமென் றறியாதாய்
சிந்தனைக்க ணுயினுந் தீமையு முரைத்திலையாற்
றந்துரைத்த தலைவனூற் றத்துவமா மாகவே
முந்துரைத்த பொருணிகழ்வு பிழைப்பின்மை முடியாவோ.

(இ - ள்.) எம்முடைய ஆப்தாகம மறியாதவனே! மனஸாலும் ஆப்தாகமங் கட்கு ஒரு குற்றங் கூறிற்றில்லையாகையாலஞ்சினுயோ? குற்றமில்லாத ஆப்தனு லும் ஆகமத்தாலும் [2]பிரதிபாதிதமாகிய பதார்த்த நிகழ்ச்சிகளுக்குங் குற்றமின்மை முடியாதோ? நீ சொல்லிய குற்றங் குற்றமாகுமோ வென்றவாறு.

---

1 வப்பு - வம்பு ; வலித்தல் விகாரம்.

2 பிரதிபாதிதமாகிய - சொல்லபட்டதாகிய.

சிந்தனையாலென்பது—"இறையாவன் ? நூல்யாது? பொருள் என்னை? மற்றிவற்றின், முறைப்பட்ட நிகழ்வுரைக்கவென மொழிந்தா" ளென்றிவ்வாறு பிறரை வினவுகின்ற குண்டலகேசி நாதகுத்தனாரை நூல் யாதென்று கேளாதவாறும், "நன்றுரைத்தீர் நும்மிறைவரிவணில்லை யெனப்பா"லெனவும், "ஆறினுரென்பது முரைப்பவா" லெனவும், "சொன்னவைந் துணரானேற் சொல்லளவா" மெனவும், "உள்ளத்தா லெதிர்ச்சியு முடன்பாடு மில்லாக்"கெனவும், பல்வகையானும் பிறருடைய ஆப்தனுக்குக் குற்றங்கூறிய குண்டலகேசி நாதகுத்தனரால் சொல்லப்பட்ட ஆப்தனுசகுக் குற்றங்கூறாதவாறுமென்னை யென்றவாறு. இது பூர்வபக்ஷ மறியாமை காட்டிற்று. (உரு)

292 அத்தியைந தெனினல்ல வறுபொருளு மவையாகா
வுத்தியா லெடுத்தோது மொன்பதனே டொட்டலவாற்
குத்திய பல்குறையே யன்றியுமிப் பொருளெல்லாம்
பொத்தியுங் காட்டுவாய் பொருளியைவோ பெரிதென்றாள்.

இதுவும் பூர்வபக்ஷமறியாமை காட்டும். பொத்தி - அங்கொன்றுக்கொன்று சேர்த்து. (உசு)

293 சலம்படவே யுரைத்தனைநீ தருமத்திற் செல்லுதுமென்
றிலம்படுமே வியக்கில்லை யென்பதெம் முறையென்போம்
கலஞ்செல்லுங் கடலதனைக் காற்றேபோ லுந்தாதாம்
பலம்படு முரைநினக்குப் பாமபுண்ட பாலேபோல்.

இதனால், "தலைவைத்த", "நிறுத்துவனுண்மை", "எல்லையுள் விழவினுள்" என்னுங் காதைகளாற் சொல்லப்பட்ட உபஹதக்ஷ நீக்கப்பட்டது. தர்மாஸ்திகாயம் [1]ப்ரேரித்து [2]கமிப்பிக்குமென்று சலஞ் சொல்லினை; யாங்கள் தர்மாஸ்தி காயமில்லையெனிற் பொருளுக்கு கமனமில்லையென்போமென்று புத்தி பண்ணுவாயாக. அஃதி யாங்ஙனம்? மரக்கலமோடு தத்சாதனமாகிய சமுத்திர ஜலம் ப்ரேரியாது சாதனமாவதல்லது, அதனைக் காற்று ப்ரேரிக்குமாறுபோலச் செலுத்தாதன்றே; நனருகியபால் பாம்பின் வாய்ப்பட்டு விஷமானவாறுபோலக் குற்றமில்லாததூஉம் நின் மித்யாத்வத்தினற் குற்றமாய்த்தோன்றிற்றென்றவாறு.

இன்னும் இச்சையு முயற்சியுமின்றித் தாமே பிறிது காரணத்தாற் போம் பொருள்களுக்கு [3]அப்ரேரக சாதனமாம். குயவன்றிகிரிகுக் கீழிட்ட சிலைபோலவுந் தேருக்கு அச்சுப்போலவுங் கலத்திற்குக் கடல் போலவுமென்று சொல்லுதலால் நீ சொல்லிய குற்றந் தங்காவெனறு சொல்லுக. (உஎ)

---

1 ப்ரேரித்து - தொழிலாற்றி.
2 கமிப்பிக்கும் - செல்விக்கும்.
3 அப்பிரோக சாதனம் - தொழிலற்ற சாதனம்.

294 அல்லதற்கு மப்படியே யாமென்ற லதுகொள்ளாய்
செல்லவுஞ் செலுத்தவு நில்லவு நிறுத்தவுஞ்
சொல்லியவாய் தேய்க்குறுவாய் சொல்லிக்கொள் வலியதனுல்
பல்லொடும் படத்தேய்த்தாற் பயம்பெரிதும் படுமன்றே.

(இ - ள்.) அதர்மாஸ்தி காயமுமவ்வாறு ஸஹகாரமாகி மாக்கலத்துள்ளாரும், நங்குரக்கல்லும் போல மாக்கலத்தை நிறுத்தாது, சமுத்திர ஜலமும்; ஆகாசமும் போல நிற்றற்குக் காரணமாதலில். ஜலமில்லையேல் நிலையில்லையென்று சொன்னேமென்றுங் கொள்ளாது நீ வேண்டியவாறு செல்வதாகவுஞ் செலுத்துவதாகவுஞ் சொல்லி, நின்வாய்க்கு நோவு செய்தியெனில், வலியதொரு கல்லினுற் பல்லொடு நாவை நறுக்குதல் பிரயோஜன முடைத்தென்றவாறு.

இரண்டு காதையாலும் தர்மாஸ்தியு மதாமாஸ்தியும பக்ஷிக்குச் சிறகுங் காலும் போல ஜீவ புத்கலங்களுடைய கமனத்திற்கும் ஸ்திதிக்கும் ஸஹகாரசாதன மென்றவாறாயிற்று. (உஅ)

295 கடனிலமா காயமே யமையாவோ விவையிரண்டு
முடனில்லை யாயினு மூனமிங் கெவனென்பாய்
மடனுடையை நீபெரிது மன்னுயிர்க்குமப் [1]புற்கலக்கு
மிடனெல்லா வுலகி னெல்லையும் புறப்படுமோ.

(இ - ள்.) கடலு நிலமுமாகாசமும் ஜீவ புத்கலங்களுடைய கமன ஸ்திதிக்கும், ஸஹகார ஸாதனமாக வமையாதோவிவை யில்லையாகில் வருங்கேடென்னென்று சொல்லுவாய்; நீ பெரிதும் அறிவிலை; ஜீவ புத்கலங்களுக்கு அளவில்லாத வாகாச மெங்கு மிடமாய் லோகா லோக வியவஸ்தை கெடும். கெடவே, இன்ன வழி ஸ்வர்க்கம், இன்ன வழி நரகம் என்ப வெல்லாங்கெடும்; அவை யவ்வழியன்றிப் பிறவழியும் போதல் கூடுமாதலினென்றவாறு. கமனக்கிரியையுள்ளதற்கே ஸ்திதிக்கிரியை யுளதாதலிற் கமன ரஹிதமாகிய தாமா தர்மாகாஸங்கட்கு ஸ்திதிக்கிரியையின் மையின்ஸஹகார ஸாதனம் வேண்டா வென்பது, ஆகா சாதிக்கு ஸ்திதி கிரியை யுண்டாகில், கிரியை [2]யநித்ததை யாகையால். அந்த ஸ்திதி கிரியைகெட, கமனுதி கிரியை பின்பு தோன்றல்வேண்டும்; அது தோன்றாமையில் ஸ்திதி கிரியையில்லை யென்பது [3]பூதராதிகளும் கமனக் கிரியையுடைய புக்கல [4]ஸந்தோஹமாதலி னிவற்றது ஸ்திதிக்கு அதர்மாஸ்தி வேண்டுமென்பது. (உக)

---

1 'புற்கலத்துக்கு' என்பது, அத்துச் சாரியை குறைந்து வந்தது.
2 அநித்ததை - நித்திய மின்மை.
3 பூதராதிகளும் - பர்வதங்கள் முதலியனவும்.
4 ஸந்தோஹம் - கூட்டம்.

296 பலசொல்லிக் குறையென்னைப் பஞ்சமா கந்தமே
யலகில்லாப் பெரும்பரப்பி னாகாய நினக்கில்லை
நிலைசெலவிற் கிவைவேண்டா நின்பொருளு மிவையல்லா
வுலகெல்லை யுரைப்பான்புக் குணர்வினையே வருத்துதியேல்.

(இ - ள்.) பஞ்சஸ்கந்தமே நினக்குப் பொருளாதலின் லோகத்துக்கெல்லை யுரைப்பான் சொல்லுவ தெவ்வாறெனறவாறு. (௯௦)

297 காலநீ வேண்டாயாய்க் கணிகமுங் கற்பகமுஞ்
[1]சாலமும் புனைந்துரைத்தி சமழ்ப் [2]பென்னு மிலையாகிப்
பாலமா பண்டிதனே பழநோன்பி யிவனென்பாய்
மாலுமிங் குடையையோ மயக்குவதொன் றுண்டனையோ.

காலமென்பதொரு பதார்த்தமில்லை யென்று சொல்லி க்ஷணந்தோறும் பொருள் கெடுமென்றுங் கல்பகாலம் பிறக் குழந்தேனென்றும், பாலனாகிய ப்ண்டிதனே இவன் சால [3]சிரஂதவஸ்வி யன்றே தொழா யென்றுஞ் சொல்லுதற்கு நீ மாலேறினையோ? மயக்கு மருந்துண்டாயோ? சொல் லென்றவாறு.

க்ஷணிக மென்ப தேழு செங்கழுநீ ரிதழை யொருகுறட்டிலடுக்கிப் பல வானயினொருவன் மிகவுங் கூரியதோ ருளிவைத்துக் கூடமிட்டுப் புடைத்தா லாறும் புரை யற்று ஏழாம் புரையிற் செல்லுமளவாம். இனி, கற்பமாவது - ஓசனை யகன்றுயர்ந்ததோா [4]வஜ்ரமலை ஹஸி-ுணியுடுத்த பட்டாடை தோய்க் கப்பட்டுக் கையறத் தேய்ந்ததாம். (௯௧)

298 இக்கோட்க ளெழுநூக்கி யிவையிவையே யாமென்று
லக்கோட்க ளெழுநோக்கி யவையவையாக் கண்டிருந்
தெக்கோளு மில்லென்பா யாண்டெண்ணி யேததுதியான்
மெய்க்கோளா லென்றியான் மிகைதெருட்டுந் திறங்காணேன்.

(இ - ள்.) இந்த கிரஹங்களுடைய உதயாதி இந்த பலங்களைப் பண்ணு மென்றுலவை யவ்வாறு கண்டிருந்தும் கிரஹங்களுங் காலபேதஙகளு மில்லை யெனறு சொல்லுவாய்; புத்தவத்ஸர [5]மினனதனை யென்றி யாண்டேத்துதி; மின்னைத் தெருட்டுந் திறங்காணே னெனறவாறு.

[6]ஜ்யோதிர் ஞானங்க ளொரொவொன்று தப்புவனவு முளவன்றே வெனி னிவை யெண்ணுகின்றவனுடைய புத்தி [7]மாந்த்யத்தாலும், [8]விஸ்மரணத்

1 சாலம் - விகற்பம். 2 என்னும் - சிறிதும்.
3 சிரம் - நீண்ட காலம். 4 வைரத்தாலாய மலை.
5 இன்னதனை - இவ்வளவு. 6 ஜோசிஷம்.
7 மாந்த்யம் - குறைவு. 8 விஸ்மரணம் - மறத்தல்.

தாலும், அலகு பிழைப்பாலுமாமென்பது. இம்மூன்று காதையுங், "காசமுங் காலமு" மென்னுங் காதையாற் சொல்லப்பட்ட குற்ற நீக்கின. (௩௨)

299 கருத்திறைற் பெற்ருமோ கண்கூடாக் கண்டோமோ
வொருத்தனையென் றுரைக்கின்ற யுறுநோயைத் தீப்பதோர்
மருத்துநூ லில்லையான் மயங்கியே சொல்லாது [ள்.
திருத்தியநின் னுணர்வின்மை தெருட்டிக்கா ணெனச்சொன்ன

இது, "கருத்திறைற் பெற்றேமோ" என்னும் காதையிற் சொன்னகுற்றம் நீக்கும்.

கருத்திறைற் பெற்றேமெனிற்றன்கண் தன்றைற் காணப்படா தெனினும் ரூப பிரகாசத்தால் [1]அநுமித்தவாறுபோல அநுமித்தனையாயின் அநுமித்தவாறு சொல்லுக. கட்புலமெனிற் செம்மை வண்ணங்கண்டவாறு கண்டாயேற் சொல்லுக. அன்றி ஆப்த வாக்கியத்தாற் பெற்றாயெனின் அது கொள்ளப்படாது, ஸ்வாக்கவாவியிற் றண்ணீரொரு வாக்கியத்தாற் பெற்றாற்போலவென்று குற்றங் கூறினன். அக்குற்ற நீக்குதற்கு நீலகேசியார் சொல்லுவார்: கருத்திறைற் பெற்ருமோ கண்கூடாக் கண்டாமோ ஜீவனையில்லையென்று சொல்லுகின்ற நின்மித்யாத்வ நோயினைத் தீர்ப்பதோர் மருத்துநூலில்லை; நூல்பிரமாணமல்லாமையால் அதுநிற்க, நீ நின் [2]விக்ஞானஸ்கந்தம் பெற்றவாறு சொல்லென்று ஜீவதிரவ்யத்தினுக்குச் சொன்ன தூஷணஞ் சொல்லுக.

இதன்பொருள் :—எந்தப் பிரமாணத்தால் விஜ்ஞான ஸ்கந்தம் பெற்றனை, தஸ்ய பிரமாணத்தால் ஜீவத்திரவ்யம் பெறலாமென்பது. [3]ஜாநாமி, பஶ்யாமி எனத் தோன்றுதலால் விஜ்ஞானஸ்கந்தமுளதெனில், [4]ஸஏவாஹம் ய: பூர்வ மாட்ய: எனவிவ்வாறு தோன்றுதலால் ஆத்ம திரவ்யமுமுண்டு; [5]ஆத்ம பிரதீதியுண்டேயெனினும், அது [6]ப்ராந்தமாகையால், ஆத்மசத்பாவங் கொள்ளேனெனில், ஆத்ம பிரதீதிக்கு ப்ராந்தியாதினல்? அசத்கிரஹணத்தாலெனில், அதற்கு அசத்கிரஹணஞ் ஸ்வபாவத்தாலெனில், [7]சர்வப்ரதீதிகளுக்கும் அசத்கிரஹணம் ஸ்வபாவத்தால் வேண்டும், [8]ஞானத்வா விசேஷாத். [9]ஸத்ருஶாபராபரோத்பத்தியால் அஸத்கிரஹணமெனில், ஒருவரைப்போலத் தோன்றும் பலரைக் கண்டானொருவனென்றேமயங்கி யொருவராக கிரஹிப்பான் அவ்வாறே ஒன்று போற்றோன்றும் பலவற்றைக் கண்டதன்றே யவற்றை யொன்றென்று கிரஹிப்பது. ஆதலால், ஸத்ருஶாபராபரோத்பத்தி யாதினுக்கும்

1 அனுமித்த - அநுமானத்தாலறிந்த. 2 ஐந்துவித ஸ்கந்தங்களில் ஒன்று.
3 அறிகிறேன் - பார்க்கிறேன்.
4 ஸஏவாஹம் பூர்வ மாட்யஹ முன்பு தனிகனாயிருந்த அவனேயான்.
5 ஆத்ம ஞானம். 6 ப்ராந்தம் - பொய்த்தோற்றம்.
7 எல்லா ஞானங்களும். 8 ஞானத்தன்மை வேறன்மையால்.
9 ஒற்றுமைக் குணத்தால் ஒன்றை வேறொன்ருக அறிதல்.

விஷய ஸஜாதீயாவயவ ரோத்பத்தி கிரஹித்தற்கன்றே அஸத்கிரஹணம் வருவது. ஸஜாதீயாவய ரோத்பத்தியை கிரஹிப்பதொரு ஞானம் க்ஷணிக பக்ஷத்து ஸம்பவியாமையில், ஆத்ம பிரதீதி ஸஹாந்தமாதலால் ஸஜாதீயாவ யாவ ரோத்பத்திக்கு கிரஹணமில்லை. உண்டெனினும் ஸஜாதீயாவ ரோத் பத்தியை கிரஹித்ததற்கே அஸத்கிரணம் வருவது. ஆத்ம பிரதீதிக்கு ஸஜா தீயாவ ரோத்பத்தி கிரஹண மின்மையில் அஸத்கிரஹணமில்லை யென்பதாம். ஸஜாதீயாவ ரோத்பத்தியாவது - ஒன்று போலப் பல சித்தங்கண் மேற் றோன்றுதல் அது க்ஷணிகபக்ஷத்து ஒரு ஞானத்து ஸம்பவியாமையில் ஆத்மபிர தீதி ஸஹாந்தமாதலால் ஆத்ம ஸத்பாவங் கொள்ளென்பது. அன்றியும், "யான் கண்டீர் நோன்பிகாள் முன்னையோர் பிறப்பின் முயலானே" னென்று சுகத னுக்குப் பிறந்த ஆத்மஞானம் ஸாந்தமோ அஸாந்தமோ? ஸாந்தமெனில் ஸாந்தி ஞானவானுகியவிவன் சொன்ன [1]வசனாத்வாதஷ்டு அயுக்தமாம். அஸாந்தமெனில் ஆத்ம ஸத்பாவமாமென்பது. இதனை யில்லையென்கின்ற நின் மித்யாத்வரோகந் தீர்த்தற்கரிதென்பது. (௯௯)

300 பொறியுணர்வின் புலமாய புற்கலமே யுயிரறியு
மறிவினு லறியாதே யாமாகா தெனவுரைப்பாய்
நெறியென்னை யிந்திரன்றன் நெடுநகரக் கவன்றேவி
குறியளோ நெடியளோ நூலொழிப்பாய் கூறிக்காண்.

(இ - ள்.) இந்திரிய ஞானத்துக்கு விஷயமாவது நிலாதிபுத்கலமே; ஜீவன் ஸ்ருதஞானத்துக்கும் கேவல ஞானத்துக்கும் விஷயமாதலிலதனை இந்திரியத் தாற் கண்டிலே மென்றில்லை யென்பாயாயில், சுவர்க்காதி [2]சத்பாவமும், இந்திர னதூஉம், தேவியாதூஉம் சத்பாவமும், அவர்களின் [3]உத்சேத முதலாயினவும் யாதினுற் பெற்றாய்? கருத்தாலோ? கண்ணாலோ? நுன் ஆகமத்தால் பெற்று யெனில், ஆத்ம திரவ்யமும் ஆகமத்தாற் பெற்றே மென்று கொள்ளென்பது. நுன்னுகமத்தில் ஜீவத்திரவ்யம் சொல்லப்பட்டதில்லை யெனினும் கோடல் வேண்டும். என்னை? முயன் முதலாகிய ஜனனங்களுட் பிறந்து தர்மோபதேசம் பண்ணியவனவனே கையறக்கெடாது புத்தத்வம் பெற்றுப் போதிமரத்தின் கீழிருந்தானென்பது, [4]க்ஷணிகவாதிபாதியாகிய நுன்னுகமத்து ஸம்பவியாதெனி னுங் கொண்டவாறுபோல வென்பது. (௯௪)

301 மெய்யளவிற் றுயிரென்று மெய்யகத் தடக்குரைத்தல்
பொய்யளவை குடங்குடத்திற் புகலருமை போலென்பாய்

1 ஒரே ஆத்மன் என்னும் கொள்கை தக்கதன்று.
2 சத்பாவம் - உண்மை. 3 உத்சேதம் - உயரம்.
4 க்ஷணிக வாதம் கூறுவது.

மெய்யளவின் மெய்யுணர்வை மெய்யகத் தடக்குரைத்தி
யையனையே யடங்கானென் றதுவாதன் வண்ணக்கால்.

இது, "உடம்பளவிற்றாயி" னொ...ற்று.

சரீர பிரமாணமாகிய ஜீவன் சரீரத்தடங்காது, குடங்குடத் தடங்காத வாறுபோல வெனின, சரீர பிரமாணமாகிய சரீரேந்திரிய ஞானம் சரீரத் தடங்குமென்று சொல்லி, ஆத்மனை யடங்கானென்றது ஆதன வண்ணக் கோடொக்கு மென்றவாறு. அதாவது, ஒரு மகாநகரத்து வாழ்வானொரு வணணக்கன் மரணமடைய விவனபுத்ரன அஃதறியாமையில் ராஜா, பிறனொரு வனை வண்ணக்கனாக்க, இறந்த வண்ணக்கன் புத்திரனும் [1]நிகாதி பரீக்ஷை அப்யஸிப்பனென்று ஒரு வண்ணக்கனருகு சென்றிருப்ப, அவனுழை யொரு வன் சில [2]காணங்கொடு வந்துகாட்ட, விவைசெல்லு மிவை செல்லாவென்று விடுவது கண்டு, யான் அப்யஸித்தேனென று தன் மாதாவுக்குச் சொல்லிக் கடையிலிருந்தானாக, வொருவனொரு காணங் கொடுவந்திடப் பார்த்து, 'இப்பு றஞ் செல்லுமிப்புறஞ் செல்லா' தெனறானதுவேபோலு மென்றவாறு. ஐயன் - ஆத்மன். (௩௩)

302 அருவாத லாலடங்கு முணர்வுதா னங்கென்னிற்
பெருவாத மங்கில்லை பெற்றியொன் றறியாத
திருவாள னுரைவண்ணந் தீட்டொட்டுக் கலப்பியாப்
புருவாய வுடம்பினோ டுணர்வினுக் குளதாமோ.

இதுவுமது.

ஸ்பரிசனேந்திரிய ஞானம் அமூர்த்தமாதலா லடங்குமெனிலெமக்கு மஃ தொக்கும்; பிணக்கில்லை. இனியுனக்கு அமூர்த்தமேயாகிய ஸ்பர்ஸனேந்திரிய விஞ்ஞானத்திற்கு மூர்த்தமாகிய சரீரத்தோடு தீண்டுதலு மொட்டுதலுங் கலத்த லும் யாத்தலுமாகிய கிரியைகள் கூடாமையினடக்கமில்லை யாம். எமக்கு கர்மபுத் கலபந்தனாகி [3]கதஞ்சித்து, மூர்த்தனாகிய ஆத்மாவினுக்கு சரீரத்தடங்குதல் கூடு மென்பது. அமூர்த்தரேயாகிய சித்தபரமேஷ்டிக்கே சரீர கர்மாதிசம்பந்த மில் லாத தென்றவாறு. கதஞ்சித்து மூர்த்தனாகிய ஜீவன் சரீரத்தடங்குமோ? வொரு குடத்துப்பிறிதொரு குடமடங்காத வாறுபோல வெனில், அடங்கும், இக்ஷு தண்டத்தில் இக்ஷுஜல மடங்கினவாறு போலவென்பது. (௩௪)

303 யாப்புண்டா லுழப்பதவ் வுயிரென்றேற் கதுவன்று
போய்ப்பிண்டத் துழப்புழப்பப் புலம்புவதென் செயலென்பா
யேப்புண்பட் டான்படனோ யேதிலர்க்காய்ச் சோ[4]மாகிச்
சாப்புண்பட் டேனென்று சாற்றுவதுன் றத்துவமோ.

---

1 நிகாதி - நாணயம் முதலியன. 2 காணம் - பொற்காசு.
3 கதஞ்சித்து - சிறிது. 4 ஆகி - ஆகமுள்ளான்; சோமாகி - சுக சரீரி.

இது, "பழுதையாற் பாம்புண்" டென்னுங் காதையாற் சொல்லுங்குற்ற நீக்கிற்று.

துக்காதியும், வியவஹாராதியும் காட்டுதற்கு யாப்புண்டா லுழப்பதவ்வுயி ரொன்றேனுக, சரீரங்கட்டுண்ண ஜீவன் வருந்துமென்று நீர் சொல்லுமது, எருதுகாலொடியக் கழுதை முடவினதொக்குமென்று நீ சொல்லிய குற்றம் சரீராத்மாக்கள் தீட்டொட்டுக் கலப்புவகையால் சம்பந்தித்து நிற்குமென்று சொல்லுதலி னெமக்காகாது. ரூபஸ்கந்தத்தியாப்பும் வேதனாஸ்கந்தத்தில் வேத னையும் சம்ஸ்காரஸ்கந்தத்து ஆக்ரோசமும் என்று சொல்லுகின்ற நுனக்கே யக்குற்றமாவதென்பது. நீ இவற்றை அத்யந்தம் பின்னமென்று சொல்லுதி யாதலினொருத்தன புண்பட, வொருத்தன் றுனபுற, வொருவன் கூப்பிடுமென் பதுன் றத்துவமல்லவோ வென்றவாறு. (௩௭)

304 உழப்[1]புழப்பச் [2]செய்கையா னுறுதுயருற் றேனென்றல்
பிழைப்பதுவாக் கருதாதே பெருவழியு ளிடறுதியா
லுழப்பறிவு குறிசெய்கை யொருவனவே யெனச்சொன்னார்க்
கிழிக்குவதிங் கில்லாமை யிதனாலே யறியென்றாள்.

இதுவுமது.

உருவுழப்பறிவு குறி செய்கைகளை அத்யந்த பின்னமாகக் கொண்ட நுனக்கே நீ சொன்ன குற்றம் வருவது. உழப்பு, அறிவு, குறி, செய்கை யென்னு நான்கினையும் ஆத்ம குணமாக்கி அந்த ஆத்மாவுக்குச் சரீரத்தோடு சம்பந்தஞ் சொல்வார்க்கு வாராதென்ப; புத்தி பண்ணுக வென்றவாறு. (௩௮)

305 அருவாயில் யாப்பில்லை யன்றாயிற் குறைபடூஉ
மிருவாறின் கூட்டமுந் தீதென்ப தெம்மிடமே
மருவாதா யுரைத்தனை மனங்கொள்ளா யதுவன்றிப்
பொருவாறென் றுரைத்தாலு மொருவாறு முணராயால்.

இது, "கலப்பாடி" யென்னுங் காதையாலும், "ஒரு வகையா" லென்னுங் காதையாலும் சொல்லப்பட்ட துஸ்தர்க்க நீக்கிற்று.

"ஆத்மா அரூபமாயில் ரூபமாகிய சரீராதிகளோடு யாப்பில்லை ஆகாசமு மன்று போல. ஆத்மா ரூபமாகில் [3]சேத்யபேத்யமாகிச் சரீர பிரமாணத்த தாதலிற் சரீரத்தடங்காதாம். இரண்டுமாமெனி லிருவகைக் குற்றமுமாம்" என்று நீ சொல்லிய குற்றம் ஏகாந்தம் அமூர்த்தமான சரீரேந்திரிய விக்ஞானம் சரீர பிர மாணமாகி, அது சரீரத்துள்ளடங்குமாறென் னென்று நின்னைக்கேட்புழி யாங் கள் சொல்லுவதாம். இனி, நல்லோரான் மருவப்படாதாகிய ஆத்ம சரீர சம்பந் தம், ஸ்பர்சன ஞானம் சரீரத்தடங்கினவாறுபோல கொள்ளென்று சொன்னது

---

1 உழப்பு - வேதனாஸ்கந்தம். 2 செய்கை - சம்ஸ்காரஸ்கந்தம்.

3 சேத்யம், பேத்யம் - வெட்டவும், பிரிக்கவும் தகுதியானது.

புத்திபண்ணாது சொன்னாய்; [1]இக்ஷுதண்ட பிரமாணத்ததாகியஜலம் இக்ஷுதண்டத் தடங்கினவாறுபோலக் கொள்க. அன்றியும், கதஞ்சித் மூர்த்தமென்றதொருபடியானு மறிகிலை யென்றவாறு.

கதஞ்சித் மூர்த்த ஜீவனென்பதற்குப் பொருள் - [2]இஷ்டகாதியும், சரீராதியும்போல மூர்த்தமென்றவாறு. அதிசூக்ஷ்மமாகிய கர்மபுத்கலங்களுடன் அநாதி வாலாற்றதாகிய சம்பந்தம் கருதிச் சொல்லப்பட்டது. அதற்காகச் சரீரத் தடங்காதாக வேண்டுவதில்லை; என்னை? மூர்த்த விசேஷமே யெனினும் பத்ரம் பத்ரத் தடங்காதாகவும், பத்ர பிரமாணத்ததாகிய ஸ்வரூபம் பத்திரத் தடங்கி நின்றதன்றே, அதுபோலவெனக் கொள்ளெனபது. கர்ம புத்கல சம்பந்தமின்றி அமூர்த்தனே யாகிய ஜீவனுக்குச் சரீராதியோடு சம்பந்தஞ் சொல்லுவார்க்கு நீ சொல்லிய குற்றமெல்லாம் வரும். (௫௧)

306 அறிவெழுந் தவலிக்கு மென்பதூஉ மதுவெழப்
பிறிதொன்று பேதுறுமங் கென்பதூஉம் பெரும்பேதாய்
குறிகொண்டா ருரையன்றாற் குற்றமே கொளலுறுவாய்
பொறிகொண்டு காற்றினையும் போகாமற் சிமிழாயோ.

இது, "எழும் [3]பயிற்றி" யென்னுங்காதையிற் சொல்லப்பட்ட குற்ற நீக்கும்.

ஞானாத்மாக்களை அத்யந்தம் பின்னமாகக் கொண்டு ஞானதுக்காதியை அறிய ஆத்மா சோகிக்கு மென்று நாங்கள் சொன்னோமாகச் சொல்லியதுன் பேதைமையாம். யாங்கள் [4]"உவயோகலக்ஷணோஜீவ" என்பதனால் ஞானநிஸ்வபாவனாக ஆத்மனைச் சொல்லுதுமென்பது. அஃதேயெனில், [5]ஞானவ்யதிரிக்தமாக ஆத்மனைக் காணேமாகில், ஞானமேயுளதாய் ஆத்மனில்லையென வமையுமெனின், அமையாது; என்னை? ஞானவ்யதிரிக்தமாக ஆத்மாவை வேண்டுவோர்க்கன்றே அறிவதாகிய ஞானத்தையே கொண்டு அறியாதாகி ஜடமாகிய ஜீவனைப் போக்கலாவது? ஆத்மனை ஞானத்திற் பிரித்தலாகாமையில் ஆத்மனைப் போக்குவதரிது. யாங்ஙனமெனில், கமன சீலத்ததாகிய காற்றினை கமன ஸ்வபாவத்தினீக்கி யொரு யந்திரத்தாற் கட்டலாமாகின், ஞான ஸ்வபாவனாகிய ஆத்மனை ஞானத்திற் பிரிக்கலாமென்பது. கமனாதி ஸ்வபாவமுங் காற்றுமுண்டானவாறுபோல ஞானமும் ஆத்மனு முண்டென்பது. இதன்றுணிவு, "நிலம் வலிது, நீர்துவளும், தீத்தெறும், காற்றுருளு"மெனக் காற்றினைச் சஞ்சல ஸ்வபாவத்ததாக வோதினன். சீத ஸ்பர்சனாதி ரூபத்தாலுங் காற்றுப் புலப்படுமெனில், [6]த்ருப்தி ரூபத்தாலும், விஷாத ரூபத்தாலும் யான்முன் முயலாயினேனென [7]அத்வித ரூபத்தாலும் ஜீவனும் புலப்படுமென்பது. எம்மை நின்றற் குற்றஞ் சொல்லலாவது காற்றைப் போகாமற் கட்டலாமாகிலென்றுமாம். ()

1 இக்ஷுதண்டம் - கரும்புக்கழி. 2 இஷ்டகாதி - செங்கல் முதலியன.
3 'பைத்தி', 'பத்தி' என்றும் பிரதிபேதங்களுள. 4 தத்வார்த்த சூத்ரம். 2-8.
5 ஞானவ்யதிரிக்தம் - ஞானத்தில் வேறான.
6 த்ருப்தி - விஷாதம் - எதிர்மறைச் சொற்கள். 7 அத்வித - அபேத.

307 பிறன்சுமவான் றானடவான் பெருவினையு முய்க்கில்லா
வறஞ்செய்தா னமருலகிற் செல்லும்வா யரிதென்று
புறம்புறம்பே சொல்லியெம் பொருணிகட்சி யறியாயாற்
கறங்குகளு மல்லனவுங் காற்றெறியத் திரியாவோ.

இது, "காலினற் சுமந்துய்ப்பா" னென்னுங் காதையாற் சொல்லப்பட்ட குற்ற நீக்கும்.

பிறனொருவன் சுமந்துய்ப்பானில்லை, தான் காலிலாமையி னடவான், வினையும் சரீரமாய் அசேதனமாகையிற் கொண்டுய்க்கமாட்டா; தர்மஞ் செய்தான் சுவர்க்கத்துச் செல்லுமாறென்னென்று எமது சித்தாந்த மறியாது சொல்லுவாய்: கறங்கும், சருகு முதலாயினவும் காற்றொடு கூடுதலிற் சலித்தலும் [1]தேசாந்தர தேசப்ராப்தியு முண்டாகியவாறு காண்கின்றா மன்றே? அதுபோல அசேதனமேயாகிலும் கர்ம சம்பந்தத்தால் ஜீவனுக்குத் திரிவும், தேசாந்தரதேசப் பிராப்தியுங் கொள்ளென்பது.

இது, நுவலா நுவற்சி; உபமானஞ் சொல்ல உபமேயந் தானே தோன்றும்;

[2]"பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்"

என்பது மெல்லியாரும் பலர் கூடின் வலியாரெனபது; அதுபோலக் கொள்க. கீழ்க் காற்று மேற்குக் கொண்டு போதலும், மேல்காற்றுக் கிழக்குக் கொண்டு போதலு முதலாயின போல அநுபூர்விகர்மம் நாலும் நான்கு கதிக்கண்ணும் ஜீவனை யுய்க்கு மென்றவாறு.

வெண்பா

"மருந்து மனச்சென் றிடமா தொருவ
னிருந்த விடத்திருளிற் செல்லுந்—திருந்து
துறக்கத் துயிரையத் தொல்லுயிர்கொண் டுய்த்துப்
பிறப்பிப்ப தற்கென்னே பேசு" (சுக)

308 மகனேயாய்ப் பிறப்பினு மாதுயரங் கேடில்லை
யவனாகா னாயினு மறஞ்செய்த லவமாகு
மெவனாகு மென்றெம திட்டமே யுரைத்தியா
னகைநாணி நீநின்னை நன்பகலே மறைக்கின்றாய்.

இது, "மக்கட் பண்பழியா"தென்னுங் காதையாற் சொல்லப்பட்ட குற்ற நீக்கிற்று.

அறஞ்செய்த மனுஷ்யனே ஸ்வர்க்கத்துச் செல்லின், மனுஷ்யகதி துக்கந் தீராதாம்; பிறனவனே யெனிற் செய்தவற்குப் பயனில்லையாமென்று ஏகாந்தஞ் செய்தவன் றானே பலம் பெறுமென்றும், பிறனே பலபோக்தாவென்றுஞ்

1 ஓரிடம்விட்டு வேறிடம் சேறல். 2 திருக்குறள் 475.

சொல்லுவார்க்கு யாங்கள் சொல்லுங் குற்றத்தை மறைத்து எங்கட்குச் சொன்னெனினு மது ஏகாந்த வாதியாகிய நினக்கே குற்றமென்று தோற்றுவிக்கும், [1]நவவ்ரணாதி தோஷங்களை மறைக்கவேண்டிப் போர்த்த போர்வைதானே யந்த தோஷ முண்மை தோற்றுவித்தவாறுபோல. என்னை யெனில், தர்மகர்த்தாவானவன் தத்க்ஷணத்தே கையற நசிக்கின்றானாதலிற் பல பர்யந்தத்தளவு நில்லா; நிற்கில் க்ஷண பங்கங் கெடுமாதலா லறஞ் செய்தாற்கு [2]பலபோக்திருத்துவ மில்லையாம். தத்ஸந்தானத்தே பலிக்குமெனில், ஸந்தானத்து பலிக்கையாவது. செய்தவன்றானே பெறுவனென்றவாறோ? பிறனே பெறுவானென்றவாறோ? தானே பெறின் க்ஷணபங்கங்கெடும்; பிறனே பெறில் செய்தவற்குப் பலமின்றிச் செய்யாதாற்குப் பலனுண்டாகை வேண்டி வரும். அன்றியும், க்ஷணபங்கம் தத்துவமாதலிற் செய்தவற்குப் பலனின்மை யறிந்து தர்மோபதேசஞ் செய்யும் சுகதன் வஞ்சகனுமாமென்பது. இனி, [3]அவிசலித நித்யமென்று கொள்வார்க்கு மறஞ் செய்தலும், பயன்றுய்த்தலுங் கூடாவாம்; கூடில் அவிசலித நித்யத்வங் கெடும். ஆதலின், [4]நித்யாநித்யாத்மகமாகும் வஸ்துவென்று கொள்ளும் [5]ஸ்யாத்வாதிகளாகிய வெங்களுக்கே மனுஷ்ய [6]பர்யாயம்விட்டு தேவ பர்யாயங் கொண்டு கர்மகாத்தாவாகிய ஜீவன் பலபோக்தாவாவ னெனபது பொருந்துவது, சுற்றிக்கொடு கிடந்து, கண்ட இரை நெடுங்கப்பற்றி விழுங்கிய பாம்புபோலுற்று மனிதனிற்செய்த வினைப்பயனைத் தேவரா யினிதி னுகரு முயி ரென்பது ஸ்யாத்வாதிகள் வசனமாதலினென்பது. (௪௨)

309 வீயுடம்பிட் டுயிர்சென்று வினையுடம்பு முளதாகத்
தாயுடம்பி னகத்துடம்பு தான்வைத்த தின்றியே
நீயுடம்பு பெற்றவா றுரையென்பாய் நிழல்போலும்
பேயுடம்பு பிறிதுடம்பிற் புகல்பேதாய் காணாயோ.

இது, "இயற்றிய வுடம்பிட்டா"......ற்று.

ரோகாதிகளாற் கெடுகின்ற [7]உபசய சரீரம்விட்டுக் கர்மமாகிய புத்கல சரீரத்துடனே சென்று, மாதாவின் சரீரத்துட் புக்கவாறென்? புக்கு, முன்பில்லாதோருடம்பு பெற்றவாறென்? என்று சொல்லுவாய்; பிசாசங்கள் ஸ்வசரீரதோடும் பிறருடைய சரீரத்துட் புகுவதுங் காணாயோ வென்றவாறு. (௪௩)

310 எப்பொருளு மொன்றொன்றிற் கிடங்கொடுத்த விரும்புண்ணீர
புக்கிடங்கொண் டடங்குதலே போலவுந் தந்தைதாய்

1 நகத்தில் புண் முதலிய. 2 பல போக்திருத்துவம் - பலன் நுகர்தல்.
3 அவிசலிதர் - அசைவற்ற.
4 நித்யா நித்யாத்மகம் - நித்ய, அநித்ய இருவகைத்தன்மை.
5 ஸ்யாத்வாதி - ஜைநர். 6 பர்யாயம் - பொருளின் திரிபு.
7 உபசய சரீரம் - வளர்க்கப்பெற்ற சரீரம்.

சுக்கிலமுஞ் சோணிதமுந் தழீஇச்சுதையு ணெய்யனைத்தா
யொத்துடம்பி னகத்தடங்கி யுடன்பெருகு மெனவுரைத்தாள்.

இதுவுமது.

ஒரு சரீரத்துப் புக்கு அடங்குமென்பது, இரும்புண் ணீர் புக்கடங்கின வாறுபோலவு மண்ணு ணீர் புக்கடங்கியவாறு போலவுங் கொள்வாயாக.

உம்மை - எச்சவும்மை யாதலின், மண்ணுணீரடங்குதலுங் கொள்ளப்பட்டது. மாதாவின் சரீரத்து, முன்னுடம்பில்லை யெனினும் மணலு நீருங்கூட வுரைத்த சாந்திற் கருப்புக் கட்டியாகிய நெய்யளவினவாறுபோல சுக்ல சோணிதங் கலந்து கூடியவழி யொருகால் ஜீவன் கர்மவசத்தால் அதனுட் சம்பந்தித்துச் சரீரத்துடன் வளர்ந்து பெருகும். கருப்புக்கட்டியோடு கூடிய சாந்தினியன்ற பிரதிமாதிகள் கருப்புக்கட்டி [1]நிஃஸாக்தியாகக் கெட்டவழி சிதிலமாவதுபோல ஜீவன் நீங்கிய சரீரமும் சிதிலமா மென்றவாறு. (சஃ)

311 செய்வினைதா னிற்பவே பயனெய்து மென்பதூஉ
மவ்வினை யறக்கெட்டா லதுவிளையு மென்பதூஉ
மிவ்விரண்டும் வேண்டுத லெமக்கில்லை யெடுத்துரைப்பி
னைவினையி னிலைதோற்ற நாசந்தா னுட்டுங்கால்.

இது, "வினைநிற்க பய" னென்னுங்.......ற்று.

வினை நிற்க, பயன்றோன்றில் ஜினாலயங் கற்பித்தார்க்கு அப்பொழுதே ஸ்வர்க்காதி வரவேண்டும்; வினையறக் கெடிற் பயனில்லையாம்; உளதெனில் முக்தனுக்கு முளதாதல் வேண்டுமென்று நீ சொல்லிய குற்றமெமக்கில்லையாம்: அவ்வாறு சொல்லோமாகையால். யாஞ்சொல்லுமாறு சொல்லில், [2]ஸ்திதியுத்பத்தி பிரளயாத்மகமாகப் பலிக்குமென்று வேண்டுமது. அஃதாவது, கர்மம் பந்தித்தாற் சிலநாட் பலங்கொடாது பின்பத் தன்மைவிட்டு யோக்கியமான கால மெல்லாம் பலன்கொடுத்துக் கழியுமென்பது. இதற்குத் திருஷ்டாந்தம் மேல் வரும் காதையாலறிக. (சரு)

312 பைம்பொன்செய் குடமழித்துப் பன்மணிசேர் முடிசெய்தாற்
செம்பொன்று னிலையுதலுஞ் சிதைவாக்க மவைபெறலு
நம்பொன்றிங் கிவைபோல நரர்தேவ ருயிர்களையும்
வம்பென்று கருதனீ வைகலும்யா முரையாமோ.

செம்பொனிற்றலு முடிதோன்றலுங் குடமழிதலுங்கண்டு கொள்க. என்னை யெனில், பலன்கொடாது பந்தித்து நின்ற தன்மை யழியப் பலனகொடுக்குந் தன்மையாகிய உதய ரூபந்தோன்ற இவ்வாறு [3]கர்ம ஸத்வ ரூபத்தானின்று பலித்தலாம். அக்கினி தொட்டபொழுதே சுடுவதுபோலவும், பால் நாவினிற்

1 நிஃஸாக்தி - சக்தியற்று. 2 ஸ்திதியுத்பத்தி - நிலை, உண்டாதல்.
3 கர்மஸத்வ ரூபம் - கர்ம சக்தி ரூபம்.

பட்டபொழுதே ருசிப்பதுபோலவும் கர்மமும் பந்தித்தபொழுதே பலிக்கவேண்டாவோ வெனின், வேண்டா; மருந்துண்டால் யோக்ய பிரகாரத்தாற் சில காலங் கழித்துப் பலித்தவாறுபோலக் கர்மமுஞ் சில் காலங்கழித்துப் பலிக்குமென்பது.

"மருந்துண்டாற் சில்பொழுது முன்போற் பலியா
திருந்து பயன்கொடுப்ப தேபோற்—பொருந்துவினை
செய்தாற் சிலநாள் கழிந்து வினைப்பயனை
யெய்து மெனவுரைப் [1]பார்க் கென்"

என்றாராகலின். (சச)

313 பெரும்பாவ மறத்துய்த்துப் பெறுதும்யாம் விடென்றே
மரும்பாவ காரிநீ யாவர்வா யதுகேட்டாய்
வரும்பாவ மெதிர்காத்து மன்னுந்தம் பழவினையு
மொருங்காக வுதிர்த்தக்கா லுயிர்த்தூய்மை விடென்றாள்.

இது, "தொல்லைக்கட் செய்யப்பட்ட"தென்னு......கிற்று.கர்ம பலமெல்லா நோாக அனுபவித்துப் பினபு வீடு பெறுதுமென்று யாஞ் சொல்லேம். யாஞ் சொல்லுமாறு - வருகின்ற கர்மங்களை குப்தி சமிதி முதலாயினவற்றாலடைத்து [2] தபஸ்ஸம்யமாதிகளால் நின்ற கர்மங்களை [3]நிர்ஜ்ஜரிப்பித்தால் ஆத்மாவின்கண் மலநீககத்தாற் பிறக்கின்ற சுத்தியே வீடாவதென்று சொல்லுவது. நீ யார் சொல்லக்கேட் டிவ்வாறு அபசித்தாந்தமாகச் சொல்லுகின்றனை என்றவாறு. அஃதேல், சன்மார்க்கானுஷ்டானத்தால் புண்யகர்மமா மன்றே; அதனால் சுகானுபவமும், கர்மபந்தமுமாதலினுமக்கு மோக்ஷமுளதாகாதெனில், சன்மார்க்கானுஷ்டானத்தால் வரும் புண்யம், பாபங்களையுங் கெடுத்துத் தானுங்கெடும், கலங்கற்றெண்ணீரிற் றேற்றாம்பாற் றேய்த்தாலது மண்ணோடுகூடத் தண்ணீரை விட்டு நீங்கினவாறுபோல வெனபது.

[4]"மருவிய வினைகள் மாற்ற மாசினைக் கழுவி வீட்டைத்
தருதலாற் புனித னுக்குந் தன்மையாற் புண்ணிய மாமே."

என்பதெம்மோத்தாகலி னெனபது. (சஎ)

வேறு

314 சொன்ன சூனைக் துறநதவற் றட்டன
பின்னை யுண்டல் பிழைப்புடைத் தென்றியா
னன்னு தல்லைத் துறந்தவ ளட்டது
தன்னை யுண்டுந் தவசியை யல்லையோ.

இது, "அடுப்புத் துடைப்ப" மெனனு......ற்று.

---

1 'பார்த்தென்' என்றும் பிரதிபேதம்.

2 தபஸ்ஸம்யமாதிகள் - வி. குறிப்பில் காண்க.

3 நிர்ஜஜரிப்பித்தால் - ஷை 4 மேரு மந்தாம - மச. ௬ரு.

அடுப்பு, துடைப்பம், உரல், அம்மி, நீர்ச்சாலென்னும் பஞ்சசூனைக் களைந்து, அவற்றால் முடிந்த சோறுண்டல் குற்றமெனில், நீ சித்திரத்துங் காண லாகாவென்ற ஸ்திரீகளான் முடிந்த சோற்றை யுண்டுந் தபஸ்வி யாகின்றாயல் லையோ வென்றவாறு.

கலப்பை துறந்து, கலப்பையால் வந்த சோறும், வலைதுறந்து, வலையான வந்த மீனூன் முதலாயினவும் சொல்லிக் கொள்க. (சஅ)

315 கொன்ற பாவங் கெடுகெனக் கைவிட்டு
நின்ற தென்பது நீயுரைப் பாயெனி
னன்று துன்னின தாதன்மை யாற்சொன்னாய்
சென்றும் வந்துந் தியானம் புகலென்றாள்.

இது, "துடிக்கும் வண்ணத்தின்மையிலுயிர்களை" என்று.........ற்று.

இந்திரிய விஷயமல்லாத ஜீவன்களைக்கொல்வதாகிய தொழில்களைச்செய்து கொன்று, அப்பாவங்கெட [1]பிரதிக் கிரமணஞ் சொல்லிப் [2]படிவ நிற்கின்றே மென்று நின் அக்ஞானத்தால் சொன்னாய்; அவச்யக நிமித்தமாக வுண்டாகிய ஞமனாஞமனத்தா லிடையிடைப்பட்ட தியானங் கைக்கொள்ளும்பொழுது, அவ வாறு செய்வதோர் கிரமமென்று கொள்ளென்பது,

தொழிலைத் துறந்து படிவநின்று தியானங் கொண்டால் மேல்வருவதாகிய கர்மம் வாராதொழிவ தல்லது, முனபு செய்து நின்ற கர்மங் கெடுமோ வெனிற் கெடும். என்னை?

"உண்டியால் வந்த துயரமது மேலை
யுண்டி யொழிய வொழிந்தாற்போற்—பண்டைத்
தொழிலால் முடிந்தவினை மேற்றொழிலை நீங்க
வொழியா தினைவா துகும்"

என்பதாகலின். அஃதேல் தியானமாவது அரகத் பரமேஸ்வரன் மேல் வைத்த சிந்தையன்றே; இதனாற் கர்மங்கெடுகின்றவா றென்னெனில், கருடனைபாவிக்க சர்ப்ப விஷம் போனவாறுபோல, கர்மங்களைக் கெடுத்தலிற் கர்மசத்துருவாகி நிர் மலனாகிய ஹநுவானை, ஞானஸ்வரூபனாகிய ஜீவன் ஞான வியாபாரமாகிய தியா னத்துவைக்கக் கர்மங்கள் கையறக் கெடுமென்பது. (சகூ)

316 இன்ப துன்ப மிருவினைக் காரிய
மென்ப வர்க்கென்னை யேதமுண் டென்றியேற்
பின்பு பேணுந் தவத்தினி னாகிய
துன்ப வர்க்குந் துதாங்கனத் தொன்றுமே.

இது, "துன்பந் தீவினையின் பய" னென்னு...........கிற்று.

1 பிரதிக்கிரமணம் - வி. குறிப்பில் காண்க.
2 படிவம் - தவவேடம்.

துன்பந் தீவினையின் பயனல்லவே யென்பதன் பொருளால் நீர் தபசுபண்ணுகின்றவழிக் காயக்லேசத்தால் வருந்துன்பம் பூர்வஜன்மத்து நீர் செய்த பாவப்பயனும்; அல்லவாயிற் றுன்பம் புண்யப் பயனும்; இனபம் பாவப்பயனுய்ப் பாவஞ் செய்தலிற் குற்றமில்லையா மெனில், தபசு பண்ணும் வழி யுண்டாகிய எமது துன்பம் நுமது [1]துதாங்கானுஷ்டானத்திற் றுன்பம் போலவாமென்று கொள்ளென்றவாறு.

அன்றியுந் துன்பமாவது சுகதன் புத்திபூர்வமாகத் தன்னைக் கொல்வேனெனனு முளத்தாற் பிளத்தன் முதலாயின செய்து துன்புறுகின்ற தன்றே? யாங்கள் பற்றறத்துறந்து வனப்பிரதேசத்து ஒருவழி நின்று, ஞானதியானங்கள் செய்வுழி வெயில் முதலாயினவற்றால் வரும் அல்பதுக்கம் நீதுக்கமென்று கொள்ளப்படாது; உண்பானுக்குச் சோறு சுட்டும், மருந்துண்பானுக்கு மருந்து கைத்தும், ஸ்நானம் பண்ணும்வழிக் குளிர்ந்தும், மணிமகுடஞ் சூடுவோனுக்குக் கனத்தும், கறிகளுண்பானுக்கு மிளகு முதலாயின வழன்று மிவ்வாறு வருவன துனபமென்று கொள்ளப்படாதவாறு போலவென்பது.

இனி அநசனுதியும், ரோகஹீதியால் உபவஸிப்பான்போல ஊணின்கண் வருவதாகிய அல்ப பாவங்களைப் பரிகரித்தற் பொருட்டும், ஷிக்ஷைபெறுதவன்று [2]ஸம்கிலேசம் வாராமலுக்கும், பொறி மிகாமற்கும் தம் சக்திக்குத்தக்க வாறு உபவஸிப்பார்கள்; துன்பம் வர வொரு காயக்லேசமுஞ் செய்யார். [3] "ஶக்தி தஸ்தபஸி" என்ப தோத்தாகலின். துன்புறக்காயக்லேசம் பண்ணுதல் தபஸ்ஸெனில், ஆஶ்ரமபேதம் வேண்டாம்; ஆஶ்ரமம் பல கண்டது துன்புறாமல் அனுஷ்டித்தற்கன்றே யென்பது. (௩0)

317 செய்த தீவினை சென்றின்ப மாக்குமென்
றிஃது ரைப்பவ ரீங்கில்லை யாயினும்
பொய்கள் சொல்லிப் புலைமக னேயெம்மை
வைதல் காரண மாநின்று வைதியோ.

இது "நின்ற துன்ப"மென்......ற்று.

தீவினைப் பயனுகிய துன்ப முழந்தால் நல்வினைப்பயனுகிய வின்பமாக்குமென்றியான் சொல்லுதற்குச் சானறுண்டோ? நீ எம்மை வைதற்பொருட்டியான் சொல்லாதன சொல்லி வைகின்றயோ வென்றவாறு. (௩௧)

318 இந்திரி யங்களை வென்றற் பொருட்டென
வந்து டம்பு வருத்தல் பழுதென்பாய்
[4]தந்து ரைத்த தலைமழி யாதிய
சிந்த னைக்கிவை செய்வதெ னேசொல்லாய்.

இது, "ஓம்பல் வேட்கை" யென்றும், "போக வேட்கை" யென்றும் சொல்லுகின்ற காதைகள்......கிற்று.

---

1 துதாங்கானுஷ்டானம் - துறவிக்குரிய ஒழுக்கம்.
2 ஸம்கிலேசம் - கஷ்டம். 3 சக்திக்குத் தக்க தபசு. 4. தந்து - நூல்.

இந்திரியங்களை ஜெயித்தன் முகத்தால் பிராணிகளை ரக்ஷித்தற் பொருட்டு, அநசனதியால் வருந்துதலிற் பயனில்லை ; என்னை ? பிராணிகளை யோம்பின தனுற் புண்யமுளதேனும் ஆத்மபீடையாற் பாபமாதலின் என்றிங்ஙனஞ்சொல்லு வாய், தலைசிரைத்தலே, புருவஞ் சிரைத்தலே, அத்யுஷ்ணமும், அதிஹாரமும், 1 அதிதூர்நாற்றமுமுள்ளதியுமாகிய சீவரம் போர்த்தலே,சர்வமும அசுசியென்று பாவித் துண்டலே, காமஸந்தாபமே, பொழுது செகுத்துண்டலே என்றிவை முதலா யின நினக்குப் பாவந்தாராதவாறுபோல 2அநசனாதியையும், புத்திபண் ; நுனக்கு 3 கலித்த தலைமழியாதி இந்திரிய ஜயார்த்தமன்றி ஞான நிகழ்ச்சிக்குக் காரணமோ சொல்லென்றவாறு.

இத்துணையானும், "ஓம்பல் வேட்கை" யென்னும் காதை 4நிரசிக்கப்பட் டது.

இன்னும் இந்திரிய ஜயார்த்தமாக 5அஸ்நாந விரதங்கொண்ட தல்லது யாங் கள் சரீரத்து மலமாக்கவேண்டுமென்று சொல்லியதூஉஞ் செய்ததூஉ மில்லை. ஆயினுமிவ்வாறு பொய் சொல்லி என் பெறுதி ? நீயேயன்றே சர்வமும் அசுசி யென்று ஹாவித்தும், மலகுகாதி மாம்ஸம் ஹக்ஷிக்கின்றாய் ; நுனக்கே நீசொல் லிய குற்றமாவ தென்றவாறு.

இத்துணையானும், "போக வேட்கை" யென்னுங்காதை நிரஸிக்கப் பட் டது. (௩௨)

319 புனைவு வேண்டலர் போக நுகர்விலர்
நினைவிற் கேயிடை கோளென நேர்தலா
வினைய வும்மல மேறினு மென்செய
மனைய தான்மக்கள் யாக்கையின் வண்ணமே.

இது, "வாயினல் வேட்கை களைவான்"...........கிற்று.

சுத்தி வேண்டுவதல்லது சரீர 6ஸம்ஸ்காரம் வேண்டலர் ; சரீர ஸ்திதி செய்வதல்லது ஹோமாநுஹபவனம் வேண்டலர் ; 7வைக்ஞானதியான விக்கி னங்களாக புத்தி பண்ணுதலின். இனி 8ஸ்வேதாதி சரீர மலங்கள் சரீரஸ்வபாவ மாதலிற் போக்குத லரிது. ஸ்வேதாதிபோக்காமல் வருவதோர் வருத்தமும்ஞான தியான பராகிய தபோதனர்க் கில்லை ; நீ வேண்டியவாறு வைகின்றாய் ; ஸ்வே தத்தால் சரீரத்துக்குத் தூளியேறி வருந்துன்ப மென்னென்றவாறு.

சுத்தி வேண்டுதலாவது - போஜன வேலையில் 9ஆஸ்ய சுத்தி செய்து, ஒழிந்த சுத்தி நிமித்தமாக கிரகஸ்தரால் கொடுக்கப்பட்ட குண்டிகா ஜலங்

1 அதிக துர்நாற்றமுள்ள. 2 அநசனதி - உண்ணு விரதம்.
3 கலித்த - கூறிய. 4 நிரஸித்தல் - நீக்கல்.
5 அஸ்நாந விரதம் - ஸ்நாநம் செய்யாதிருத்தல்.
6 ஸம்ஸ்காரம் - சுத்தி, அலங்காரம்.
7 வைக்ஞான தியானம - விசேஷ ஞானமும் தியானமும்.
8 ஸ்வேதாதி - வேர்வை முதலிய. 9 ஆஸ்யசுத்தி-வாயை சுத்தி செய்தல்.

கொள்வது. இனி, சரீர ஸம்ஸ்காரம் வேண்டாமை யாவது - பல்லுத் துடைத்தலே, அஞ்சன மெழுதுதலே, முகமினுக்குதலே, வாய் சிவப்பித்தலே எனறிவை முதலாயின வொழிதல். சரீரஸ்திதி செய்தலாவது - [1]யதாகாலம் கிரகஸ்தராற் கொடுக்கப்பட்ட ஆகார ஔஷதங்களை, [2]சோக பிரமோத மின்றிக் கோடல். ஹோமாநுஹவநம் வேண்டாமை யாவது - தாம்பூல ஸ்நானபானாதியே, தண்ணீர் [3]ஸம்ஸ்கரித்துக் குடித்தலே, [4]கப்பியந் தினறலே, பண்ணிகார மெப்பொழுது மெல்லுதலே, [5]புரோக்குப் பொடி கறிக்குதலே, [6]சயநாஸநத்திருத்தலே யென்றிவை முதலாயின வொழிதல். ஸ்வஹாவமலம் போக்குத லருமையாவது - ஸ்வஹாவமானது போகாதெனபது; அனறியும், [7]தந்ததாவநாதியால் ஆஸ்யசுத்தி பண்ணப்பட்டதே யெனினும் லோகத்தாரால் [8]நீசஜநநிஷித்தங் கைக்கொள்ளப்படாமையு மறிந்துகொள்க. பிறிதொருகா [9]வ்யாபாரத்துக்குப் போகா நினற மதஹஸ்திக்குப் பேன முதலாகிய[10]க்ஷுத்ரஜந்து பீடை தோன்றாதவாறுபோல ஞானத்தியான பராகிய தபோதனர்க்கு [11]ஸ்வேதாதியால் வருவதோர் பீடையின்றென்பது. ஆதலால், தபோதனர்க்கு உள்ளமழிய வருவதோர் வருத்தமின்றென்பது. (௫௫)

320 பாவந் துய்த்துமென் றேமல்ல துய்ப்பினு
மாவ தின்மைக் கரசுரைத தாயன்றே
யோவ லின்பந் தருமெ னுயிரென்பாய்
தேவ னாகித் திரிந்துதான் காட்டிக்காண்.

இது, "தீ வினையின் பயன்றுய்ப்ப" லென......ற்று.

தபசு பண்ணுதலைப் பாவபலன் றுய்க்கின்றேமெனறு நாங்கள் சொல்லியதற்குக் கரியுண்டோ? வினைத்தபொழுது பாவந் துய்க்கலாமாகில் முன் செய்ததோர் நல்வினையைக் குறித்து ராஜ்யம் பண்ணிக் காட்டுகவெனறு எம்மையடர்த்துச் சொன்னாய்; நீ இனபம் பயக்கும் வேடமென வேடமென்று சொல்லுவாய்; நின்னாற்றலால் நீ இன்பம் பயக்கும் வேடங் கொண்டாயாயின் நின்னாற்றலால் நரனாகித் துன்புற்றுக் காட்டு; அல்லையேல் தேவனாகித் திரிந்துதான் காட்டென்றவாறு.
(௫௬)

321 அழிவு காலத் தறத்தொடர்ப் பாடிலா
மொழியல் வேண்டுமென் றொற்றுமை தாங்கொளீஇ

---

1 தகுதியான காலம். 2 துக்கம்.
3 ஸம்ஸ்கரித்து - சுத்திசெய்து. 4 கப்பியம் - உண்ணயோக்கியமானது.
5 புரோக்குப் பொடி - ஒருவித வாசனை வஸ்து.
6 படுக்கை, ஆஸநம். 7 பல்சுத்தி செய்தல்.
8 கீழ்மக்களால் கழிக்கப்பட்டது. 9 கார்ய முயற்சி.
10 அல்ப ஜந்து. 11 வேர்வை முதலியன.

வழியுங் காட்டுமம் மாண்புடை யார்கண்மேற்
பழியிங் கிட்டுரைத் தாற்பய னென்னையோ.

இது, "கொல்லா வேட்கை" யென்............ற்று ; 1ஸல்லேகனையது மெய்ம்மை சொல்லிற்றுமாம்.

ஸல்லேகனையாவது—மரணகாலத்துச்சாகின்றேமென்று 2𑌸𑌂𑌕𑍍𑌲𑍇𑌶ஞ் 𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑌿யில் 𑌸𑌂𑌗 மெல்லா மொழியல் வேண்டுமென்று சொல்லிச சித்த சமாதானம் பண்ணுவித்துக் கலக்க நீக்கி, பரலோகமனை 3பாதேயமாகிய பஞ்சநமஸ்கார பரம மந்திரோபதேசம் பண்ணி ரத்னத்திரய ரூபமாகிய சன் மார்க்கங் கலங்காமை, 4𑌧𑌰𑍍𑌮𑍋𑌪𑌦𑍇𑌶𑌨𑌾𑌦𑌿களாற் காட்டுதல். அது செய்வாரைக், "கொல்லாவிரத முடையீர் நும்விரதத்துக்கு அழிவாக ஸல்லேகனை கொடா நின்றீர்" என்று பழி சொல்லுகின்றதனை லென்பெறுதி? பீலி பிடித்து 5𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌜𑌨𑍍𑌤𑍁வையும் ரக்ஷிக்கின்றார் தபோதனர் வதம் பண்ணுரென்றறி யாயோ வென்றவாறு.

6"𑌉𑌪𑌸𑌰𑍍𑌗𑍇 𑌦𑍁𑌰𑍍𑌭𑌿𑌕𑍍𑌷𑍇 𑌜𑌰𑌸𑌿 𑌰𑍁𑌜𑌾𑌯𑌾𑌂 𑌚 𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰𑍇
𑌧𑌰𑍍𑌮𑌾𑌯 𑌤𑌨𑍁𑌵𑌿𑌮𑍋𑌚𑌨𑌮𑌾𑌹𑍁𑌃 𑌸𑌲𑍍𑌲𑍇𑌖𑌨𑌾𑌮𑌾𑌰𑍍𑌯𑌾𑌃

"எல்லாப் படியும் விலக்கப் படாதெரியா
வில்ல மழியி லதனகத்தில்—நல்ல
பொருள்கொண்டு போவானபோற் சாம்போது பற்றற்
றருள்கொண்டு போத லறம்."

என்பனவற்றாலும் ஸல்லேகனை யாமா றறிந்து சொல்லிக்கொள்க. (௫௫)

322 சிந்தை னையினுந் தீவினை யாமென்பார்க்
கைந்திற் காம மமையுமென் றீரென்பாய்
சுந்த மாகச் சுவடறு வீரென
7வந்தி தோறும் புடைக்க வமையுமோ.

இது, "பூமைத்தாள்" என்............ற்று.

மனஸ்ஸால் நினைப்பினுங் காமம் மஹாபாபஹேது வென்பாரை யவ்வாறு பழி சொல்வதிற் சந்திதோறு நின்று சுத்த சூன்யமாகக் கெடுவாராகவென்று திட்டுதலே யமையுமென்றவாறு.

சுந்தம்—சுத்தம். (௫௬)

1 ஸல்லேகனை - சரீரத் தியாகம். 2 கஷ்டம்.
3 பாதேயம் - கட்டமுது. 4 தர்மோபதேசம்.
5 சிறு ஜந்து.
6 இரத்தின கரண்ட சிராவகாசாரம், 122. 7 அந்தி - சந்தி

323 பெண்ம கள்ளிர் [1]பிறகிட வுண்பவர்
கண்ணி னுவில்லுட் [2]கந்தியைக் காணினு
முண்ண லம்மெனும் மோத்துடை யார்களைத
தின்ன தாவைது தீவினை கோடியோ.

இது, "காமங்கூர்" ......ற்று.

ரிஷிகள் ஹிக்ஷைக்குப் புக்க கிருஹத்து [3]ஆர்யாங்கனையைக் காணின் முட்டுப்பாடு கொண்டு மீள்கவென்றும், அவர்களும் ரிஷிகளைக் கண்ட கிருஹத்து பிக்ஷை கொள்ளாது மீள்கவென்றும், ரிஷிகள் இருக்கும் பள்ளியுள் ஆர்யாங்கனைகளிருக்கப்பெறு ரென்றும், ஆர்யாங்கனைகளிருக்கும் பள்ளியுள் ரிஷிகள் இருக்கப்பெறுரென்றும், ரிஷிகள், ரிஷிகள்பாற்றுறக்க, ஆர்யாங்கனைகள் ஆரியாங்கனைகள்பாற்றுறக்கவென்றும், அத்யயனமு மிவ்வாறே செய்கவென்றும் விதிக்கின்ற பரமாகம முடையார் அவ்வாறே யின்றுகாறும் அநுஷ்டிக்கின்றுர்களை இவ்வாறு சொல்லி என்ன பாபஞ் செய்கின்று யென்றவாறு. (நீள)

324 பிள்ளை பெண்ணலி யாயினும் மாண்வயிற்
றுள்ள தேயென் ஞெருழுக்கங் கொடுத்தியாற்
பிள்ளை பெண்ணலி யன்மையை யாதினு
லுள்ளங் கொண்டிழ வூசி யுரைப்பதே.

இது, "துன்னவூசி" யென்......ற்று.

ஊசி பரிக்கிரகித்தலும், கெடுத்தலும், உபவஸித்தலு மெமக்கில்லை; உண்டென்று சொனஞயெனினும் பெருகுகின்ற ஆறு நீத்தோ நிலேயோ வென்றறியாமையில் தெப்பங் கொண்டிழிந்தவாறுபோலப் பாபம் வருவதோவென்று கருதி உபவஸித்தாரேனுங் குற்றமில்லை. நீ, நின்னுபாஸக ஸ்திரீ, ருஹி-ணியாகிய பொழுது ஆண்மேலிட்டுச் சீலங்கொடுத்தி; ருஹ-த்த[4] வ்ரஜெயாணென்றெவ்வாறறிந்தனை? பெண்ணு மலியு மாகாதென்பது பெற்றுயோ வென்று [5]ஸமான தோஷஞ் சொல்லுக; [6]"ஸமாநதோஷா ஐதோஷ:" என்பதனுல் யாவர்க்கு மொப்பது குற்றமாகாதென்பது.

துன்னவூசி யென்பதனுள், ஊசி கொடுத்தாற் றூண்டிலிடுவா ரெடுக்கின்றுரோ வென்று பட்டினி விடுவோமாகக் கொண்டு, துன்னனெடுத்தல் தபஸ்விகள் எடுத்தல் செய்யாரோ வென்றற்கண் வந்ததிக்காதை. இவ்வாறு [7]ஸம்கித்துக்கொண்டிருப்பது தகுவதோ வெனிற் றகும். தாமேறட்டுக் கொண்ட; விர

---

1 பிறகிட - செல்ல. 2 கந்தி - தவப்பெண்.
3 ஆர்யாங்கனை-தவப்பெண். 4 கர்ப்பத்துப்ரஜை-கர்ப்பத்திலுள்ள ஜீவன்.
5 ஸமான தோஷம் - வாதி பிரதி வாதிக்கு சமான தோஷம்.
6 சமான தோஷம் இருந்தழி குற்றமன்று.
7 சந்தேகிப்பது.

தங் [1]கதுவாய்படாம லவ்வாறு பரிஹ்ருஹிப்பாகளாதலினது குற்றமுமன்று. இல்லறத்தினின்றுந்துறவறத்துப் போந்து நிற்பது பாபம் புகுதாமை வாத்தித்தற கன்றே; ஒன்றைக் காப்பனென றேறட்டுககொண்டானவ்வாறு கடைப்பிடித்துக் காண்ப துலகத்துக்காண்கின்றதன்றே! ஆதலாலது குற்றமன்றென்பது. ()

325 மௌனம் பொய்யஞ்சிக் கொண்டவன் மெய்யுரைக்
கூனை தோன்றி லுரைத்தன னென்றியேற்
றூனம் யாவர்க்குஞ் செய்வது நன்றென்பா
யீன மென்னோ தெருச்சுமக் கிற்றியோ.

இது, "பொய்யையஞ்சி யுரையாமை".........ற்று.

மௌனம் பொய்யுரையஞ்சிக் கொண்டேமென்று சொல்லுவதில்லை; உண்டெனினு மெய்யுரைக்கழிவு தோன்றினவழி மௌனம் விடவேண்டுவதுமில்லை; எனனை? சுகதன, [2]வராஹாநம் யாவர்க்கும் பண்ணவேணுமெனறு மேற்கொண்டு செல்வுழியொருவன காலிற் செருப்புக் கையிற்கொணடு நீரிலிழியமாட்டாது வருந்துகின்றானைக்கண்டு,அவன் காற்செருப்புத்தன்கையில் வாங்கியவனுக்குத் தோட்கொடுத்துப்போவான், கிருபைக் கழிவாக வொருசண்டாளன் எருச்சுமந்து வருகின்றானைககண்டு தோள்பிடித்துக்கொண்டு போவானை விடாது போயவழிக் குற்றமில்லாதவாறுபோல, யாமேறட்டுக்கொண்ட மௌந விரதம் விடா அுற்றலிற் குற்றமின்மையினென்பது. இனி, மௌநம் விட்டாலும் வருவதோர் குற்றமில்லை; தோள்பிடித்துப் போவானைவிட்டு எருச்சுமந்தாலும் சுகதனுக்குக் குற்றமில்லாதவாறுபோல வென்பது. ஆதலாலிங்கென்ன குற்றம் உருமென்று நினைந்திது சொல்லினை யென்றவாறு. (ருக)

326 உய்யக் கொள்வ னெனச்சொல்லி யுள்ளத்தாற்
கையிற் காட்டல் கரவுள தாமெனிற்
பொய்சி தைத்ததென் சொல்லிப் பெயர்ந்துரை
பொய்யு ரைத்தில னென்றல் பொருந்துமோ.

இது, "இவவிடத்தோரலைக் கோட்சிறை"யென்னுங் காதையாலும, "இந்நிலத்துப் புகுந்தில"னென......கு......ற்று.

ஒருத்தனை யவ்வாறு ரக்ஷிக்க வேண்டினுல் எமக்குக் கை காட்டிய நிலங் காட்டியும் வஞ்சனையாற் சொல்ல வேண்டுவதில்லை; என்னை?

[3]"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்."

எனபது எம்மோத்தாதலாற் [4]ப்ராணிவ்யாபாத நிவ்ருத்யர்த்தமாகப் பொய்யுரைத்தலுமாவதாதலினென்பது. நன்மைவேண்டிப் பொய் சொல்வதாயினன்மை

---

1 கதுவாய் - குற்றம். 2 மேலான தானம்.

3 திருக்குறள் - வாய்மை - 2. 4 பிராணிகளுக்குப் பீடை நீக்குமாறு.

வேண்டிக் கொலை முதலாயினவுமாமோவெனில், நன்மையாவது, ஜீவன்கட்குப் பீடை புகுதாமல் வர்த்தித்தலாதலில், கொலை முதலாயின ஜீவன்கட்கு பீடா நிமித்தமாதலினுகாதென்பது. காம மாடுதலும் [1]பஹுஜீவவாதமென்ப தெம் மோத்தினுட் கண்டு கொள்க. இனி, நீ, [2]"குறளையுரைசாவன் கொதித் தெழுமினென்றான்" என்பதனுற் குறளை சொல்லலாகா தென்றனை யனறே? குறளையின் மெய்க்குறளை சொல்லுதற்கட் குற்றமெனென்றார்க்கு, மெய்யே யெனினும் பிராணிகளுக்குத் தீங்கு பயக்குமென் ருெழிந்தே னெனில், பொய்யெனினும் பிராணிகட்கு நன்கு பயத்தலிற் சொன்னேமென்று கொள்ளென்பது. ஒருவன் பிறரறியாமல் ஸம்஘த்தாரறியக் களவுகண்டனன்; அவனைக் கோத் தொழின் மாக்கள் ஸம்஘த்தாரைக் கேட்டுத் தக்கவாறு செய்து மெனக் கேட்ட வழிக் களவுகண்டானெனிற் குறளையாம்; இல்லையெனிற் பொய் யாம்; வாளாவிருப்பினருளிலாம்; இவன் சுத்தனென்று சொல்லாமையிலவனைப் பீடிப்பாராதலின் பொய்யே யெனினு மருணிமித்தமாக வவன் சுத்தனென்று சொல்லுவதே சாலுமாயி னெமக்குமஃதொக்கு மென்று கொள்ளென்பது. இனி நின் மதத்தாலும் பொய்யுங் குறளையு மறுத்தமையிற் பிராணிகளுக்குத் தீங்குவரச் சொல்லுஞ்சொற் பாபகாரண மென்பதாயிற் பிராணிகளுக்குத் தீமை வாராமை சொல்லும் வார்த்தை பாப காரணமன்றென்பதா மாகலி னன்மை பயக கச் சொல்லும் பொய் குற்றமனறென்பது.

அது நிற்க, நின்னுபாஸகனுக்குக் [3]கறி முதலாயினவற்றை யொடித்துங் கிள ளியுந் தள்ளியும் பெயர்த்து வைத்துஞ் சிதைத்துக் கப்பியமென்று சொல்லென் றுபதேசித்து நின்வயிறு வளர்க்கின்ற வஞ்சனை விசாரியாது ஜீவரக்ஷார்த்தமாகச் சொல்லிய வார்த்தையில் வஞ்சனை யுளதென்று சொல்லியது நின் அக்ஞானமே யென்று கொள்ளென்பது. (௩௦)

வேறு

327 கொல்வினை யஞ்சிப் புலால்குற்ற மென்பதை
நல்வினை யேயென நாட்டினு மாமென்னை
வில்வினை யேற்றிறும் மெய்ம்மை கொளிஇயது
சொல்வினை யாதலிற் சொல்லுவன் யானே.

இது, "கோறலையஞ்சி" யென்று ......ற்று.

கொலை பரிகரித்தற்காகப் புலால் குற்றமென்று தவிர்க்கை, நின்னுகமத்து [4]கஹோரஸம்ஹாஜிக்கவென்று சொனனமையில் ஆகம விரோதமா [5]யகுசல மாமே யெனினுங் குசலமே யென்று நின்னுற் கைக்கொள்ளப்படும்; என்னை? விற்பிடித்து நாணேறடுகை அகுசலமே யெனினுங் கநகாதன் தர்மங் கோடற் காக, சுகதனுற் செய்யப்பட்டது குசலமாகக் கொண்டவாறு போல வென்பது.

---

1 அனேக ஜீவன்களுக்குக் கேடு. 2 குறளை - கோள், தீமை.
3 கறி - மாம்சம். 4 தின்ன யோக்கியமான மாம்சம்.
5 அ குசலம் - தீயொழுக்கம்.

அஃதாவது கநகாதன் என்பானோர் அரசன் வெறியாற்றருக்கி, தர்மோப தேசஞ் செய்யச் சென்ற புத்தனுரை அவமதித்திருப்ப, மந்திரிகள், மிக்கா ரொருத்தான்றே வவனென்று புத்தனுருடைய மகிமை சொல்ல, மிக்கானெனில் யானேறடும் வில்லை யேறடுகவென, புத்தனுரஃதேறட்டு அவனைத் தார்மிகனுக் கினு னென்பது.

சுஞு மாம்ஸமாவது-த்ரிஷண்ணவகோடி விசுத்தமானமாம்ஸம். த்ரிகோடி யாவது - செய்தல், செய்வித்தல், உடன்படுதல். ஷட்கோடியாவது - இவற் றோடு தனக்குக் கொல்வது காண்டல், கேட்டல், ஐயுறுதல். நவகோடியாவது - இவ்வாறுடனும் அவைமேலாசையாகிய வேண்டுதலும், மிகைபடத்தின்றலாகிய விரும்புதலும், இனிமை சொல்லுதலாகிய புகழ்தலுமென்னு மூன்றுங் கூட்ட வாம். இந்த ஒன்பதி லொன்று வரினும் அகல்பிய மாம்ஸம்; அது தினனப்படா தென்பது. இவ்வொன்பது தோஷமுநீங்க மாம்ஸ முண்ணவேணு மென்று சொல்லுதலின் மாம்ஸந்தின்பவர்க்குக் கொலைப்பாவ முண்டென்பது போந்தது; போதாக் காரணுற்பாவங் கொள்ளப்பட்டதாம்; விரும்பித் தின்றன் முதலாயின வற்றாற் கொலைபிறக்கு மென்று தவிர்தலி னென்பது. ஒன்பது தோஷமுமொழி யத்தின்றல் யாவர்க்கும் அரிது. என்னை? ஐயுறவொழிதன் முதலாயின கூடா மையி னென்பது. எவ்வழித் தின்னினும் ஐயுறுதல் கூடாவா றென்னேவென் பது. (சுக)

328 புத்தர்கட் பத்தியிற் போதி மரந்தொழிற்
புத்தர்கட் பத்தரை யேதொழு புத்தர்கட்
பத்தியை யாக்கு மதுவெனிற் [1](பற்றிய)
[2]பத்தங் குடைசெருப் புந்தொழு பாவீ.

இதுவுமது.

(இ - ள்.) அருளறிவு துறவில்லாத போதிமரத்தை நீ தொழுத லென்னை யென்றார்க்கு, போதிமரத்தின்கீழ் புத்தனுரிருத்தலின, அவர்மேலுள்ள பத்தி யால் தொழுதேனெனில், கொலையஞ்சினுயாயிற் கொலையைத்துற; ஊன் துற வாதொழி யென்று நீ யெம்மைச் சொல்லியவாறுபோல புத்தபக்தியாற் போதி விருக்ஷந் தொழுதனையாயில் அருண்முதலாயின வில்லாத விருக்ஷத்தினைத்தொ ழாது இவையுடைய புத்தர் தம்மையே தொழுவாயாக வென்றார்க் கருண்முதலா யின வில்லையெனினு மவையுடைய சுகதனைஸ்மரித்துப் பக்தி பண்ணுதற்குக் காரணமாய்த் தொழப்படுமெனில், எமக்கு வேதனை முதலாயினவில்லை யெனி னும் பிராணி சரீரமாகியமாம்ஸம் அவையுடைய ஜீவனை [3]அநுஸ்மரித்துக் கிருபை பண்ணுதற்குக் காரணமாதலிற் றுறக்கப்படுமென்று கொள்ளென்பது. புத்தர் மேல் பக்திக்குக் காரணமாகிய போதிவிருக்ஷம் நின்னுல் வெட்டிச் சுடப்

1 விடுபட்டதற்குப் புதிதாகச் சேர்க்கப்பட்டது.
2 பத்தம் - உணவு; இங்கதனை ஏற்றற்குரிய பாத்திரத்தை யுணர்த்திற்று.
3 அநுஸ்மரித்து - நினைவூட்டி.

படாது [1]புத்தனுபாதி தொழப்பட்டவாறுபோல ஜீவன்மேற் கிருபை பண்ணு தற்குக் காரணமாகிய மாம்ஸமும்[2] ஜீவ சரீரத்தோபாதி துறக்கப்படு மென்று கொள்ளென்பது.

இனி, கொலைக்குக் காரணமென்று மாம்ஸம் துறந்தாமெனில், நம்மாலுண்ணப்படுவதாகிய சோறு முதலாயினவும் ஏகேந்திரிய ஜீவஹிம்ஸைக்குக் காரணமாதலினவற்றையுந் துறப்பீராமி னென்பாயாயின், நீயும் புத்த பக்தியால் போதி மரம்போலும் போதிமரந் தொழுகின்றனையாயி லவனிருந்த மண்டைபோலு மண்டையையும்,அவனிட்ட செருப்புப்போலுஞ்செருப்பினையுங் குடைபோலுங் குடையினையுந் தொழுக வென, அவை போதிமரம்போல புத்த பக்திக்குக் காரணமன்றென்பாயாயின், யாமுண்ணுஞ் சோறு முதலாயினவு நீயுண்ணுமாம்ஸமுதலாயினபோலக் கொலைக்காரணமனறென்று கொள்ளென்பது. என்னை? ஜீவசரீரமாகிய மாம்ஸமுண்டல் ஜீவஹத்யைக்குக் காரணமானவாறுபோல ஏகேந்திரிய சரீர விசேஷமாகிய சோறுண்டலில் ஏகேந்திரிய வதம் பிறவாதோவெனிற் பிறவாது. என்னை? மரங்கடா மிருவகைய; புத்தமாதாவைப்போல [3] ஹலவ்யபேந்தத்துத் தாமே நசிப்பனவும், பசுப்பாற் கறந்தாற்போல [4]சுஶ்ரூஷையாலொழுக நின்று பலிப்பனவுமென.அவ்விருவகைமரங்களது [5]ஹலஂஹஂஜிப்போமாகியவெமக்கு அவற்றின் கொலையொழிய ஹஂஜிக்கலாமென்பது. அஃதேயெனின், இவ்வாறே [6]ஸ்வயம்ம்ருதசரீர மாம்ஸமும், ஸ்வயமேவ பதிதமான ரக்த மாம்ஸமு முண்ணலாகுமே யெனின், அவ்வாறு வந்த மாம்ஸமுண்ட ஜீவன்களுக்குத் தத்தத் ஜீவவதங்களிலே புத்தி [7]ப்ரவ்ருத்திக்கு மென்பதற்கு லோகமே சாக்ஷி. [8]ஸ்வயமேவ [9]பதிதமாகியஹலநுகர்ந்தான் கொம்பில் நிற்கின்ற[10]ஹலத்தை யறுத்து நுகர விச்சிக்கு மாதலின்.

இனி, யுக்தமாம்ஸ முதலியன தின்றல் குணமில் ஜீவன்களுக்குக் கொலையினையுங் குணமுடைய ஜீவன்களுக்குக் கொலைமே லுள்ளத்தினையும் பிறப்பிக்குமாறுபோல விருக்ஷபலமாகிய விருவகையும் புஜித்தவன் விருக்ஷங்களை வெட்ட நினையாமையி னவை ஏகேந்திரியவத நிமித்தமாகா வென்பது.

இக்காதை நுவலா நுவற்சி வகையாற் கூறியது. அவன் காரணற்புண்ணியங்கொள்ளுமாறு காட்டிக் காரணற் பாபதூஷண நீக்கியவாறு. காரணற்புண்ணியங்கோடலாவது - புண்ணியத்துக்குக் காரணமாகிய புத்தபக்திக்குக் காரண மென்று போதிவிருக்ஷந் தொழுதல். பாபத்துக்குக் காரணமாகிய கொலைக்குக் காரணமாகிய மாம்ஸமுண்டல் காரணற்பாபமாம். காரணற்புண்ணியங் கைக்கொண்ட சாக்கியனற் பாபங்கருதாமை, "ஊருக்குக்குன்ற மிருகாதம் போதுமக் குன்றத்துக் கினறாமொரு காதமெனல்" என்பதனானுந் தெளிக. (கூஉ)

---

1 புத்தனுபாதி - புத்த சம்பந்தமானது.
2 ஜீவசரீரத்தோபாதி - ஜீவசரீர சம்பந்தமானது.
3 பலனீன்றபின். 4 உபசாரத் தொழில். 5 பழம். 6 தானே மரித்த.
7 செலுத்தும். 8 தானே. 9 விழுந்த. 10 பழத்தை.

329 ஆங்கவர் போல வருள்செய் பவர்களை
நீங்குமி னென்பது நீர்மை யெனினது
வீங்கிதற் செய்தா விடினிலை போதிக்கும்
தீங்கே நமர்செய்கை தேரமற் றென்றாள்.

இதுவும், புத்தபக்தி நிமித்தமாக போதிவிருக்ஷம் தொழுமாறுபோல அருணிமித்தமாக மாம்ஸமுண்டல் ஒழிந்தோ மதுகொள்ளா யெனில் போதிவிருக்ஷந் தொழுதலு மொழி என்றவாறு. (௩௨௮)

330 பல்லுடை யான்றன்னைப் பண்டுகண் டேத்தினுந்
தொல்லுரை கேட்டுறப் பேதொழு தாலும்பி
னல்வினை யாமென்று நாட்டுதி யாய்விடிற்
கொல்வதூஉ தின்பதுங் குற்றமற் றென்னாய்.

இது, "கொன்று தின்று" னென்னுங் காதையாற் சொல்லிய குற்ற நீக்கிற்று.

ஈழமடிப்படுத்த [1]தாடையாழ்வா ரென்னும் போதிசத்வரை அவருள்ள காலத்து வணங்கினார்க்கும், பின்பு அவரது பல்லினைத் தொழுதார்க்கும் புண்ணியமுண்டாயில், உயிரோடு கூடிய ஜீவ சரீரத்தை அழிப்பார்க்கும் பாபமுண்டெனறு கொள்ளென்பது. [2]தாதுவினுக்குமிவ்வாறு சொல்லிக்கொள்க. அஃதாவது, செத்தது மண்ணோடொக்குமென்று பிராணி சரீரஞ் சுட்டுத் தின்பார்க்குப்பாபமும், அவை அறப்பார்க்குப் புண்ணியமு மில்லையெனி னவ்வாறாகிய தாதுவைச் சுட்டார்க்குப் பாபமும், தொழுதார்க்குப் புண்ணியமுமில்லை யென்று கொள்ளென்பது.

ஈழமடிப்படுத்தலாவது - நெடிய பல்லுடையாளொரு [3]ஸௌகதன் ஈழத்து ஸிம்ஹள மஹாராஜனைக் கண்டு எனக்குத் தோலிடுகைக்கு இடஞ் சிறிது தர வேண்டு மென்றிரந்து தனது [4]ரித்தியாற் றோலை யீழமுள்ள அளவும் விரித்து, ஈழத்தைத் தனதாக்கி என் க்ஷேத்திரத் திருப்பாரென் தர்மங் கொண்டிருக்க வென்று தர்மோபதேசம் பண்ணினானென்பது. (௩௨௯)

331 ஏத்தின ரேத்தூக வென்றிறை போல்வன
பாத்தில பைம்பொற் படிமைசெய் தாலவை
யேத்துநர் பெய்தவ ரெய்துவ நன்றெனில்
வீத்தவர் தின்பவர் வெவ்வினைப் பட்டார்.

இதுவுமது.

---

1 தாடையாழ்வார் - பௌத்த ஆசிரியர்.

2 தாது - சரீரத்தின் மூல தாது; எலும்பு முதலியன.

3 ஸௌகதன் - பௌத்தன். 4 ரித்தி - தவத்தால் பெறும் சக்தி.

புத்த பிரதிமை செய்தார்க்கு மது கண்டுபேக்ஷியாது [1]ஸத்கரித்து பூஜனை செய்து தொழுதார்க்கும் புண்யமுண்டெனில், கொன்று மாம்ஸமாக்கினோர்க்கு மது உபேக்ஷியாது ஸத்கரிதுக் கொண்டார்க்கும் பாபமுண்டென்று கொள்ளைபது. ஏத்துதலென்பது - உவகையோடு ஸத்கரித்தல். (௬௫)

332 வெற்றுடம் புண்பதும் வேலின் விளிந்தவை
தெற்றென வுண்பதுந் தீமை தருமென்னை
யொற்றைநின் றூடுணை யூறு படுத்தவட்
குற்றமன் றேசென்று கூடுவ தேடா.

இதுவுமது.

(இ - ள்) கொன்று வந்த வூன்றின்பார்க்குக் கொலைப்பாவம் வருக, படுமுடைதின்பார்க்குக் குற்றமென்றோ வெனி னிருவர்க்குங் குற்றமாம். எனனை? துணைவனைக் கொன்று விதவையை ஸ்வீகரிப்பார்க்கும் பரஸ்திரீ [2]தோஷ கமனமுண்டாகி, [3]ஸ்வயமேவ விதவையாயினளை ஸ்வீகரித்தார்க்கும் பரஸ்திரீ தோஷம் வருமாறு போல வென்பது. அன்றியும் பரஸ்திரீ மேலுண்டாகிய வேட்கையாலன்றே பாவதம் பண்ணி யவளை ஸ்வீகரித்தது. அவவாறே விதவையைக் காதலித்து ஸ்வீகரிப்பார்க்கும் [4]தத்பர்த்ரு மரணத்துக் குடம்பாடாமதுபோலப் படுமுடைதின்பார்க்கும் ஜீவன்களது மரணத்திலே புத்திபிறக்கு மென்பது, உகுநெற் பொறுக்கியுண்பான் நெல்லுக வேண்டின வாறுபோல.

"உகுநெற் பலகூட்டி யுண்டி முடிப்பான்
மிகநெல் லுதிர்வதனை வேண்டுந்—தகவுடையோ
ருண்ணுப் படுமுடையை யுண்பா னுயிர்மரண
மெண்ணாத வாறுண்டோ விங்கு"

என்பதாகலின். (௬௬)

333 பிடிப்பது பீலி பிறவுயி ரோம்பி
முடிப்ப தருளது போன்முடை தின்று
கடிப்ப தெலும்பதன் காரண மேனி
தடிப்பத லாலரு டானுனக் குண்டோ.

இது, "வாலிதினானுண் "..........ற்று.

பீலி பிடித்தல் பிராணிகளை ரக்ஷித்தருண்முடித்தல் காரணமாமதுபோல எலும்பு கடித்தல், உடம்பு தடித்தல் காரணமல்லது அருள் காரணமுண்டோ வென்றவாறு.

காரணமென்பதனை யிருவழியுங் கூட்டுக. வயிறு வாடாமை நிமித்தமாக மாம்சம் உண்கின்றாய்; நின் மாம்ச பக்ஷணங் கொலைக்குக் காரணமாவதல்ல தயி

1 ஸத்கரித்து - ஆதரித்து.

2 பரஸ்திரீதோஷ கமனம் - அன்னிய பெண்ணை சேரும் குற்றம்.

3 ஸ்வயமேவ - தானே. 4 தத்பர்த்ரு - அவள் கணவன்.

ரோம்பி அருண்முடித்த னிமித்தமாகப் பிடிக்கின்ற பீலி கொலைக்குக் காரணமாமோ வென்பது போந்தது. எறும்பு முதலான [1]க்ஷுத்ர ஜீவ மரணத்தினைப் பரிகரிப்பான்வேண்டிப் பீலிபிடிப்பார்; மயில் சாவப் பீலி பிடியாரென்பது விளங்கும். (௬௭)

334 ஆட்டொரு கான்மயிற் பீலியுகு மவை
ஈட்டுதல் போலுதிர்ந் துக்க விறைச்சியைக்
காட்டியுந் தின்னுங் கருத்திலை நீதசை
வேட்டுநின் றேயழைத தீவினை யாளோ.

இது, "புய்ந்துக்க பீலி" என்று......ற்று.

[2]வத்ஸரத்துக்கு ஒருகால் மயில்கள் விளையாடி வீழவிடத் தானே வீழ்ந்த பீலிகளை யாமேயெடுத் தயிரோம்புதும்; எனனை?

"செந்தாள வாகிச் சிவந்து புடையொதுங்கி
வந்தாற் கொலையென்று வைத்திடுவர்—தந்தாள்
வளைபோல்வ முல்லை முகைபோல்வ கொள்வர்
விளையாடி வீழ்ந்தனவென் றோர்ந்து."

என்பதாகலின். இவ்வாறே, தானே விழு மாம்ச முள்ளதென்று சமானஞ்சொல் வினை யதுவுண்டேனு மது தின்றார்க்குக் கொலைமேலுள்ளம் பிறப்பிக்குமாதலிற் பீலி யதனொடொவ்வாது, நீ விழுந்தமாம்சம் பொறுக்கித் தின்றாயுமல்லை; காலனுரை யழைத்துக்கொண்டு தின்றி என்றவாறே.

இனி, "நைந்துக்க மாமுதிர்ந்தற்ற விறைச்சிகள், சந்திக்கின் றின்பது தத்துவமா" மென்று நீயே கூறினமையினொழிந்த மாம்ச முண்பார்க்குக் கொலைப் பாவமுளதென்ப திசைந்தாயாகுதி யெனபது. இனி, மாம்சநிமித்தமாக மயில் கொனரார் பீலியுங்கொடு வந்து விற்பதல்லது பீலிநிமித்தமாகக் கொல்வாருமில்லை யென்பது. (௬௮)

335 மானொடு மீனில மன்னு முடம்பட
வூனடு வாரிடு வாரை யொளித்தலிற்
றானடை யாவினை யாமென்ற தத்துவந்
தீனிடை நீபட்ட தீச்செய்கை யென்றே.

இது, "ஊன் விற்ப கொள்வ"......ற்று.

தின்பவன் உண்மை கொலைக்குக் காரணமாயினாற்போல, மான் முதலாயினவற்றுண்மை கொலைக்குக் காரணமன்று. கையகப்பட்ட ஜீவனைப் பக்ஷிக்க வேணுமென்றுள்ளம் பிறந்தபொழுது அதற்குக் கொலை பிறந்தமையிற் றின்றல் கொலைக்குக் காரணமாம்; உண்மை கொலைக்குக் காரணமாகாதென்பது, ஸம்வத்தார்க்கும், எருது முதலாயினவற்றுக்கும் உண்மையுண்டேயெனினுந் தின்பா

[1] க்ஷுத்ர ஜீவன் - சிறு ஜீவன். [2] வத்ஸரம் - வருஷம்.

ரின்மையிற் கொலை பிறவாமையால், தின்பானுளனே யெனினு மவற்றுண்மை யின்றேற் (கொலை பிறவாமையால், அவற்றுண்மைக்குக் காரணமாகிய) கொலை தவிர்தலாலுண்மையுங் கொலைக்குக் காரணமெனின் நன்றுசொல்லினை; வெட்டுதல், குத்துதல் முதலாகிய கொலைத்தொழில் கருவிக்குங் கருத்தாவுக்கு மொக்குமே யெனினுங் கருத்தாவே கொலை செய்தானாயினவாறுபோலத் தின்பானே கொலைக்குக் காரணமாயினானென்று கொள்ளென்பது.

இதனையானும் போந்த பொருள் கொலையினுடம்பாடுடைய காரணமே கொலைக்குக் காரணமெனபதாம். ஆதலா லூனடுவார் முதலாயினாரைக் கண்டோடி யொளிக்கின்ற மான முதலாயின வற்றுக்குக் கொலை யுடன்பாடின்மையில் அவை வினையடையா வென்றவாறு. தின்பானுக்குக் கொலையுடன்பாடு போன காதைகளாற் பெறப்படும். மாம்சம் தின்னவேண்டி நீ படுகின்ற [1]சித்த ஸம்கிலேசம் எனனென்றவாறு. சித்தஸங் கிலேசத்தாலன்றே, 'இடித்தார் பாவமெடுத்தார்க்கா' மெனபது முதலாயின சொல்லுகின்ற யென்பது. காரணாற் பாவங் கொள்ளி னதுவுமா மனறோவெனின், நன்று சொல்லினை; தினனுமவன்பாற் பெறும் பொருணிமித்தமாகச் செம்படவர் முதலாயினார் கொனறவாறுபோல, எடுப்பவனபாற்பெறும் பொருணிமித்தமாகக் கோயிலிடித்தானாயினனறே எடுத்தவன பாபம் பெறுவது; இது நின பேதைமையாற் கூறினா யென்பது.

"எடுப்பான் கொடுக்கும் பொருள்வேட் டிடிக்கில்
எடுததானும் பாபத்தை யெய்தும்—கடித்தெலும்பு
தினபாய் கொடுக்கும் பொருணசையாற் கொல்வார்க்கு
நினபோல் வினையுள தெனில்."

இனி, 'இடித்தவர் பாபங் கோயி லெடுத்தவர்க் காகு' மென்பதன் பொருள் இடித்த செங்கன் முதலாயினகொண்டு, அந்தக்கோயி லெடுத்தார்க்குப் பாபமா மென்பதன்றோ வெனில், நனறு சொன்னாய்! இடித்தவர்க்குப் பொருள் கொடாது, அவரை வெறுத்து, அக்கோயிலை [2]ஸமாதானம் பண்ணுவார்போலத் தின்பாயுங் கொல்வாரக்குப் பொருள் கொடாது, அவர் தாமே யத்தசை போகட்டா லதனை யெடுத்து, முன்போலுடம்பாக்கி யுயிர்க்கிட மாக்குதி யெனினன்றே யவ்வாறு சொல்லலாவது. அவ்வாறன்றி யின்னகோயிலிடித்துச் செங்கற் கொண்டு வருகின்றானென்றறிந்து அச்செங்கன் முதலாயின கைக்கொண்டு, மனை முதலாயின செய்வார்க்கு இடித்தலுடம்பாடு வருமாறுபோல [3]ஜீவஹிம்ஸை பண்ணி மாம்சங் கொடுவந்தமையறிந்து வினியோகங் கொண்டார்க்குங் கொலை யுடன்பாடா மென்பது.

மகன் செய்த பாபந் தந்தைக்காமென்பதும் பேதமையாம். என்னை! மாம்சம் தின்பார்க்குக் கொலையுடம்பாடுண்டாமாறு போல, மகன் செய்யுப பாபங்களுக் குடம்படுமெனி லன்றே தந்தை பாவம் பெறுவதென்பது. கா

1 சித்த ஸம்கிலேசம் - மன கஷ்டம். 2 ஸமாதானம் - கட்டி ஒழுங்காக்கல்
3 உயிர்க்கொலை -

ணுற் பாவங் கொண்டேமென்று எம்மை யிவ்வாறு சொல்லுகின்றாய்; நீ காரணுற் பாவங் கொள்ளாயாகில் சித்திரத்திஞல் ஸ்திரீ ரூபந் தரிசித்தால் காம ஸேவா தோஷம் வருமென்று, அது தவிர்த்த லொழியெனபது. (௩௩)

336 குறிக்கப் படாமையிற் கொல்வினை கூடான்
பறித்துத்தின் பானெனிற் பாவமும் பூப்போற்
செறிக்கப் படுமுயிர் தீவினை பின்னு
நெறிக்கட்சென் றுறலைப் பாரொப்ப னேர்நீ.

இது, "விலைக்குக் கொள்வானை" யெ........ற்று.

(இ - ள்) ஊனவாணிகரை வழி யடித்தும், பிக்ஷுபுக்கும் ஊன் உண்பார்க் குக் குற்றமில்லை யவரைக் குறித்துக் கொல்லப்படாமையாலெனில், புத்தபாத ரூத மாகிய புஷ்பம் பிறர்க்குப் பரிசாரகர் கொண்டு போவதறிந்து இடைவழிப் பறித் துச் சூடினூர்க்குப் புண்ணிய முண்டானவாறு போலக் கொலையால் வந்த ஊன நிந்து பறித்துத் தினூர்க்கும் பாபமா மென்பது. புஷ்ப வேட்கையாலன்றிப் புத்தபக்தியால் வாங்கிச் சூடுதலிற் புண்ணியமாம். பூவேட்கையாலெனில், பிறி தொரு பூச்சூடவு மமையு மென்னே வெனில், மாம்சம் பறித்துத் தினபானும் மாம்சமாத்ர [1]ஸ்ரத்தையாலன்றிக் கொலையால் வரு செவவி குறித்தன்றே பறிக் கின்றது. அதுபோல்; அற்றன்றுயின் ஊரில் விழுந்த நாய் மாம்ச முதலாயின தின்னலமையாதோ வென்பது. புத்தர்பாதபூவென்று உபேக்ஷித்து வாங்காதான புண்ணியம் பெறுதவாறு போலக் கொலையால் வந்த ஊனென்று உபேக்ஷித்து ஊன்வாங்காதான் பாபம்படானென்பது. கேவலம் பூச்சூடினூர்க்குப்புண்ணியமில் லாதவாறு போலப் படுமுடை தின்பார்க்குப் பாவமில்லை யென்னிலதற்கு மதுவே யுத்தரம். என்னை? பூச்சூட வேண்டுவான் பூ மிக வேண்டுமாறு போலப் படு முடை தின்பான், அப் படுமுடை மிக வேண்டி ஜீவன்களது மரணத்தினை வேண்டிப் பாபம் பெறுமென்பது. அது நோக்கியன்றே, சேடப் பூப்போ லென்னுது பூப்போற் செறிக்கப்படும் வினையெனப் பொதுப்பட வோதுவா ராயின ரென்பது.

இனி, குறிக்கப்பட்டா ரந்த ஊன் றின்னுமையின், அவர்க்கும் பாவமில்லையே யெனில், உண்டு. அவரும் மாம்சம் கொடுவந்தார்க்கு விலை கொடுத்துக் கொள் வோமென நினைத்திருந்தமையிற் கொலை யுடன்பட்டுப் பாபமெய்துவரென்பது. என்னை?

ஒரு மஹா நகரத்துள்ளாரெல்லாரும் உபாஸக ராதலிற் ஹிக்ஷாகாலத்துப் புத்தமண்டையி லிடவேண்டி யாதரவு கொண்டிருந்தார். அவனு மொருவழி ஹிக்ஷை பண்ணி மீண்டானுயினும், அவனுக்கு ஹிக்ஷையிட வேண்டியிருந்தார் யாவரும் புண்ணியம் பெற்றவாறு போல வென்பது.

"கடற்றலைப் பிறந்த கொலைப்பாவ மலைத்தலையார்க்கு வந்தவாறென்னை?" யெனில், ஈழத்து ஸம்ஹத்தாரும், உபாஸகரு மிவ்வழி ஒரு கோயில் செய்ய

1 சிரத்தை

உடன்பட்டார் புண்ணியம் பெற்றவாறு போலவென்பது. தின்பான் மாம்சம் வரவேண்டுவதல்லது, கொலை வேண்டுமோ வெனில், ' தலை கொடுவந்தார்க்குப் பொருள் கொடுத்து' மென்றிருந்தா னக்கொலை வேண்டினவாறு போலப் புலை கொடுவந்தார்க்கு விலை கொடுத்து மென்றிருந்தானும் கொலை வேண்டினனு மென்பது. கடற்றலைப் பிறந்த கொலைப்பாவம் மலைத்தலைவாழ்வா ரொருவர்க்கு எத்துணை விழுக்காடு வருமெனின் வீழத்தொரு கோயில் செய்தற்கு இவ்வழி புடன்பட்ட பௌத்தர் பலரிலொருவர்க்கு வரும் விழுக்காடு வருமென்று கொள்ளென்பது.

'தீவினை பின்னுஞ் செறிக்கப்படு'மெனக்கூட்டி, குறிக்கப்பட்டார் தின்றில ரெனினு மவர்க்குப் பாவமுரைத்துக் கொள்க. "நெறிக்கட்......ீ" என்பது - பறித்து மாம்சமும் தின்றான், தான ஆறலைத்தான் பெறும் பாவமும் பெறும் எனறவாறெனபது. அன்றியும் ஆறலைத் துண்பார், தனங்கொண்டு பலவையும் வரவேண்டுமாறுபோல, ஊனறலைத்துத்தினபானும் ஊன் கொன்று கொணர வேண்டுமெனபது. இனி, ஊன்கொடு வருவழி யது நீரோடு போகினும், நெருப்பில் வேவினு மெல்லா முன் சொல்லியவாறே தின்பார்க்குப் பாவமாமாறுரைத்துக் கொள்க.

" தலைகொணர்ந்தார்க் கீயுந் தனமென் றிருந்தான்
கொலையுவந்தா னுகு மதுபோற்—கொலையுவந்தா
னூன்றருவார்க் கீதும் பொருளென் றிருந்தானுஞ்
சான்றுலக மல்லவோ தான்."

என்பதனுலுந் தெரிக. (எ0)

337 விலையறம் போலு மெனின்வினை யாக்க
நிலையுமீ றென்பது நேர்குவை யாயின்
வலையினின் வாழ்நர்க்கும் வைகலு மீந்தாற்
கொலையென்றும் வேண்டலன் றேருகுண மில்லாய்.

இது, "செய்வினை கொடுத்தார் சிற்ப"......ற்று.

அம்பலஞ் செய்ய முன்னே விலை கொடுத்தானைப் போலக் கொலையாளன் கமுனனே விலை கொடுத்துமெனிற் கொலைப்பாவ மிசைதும் என்பாயான், வலையர்க்குப் பொருள் கொடுக்கினது அவரோடு நட்புவேண்டிக் கொடுக்கின்றாயன்றே; ஊன்வேண்டியனறே கொடுக்கின்றாய்; அவன்ஊன் கொடுவருவது பிராணியை வதித்தன்றே? ஆதலான் முன்பு கொடுத்ததூஉம், பின்பு கொடுத்ததூஉ மொக்கு மென்பதன்றே யாதலால் கொலைவேண்டினு யாகாயோ வென்றவாறு. கொன்றவனேடு கொலைப்பாவ நிற்பதன்றிக் கொண்டு தின்பவர்க்குப் பாபமாமாறென்னை யெனில், கொல்கின்றான் தின்பவர் கொடுக்கும் பொருணச்சி யவரிச்சைக்குத் தக்கவா றுயிரோடு கொடுவந்து கொடுத்தும், மாம்ஸமாக்கிக் கொடுவந்து கொடுத்தும், மூயலும் காடையு முதலாயின

அவர் வேண்டின கொடுத்தும், விலை கொடுக்கும் பொழுது [1]கற்கசிப்பார்க்குக் கொடாதும், விலையிற் சிறிது ஏறவிடுவார்க்கு மாம்ஸம் ஏறக் கொடுத்தும், தின்ப வர் பொருள் கொடுக்கும்படிக்குத் தக்கவாறு செய்கின்றனன். தின்பவர் கொடுக் கும் பொருள் வேண்டியன்றிக் கொல்லுமெனின் வலையிற்பட்ட பாம்பு, தவளை முதலாயினவும், நாய் நரி முதலாயினவுங் கொல்லா தொழிவதென்னோ? அவை தின்னுந் தேசத்து அவை கொல்கின்றவாறென்னோ? தினனுவிலங்கு கொல்வா ரைத் தண்டிக்கிற லோகம் தின்னும் விலங்கு கொல்வார்க்குப் பொருள் கொடுப் புழி யுடன்பாடில்லையாமோ? நெற்கொண்டுண்பார் நெனமிக வேண்டுமாறுபோல ஊன்கொண்டு தின்பா ரூன்மிக வேண்டியிராரோவென் றிவை முதலாயின சொல்லித் தினபார்க்குப் பாபமுண்மை தேற்றுக. (எக)

338 நும்பள்ளிக் கீபொரு ளாலுணர் வில்லவ
ரெம்பள்ளி தாஞ்சென் றெடுப்ப வெனினது
கம்பலை யாம்வினை யில்கறிக் கீபொருள்
செம்பக லேகொலை யாளரிற் சேரும்.

இது, "விலைக்கு விற்பான் செய்த வஞ்சமும் வேண்டி, விலைக்குக் கொள் வானே படவிதியாயோ" வென்பதற்கும், "செய்ய விலை கொடுத்தா" னென் பதற்கும் உத்தரமா வந்தது.

நும்பள்ளி செய்யவேண்டி நீ பொருள் கொடுப்ப வவ ரெம்பள்ளி யெடுப்ப வெனினெவ்வாறு கம்பலை செய்தி! நினக்கு இஷ்டமன்மையின். அவ்வாறே நீ தின்றுத நாய் மாம்ஸமுதலாயினவு நெல்லிற் பதர் முதலாயினவுங் கலந்து விற்று ரென றறிந்தவழியுங் கம்பலை செய்தி; நினக்கு அவையும் இஷ்டமல்லாமையால். அவ்வாறே கொலையு நுனக்கு இஷ்டமன்றாயிற் கொலையால்வந்த வூனென்றறிந் தாலது கொள்ளாது கம்பலை செய்தியன்றோ? அது செய்யாதது கொலைமேல்இஷ் டத்தாலன்றோ? ஆதலால், நினக்குக் கொலைப்பாவமாம். விற்பவன வஞ்சம் கொள்பவன் வேண்டாமையிலிவர்க்குப் பாவமில்லை யென்பது. அனறியும் இன்னுருடைய அர்த்தமிவன் களவு கண்டு கொடுவந்தா னென்பதறிந்து கொண் டார் யாவருங் கள்ளராவதறியாயோ? கொலையால் வந்த வூனென்றறிந்து கொள் வார் யாவர்க்குங் கொலைப்பாவ முண்டென்று கொள்ளென்பது.

"களவால் வருவ தறிந்துகொண் டானைக்
களவாள னுவதூஉங் காண்டு—மளவினறிக்
கொன்று வருத லறிந்துந் தசைகொண்டான்
கொன்றவ னல்லனோ கூறு"

என்பதூஉங் கொள்க.

"வினை...சேரு" மென்பதனால் வினையில்லாக் கறியாக நீ கருதிய முயற் பிண முதலாயின கொள்ளென்று விலைகொடுத்தது தானே எல்லார்க்கு மேற நின்

[1] கற்கசிப்பார் - கடினமாயிருப்போர்; அதாவது, அழுத்தஞ் செய்வோர்.

னைக் கொலையாளரிற் சேர்க்கு மென்றவாறு. நம்பள்ளி செய்யக்கொடுத்த பொருளால் எம்பள்ளி செய்யிற் கம்பலையாம் நுனக்கு இஷ்டமின்மையின் ; அவ்வாறே கொலையில் நினக்கு இஷ்டமில்லையெனில் ஒருகாலறியாது பொருள் கொடுத்தா யெனினும் கொனறான் கொடுவந்தா னென்பதறிந்தாற் கம்பலை செய்யவேண்டும் ; அது செய்யாது பொருள் கொடுத்தலில் பொருணின்னைக் கொலைவனுக்கு மென்றவாறு.

கம்பலை யெனபதன பொருள் - ஆரவாரமுந் துன்பமுமாம். சேர்க்குமென்பது சேருமென வினறது செய்யுளின்பங் குறித்து. (எஉ)

339 நாவின்கண் வைத்த தசைபய னேயென
வேவினை நீயுமற் றின்பமஃ தாதலிற்
றேவன்கண் வைத்த சிரத்தை செயலன்று
தூவென வெவ்வினை யைத்துடைத் தாயால்.

இது, "பூவினைக் காட்டலென்"...ற்று.

(இ - ள்) நாவின் கண்வைத்த தசை பயனுதலில், அதனால் வினையாக்கா தென்று சொல்லுவாயாகில் புத்தனமேற் பிரீதி, ஸ்திரீ ஸேவை என்பனவும் பயனுதலினவையும் வினையாக்காதெனறு கொள்ளென்றவாறு. (எங)

340 கன்றிய காமந்துய்ப் பான்முறைக் கன்னியை
யென்றுகொ லெய்துவ தோவெனுஞ் சிந்தையன்
முன்றினப் பட்ட முயன்முத லாயின
நின்றன வுந்தின நேர்ந்தனை நீயே.

இது, "தின்ற புலால் கொலை நேர்விக்கு"...ற்று.

(இ - ள்) [1]காமாநுஸவனம் பண்ணுவானுக்கு, முறையல்லாதாளுழைக் காம வுள்ளம் பிறவாதவாறுபோல மாம்ஸ முண்டாரெனினுங் குணவான்களாயினோர் கொலை வினையாரெனில், காமஸேவை பண்ணுவானுக்கு முறையாளுழைக் காமவுள்ளம் பிறக்குமாறுபோல நீ தின்னு முயல் முதலாயின கொலைக் குடம் பாடாமென்பது.

குணமிக்கார் கொலை வினையாரெனவே குணக்குறை வுடையாருங் குணமில்லாதாருந் தோஷவான்களும் ஊனுண்ணிற் கொலை வினைப்பாரென்பதும் போந்தது. முறையல்லாதாளுழைக் காம வுள்ளஞ் செல்லா தென்ப தியாதினாற் கூறினை ?

[2]"ஈன்றாண் மகடன் னுடன்பிறந்தா ளாயினுஞ்
சான்றோர் தமித்தா வுறையற்க வைம்புலனும்
தாங்கற் கரிதாக லான்."

எனவும்,

1 காமாநுஸவனம் - காமநுகர்ச்சி. 2 ஆசாரக்கோவை. 65.

1" மாத்ரா ஸ்வஸ்ரா துஹித்ரா வா நவிவிக்தாஸநோ பவேத்
பலவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபி கர்ஷதி "

எனவுமிவை கேட்டறியாயோ? காம பிரவிருத்தி யில்லையென்பதல்லது உள்ளஞ் செல்லுமென்று கொள்ளென்பது. நல்லோர்கட்குச் செல்லாது முறையல்வழிக் காமவுள்ளமெனி லறியாது சொல்லினாய்; சான்றோரென்றும், வித்துவான்களென்றும் சொல்லுவது நல்லோரை யன்றோ? அன்றியு நீ சித்திரத்து ஸ்திரீரூபமுந் தர்சிக்கலாகா தென்றது, ஸ்திரீகண்மேல் வேட்கை செல்லுமென்றன்றே? ஸ்திரீகளுறுப்பு [2]எற்புச் சட்டக மென்றும், முடைக்குரம்பையென்றுஞ் சிற்றுறுப்பும் பேருறுப்பும் அஸ்திவேறுபாடுஞ் சொல்லி அசுசி பாவிக்கின்றது காமவுள்ளஞ் செல்லாமைக் கன்றே யென்பது.

இன்னும், கடையிற் கொண்டு[3] கதலிபல முதலாயின தின்றற்குக் குலையோடு பழுத்து நின்றவதனைக் கண்டா லுள்ளஞ் செல்லாதோ? கடையிற் பூக்கொண்டு முடித்தால் கோடுமுதலாயினவற்றுப் பூக்கண்டாலுள்ளஞ் செல்லாதோ? இச் சுலாவுரையாற் பயனென்னை யென்பது. (எச)

341 தூய்மையி லாமுடை சுக்கில சோணித
மாமது போன்மெனி னன்முலைப் பாலன்ன
தூய்மைய தன்றது சொல்லுவன் சோர்வில
வாம னுரைவையந் தன்னொடு மாறே.

இது, " சுக்கில சோணிதமெ "......ற்று.

(இ - ள்.) சுக்கில சோணித பரிணாமமாகிய மாம்சம் தூய்மையுடைய வல்லவென்றற்கண் அந்த மாம்ஸத்துத் தோன்றிய பாலும் அதனோ டொக்குமெனில், இவ்வாறு சொல்லுதல் லோகவிரோதமாம், [4]மாம்ஸம், [5]பாலொடொபாதி சுத்தியுடைத் தல்லாமையா லென்று சொல்லுவ னென்றவாறு. " நினைய புழுக்கு வந்த...... னென்னலுமாமோ " எனவும், அசுசி யெனவும் ஊனை பாவிக்கின்ற நீயும் பாலையவ்வாறு சொல்லுகிலை; என்னை? " ஆன்முலைப்பாலினை யெக்குலத் தெத்தவததா ரிழிக்கின்றார் "றென்று சொல்லினை யாதலால். மாம்ஸம் யாவராலு மிழிக்கப்படுகின்ற தன்றே? நின்னையொழிய மாம்ஸந்தின்பாரும் மாம்ஸம் சுத்தமென்றிரார்; லோகத்தார் [6]சாபமென்று [7]ஆசௌசங் கொள்கின்றது மாம்ஸத்தை யன்றே.

[8]" தம்புண் கழுவி மருந்திடுவர் தாம்பிறிதின்
செம்புண் வறுத்த வறைதின்பா."

---

1 மநுஸ்மிருதி II; 215. 2 எற்புச் சட்டகம் - எலும்புக்கூடு.
3 கதலி - வாழை. 4 மாம்சம். 5 பாலுக்குச் சமானமாக.
6 சாபம் - விலக்கப் பட்டது. 7 ஆசௌசம் - அசுசியுடையது.
8 அறநெறிச் சாரம் - 97.

[1]" உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின."

" விலைப்பாலிற் கொண்டூன் மிசைவதூஉங் குற்றம் "

எனவும்,

" த்ரிவர்ஷாணி ஶதாநி மாம்ஸம் யெ பக்ஷயந்தி தே
நரகாந் நிவஸந்தே யாவச்சந்த்ரதிவாகரௌ "

எனவும், மாம்ஸம் நிந்திக்கப்படுகின்ற தன்றே யாதலின, மாம்ஸத்தைப் பாலோ டொப்பிப்பது லோகவிரோத மென்பது. சுகல ஶோணிதத்தால் வந்த மாம்ஸம் அசுத்தமானவாறுபோல மாமஸத்தால் வந்த பாலும் அசுத்தமாமெனில், பால் மாம் ஸத்தால் வந்ததன்று ; பசுவால் தின்னப்பட்ட புல்லுந்தண்ணீருமே பாலாய்ப் பரிணமிப்பது; என்னை? வேப்பிலைமுதலாயின தின்ற பசுவின்பால் கசப்பதூஉஞ் சோறு முதலாயின தினற பசுவினபால் மிகாவிப்பதூஉந் தாய்மருந்து குடிப்ப, வவண் முலைப்பாலுண்ட பிள்ளைக்கு நோவு ஶமிப்பதூஉம் பிறவுங் காணப் படுகின்றமையி னெனபது.

மாம்ஸத்திற் பிறத்தலிற் பாலு மாம்ஸமெனில், சேற்றிற் குவளைபோலவும், கடலுண் முத்துப்போலவும், மண்ணின் மரம்போலவும், தலையின் மயிர்போலவும் மாம்ஸமிடமாகப் பிறந்ததே யெனினும் பால் மாம்ஸதகில் வேறென்று கொள் ளென்பது. அன்றியும் மாம்ஸத்துப் பிறந்த பால் மாம்ஸமெனில் முலைப்பாலுண் பாரும் பசுவின்பால் குடிப்பாரும் நரமாம்ஸமும் ஹோமாம்ஸமும் தின்று ராகல் வேண்டும் ; நரமாம்ஸாதி யொழிந்தீயும் பால்குடித்தலி லவை தின்றுயாகுவை யாதலால் லோகவிரோதமா மென்பது. தோலிற்பட்ட நெய்முதலாயினவொழிந்த [2] வோபாதி மாம்ஸத்திற்பட்ட பாலு மொழியவேண்டு மெனில், ஜீவனோடு கூடி நின்ற சரீர ஹதமாகிய மாம்ஸம் அசுத்தமன்று ; என்னை? உள்ளங்கைப் பட்ட நீர் ஶவத்தின்கைப்பட்ட நீர்போல அசுத்தமென்று கொள்ளப்படாமையினென்பது அன்றியும் ஹோமயமும், ஹோரோசநமும ஹோக்ஷீரமும் சுத்த திரவ்ய மென்றே லோகத்தாராற் கைக்கொள்ளப் பட்டன. ஆதலால் மாம்ஸத்தோடு பாலை யொப்புரைத்த லுலகமலைவா மெனபது. (எஙி)

342 மேன்மக்க ணஞ்சொடு கள் [3]வரைந் தாரது
போன்மக்க ளாரும் புலால்வரை யாரெனிற்
றூன்மெய்க்க ணின்ற தவசிமற் றெங்குள
னூன்மெய்க்கொண் டுண்பவ னுன்னல தென்றாள்.

இது, " உள்ளங்கொள்ள "...ற்று.

---

1 திருக்குறள். 257.

2 ஓபாதி - தன்மையாக, ஒப்ப. (பதிற்றுப்பத்து 44. உரை.)

3 வரைந்தார் - விலக்கினர்.

(இ - ள்) கள்ளும் நஞ்சும்போல மாம்ஸம் மேன்மக்களாற் றுறக்கப்பட்டதில்லையெனின், மேன்மக்களாவார் தபஸ்விகளன்றே; உன்னை யொழியத் துறந்து தபசு பண்ணுவாரில் மாம்ஸம் நன்றென் றுண்பா ரெங்குள ரென்றவாறு.

இனி யொழிந்த பன்மக்களு மாம்ஸமுண்பது நன்றென் றுண்ணார். என்னை? ஏகாதசி முதலான சுபதினங்களுள்ளும், பிறவற்றுள்ளும் தவிர்கின்றார் ஆதலால்.

இனி யெல்லா மாந்தரும் கள் வரைந்தாரென்று சொல்லிய தென்னை? மூவகைப் பௌத்தருள்ளும் [1]சிராவகயானத்தாராகிய நீங்களொழிய [2]மகாயான [3] மந்திரயானத்தார் யாவருங் கள்ளுண்பது நீ யறியாயோ? மற்றுக் கள்ளுண் பாரை நீ யறியாயோ? எல்லாருமொக்க மாம்ஸம் வரைந்திலரென்று மாம்ஸ முண்டியாயி னெல்லாரு மொக்கக்கள் வரைந்திலரென்று நீ கள்ளுண்ணுதவா றென்னோ? வென்பது. ஆதலால், "கள்ளொடு நஞ்சினைப்போற் கடிகிற்றில" ரென்று அறியாது சொல்லினை யென்பது. (எசு)

343 பார்ப்பனி யோத்துநின் னோதது பயமெனி
னீப்பவுங் கொள்பவு நேர்து மவையவை
தூப்பெனு மில்லன வேசொல்லி நிற்குமோர்
கூர்ப்பினை நீயென்றுங் கோளிலை யென்றாள்.

இது, "ஓதின வுண்பாராவது நன்றெனி"...ற்று.

(இ - ள்) பார்ப்பனி யோத்தும் நின்னோத்தும் பிரமாண மென்று யாங் கொள்ளினன்றே பார்ப்பனி யொழிந்த தூதுளை முதலாயின வொழியவு நீ கொண்ட மாம்ஸம் முதலான கொள்ளவும் வேண்டுவது. யாம் ஜைனாகமத்துச் சொன்னவாறு செய்வோமாதலினது வேண்டுமதில்லை; நீ யிவ்வாறு அஸத்துத் தாஞ் சொல்லுவதல்லது கூர்மை யுடையையாகி ஹிதங் கொள்ளுதலிலை யென்றவாறு. (எஎ)

344 [4]தூவினி னுண்புழுத் துய்ப்பனெ னன்னுமையிற்
றீவினை சேர்ந்திலன் றின்பவ னென்னினு
மோவெனு மூன்விலை வாணிக ரென்றினர்
மேவினர் தாம்விலை யேவினை வேண்டார்.

இது, "ஜீவன் பரிணமித்தம்"...ற்று.

(இ - ள்) நாதகுத்தனார், "புழுக்குலந் தம்மால் நுகரவும் வாழவும் பட்ட வினையவுடம்" பென மாம்ஸத்துப் பிராணி ஜனிப்பது நீயே சொல்லி, அது தின்றால் அன்பில்லை: பாவமாகாதோ வெனறார்க்கு, "ஜீவன் பரிணமிக்குந் தசை யுள்ளெனிலன்று; மாம்ஸத்து ஜீவஸத்ஹாவ மிசைந் தூனைத் தின்கெனத் தின்றிலேனுதலி" னென்பதனால் ஜீவனைக் கொன்று தின்பேனென்னு மூள்ள மின்மையிற் கொலைப்பாவமில்லை யென் றியேயெனின், ஓஓ வென்னு மனுகாணத்தால் ஜீவனைக் கொன்றுவந் தூன் விற்பானுங் கொல்லுவே னெனனு மூள்ள மின்றி

1, 2, 3 மூவகை பௌத்தர். 4 தூ - தசை.

1 அர்த்தார்ஜனம் பண்ணுகின்றேனென்னு முள்ளத்தனுதலிற் கொலைப்பாவ மில்லை னென்றவாறு. விலையே...கொலை வேண்டாரென்பது. கொலைவன் செற் றத்தாலன்றி அர்த்த வாஞ்சையாற் கொல்கின்ற னாதலில், அர்த்த சிந்தையே யவற்குள்ள தென்றவாறு.

ஜீவஹத்யையால் அர்த்தந் தேடுதலிலவர்க்குப் பாபமெனில், ஜீவஹத்யை யால் மாம்ஸமுண்டலிலுனக்குப் பாவமாமென்று கொள்ளெனபது. அன்றியும் 2 சார்தூலாதி குரூர ஸத்வங்களும் 3ஆமிஷ புத்தியாற் ஹக்ஷிப்பதல்லது, ஜீவ னைக் கொல்வேனெனு முள்ளமினமையி னுன்னை யொப்பக் கொலைப்பாவமில்ல வென்பதுஞ் சொல்லுக. அஃதேயெனின், அர்த்த வாஞ்சையால் வழியடிப்ப மரித்தானது மாம்ஸத்தினைத் தின்ற காக முதலாயினவற்றுக்குக் கொலைப்பாவ முண்டாமாறென்னெனில், அவற்றுக்குங் கொலையுடனபாடுண்மையிற் பாவமா மென்பது. (எஅ)

345 அடங்கிய வம்பு பறித்தன் முதலா
வுடங்குசெய் தார்வினை யொட்டல ரென்பாய்
மடங்கினர் வாழ்க வெனுமாற் றார்போற்
சடஞ்சொல்லித் தின்பதிங் கியார்கட் டயாவோ.

இது, "ஒழிந்த படை பறித்தலென்" ......ற்று.

(இ - ள்) சரீரத்திடத்தடங்கிய அம்பு அரிந்து வாங்குதலே, ஓடு விழுங்கின பிள்ளைமிடற்றுட் கையிட்டு ஓடு வாங்குதலே, கழலை முதலாயின சஸ்திர மிடு தலே யென்றிவை செய்வுழி யொருவன் மரித்தா லவர், அவன் மரணத்துக்குக் காரணமாயினரே யெனினும், அவர்க்குப் பாவமாகாதவாறு போலத் தினபானுக் குப் பாவமாகாதெனில், தாய்முதலாயினர், இந்த ஜீவனை ரக்ஷிக்கவேணுமென் னுங் கருத்தினாற் பரிகாரம் பண்ணும் வழி 4ப்ரமாதத்தால் அவன் மரித்தவாறு போல நீ மாம்ஸந்தின்று அந்த ஜீவனை ரக்ஷிக்கப்புக, அது ப்ரமாதத்தால் மரண மடைந்ததோ? அருளினுலு மன்பினுலுந் தாய் முதலாயினர் பரிகாரம் பண்ணிச் சாவாமற் கொள்ளுமாறுபோல நீ அருளால் மாம்ஸந் தின்று ஜீவன்களைச் சாவா மற் கொள்கின்றாயோ? இந்தச்சடவுரை சொல்லிப் புலால் தின்று என்னதயா முடிக்கின்றாய்? என்றவாறு.

கொலைக்காரணமாகை யொக்குமேயெனின், ஒவ்வாது, அந்தப் பரி காரக்கிரியைகளால் ஜீவன்கள் மீண்டும் வாழ்தலுங் கூடுமாதலின். மாம்ஸஹக்ஷ ணம் பிராணிகளுக்கு மரணத்தையே செய்யுமென்பது. அஃதேயெனில் 5மிருத சரீரந் தின்பார்க்குப்போல மிருத சரீரஞ்சுடுவார்க்கும் பாவமாமன்றே வெனி லாகாது. என்னை? தனக்கொரு பிரயோஜனமின்றி மிருதனுயினனமேற் காதலாலந்தச் சரீரங் காக முதலாயின பக்ஷிகளாலும், நாய் முதலாகிய மிருகங்களா

---

1 அர்த்தார்ஜனம் - பொருள் சேர்க்கை. 2 சார்த்தூலம் - புலி.

3 ஆமிஷபுத்தி - ஊன் நினைவு. 4 ப்ரமாதத்தால்.

5 மிருத சரீரம் - பிணம்.

லும், [1]ஸௌ ஹதர் முதலாகிய பாபிஷ்டர்களாலும் தின்னப்படில் அவர்க்கு நா மாம்ஸ [2]சிரத்தை பிறந்து, அதனால் நாவதம் பிறப்பதோவென்னும் ஹீதியாலும், அது மிருத சரீரத்துக்கு பூஜை யாதலாலும், மிருத சரீரதஹனத்தாற் கொலை பிறவாமலாலும், மிருத சரீரந் தஹியாத வழி யுலகு பழி தூற்றுதலாலும், பாவம் வருதலாலும், மிருதனுனவனுடைய புத்ராதி பந்து ஜனங்களால் [3]ஜ்ஞாமூ (மந்த்ராக்நி)ஸாஸகரித்துப் பின்பும் பூஜைகள் பலவும் பண்ணி, கங்காநதி முத லாயினவற்றுள் நிக்ஷேபிக்கப்படுகின்றது. அன்றியும் மெழுகாற் செய்யப்பட்ட புத்த பிரதி மையை யழித்தார் புத்தன்மேற்பக்தியால் அழித்தாராகலி னவர்க்குப் பாவமாகாதவாறுபோல இறந்தார்மேற் பக்தியாலழித்தலி லவர்க்குப் பாவமாகா தென்க. இதனைநினது மாம்ஸஹக்ஷணத்தோடு கூட்டியுரைப்பதுஞ் சடவுரையா மென்பது. சடமென்பது - நெஞ்சறி கொடுமை. (எக)

346 தின்னு மனமுடைப் பேயெய்து நீவினை
மன்னு மிகவுடைத் தாய்வினைப் பட்டில்லா
ளென்னு முறைபெரி தேற்கு மிகழ்ச்சி
தன்னை வினைப்பட நீசொல்லி னுயால்.

இது, "பேய் பெற்ற தாய்பற்று"......ற்று.

ஹக்ஷண நிமித்தமாகப் பேய்பற்றி யிசிக்கவும், மாண ரக்ஷநிமித்தமாக மாதா பற்றி யிசிக்கவும் பிள்ளை மரித்தவழி மாதாவுக்குப் பாவமில்லாதவாறுபோலத் தின்பார்க்குக் கொலைக் காரணமுண்டே யெனினும் பாவமில்லையெனில், நன்று சொல்லினை! மாதாவும் பேயும் பிள்ளையைப் பிடித்து இசித்தாரே யெனினும் [4]ஹக்ஷணேன்முகமாகிய பேயே கொலைக்குக் காரணமாகிக் கொலைப்பாவம் பெற்றவாறு போலத் தின்னுமனமுடைய நீயே கொலைக்குக் காரணமாகிக் கொலைப்பாவம் பெறுதி; மீனுண்மை முதலாகச் சொல்லியனவெல்லாம் கொலைக் குக் காரணமல்லவென்பது நீ சொன்னுயாதி யென்றவாறு.

மாதா பிள்ளையை ரக்ஷித்தற் பொருட்டு இசித்தனள்; நீயுமவ்வாறே முயன் முதலாயின ரக்ஷித்தற் பொருட்டுத் தின்கின்ருயல்லை; மாதா பிள்ளையை இழுத்த வழி பிள்ளை பிழைக்கவுமடுக்கும்; நீ தின்பதனுல் ஜீவன்களுக்குக் கொலையே யாமன்றே? ஆதலால் மாம்ஸஹக்ஷணமே கொலைக்குக் காரணம்; ஏனைய கொலைக்குக் காரணமன்றென்பது.

அஃதேயெனில், தின்னுமனமுடையார்க்குப்பாவமானவோபாதி, தண்ணீர் குடிக்கு மனமுடையராகித் தண்ணீர்ப் பந்தரிற் றண்ணீர் குடித்தார்க்கே புண் ணியமாவதெனில், பந்தரிற் றண்ணீர் குடிப்பான், தண்ணீர் வைத்தானை யிந்த நீாறுங்கானத்துத் தண்ணீர் வைத்தான் புண்ணியவானென்று வாழ்த்தித் தண் ணீர் வைத்தற்குடன்பட்டுக் குடிப்பன். அவ்வாறே மாம்ஸந்தின்பானுங் கொன்று

1 ஸௌஹதர் - பௌத்தர். 2 சிரத்தை - பக்தி.
3 மந்த்ராக்நி - பூஜைக்காக எடுக்கும் தீ.
4 ஹக்ஷணேன் முகம் - தின்ன விருப்பம்.

கொணர்ந்தானை யிக்கறியறுங் காலத்து மாம்ஸங் கொடுவந்தானென்று உவகை செய்து கொலைக்குடன்பட்டுத் தின்னுமாதலி னுடம்பாட்டாலிருவர்க்கும் நல்வினையுந் தீவினையுமா மென்பது.

மாம்ஸந் தின்னினு மெங்களுக்குக் கொலையி னுடன்பாடில்லை யெனில், உங்களை யொழிய வேறு மாம்ஸந்தின்பார் யாவர்க்குங் கொலை யுடன்பாடாம். இனி நீங்கள் ஜீவமரணத்தை யொழிய ஸம்பவியாத மாம்ஸத்தைத் தின்று மெமக்கு ஜீவமரணத் துடனபாடில்லை யென்று சொல்லுவது என்போலுமோ வெனில், காமவுள்ளத்தா லல்லது சம்பவியாத வநிதாஜவநாஶுஷணாதிகள் செய்தேனேயெனினு மெனக்குக் காமவுள்ளமில்லை யெனாரு வொருவன் சொல்லு மதேபோலு மென்பது. கொலையால்வரு மூனைக்கொண் டுண்ணும் புத்தன் கொலையுடன்பா டின்றென்று கூறல், கலையல்குல் கட்டிக்கிடந்தேனே யாயினுங் காமமோ வெட்டுணையு மின்றெனக் கென்றற்று, (௪0)

347 அறஞ்சொல்லக் கொள்ளு மறமென் றறிந்தாங்
கறஞ்சொல்லி னோர்க்கற மாமென் றறியாய்
புறஞ்சொல்லி தன்று புலால்குற்ற மென்று
துறந்தொழிந் தாற்கொலை துன்னினர் யாரோ.

போனகாதைகளா லவன் மாம்ஸம் வேண்டிச்சொன்ன துஸ்தர்க்கங்கணீக்கி இதனு லவற் கறங் கூறுகின்றார்.

(இ - ள்.) பிறர்க்குத் தர்மோபதேசம் பண்ணினோர்க்கும், தர்மமுண்டென்று சொல்லி, நீயு [1]மங்குலிமான் முதலாயினோர்க்குத் தர்மோபதேசம் பண்ணிக் கொலை முதலாயின வொழிக்கின்றாய்; நீயு மாம்ஸமுண்ணுது பிறர்க்கு முண்ணலாகா தென்றுஞ் சொல்ல லோகத்துக் கொலை வரைவதனு லிதுசெய்தற்கண்வருங்குற்ற முண்டோ? தின்னப்படாக் குதிரைமுதலாயின கொலையினீங்கின வில்லையோ? மாம்ஸந் துறந்ததனு லுனக்குவரும் புறஞ்சொல் லுளவோ? இது வொழிய நின் காரியம் நடவாதோ? இதனை யொழி; இது வொழியாயாயி னீ கொலைவிலக்கின தூஉம் பொய்யாமென்பது.

அஃதேல் நீர் தீனுழிந்ததற்காகக் கொலையொழிந்த தின்மையிற் றின்ற லமையாதோ வெனில், நீ கள்ளுண்டுறக்கவுங் கள்ளாக்குத லொழிந்ததோ? நீ கொலையொழியவுங் கொலை யொழிந்ததோ? ஒழிந்ததில்லையாகில் நீ யவை செய்யாதவா றெனஞ்ஞே வென்பது. (௪க)

348 அறந்தலை நின்றாங் கருளொடு கூடித்
துறந்தனள் யானென்னுஞ் சொல்லு முடையாய்
மறங்கொண்டி துண்டென்னை மன்னுயிர்க் காமே
சிறந்ததுண் டோவிது சிந்தித்துக் காணாய்.

ஜீவன்களுடன் மறங்கொண்டு மாம்ஸமுண்டு நீ புருஷார்த்தங்களில் யாது பெறுகின்றனை? யாங்களே ஜீவன்களுக்குச் சிறந்த பந்துக்களோ? நீயு

---

1 அங்குலிமான்-கள்வனுயிருந்து தரும்மகேட்டு நல்லொழுக்கம் பூண்டான்.

1 மைத்திரீ பாவிக்கின்ற யன்றோ? 2தீவகமாக வளர்க்கப் பட்டவை செத்தாலு மவற்றின் மாம்ஸமுண்பா ருண்டோ? நீ நின்மித்திர மாம்ஸந் தின்பது தகுவதோ? நீ தானுவினைத் தொழுவது புத்ததாது வென்றன்றே? நீ தின்கின்ற மாம்ஸம் போதிசத்வர் மாம்ஸமல்லவென்று யாதினாற் பெற்றாய்? முயன் முதலாயினவாகியப் 3பாரமிதை 4பூரிக்கும் 5அநாகத போதிசத்வர் பலரன்றோ? அதிபகையுடையார் பகையாளன் மரித்தா லவனது மாம்ஸம் பச்சையே தின்பதறியாயோ? ஒரு ஜீவனுடைய மாம்ஸந்தின்பவ னதற்குப் பகையன்றோ? இவையெல்லாஞ் சிந்தித்துக் கண்டுகொள் ளென்றவாறு. (அஉ)

349 பேயொப்ப நின்று பிணங்கிக்கண் டார்க்கெனு
மாயத்தி னானுண்ண மன்னு மருமையி
னாயொப்பச் சீறி நறுநுத லாளொடு
காயக் கிலேசந்திற் கட்டுரைக் கின்றான்.

இது, மொக்கலனது உள்ள நிகழ்ச்சி கூறும்.

கண்டார்க்குப் பேயுநாயு மொப்பச்சீறிப் பிணங்கி, மாயாபிரகாரத்தாற்றான் சொல்லும் வசனங்களால் மாம்ஸம் ஹக்ஷிக்கலா மெனல் தேற்ற மாட்டாமையிற் காயக்கிலேசத்திற்குக் குற்றங் கூறலுற்றா னென்றவாறு. (அங)

வேறு

350 வெயிலெறவ் வுணங்கியும் வெள்ளிடைந் நனைந்துமூன்
பயிறலிற் பட்டினிகள் விட்டுபின்ன கட்டமாய்த்
துயிறுறந் திராப்பகற் றுன்பவெங் கடலினார்க்
கயிறெறுந் நெடுங்கணா யாவதில்லை யல்லதும். (அச)

351 காயம்வாட்டி யுய்த்தலிற் கண்டநன்மை யுண்டெனிற்
தீயினாற் சுடுதலுந் தெற்றியேறி வீழ்தலு
நோயினாற் 7றிரங்கலுந் நோன்மையென்ன லாம்பிற
நீயனா யிதற்கினி 8நேமியென்று சொல்லெனா.

இவை, "காயந்தன்னை வருத்தல் தவமென்பா" யெனவும், "வெயிலுணிற்ற"லெனவும், "துனபம் வேண்டி" லெனவும் (வரும்) இம்மூன்று காதைகளையும் 9அநுகரித்தவாறு. (அரு)

---

1 மைத்திரீ பாவித்தல் - சிநேகம் காட்டல்.
2 தீவகம் - பார்வைக் குருவி, அல்லது, விலங்கு.
3 பாரமிதை - 354 - செய்யுள் உரையில் காண்க.
4 பூரிக்கும் - நிறைக்கும்.
5 அநாகத போதிசத்வர் - எதிர்கால போதிசத்துவர்.
6 திரங்கல் - திரைதல் -
7 நேமி - நியமத்தையுடைய தவம்; அல்லது, தரும சக்கரம்.
8 அநுகரித்தல் - ஒப்ப நிற்றல்.

352 புண்ணினைத் தடிதலும் பொழுவாற்றி நிற்றலுங்
கண்ணினைக் கழிகள்ளான் மீண்டிக்கொண்டு நீட்டலும்
விண்ணுயர் நெடுவரைவ் வீற்றுவீற்று வீழ்தலும்
மண்ணலார்தஞ் செய்கைபு மாவதில்லை யல்லதும். (அசு)

353 தூக்கடம்மை யாக்கலை தொல்லைநல் லறம்மெனின்
ஞுக்களைப் பறித்தலுங் நான்றுவீழ்ந்து பொன்றலுங்
தீக்கள் பாய்ந்து சாதலுந தீயசெங் கழுவ்வின்மேன்
[1]மேக்கினைக்கொண் டேறலு மேன்மையென்ன லாம்பிற.

இவை யவற்றிற்குப் பரிகாரம்.

இவற்றினுற் போந்த பொருள் :—தாபசாதிகளைப் போல பஞ்சாக்கினி மத்தியத்துனினறும், ஒரு கால்மடித்து ஒரு காலுனின்று பாரமாகிய சிலைகளை வகித்தும், நீருண் முழுகிச் [2]சுவாஸ நிரோதம் பண்ணியுமிவ்வாறு காயந்தன்னை வருத்தலே தபமென்று வருத்துகின்றுமல்லம் ; எம்மை நீ யிவ்வாறு சொல்லிய துன் பேதைமையாம். யாங்கள் கொலை முதலாகிய [3]பாபநிவ்ருத்தி மாக சக்திக்குத் தக்கவாறு அனசனுதிகள் செய்து [4]விஷயாநுஹவநந் துறந்தனம். நின்னைப் போல யாங்கள் பலகாலுண்ணவுந் தின்னவுங் குளிக்கவுந் தாம் பூல சேவை முதலாயின பண்ணவும் புகுவோமாகில் [5]ஆர்ஜன ரக்ஷணுதி வியாபாரங்களாற் கொலை முதலாயின பாவங்களும் ஞானத்யான விக்னங்களுமாதலின், [6]“ஶக்திதஸ்த்யாக தபஸீ” என்பதெம்மோத்தாதலில், சக்தியை அதிக்கிரமித்து [7]அநசனுதிகள் செய்வதுமில்லை ; வெயினிலை முதலாயினவும் வநசாராய் நின்று சகல வியாபாரங்களுந் துறந்து ஒருவழி நிற்றலிருத்தல் செய்து ஞான தியானங்கள் பயில்வுழி வெயிலும் மழையுங் காற்றும் முதலாயின வந்தாலவற்றைச் சக்திக்குத் தக்கவாறு பொறுத்ததாம. என்னை ?

[8]“ உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை,
யற்றே தவத்திற் குரு ”

என்ப தெம்மோத்தாதலின்.

தாமே வந்தன பொறுத்தலல்லது வெயின் முதலாயினவற்று வருந்துதலே தவமென்று சொன்னேமோ ? இல்வாழ்க்கைக்கணின்றுரு மில்வாழ்க்கைக் காரியங்களு ளொன்றுசெய்வுழி யொழிந்த காரியங்கள் துறந்து கிருஷி முதலாயின

1 மேக்கு - உயர்ச்சி. 2 சுவாஸ நிரோதம் - சுவாஸ அடக்குதல்.
3 பாபம் ஒழிக்கும்படி.
4 விஷயாநுஹவநம் - விஷய நுகர்ச்சி. 5 ஆக்கல் காத்தல்.
6 சக்திக்குத்தக்க கொடையும் தபசும்.
7 அநசனுதிகள் - உண்ணுவிரதம் முதலியன.
8 திருக்குறள் 261 தவம்.

செய்ய, அவ்வழி வந்தன வெயின் முதலாயினவுஞ் சக்திக்குத்தக்கவாறு பொறப் பதற்காகக் காயம் வருந்தினாரோவோ? நீ சொல்லியவிக் குற்றங்களெல்லாம் ஆத்ம ஹத்யை பண்ணுதலே புத்தத்வ நிமித்தமென்று மகாவேதனை நிமித்தமாகிய ஆத்மஹத்யைகள் பண்ணுகின்ற நினக்கேயா மென்று சொன்னவாறு. (அஎ)

354 தானஞ்சீல மும்பொறை தக்கதாய வீரியம்
மோனமில் தியானமே யுணர்ச்சியோ டுபாயமும்
மானமில் லருளினவ் வைத்தலேவ லிம்மையுஞ்
ஞானமீரைம் பாரமீதை நாடுங்கா லிவைகளும்.

இது, சுகதன் உடம்பு நோவு, முறுப்பு நோவும், பொருணோவும் பூரிக் கின்ற பாரமிதை பத்துங் கூறும்.

1" சென்றிரந்தார்க் கீந்தனன பொருளுடம் புறுப்புக்க
டொன்றினன் பிறக்கன்ன னாயினன் மாமேருக்
குன்றியின் றுணையாகக் கொடுத்திட்டா னல்லனோ"

2" இன்பஞ்சால் பெரும்பார மீரைந்து முடனிறைத்து
நன்கென நிலைபெற்ற நாதன்"

என்பவற்றாற் பாரமிதையாமாறறிக.

தான பாரமிதை - தான நிறைப்பது; அது, "குன்றியின்றுணையாகக் கொடுத்திட்டானல்லனோ" என்பதனாற் பெறப்படும்.

சீலபாரமிதை - சீலநிறைத்தல்; அது 3விநயபிடகத்துச் சொன்னவாறு செய்தல்; அது, "எண்ணிகந்த தானமுஞ் சீலமுமிகையாக்கி" யென் பதனாற் பெறப்படும்.

க்ஷமாபாரமிதை - க்ஷமை பூரித்தல்; அது, "இன்னார்க்கு மினியனை" யென்பதனாற் பெறப்படும்.

வீரியபாரமிதை - வீரிய நிறைத்தல்; அது, "விளை வாயபோதியை யுறுமளவும் வினைமடியான், றளர்வின்றி யோடிய தாளினனல்லனோ" என்பதனாற் பெறப்படும்; பள்ளி வலங் கோடன் முதலாயின செல்வழிச் சோம்பாமையுமாம்.

தியானபாரமிதை—தியான நிறைத்தல்.
சீலசமாதி—பிரக்ஞை யழியாமற் காப்பது; அது,

4" நலங்கிள ரொழுக்கந்தா னண்ணிய காலத்துக்
கலங்குதற்குத் தக்கன கண்டன வுளவெனினுந்
துலங்காது நிற்குந்தன் றுணிவுடைமை காணுங்கா
னிலம்பூனை யாயொழியு நிறையினை னல்லனோ."

என்பதனாற் பெறப்படும்.

---

1 குண்டலகேசி. 2 குண்டலகேசி.
3 விநய பிடகம் - ஒரு பௌத்தநூல். 4 குண்டலகேசி.

உணர்ச்சி; பிரக்ஞா பாரமிதை - அது மார்க்க ஞானம்; அது, "எவ்வந்தீர றிவா செய்தினனல்லனே" என்பதனாற் பெறப்படும்.

உபாயமாவது - மோக்ஷோபாயமாகிய மார்க்க பூரணை; அது, "பிறப்புக்கே டெடுத்துரைத்த பெருவழியானல்லனே" என்பதனாற் பெறப்படும்.

தயாபாரமிதை - அருள் நிறைத்தல்; அது, "மறைபோகப் பொழிகின்ற மாண்புசாலருளினு" லெனபதனாற் பெறப்படும்.

பலபாரமிதை - பல நிறைத்தல்; அது, "பற்றுய வலி நிறைத்த பழியிலானல்லனே" எனபதனாற் பெறப்படும்.

ஞானபாரமிதை - ஞானநிறைத்தல்; அது, 1அபிதர்மபிடகமோதியுணர்தல் அதுவும், "அறிவா செய்தினு" னென்பதனாற் பெறப்படும். இவை யெல்லா மறிந்துகொள்க. (அஅ)

355 விருக்கமூலி யாகலும் வெள்ளிடை யுறைதலும்
மிருத்தனிற்ற லன்றியு மிட்டகூறை யெய்தலும்
மருக்கையின் மயானத்துட் சேக்கையும் மனைகளை
2வருச்சியார் புகுதலும் மற்றவற்றெ டுண்டலும்.

356 அத்திட் டாடை கோடலும் மமையுமென்ன நீங்கலும்
பெற்றதன்னிற் சேக்கையும் பேர்த்துண்ணு தொழிதலுங்
குற்ற மென்னப் பிச்சையுங் குறிததுழிப் புகாதுதான்
3றுற்றியுய்த்த றன்னெடு துதாங்கென்றுத்தர் சொன்னவே.

இவை, 4துதாங்க மாமாறு சொல்லின. இவையெல்லா மறிந்துகொள்க. மருக்கை - மருவுதல். வருச்சியார் புகுதல் - எல்லார் மனைகளிலும் பிக்ஷை புகுதல். மற்றவற்றேடுண்டல் - கப்பிய மாம்சந் தின்னல். அத்திட்டு - துவர் தோய்த்து. அமையுமென்ன நீங்கல் - வேண்டாவென்று விலக்கினர் பின்னையிடுவித்துக் கொள்ளாமை. பெற்றதனிற் சேக்கை - 5அநியதவாஸம். பெயர்த்துண்ணு தொழிதல் - அகால போஜனம். துற்றியுய்த்தல் - ஒரு பிடியுமிரண்டு பிடியுங் குறையவுண்டல். இவையெல்லாமாராய்ந் தறிந்துகொள்க. (கo)

357 6பாரமீ துதாங்கொடு பற்பல கிலேசமுந்
தேருமனையி லுண்மையா னீரும்வேண்டி னீரெனக்
கூரிமம் வெயில்பசி கூடலங் கூடிஞற்
சேர்தலில்லை நல்லறஞ் சிந்தையென்று செப்பலும்.

இது, நீலகேசியாரு மொக்கலனுஞ் சொல்லியதோர் வாய்பாடுணர்த்தும்.

1 அபிதர்மபிடகம் - ஒரு பௌத்த நூல். 2 வருச்சியார் - நீக்கார்.
3 துற்றி உய்த்தல் - உணவு நெருக்கிச் செலுத்தல்.
4 துதாங்கம் - தூய ஒழுக்கம்; பௌத்த துறவிக்கு உரியது.
5 அநியதவாஸம் - நிச்சயமில்லாத வாஸம்.
6 பாரமீதுதாங்கு - பாரமிதை, துதாங்கம்.

பற்பல கிலேசமாவது - இக் காதைகளிற் சொல்லியன ; அன்றியும், போதி விருக்ஷத்து நாற்றிசையும் எவ்வேழுநாள் போதி விருக்ஷம் பார்த்து நின்று உபவாஸித்துப் பின் [1]விசாகை யென்பாள் பொற்கலத்திற் சோறிடப் புத்தனுண்டா னென்பது முண்டேயாதலால், எம்மைக் காயக்லேசம் சொல்லித் தூஷிக்கின்ற உனக்கு மிந்தக் காயக்லேசங்களுண்டாயின வென்பது. அவை தலை சிரைத்தல், புருவஞ் சிரைத்தல் முதலாயினவுமாம். (கூக)

358 அருந்தடிக வீரவும் மறஞ்செய்வாளிற் போழவும்
வருந்துவான துள்ளநீ மாட்சி [2]நன்று மென்றியா
விருந்துநின்று நன்னெறிக் கிடைப்படாத சிந்தையாற்
பெருந்தவங்கள் செய்ந்நரைப் பேசுவாயோர் பேதையே.

இது, போன காதையால் அபரார்த்தத்துக்குப் பரிகாரம். (கூஉ)

359 புத்த ராகு மாண்பினுர் போதிசத்து வர்கட்காம்
பத்து மாய பாரமீதை பாரவிட்ட மென்றலுஞ்
சித்தராகு மாண்பினுற் சீலமும் வதங்களும்
மெத்துணையு மாயிரம்மா மென்றுமியாமு [3]மென்றனள்.

பாரவிட்டம் - அதாங்கம். (கூஙு)

360 [4]உடம்பினுள்ள பல்லுயிர் சாவவூனுண் மானுக்குத்
தடங்கொண்மா வரைமிசைத் தன்னையீத னன்மையேற்
படம்புனைந்த வர்கடாம் பலருமுண்ணு நீரினுள்
விடம்பெய்தார்க்கு நன்றுகொல் வியாதியாளன் றீர்கென.

இது, புத்தனது ஞான பிரவிருத்தி அறிவிக்கும்.

(இ - ள்) தன்னுடம்பினுள்ள பல பிராணிகளு மரிக்கப் பசியால் வருந்திய புலியை ரக்ஷிப்பேனென்று மலையேறி வீழ்ந்து மரித்தான் புலிக்குடம்பு கொடுத்த போதிவானவன் ; பல்லுயிர்களின் மாண நோக்காது புலியது பசிவருத்தந் தீர்ப்பது நன்மையாயில், ஸம்வத்தார் பலரும் தண்ணீருண்பதோர் பொய்கையிலொரு [5]மஹாஸ்தவிரர் குட்டநோயால் வருந்துவார் வருத்தந் தீர்ப்பலென்று ஒழிந்த சங்கத்தார் மரணநோக்காது ஒரு உபாஸகன் விஷவிசேஷமாகிக் குட்டநோயுடையார்க்குப் பொறுப்பதொரு மருந்தினைக் கரைத்தான் ; குடித்த சங்கத்தார் பலரு மரித்தார் ; ஸ்தவிரர் பிழைத்தார்; இவ்வழி யவனுக்கு நன்மையுண்டாமென்பது. (கூச)

1 விசாகை - புத்த பக்தியுள்ள ஒரு பெண். 2 நன்று - பெரிதும்.
3 'என்றனர்' என்றும் பாடபேதம்.
4 வியாக்கிரீ ஜாதகம்.
5 மஹாஸ்தவிரர் - பெரிய பௌத்த பிக்ஷு.

361 அல்லவர்கள் சாதலை யறிந்தனன் அவனெனில்
நல்லதில்லை நஞ்சினு லென்றுநாட்டு வாயெனி
னெல்லையில்ல பல்லுயிர் தன்கணுள்ள வெஞ்சனுங்
கொல்லவந்த வூன்களுங் குற்றமென்ற வாறுகொல்.

இதுவுமது.

சங்கத்தார் சாவதறிந்து, நஞ்சுகரைத்தலிற் பாபமெனில், தன்னுடம்பிற் பிராணி மரிப்பதூஉம், மாம்ஸத்துப் பிராணி மரிப்பதூஉ மறிந்து, உடம்பு கொடுத்தலானு மூனுண்டலானும் பாவமாமென்பது. (சுகு)

வேறு

362 நீட்சி திரிவா மயிருகிர் காட்டினை
மாட்சியில் லாமயிர் மன்னுயி ருள்வழித்
தாட்க ணிமிருந் தலைநிமி ராவெழல்
காட்சி மரத்திற்குக் காறலை யெங்கும்.

இது, "மற்ற மாமரங்களு"........ற்று.

இருவகை மரங்களு முயிருடைய; [1]தத்ஸவத்து நீருமெருவு முதலாயின பெற்றுத் திருப்தியோடு வளர்தலால்; இறைச்சியுஞ் சோறும் பெற்றுத் திருப்தி யோடு வளர்ந்த சாக்கியனைப் போலவென்று நாதகுப்தனர் சொல்லுதற்கணிந்த ஹேதுவினுக்கு [2]அஸித்த விருத்தமென்னுந் தோஷமில்லாமையில் [3]வியபிசார தூஷணஞ் சொல்லுதும்; யாங்ஙனமெனில், [4]கொடிப்புற்றும், மயிரும், உகிரு முயிரில் பொருளாகியும் வளர்தலினிந்த ஹேது வியபிசாரியென்று சொல்லுவா யெனில், அவ்வாறு சொல்லுவதனை பேதைமையாம்; நீ காட்டிய விவை துய்த்து வளர்கின்றன வன்மையினென்பது.

என்னையெனில், புற்றுவது கறையான் முதலாகிய ஜீவன்கள் கீழின் மண் மேலே யேறட வோங்குவது; மயிரு முகிரும் ஜீவசரீரத்தி னீங்கினல் வளராவா தலில் ஜீவசரீரத்து கினற வழியும் ஜீவஸ்பர்சமுடைய அடியில் வளர்வதல்லது மேலும் சுற்றும் வளரா; மேல் வளராமை நரைத்தமயிருக்குக் கறுப்பிடுவாருழையு முகிருக் [5]கைவண மிடுவாருழையுங் காண்க. ஆதலாற் றுய்த்து வளர்த லிலவென் பது. மரங்கள் மனுஷ்யர் வளருமாறு போல வெவ்வழியுந் தக்கவாறு வளரும். அவற்றின் துய்ப்பும், திருப்தியும் பிரசித்தமாமாறுங் காண்க.

இனி, அசேதனந் துய்த்துத் திருப்தமாய் வளர்ந்தால் வருங்குற்ற மென் னென்பாயாயில், அசேதனத்துக்குத் துய்ப்புந் திருப்தியும் வளர்ச்சியுமாமாயில்,

1 தத்ஸவத்து-அதே ஜீவகாலத்து. 2 அஸித்த விருத்தம்-தருக்க குற்றம்.
3 வியபிசார தூஷணம் - தருக்க குற்றம்.
4 கொடிப்புற்று - கொடிபோல் வளரும் கறையான்புற்று.
5 ஐவணம் - மருதான்றி.

சேதனு சேதன வியவஸ்தை கெடும். ஆதலாலிந்த ஹேதுவினுக்கு வியபிசார பிரசங்கமுமில்லாமையில், அகளங்கமாகிய இந்த ஹேதுவினுல், மரங்களுக் குயிருண்மை முடியுமென்பது.

இருவகைமா மென்றது - புறக் [1]காழ்ப்புடைய புன்மரங்களையும், அகக் காழ்ப்புடைய நன்மரங்களையும். எனனை? [2]"இருமரப் பெயரு மம்மொடு சிவணு" மென்றுராகலின். (கூகூ)

363 மரங்கள் வளரு மெனமன்னுங் கூம்பி
விரிந்த விலையின் வேற்றுமை சொன்னுய்
பொருந்து மிவையு மல்லவு மன்றே
வொருங்கிவ் வுலகத் துயிர்களு மென்றுள்.

இது, "உறங்குதலான்"........ற்று.

"மரங்களுயிருடைய உறஙகுதலான், [3]சாக்கிய மேஷாதிவத்" என்றதற் கண் புளிமுதலாயின இலை குவித்தலல்லது தூங்குகின்றனவல்ல; அவை உறங கிலும் ஆலுமகிழு முதலாயின வுறங்காமையி லவையுயிரிலவாகாவோவெனில்,உயி ருண்டாக நின்ருற் கருதப்பட்ட மனுஷ்யரும், விலங்கும் உறங்குவழி இமை குவித் துறங்குவனவு மிமை குவியா துறங்குவனவுமாம். மயின் முதலாயினவு மக்க ளுள் ளொருசாராரும் விழித்துறங்குவதுபோல ஆலுமகிழு முதலாயினவு மிலை குவியாதுறங்குகின்றனவாம். புளி முதலாயினவு மிலை குவித்தலல்ல துறங்கின வல்லவெனில், பசு முதலாயினவும் ராத்திரிகளிலுறங்குகின்றனவல்ல; கண்ணி மை பொருந்துகின்றன வெனவு மமையும். மயக்கமுண்மையி லுறங்கின வெனில், மயஙகினவை யென்பது யாதினுனறிந்தனை? ஒருகால் நிர்வியாபாரங் களாகி, ஒருகால் [4]வியாபரித்தலி லறிந்தேனெனில், உறங்காது மவ்வாறு செய்யலாம். இனி, யாது சொல்லினு மிக் கடாவரும்.

இனி, இராத்திரிகளிற் பசு முதலாயின உறங்குமென்பதற்கு லோகமே சான்றெனில், இராத்திரியிற் புளி முதலாயின வுறங்குவதற்கும் லோகமே சான்று. புளி முதலாயினவற் றுறக்க முலகத்துக் கேட்டுக்கொள்ளென்பது. சேதனத்தல்லது சம்பவியாத உறக்கத்தைப் புளி முதலாயினவற்றுக் காண்டலி னவை சேதனங்க ளாமாறுபோல, ஒழிந்த மரங்களு மவற்றே டொத்தலிற் சேதனமாமென்பது. முன்னுரைத்த ஹேதுவால் மரங்களுக்குச் சேதனத் துவம் ஸித்திக்கவைத்து, இந்த ஹேது கூறவேண்டுமோ வெனின், ஒன்றைப் பல ஹேதுக்களால் அறிவது குற்றமல்ல; "வ்ருஷிரஷி ஜைவொஷதி விஸேஷாஸ வாயு ஸம்வாரவிஸேஷாஸ நதிவ்யாவாஹவிஸே ஷாஸ" யெனப் பல ஹேதுவுண்மை குற்றமாகாதவாறுபோல.

---

1 காழ்ப்பு - வயிரம். 2?
3 சாக்கியமேஷாதிவது.
4 வியாபரித்தல்.

அன்றியும் மொக்கலன் சொன்ன குற்ற நீக்குதற்கு இச்சொல்லப்பட்டன வெனவு மமையும். இது, மேல்வருமவையிற்றுக்கு மொக்கும். வளர்தல்-உறங்குதல். (கஎ)

364 வயாத்திரு வாக்கி வளர்பூ சணிக்குத்
தயாச்செய்கை தீதென்னும் தத்துவங் கண்டா
யுயாப்பிழைத் தாய்மெழு கூடுடு பட்ட
வயாவதற் கீண்டுப் பயத்தலி லன்றே.

இது, "நட்டுச்சோறவாவுறு" ...ற்று.

மரமுயிருடைய வேட்கை யுடைமையால், "ஜெயாஜெஜேகூஷ்ராவிகஜ" என்றற்கண் வட்டாகிய மெழுகு அக்னியைச் சேர்ந்தால் இளகிப் பெருத்ததெனினும், அவாவிற்றாகாதவாறுபோல பாக லெச்சிலாலும், அவரை கழுநீராலும், சுவை பாற்சோற்றாலு மெருமுதலானவற்றாலும் வர்த்தித்தனவேனும், அவாவினவாகாமையி னிந்த ஹேது அஸித்தமெனில், மெழுகுவட்டு அக்கினி ஸந்நிதானத்துப் பெருத்ததே யெனினு முனபுள்ளதிற் சிறிது குறைவதல்லது வர்த்தித்தலின்று ; மரம் அவ்வாறன்றி வாத்திப்பது காண்டுமோதலிற் பிழைக்க வுசாவினுய். நீருங்காலத்து வாடிநின்ற மரம் மழைபெற்றுத் திருப்தமாவதறியாயோ ? பட்ட மரத்தினும் படாது வாடிநின்ற மாத்தினும் மழைபெய்த வழி யொக்குமோ ? ஜலமுதலாயின யதாகாலம் பெற்றன ஸுகுமார மாவதூஉங் காலங்களிற் பெறுதன நறுங்கி வளர்வதூஉம், நீருங் காற்று முதலாயின வொருகாலும் பெறுவிடிற் சிறிது நாளிற்பட்டுப் போவதூஉம் மனுஷ்யரைப்போலக் காண்டலி லவற்றுக்கு அவா வுண்மையில் அவாவுதலெனனும் ஹேது சித்தமேயாதலின் [1]உசாப் பிழைத்தா யென்பது.

உயா - உசா; விகாரம். வயா - வேட்கை; வருத்தம்; என்னை ? [2]"வயாவே வேட்கை வருத்தமாகும்" எனறாராகலின்.

இனி, வேட்கை அசேதனத்தில் சம்பவியாமையில் [3]அஸித்தவிருத்தா நைகாந்திக தோஷமினமையில் [4]கமகமெயா மெனபது. வேட்கை அசேதனத்தில் சம்பவிக்கில சேதனுசேதன வியவஸ்தை கெடும். அஃதேயெனின அக்கினி யிந்தன முதலாயின பெற்று வளர்தலில் திருப்தியும், வளர்ச்சியும், வேட்கையு முடைத்தாமோவெனி னுடைத்தாகாது. என்னை? இந்தனுதி காரணமுள்ளதுணையும் அககினியாகிய கார்யம்பெருகுவதல்லது அவாவி அநுபவித்துத் திருப்தமாய் வளர்கின்ற தன்மையினென்பது. இனி, மரமும் ஜலாதிகாரணமுள்ள துணையும் வளர்தலின்றி யிளம்பருவத்தே வளர்ந்து பினபு ஜல முதலாயின சம்பன்னமாகப் பெறினும் வளர்தலின்றி [5]அவசானகாலத்துப் படுதலும், ஜல முதலாயின அளவுக்கு மேற்படப் பெறிற் சில ரோகங்களாற் பீடிதங்களா

1 உசா - வினு ; கேள்வி. 2 தொல்காப்பியம் - உரி.

3 அசித்தம், விருத்தம், அநைகாந்திகம் - மூவகை தருக்க குற்றம்.

4 கமகம் - முடிபு. 5 அவசானகாலம் - கடைக்காலம்.

கிப்படுதலும் இளம்பருவத்து சுகுமார சரீரத்தவாதலும், முது பருவத்து [1] ரூக்ஷகர்க்க சசரீரத்தவாதலும், வெட்டுதல் முதலாயின வொழியவும் ஜல முதலான வுண்டாகவுஞ் சில மரங்கள் சாதலும், மக்களைப்போலக் காணப்படுகின்றது. அக்கினி யவ்வாறன்றி [2]இந்தனாதி பெறிற் கல்ப காலத்தளவும் வர்த்தித்தே நிற்கும். ஜல முதலாயின பெறினும் அவசான காலத்துப்படுதல் தினை முதலாயின வற்றிற் கண்டு கொள்க. ஆதலின், மரங்கள் காரணகாரிய வகையாலன்றி யவாவித்து வளர்கின்றன வென்பது. (கூஅ)

365 யாதினு மாழ்குமம் மாழ்கியு மென்றுழி
நீதின்னுந் தோலை நெருப்பொடு கூட்டத்தி
ஞேதினை தேறுற நீர்க்குரைத் தாய்மற்றுஞ்
சேதனை யில்லாய் திரிவென்னை வண்ணம்.

இது, "மெய்தீண்ட விலை"...ற்று.

மாமு முயிருடைய; [3]மாழ்கி, சுண்டில் முதலாயின மாழ்குதலால்: அட்டை முதலாயினபோல எனறற்கண், நின்றுற்றின்னைப்படுந்தோல் நெருப்பொடுகூடிச் சுருளுமதனையு நின் ஹாூஉயம்போலக் கலங்கிய நீரிற் கலக்கந் தேற்றும் பால்தேய்க்கத் தெளிவதனையுங் காட்டினு யறிவிலாதா யாகையால், தீண்டினுங் கற்கொண்டெறியினு மாழ்கி முதலாயின மாழ்குவதூஉம், முன்னின்ற மலர்ச்சி யொழிவதூஉம், சிறிது பொழுது கழிந்தான் முன்புபோல்வதூஉங் காண்கின்ற வன்றோ? தோல் நெருப்பொடு கூட்டத்துச் சுருள்வதல்லது மாழ்குகினறதோ ? மாழ்கில் யாதினுலு மட்டை முதலாயினபோல மாழ்கவேண்டுமன்றோ ? கலக்கமும் தேற்றும் பாலொடு கூடிய வழியன்றி யாதினுந் தெளியுமோ ? ஆதலால் தோல் முதலாயின மாழ்குகின்றன வன்மையி லிந்த ஹேதுவினுக்குத் திரிவெவ் வண்ணமென்பது. இன்னுந் தீண்டமாழ்கி முதலாயினவும், அட்டை முதலாயினவும் மாழ்கு நீங்கினுற் காரணமின்றி முன்புபோலே யாம். தோல் வலிய நிமிர்க்குமளவுஞ் சுருண்டே கிடக்குமாதலால் அது மாழ்குகின்ற தன்றென்பது.

சேதனையில்லா யென்பது - அறிவிலா யென்றவாறு. (கூகூ)

366 அரும்பு மலரு மரும்பிணி தீர்வு
மொருங்குதங் காரணத் தாக்க முணர்த்து
மரங்களு மன்னுயி ரெய்தின வென்ன
விரும்பொடு காந்த மியைவி றிரிவே.

இது, "தீயுற்றூற் கொடியரும்பு"...ற்று.

மரம் உயிருடைய; பிணிப்பட்டுச் சுடுதன் முதலாய பரிகாரங்களாற் பிணி தீர்ந்தரும்புதலால்: சுடுதன் முதலாயினவற்றூற் பிணிதீர்ந்து பருக்கும் பசு முதலா

1 ரூக்ஷ, கர்கசம் - சொற சொறப்பு, கடினம்.
2 இந்தனாதி - விறகு முதலியவை. 3 மாழ்கி - தொட்டால் சுருங்கி.

யினபோல. இன்னும் மரங்கள் உயிருடைய: சிறைப்பட்டுச்சிறையினீங்கி மலர்தலால் : சிறைப்பட்டுச் சிறையினீங்கி முகமலர்ந்த [1]மனுஷ்யவது. மரம் உயிருடைய : பிணிப்பட்டுப் பிணிதீர்தலால்: மனுஷ்யவது.

'அரும்புதல், மலர்தல்' என்ன வேண்டாவோ? 'அரும்பு' - 'மலர்' என்றதென்னையெனில், வேண்டா; தல், கை, சி - என்பன முதலாயின பகுதிப்பொருள் விகுதி; உணர்தல், உணர்கை, உணர்ச்சியென விவற்றுளெல்லா முணரென்பதன்றே பகுதி? அதுபோல வீங்கு மரும்பு, மலரென்னும் பகுதிதானே யரும்புதல், மலர்தலென்னும் பொருடோற்று மென்பது; " நுவலருங் காம்பிளைச்சி " இதனகண் நுவலென்பது நுவறலென்னும் பொருள்பட்டது போல வென்பது.

மல்லிகை முதலாகிய கொடியோர்சாரன சுட்டாற் பிணிதீர்ந் தரும்பும்; மாமுதலாகிய மர மோர்சாரன அவற்றினது கொம்புகளைப் புரிச்சுற்றியாயினும், பிறவாற்றாயினும் சிறைசெய்துவிட்டு நீரிறைக்க அக்காலத்துப் புஷ்பிக்கும்.

இனிப் பிணியாவன - நெல்லுட் [2]செம்பை, உகுநை, தாட்புழு முதலாயின; வெற்றிலைக்கு நாவேறு, சுருட்டை முதலாயின; இவ்வாறே யொழிந்த பிணிகளு மறிந்து கொள்க.

பிணி வருவதும், சமிப்பதும் கர்மங்களா லன்றே? அன்றாயில் [3]ஜீவபுஙங்களுக்கு கோமாரி, கருநோய் முதலாயினவும், மக்களுக்கு வெக்கை முதலாயினவுந் தானே வரவேண்டுமன்றே. ஆதலால், மரங்கள் கர்மத்தாற் பிணிப்பட்டனவாம். இனி யப்பிணிகள் தீருமிடத்து உப்பு முதலாகிய ஔஷதங்களும், மந்திரயந்திர பிரயோகங்களும், கர்மோபசமனமும் சாதனங்களாம். இவ்வாறுகுதல் அசேதனத்து ஸம்ஹவியாமையி விவை மரங்களுக் குயிருண்மை முடிக்கு மென்றற்கண், " வாங்கு காந்தம் வாய்த்த வாளினை " ச்சமாதானம் பண்ணுதலில் வாட்பிணி தீர்ந்ததாமோவெனி லழகிதன்று. என்னை? மரங்களும், மனுஷ்யரும் பிணி தீர்ந்து மல்குகின்றவாறுபோல வாள் முன்பு நின்றவளவின் மிக்கதுண்டோ? இவ்வாறு காட்டிய திரிவு பொருத்தமில்லை யென்பது.

இல்லை யெனப திலலென்று நினறது; [4]" காரெனச் செய்தாரு மில் " என்றாற்போல வெனபது. (௪00)

367 ஒப்ப மரங்கட் குயிருண்மை யாமினி
யிப்படித் தோன்று மிருதுக்கள் சார்ந்தெனச்
செப்பிய வேதுத் திரிவெனக் காட்டிய
வெப்பங் குளிரவை தாமவை யேயால்.

இது, "தோற்ற"..........ற்று.

மரங்கள் உயிருடைய: இளவேனிற் காலத்துச்சுகித்து, பனிக்காலத்துத்துன்புறுதலால்: மனுஷ்யவது: என்றற்கண், அவ்வகை யிருதுவிலும் வெப்ப முதலா

1 மனுஷ்யவத் - மனிதனைப்போல.
2 'செப்பை' என்றும் பிரதிபேதம். 3 கால் நடை. 4 நாலடியார் : 103.

யின தோன்றுதலில் அவற்றுக்கும் உயிருண்டோவென்று நீ கூறியது, [1]அஸங்கதம், வெப்ப முதலாயின தாமே ருதுக்களாதலா லென்றவாறு. (௩0௧)

368 மரங்களை யொப்புமை யாலுயி ரென்னக்
கிரந்தியும் வெப்பங் கிளக்குவை யாயி
னிரந்த வுடம்பின் விகார நினக்குப்
பரந்துண ருண்மையைப் பார்ப்படுத் தாயால்.

இது, “ ஒப்பவற்றாலே ”.........ற்று.

மரங்கள் உயிருடைய ; கிளை யொப்புமையால். கிளை யொப்புமை யாவது - வாழைக்கன்று வாழையாதன் முதலாகக் கொள்க. பசுவின் கன்று பசுவானது போல.என்றற்கண், கிரந்தியும் வெப்புங் கிளையொக்குதலி லவற்றுக்குயிருண்டே யென்று திரிவுசொல்லினை ; அவை கிளையொக்கு மெனினு முயிருடைய வுடம் பிற் றோன்றுதலி லுயிருடைய வென்றுமாம், சவத்திலவை தோன்றாமையின்.

இனி, மரத்தின் கிளையும் மரமானாற்போல, வெப்பு உடம்பின் கிளையாய்த் தோன்றுகின்றதோ ? வாழை தொட்டாற் குளிர்வதுபோல உடம்பு தொட்டாற் சுடுவதன்றோ வெப்பாவது. நினக் குணர்வுண்டாயின் மண்ணுக்கு முணர் வுண்டாமென்று அவன் [2]ஜாட்யஞ் சொன்னவாறு. (௩0௨)

369 வாட்டங்க ளுண்மையின் வாழ்மரஞ் சேர்நதவை
நாட்டிய வாதலி னல்லுயி ரோவெனக்
காட்டிய தோலொத் திராமையும் வாடுமத்
தோட்டஞ்செய் சேம்புயிர் தொன்முடி வன்றோ.

இது, “ சேர்த்திட ”.........ற்று.

மரங்கள் உயிருடைய: சேதிக்கவாடிப்படுதலால்: மனுஷ்யவது: என்றற்கண், தோல் கீறிப்போகட வாடுதலி னதற்குயிருண்டோ வெனில், அஃதுணங்கு கின்றதல்லது வாடுகின்றதல்ல ; எனனை ? கீறிப் போகடாவிடினு முலரு மாத லால். மரம் சேதிக்கிலல்லது வாடாதாதலி லிதற்கொவ்வாதாம்.

இனி, சேதிக்கப்பட்டாலுஞ் சேம்புங் கரும்பு முதலாயின வாடாமையில் [3]பாகாஸித்தமாகிய இந்த ஹேது கமகமன்றெனில், ஈரவிறகு முதலாயின வற்றிேனாடு கூடிய நெருப்பினல்லது நெய் முதலாயின வற்றிேனாடு கூடிய நெருப்பிற் புகையின்மையிற் புகைபாகாஸித்த மாதலில் அக்கினிக்கு கமக மன்றாதல் வேண்டும்; அது கமகமாகி லிதுவும் கமகமாம். ஆதலால், சேதனத் தல்லது சம்பவியாத இந்த ஹேதுவால் மரங்களுக் குயிருடைமை முடியும். சில மா முயிருடைய வாளுற் பிறமரங்களு மரங்களாதலி லுயிருடையவா மென்பது.

---

1 ஒவ்வாது. 2 ஜாட்யம் - அறிவின்மை.
3 பாகாஸித்தம் - தருக்க குற்றங்களில் ஒன்று.

தொன்முடிவன்றே வென்பது - உறங்குதலால் என்னும் ஹேதுவா லுயிருடைமை முடிந்தவாறு முடியுமன்றே வென்றவாறு; முன் சொன்ன ஹேதுக்களால் முடியுமென்றவாறுமாம். ஈராமையும் வாடுமென்பதனைக் குறுக்கல்வழிக் குறுக்கி, " இராமையும்வாடு " மென்றாரென்பது. தோல் ஈரினு மீராவிடினு மொத்து வாடுமெனபதாம். இனி, 'ஒத்திராமையின' எனப்பாடமோதி, 'உண்டு' என வருவித்து, 'தோலொத்திராமையு முண்டு' என்று முடித்துச் சேம்புவாடு மென்றும் பொருளுரைக்கப்படும். சேம்புவாடுதலாவது - சேம்புங் கரும்பு முதலாயின சேதித்துப் போகட்டாற் சிறிதுகாலங் கழித்தாயினும் வாடும் ; காட்டட்டை முதலாயின சிலநாட் கிடந்து சாவதுபோல வென்பது. 'வாழ்மரஞ் சேர்ந்தவை வாட்டங்களுண்மையில் நல்லுயிரென நாட்டிய வாதற்கண்' எனக் கூட்டி யுரைக்க. சேர்தல் - சேதித்தல். (௩0௫)

370 அற்ற வுடம்புக ளாறுத லான்மரந்
தெற்ற வுயிருண்மை செப்பதற் றென்மெனப்
பெற்றபி[1](ழை) சொல்லிப் பிதற்றெழுந் தாரொப்பக்
குற்ற மிவையெனக் கூறுதி யன்றே.

இது, "நேரொத்து வாடுறு"..........ற்று.

மரங்கள் உயிருடைய; புண்பட்டுத் தீர்ந்தவடு ஆறுதலால்: புண்பட்டுத்தீர்ந்த மனுஷ்ய சரீரம்போல: என்றற் கண், காரத்தாற் பொன் [2]கதுவாய்ப்பட்டால் தீரும்;காந்தத்தால் வாள் கதுவாய்ப்பட்டால் வடு ஆறும் அவற்றுக்கு முயிருண்டோ வெனின், பொனனும் வாளும் சத்தியிட்டு ஒக்கத்தட்டினவாறு போலக் காரமுங் காந்தமும் படுதலி லொத்துநிரவி நின்ற தல்லது வடு ஆறுதலில. உளதேல் மரங் குறைபட்டது நிரவினவாறுபோலக் காரத்தாற்குறைபட்ட பொன்னிரம்பவேண்டும் என்பது. இன்னும் மரம் ஸ்வயமே வடு ஆறும்; பொனனும் வாளும் காரத்தாலுங் காந்தத்தாலு நிரவி நிற்குமென்பது. நீ பித்த முடையாரைப்போல என சொல்லுகின்றா யென்பது. (௩0௪

371 காட்டின மண்ணை முதலா வுடையன
வோட்டி யுரைதத வுயிரென வொட்டலர்
நாட்டினுள் வாழ்பவ ரினனரென் றுவநத
நாட்டை யவரென்ன நாட்டிய வாறே.

இது, "மண்களுங் கற்களு"..........ற்று.

நின்றாற் காட்டப்பட்ட மண் முதலாவுடையனவற்றுக்கு உயிருண்டென்று ஒரு காலமுஞ் சொல்லா ரிது நின பேதைமையாற் சொல்லினாய்.

[3]" நீர்மர நிலங்கள் செல்லும் விலங்கொடு மக்கடம்மில் " என்பது தானும் நாட்டுள் வாழ்வாரை நாடென்றவாறு போல, பிருதிவியில் வாழுஞ் சீவன் பிருதி

1 விடுபட்டதற்குக் கூட்டப்பட்டது. 2 கதுவாய் - வடுபட்டால்.
3 மேருமந்தரம் - வைசயந். 74.

வியென விடத்தின்பெய ரிடத்து நிகழ்வதற்காகிய ஆகுபெயர் வகையாற் சொல்லப்பட்டதென்பது. (கOடு)

372 தாவர மாய மரமிவை தாமென
யாவருஞ் சொல்லுப வஃது மறிந்திலை
நீவி ரெவர்சொல்லச் சொல்லினீ ரென்றுநின்
சீவரம் போற்கட்டில் செப்புவ தென்னோ.

இது, "வந்திங்கு வைகுங்கள்".........ற்று.

யாம் மரங்களை ஸ்தாவரஜீவ னென்பதல்லது, ஒன்றினொன்றேறுதலுந் தேசா தேச பிராப்தியுஞ் சொல்லோம்; நீ யாவர் சொல்லக் கேட்டு இது சொல்லுகின்ற யென்பது.

[1]விலங்கின் வகையும் விரிவன யான்சொல்ல வேண்டுதியே
...................................................
னிலங்களி னிற்பவுஞ் செல்பவு மாமென நிற்பனதா
மிலம்பட லின்றியிவ் வையகத்......"

தாதலின், சீவரம் போலப் பிறராற் [2]புடைபெயர்வதாகிய [3]கட்டிலெற்றுக்குக் கூறினை யென்றவாறு. (கOசு)

373 மக்களுட் டோன்றிய போழ்த மரவுயிர்க்
கொப்ப வுடம்பறி வன்றியொன் றில்லெனிற்
றக்கதன் றன்மை யுடைப்போ [4]தி சத்துவன்
மிக்கதென் ஞோதிக்)கு வேற்றுமை வேண்டார்.

இது, "ஓரறி வாமுயிர்"......ற்று.

(இ - ள்) ஏகேந்திரிய ஜீவன் மரித்து மக்களுட் டோன்றினும் ஏகேந்திரிய ஞானமே யாதல் வேண்டுமெனில், முயலாய்ப் பிறந்து அல்ப ஞானவானாகிய வது மனுஷ்யனாக சாஸ்திரார்த்த ஞானவானாக வேண்டுவதில்லை. வேண்டில், மனுஷ்யருட் பிறந்தாற் பஞ்சேந்திரிய ஞான முடைத்தாமென்பது தக்க தன்றென வேண்டாரென்பது. ஞானாதி ஸ்வபாவமுடைய ஜீவன் பரலோகத்துச் செல்வதல்லது ஞானாதி குணங்கள் பரலோகத்துச் சென்று வேறுபட்டுப் பிறக்குமென்பது வேண்டா. வேறுபட்டுப் பிறக்க வேண்டினன்றே, ஏகேந்திரிய ஞானமே சென்று பிறத்தலாற் பின்னும் ஏகேந்திரிய ஞானமே யாக வேண்டுவது; அஃதன்றி ஏகேந்திரிய ஞானத்தோடு நின்ற ஜீவன் வேறுபட்டுப் பிறக்குமென்றலி லெமக்குக் குற்றமாகாதென்பது. (கOஎ)

---

1 இந்நூல் - 77-ம் செ. (தருமவுரைச் சருக்கம்.)

2 புடை பெயாதல் - இடம் மாறுதல். 3 கட்டில் - ஆஸனம்.

4 இச்சொற்கள் சுவடிகளில் இல்லை; பூர்த்தி செய்தற்குச் சேர்க்கப்பட்டவை.

374 நாண முடைய மரமுத லியாவையும்
ஊணின வாழ்ந்துமுண் ணாவிடிற் சாதலைக்
காணவும் பட்டது கஞ்சியோ டல்லதை
[1]யாண மிலாப்பொரு ளாட்சியர் போன்றே.

இதுவும், மரங்க ளுயிருண்மை முடிக்கும்.

அறிவுடைய மரங்களெல்லாம் உண்ணின் வாழ்ந்தும், உண்ணாவிடின் வாடு வதுங் காண்டலினுயிருடைய: இவ்வாறாகிய சாக்கியனைப் போல வென்றவாறு. நாணம் - அறிவு. நாணமுடைய மரம் - ஏகேந்திரிய ஞானமுடைய மரம். (௧0அ)

**வேறு**

375 மயக்குடை யாட்சியி னூர்க்கு மரங்கட்கு மன்னுயிர்தாம
பயப்பட வொக்கு மெனவே யெனமன்னும் பற்றிலனாய்
வியப்புடை யாகம மீதென நீயும் விரித்துரைக்கு
நயப்பிர மாணங்கண் மேற்குற்ற நாடுவன் யானெனவே.

இதுவுமது.

உறங்குகின்ற சாக்கியனுக்குயிருண்டானவாறென்னென்று கேட்டற்கண், உறங்குகின்ற சாக்கியனுக்குயிருண்மை யாதெனின், கப்பியமே யென்று வாய் [2] வருவுதலின எனில், வருவாதபோது உயிரிலனும். இனியுயிர்த்தலா லுயிருண் டெனில், துருத்திக்கு முயிருண்டு உயிர்த்தலாலென்க. இண்டிறுக் கென்னு மனுகாரணத்தாற், [3]கொரக்கை விடுதலாற் சாக்கியனுக் குயிருண்டெனில், நீர்ப்புக் குருண்ட பானை யவ்வாறு கொரக்கை விடுதலினதற்கு முயிருண்டென்க. பல் இறுகுகின்றுனதலா லுயிருடையனெனில், உலர்ந்த மூங்கில்கள் நெறுக்கென்ற வி னுயிருடைய வென்க. இவ்வாற்றாற் போந்த பொருள் இவைபோலு நீ மர முயிரிலவென்று சொல்லியவாறென்பது.

இன்னு நீ சொல்லிய திரிவுகளால் மரத்துக்குயிரில்லையெனில், யான் சொல்லிய திரிவுகளா லுறங்குகின்ற சாக்கியனுக்கு உயிரில்லையா யவனை விறகி லிடப்படுமென்று சொல்லி, உறங்குஞ் சாக்கியனுக்கு மரத்துக்கு மொப்ப வுயி ருண்மை முடிப்ப, நயப்பிரமாணங்கண்மேற் குற்றஞ்சொல்லுவ னென்று சொன்னனென்றவாறு. (௧0௯)

376 நிற்றலுங் கேட்டினோ டுண்மையு மின்மையு நேர்தலினு
மொற்றுமை வேற்றுமை தம்மையு மொட்டப் படுதலினுங்
குற்ற மிவையிவை யாதலைக் கேளெனக் கூறினனே
முற்று மவளது பக்க மறிதலில் மொக்கலனே.

இது, "நின்றாகுந் திரிவாகு" மென்னுங் காதையை அநுகரித்தவாறு.

---

1 ஆணம் - அன்பு. 2 வருவுதல் - திறத்தல், பிளத்தல்.
3 கொரக்கை - குறட்டை.

நீலகேசியாரது பக்ஷமறியாது மொக்கலன் குற்றங்களுண்மை கேளென்று கூறினானென்றவாறு.

நிற்றல் - நித்யத்வம். கேடு - அநித்யத்வம் உண்மை - அஸ்தித்வம். இன்மை - நாஸ்தித்வம். ஒற்றுமை - அஹேதம். வேற்றுமை - ஹேதம். (கக0)

377 வேயொத்த தோளி நிலையுதல் வேண்டப் படுதலினாற்
காயத்தின் றன்மைய வாயெக் கருமமுங் காண்பரிதா
நாசத் தவமெனிற் றோன்றுவ தாமு நவநவமாந்
தோசத்த வாநின் பொருளெனக் கேட்டிது சொல்லினனே.

இது, நித்தியாநித்யத்திற்குக் குற்றங் கூறுவதாகிய, "நின்றாற் பிரகாசமேபோ" லெனனுங் காதையை அநுகரித்தது.

(இ - ள்) போன காதையிற் குற்றமிவையிவை யென்பதனாலிந்த தர்மங்களொன்றிற் கிடத்தலாவது அப்பொருளினது அவஸ்தையோ? பொருளிலே பிறவற்றாற்றாப்படுமோ? பொருளினது தன்மையோ? என்று மொக்கலன் கேட்ப, பொருட்டன்மையாலிவை பொருளிற் கிடக்குமென்று நீலகேசியார் சொல்ல, நித்யத்வம் பொருட்குத் தன்மையாயிற் பொருள் ஆகாசம்போல அர்த்த கிரியாகாரியன்றாம்; திரிவென்று நம்மால் வேண்டப்பட்ட அநித்யத்வம் பொருட்குத் தன்மையாயின் மேற் பிறப்பனவெல்லாம் புதியனவாம்.

இனி, இரண்டு மாகாதெனில், பொருட்கு நிகழ்ச்சியில்லை; ஒரு வகையாலெனில், பொரு ளொருவகையாற் கெடுவதாம் என்னுந் தோஷமுடைய பொருள்களென்று சொல்லினன் என்றவாறு. எனனே?

1 "சென்றெய்து மவத்தையோ சிலவற்றாற் றாப்படுமோ
வனறியு மப்பொருள்தோ றவ்வவத் தன்மையோ"

எனவும்,

2 "நின்ற தூஉந் திரிந்ததூஉ மன்றாயி னிகழ்வில்லை
யொன்றிய வொருவகையே லொருவகையாற் கேடுண்டோ"

எனவுங் கூறினாதலின். இவற்றுண் முதலது குற்றம், "இவையிவை" யென்பதனாற் பெறப்பட்டது. ஒழிந்தது, "தோசத்தவாநின்பொருள்" என்பதனாற் பெறப்பட்டது. புதியன தோன்றலாவது - முன்புள்ளது கையற நசித்துப் பிறிதொன்று தோன்றுதலாம். இதனால் நித்யமாயினும் அநித்யமாயினும் 3 பிரத்யபிஜ்ஞாநதி கூடாதென்று சொல்லினானென்பது போந்ததென்பது. (கக்க)

378 நின்றன வேயென்று நில்லல வேயென்று நேர்பவர்க்கு
மொன்றென வேயும்பின் வேறென வேயுந்தம் முண்மையின்கட்
சென்றன வேயென்றுஞ் செல்லல வேயென்றுஞ் செப்பினர்க்கே
லன்றென லாமோ வறைந்தபல் குற்ற மவையவையே.

இது, அக்குற்றங்களைப் பரிகரிக்கும்.

1, 2 கு. கே. 3 மீட்டுணர்ச்சி.

(இ - ள்) நித்யமே யென்றும், அநித்யமே யென்றும், ஒன்றே யென்றும், வேறே யென்றும், உண்டேயென்றும், இல்லை யென்றும், ஏகாந்தமாக வேண்டுவோர்க்கு நீ சொல்லிய குற்றமெல்லா மாகும். யாங்களவ்வாறன்றித் தேவதத்தனில் இளைஞன் யக்ஞதத்தனில் மூப்பன் பிரம்மதத்தனென்றவழியும், கல்வியானல்லன் கர்மத்தாற்றீய னென்றவழியும் என்ன குற்றமாம் ? பிரம்மதத்தன இளையானையுமன்றி மூத்தானையுமன்றி யொருவனிலிளையானுயு மொருவனின் மூத்தும் நல்லனையுமன்றித் தீயனையுமன்றி யொன்றுனல்லனுயு மொன்றுற்றீயனுயு மிருக்கின்றிலனே? அவ்வாறே யொருமுகத்தால் நிலையுதலு மொருமுகத்தா னிலையாமையு மொருபொருட் குரைத்து மாதலின் எமக்கொரு குற்றமுமில்லை யென்றவாறு.

[1]"கல்வியா னல்லனே காமாதி யாற்றீயான்
செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந்தனனும்
வல்லுவா னென்றொன்று வல்லா னிதுவனரே
நில்லாமை நிற்ற னிலை."

[2]"ஒருமுகத்தா னிலையினதே யொருமுகத்தா னிலையாதென்
றுரைமா றில்லா
விருமுகத்த தொருபொருளி னியல்பென்று மொழிந்தவர்தம்
மிருக்கை போலாம்"

என்ப வெம்மோத்தாகலின். ஒழிந்தனவற்றிற்கு மிஃதொக்கும். அவையு மொரோவொரு முகங்களாற் கொள்வேமாதலினென்பது.

"அன்றெனலாமோ" வென்னு மோகாரம் ஒழியிசைப் பொருண்மேல வந்ததாகலின் இத்துணையுந் தந்துரைக்கப்பட்டது. (கக௨)

379 நின்ற குணங்களி னித்திய மென்று நிலையிலவா
மென்ற குணங்க ளனியத மென்று மியம்புதலாற்
சென்ற குணங்க ளிருமையு மல்ல தவற்றினிற்றீர்ந்
தொன்றங்கு நின்ற பொருளுள்ள தேலா தெனவுரைத்தான்.

இது, "நித்ய குணங்களால்," "அநித்ய குணங்களால்" என்னுங் காதைகளை அநுகரித்தது.

போன காதைகளில் நித்யாநித்யாதிகள் ஒரோவோர் முகங்களாற் கொள்வேமென்றார்க்கு நித்யாநித்யங்கள் எம்முகங்களாற் கொள்ளப்படுமென்று மொக்கலன் கேட்ப, [3]அநுவிருத்த ஸ்வபாவமாகிய நின்ற குணங்களால் நித்யமென்றும், [4]வியாவிருத்த ஸ்வபாவமாகிய நிலையில்லாக் குணங்களால் அநித்யமென்

1 ?

2 ?

3 அநுவிருத்த ஸ்வபாவம் - ஒன்றும் தன்மை.

4 வியாவிருத்த ஸ்வபாவம் - வேறும் தன்மை.

றுஞ் சொல்ல, நித்ய குணங்களால் நித்யமா மென்றியேல் நித்திய குணங்களே நித்யமாம் பொருளல்லவென்று இஃதென் சொல்லினையென, கல்வியானல்லன் காமாதியாற்றீயன் என்றாற் கல்வியே நன்றாகப் புருஷனுக்கு நன்மை யென்னென்றும், காமாதியே தீதாகப் புருஷனுக்குத் தீமை யென்னென்றுஞ் சொல்லலாமோ வென்றார்க்கு, அநுவிருத்த வியாவிருத்த ஸ்வஹாவங்களை யொழியப் பொருளென்ப தொன்று கண்டிலே னென்றா னென்றவாறு.

ஒரு பொருட்கட் பிரகார பேதத்தால் தர்ம பேதம் வருமாறு மவ்வாறு வந்த வழி விருத்தாதி தோஷமின்மையுங் காட்டுதற்கு இந்த திருஷ்டாந்தங் காணப் பட்டதெனபது. உரையிற் கோடலென்னுந் தந்துரை யுத்தியா [1]னுபபத்திபற்றி யித்துணையுந் தந்துரைக்கப்பட்டது. (ககரு)

380 கேடில வாய குணத்தி னிலையுங் கெடுங்குணத்தி
னீடில வென்பது நேர்ந்தினி யப்பொரு ணோர்தலில்லாய்
மூடலை யாவதன் காரண மென்னை முடிகுணத்திற்
கூடல தாய குணிப்பொருள் கூறினர் யாவரென்றாள்.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ-ள்) அநுவிருத்த வியாவிருத்த ஸ்வபாவங்களை யியைந்தவற்றை யொழியப் பொருள் காணேனென்று பொருளை யியைந்தாய்; நீ மதி கெடுத்தற்குக் காரணமென்னோ? குணமுண்டானல் குணியில்லையாமோ? ஸர்வஞ்ஞ மநந்தகுணம் பிரணம்ய" எனவும் "குறையில்லாக் குணத்தானைக் கூறுதற்கு மேற்கொண்டான்" எனவும் குணமுங் குணியுமாகக் கூறுகின்றாயன்றோ? குணியை யொழிய குணம் ஸம்பவிக்குமோ? ஸம்பவிக்கில் நிலம்வலிது, நீர் அவளும், தீத்தெறும், காற்றுளரு மென, இதனுள்நில மென்பதோர் பொருளாகவும், வன்மையென்பததன் குணமாகவுஞ் சொல்லிய தென்னை? இந்த அயுக்தங்கள் நின்னை யொழியச் சொல்ல வல்லார் யாவரென்றவாறு.

இனி, அநுவிருத்த வ்யாவிருத்த ஸ்வபாவங்களும் பொருளுங் காட்ட வேண்டுமெனில், சமுத்திர மென்னும் பொருளில் ஜலஸ்வபாவமாகிய திரவ்யத்வ சைத்யாதிகள் அநுவிருத்த ஸ்வபாவங்கள். [2]கல்லோல முதலாயின வ்யாவிருத்த ஸ்வபாவம். இரண்டு ஸ்வபாவத்தையுமுடைய சமுத்திரம் பொருள். [3]அதவா ஸ்வர்ண மென்னும் வஸ்துவில் வர்ணமும், [4]வற்கெனவும், [5]வசஞ் செய்தலு முதலாயின அநுவிருத்த ஸ்வபாவம்; [6]வட்டு, முடி, கடகாதிகள் வ்யாவிருத்த ஸ்வபாவம்; இரண்டு ஸ்வபாவமுமுடையது ஸ்வர்ணம். இவற்றுள் வ்யாவிருத்த ஸ்வபாவங்களது கேடும், அநுவிருத்த ஸ்வபாவங்களது கெடாமையுங் காண்க. ஆதலால், நித்யாநித்யாத்மக மென்பது. (ககச)

1 உபபத்தி - முடிவு. 2 கல்லோலம் - அலை. 3 அதவா - அன்றேல்.
4 வற்கெனவு - அழகு. 5 வசஞ் செய்தல் - வசியஞ் செய்தல்.
6 வட்டு - வட்டில்.

381 குணங்களல் லாற்பொருள் வேறில்லை யாயிற் குறிப்பொருளாம்
பிணங்கல வாகிப் பிறபிற வாயிற் பிறபொருளா
முணர்ந்தன தாமிரு சொல்லினு மொன்றெனி னென்றவையா
நுணங்கிய கேள்வியி னுயொன் றுரையென நோக்கினனால்.

இது, "குணங்குணி," "பல குணமா" யென்னுங் காதைகளை அநுகரித்தது; குணகுணிகளுடைய வொற்றுமை வேற்றுமைகட்குக் குற்றங் கூறிற்றுமாம்.

(இ-ள்) குணத்துப் பிரித்துக் குணி காணேமாகில் குணியாகச் சொல்லுகின்ற உயிர் முதலாயின உயிரொன்றும், பிறவென்றும் [1]குறிபெற்றவாம்; வேறு பெறிற் குணகுணிகளிரண்டாம்; குணகுணிகளென்னு மவ்விரு சொல்லாலும் பொருளொன்றெனில் ஒரு பொருளாம்; புத்தி, மதியே பலவாத லொன்றாதலின்றிப் பலவுமொன்றுமா யிருப்பதொன்று படைத்துச் சொல்லிக்காணென்று சொன்னாக வென்றவாறு. (கசுரு)

382 நிலையா தெனவு முயிரில்லை யென்று நெறிமையினாற்
றொலையாத் துயரொடு தூய்தன்மை யென்றின்ன தொக்குளவாக்
கலையா விழுப்பொருட் கந்தங்க ளெந்திற்குங் காட்டுதலான்
மலையா திதுநுங்கண் மார்க்கத்தொ டென்றனள் மாணிழையே.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ-ள்) "வாய்மையை யுணராதான் உணரொருவ னுளனென்றுந், தூய்தென்று மினிதென்று முணர்பொருளைக் கடைப்பிடிக்கு" மென்பதனாலும், பிறவற்றாலும், பஞ்சஸ்கந்தங்கள் அநித்யமும், துக்கமும், அசுசியும், அநாத்மாவுமா யிருக்குமென்று சொல்லுதலி லுங்கள் மார்க்கத்தினோடும் பொருந்தும் பேதாபேதமுங் குணகுணி ஸதுபாவமு மலையா தென்றவாறு.

மலையாமையாவது - ஒருபுருஷபிண்டத்து ரூபவேதனை விக்ஞான ஸம்ஞா ஸம்ஸ்காரம் ஐந்துளதாகச் சொல்லுதலாலும், அந்தப்பிண்டத்து அநித்யாதி நான்கு முளதாகச் சொல்லுதலாலு மென்பது. என்னை? ரூபாதியும், புருஷபிண்டமும் பிரித்து வேறுகாணப்படா வெனினு முளவாய்த் தம்மி லொற்றுமை வேற்றுமையுடையவான வாறுபோலவும், அநித்யாதி நான்குகளும், பஞ்சஸ்கந்த பிண்டமு மிவ்வாறாகுதலு முண்மையினென்பது.

அன்றியும், [2]"ஒன்றாகுங்காரண காரிய மாந்தன்மையா, லன்றாகு மொன்றல்ல வவயவத்தின் றன்மையா" லென்று நீயும் ஒன்றும் பலவுமாகப் பொருள்களைச் சொல்லுதலானும் மலையாதென்பது. அன்றியும், [3]"யாதினைநீ நோக்கினை யிறந்ததற்குக் காரியமா, மாதலை யுடையதற்கே யினிச்சொல்லுங் காரணமே" யென்று நீ சொல்லுதலில் வர்த்தமானக்ஷணத்து ஸத்தாகியதொரு சித்தம் நஷ்ட

1 குறி - பெயர்.
2 ? 3 ?

மான சித்தத்திற்குக் காரியமாகியும், மேல் உத்பவிக்கும் சித்தத்திற்குக் காரணமாகியும், தான் சேதனமாகியும், அசேதன [1]வியானுதி யுடைத்தாகியும் இவ்வாறு அநேக தர்மங்களை யுடைத்தாதலிற் பலகுணமா யொருபொருள் விரிந்ததென்புழிக் குற்றங்கூறியது நின் பேதைமையாம். இதனுல் மலையாதென்பது. நீ நின் சித்தாந்த [2]மேத்திக் கொடுப்புழி இவ்வாறுசொல்லி, யா மிவ்வாறுசொன்ன வழிக் குற்றஞ் சொல்லுதியாயி னக்குற்ற முனக்கும் வருமென்று கொள்ளென்பது. இதனை மேலிற்காதையாலும் விளக்குகின்ருர். (கககூ)

383 ஆரிய சத்தைய லாற்கந்தம் வேறில்லை யேற்குறியா
மாரிய சத்தையுங் கந்தமும் வேறெனின் வேறவையாம்
பேரிவை தாமிரண் டொன்றினுக் கேயெனி னென்றவையாங்
கூரிய சிந்தையி னுயொன்று சொல்லென்று கூறினளே.

ஆரியசத்தை - அநித்யம், துக்கம், அசுசி அநாத்மா என்பன. அநித்யாதியோடும், பஞ்சஸ்கந்த பிண்டத்தினேடுங் குணகுணிகளை யொப்பித்துக் காட்டினவாறு. குணகுணிகள் பிரித்துப் பெறப்படாமையிற் குற்றமுடையவெனில், அநித்யாதியும், பஞ்சஸ்கந்த பிண்டமும் பிரித்துப் பெறப்படாமையிற் குற்றமுடைமையி லெமக்குக் குற்றமாகா தென்பது. என்னை? [3]"ஸோ ந ஷோ ஷொ நஷொஷ꞉

என்பதனுல் யாவர்க்கு மொப்பது குற்றமன்றென்பது.

[4]" இருவர்க்கு மொத்த பொருளை யொருவ
னொருவர்க்குத் தீங்கா வுரைத்தல்—இருவனையாய்
கட்டிக் கடைகிடந்தான முனழற்குச் சென்றனை
எட்டிச் சிரிப்ப தெனல்" (ககஎ)

384 சொல்லலன் யானெனச் சொல்லுவை யாயினுஞ் சொன்மலைவாஞ்
சொல்லல னென்ன வினவினு மென்னினுஞ் சொல்லிலையாஞ்
சொல்ல [5](வனல்ல) னொருவகையா [6](ச்சொலினவ்) வகையாற்
சொல்லிய குற்றங்க டுன்னு மெனவது சொல்லினனே.

இது, "சொல்லேன் யானென்றியே".... ....தது. இது, [7]அவக்தவ்யத்துக்குக் குற்றங் கூறும்.

(இ - ள்) பொருள்கள் அவக்தவ்யமென்று சொல்லில் ஸ்வவசன விரோதமாம். என்னை? சொல்லப்படா தென்ருயினும் சொல்லப்படுதலில். அதற்கஞ்சி வாளாவிருப்பினும் அவக்தவயமென்று நயம்பிறவாதாம். ஒருவகையாலிவை கொள்ளி னிருவகைக் குற்றமுமா மென்பது. (ககஅ)

---

1 ஐந்து பிராணன்களில் ஒன்று. 2 புகழ்ந்து.
3 தருக்க நூல் மரபு. 4?
5, 6 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது. 7 அவக்தவ்யம்-கூறவமையாது.

385 தன்மையி னன்மையுந் தன்னல் பொருள்களி னுண்மையுந்தம்
பன்மை யுடையவப் பண்புக ளெல்லா முடனுரையுஞ்
சொன்மை யுணரா தவர்கட்குத் தான்சொலற் பாடின்மையாற்
புன்மை யுடைய புறத்தீ ருரைக்கு முரையு மென்றாள்.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ - ள்) [1]வக்தவ்ய மொன்றுமின்றி, அவக்தவயமே பொருளென்று சொல்லுவார்க்கு நீ சொல்லிய குற்றமாம். நாங்களவ் வாறன்றி,

[2]"ஸதைவ நித்யவக்தவ்யாஸ்தக விபக்ஷாஸ்ருதேநயாஃ
ஸர்வதேதி ப்ருதக்ஷ்யந்தி பக்ஷ்யந்தி ஸ்யாதிதீஷ்யதே"

என்பதெம்மோத்தாதலின், ஒருவகையால் வக்தவ்யமென்றும், ஒருவகையால் அவக்தவ்யமென்றுஞ் சொல்லுதும். அஃது யாங்ஙனமெனில், [3]ஸ்வரூபாதி சதுஷ்டயமாகிய தன்னியல்பினில்லையென்று சொல்லப்படாது உண்டென்று சொல்லப்படும். [4]பரரூபாதி சதுஷ்டயத்தி லுண்டென்று சொல்லப்படாது இல்லையெனறு சொல்லப்படும். நித்யாதிகளு மிவ்வாறே அறிந்துகொள்க.

இனி, ஒரு பொருளின்கணுண்டாகிய அநேக தர்மங்களாலும் பொருளொருங்கு சொல்லப்படாது முறையிற் சொல்லப்படும். சொன்னூற் கொள்ளாத வாலோர்மத்தாதிக்குப் பொருள் சொல்லப்படாது; சிஷ்யாதிக்குச் சொல்லப் படும். இவ்வாறு பொருள்களிருப்பது காண்கின்றிலையோ நீ அயுக்தமே சொல்லுதி யெனறவாறு. (கககூ)

386 சேற்பொருள் போலரி சிந்திய கண்ணாய் சிதர்ந்துரைக்கு
நூற்பொரு டாம்பரி ணமைத் திரிவென நோக்குதியேற்
பாற்பொரு டான்றயி ராய பொழுதின்கட் பாழ்த்திலதேற்
பாற்பொரு ளேயின் றயிரெனச் சொல்லப் படுததென்றான்.

இது, "பரிணமிக்கும் பொருள்" ..த்து ; இது வஸ்து [5]நிச்சேஷமாகக் கெடாது நின்று ஒரு பர்யாயத்தைவிட்டுப் பிறிதொரு பர்யாயத்தை யடையு மென்றற்கட் குற்றங் கூறும்.

(இ - ள்) பொருள்கள் கெடாது நின்று ஒன்றொன்றாய்ப் பரிணமிக்கு மெனிற் பாலாற் றயிர் தோன்றியவழி பால் கெடாது நின்றதாயிற் றயிருள்ளும் பாலுளதாம். உளதாயிற் றயிரென்பதின்றிப் பாலேயா மாதலிற் றயிரென்று சொல்லுதலமையாதென்றவாறு. (கஉ0)

1 வக்தவ்யம் - கூறவமையும். 2 ?

3 ஸ்வரூபாதி சதுஷ்டயம் - } விசேஷக் குறிப்பில் காண்க.
4 பரரூபாதி சதுஷ்டயம் - }

5 நிச்சேஷம் - முழுதும்.

387 உருவப் பிழம்பப் பொருளென் றுரைப்பனிப் பாறயிர்மோர்
பருவத்தி னும்பரி யாயப் பெயரென்பன் பாலழிந்து
தருவித் துரைத்த தயிருரு வாய்மும்மைத் தன்மையதாந்
திருவத்த தென்பொரு ளாதலைத் தேர தெளியிதென்றான்.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ - ள்) உருவப் பிழம்பாகிய புற்கலத்தைப் பொருளென்பேன்; பால், தயிர் முதலாயின வதனது பரியாயமென்பேன்; பாற் பரியாயத்து நின்ற புற்கலத் திரவியம் தயிர்ப் பரியாயமடைந்து பரிணமித்தலில் உற்பத்தி, ஸ்திதி விநாசாத்மகமாகித் தூஷிக்கப்படாத பெருமைத் தாம் என் பொருளென்று தெளியென்று சொன்னானென்றவாறு.

இவ்வாறன்றிப் பாலும், பாலாய் நின்ற புற்கல திரவியமு மொழிவறக் கெட்டதாயிற் றயிர் பிறக்கைக்குக் காரணமில்லையாம்; இனிப் பாலாய் நின்ற பொருள் கெடாது தயிராய்ப் பரிணமியாதாகில், தயிர் யாங்கு நின்றும் வந்ததாம்? பாலொழிவறக் கெட்டுத் தயிர் பிறக்கிற் பாலிருந்த சட்டியிற் பிறக்கவேண்டுவதில்லை பிறிதொரு வழிப் பிறக்கவுமமையும்; ஒழிவறக்கெட் டின்மை யெய்திய வழிப் பிறத்தலாலென்றார்க்கு ஒழிவறக்கெட் டின்மை யெய்தும் பாற் பொருட்டயிராவுழி யென்று சொல்லேனை. என்னை?

[1]"பொன்றக்கே டின்மையாற் பொருள்வழிப் பொருடோன்று
நின்றற்ற வன்மையா னெல்வழி முளைதோன்று
மொன்றாகுங் காரண காரியததி னிகழ்ச்சியால்
அன்றாகு மொன்றல்லா வகையவற்றின் றன்மையால்"

என்பதோத்தாகலின். பாற்பொருளொழிவறக் கெடாதென்பா யெனின், யாங்கள் பாலாய் நின்ற பொருள் கையறக் கெடாது நின்று தயிராய்ப் பரிணமிக்குமென்று சொல்லிய வழி, என்ன குற்றஞ் சொல்லினையாகுவை யென்பது.

இத்துணையும், "மும்மைத் தன்மையதாந் திருவத்ததென் பொருள்" என்பதன் கருத்தால் கொண்டுரைக்கப்பட்டதென்பது. ஒழிவறக் கெடுதல் பௌத்த பக்ஷமென்பதற்குத் தயிரின்கட் பரிணமித்த பாலில்லை; 'பாலுளதென்றியே' லென்றவன் சொன்னதே ஞாபகம். (கஅஎ)

388 பெற்றது தானுங் [2]கும்மாயத் திரிபு பயற்றியல்பே
யிற்ற திதுவென திட்டமென் பாயிவ் விருமையினுந்
தெற்றெனத் தீர்ந்தோர் பொருளென்னை தேற்றினித்தேற்றலையேன்
மற்றது வாமை மயிரெனச் சொல்லுவன் மன்னுமென்றான்.

இது, "பிறந்த கும்மாயம்"...தது.

(இ - ள்) "பயற்றியல்பு கும்மாயத் திரிபு பெற்ற" தென்பதனாற் பயற்றியல்பு போய்க் கும்மாயத்திரிபு தோன்றிற்று பொருட்கென்பாயாயி னிரண்

1 ? 2 கும்மாயம் - பாயசம்.

டியல்பு மொழியப் பொருளென்ப தொன்று காணாமையி னில்லை யென்பே னென்று னென்றவாறு. (௧௨௨)

389 கெட்ட திரட்சியுந் தோன்றிய சாந்தும் பொருளெனவும்
பட்டன வப்பொருள் [1]பையைக ளேயென்னும பான்மையினால்
விட்ட திரள்வினுந் தோன்றிய சாந்தினும் வேற்றுமையாம்
நட்டமுந் தோற்றமு நாட்டே னுருவிற்கு நானுமென்றாள்.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ - ள்) திரட்சி முதலாகிய பயறுமியல்பு கெடப் பயறாய் நின்ற புற்கல திரவயம் கும்மாயமாய்ப் பரிணமித்தமையில், அவவிரண்டு பரியாய புற்கல திரவயம் அவவிரண்டு ஸ்வபாவத்திலும் வேறு பிரிதலுக் காணப்படாதே யெனி னுந் திரவயமுள்ளதாம். என்னை ? அவித்யாதியில் வேறு பெறப்படாத பஞ்ச ஸ்கந்த பிண்டமும், பஞ்ச ஸ்கந்தங்களை யொழிய வேறு பெறப்படாத புருஷ பிண்டமு முளவாகிய வாறுபோல வென்பது. பஞ்ச ஸ்கந்தங்களை யொழியப் புருஷ பிண்டமென்பது பரமார்த்தமன்றெனில், பஞ்ச ஸ்கந்தங்களை யொழியப் புத்தனெனபதூஉவுமோர் பரமார்த்த மினமையின் அதன் [2]விஷயதானாதி வியாவர்ணனம், ஆகாச புஷ்ப ஸௌரஹவர்ணனம் போல அயுக்த பிரலாப மாய்ப் பௌத்த சமயமும பரமார்த்தமன்றாம் என்பது. ஆதலால், கெட்ட திரட்சியுந் தோன்றிய கும்மாயமுமாகிய விவை புற்கலமாகிய திரவியத்தினது பரியாய மாதலி னவைதானே தோற்றமு நாசமுமாக வவற்றின் வேறல்லாத திரவயத்தினுக்கு நிகழ்ச்சி நாட்டுவன, வேறாக நாட்டே னென்றவாறு. (௧௨௩)

390 திரியும் பொருள்க டிரிந்தாம் பயறுகும் மாயமுமாய்
விரியு மெனவது வேண்டுகின் றுயறக் கெட்டமைக்கேற்
கரியும் முடையன் பயறொடு நீருங் கலந்துபெய்தா
லெரியுறு கின்றதன் றேயிது வோவொப்ப விறறதென்றான்.

இது, "பயற்றது திரிவாக"......தது.

(இ - ள்) பொருள்கள் கையறக் கெடாதொன்றொன்றாய்த் திரிந்தாமாதலிற் பயறு கும்மாயந் திரிந்த தென்பாயாயிற் பயறு கையறக் கெட்டமைக்குப் பயற் றோடுகூட வார்த்த நீர கையறக் கெட்டது தானே சாக்ஷியன்றோ ? பயறு கும் மாயம் பரிணமித்ததாகிலதனோடு வார்த்த நீர் திரியாதாய்ப் பரிணமித்தது. கெட்டதாயி னதுபோலப் பயறுங் கெட்டதென்று கொள்ளென்று னென்ற வாறு. (௧௨௪)

---

1 பையை - பரியாயம்.

2 விஷய தானாதி வியாவர்ணனம் - நாடு தானம் முதலியவற்றைப் புகழ்தல்.

391 பருமை யுடைய பயற்றின் வழியொன் றுபாவியுண்டா
யருமை யுடையவந் நீருக்கு மாவியன் றோவதன்றி
யிருமையுங் கெட்டுட னாயிற்கும் மாயமு [1]மில்லற்கனும்
பெருமையி னாலொன்று பெற்றொன்று பேறினமை பேதைமையே.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ - ள்) பயறு கும்மாயமாய்த் திரிந்தவாறு போல நீருமாவியாய்த் திரிந்தது. என்னை? ஒரு பாத்திரத்து நீர் வார்த்து ஒரு சீலையால் வாய்க் கட்டிக் கீழெரித்தால் சீலை அந்த வாவிப் பட்டு [2]உகைவதூஉ மச் சீலைமேலிட்டமா வெந்து பிட்டாவதுங் காண்கின்றிலையோ? பயறு கையறக் கெட்டுக் கும்மாய மாயதன் வழித் தோன்றிற்றாயி னீர் கையறக் கெட்டா லதன் வழி யொன்றுந் தோனறா தொழிந்தது நின் பெருமையாலோ பேதாய் எனறவாறு.

இரண்டுங் கையறக் கெட்டதாயினிரண்டின் வழியு மிரண்டு பொருள்கள் பிறக்க வேண்டுமென்பது. கேடொப்பின் ஒன்றனவழி யொன்று தோன்று மென்பதோர் நியதியில்லையெனின், ஒரு சித்தங் கெட ஒரு சித்தந் தோன்று மென்பதோர் நியதியில்லாமையில், ஸம்ஸார மென்பதொன்றில்லை யாகுமென் றார்க்குச் சித்தங்கள் பொனறக் கெடாமையின் மேன்மேற் பிறக்குமெனிற் பொன்றக் கெடுதலாவது-மேலொன்று தோன்றாமை யொழிவறக் கெடுதலன்றே? அவ்வாறு ஸம்ஸார சித்தங்களொழிவறக் கெட்டனவில்லையாயிற் கெடுதலுங் கெடாமையுமாய் நின்று சித்தாந்த விரோதமாகாதோ? ஈண்டும் பயறொழிவறக் கெடாமையிற் கும்மாயமுந் தோனறிற்றா யொன்றின் வழி யொனறு தோன் றிற்றாயொன்றினவழியொன்று தோன்றுமிடமெல்லா மொழிவறக் கெடாமை பெறுதும்.

இனி ஒழிவறக் கெட்டேயு மொன்றன்வழியொன்று தோன்றுமெனில், ஒழிவறக் கெட்ட புத்தன்வழியு மொருவன் றோன்ற வேண்டுமாதலி லவன் முக் தனன்றி ஸம்ஸாரியாம். இன்னுமொழிவறக் கெட்டதன் வழிப் பிறிதொன்று பிறக்கு நியதியில்லையெனில், ஸம்ஸார மில்லையாமென்பது முதலாகிய குற்றங் கள் வந்து [3]சக்ரகப்ரஸங்கமாம். ஆதலால், பயறு கெட்டுக கும்மாயந்தோன் றிற்றென்று கொண்ட நீ, நீர்கெட வொன்று தோற்றுமென்று கொள்ளாதது நின்பேதைமையாமென்பது. (கஉரு)

392 கெடுவன தோன்றுவ நிற்பன தாமுங் குணமென்றியேற்
கெடுவன தோன்றுவ நிற்பன தாங்குண மாயினக்காற்
கெடுவது தோற்ற நிலையுத றானப் பொருளெனவும்
படுவதஃ தாக வுரைப்ப தியாதின் பயத்ததென்றான்.

இது, "தோன்றினவுங் கெட்டனவு"மென்பது முதலாகிய காதை மூன் றையும்......தது.

---

1 இல் - இல்லை; அற்கல் - நிலை பெறுதல்.

2 உகைதல் - எழும்புதல். 3 சக்ரக பிரஸங்கம் - ஒருவித தருக்க குற்றம்

(இ - ள்) கெடுதன் முதலாகிய குணங்களல்லது குணியென்பது காணேன்; காணினும் அஃதோர் குறியென்றானென்றவாறு.

போந்த பொருளென்பது - முன்பு பல படியுஞ் சொன்னதனையே போக்கறுதியாற் [1] பின்புஞ் சொல்லுகின்றானெனபது. (௩௨௬)

393 கூறிய தெக்குண மக்குணந் தானக் குணிபொருளே
தேறிய தெக்குணி யக்குணி தீர்த்தில பல்குணமும்
வேறென வொன்றென விவ்வகை வேண்டுகின் றேற்கவைதா
மாறென்னுங் கொள்ளா முடிபு மொழிகின் மயக்கமென்றான்.

இது, அதற்குப் பரிகாரம்.

(இ - ள்) கூறப்பட்ட தியாதொரு குண மதுதானே யக்குணியினைத் தோற்றுவிக்கும். என்னை? குணியை யொழியக குணமென்பதொன்று பெறப் படாமையால். பெறப்படிற் [2]காகதந்தகாவிஷாணாதிக்கும் குணமுள தாகல் வேண்டும். அன்றியும் குணியெனபதொனறில்லையாயிற் குணம் நிரா தாரமாகி யின்மை யெய்தும. என்னை? நிராதாரமாகிப் பெறப்படுவதோர் குணங் காணுமையினென்பது. ஆதலால, உற்பத்தி முதலாகிய குணம் பெறப்பட்ட தாயி னக்குணங்கட்கு ஆதாரமாகியது யாது? அதுவே குணியென்பதா மாதலிற் குணியும் பெறப்படுமெனபது. ஆதலாற் குணமுங் குணியுமாகிய விரண்டும் பெறப்படுதலில் வேறாகவும், இரண்டும் பிரித்துப் பெறப்படாமையிலொன்றாகவு மிவ்வாறு பெறப்படுதலின் மாறுகோளின்றி முடிதலின மயங்கா தொழி எனற வாறு. ஆதார ஆதேயங்களாகில் வேறு பெறப்படவேண்டும்; குளத்துட்குவளை போலவெனில், அறியாது சொல்லினுய்; மணியின்கணொளி யென்றாற்போலக் கொண்டு பிரிதலுக் காணப்படாமையு முண்மையு மறிந்து கொள்க.

மாறென்பதனுல் புத்தனது [3]அடையிலா ஞானமும், அளாவிலாக் கருணை யும், வரையா வீகையும், மறையா மொழியும் முதலாகிய பல குணங் களு முடைய னெனினும், அக்குணங்களில் வேறு பெறப்படாமையில் இலனுக வேணடும். இலனுகில் பௌத்த சமயமிலதாம். குணத்தில் வேறு பெறப்படா னெனினு முளனெனின உற்பத்தி முதலாகிய குணங்களின் வேறு பெறப் படாதாயினுங் குணியுண்மை பெறுதலின் மாறு கொள்ளாது மயங்காதொழி யெனறவாறு. குணகுணிகளுக்குச் சொல்லுங் குற்றமெல்லாம் புத்தனேடும், அவன் குணங்களோடுஞ் சொல்லிக் கொள்க. (௩௨௭)

394 புற்கல மாய முதற்பொரு டத்தமுட் புல்லினவாய்க்
கற்களு நீருந் நிலத்தொடு காற்றழ லென்றினைய

1 அறுதி - இல்லாமை.

2 காக தந்த காவிஷாணம் - காக்கைப்பல், கழுதைக் கொம்பு.

3 அடை - உவமை.

பற்பல கூற்றுற் பிறங்கிப் பரக்கும் திறமென்னையோ
வுற்றவை யொன்றொன்றி னுட்புகு மோத்துடையாய்க் கெனவும்

இது, "குணியாய் புற்கல"......தது.

(இ - ள்) ஓரணுவுளோரணு [1]அவகஹன சக்தி வசத்தா லுள்புகுமென்று சொல்லுவாய்க்கு அணுக்கள் பல கூடிப் பிருதிவி முதலாயினவாகிப் பரிணமிக்கு மாறென்னென்று சொன்னா னென்றவாறு. (கஉஅ)

395 யாத்தற் கமைந்த குணத்தின வாய வணுப்பொருள்க
ளீத்தற் கரியன [2]நீத்த வருக்க நெறிமையினு
லேத்தற் கியைந்த விரண்டணு வாதியி னின்னணமா
மோத்திற் கிடந்த வகையிது கேளென் றுரைத்தனளே.

இது,.........ரம்.

(இ - ள்)அவகஹனோன்முகங்களின்றி பந்தனோன்முகமாகிய வணுக்கள், "ஸ்நிக்தரூக்ஷத்வாத்பந்த:" என்பதனால் ஸ்நிக்த ரூக்ஷவகையால் பந்தித்து த்வியணுக ஸ்கந்தமுதலாகப் பிருதிவியாதி மஹா ஸ்கந்த மிறுதியாகஸ்கந்தங் களாகுமென இவ்வாறு ஆகமத்துச் சொல்லப்படுகின்றதென்று சொன்னா ளென்ற வாறு. [3]"ணிம்யம் தணெண உராஹிணிெதா லுதாம்ஹா ணணிம்யெ ணலெம்ய உணுஹவஜி மாம்லம் தணெணதி ஹாணிெதா சணுலெ ஜுதிலம்லஹாணஜாம்ெதா' என்பது. (கஉகூ)

396 இரண்டணு வாதியி னின்னண மேறுநின் கந்தமெனிற்
றிரண்டன வாய்த்தம்முட் சென்றுடன் றீண்டு மிடத்தவைதா
[4]முருண்டன தாமொன்றி னுள்ளும் புடையு முடைமையினுற்
றெருண்டனம் பாகுபா டிற்றற்கு மென்றனன் றேரனுமே.

இது, "புற்கல மிரண்டி".........தது.

(இ - ள்) பரமாணு கிரம்சமென்று சொல்லுதலால் இரண்டு முதல் பல வணுக்கள் தம்முட் பந்திக்கு மிடத்து, உள்ளும் புடையு மேலுங் கீழுமென நாற் புடைமையின் அணு, ஸாம்சமாமென்றா னென்றவாறு. (கஙூ0)

397 ஓரிட மாய முதற்பொருட் குள்ளும் புடையுஞ்சொல்லிப்
பேரிட மாக்கிப் பிளப்ப னெனவும் பிதற்றுகின்றா
யாரிட மாய வறிவிற்கு மின்னண மாதலினு
னேரிடத் தாற்பன்மை யெய்தி யுருவா நெறியுமென்றாள்.

இது,......ரம்.

---

1 அவகஹன சகதி - இடங் கொடுத்தல்.

2 நீத்தவருக்கம் - ஸ்நிக்த ரூக்ஷம்; - பசையும், வறட்சியும்.

3 பிரவசன ஸாரம் II, 74. 4 'உரண்டன' என்றும் பிரதிபேதம்.

(இ - ள்) ஏகபிரதேசியாகலின் நிரம்சமாகிய பரமாணுவினுக்கு உள்ளும் புடையுமுடைமையில் ஸாம்சமாய் பகுபிரதேசியா மென்று அசம்பந்த பிரலாபம் பண்ணுவாய், அநேக பிரதேசமாகிய சரீரமுழுதும் வியாபித்து நிற்கும் ஸ்பர்சநேந்திரிய விக்ஞானத்திற்கு பகுபிரதேச முண்மையில் அதனையும் ஸாம்சமும், ரூபமுமாமென்று கொள்ளென்று சொன்னா னென்றவாறு.

இஃதென் சொல்லியவாறோ வெனின், [1]"ஞானஜ்ஞா ஜாய தேசித்தம்" என்பதனாலும், சித்தம் நிரம்சமும், க்ஷணக்ஷீணமுமாயிருக்கு மென்பது பிரசித்தமாதலாலும், நிரம்சமாகி அரூபமாகிய ஸ்பரிசனேந்திரிய விக்ஞானத்துக்கு ஸாம்சமும், ரூபமுமாகிய சரீரசம்பந்தத்தால் ஸாம்சத்வமும், ரூபித்வமும் வாராதவாறுபோலப் பலவணுக்களோடு சம்பந்தமுண்டே யெனினும் பரமாணுவினுக்குப் பகுபிரதேசத்வமில்லை யென்றவாறு.

அன்றியும் பலபிரதேசந் தம்முட்கூடியன்றே நுண்மணல், [2]ஐயவி, எள்ளு, நெல்லு, விரல், சாண், முழம், கோல், காதம், ஒசனை யென்னும் க்ஷேத்திரங்கள் பெறப்படுகின்றன. இவவாறு பெறுவுழி இரண்டு பிரதேசந் தம்முட் கூடுமிடத்து, ஏகபிரதேசம் அநேக பிரதேசமாமோ? ஆகாதெனில், ஏகபிரதேசியாகிய அணுப் பிறிதோரணுவோடு கூடிலும் அநேக பிரதேசியாகாமையில் ஸாம்சமாகாதெனபது. ஒரு பத்ரம் பிறிதொரு பத்ரத்தோடு சேர்வுழி முன்புள்ள பிரமாணத்தில் மேற்படாதவாறுபோல ஏகபிரதேசியாகிய அணுவும் பிறிதோரணுவோடு கூடிற்றெனினும் அநேக பிரதேசியாகாமையில் ஸாம்சமாகாதென்பது.

வேறு

398 வண்டாயுங் கோதாய் வரை நெல்லியின் காயதங்கை
யுண்டாய போதே யுறையூரகத் தில்லை யென்பாய்
கண்டாயிம் மெய்ம்மை பிறர் காண்டற் கரியதென்றான்
பெண்டான மீயு மறங் கொண்ட பெருமையினான்.

இது, "அங்கையு ணெல்லிக்காய்"......தது.

(இ - ள்) மொக்கலன், [3]அஸ்திநாஸ்தித்வத்தினுக்குக் குற்றங் கூறுவானொருப்பட்டு, வண்டு மொய்க்கும் பூமாலையுடைய நங்காய்! நின்கையிலிருக்கின்ற நெல்லிக்காய் நின்கையிலிருக்கின்ற காலத்து, உறையூர்க் கடையு ளில்லையாவது கண்டு, நின்கையிலுண்மையும், கடையுளின்மையு முடைமையின் நெல்லிக்காயுண்டு மில்லையுமா மன்றோ வென்றாயாயி லிவ்வாறுண்டு மில்லையும் வேண்டாதார் யாவரோ? நின்கையிலிருக்கிற நெல்லிக் காய் கடையிலு முண்டென்று சொல்கின்றார் யாவரோ? இவ்வரும் பொருணீயல்லது காணவல்லாருண்டோ? வென்று சொன்னான், தன் ஸ்வஸ்திரீயைப் பிறர்க்குத் தானம் பண்ணுதலெனனும் தர்மமேற்கொண்டவ னென்றவாறு.

---

1 ?

2 ஐயவி - வெண்கடுகு. 3 அஸ்திநாஸ்தித்வம் -

இதனாற் போந்த பொரு ளிவ்வாறுண்டு மில்லையுங் கொள்ளினிஃது யாவர்க்கு மொப்ப முடிவதன்றோ ? இது சொல்லவேண்டுமோ ? என்பது. (கூ௨)

399 வெய்தாய தீயுங் குளிராகிய நீரும் விண்டோய்ந்
தைதாய காற்று மவையாரு மறிப வென்றாற்
பொய்யாகு மென்று யவைபுத்த வசன மென்பாய்
செய்தாய் முழுக்கூ ழதுபோலச் சிதைக்க வென்றாள்.

இது,...ரம்.

(இ - ள்) எல்லார்க்கு மொப்பமுடிந்து விளங்கியது சொல்லுதல் குற்றமாகில் நிலம் வலிது, நீர்துவளும், தீதெறும், காற்று உளரும் எனபதனால், நீ நெருப்புச் சுடுமென்பது முதலாயின யாவருமறிபவே யெனினு மவை சொல்லுதலி லுனக்குக் குற்றமாமன்றோ? குற்றமாமேயெனினும் அவை புத்த வசனமாதலிற் பிரமாணமென்று சொல்லுவாய் அஸ்தி நாஸ்தித்வத்தினுக்கு என்ன குற்றஞ் சொனனுயாகுதி ? நின்மதத்துளார்க்குக் கலக்கஞ் செய்தாய். நெருப்புச் சுடுமென்று நீ சொல்லியது குற்றமன்றாயி லதுபோல அஸ்தி நாஸ்தித்வத்தினுக்கு நீ சொல்லிய குற்றங் கெடுகவென றவாறு.

முழுக்கூழ் - 1கலக்கம்; 2அஷ்டகமெனினுமமையும். (கூ௩)

400 கந்தின்கட் காணாய் களியானையை யில்லை யென்பாய்
வந்திங்க ணின்ற பொழுதுண்மை மறுக்க லாமோ
தந்திங் குரைத்த வுரைதானுங் கெடுக வென்றான்
வெந்திங்கு வித்தின் னனைத்தாகிய வீடு கண்டான்.

இது, "கந்திடத்துக் காணாதாயி"...தது.

(இ - ள்) கம்பத்திடத்து யானையைக் காணாதபொழுது, இவ்விடத்து யானை யில்லை என்று சொல்லுவாயாயினவ்விடத்து யானைவந்து நின்றபொழுதுண்டாமாதலிற் கந்திடத்தியானையில்லையென்று நீ சொல்லிய சொற் கெடுவதாகவென்றான வெந்த வித்துப்போலு மோக்ஷங் கண்டவ னென்றவாறு. (கூ௪)

401 ஆண்டில்லை யென்பன் னது வுள்வழி யுண்டு மென்ப
னீண்டின்மை யுண்மை யிவையாக விசைத்து நின்றேன்
வேண்டியனவே முடிப்பாய் விரி பொன் னெயிலு
ளீண்டி யிமையோர் தொழுவானெம் மிறைபு மென்னாய்

இது,...ரம்.

(இ - ள்) கம்பத்திடத்து யானையைக் காணாதபொழுது யானை யில்லையென்றும், அது அவ்வழிக் கண்டபொழுதுண்டென்றுஞ் சொல்லுவேன். ஒரு காற் காணாததற்காக எக்காலுங் கம்பத்திடத்து யானை யில்லையென்றுஞ் சொல்லேன். இவ்விடத்திப்பொழுதில்லை யென்று நான் காலத்தையிட்டு விசேஷித்துச் சொல்

1 கலவை. 2 அஷ்டகம் - எட்டுப்பொருள் சேர்ந்தது.

லுதலின், யான் சொல்லியவாறே நீயு மொருகாற் கம்பத்திடத்து யானையுளதாக வும், ஒருகாலிலதாகவுஞ் சொல்லுதலின் என் சிஷ்யனைப்போல சமவஸரணத்து இந்திராதி தேவர்கள் வணங்க வெழுந்தருளியிருந்த அர்ஹனையே தெய்வமாகவுங் கொள்ளென்றவாறு. (கரு௫)

402 கொல்லேற்றின் கோடு குழக் கன்றது வாயினக்கா
வில்லாகு மென்றி யிவை யிங்ஙன முண்மையின்மை
சொல்லேனு மல்லே னது சொல்லுவன் யானுமன்றாய்
கொல்லேற தாகாப் பொழுதே யுடன் கூறுகென்றான்.

இது, "கொல்லேற்றின் கூர்ங்கோடு"...தது.

(இ - ள்) விருஷபத்தின் கோடு, அது குழக்கன்றாய காலத்தில்லாமை யின் அஸ்திநாஸ்தித்வஞ் சொல்லுகின்றாயாயி னஃதியாவர்க்கு மொக்குமாதலிற் சொல்லவேண்டுவதில்லை; குழக்கனறாய காலத்தே யுண்டுமில்லையுஞ் சொல்ல வேண்டுமென்று சொன்னேனென்றவாறு. (கரு௬)

403 ஏறாயகாலத் தெழி னல்லது வத்துபேதங்
[1]கூறா ரெழாத குழக் கன்றினுக் கின்மை முன்னா
வீறாகி நிற்கும முதலுண்மையிற் கின்மை யெங்கு
மாறியாது மில்லை கலைக் குண்மையு மற்றுமென்றாள்.

இது,...ரம்.

(இ - ள) யாஙகள் பொருளுக்கன்றே யுண்டுமில்லையுஞ் சொல்லுவது; ஆதலால் பொருளாய்ப் பெறப்பட்டால் அதற்கொரு வழியின்மை சொல்லுவதல் ல்து, பெறப்படாததற்கு உண்டுமில்லையு முதலாயின சொல்லேமாதலின், ஏறாய காலத்திற் பெறப்பட்ட கொம்புக்குக் குழக்கன்றாய காலத் தினமை சொல்லுவதல் லது குழக்கனறாயகாலத்துக் கோடு பெறப்படாதவழி யினமை முன்னாக வுண்மை பின சொல்லேம்; உண்மை முனனாக வதற்கினமை பின சொல்லுதும்; ஆக லின, மாறுபாடின்றி முடியும் அஸ்தி நாஸ்தித்வமென்றவாறு.

இனி, யிது யாவர்க்குமொப்பமுடிதலிற சொலலவேண்டுமோவெனி னதற்கு முன சொல்லியவாறே சொல்லிக்கொள்க. நீ யெமது சித்தாந்த மறியாது வேண் டியவாறு சொல்லுகின்றா யென்பது. என்னை? [2]"ஷடு்கஙய ஶவிஸ-தஷ ஷஙவஶலக்தி" என்பதெம்மோத்தாதலின்.

வத்துபேதம் - அஸ்திநாஸ்தி, (கரு௭)

404 கன்று முயலுங் கழுதைப்பெயர் பெற்ற னவுங்
குன்றுந் தலையுட் பெறப்பா டெய்தல் கோடுறப்பா

1 இரண்டிடத்துங் கூட்டுக.

2 ?

வென்றும் மவற்றுக் கெழு வில்லைநின் பேதமென்றார்
சென்றுஞ் சிலவிற் சிலவின்மையு மாகு மென்றான்.

"இது, "ஒருவகையாற் குழக்கன்று மொருவகையான் முயலானு" மென்னுங் காதை...தது.

(இ - ள்) குழக்கன்றும், முயலும், கழுதையு முதலாயின நின் பக்ஷத்தா லொருவகையாற் கோடுடையவாகவேண்டும். வேண்டினு முயன் முதலாயின வற்றுக்கு ஒருகாலுங் கோடு பெறப்படாமையின் அஸ்திநாஸ்தித்வஞ் சிலவற்று ளுண்டாகியுஞ் சிலவற்றுளில்லையாகியும் 1அவ்யாப்த மாகுமென்றா னென்ற வாறு.

"தலையுட் கோடுறுப்புப் பெறப்பா டெய்தல் குன்றுமாக" வென்று கூட்டுக. (கநஅ)

405 இல்லாத கோட்டை யுளதாக வெடுத்து மென்று
சொல்லார்கள் பேதஞ் சொல்ல வேண்டுவை யாயினக்காற்
புல்லாது நில்லாப் பொரு டங்களுக் குண்மைக்கின்மை
கல்லாது நீயுங் கழுதைக் கருள் செய்தி யென்றாள்.

இது,...ரம்.

(இ - ள்) இல்லாத முயற்கோடு முதலாயினவற்றுக்கு அஸ்திநாஸ்தித்வ முத லாயின சொல்லுகை யெமக்குப்பக்ஷமன்றாதலின், நீ, நின்போக்கறுதியாலொரு காற் சொல்லியதனை மீட்டு மீட்டுஞ் சொல்லுகின்றாய்; யாங்கள் ஸத்தாகிப் பெற பட்டது ஒரு காலத் தோரிடத்து ஒரு ஸ்வபாவத்தாலில்லையா மென்று சொல்லு தும். நீயஃதறியாது நின்ஸ்வாமிஹக்தியால் கழுதைக்கு அருள் செய்கின்றா யென்று சொன்னா ளென்றவாறு.

பேதம் - அஸ்திநாஸ்தி. (கநக)

406 இல்லை வலக்கை யிடக்கைவகை யால தென்றுஞ்
சொல்லின் னதற்கு மதுவேயெனுஞ் சூழ்ச்சி மிக்கா
யொல்லை யிரண்டு முளவாக வுணர்ந்த னைநீ
நல்லை பெரிதும் மென மொக்கல னக்கனனே.

இது, "இடக்கை வகையாற்"...தது.

(இ - ள்) வலக்கை 2ஸ்வஸ்ரூப வகையால் அஸ்தி, இடக்கையினது ஸ்வ ரூப வகையால் நாஸ்தி. இடக்கையும் ஸ்வஸ்வரூப வகையால் அஸ்தி, வலக்கை யினது ஸ்வரூபவகையால் நாஸ்தியென்று சொல்லுதற்கண் இடக்கையன்று வலக்கை, வலக்கையன்றிடக் கை யென்பதன்றி யவையில்லையாமாறென்? அவை யில்லையெனினு முளவாகவன்றோ நீ புத்திபண்ணி யிருக்கின்றாயென்று சிரித்தா னென்றவாறு. (கசO)

1 அவயாப்தம் - தருக்க குற்றம்.

407 இக்கை வகையா லதுதானுள தாயி னக்காற்
றெக்க விரண்டும் முட னுதலிற் றாய்தொருபால்
பக்கம் மதுவும் படுபாழினிக் காலுமற்றாய்ச்
செக்கின் கணைபோன் றினிச் சென்றருள் சேமமென்றாள்.

இது,...ரம்.

(இ - ள்) இடக்கையன்று வலக்கையென்புழி, வலக்கையி லிடக்கையில் லாமையி லிடக்கை யன்று வலக்கை யென்கின்றாயோ? வலக்கையி லிடக்கை யுண்மை கண்டு இடக்கை யன்றென்கின்றாயோ? வலக்கையி லிடக்கையது ஸ்வ ரூபமுண்டாயி லிடக்கையன்று வலக்கை யென்றல் முடியாதாம். இனி, வலக்கை யிலடக்கையது ஸ்வரூப மில்லையாயின இடக்கையினதின்மை வலக்கைக்குளதாம். இனித் தன் வகையாலுளதாவதன்றி யிடக்கை வலக்கையாலும், வலக்கை—யிடக் கையாலு முண்டாமாயி னிடக்கை யெனபதொன்றில்லையாம்; இவ்வாறே வலக் கையு மில்லையாம். இவ்வாறே கால்களு மில்லையாம். இல்லையாகச் செக்குரற்போல நீயுருளாயோ வென்றவாறு.

இனி யிடக்கையினதுண்மை யிடக்கையிற கிடப்பதனறி வலக்கையினுங் கிடப்பினும் வலக்கையினதுண்மை வலக்கையிற் கிடப்பதன்றி யிடக்கையினுங் கிடப்பதாயினும் இடக்கை வலக்கை யென்பதோர் வ்யவஸ்தை யில்லையாம்; சேதனத்தில் அசேதனமும், அசேதனத்திற் சேதனமுங் கிடக்கில் [1]இதரே தரபாவம் என்பதொனறில்லையாய்ச் சேதனு சேதன வியவஸ்தை கெடுமாறு போல வென்பது. (கசக)

408 கைகால் வகையால் பெறப்பாடில்லை காலு மற்றாய்
மெய்தா மொழிய வவை பாறெய்தல் வேண்டுதலாற்
கொய்தார் நறும்பூங் குழலாய் குழ மண்ணர்களாச்
செய்தா யுலகிற் சிறுமானுயர் தம்மை யென்றான்.

இது, "காற்றிறத் தாற்கையில்லை".....தது.

(இ - ள்) கால்வகையாற் கையில்லை கைவகையாற் காலில்லை; இவ்வாறாகச் சரீர மெய்யா யுலகத்துள்ளாரெல்லாங் [2]குழமணர்களாகாரோவென்று சொன்னு னெனறவாறு. (கசஉ)

409 கால்கால் வகையா லுள கைகளுங் கையினற்றாய்ப்
பாலாய் முடியு மவை பண்டை யியல்பினுலே
யேலா திவைதா முள வெத்திறத் தானுமென்னி
னுலாவ தான முடிவி னுயொடு நண்டு மொததாய்.

இது......ரம்.

---

1 இதரேதர பாவம் - வேறுவேறு தன்மை. 2 குழமணர்கள் - மரப்பாவைகள்.

(இ - ள்) கால் காலாந்தன்மையாலுள, கையாந்தன்மையாலில்லென்றும், கை கையாந்தன்மையாலுள, காலாந்தன்மையாலில்லென்றுஞ் சொல்லுதும்; அப்பொருள் அவ்வாறின்றமை காண்கின்றிலையோ? இனி யெவ்வகையானுங் காலுங் கையு முள வென்பாயாயிற் கை நான்குங் காலுங்குமாக (நாயோடும்) நண்டோடொத்தி யென்றவாறு.

என்பதனாற் போந்த பொருள் - காலினதுண்மை காலிற் கிடப்பதன்றிக் கையிற் கிடப்பிற் காலிலுண்மை கிடவாதாகக் காலில்லையாக வேண்டும். இனிக் காலினதுண்மை கையுங் காலுமாகிய விரண்டிலுங் கிடப்பிற் கால் நான்காம்; கையுமவ்வாறே யாக வெட்டாம். இனிக் காலினதின்மை கைம்முதலான பிற பொருளகளிற் கிடவாதாகில், எல்லாப் பொருள்களிலுமொருவனது காலுளதாக வேண்டும். நெருப்பினதின்மை நீரில் கிடவாதாகில் நீரிலேயு நெருப்புளதாக வேண்டியவாறு போலவென்பது. ஆதலாற் காலினதின்மை கை முதலான பிற பொருள்களிற் கிடக்கவேண்டுமாதலிற் கை தன் வகையாலுளதாய்க் கால் வகையாலிலதாமெனபது பொருந்துவதாம்.

தனவகை யெனபது - ஸ்வக்ஷேத்திராதியை. கால்வகை யென்றது - கால் நிற்கின்ற இடமுதலாயினவற்றையாம். இனிக் கால்வகையால் கையில்லை யென்பதென்னை? கையிற் காலில்லை யென்ன வமையாதோவெனின், "மெய்த் தவத்தாற்றெருக்கான குணத்தால் மிக்கா" னென்ற வழி மெய்த்தவத்தொக்கது புத்த னுழையென்னாது புத்தன் மெய்த் தவத்தாற் றெருக்காெனென்றவாறுபோலக் கொள்க வென்ப. (கசா௩)

410 அல்லென் றுரைத்த வுரை தானுமெம் மாகமத்து
ளில்லென்ற வாறென் றிவை யிங்ஙனம் வேண்டுகின்றாய்
சொல்லன்று நாயைந் நரி தானென்னச் சொல்லுகின்றா
ரில்லென்ற வாறோ நரி தன்னையு மென்றனனே.

இது, "நீயன் றென்றுரைப்ப"......தது.

(இ - ள்) [1]திரவயாஸ்தி நாஸ்தித்வமாவது, ஒன்றொன்றல்லாமை யென்றற்க ணல்லென்பதற்கு மில்லென்பதற்கும் பொருளொன்றாகல் வேண்டும்; வேண்ட, நாயைக் கண்டிது நரியன றென்றா னரியில்லை யென்றானாகாதோ வென்று னென்றவாறு. (கசாச)

411 நாய்கொன் னரிகொல் லெனத் தோன்று முணர்வுநண்ணி
யாய்சொல் லிரண்டின் னுணர் தல்லது வன்மையென்றாய்
நீசொல் லறியா யறிவார் நெறி கேடுகில்லாய்
பேய்சொல் லுபவே பல சொல்லிப் பிதற்றலென்றாள்.

இது,......ரம்.

---

1 திரவ்யாஸ்தி நாஸ்தித்வம் - பொருளின் உண்மை இன்மை.

(இ - ள்) நாயோ நரியோ வென்றையந் தோன்றி நரியன்மை துணிந்து, நரியன்று நாயென்புழி, நரியன்மை நாயிற் கிடந்ததெனில், நாயாதலு நரியன்றா தலு நாயிற் கிடந்ததாம். அவ்வழி நரியன்மை யாதினாற் பெற்றாய்? நரியாந் தன்மையின்மையினெனின், நரியாந்தன்மையினது இன்மையினாற் கிடந்ததாம். ஆதலாலின்மையைப்பற்றி அன்மை வந்ததாம். ஆதலாலவ்விரு சொல்லுக்குமோ ரொற்றுமையுளதாம். அன்றியும் இல்லெலென்பது பொருளினதின்மையைக் காட்டி நிற்கும்; அல்லெலென்பது ஒரு பொருளினதின்மையினையுடைய பிறி தொரு பொருள் காட்டும். இது தம்முள் வேற்றுமை; நாயின்று, நாயன்று என.

அன்றியும் வடநூல் வழக்கினும் [1]நஞ்ஞினுக்குப் பொருளிரண்டாம், [2] "ப்ரஸஜ்யப்ரதிஷேதமும் பர்யுதாஸப்ரதிஷேதமு" மென. அவற்றுள் ப்ரஸஜ்யப்ரதிஷேதமாவது- [3]ப்ரஸங்கித்து நின்ற பொருளின் அபாவத்தையே காட்டும். என்னை? [4]"வர்த்தமானஸ்ய நிஷேத ப்ரஸஜ்யப்ரதிஷேத" என்பதாகலின். பர்யுதாஸப்ரதிஷேதமாவது - ப்ரஸங்கித்த பொருளின அபாவத்துடனேகூட வதனையுடைப் பிறிது பொருள் காட்டுவது; [5]"பரம்பரிக்ரஹ்ய விவக்ஷிதமு தஸ்யநீதி பர்யுதாஸ" என்பதாகலின. அநஸ்வ என்றவழி அபாவத்தைக் காட்டுவது, ப்ரஸஜ்யப்ரதிஷேதம் இனி அஸ்வமல்லாப் பிறிதைக் காட்டுவது பர்யுதாஸப்ரதிஷேதம். அவ்விரண்டு அர்த்தத்திலும் இல்லென்பதூஉம், அல்லென்பதூஉம் வந்தவாகலி னவ்விரண்டு சொல்லும் அத்யந்தம் பின்னார்த் தங்களல்ல வாதலின், நீ சொல்லிலறியாமையுஞ் சொல் லறிவாரோடு சேராமையும், பேய்போலப் பல பிதற்றுகின்றா யென்றவாறு.

"இரண்டின்னுணர்தல்லது வின்மை யென்றான்" என்பதனால் பொருள் இல், அல் - என விரண்டுங் கூடியல்லது அன்மை பெறப்படாதென்றாராயிற்று.

412 பேரும் முணர்வும் பொரு ளில்லதற் கில்லையென்றி
சார்வும் மகல்வுந் தலைப் பெய்தலோ டுள்ளமின்மை
நேரிங் கிவையு முண ராமையிற் றென்றனைத்
தேரன் சிறிதே தெரி கோதையை நக்கனனே.

இது, "உணராமை காரணத்தால்"...தது,

---

1 ந - வடமொழி எதிர்மறைச் சொல்.

2 ப்ரஸஜ்ய ப்ரதிஷேதம், பர்யு தாஸப்ரதி ஷேதம்.

3 ப்ரஸங்கித்து.

4 வர்த்தமாநஸ்ய நிஷேத ப்ரஸஜ்ய ப்ராதிஷேத.

5 பரம் பரிக்ரஹ்ய விவக்ஷிதமு தஸ்யநீதி பர்யுதாஸ.

(இ - ள்) [1]ஶப்த புத்தியாற் பெறப்படாத பொருளில்லை யென்பாயாயின், சப்த புத்திகளாற் பெறப்படாத அணிமையுஞ் சேய்மையுந் தலைப் பெய்யாமையு முள்ள மின்மையு மென்பன வுளவாதலிற் சப்த புத்தியின்மையேலவை யில்லையென்றுகொள்ளலாமோ வெனறு சிரித்தானென்றவாறு.

அணிமை - கண்ணு ளஞ்சன முதலாயின; அவையுணராத பொழுதுமுள - சேய்மை - தூரமாகிய மந்தரபர்வத முதலாயின; அவையுமுணர்வெழாதகாலத்து முள. தலைப்பெய்யாமை - இந்திரியங்கள் விஷயங்களோடு தலைப் பொய்யாமை; அதுவு முணராத பொழுது முண்டு. உள்ளமின்மை - ஒரு பொறிப்புலத் துள்ளஞ் செல்கின்ற காலத்துப் பிறிதொரு பொறிப் புலத்துள்ளஞ் செல்லாமை; அதுவு மப்பொழுதுண்டு. தலைப் பெய்யாமையும், உள்ளமின்மையு மென்பன - பெய ரின்றியும், பொருளுண்மையுடையவாயின. ஆதலால், சப்த புத்தியில்லாமை பொருளினதினமைக்குக் காரணமன்றெனபது போந்தது. பேருமுணர்வுமில்லதற்குப் பொருண்மை யில்லையென று கூட்டுக. பொருண்மை யென்புழி, மை- செய்யுள் விகாரத்தாற் குறைந்து நின்றது. "நேரிங்கிவையுமுணராமையிற்" கென்பதன பொருள் - உணராமையினுலின்மைநேரென்றவாறு. கு - பகுதிப் பொருள் விகுதி. (கசகா)

413 ஆதரன் னுரைத்த பொரு டன்னையவ் வாகமத்தாற்
சாத்தன் பயின்று லறியாவிடுக தன்மை யுண்டோ
வீர்த்தீங் குரைத்த பல தம்முளொன் றின்னதென்று
யோத்தின் வகையாற் பெயரோ டுணர் வின்மைக் கென்றாள்.

இது,.........ரம்.

(இ - ள்) பேருமுணர்வு முடைய தியாதொரு பொருளதில்லை யென்னப் படாதெனப தல்லது, பேரு முணர்வு மில்லாததனை யில்லையென்று சொல் லோம்; இவ்வாறு பேரும் முணர்வு மில்லாதனவாக நின்றுற் கூறப்பட்டன ஆப்தவாக்கிய முதலானவற்று லுணரப்படாதோ? நீ சொன்ன இவற்று ளுண ரப்படாத தின்னதென்று சொல்லா யென்றவாறு.

பேரும் முணர்வுமுள [2](வழி) பொருளுண்டாயின் முயற்கோடு முதலா யினவு முளவாக வேண்டுமெனின், அறியாது சொல்லினுய், முயலிற் கோடில்லை யெனபதல்லது முயலென்னும் பெயருங் கோடென்னும் பெயரும் பொருளு டைய, மொக்கலன் மஹாபோதியி லில்லை யென்றுல் மொக்கல னில்லையாகாத வாறுபோல வென்பது. (கசஎ)

414 ஒன்றி னியற்கை யொரு வான்பொருட் கில்லை யென்றே
யென்றும் முரைத்தி யிரும்பெய்திய வெம்மை யந்நீர்

---

1 சப்த புத்தி - சொல்லாலாம் அறிவு.

2 விடுபட்டதற்குச் சேர்க்கப் பட்டது.

சென்றும் மறுகித் தீக்குணஞ் சேர்ந்த தற்றேற்
குன்றும் பிறவோ வினிநீ கொண்ட கோளு மென்றான்.

இது, "ஒன்றின தியற்கையால்"...........தது.

(இ - ள்) ஒன்றின தியற்கை பிறிதொன்றி னில்லை யென்கின்றா யாயி னிரும்பு காய்ந்து நெருப்பாவதூஉங் குளிர்ந்த வியல்பையுடைய நீர் காய்ந்து மறுகிச் சுடுவதூஉ முதலாயின நின்மேற்கோள் குறைபடு மன்றோ வென்றா னென்றவாறு. (௪௧௪)

415 கொண்ட வுடம்போ டுயிர் தானுடன் கூடிநின்றாற்
கண்டும் புணர்ந்து மவை யாவதென் கல்வி யில்லா
யுண்டங்க ணின்ற வுயிர்க்காக வுரைப்ப தொக்கும்
பிண்டந் நிகழ்ச்சி பிழைப்பாகு நினக்கு மென்றாள்.

இது,...ரம்.

(இ - ள) [1]சரீர முதமாகிய ஆத்மனது ஞானுதி குணவிகாரங்கள் சரீரத்துக்குக் காணப்பட்டவெனினும், அவை சரீரத்திற்குச் சம்பந்திகளன்றிச் சரீரத்து நின்ற ஆத்மனுடையனவாவதறியாயோ? அதுபோல விரும்பும் ஜலமும் அக்கினியோடு கூடுதலில் இரும்பிலும் ஜலத்திலும் அக்கினி ஸ்வபாவங் காணப்பட்டவெனினும் அவை அக்கினி ஸ்வபாவமென்றே கொள்ளென்பது. இவவாறு கொள்ளாதொழியில் அஷ்டக பிண்டமாகிய அக்கினி சுட்டதெனினு நீரு மண்ணுஞ் சுட்டதென்றது அக்கினி சுட்டதென்று நீ சொல்லுகின்ற வழக்குப் பிழையாமென்றவாறு. இதனுற் போந்த பொருள் ஸ்வரூபபரித்யாக மென்பதில்லையா மென்பது.

நெருப்பினியல்பானீரில்லையென்றும், நீரினியல்பா னெருப்பில்லையென்று மன்றே நீங்கள் சொல்லுவது. ஆயின் நெருப்பின்னியல்பாகிய சுடுதலால் நீருளதாயிற்றாகாதோ வெனி னுகாது. என்னை? நெருப்பினியல்பாகிய சுடுதலன்றி நெருப்போட்டைக் கூட்டத்தான் நீரின்கட் டோன்றியதோர் விகாரமன்றோ? ஜ்வரத்தோடு கூடிய சரீர விகாரமான உஷ்ணம் அக்கினி ஸ்வபாவமாமோ? அக்கினி ஸ்வபாவமாகில் ஜ்வரங்கொண்டார்மேலிட்ட புடைவை வேவாதோ? ஆகையா னெருப்பினது உஷ்ணமன்றி ஜலாதிக்குக் காரணத்தாற் றோன்றுவதோர் ஸ்வபாவ விசேஷமென்று கொள்ளென்பது. அன்றியு மிக்காலத்திவ்விடத் தித்தன்மையால் அஸ்தியென்று சொல்லுதலால் நீ சொல்லிய குற்றமெங்கட் காகாதென்பது. இது ஸ்வரூப பரித்யாகங் காட்டி தூஷிக்கப் புகுவதனைப் பரிகரித்தது.

416 மெச்சி யிடத்தாற் பிறிதின்மை விளம்பு கின்றாய்
பிச்சை முதலாப் பெரிதாவறஞ் செய்த வன்று

---

1 சரீர முதம - சரீரத்தை அடைந்த.

னச்செல் கதியுள் ளமரன் னெனப் பாடு மின்றே
விச்செய்கை யெல்லா மிகழ்வாம் பிற வென்றனனே.

இது, "பிறிதிடத்துள்ள"...தது.

(இ - ள்) இவ்விடத்துண்டு பிறிதிடத்தில்லை யென்று சொல்லுதலால் தானுதியாகிய தர்மங்கள் செய்தானிவ்விடமென்ற விடத்திலன்றிப் பிறிதோரிடத்தில்லை யாதற்கட் பரலோக மென்பதொன்றில்லையாய்த் தர்மஞ் செய்ததெல்லாமவமாமென்று னென்றவாறு. (கருo)

417 ஊனத்தை யின்றி வழங்காவுழல் கின்ற போழ்து
மானத்தி னீங்கி வதங் காத்து வருந்தும்போழ்தும்
வானத்த தாய பொழுதுமன் னுயிர தென்று
டானத்தி னுண்மை யிதுதத்துவ மாக்கொ ளென்றாள்.

இது,...ரம்.

(இ - ள்) இக்காலத் திவ்விடத்தில்லை யென்றி யாங்கள் காலத்தை யிட்டு விசேஷித்துச் சொல்லுதலாற் பிறிது காலத்துப் பிறிதிடத்துண்டென்பது பெறப்படுதலால், தர்மானுஷ்டானம் பண்ணுகின்றகாலத்தும், மனுஷ்யலோகத்து தர்மபலம் அநுபவிக்கின்ற காலத்தும், சுவர்க்கலோகத்துமோர் உயிரே யென்றலின், சொல்லிய குற்றமெங்கட் கெய்தாதெனபது. அன்றியும் இடமுங் காலமும் இயல்பும் ஜீவாதி திரவயங்களால் அடையப்பட்டன ஸ்வக்ஷேத்திரம், ஸ்வகாலம், ஸ்வபாவமென்றும், அடையப்படாதன பரக்ஷேத்திராதி யென்றுஞ் சொல்லுதுமாதலால் க்ஷேத்திராதிக்கு நியதியின்மையி னெமக்கு நீ சொல்லிய குற்றமாகாதென்பது. (கருக)

418 காலம் பிறிதிற் பொரு ளில்லெனக் காட்டுகின்றாய்
ஞால மறியத் தவஞ் செய்தவ னல்லுயிர்தா
னேலங்கொள் கோதா யெதிர்காலத்தி னின்மை யாமேற்
சீலங்கள் காத்தல் வருத்தஞ்சிதை வாக வென்றான்.

இது, "ஒருகாலத்துள பொருள்"...தது.

(இ - ள்) இக்காலத்துண்டு பிறிதுகாலத்தில்லையென்று சொல்லுவாய்; தபசு பண்ணுவானொருவன் தபசு பண்ணுகின்ற இக்காலத்திலே யுளனாய், எதிர்கால முதலாகிய பிறிது காலத்திலனாதல் மூடிதலில், பரலோகமென்பதொன்றில்லையாய்த் தர்மாநுஷ்டானத்துக்குப் பலமில்லையா மென்று னென்றவாறு. அன்றியும் இக்காலத்துண்டு பிறிது காலத்தில்லை யெனவே பொருள் க்ஷணிகமென்பதூஉம் பெறப்படு மென்றவாறு. (கருஉ)

419 ஆற்ற வருந்தித் தவஞ் செய்து மரிய காத்துந்
நோற்றும் பெரிதுந் நுணுகா நின்ற பொழுதினும்
மேற்ற முடைய விமையா னெனப் பட்ட போழ்துஞ்
சாற்றின் னுயிர்தன் பொழுதே யுண்மை தங்கு மென்றாள்.

இது,.........ரம்.

(இ-ள்) தபசு பண்ணுகின்ற காலத்தும், தபசின் பலமான[1]ஸ்வர்க்கலோகாநுபவநத்திலும் ஜீவன் ஸ்வகாலத்திலே அஸ்தியாயிற்றாம். அஃதாவது, பதார்த்தம் க்ஷணந்தோறும் காலத்தைவிட்டுக் காலாந்தரத்தை யடைதலா லடையப்பட்ட காலம் ஸ்வகால மாகவும், அடையப்படாத காலம் பரகாலமாகவும் சொல்லுதலி லொருகாலம் ஸ்வகாலமென்னு நியதியின்மையிற் றபசுபண்ணுகின்ற பொழுது அது ஸ்வகாலமாய் எதிர்காலமும், இறந்தகாலமும் பரகாலமாம். பின்பு பலாநுபவன காலத்தி லது ஸ்வகாலமாய் ஒழிந்தகாலம் பரகாலமாம். ஆதலி னீ சொல்லிய குற்றமாகா தெனபது. (கருந)

420 நூறா னிரும்பாய் நிகழாமை [2]நொடிதி யாங்கே
பாறான் றயிரா மென நின்று பயிற்றுதியான்
[3]மாறா னுடையா ருரையொக்குநின் மாற்ற மென்னாத்
தேறார் தெருண்டா ரெனச் சொல்லினன் றேரனும்மே.

இது, "நூலிரும்பாய்".........தது.

(இ-ள்) நூலிரும்பாய்ப் பரிணமியாதென்று சொல்லுதியாதலிற் பால் தயிராய்ப் பரிணமியாதா மாகவும் பால் தயிராமென்றுஞ் சொல்லுதி யாதலாற் பித்தருரையோ டொக்கு நின்னுரையென்று தோன்றச் சொன்னா னென்றவாறு.

421 தத்தந் நிமித்தந் தலைப் பெய்துதங் காரியம்மா
யொத்த பொருள்க ணிகழ்வாக்க முரைத்து நின்றேன்
பித்தன்னி னொப்பப் பிறிதிற்பிறி தாமென்பனோ
வித்தின் வழியா னுரைநீயும்வெள் யானை யென்றாள்.

இது,.........ரம்.

(இ-ள்) கையறக் கெடாது நின்று விகாரத்துக்கு யோக்யமான காரணங்கள் பெற்றுப் பொருத்த முடைத்தான விகாரத்தை யடையுமென்று யாங்கள் சொல்லுதும். ஆதலால், நூலிரும்பாய்ப் பரிணமிக்கைக்கு யோக்யமான சாதனமில்லாமையி லஃதாகாதாதலின், யோக்யமான பரிணாமத்தை யடையுமென்பது பொருந்தும். ஒருபொருள் கையறக் கெட்ட விடத்து, அதில் அத்யந்தம் பின்னமானபொரு ளதன்வழித் தோன்றுமென்று சொல்லுகின்ற நினக்கே யக் குற்ற

1 ஸ்வர்க்கலோகாநுபவநம் - தேவலோக சுகமனுபவித்தல்.

2 நொடிதி - சொல்லுதி. 3 மால் - மயக்கம்.

மாவது. ஒன்று கையறக்கெட்டுப் பிறிதொன்று தோன்றில் நிலத்தி விட்ட வித்து கையறக்கெட்டா லதன்வழியோர் வெள்ளானை பிறக்கவேண்டு மென்று யாங்க ணினக்குரைக்கும் குற்றத்தை நீ யெங்கண்மே லிட்டுக் கூறினை யென்ற வாறு.

நிமித்தம் - சாதனம். நூல் புடவையாய்த் திரிதற்கு [1]அச்சன முதலாயின ஸாதனம். வித்து முளையாதற்கு மண்ணு நீரு முதலாயின ஸாதனம். பால் தயி ராதற்கு மோர் முதலாயின சாதனம். இவவாறே யொழிந்தனவு மறிந்துகொள்க. காரணமன்றி யுள்ளது கையறக்கெடுதலு மில்லாதது தோன்றுதலுஞ் சொல்லு தலா லுனக்கிவவாறுகோட லருமையி னீ சொல்லியகுற்ற முனக்கேயா மென் பது.

"கேட்டிற்குக் காரணங் கேட்பேனயா னென மொழிந்தாள்
கேட்டிற்குத் தோற்றமே கெடுப்பதிங் கில்லென்றான்"

இது, காரணமின்றிக் கெடுமெனபதற் கவனோத்து.

"தோன்றுவ துளதாகிற் சூல்கன்னிக் குளதாகும்"

இது, இல்லாதது தோன்று மென்பதற் கோத்து.

இனி, உள்ளது கெட வில்லாதது தோன்றுதற்கண் வித்துக்கெட வித்தின் வழி வெள்ளானை தோன்றவு மமையு மென்பது. ஒன்றொன்றாய்க் கையறக் கெடாதேயினறு பரிணமிக்கில் ஸ்வர்ணம மகுடாதியாய்ப் பரிணமிப்புழிக்கெட்ட தில்லை யெனினும், பீஜமங்குரமாய்ப் பரிணமிப்புழிக் கெட்டது கண்டா மல் லவோவெனி னொன்றொன்றாய்ப் பரிணமிப்புழிக் காரண வசத்தாற் பிறிதாகிப் பரிணமிப்பனவுந் தானதுவாய்ப் பரிணமிப்பனவு மென விருவகையாம். அவற் றுள் ஸ்வர்ணங் காரணம்பற்றி வெள்ளியாய்ப் பரிணமித்தலும், பீஜம் காரணம் பற்றி அங்குரமாய்ப் பரிணமித்தலும் இந்தநங் காரணம்பற்றி ஹஸ்மமாய்ப் பரி ணமித்தலும், பால் காரணம்பற்றித் தயிராய்ப் பரிணமித்தலு முதலாயின தான் பிறிதாகிய பரிணமம். இவவழிப் புற்கல திரவ்யங்கெடாது நின்றது; ஸ்வர்ணதி கெட்டது.

இனி, வியவஹார திரவ்யமாகிய ஸ்வர்ணதியும், பிருதிவியாதியு முதலா யின காரணவசத்தால் மகுடகுண்டலாதியாய்ப் பரிணமிப்புழித் தானதுவாய்ப் பரிணமிக்கும். இவவழிப் புற்கல [2]ஸங்தோஹ விசேஷமாகிய ஸ்வர்ணதி திரவ் யங்கெடாது நின்றது; மகுடாதிகெட்டது. ஜீவனுள்ளும் மனுஷ்யன் தேவனாய்ப் பரிணமித்தல் முதலாயின, தான் பிறிதாகிய பரிணமம். இவ்வழி ஜீவன் கெடாது நின்றது; ஜீவ பரிணமமாகிய மனுஷ்யத்வ முதலாயின கெட்டன.

இனி, [3]வோ௫ாதியாய்ப் பரிணமிப்புழி, மனுஷ்யத்வாதி தானதுவாய்ப் பரிணமித்தது. இவ்விடத்து ஜீவ புத்கல ஸம்பந்தமாகிய மனுஷ்யத்வாதி

---

1 அச்சனம் - நெய்வோர் கருவி. 2 ஸங்தோஹம் - சேர்க்கை.
3 பால்யாதி - குழவிப் பருவம் முதலியன.

கெடாது நின்றது; வாயுவாதி கெட்டது. இனித் தானும் பிறிதுமாகிப் பரிணமிக்கும் பரிணமமு மிவற்றின்பாற்படும். இவ்வாறு காரண வசத்தால் வஸ்து பரிணமிக்குமென்று கொள வெமக்கு யாதோர் குற்றமும் வாராதென்று கொள்ளென்பது. இத்துணையும் யுத்தி பற்றிக் கொண்டுரைக்கப்பட்டது.

நிகழ்வாக்கம் - பரிணமம். (கடுரு)

422 கூடா பொருள்கள் பிறிதின்குணத் துண்மை யென்பாய்
[1]பாடாஅலப் புட்பத் தனவாகிய பண்பு நாற்றம்
மோடாவ தெய்திற் றெனவையமுரைக் கின்ற தன்றா
னூடாது சொன்னு யதனன்மை யொழிக வென்றான்.

இது, "பிறிதொன்றினியற்கை"......தது.

(இ - ள்) ஒன்றினது ஸ்வபாவத்தாலொன்றில்லை யென்பாயாயிற் பாதிரிப் பூவின் ஸ்வபாவமாகிய நாற்ற மோட்டின்கண் வந்ததாகலி னென்றி னியல்பாற் பிறிதொன்றுண்டாயிற்று மாதலா லிது விசாரியாது சொன்னுயென்று சொன்னு னென்றவாறு. (கடுசு)

423 போதுக்க வாசம் புதுவோட்டைப் பொருந்தி னும்
மேதக்க நாற்ற மிதுபூவின தென்ப மிக்கார்
தாதுக்க நின்று மவைபோக்குந் ததாகதற் கென்
றேதுக்கள் காட்டி முடித் தாளிணை யில்ல நல்லாள்.

இது,.........ரம்.

(இ-ள்) பாதிரிப்பூவுட னேடு சம்பந்தித்தலி லோட்டிற்குஅந்த நாற்றம் வந்ததாயினு மது ஓட்டிற்கு ஸ்வபாவமன்று. ஸ்வபாவமாயி னோட்டிற் கெப்பொழுதும் அந்த நாற்ற முளதாக வேண்டுமனறே? அக்கினிக்கு உஷ்ணமொரு காலத்து வந்ததோ? ஆத்மாவினது [2]வியாஹாராதி சம்பந்தத்தால் சரீரத்து வந்ததெனினும் ஜீவனுடையதாகின்ற தில்லையோ? அதுபோல வந்த நாற்றம் பாதிரிப் பூவினதேயாம். தாது எவ்வழிநிற்பினும், [3]ததாகதன தாயினுற் போல திருஷ்டாந்தஞ் சொல்லிமுடித்தார் நீலகேசியார் என்றவாறு.

ஏதுவென்று திருஷ்டாந்தத்துக்குப் பெயர்; "அதற்குவரு மேதுவு முறைப் பணிது கேணீ", "காரணங் காட்டிக் கணிகையரோ டெண்ணல்" எனவும் வரும்.

வேறு

424 வீட்டிட மென்று நின்னல் வேண்டவும் பட்ட தன்னை
நாட்டுவ னதுவு நாயிற் கென்றுநன் றென்றி யாயிற்

1 பாடாஅலம் - பாடலம்; பாதிரி; நாலடியார் 139.
2 வியாஹாராதி - பேசுதல் முதலியன. 3 ததாகதன் - புத்தன்.

சூட்டடு நரகந் தானுஞ் சுடர்ந்தநற் சுவர்க்கந் தானும்
பூட்டின முரைத்த வக்காற் போந்ததங் கென்னை யென்றான்.

இது, "நீயுரைக்கும் வீட்டிடமும்"......தது.

(இ - ள்) மோக்ஷஸ்தானமென்று நீ சொல்லுகின்றதுவு மோரிட மாகையால், நாய்கிடக்குமிடம், நரகம், ஸ்வர்க்கம் என்னு மிவற்றோடொக்கு மென்று சொன்னாற் போந்த குற்றமென்னை என்றவாறு.

சித்தி க்ஷேத்திரம் நாயிருக்குமிடம், இடமாகையால் நாய்க்கொட்டில்போல: சித்தி க்ஷேத்திரம் துக்ககாரணம், இடமாகையால் நரகம்போல: சித்தி க்ஷேத்திரம் [1]புநர்பதந காரணம், இடமாகையால் ஸ்வர்க்கம்போல: என்று அநுமானஞ் சொன்னானென்றவாறு.

சூட்ட டுநரகம் - சுட்டு வருத்துகின்ற நரகம். (க்ஙுஅ)

425 கதியின வகைய வாறுங் கந்தபிண் டங்கள் சொன்னான்
பதியின வென்ன நின்றாய் பாக்கனாய் காட்டு தீயால்
விதியினின் வினையட் டார்தம் வீட்டிட மின்ன·தென்றார்
கதுவென்னை யென்னச் சொன்னா லாகம மல்ல தாமோ.

இது,........ரம்.

(இ - ள்) அறுவகைக் கதியு [2]மைவகைக் கந்த பிண்டமுஞ் சொன்னானிருக்கின்ற மஹாபோதி பிரதேசம் கபிலபுர முதலாயின வரிஷ்டமுடைய வென்று சொல்லுகின்றா யெமது சித்தி க்ஷேத்திரத்தினுக்குப் பாக்கனையும்,நாயையும் காட்டுகின்றாய்; கர்ம க்ஷயம் பண்ணினா ரின்னவழி யிருப்பாரொன்று பரமாகமத்துச் சொன்னவாறு சொல்லில் நீ யிவ்வாறு தூஷணஞ் சொல்லினால் ஆகமத்தில் சொல்லுகின்ற பொருள்களல்லவாமோ வென்று சொன்னானென்றவாறு.

புத்தனிருக்கும் மஹாபோதி பிரதேச முதலான நாயிருக்குமிடம், இடமாகையால் நாய்க்கொட்டில்போல; துக்க காரணம், (இடமாகையால்) அவீசி நரகம்போல; புநர்ப தநகாரணம், (இடமாகையால்) படுகுழிபோல; துடித விமானத்தினின்றும் போந்து, குயிலாலபுரத்துத் தோன்றி, உலும்பினிவனத்துப் பிறந்து, கபிலபுரத்துப் புத்தத்வம் பெற்றுத் தர்மோபதேசம் பண்ணி, மஹாபோதி பிரதேசத்துப் பொன்றக்கெடுதல் புத்தனுக்கு நியதி.

கதியாறுவன - விலங்கு கதியும், பேய்க்கதியும், நரககதியும், தேவகதியும், பிரமகதியும், மக்கள் கதியுமென்பன.

"இத்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்"

எனவும்,

---

1 புநபதநம் - மறுபடியும் வீழ்தல்.

2 ஐவகைக் கந்தபிண்டம் - ரூபம், வேதனை, குறிப்பு, ஸம்ஸ்காரம், விஜ்ஞாநம் என்பன.

"சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி" "

எனவுஞ் சொல்லுதலால்.

இவை [1]மணிமேகலை அறவிற் காண்க. பாக்கன் - காட்டுப் பூனை. (கஅ௯)

426 பேர்த்திவண் வார வில்லாப் பிறவியாந் தான மென்னிற்
நீர்த்திவண் வார வின்மை சேர்விடக் குண்மை யாமோ
கூர்த்தவில் வினையி னின்மை கூறுவ னென்றி யாயி
ஞர்த்துள னவனே யாயி னண்ணுமே வினையு மென்றான்.

இது, "பேர்த்திங்கு வார"........தது.

(இ - ள்) மோக்ஷ லோகமாவது மீட்டுப் பிறவாப் பிறவிக்கு யோக்கியமான தொரு ஸ்தானமெனில், க்ஷேத்திரமாகிய விதனுக்குத் தன்னுழைச் சென்றாரை மீட்டுப் பிறவாமை செய்யு மாற்றலுளதாமோ ? இனிப் பின் பிறப்புச் செய்வ தாகிய கர்மங் கெடுதலிற் பிறவானெனில், அவனுளனு யிருப்பிற் கர்மந் தானே யுளதாமென்று சொன்னுனென்றவாறு. (க௯௦)

427 பிறப்பதை வீடு மென்னே னவ்விடம் பேர்ப்பின் றென்னே
னுறத்தகு வினைக டாமு முண்மையா லொட்டு மென்னேன்
மறத்தவில் யோக பாவ மாசுதா மீட்டு மென்ப
திறப்பவும் வேண்டு கின்றேற் கெய்தல நின்சொ லென்றாள்.

இது,.........ரம்.

(இ - ள்) மேற்பிறவாமற் பிறப்பதோர் பிறப்பு மோக்ஷமென்றும், மோக்ஷ ஸ்தானம் பிறவாமைக் காக்குமென்றும் ஜீவன துண்மை மாத்திரத்தாற் கர்மமா மென்றுஞ் சொல்லேன. யோகஹாவங்களாற் காமமாம்; கர்மத்தாற் பிறவியாம்; யோகஹாவ நீங்கக் கர்மம் நீங்கும்; கர்ம நீங்கப் பிறவி நீங்கும்; பின்பு யோகஹாவ மின்மையிற் கர்ம பந்த மில்லை யென்று சொல்லுவேனுதலி னீ சொல்லிய குற்ற மெமக் கெய்தாவென்று சொன்னுளென்றவாறு.

யோகமாவது மனோ வாக் காய வியாபாரம்; ஹாவமாவது - அந்த யோகத் தால் ஜீவன்க ணுண்டாகிய பரிணும விசேஷம்; சித்த பரமேஷ்டிகளுழை மனோவியாபார முளதன்றேவெனி லுளதன்று; என்னை ?

[2]" இன்ன திருந்தடி யீண்டு குணச்செல்வ
னென்னும் பகைபசி வேட்கை வியப்பிலன்
கண்ணுந் துயிலான் கறுவச்ச மார்வமு
மன்னுமொன் றில்லை மனச்சிந்தை யின்றே "

என்பதனுல் அருகதாவஸ்தையிலு மில்லாதது சித்த பரமேஷ்டி யுழை யுள

1 காதை 30, 73 - 75; 78 - 81. 2 ?

தாகாதென்பது. ஆதலால், சுப யோகத்தாற் புண்யமும், அசுப யோகத்தாற் பாபமும், யோகாஸ்ரவத்தாற் கர்மாஸ்ரவமுமா மென்பது.

ஈட்டு மென்பது - ஈண்டுமென்றுமாம். (கசுக)

428 பிறக்குந்தன் ஞானத் தாலும் பின்னுந்தன் னுண்மை யாலும்
புறப்பொருள் கொண்டு நின்று புல்லிய சிந்தை யாலுஞ்
சிறப்புடை வீடி தென்று செப்புநீ தீவி னையைத்
துறக்குமா றில்லை நல்லாய் சொல்லுநீ வல்ல தென்றான்.

இது, "உணர்வவர்க்குப் பிறக்குமேல்"........தது.

(இ - ள்) இவனுக்கு ஞான மெப்பொழுதும் பிறத்தலாலும், தனதுண்மை யாலும் [1]ஸஹிரர்த்தங்களைப் பற்றிச் சிந்தையுள தாதலாலும், நின் ஸித்தாத்மாவினுக்குக் கர்ம [2]பந்த நீங்குமாறில்லை; நீ யிதற்கொன்று வல்லையேற் சொல் லுவாயாக வென்றா னென்றவாறு.

விளக்குள்ள துணையு மையுண்டானவாறு போல, ஞானரூபனாகிய இவ னுள்ள துணையு மிவன் கர்ம பந்தனும். என்னை? ஸம்ஸாரியான காலத்தும் புறப் பொருண்மேற் சென்ற ஞான நிகழ்ச்சியாலன்றே கர்மபந்தமாவது; அந்தஞானத் தோடு கூட நிற்கிலிவனுக்குக் கர்மஸந்தமா மென்று சொன்னானென்பது போந் தது. (கசுஉ)

429 நன்றியில் கார ணங்க ளிட்டுநீ காட்டி னவ்வு
மொன்றுநா னெட்டல் செல்லேன் யோகொடு பாவ நின்றாற்
குன்றினிற் கூர்ங்கை நட்டாற் கூடுநோ யாதிற் குண்டோ
வொன்றுநீ யுணர மாட்டா யொழிகநின் னுரையு மென்றாள்.

இது, .........ரம்.

(இ - ள்) நின்னால் அயுக்தமாகக் காட்டப் பட்டனவும், பிறவு மொன்றுங் கர்ம பந்த காரணமாக விசையேன்; முன் சொன்ன யோகாஸ்ரவங்களே கர்ம பந்த காரணமாக வேண்டுவன வாதலால், நீ யிவை சொல்லுதலால் நின் வாய் நோவதல்லது எமக்கு வருவதுண்டோ? பர்வதத்து முழங்கை நட்டு அமுக்கினா னுக்கல்லது அதனுக்கு நோவுண்டோ? நீ யாது மறியலை; நின்னுடை னுரைப்ப தெமக்கு [3]லாவவமே யென்று சொன்னாளென்றவாறு.

நான் காட்டியன அயுக்தமானவா றென்னை யெனின், எண்ணெயுடனுந் திரி முதலானவற்றுடனுங் கூடிய விளக்கன்றே மையுமிழ்வது; இவையின்றி யெரிவதோர் [4]பிரதீப முளதாயி னது மையுமிழுமோ? ரத்ன பிரதீப மையுமிழு மாறுண்டோ? அதுபோல கர்மபுத்கலத்தோடு கூடிய ஞானம் கர்ம காரணமாம். ர்ம பந்தத்து நீங்கிப் பரிசுத்தமாகிய கேவலஞ்ஞானங் கர்ம காரண மாகுமோ?

1 ஸஹிரர்த்தங்கள் - வெளிப் பொருள்கள்.
2 பந்தம் - பற்று. 3 லாகவம் - எளிது. 4 விளக்கு.

அன்றியுந் தோஷ வித்தாகியஜலம் யோக்யமாகிய ஔஷதங்களால் [1]ஸம்ஸ்கரிக்கப்பட்டுத் தோஷத்தினீங்கிறல் வியாதி காரணமாமோ? ஆதலால், கேவல ஞானங் கர்மகாரண மாகாமையில் நீ காட்டினவை யெல்லாம் அயுக்தமேயா மென்பது. அன்றியும் நினக்கு மோக்ஷமாவது ஞானவிநாசமன்றே; ஆதலால், நின் தர்மானுஷ்டானம் ஞானத்துக்குப் பகையா மன்றே; பகையாதலால் நின் தர்மானுஷ்டானம் வளர வளர ஞானந் தேய்ந்து சூன்யமாகல் வேண்டும்; வேண்ட, இவன் புத்தத்வம் பெற்றவழி [2]மிருதகல்பனாய் அத்யந்தம் அல்பஞானி யாதல் வேண்டும்; வேண்ட, இவன் அனாத்மனாம். இனி மிக்க ஞானத்தை யுடையனெனில், மிக்க கர்மங்களாற் பந்தனாய் சம்சாரத்துப் பிரமிக்கும். ஆதலால், நீ நின் குற்றமபாராது பிறர்க்குத் தோஷஞ்சொல்லத் தேடுவது நினக்கே தோஷமா மென்பது போந்தது. (கசங)

430 கருவிதா னென்று மின்றிக் கடையிலாப் பொருளை யெல்லா
மருவிய ஞானந் தன்னா லறியுமெம் மிறைவ னென்பாய்
கருவிதா னகத்தி னுய கடையிலா ஞான மன்றோ
மருவியார்க் கமிர்த மொப்பாய் மாற்றந்தா விதனுக் கென்றான்.

இது, "கருவியால் பொருள்க" ளென்னுங் காதை....... .தது.

(இ - ள்) கருவியின்றி யெல்லையில்லாப் பொருள்களை [3]ஸாக்ஷாத்கரித்தான் சர்வக்ஞனென்று சொல்லுவாய். ஞானந்தான் பொருள்களை யறியு மிடத்துக் கருவி யன்றோ? இவன் புண்ணியவானாதலில் புண்ணியந்தானுங் கருவியன்றோ? கருவியின்றி யுணர்ந்தா னென்னுமா றென்னை? இதனுக்கு மறுமாற்றஞ் சொல்லுவாயாக வென்று சொன்னா னென்றவாறு. (கசச)

431 வினையுமவ் வினையி னுய விகலஞா னங்க டாமு
மினையவே கருவி யென்றா விங்குநின் னுள்ளம் வையாய்
முனைவனாய் மூர்த்தி யல்லான் மூடமே மாசு மென்பாய்
கனைகட லெல்லை காணுங் காக்கையொத் தாய்கொ லென்றாள்.

இது, .........ரம்.

(இ - ள்) கருவியென்றியாங்கள் சொல்லுவது கர்மங்களுங் கர்மகாரியமாகிய இந்திரியங்களும், லிங்காதியும், அவற்றாலாகிய விகல ஞானங்களுமே; அவை யொழிய வுணர்ந்தமையிற் கருவியின்றி யுணர்ந்தா னென்போம். என்னை?

[4]"முறையினும் பொறியினு மறையினு நீங்கி"

என்பதாகலின்; இந்திரியங்களும், புண்ணியங்களும் பகவானுழை யுளவெனினு மவை கருவியாகப் பொருள்களை யுணரானாதலின். என்போலவெனின், மத்தி

1 ஸம்ஸ்கரித்தல் - சுத்தி செய்தல். 2 பிரேதத்திற்கு சமானமாய்.
3 ஸாக்ஷாத் கரித்தல் - பிரத்தியக்ஷமாக காண்டல்.
4 ?

யான காலத்து வெள்ளிடை நின்றான் கையுள் விளக்குளதேனு மது கருவியாகப் பொருள் காணவேண்டாதவாறு போலவும், கரையை வழிந்து தடையின்றி யோடா நின்ற மஹாஜலத்துக்குத் தூம்பு முதலாயின வுளவேனு மவை [1]ஜலநிர் கமத்துக்குக் கருவி யாகாதவாறுபோலவு மென்பது. இவையொன்றும் நீ புத்தி பண்ணுது அமூர்த்தனாகிய சித்த பரமேஷ்டிக்கு மூர்த்தமாகிய கர்மங்களோடு சம் பந்த முண்டென்று சொல்லுவாய். நீ யிவ்வாறெமக்குக் குற்றஞ் சொல்லத் தேடு கின்றவிது, சமுத்திரத்தைக் கடக்க நினைக்கின்ற காக்கைபோல நினக்குக் கிலேசகாரணமா மென்று சொன்னாரென்றவாறு.

இனி, [2]மரக்கலக் காக்கை சுழலப்பறந்து மரக்கல மொழிய வறியாதவாறு போல நீயுமொருகாலுரைத்ததனையே [3]புனருக்தமாகப் பலகால் சொல்லுகின்ற யென்றுமாம். (கசரு)

432 கொண்டதன் காரணந் தானு மில்லையேற் கூற்று மில்லை
மண்டினர் வினவு வார்க்கு மலைச்சிலம் பனைய னென்று
னுண்டுதன் காரணந் தானு முரைக்குநர்க் குறுவ னென்னனிற்
பண்டுசெய் நல்வி னையைப் பகவனே யென்று மென்றான்.

இது, "கா [4](ணத்தை யிலனாகி"......தது.

(இ - ள்) உதாஹரணமாகக் கொள்ளப்பட்ட காரணங்களாற் பேசலனு யிற் சொற்பிறவாதாம். அஃதன்றி மலை சிலம்புமாறுபோல வினவினார்க்கவ னுழை யுத்தாம பிறக்கி லதுவுங் காரணமுடைத்தாம். என்னை ? மலைச் சிலம்பா வது, ஒரு சப்தம் சென்றுறைக்க வது காரணத்தாற் பிறக்குஞ் சப்தமாதலில். அறிந்து சொல்லுங் கணதர தேவாதிகட்குக் காரணமா யுதவி நிற்பனெனில், இவன் வாக்கு தத்வோபதேசத்திற்குக் காரணமாயது அவர் செய்த புண்ணியத்தா லன்றே யாதலால், அந்தப் புண்ணியத்தைத் தலைவனாகக்கொள்ளவமையு மென்று னென்றவாறு.

இவனை யொழித்து, இவன் செய்த புண்ணியத்தையே தலைவனாகக்கொள்ள வென்பதூஉமாம். (கசுசு)

433 தனுவெனுங் கருவி தன்னாற் றனனடைந் தார்க டன்னை
வினவின வுணர்ந்து சொல்லும் வினையினுக் கின்ன துண்டோ
சினவினுந் தேர வொன்று செப்புவன் செல்க தீயுட்
கனவினு நின்ன னுரைக் காணல னாக வென்றாள்.

இது,.........ரம்.

---

1 நிர்கமம் - போக்கு.

2 "வங்கத்தின் கூம்பேறு மாப்பறவை போன்றேனே" என்று பின்னோர் செய்யுளிலும் வந்துளது.

3 புனருக்தம் - திரும்பக்கூறல். 4 இல்லாததற்குச் சேர்க்கப்பட்டது.

(இ - ள்) தனது திவ்ய மூர்த்தியின்கணுளவாகிய [1]ஓஷ்டதால்வாதி காரணங்களாலே தத்வோபதேசஞ் செய்யுமென்று சொல்லுவதல்லது, நீ சொல்லிய அயுக்த வசனங்கள் சொல்லுவதில்லை ; அதனாலன்றே யாங்கள் [2]ஸகலகாலத்தல்லது தத்வோபதேச மில்லையென்று சொல்லுவது. அசேதனனாகிய கர்மத்தினுக்கு தத்வோபதேச சாமர்த்திய முளதாயினன்றே யதனை தேவதை யென்று கொள்ளவேண்டுவது. அன்றியும், [3]“ஸம்பந்தி ப்ரதிபாஸா ப்ரதீதா கல்பநா” வென்பதனாலும், [4]“விகல்பயோநய: சப்தா:” என்பதனாலும் கல்பனா ஞானமுளவழி யல்லது சப்தமில்லை யென்று நீ சொல்லுதலில், [5]“விதூத கல்பநாஜால கம்பீரோதார மூர்த்தயே” யென்று நீ சொல்லுதலில் நிர்விகல்ப ஞானியாகிய சுகதனுழையே சப்தம் பிறவாதாதலின், அவனுக்கே சொல்லிய குற்றம் வருவது. நீ யெம்முடன் மாத்ஸர்யங் கொண்டனையாயினு மொன்று சொல்லுவன்; யான் சொல்லாதன சொல்லி வைகின்ற உன்னை யொப்பாரை ஜனமாந்தரத்தாயினுங் காணேனென்றார் என்றவாறு. (கஙஎ)

434 முறையினா லறிய லன்னேன் மூத்தலே யிளமை சாக்கா
டிறையல வொருவன் கண்ணே யுடனவை யாக வொட்டி
னிறைவனா ருணர்வு தானு மின்மைமே லெழுலும் வேண்டி
யறைதுநா மன்ன மன்னா யன்னண மாக வென்றான்.

இது, “முறை யுணரா னென்றியே”.........தது.

(இ - ள்) சர்வக்ஞன் பொருள்களை முறையால் அறியானெனின், மூப்பு, இளமை, சாக்காடு முதலாயின ஒருவன்கண் ணொருங் குளவாகாவன்றே ; அவைவான்முறையே யுணராது ஒருங்குளவாக வுணரி னிவனுடைய ஞானம் அசத்விஷயமாகச் சொல்லுதுமென்றா னென்றவாறு. (கஙஅ)

435 சீலவான் றெய்வ யாக்கை திண்ணிதா வெய்தி நின்றாற்
காலமூன் றானு முய்த்துக் காட்டலுங் காண்டு மன்றே
ஞாலமூன் றானு மிக்க ஞானவா னென நாதன்
போலுமென் றோர்தல் செல்லாய் போர்த்தனை யகமு மென்றாள்.

இது,.........ரம்.

1 பல், அண்ணம் முதலியவை.
2 கர்மங்களை உடைத்தெரிந்த கலாம்.
3 ஸம்பந்தீ பிரதிபாஸா பிரதீதா கல்பனா.
4 விகல்பயோநய: சப்தா:.
5 விதூத கல்பனா ஜால கம்பீரோதார மூர்த்தயே.

(இ - ள்) திவ்ய தபோதனரும், தேவ கதியிற் பிறந்தாரு மூன்று காலத்துப் பொருளுமறிந்து சொல்லுவது காண்கின்று மன்றே? [1]த்ரைலோக்யமும் ஒரு அணுவாகப் பெருகிய கேவலஞானமுடையானுக்கு முறை யுணர்தல் வேண்டுமோ? [2]அஸ்மதாதிகளும் [3]விகல ஞானத்தாற் பலபொரு ளொருங்கு காண்கின்றமை அநுபவ பிரஸித்த மன்றே? [4]ஜோதிர்வித்துக்களாயுள்ளா ரொருவனை யிவன் முன் இன்ன நாட் பிறந்தா னென்றும், மேலின்னநா ளிறக்குமென்றும், இன்ன நாட் கிரஹணந் தீண்டுமென்று மறிந்தகாலத் தவை யில்லையெனினு மது அசத்கிரஹண மாமோ? இது நீ யுணராமையின் புறம் போர்த்ததுமன்றி யுள்ளும் போர்த்தாயாகுதி யென்றுரென்றவாறு.

ஒரு பொருளின்க ணுண்டாகிய அதீதாநாகத பர்யாயங்களெல்லா மொருங்குள வென்றுணர்கின்றானல்லன். இப்பொருள் முன் பிற்றைப் பர்யாயங்களையடைந்தது; மேலிந்தப் பர்யாயங்களை யடையும்; இப்பொழுதின்ன பர்யாயத்தது: என்றெப் பொருளையு மொருகாலத் தொருங்குணரு மாதலி னீசொல்லிய குற்ற மெமக்கில்லை யென்பது போந்தது. (கங௬)

436 நாளெல்லா மாகி நின்ற நன்பொரு டம்மை யெல்லாங்
[5]கோளெல்லாந் தானொ ருங்கே கொள்ளுமே லீங்கு வள்ளைத்
தாளெல்லாந் தானொ ருங்கே தானுநல் லானோர் நல்ல
வாளினு லேறு முண்டேல் வாய்க்குநின் னுரையு மென்றான்.

இது, "உடனுகப் பொருள்களை யொருங் குணர்ந்தான்"......து.

(இ - ள்) சர்வகாலத்தும், சர்வ தேசத்துமுள்ள பொருள்களை யொருங்குணருமெனில் ஒரு குளத்துப் பூத்து நிறை குவளைகளை யெல்லா மொரு வாளி லோரேற்றா லொரு காலத்தே சேதித்தல் கூடுமாகில் நின்னுரை பிரமாணமாமென்று சொன்னு னென்றவாறு. (கஎ0)

437 நீருநீர் தோறு மொவ்வா நிலையிற்றே திங்க ளென்று
மூரினூர் தோறு மொவ்வா வொளியிற்றே ஞாயி றென்றும்
யாரின்யார் கேட்டறிவா ரன்னனே யண்ணலென்றார்
தேரனீ சொன்ன [6]தன்னம் சேரல வாக வென்றாள்.

இது,......ரம்.

(இ - ள்) ஜல பாத்திரங்கள் பலவற்றிலும் ஒரு காலத்துச்சந்திர மண்டலம் ஒப்ப நிழலிட்டவாறு போலவும், ஆதித்யன் ஒருகாலத்துத் தன்னுல் விளக்கப்

---

1 த்ரை லோக்யம் - மூன்று லோகப் பொருள்கள்.
2 எம் போன்றவர்கள். 3 விகல ஞானம் - ஸகல ஞானத்திற்கு வேறானது.
4 ஜோதிர்வித்துக்கள் - ஜோதிஷம் அறிந்தோர்.
5 கோள் - குணம் -
6 தன்னம் - திருஷ்டாந்தம்.

படும் பிரதேச மித்துணையும் ஒரு காலே விளக்குமாறு போலவும், சர்வக்ஞன் ஒருகாலத்தே யறியப்படும் பொருளெல்லா மறியுமென்று கொள்வாயாக. நீ காட்டிய திருஷ்டாந்தம் [1]வ்யத்வம்ச விசேஷமாகையால், [2]காரகஸாதனமாகையில் [3] ஞாபக ஸாதனமாகிய ஞானத்துக்கு திருஷ்டாந்த மாகாது. என்னை? பல கப் பியக்கறியுஞ் சோறுமாக நின்முன் வைத்தபோது அவை யடைவடைவே நுகர்ந்தா யெனினு மொருங்கே காண்கின்றிலையோ? விகல ஞானுதிகளாகிய அஸ்மதாதிகளும் பல பொருளு மொருங்கு காண்கை அநுஷவசித்த மன்றோ? இது பிற ருபதேசியாமற் றெரியாதோ? சேனையும், வனமும் பல கூடிய வேனும் ஏக ஞானத்துக்கு விஷயமாவது நீ யறியாயோ? அவை போலக் கொள்வாயாக; இவ்வாறு கொண்டக்கா லெங்கட்கோர் குற்றமு மாகாதென்று ரைன்றவாறு. (கஎக)

438 அளவிலாப் பல்பொ ருள்கட் காகுபண் பாகி நின்ற
வுளவெலாப் பொதுக்கு ணத்தா லொருங்கு [4]கோ ளீயு மென்னிற்
பிளவெலா மாகு மன்றே பெற்றிதா மொத்த தில்லேற்
கொளவெலா ஞானந் தானுங் கொள்ளுமா றவன் கொலென்றான்.

இது, "பொதுவாய குணத்தினால்"..........த்து.

(இ - ள்) எல்லையிலாத பொருள்களு ளெல்லா முளதாகிய சாமான்ய ரூபத்தை ஒருங்கே கிரஹிக்கும் விசேஷத்தை, கிரமத்தாலே கிரஹிக்குமென்பா யெனில், பதார்த்தங்கள் அந்யோந்யம் வேறுபட்ட குணங்களையுடைய வாகையா லிவற்றை கிரஹிக்கின்ற ஞானமும் பிளவுபட்டுப் பல்வேறு வகைப்படல் வேண் டும். அன்றியும் சாமான்யம் பொருள்தோறும் பலவுளவன்றே? உளவாக சாமான்ய மும் ஒருங்கு கிரஹிக்கை கூடாதாமாதலின், ஸர்வக்ஞனுடைய ஞான மொருங்கு கிரஹிப்ப தெவ்வாறென்று சொன்னா னென்றவாறு. (கஎஉ)

439 ஒன்றல்லாப் பலபொ ருளு மொத்தொவ்வாப் பெற்றி யாலே
நின்றுகோட் செய்யு மென்றா னீடிய குற்ற மாகா
தென்றலா லின்ன தன்மை யிறைவன தறிவு மெய்ம்மை
யின்றெலாங் கேட்டு மோரா யேடனீ யென்று சொன்னாள்.

இது,.........ரம்.

(இ - ள்) ஒன்றல்லாத சகல பதார்த்தங்களையும் சாமான்ய வகையாலும், விசேஷ வகையாலும் அநேக ஸ்வபாவத்ததாகிய கேவல ஞானத்தால் ஆதித்தன், தன் கிரணங்களாற் பொருள்களை விளக்குமாறுபோல அறிவனென்று சொல்

1 ஹேத்வா பாசங்களில் ஒன்று: தருக்கக்குற்றம்.

2 காரக ஸாதனம் -இல்லாத பொருளை உண்டுபண்ணும் கருவி.

3 ஞாபகஸாதநம் - முன்பே இருக்கும் பொருளை ஞாபகப்படுத்தும் கருவி.

4 கொள்ளும் - C. F. மணிமேகலை v. 44.

லுதலா லெங்கட்கோர் குற்றமுமாகாதென் றிவ்வாறு பலபடியுஞ் சொல்லவு மஃதறியாயாய்ச் சொன்னதனையே மீட்டு மீட்டுஞ் சொல்லுகின்றாய் நினக்கே நீ சொல்லிய குற்றங்களாவன. என்னை ?

"பொதுவினு லொருங்குணரு மிகுதியால் முறையுணரு
மிதுமற்றவ விருவகையு மிந்தனம் பெற்றதீப்
பொதுவாகச் சுடுதலுமொன் றொன்றாகச் சுடுதலுங்
கதுவாயிங் கில்லாமல் காண்கின்றோ மல்லமோ"

என்று நீயே சொல்லுதலி னென்று சொன்னு ளென்றவாறு. (கஎங)

440 எல்லையில் பொருள்க டம்மை யெல்லையி லறிவி னாலே
யெல்லையின் றறியு மெங்க ளெல்லையி லறிவ னென்பாய்
எல்லையில் பொருள்க டம்மை யெல்லையின் றறியி னின்ற
வெல்லையி லறிவு தானு மெங்ஙன மெய்து மென்றான்.

இது, "வரம்பில்லாப் பொருள்களை".........தது.

(இ - ள்) அநந்தமாகிய பொருள்களை அநந்தமாகிய ஞானத்தா லறிபொருளுள்ளளவு மறிவனென்று சொல்லுவாய் இவ்வாறுணர்கின்ற அநந்த ஞானம் கிரமத்தா லறியாதாயி னெவ்வா றறிவதெனறு சொன்னு னென்றவாறு. (கஎச)

441 துளக்கில்லாப் பலபொ ருளுந் தொக்கதன் றன்மை யெல்லாம்
விளக்குமே ஞாயி றொப்ப வென்பது மேலுஞ் சொன்னேற்
களக்கிவர் தன்ன மன்னு வாத்தன தறிவு மென்றேன்
றிளக்கிநீ யின்னு மஃதே சொல்லுதி யேழை யென்றாள்.

இது, .........ரம்.

(இ - ள்) சகல பதார்த்தங்களையும், அவற்றது தன்மைகளையும் ஆதித்யன் பொருள்களை விளக்குமாறுபோல விளக்குமென்று போன காதைகளுட் சொல்லப்பட்டது. சொல்லவு மது புத்திபண்ணுது சர்வக்ஞனது கேவலக்ஞானத்தினை நின் போக்கறுதியாற் புனருக்தமாகப் பலகாலுங் கேட்கின்றா யென்று சொன்னு ளென்றவாறு. (கஎரு)

442 [1]ஓதலி லுணர்வு மின்றே லுறவர்க் குண்டு மாகு
மோதலி லுணர்வு முண்டே லொன்றுமே[2] புலவும் வேண்டா
மோதலி லுணர்பொ ருடா முள்ளவும் மில்ல வும்மே
லேதமா மில்பொ ருண்மே னிகழ்ச்சிதா னிறைவற் கென்றான்.

இது, "எப்பொழுது மறியானேல்"தது.

1 ஓதலில் - நீங்காத ; ஓவுதலென்பதன் திரிபு. திருக்குறள், 66 - 3.
2 ஏ - எதிர்மறை.

(இ - ள்) எப்பொழுது மோவாதே பொருள்களை யுணரானாயின், அவனுடைய ஞானத்துக்கு இடையூறுண்டாய் ஒருகாற் சர்வக்ஞனாயினு மொருகாற் [1]கிஞ்சிஜ்ஞனும். இனி யோவாதே யெப்பொழுது மறிவனாகில் ஓவாது விஷயங்கள் சம்பவியாமையில் இவனுடைய ஞானம் இல் பொருளைப் பற்றிப் பிறந்ததாம். பொருளுண்டு மில்லையுமா மெனினும் இவனுடைய ஞான மில்பொருளைப் பற்றிப் பிறந்ததா மென்று சொன்னா னென்றவாறு. (கஎசு)

443 சென்றவக் குணங்க டாமுஞ் செல்லுமக் குணங்க டாமு
மன்றையக் குணங்க டாமு மப்பொருட் டன்மை யாலே
நின்றதன் ஞானந் தன்னா னிருமல னுணரு மென்றாற்
பொன்றின வெதிர்வ வென்றல் பொருள்களுக் கில்லை யென்றாள்.

இது,......ரம்.

(இ - ள்) அதீதமாய்க் கழிந்த பர்யாயங்களும், அநாகதமாய் வரக்கடவதான பர்யாயங்களும், வர்த்தமானமாய் நின்ற பர்யாயங்களுமாகிய இந்தப் பர்யாயங்களை, அப் பரியாயங்களை யுடைய பொருளுக்குத் தன்மையாக, இப்பொருள், முன்பின்ன பர்யாயங்களை யுடைத்தாய் நிகழ்ந்த தென்றும, இப்பொழுதின்ன பர்யாயத்தோடு நிற்கின்றதென்றும், மேலின்ன பர்யாயங்களை யடையுமென்றுந் தன்னுடைய சகல விமல கேவல ஞானத்தால் பரமேஶ்வரன் க்ஷணந்தோறுமுணர்கின்றமையிற் பொருள்களுக்குக் கேடுந் தோற்றமு முதலாயின வின்மையில் சர்வக்ஞனது ஞானம் அசத்விஷய மென்று சொல்லுதல் அயுக்தமென்று சொன்னா ளென்றவாறு.

இன்னும் பதார்த்த முண்டு மில்லையு மாதலாற் சர்வக்ஞனது ஞானம் அஸத்விஷயமென்பதும்அயுக்தமாம். என்னை? [2]"இஹபூதலே கடோ நாஸ்தி" என்று பிறந்த ஞானம் ஸ்வவிஷயமாகிய [3]கடத்தை [4]விவக்ஷித பூதலத்து இல்லையென்று கிரஹித்ததெனினும் அஸத் விஷயமாகாதவாறுபோலவென்பது.

444 பிறவிதா னென்று மில்லான் பெரியனே யென்று நின்றான்
மறவிதா னில்லை யோனி மன்னுநான் கென்னு மில்லா
னறவியா யுந்த நூலுள் ளாத்தனு மாயி னக்காற்
புறவினிற் புரளுங் கல்லும் புண்ணிய னாக வென்றான்.

இது, "யோனிமற் றவர்க்குரை"......தது.

(இ - ள்) பிறவியறுத்துள்ளானுமாய், எப்பொழுதும் சகல பதார்த்த ஸாக்ஷாத்காரியுமாய், கதிகளாய் நிலைபெற்ற நான்கு முடையனு மல்லனாய் நின்றான்,

1 அல்ப ஞானமுடையோன்.
2 இஹபூதலே கடோ நாஸ்தி - இங்கே பூமியில் குடமில்லை.
3 கடம் - குடம். 4 குறிக்கப்பட்ட.

உன்னுகமத்துள் ஆப்தனென்று சொல்லப்பட்டனனுயிற் பிறவியும், மறவியும் மூதி நான்கு மில்லாதனவாய்க் கானத்துக் கிடக்கின்ற கல்லு முதலாயினவும் ஆப்தனுக வேணுமென்று சொன்னு னென்றவாறு.

நான்காவன - அண்டஜம், 1பொதஜம், 2ஜராயுஜம், 3உபபாதஜம் என் பனவுமாம். (கஎஅ)

445 பிறத்தலே தலைமை யாயிற் பிள்ளைக ளல்ல தென்னை
யறக்கெட றூன தென்னி லட்டக வித்து வெந்தாம்
புறப்படும் போர்வை யாலேற் புண்டொழு நோய ராகச்
சிறப்புடை யண்ண றன்னைக் கல்லெனச் சொல்லு வாய்க்கே.

இது,......பரம்.

(இ-ள்) பிறப்பு முதலாகிய நான்குமில்லாத சர்வக்ஞன் ஆப்தனென றவழி யதற்குக் குற்றங் கூறுதியாயின், நான்குமுடைய அவனையே ஆப்தனுகக் கொண் டாயாகுதி; நின் பக்ஷத்தாலு மஃதொக்கும். என்னை? நாலெண்ணிறப்பு நூறுயி ரங்கற்பகாலம் பிறந்து துக்கங்களை அனுபவித்தான் சுகதனென்று சொல்லு தலின்.

அவ்வாறு தற்கட் பிள்ளைப் புழுவென்னும் பிராணிகளும் 4சுமுதனுேபாதி ஆப்தராகல்வேண்டும். என்னை? சுகதனைப்போல அவையுஞ் 5சாணுக முதலா யினவற்றுட் பிறந்தும் பிணிப்பட்டு மூத்துஞ் சாகின்றனவாதலானும், சுகதன் பூதபிசாச ராக்ஷஸாதிகளாற் பீடிதனுயினவாறுபோல பிள்ளைப் புழுக்களுங் கட் டெறும்பு முதலாயினவற்றுற் பீடிதங்களாகையாலும், சுகதனைப்போல க்ஷண வர்த்தியாகிய ஞானத்தை யுடைமையிற் பொருள்களை யறியாவாதலானு மென் பது.

இனி யவ்வாறன்றி, சுகதன் கையறக் கெடுதலால் ஆப்தனெனில், அவ னைப்போல 6நிஃஸக்திகமாக வெந்த அஷ்டக பிண்டமாகிய பீஜம் ஆப்தனுகல் வேண்டும். இனி யவ்வாறின்றி முகமொழிய உடம்பு போர்த்தலால் ஆப்த னெனில், அவ்வாறு போர்க்கின்ற அழுகு தொழு நோயாளரும் முணிகா ஜனங் களும் ஆப்தராகல்வேண்டும். கர்மங்களி னீங்கி அநந்தஞானனுகி ஸ்வரூபனுகி நிர்மலனுகி திரைலோக்கிய பூஜார்ஹனுகிய பரமேஷ்டியைக் கல்லோ டொப்பித் துச் சொல்லுகின்ற பாபிஷ்டனுகிய நினக்கென்று சொன்னு ரென்றவாறு.

7"பிள்ளை யுட் புகுந் தழித்த தாதலாற்
பிள்ளைப் ......... பெயர்ச்சி"

என விவற்றுட் பிள்ளை யென்னும் பக்ஷி விசேஷத்தைப் பிள்ளை யென்றவாறு

1 கர்பத்திலிருந்து பையின்றிப் பிறத்தல்.
2 கர்பத்திலிருந்து பையுடன் பிறத்தல்.
3 தேவ நாரகர்கள் பிறக்கும் விதம்.
4 சுமுதனுேபாதி-புத்தனைப்போல. 5 சாணுகம் - சாணி. 6 சக்தியற்றது.
7 சிந்தாமணி - கோவிந்தை யாரிலம்பகம், (கக).

போல வீண்டும் பிள்ளைப் புழு வென்னும் பிராணி விசேஷத்தைப் பிள்ளையென்று கூறினு ரென்பது.

இவனுடைய ஞானம் க்ஷணவர்த்தி யாதலிற் சகல பதார்த்த சாக்ஷாத்காரி யாகாமையாவது இவனுடைய ஞானம் ஏகக்ஷணவர்த்தி யாதலில் அதீத காலத்துப் பொருள்களையும், அநாகத காலத்துப் பொருள்களையும் இவனுக்கு அறிதல் கூடாதாம். எனனை ? அதீதகாலத்துப் பொருள்கள் முன்பே கையற நசித்தில்லாமையாலும், அநாகத காலத்துப் பொருள்கள் பிறவா தில்லாமையாலும் ஏக ஞானதனுக்கு அநேக பதார்த்தங்களை யறிதற்கு அநேக சக்தி யில்லாமலாலும் என்பது. ஏகஞானத்துக்கு அநேகசக்தி யுண்டாகில் இவனுடைய ஞானம் அநேகாந்த ஸ்வபாவத்ததுவுமாய், அநேக ரூபத்ததுவுமாய், ஸ்வமத விரோதமாமென்பது. இனி வர்த்தமான காலத்துப் பொருள்களையு மிவனுக் கறிதல் கூடாதாம். என்னை ? "நாகா ரணந்த விஷய:" என்பதனுல் விஷயங் காரணமாக ஞானம் பிறக்க வேண்டுதலின் வர்த்தமான காலத்துப் பொருளகள் ஞானத்தோடு ஸமவர்த்திக ளாதலிற் காரணமாக மாட்டாமையி னென்பது.

[2]தயா வொக்தஂ:—"யஜ்ஜ்ஞாநஂ க்ஷணவர்தி-வஸ்து ஸகலஂ ஜ்ஞாதாஂ நஶக்யஂ "இதி.

இனி யிவனுக்குப் பிறவியுண் டெனபது,

[3]"அளவிலாக் கடைப்பிடி யொருநான்கும் பிறப்பென்னுங்
களையருந் துன்பத்துக் கற்பநா ருயிரமும்
விளைவாய போதியை யுறுமளவும் வினைமடியான்
தளர்வின்றி யோடிய தாளினு னல்லனே"

என்பதனுலும், [4]"வானும் பரியாயும்......மானு ஆரே" என்பதனுலும் பெறப்படும். இதனுலே இவனுக்குப் பிறப்பு மூப்பு முண்டென்பதூஉம் பெறப்படும். இனி யிவன் கர்மவசத்தால் வருவனவாகிய பசியாலும், நித்திரையாலும் வருந் திப் பாத்திர மேந்தி ஹிக்ஷை பண்ணுதலும், உறங்குதலும், வெயிலுக் குடைந்து தன் கையிற் குடைபிடித்தலும், பூமியுட் பருக்கை முதலானவற்றுக் கஞ்சிச் செருப்புத் தொடுதலும் முதலான வுண்மையி னிவனுக்குப் பிணியுண் டென்பதூஉ மிவன் [5]அக்ருதார்த்த னென்பதூஉம் பெறப்படும். ஆதலா லிவன் ஸ்வேச்சையால் பிறந்தானென்று சொல்லினு மிவன் ஸம்சாரியேயா மாதலில் அப்தனுகா னென்பது. (கஎக)

146 அடைவிலா யோனி யாளு யாருமொப் பாரு மின்றிக்
கடையிலா ஞான மெய்திக் கணங்களுன் மூன்றுஞ் சூழ்ந்து

---

1 அநேகாந்தஸ்வபாவத்தது - பல முடிபுகளாம் தன்மை.

2 ததா சோக்தம் :—"யத்ஞாநம் க்ஷணவர்தி வஸ்து ஸகலம் ஞாதும் நசக்யம் "—இதி.

3 கு. கே. 4 ? 5 விரும்பினதை முடித்தானல்லன்.

புடையெலாம் போற்றி யேத்தப் பொன்னெயிற் பிண்டி மூன்று
குடையினு னிறைவ னென்றாற் குற்றமிங் கென்னை யென்றாள்.

இதனால், அர்ஹத் பரமேஸ்வரனது ஸ்வரூபங் கூறுகின்றார்.

(இ - ள்) ஜன்மஜராமரணாதி ஸம்ஸார ரோகமிலனாய்த் தன்னோ டொப்பாரையும், மிக்காரையு முடையனின்றித் தானே பெரியனாகி, அநந்த ஞானாதி ஸ்வரூபவானாகித் தபோதனர் முதலாகிய [1]த்வாதச கணங்க ளெப்பக்கமும் நின்றேத்த சமவசரண மண்டலத்து அசோக விருக்ஷத்தின் கீழ்த் திரிலோகாதிபத்திய மெடுத்துச் சாற்றுவனவாகிய [2]சத்ரதிரய நிழல்செய்ய எழுந்தருளி யிருந்த அர்ஹத் பரமேஸ்வரன் ஆப்தனென றற்கண் குற்றமென்னை யென்றவாறு.

இதனால், "யோனி மற்றவர்க் குரையே" னென்னுங் காதையா லொரு குற்றமுஞ் சொல்லிற் றில்லை என்பது சொல்லப்பட்டது. "அடைவிலா யோனியனு" மென்பதனால், "யோனி......லே" என்று இத்துணையுஞ் சொல்லப்பட்டது. "யாரு மொப்பாரு மின்றி" யென்பதனால், "தானத்துப் பெரியனும்" என்று சொல்லப்பட்டது. "கடையிலா ஞானமெய்தி" யென்பதனால், "தத்துவத்தாற் சொல்லப் படுவா" னென்பது சொல்லப்பட்டது. இவ்வாறு குணஸ்தவநம் பண்ணிய நீ யவனைக் கல்லோடொப்பித்த தெக்குணத்தா லென்று அவன் குற்றமென்று சொன்னதனைக் குற்றமன்மை சொன்னவாறு போந்தது. (கஅ0).

447 கோதியிட் டுள்ள தெல்லாங் குண்டல கேசி யென்பா
ளாதிசா லாவ ணத்து ளார்கதர் தம்மை வென்ற
வீதியீ தென்று சொல்லி வீழ்ந்தனை நீயு மென்றா
ணீதியாற் சொல்லி வென்ற நீலமா கேசி நல்லாள்.

ஆவணம் - நகரம். ஆர்கதர் - ஆர்ஹதர். வீழ்ந்தனை - தோற்றனை. (கஅக).

வேறு

448 பேதைக ளுரைப்பன வே சொல்லிப் பெரிதலப் பாட்டினை நீ
பேதை மற்றிவன் பெரி தெனப்படும் கருத்துடை மிகுதியினாய்
தாதையைத் தலைவனைத் தத்துவத் தரிசியைத் தவநெறியி
னீதியை யருளிய நிருமலன் றகைநினக் குரைப்ப னென்றாள்.

அலப்பாட்டினை - அலமந்தனை. (கஅஉ)

வேறு

449 பகைபசி பிணியொடு பரிவின பலகெட
முகைமலர் தளிரொடு [3]முறிமரம் வெறிசெய

1 த்வாதச கணங்கள் - வி. கு. காண்க.
2 சத்ர திரயம் - முக்குடை.
3 முறி - இலை, தளிர்.

மிசைநிலம் விளைவெய்த விழைவொடு மகிழ்வன
திசைதொறு மிவைபிற 1சுகதன செலவே. (கஅரு)

450 குழுவன பிரிவன குறைவில நிலையின
வெழுவன விழுவன விறுதியி லியல்பின
வழுவவில் பொருள்களை மலர்கையின் மணியென
முழுவது முணருமெ முனிவர னறிவே.

குழுவன, பிரிவன - ஜீவனும், 2புத்கலமும். குறைவில, நிலையின - 3தர்மாஸ்தியும், 4அதர்மாஸ்தியும், 5ஆகாஶா ஸ்தியும். எழுவன, விழுவனவிறுதியிலியல்பின - உத்பத்தி விநாஶஸ்திதி. (கஅச)

451 நிறைபொறி யுளவவை யறிதலி னெறிமைய
முறைபொரு ணிகழினு முறைபடு மறிவிலன்
மறைபொரு ளுளவவ னறிவினை மறையல
விறைபொருண் முழுவது மறிதிற மிதுவே.

(இ - ள்) நிறைபொறி யுளவவை யறிதலி னெறிமைய - அருகத் பரமேஸ்வரனுக்குச் சம்பூர்ணமாய்த் தலையாகிய இந்திரியங்களுளவே யெனினு மவை கருவியான் அப்பொருள்களை யறியாதவாறு போல வென்பது. முறை பொருணிகழினு முறைபடு மறிவிலன் - பொருள்கள் முறையே நிகழினு முறையே நிகழு ஞானமிலன். என்னை? இருட்டறையில் விளக்குக்கொண்டு பொருள்களைக் காண்பானுக்கன்றி, நன்பகல் வெள்ளிடை நின்றான் பல பொருள் ஒருங்கு காண்பது காண்டு மன்றே யதுபோல சகலாவரணத்தாலு நீங்கிய விவனுடைய ஞானம் 6ஞேயமுள்ள துணையும் ஒருகணத் தொருங் குணரும். மறைபொருளுளவவ னறிவினை மறையல - தோன்றாப் பொருள் உளவேனும் அவனுடைய ஞானத்திற் றோன்றுங்கள். தோன்றாப் பொருணான்கு வகைய - திரவ்யத்தாற் றோன்றாதனவும், க்ஷேத்திரத்தாற் றோன்றாதனவும், காலத்தாற் றோன்றாதனவும், ஸ்வபாவத்தாற் றோன்றாதனவுமென. அவற்றுள் திரவ்யத்தாற் றோன்றாதன - பூமியுட் ஜல முதலாயின; க்ஷேத்திரத்தாற் றோன்றாதன - பரதத்தார்க்கு மஹாமேரு முதலான; காலத்தாற் றோன்றாதன - அதீத காலத்துப் பொருளும், அநாகத காலத்துப் பொருளும்; ஸ்வபாவத்தாற் றோன்றாதன - 7வியந்தர சரீர முதலாயின. (கஅடு)

---

1 சுகதன் - அருகன்.
2 புத்கலம் -
3 தர்மாஸ்தி -
4 அதர்மாஸ்தி -
5 ஆகாஸாஸ்தி -
(2–5:) ஜீவனோடு - ஐந்து அஸ்திகாயங்கள் - விவரம் வி. கு. காண்க.
6 ஞேயம் - அறியப்படும் பொருள். 7 வியந்தாசரீரம் - பேய்ச் சரீரம்.

452 பிணிதரு பிறவிய மறுசுழி யறுவதொர்
துணிவிது வெனநம துயர்கெடு முறைமையு
மணிதரு சிவகதி யடைதலு மருளுதல்
பணிதரு பரமன தருள்படு வகையே.

[1]ஹேயோபாதேய தத்துவங்களை வினவினார்க்கு உபதேசித்தலே பக வானுக்கு அநுக்கிரஹமாவது. (கஅசு)

453 சொரிவன மலர்மழை துளிகளு நறுவிரை
புரிவன வமரர்கள் புகழ்தகு குணமிவை
விரிவன துதியொலி விளைவது சிவகதி
எரிவன மணியிதெ மிறைவன திடமே. (கஅஎ)

454 அரசரு மமரரு மமர்வனர் வினவலின்
வரைவில பிறர்களு மனநிலை மகிழ்வெய்த
வுரைபல வகையினு முளபொரு ளுணரவொர்
முரைசென வதிருமெ முனிவரன் மொழியே.

(இ-ள்.) உரை பலவகையினும்-எல்லாப் பாடையிலுள்ளாருந் தத்தம் பாடை போல வறிய. முரைசெனவதிரும் - ராகத்வேஷமின்றித் தெறித்த முரசு போல பதார்த்த மிருந்தவாறு கேட்டார்க் குரைக்கும். அசேதனமாகிய முரசு சேதனனாகிய இவனுக்குத் திருஷ்டாந்த மாமோவெனி னும்; [2]தீபசிகையும், ஆற்றொழுக்கும், [3]ஞான ஸந்தானத்துக்கு நீ காட்டியவாறுபோலவும், சந்திர மண்டல சாயை பிரம்மத்துக்கு திருஷ்டாந்த மாக்கியவாறும் பிறவும் போலவு மென்பது. அவையொருபுடையால் ஊஷ்டாஜ்ஞமாயினவாறு போல விதுவு மொருபுடை திருஷ்டாந்தமாயிற்றென்று கொள்க. அன்றியும் ராகாதியும், [4]வக்துமிச்சை முதலாயினவும் சப்தோத்பத்திக்குக் காரணமாகா; என்னை? ராகாதியால் மிக்க வீதி புருஷரில் ராகாதியாற் குறைபட்ட ரிஷிகள் முதலாயினாருழை அநேக ஶதகோடி காவ்யாதி ஶப்தோத்பத்தியுள வாதலாலும், வக்துமிச்சை யுண்டாகிய வழியுஞ் சிலருழை வியாக்யானதியின்மையாலும், வக்துமிச்சை யின்றியும் ஶாஸ்த்ராப்யஸநாதியிலும், நித்ராசமயத்திலும் [5]ஶப்தோத்பத்தி காண்டலானுமென்பது. (கஅஅ)

---

1 ஹேயோபாதேய தத்துவங்கள் - நீக்கவும், கொள்ளவும் வேண்டிய தத்வங்கள். 2 தீபசிகை - விளக்கின் நுனி.
3 ஞான சந்தானம் - ஞானத் தொடர்ச்சி.
4 வக்து - மிச்சை - பேச விரும்புதல்.
5 சப்தோத் பத்தி - பேச்சுப் பிறத்தல்.

455 வினையிரு ளடுவன விரிகதி ரியல்பொடு
கனையிருள் கடிவன கடுநவை யடுவன
மனையிரு ணெறிபெற மதிகெட வடைவன
வினையமெ யிறையவ னிணையடி யிவையே. (கஅகூ)

வேறு

456 ஆத்த னிவனென் றடிக ளடியிசைப்
பூத்தனைத் தூவிப் பொருந்து துதிகளி
னேத்துநர் கண்டா யிருவினை யுங்கெடப்
பாத்தில் சிவகதிப் பான்மைய வென்றாள். (ககூ௦)

457 ஏந்த திறங்க ளிவையே லமைந்தன
போந்த வகையாற் பொருளும் பிழைப்பில
வீந்த விவற்றினின் வேற்றுமை வீட்டிற்கு
மாய்ந்த வகையா லறிவிமற் றென்றான். (கசூக)

458 வித்தென் றும் வெந்தால் முளையல தாயெண்மை
யொத்தினி துண்டா முயிரும் பிறப்பின்றிச்
சித்தி யகத்துச் சிதைவிலெண் டன்மையி
னித்திய மாகி நிலையுள தென்னாய்.

இது, மொக்கலன் [1]தத்துவ சிரவணானந்தரம் [2]தர்ம சிரத்தாலுவாகி ஆப்த ஸ்வரூபமும், பதார்த்த ஸ்வபாவமு மறிந்தேன்; மோக்ஷமெப்பெற்றியதெனறு கேட்ப, அதனது பரமார்த்தங் கூறும்.

வறுத்த வித்து முளையாதே யெனினு நின்பக்ஷத்தால் வர்ண கந்த ரஸ ஸ்பர்ஸஸஹித சதுஷ்டயங்களுமாகிய அஷ்டக பிண்டமாயே நிற்குமன்றே, யது போல, ஆத்மாவுங் கர்ம நீங்குதலாற் பிறவாதாகி அனந்த ஞானதி யஷ்டகுண ரூபமாகி ஸித்தி க்ஷேத்திரத்து நித்திய ரூபத்ததாகி நிற்கு மென்றவாறு. சர்வ சூன்யமாகிய பௌத்த மோக்ஷத்துக்கு வெந்த வித்து திருஷ்டாந்தமாகா தென்ப தூஉம் போந்தது. (கசூஉ)

459 ஒக்கு மிதுவென வுள்ளங் குளிர்ந்தினி
மொக்கலன் சொல்லுமிம் மோக்கத்தைப் பாழ்செய்த
தக்கில தாகுந் தலைவ ரியல்பென
நக்கன னுய்க்கென்று நன்னுத லென்றான். (கசூ௩)

---

1 தத்துவ சிரவணானந்தரம் - தத்துவம்கேட்ட பிறகு.
2 தர்மச்சிரத்தாலு - தர்ம பக்தியுடையன்.

460 பண்டே யெனக்கிம் மயக்கம் பயந்தவன்
கண்டார் மயங்குங் கபில புரமென்ப
துண்டாங் கதனகத் தோத்துரைக் கின்றனன்
றண்டா தவனொடு தாக்கெனச் சொல்லி. (கசுஐ)

461 சிறப்பின தென்பதைச் செப்பலுந் தெற்றெனப்
பிறப்பறுத் தின்பெய்தும் பெற்றியின் மிக்க
வறப்புணை யாகிய வாயிழை யாயான்
மறப்பில னென்று வலஞ்செய் தொழிந்தான். (கசுஞ)

462 அருளே யுடைய னறனே யறிவா
னருளா தவரைத் தெருட்டல் லதுவே
பொருளா வுடையாள் புலனே நிறைந்தா
ளிருடீர் சுடர்போ லெழுந்தா ளவன்மேல்.

இருடீர் சுடர் - இருட்சி நீங்கிய சுத்தவ்ரதீவம். (கசுசு)

நீலகேசித் திரட்டில் மோக்கல வாதச் சருக்கம் முற்றும்.

ஐந்தாவது

# புத்த வாதச் சருக்கம்



463 அணிநா டிவைதா [1]மறல்யா றிவைதாம்
பிணிநா டிவைதாம் பெருங்கா டிவைதாம்
மணிமா மலைதா மெனவே வருவாள்
[2] அணிவாள் சுகதன் நகரெய் தினளே.

'மணிமாமாலை' யென்புழியும், 'இவை' யென்பது கூட்டுக. 'என' வென்பதற்கு, 'நோக்கி' யென்னுஞ் சொல்லுங் கூட்டி, 'என நோக்கியே வருவா' ளென வுரைக்க. (௧)

464 அறையுங் கடலு [3]மலைவக் குரலும்
பறையின் னொலியும் படுகண் டிகையுஞ்
சிறையின் மிகுமா விது [4]செம் படர்கள்
இறைவன் னுறையும் இடமா மெனலும்.

(இ - ள்.) 'கண்டிகை' என்பது - ஒரு வாத்திய விசேஷம். சிறை - அரண். கடற்கரை யாதலானும், மாம்ச நிமித்தமாக வதிக்கப்படுகின்ற பிராணிகளது [5]ஆக்ரோசத்தாலும், மீன்கோட் பறையுடைத்தாதலானும், அரணுடைத் தாகலானும் இது புத்தனிருக்குங் கபிலபுர மென்று புத்தி பண்ணி யென்றவாறு.

இவனுக்கு மாம்ச முண்ண வேண்டுதலில், கடற்கரை முதலான காரணங்கள் சொல்லுக. அரண் மிகுதி சொல்லிப் பயந்ததென்னை யெனின், அவன் அர்த்தவா னுதலி லழிவில்லா விடத்திருக்கு மென்பது. சிவந்த படமென்பது - சீவரம்; அஃதுடையார் - செம்படர்; அவர்க்கிறைவன் - புத்தன். (௨)

465 மழைசேர் [6]நகரம் மலைபோன் றனவே
கழைசேர் [7]கொடியுங் கதலிவ் வனமே
விழைதா ரவரும் விரிகோ தையரும்
முழைவாழ் புலியே மயிலே மொழியின். (௩)

466 நெடுவெண் டிரைமே னிமிருந் திமிலுங்
கடுவெஞ் செலவின் னுலவுங் கலனும்

---

1 அறல் - கருமணல். 2 'அணியார்' என்றும் பாடபேதம்.
3 'அரவக் குரலும்' என்றும் பாடபேதம்.
4 செம்படர் - சிவந்த சீவரமென்னும் ஆடையை அணிந்தவர்.
5 ஆக்ரோசம் - அச்சக்குரல். 6 நகரம் - மாளிகை. 7 கொடி - துவஜம்.

படுவண் டறையும் பொழிலும் மெழிலார்
மடுவுந் திடரும் மணல்வார் புறவும்.

'இமில் நிமிரும்; கலனுலவும்; பொழில் வண்டார்க்கும்; புறவும், மடுவும், திடருமாயிருக்கும்' என வுரைக்க. (ச)

467 கயன்மீ னிரியக் கழுநீர் விரியும்
வயன்மாண் புடைய வளமைத் தெனவும்
முயன்மீ னெறியும் முறியுங் கறியா
தயன்மே யுறையா தணியிற் றெனவும்.

வயல், கயன் மீனிரியக் கழுநீர் விரியு மாட்சியுடைத் தென வுரைக்க. (ரு)

468 கழுகின் னினமுங் [1]கழுதின் னினமும்
முழுதும் [2]மறுவை பலமூ டினருங்
கொழுதின் னிணனும் பிணனுங் குலவி
யிழுதென் னெலும்பா ரிடுகா டெனவும்.

இழுதென் னெலும்பு - [3]ஸ்நிக்ஷமான புத்தெலும்பு. (சா)

வேறு

469 சாதியே மிக்க தடுமாற்ற வெந்துயர
மோதியே வைத்தாரவ் வோத்தெலா மீக்கிடந்த
வீதியே காணலா மென்றுளா நின்றரும்
போதியா ரீண்டைப் புலால்பழியா ரென்றலும்.

சாதி - பிறப்பு. ஈண்டைப் புலால் - அங்காடிப்புலால். (எ)

470 அங்காடிப் பண்டவூன் றின்ன வறமுரைத்தார்க்
கிங்காடி வாழ்வனவு மூனுய்வந் தீண்டியவாற்
கொங்காடத் தேனறையுங் கொய்ம்மருதம் பூவணிந்த
பொங்காடை போர்த்தார்க்கும் பொல்லாதே யென்னீரோ.

(இ-ள்.) அறமுரைத்தார்க்கு அறமுரைத்தாரென்க. பொல்லா தென்னீரோ புத்தர்க்கு மகாபாப மென்று சொல்லுவீராக வென்றவாறு.

என்னை? காரணத்தாற் பாபமா மென்று வேண்டுவார்க்கன்றே ஊனுண்ணினுங் கொலைப் பாவம் வருவது? புத்தர் காரணத்தாற் பாவம் வேண்டாமையின், அவர்க்குக் கொலைப்பாவ மாகாதன்றே? ஆகாமையிற் பாபமாமா றென்னையெனில், புத்தர் காரணுற்பாவங் கொள்ளாரெனில், காரணத்தாற் புண்ணியமுங் கொள்ளா

---

1 கழுது - பிசாசம். 2 அறுவை - வஸ்திரம்.
3 ஸ்நிக்ஷமான - பசையுடைய.

ராகல் வேண்டும்; ஆகவே புத்ததேவரை பூஜித்தல் விருத்தியாக வுடைய பரிசாரக னொருவன், புத்தபூஜை பண்ணி, அவனது [1]பாதபீடிகையி விடப்பட்ட புஷ்ப முதலாயின கொணர்ந்து உபாஸகர்க்குக் கொடுப்ப, அவர்களு மதனை [2]ஆதர புத்தியோடு வாங்கிக்கொண்டு அவற்கு ஜீவனுதி கொடுத்தார்; அவ்வழி உபாஸகர் தாம் பூஜித்தது மிலர், பூஜிக்க வேவிற்று மிலர்; இவ்வாறாக வும் அவர்க்குக் காரணமான மாத்திரத்தாலே வருவதாகிய புண்ணிய மிலதாக வேண்டு மெனபது.

பூஜைக் கென்ப தறிந்து பொருள் கொடுத்தலிற் புண்ணியமா மென்னில், [3]வதைக் கென்பதறிந்து பொருள் கொடுத்தலிற் பாவமா மென்பது. பூசா சம்பந்தி யல்லாத புஷ்பங் கொண்டுசெல்லப் பொருள் கொடுத்து வாங்கினுற்குப் புண்ணிய மில்லாதவாறு போல, ஹிம்ஸா சம்பந்தி யல்லாத மாம்சங் கொடுவார், விலை கொடுத்து வாங்கினுற்குப் பாவமில்லை யெனில், புஷ்பங் கொண்டான் புஷ்ப வருவாய்க்கு உடன்பட்டவாறு போல, [4]ம்ருத சரீர மாம்ஸங் கொண்டாற்கு மந்த மாம்சத்தின் வருவாயாகிய பிராணி மரணத்திற் குடனபாடாமென்பது. புத்த பூஜையால் வந்த புஷ்ப முதலாயின உபேக்ஷித்தான புத்த பூஜையை உபேக்ஷித்தா னனவாறு போல ஜீவமரணத்தால் வருவதாகிய மாம்சத்தை உபேக்ஷித்தவனே ஜீவமரணத்திற்கு உடன்படாதா னென்பது.

[5]"காரணத்தாற் பாவத்தைக் கைக்கொள்ளாச் சாக்கியன்றன்
காரணத்தாற் புண்ணியமுங் கைக்கொள்ளா னுற்
பொருள்கொடுத்தான் பூசைக்கப் புண்ணியத்தை யெய்தா
னருள்படைத்தார்க் கில்லை யறம்"

[6]"புத்தன் சிறப்பால் வரும்பூவை வேண்டாதான்
புத்தன் சிறப்பினையும் போற்றானு—மித்திறத்துக்
கொன்று கொணர்ந்தவூன் கொள்ளாக் குணமுடையா
னன்றே கொலைநேரா தான்"

என்பவற்றாலும் புத்தனுக்குப் பொல்லாங்கு தெரிந்து கொள்க.

அன்றியும் புத்தன் [7]த்ருஷ்டி விஷமாய்ப் பிறந்த ஜாதகத்து, ஒரு வேடன் மூக்கிற் கொடிகோத் திழுப்புழித் தான் கொல்லா னேவான் கொலையுடன்படாஞயினுங் கண் விழிப்பி லவன் சாமென்பதறிந்து, தன் கண்விழியாதே கிடந்து மரித்தமையிற் புத்தன் காரணத்தாற் பாவமிசைந்தானும்; இசைந்தானே மாம்சங்

1 பாதபீடிகை -

2 ஆதர புத்தியோடு - அன்போடு. 3 வதை - கொலை.

4 ம்ருத சரீர மாம்ஸம் - இறந்த சரீரத்தினின்றும் எடுத்த மாம்சம்.

5 ? 6 ?

7 திருஷ்டிவிஷம் - கண்ணில் விஷமுடையதோர் பாம்பு C. F- மணிமேகலை 9—49.

தின்றாற் கொலை நிகழு மென்பதறிந்தும் அது தவிர்க வென்னாது தின்கவென்று உபதேசித்தமையா லிவனுக்குப் பொல்லாங்கேயா மென்பது.

1" காரணத்தாற் பாவங் கடிந்த சுகதன்றான்
சீரிலாத் திட்டி விடமாகி— நார்கோத்
திழுக்கின்ற வன்சாவ னென்றருள்செய் தென்னோ
விழுக்கின் றிலன்செத்தான் வேறு."

இதனாலும் பௌத்தர் காரணாற்பாவங் கொண்டவாறு தெரிக. (அ)

471 விலைபடைத்தா ரூன்வேண்ட வவ்விலைதான் வேண்டி
வலைபடைத்தார்க் கெம்முயிரை வைக்கின்ற மின்ன
கொலைபடைத்தா னேகொடிய னென்பனவே போலத்
தலையெடுத்து வாய்திறப்ப தாமிவையோ காணீர்.

இன்ன கொலைபடைத்தான்-இவ்வா றுபாயத்தாற் கொலைபடைத்தான். (கூ)

472 தன்றூர மீந்தான் றனக்குறுதி யாவதனை
யொன்றானும் வேண்டான் பிறர்க்கே யுழந்தானான்
றின்றானுந் தீவினையைச் சேருமெனச் சொன்னாற்
பொன்றுவாய்ப் பல்விலங்கும் பூமிமேல் வாழாவோ. (கO)

473 [2]உரிதா வுணர்ந்தானென் றோரா துரையான்
பரிவே யிதுவுந்தன் பாலரோ டெல்லா
மெரிதோய் நரகம்பா மேற்றுவா னேயாம்
பெரிதா மளியன் பெருந்தகைய னேகாண்.

தன் பாலரை யெல்லாம் பாழ்நரக மேற்றுவா னென வுரைக்க. (கக)

474 கொடைக்கொட்டி விற்பானுங் கொள்வானு மன்றி
[3]யிடைச்செட்டி னாற்பொருளை யெய்துவான் போல
[4]முடைக்கொட்டு [5]முத்துரைத்து மூடிக்கொண் டேகுங்
குடைச்சிட்ட னாருயிர்க்கோர் கூற்றமே கண்டீர்.

கொடைக்கொட்டி விற்பான் - விலைக்கிசைந்து விற்பான். (கஉ)

---

1 ?

2 உரிதா - உரித்தாக. 3 இடைச்செட்டு - தரகு வியாபாரம்.

4 முடை - மாம்சம்.

5 ஒட்டும் முத்து - இசையும் விலைப்பொருளாகிய முத்து; நெய்தனிலமாக்கள் அத் திணைப் படு திரவியமாகிய முத்தினைக் கொடுத்துப் பண்டமாற்றுவர் இங்கு முத்தைக் கொடுத்து வாங்கியது - மாம்சம்.

475 ஆடுவார் காண்பா ரவரருகே தான்சென்று
தோடுவார்ந் தாலொப்பச் சொல்விரிப்பான் போற்பாவங்
கூடுவார் கூடாதார் கொன்றூர்தின் றூரென்னும்
சேடனூர்க் காண்டுநா மென்றுதான் சென்றூளே.

தோடுவார்ந்தாலொப்ப - ஓலைவார்ந்தவாறுபோல. ஓலைவார்வார் ஓலைக்கு நன்மை செய்யுமாறுபோல வதனை வார்ப; அதுபோல ஆடுவாரையும் காண்பாரையும் புகழ்ந்து பொருள் வாங்குங் [1]கூத்துச் செலுத்துவோன் ; அவன்போல புத்தனுந் தினபார்க்குப் பாவமில்லையென்று சொல்லி, அவருடைய கிரஹத்தில் மாம்சம் இரந்து தின்னும். (கரு)

வேறு

476 அணிசெய் கோழரை [2]பரைநிழ லழகனைப் பொருந்தி
மணிக டாம்பல கதிர்விடு மலருடை மணைமேற்
றுணிவு [3]தோற்றினை யெனச்சிலர் துதியொடு தொழுது
பணிய யாதுமோர் பரிவிலன் படம்புதைந் திருந்தான். (கச)

477 ஆத்த னேயெனத் தெளிந்தவ ணமர்ந்திருந் தவர்க்குச்
சூத்தி ரம்மிது வினையமு மிதுவிது பிறிதாஞ்
சாத்தி ரம்மிவை மூன்றென வன்றவத் தோன்றல்
பாத்து ரைக்குந்தன் பதப்பொருள் பலவகைப் படவே.

சூத்திரம் - சூத்ரபிடகம். வினயம் - வினயபிடகம். பிறிது - அபிதம்ம பிடகம். பதப்பொருள் - பதார்த்தம். (கரு)

478 கந்த மைந்திவை கணிகத்த வாமெனக் கரைந்து
முந்தி நாடினே ருணர்வல்ல தில்லையென் றுரைத்தும்
புந்தி யாலங்கோர் [4]புற்கல னுளனெனப் புணர்த்து
மந்தி றற்சொலப் பாட்டினே டியாதுமில் லெனவும்.

(இ - ள்.) பஞ்சஸ்கந்தம் பொருளாம். அவை, [5]"க்ஷணாஉ-டுஸூ-ஃஊதிஷ்ஞி" என்பதனாலும், [6]"அறிபொரு ளொன்றொழியக் கணிகமடங்கலு" மென்பதனாலும், க்ஷணமாத்திரமே நிலையுடையனவென்று சொல்லியும், ஞானமொன்றுமே பொருள் ஒழிந்த நான்கு மில்லையென்று சொல்லியும், பரமார்த்த

1 கூத்துச் செலுத்துவோன் - கூத்து நடத்துவோன்.
2 அரை - அரசமரம்.
3 தோற்றினை - தோற்றுவித்தனை ; பிறவினை. 4 புற்கலன் - ஆத்மன்.
5 ? 6 ?

வகையாலன்றி வியவகார வகையாலோர் ஆத்மனுளனென்று சொல்லியும், பின்பு அவாச்சியமே பொருளென்று சொல்லியும், சூன்யமே பொருளெனவு மிவ்வாறு ஐந்து பக்ஷஞ் சொன்னானென்றவாறு. (கசு)

479 தத்து வம்மிவை தாமெனத் தமர்களுக் குரைக்கும்
புத்த னார்தம்மைப் புயலிருங் கூந்தலி பொருந்திப்
பித்தர் போற்பல பிதற்றினீர் பிதற்றிய விவைதா
மெத்தி றத்தினு மிசையின்மை யிசைக்குவ னெனவே.

(இ-ள்.) இவ்வாறு தத்துவோபதேசம்பண்ணாநின்ற புத்தனாரை நீலகேசியார் கிட்டி, பித்தர்போல ஆயுக்தங்கள் சொன்னீர்; அவை அயுக்தமாமாறு சொல்லுவா மென்று சொன்னாரென்றவாறு. (கஎ)

480 ஓதி னீர்சொன்ன கந்தமைந் துளவெனி னுருவே
வேத னையொடு குறிசெய்கை யிலவென விரிப்பும்
போதி யாலங்கோர் புற்கல னுளனெனப் புணர்ப்பும்
யாது மின்மையோ டவாச்சிய மறும்பிற வெனவே.

(இ - ள்.) [1]வைஹாஷிகமதமாகிய பஞ்சஸ்கந்தம் பரமார்த்தமானவழி யொழிந்தவை அபரமார்த்தமாய், அவை யுரைப்பது வியர்த்தாயாஸமாமென்று சொல்ல வென்றவாறு. (கஅ)

481 ஐந்தில் யான்சொன்ன பலகளு மமைவில வெனினுங்
கந்த முண்மைக்கட் கருத்துள தாம்பிற வதனாற்
சிந்த மாயவு முளவெனத் தெளியினி யெனலு
நந்த னார்க்கற முரைத்திர்நீ ரோவென நக்காள்.

(இ - ள்.) ஐந்து பக்ஷத்திலும் பஞ்சஸ்கந்தம் யுக்தி யுக்தமாக [2]வேற்றினொழிந்த தத்துவங்களும் என்னாற் சொல்லபபட்டன வாதலி னவையும் யுக்தி யுக்தமாமென்று சொல்ல, நீலகேசியாரும் நந்தனார்க்குத் தர்மஞ் சொன்னீர் நீரோ வெனச்சொல்லிச் சிரித்தாரென்றவாறு.

ஓகாரம் - உமக்காயிற்றருமென ஒழியிசைக்கண் வந்தது. நந்தனார்க் கற முரைத்தலாவது - புத்ததேவர்க்கு ஞாதியாவாரொருவன் நந்தனென்பான்; அவனுக்குத் தருமோபதேசம் பண்ணித் தவம்படுத்தி, அவனைப் பிடகத்திரயமோதுவிப்ப, இவன், நித்திராஸமயத்துத் தன் ஸ்திரீயாகிய வாசுந்தரியை வாயாற்ற, அந்த வேட்கையைத் தவிர்ப்பான் வேண்டித் தேவலோகத்து அப்ஸரஸுக்களைக் காட்டி வாசுந்தரிமேல் உபேக்ஷை பண்ணுவிக்கலுற, அவனும் அப்ஸரஸுக்களைக் கண்டு ஸ்திரீவேட்கை பெருத்துத் தவம் விட்டுப்போயினன். இவ்வாறு சமர்த்

1 வைஹாஷிகமதம் - பௌத்தமத பாகுபாடிகளி லொன்று.
2 ஏற்று - அங்கீகாரம்; முதனிலைத் தொழிற்பெயர்.

தானன்றே நீர் என்று சிரித்தாரென்றவாறு. நீர் நினைத்தவாறு காரியம் முடியா வென்று போந்தது.

சிந்தமாயவும் - முடிந்தனவும். (கக)

482 இட்ட நீபல வுரைத்தனை யிவற்றுளொன் றொழிய
நட்ட மாயினு நன்மையை நின்வயிற் றருவோய்
குட்ட மேமுழு மெய்யினு மெழுந்தவன் குடுமி
தொட்டி யானெனி னுந்தூய னேவது வாமோ.

(இ-ள்.) பஞ்சஸ்கந்த பக்ஷமொழித் தொழிந்த பக்ஷங்களும் பரமார்த்தங்களே அவையுமென்னுற் சொல்லப்பட்டன வாகையால், எனனுற்சொல்லப்பட்ட பஞ்சஸ்கந்தபக்ஷம் பரமார்த்தமானவாறுபோல வென்று அனுமானப் பிரயோகம் பண்ண, நீலகேசியார் சொல்லுவார்: அந்யோந்யம் விருத்தமாக ஐந்துபக்ஷஞ் சொல்லிய வழி யொன்று பரமார்த்தமாக, வொழிந்தன அபரமார்த்தமாம். ஆயிருக்கவும், இந்த அனுமானப் பிரயோகத்தா லவற்றைப் பரமார்த்தமாக்க லுற்றனையாயில், குஷ்டரோகியாகு னொருவன, எனது சரீரம் நிர்வியாதிகம், எனது சரீரமாகை யால், என் குடுமிமயிர் போலவென்று அனுமானம் பிரயோகித்தா லிதுவும் [1]மமகமாய் அவன் குஷ்டரோக ரஹிதனுதல் வேண்டும்; அது ஆகாதெனில் நின்மதங்களு மாகாவென்றவாறு. (உ0)

483 நல்ல வேயென காட்டிய கந்தமிவ் வைந்து
மில்ல வேயெனத் தெருட்டுவ னெடுத்துரை யெனத்தான்
சொல்ல வேதுவ ராடைகண் மூடிய சேடன்
மெல்ல வேயிவை கேளென விரித்தவ னுரைக்கும்.

(இ - ள்.) நன்றென்று நின்னுற் கொள்ளப்பட்ட பஞ்சஸ்கந்தங்களை யுக்தி யின்மையினவற்றைச் சொல்லுவாயாக வெனப் புத்தனுஞ் சொல்லலுற்றா னென்றவாறு. (உக)

வேறு

484 உருவே திரிவே தனையா றுணர்வும்
மருவா தனமாண் குறியத் துணைசெய்
குருவே றவைசெய் தையிரு பதுமாத்
திருவே யிவையெம் பொருடே றெனவுர்.

(இ - ள்.) ரூபஸ்கந்தமும், மூன்று வேதனஸ்கந்தமும், ஆறுவிக்ஞானஸ்கந்தமும், ஆறுஸம்ஜ்ஞாஸ்கந்தமும், குசலமும், அகுசலமுமாகிய இருபது ஸம்ஸ்காரஸ்கந்தமும் என விவையெமக்குப் பொருளென்று சொன்னுனென்றவாறு. (உஉ)

---

1 கமகம் - பொருத்தம்.

485 மூறைசெப் பியவைந் தினுண்முன் னையுரு
வரையிற் பலவட் டகமுள் ளுறுத்த
விறைபட் டனவெட் டெனவொட் டினகே
ணறையிற் பொலிகோ தைநறுந் நுதலே.

(இ - ள்.) பஞ்சஸ்கந்தங்களுள் ரூபஸ்கந்தமாவது - அஷ்டகமுள்ளுறுத்த பலவுமாம். அஷ்டகமாவது-மேலிற்காதையிற் சொல்லுவன் கேளென்று சொன்னோரென்றவாறு. உள்ளுறுத்த பலவாவன - பெண்டன்மை, ஆண்டன்மை முதலாயின. (உஉ)

486 நிலநீ ரெரிகாற் றேறுரு விரதந்
நலமா கியநாற் றமொடூ றிவைதா
மிலவே யவையெட் டினும்விட் டதிறஞ்
சொலவா முடன்கேட் டொடுதோற் றமுமாம்.

(இ - ள்.) பிருதிவாதி சதுர்பூதமும், வர்ண ரஸ கந்த ஸ்பரிஸமுமென வெட்டாம். அவையொருபொழுதும் விட்டு நீங்கா; ஒக்கக்கெட்டு ஒக்கப்பிறக்குமென்றவாறு. (உங)

“ [illegible]
[illegible] ”

எனவும்,

[1]“ உருவியா தெனமொழிந்தாள் பூதமுபா தானமுந்
திரிவுரைப்பி னிலநீர் தீ வளிபூத முபாக்க
டெரிவுரைப்பி [2]னிறநாற்றஞ் [3]சேறூ[4] னன் வலிநான்கு
முரியவாம் பெண்ணியல்போ டொழிந்தனவு முளவென்றான் ”

[5]ஒழிவிலவாய்த் தோற்றுங்க ளொழிவிலவாய்க் கெடுமெட்டு
மொழிவார்க்கும் பொருளொன்று வுணர்வுடைய......
குழியிவற்றுண் மிக்கதனுற் கூற்றுடைய மிகைதானு
மழிவின்றி யுணர்வதுமற் றுற்றலுமூர்த் தியுமாமே.”

எனவு மவனோத்தாலும் ரூபஸ்கந்தமாமா றறிக. (உச)

487 வலிதா நிலமை யதுநீர் வெய்துதீக்
கலியே தருகாற் றியக்கங் கருமப்

1 கு. கே?
2 நிறம் - உருவம்.
3 சேறு - தித்திப்பு; இரஸத்தை யுணர்த்திற்று.
4. ஊன் வலி - உடம்பின் சக்தி. 5 கு. கே?

பொலிவேற் பொறையயர்த் தல்புலர்த் [1]துளர்த்தன்
மலிபூ தங்களுன் கின்மாண் பின்னவையே.

(இ - ள்.) முன்சொன்ன அட்டகத்துள் நிலம் வலிதாயிருப்பது ; நீரைதா பிருப்பது ; தீ வெய்தாயிருப்பது ; காற்றியக்குவது. இவை தன்மை ; மூர்த்தி யெனவுமாம். பொறுத்தலும், அயர்த்தலும், புலர்த்தலும், உளர்த்தலும் என வினை கருமமாம்; ஆற்றலெனவும் அமையும். இந்தப் பூதங்களுன்கும் சார்வாக வர்ணுதி நிற்குமென்று சொன்ன னென்றவாறு.

[2]" நிலம்வலிது நீர்துவளும் தீத்தெறூஉங் காற்றுளரும்
புலமாமா றிதுபொருள் வரையறுக்கு மாகாச
நலமாண்ட நாற்பூதஞ் சார்வாக வுபாதாக்கள்
சொலமாண்ட வியற்கைதா னிறமுதலாச் சொலற்பாற்றே."

என்பதனுலு மறிக. (உரு)

488 இனிவே தனையா வனவின் பமொடு
துனிவே தருதுன் பமுமா [3]மிடையுந்
தனிதா நலதீ வினையன் மையினும்
பனிவே யிணைபன் னியதோண் மடவாய்.

(இ - ள்.) வேதனுஸ்கந்தம் சுக வேதனை, துக்க வேதனை, ஸமவேதனை யென மூன்றும் ; அவை குசலமும், அகுசலமும், சமமுமாகிய வினையால் வரு மென்றவாறு. (உசு)

489 அறிவா வனதா மினியா வெணினம்
பொறியோ டுமனம் மிவைபுல் வினவேற்
குறிதா மிவையா றினுங்கூ றுவதென்
னெறியா மிவைநீ லநிகர்த் தகணுய்.

விஜ்ஞான ஸ்கந்த மாருவன : இந்திரியங்களைந்தையும், மனத்தையும் பற்றிப் பிறக்கும். ஸஂஜ்ஞாஸ்கந்தமு மிப்படி யாவதாம். (உஎ)

490 குயலா குயலம் மெனக்கூ றும்வினைப்
பயனுற் பல [4]பா கெனப்பட் டவைதா
மயலா மனமே வசிகா யத்தினு
மயலா ரிவைதா மினியா ரறிவார்.

(இ - ள்.) குசல ஸம்ஸ்காரமும், அகுசல ஸம்ஸ்காரமுமென்று சொல்லப் பட்ட கர்மங்கள், பல பேதத்தால் நோக்கப் பலவேறு வகைப்படும் அவைதாம்

1 உளர்த்தல் - அசைதல். 2 கு. கே.
3 இடை - சமம். 4 பாகு - பாகுபாடு.

[1]மானவிகம், [2]வாசிகம், [3]காயிகம் என மூன்று கூற்றவாமென்று சொன்னு னென்றவாறு.

[4]" தீவினை யென்ப தியாதென வினவி
னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவழக்
குலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயமில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றும்
பத்து வகையெனப் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யெனப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீக்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி "

என்பது மணிமேகலை அறவாகலி னிதனாலும் ஸம்ஸ்காரஸ்கந்த மறிந்து கொள்க. (உஅ)

491 கடனு கியகந் தமிவைந் துகளும்
முடனே யவைதோன் றியொரு கணத்துட்
கெடுமே யவைகேட் டினும்வாட் கனல்லாய்
சுடர்மே யசுடர்ந் நுதிபோன் மெனவும்.

(இ - ள்.) இந்தக் கந்த மைந்து முடனே தோன்றி யுடனே கெடும்; அவை கெடுமிடத்து, அஷ்டக பிண்டமாகிய விளக்குப்போலக் கெடும்; தோன்று மிடத்து மதுவே போலு மென்றவாறு. (உகூ)

492 [5]கவையொப் பனைகை விரலைந் துகளும்
மிவையிப் படிக்கைப் பிடியென் றதுபோ
லவையப் படிக்கந் தங்களைந் துகளுந்
நவையைப் படுநல் லுயிரா மெனவும்.

(இ - ள்.) ஐந்துவிரல்களையுங் கூட்டிப் பிடித்தவழி முஷ்டியென்று ஒரு வியவஹார முளதானாற் போலப் பஞ்சஸ்கந்த பிண்டத்திற்கு உயிரென்பதொரு வியவஹாரமுளதாமென்று சொன்னு னென்றவாறு. (ங0)

1 மானவிகம் - மனத்தாலனது. 2 வாசிகம் - வாக்காலான கு. 3 காயிகம் - காயத்தாலானது.

4 மணிமேகலை - 24ம் காதை - 124-139. 5 கவை - மரக்கப்பு.

493 அவைதா நிலையா துயரா மசுவந்
1நவையா ருயிர்நாட் டிலங்காட் டமிலை
யிவைநான் மையென்வாய் மையிவ்வா றுணர்வா
ரெவையே செய்துமெய் துபவீ டுமென்றான்.

(இ - ள்) அந்த பஞ்சஸ்கந்த பிண்டம் அநித்தியமும், துக்கமும், அசுசியும், அநாத்மாவாயு மிருக்கும்; இவ்வாறு ஹாவிப்பா ரெல்லாப் பாபமுஞ் செய்யினு முக்தராவரென்று சொன்னா னென்றவாறு. (௯௧)

வேறு

494 பல்லியல் பாகிப் பரந்தவைங் கந்தமுங் கந்தங்கடாம்
புல்லிய வொற்றுமை யிற்குறி யாகிய பொய்யுயிருஞ்
சொல்லிய கேட்டவள் வேட்டக் குரம்பை சுடுபவர்போ
லல்லியங் கோதைநின் காட்சி யழித்திடு வேனெனத்தான்.

(இ - ள்.) பஞ்சஸ்கந்தங்களையு மவற்றின் கூட்டததினாகிய வியவஹார ஜீவனையுஞ் சொல்லக் கேட்டு, வேட்டுவக் குறிச்சி சுடுவாரைப் போல நின் பக்ஷத்தினை யழிப்பேனென்று நீலகேசியார் சொன்னா ரென்றவாறு.

வேட்டுவக் குறிச்சி சுடுவாரு முள்புக்குச் சுடுமாறுபோல நின் மதத்தையு முள்புக்கு அழிப்பே னென்றா ரென்பது. (௯௨)

495 பிண்டம் பிரிவில வேயெனச் சொல்லுத லாலவற்றுக்
குண்டங் கொருகுணி யாங்கவை தாங்குண மாகுமன்றேல்
விண்டங் கவையவை வேறுள தாதலும் வேண்டுமென்றே
பண்டங்கு நீசொன்ன முட்டியிற் பஞ்சாங் குவிகளும்போல்.

(இ - ள்.) பஞ்சஸ்கந்த பிண்டம் தனித்தனிப் பிரிந்து பெறப்படாது ஒக்கத் தோன்றி யொக்கக் கெடுமென்று சொல்லுதலா லவற்றைப் பிரியாமற் கொண்டு அவற்றிற்கு ஆதாரமும், ஸ்வாமியுமாய் நிற்பதொரு குணியாகிய ஆத்மதிரவ்ய முளதாகல்வேண்டும்; இல்லையெனில், முஷ்டியுள்ள விரல்கள் வேறுபெறப்பட்ட வாறுபோலவும் கிரகத்துக் கழி, கம்பு, கற்றை வேறு பெறப்பட்டவாறு போலவும் பஞ்சஸ்கந்தங்கள் தனித்தனி வேறு வேறு பெறவேண்டும்; பெறாமோ வெனின், ஒரு பொருளினது குணங்களாக வேண்டு மென்றவாறு. (௯௩)

496 பூத2(ங்களு)ன்கும் புகுந்தே தெருட்டலுற் றுயவற்றுக்
கேதமி றன்மை கரும மிரண்டா வியைந்தவை(3தாம்)

---

1 ந - இன்மைப் பொருளது; ‘ந’ வை யார் - இன்மையைப் பொருந்திய.
2,3 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

பேதமு மாமென்ற பெற்றியி னூற்பொரு ளிற்றென்றலாற்
[1]சாதமு மாமுயிர் தன்மையிற் றேற்றத் தவறெவனோ.

(இ-ள்.) நீ பூதலக்ஷண முரைப்புழி [2]வற்கெனவும், பொறுத்தலு முதலாகிய தன்மை, கருமங்களா னுரைத்தா யன்றே; அவ்வழிக் காணப்பட்ட வற்கெனவும், பொறுத்தலுமின்றி அவற்றுக்கு ஆதாரமாகிய நிலமென்பதுமொரு பொருளுண் டாகலினன்றே நிலம் வலிதென்பன முதலாகப் பேதந்தோன்றச் சொல்லுவா யாயின், அவ்வாறே வேதனை, விக்ஞான, ஸக்ஞா, ஸம்ஸ்காரங்களுக்கு ஆதார மாகிய சித்திப்பதாகிய ஜீவ திரவ்யத்தைச் சொல்லினுமக்குக் குற்றமென்னோ வென்றவாறு. (ருச)

497 நின்சொல்லப் பட்ட வலிப்புந் [3]தரிப்பு நிலத்தினவே
லென்சொல்லப் பட்ட வுணர்வொடு காட்சி யுயிரனவா
முன்சொல்லப் பட்ட நிலந்தா முடியின் முடிவுளதாம்
பின்சொல்லப் பட்ட வுயிரும் பெரிய [4]பிரச்சையினாய்.

நிலத்துடனும், நிலத்தின் குணங்களுடனும் உயிரையும், ஞானாதியையு மொப்பித்துக் காட்டிற்று. (ருரு)

498 வற்பமல் லாநில மில்லெனச் சொல்லுவ னங்கதுபோற்
பொற்ப மிலாவுயிர் தானுமில் புத்திய லாலெனனும்
வற்பம லாநில மன்னுந் தரிக்குமென் பாயல்லையோ
கற்பமெல் லாம்பிறர்க் கேநின் றுழந்த கருணையினாய்.

(இ - ள்.) வற்பமல்லது நிலமென்பதோர் பொருளில்லை; அதுபோல ஞான மல்லது ஜீவனில்லை யென்பாயெனில், பொறுத்தலென்பது மொன்று சொல்லு கின்றாயன்றே; நிலமில்லையாயிற் பொறுத்தலு நிலத்தினுடையதன்றி வற்பத்தி னுடையதாகல் வேண்டுமென்றே; ஆக, வற்பம் பொருளும், பொறுத்தல் குணமு மாகி முன்பு போல குணகுணியாம்; வற்பமு மில்லையாயின், நிலம் வலிது, நீர் துவளும், தீத் [5]தெறும், காற்றுளரு மென்று நீ அஷ்டக பிண்டம் சொல்லும் வழிச் சொல்லியது [6]உன்மத்த பிரலாபிதமாம்; நில முதலாயினவற்றை யில்லை யென்பது லோக விரோதமு மாமன்றே? ஆதலால், வற்கெனவு முத லாயினவற்றிற் றீர்ந்து நில முதலாயின பெறப்படாவாயினும் வற்கெனவு முத லாயின நிராதாரமாகப் பெறப்படாமையின் நிலமுதலாயின வுண்டென்று கொண்டவாறுபோல விஜ்ஞானதியில் வேறாக ஜீவன் பெறப்படாதெனினும் விஜ்ஞானதி நிராதாரமாகச் சம்பவியாமையில் ஜீவ திரவ்யமு முண்டென்று

1 சாதம் - ஆதாரம். 2 வற்கெனவு - வலிமை. 3 தரிப்பு - பொறுமை.
4 பிரச்சை - போர்வை. 5 தெறும் - எரித்தழிக்கும்.
6 உன்மத்தப் பிரலாபிதம் - பைத்தியக்காரன் பேச்சு.

கொள்வாயாக. கற்பகாலமெல்லா மந்த ஜீவன்களுக்காகக் கருணைபா வசனுகித் துக்கப்பட்ட பேதா யென்றவாறு.

ஜீவனில்லையாயின் நீ பிறர்க் குழந்தவாறென்னே ? விஜ்ஞானத்வம் க்ஷணத் திற் கெடுமென்றே; அதனைக் கெடாமல் நோக்கலாகுமோவென்பது கருத்து. (ருசு)

499 உரிய வலிமை யல்லாநில மோரால னென்றிருந்தாற்
பெரிய நிலத்தை யறிவிக்கும் பெற்றியில் லாய்பெரிது
மரிய வுயிரை யறிவுறக் காட்டென்றி யெப்பொருளும்
தெரியக் குணமுகத் தாலன்றி யென்றுந் தெருட்டுளதே.

வற்ப முதலாகிய குணங்களாலன்றி நிலத்தை யறிவிக் [1](கலா)குமோ? யாதொரு பொருளுங் குண முகத்தாலனறி யறிவிக்கலாவன உண்டாயிற் காட் டாயோ? ஜீவனை ஞானுதி குணத்திற் நீர்த்துக் காட்டுக வென்று சொல்லியது நின் பேதைமையாமன்றே வென்பது.

இத்துணையாலும் நிலம் வலிது, நீர் அவளுமென குண குணி ரூபத்தாற் சொல்லியதே ஞாபகமாகப் பரமார்த்த ஜீவ ஸித்தி பண்ணினுர்; இனி ரூப ஸ்கந்த தூஷணம் பண்ணுவாரென்பது. (ருஎ)

500 விருத்த நிலைமையும் வேண்டலம் யாமென வேண்டுகின்றீ
ரருத்த மெனக்கொண்ட வட்டகம் யாவையும் விட்டிலவாற்
றிருத்தமி றீவயி னீருரை [2]திட்ட விரோதமன்றே
பொருத்த மலாதன வேசொல்லும் புத்தனின் புத்தியிதே.

(இ - ள்.) யுக்தி யுக்தமாக வல்லது யுக்தி விரோதமாகச் சொல்லேமென் றன்றே நீயும் நின் சிஷ்யரும் சொல்லுவது; அதுவாயில் நீயிர் அஷ்டக பிண் டத்து, பிருதிவியாதி பிரிந்து நில்லாமையின எட்டுங் கூடியே நிற்குமென்று சொல்லுதற்கண் நீருந் நீயு மொருபொருட்கட் கிடப்பது திருஷ்ட விரோத மன்றே? பிருதிவியாகக் காணப்பட்ட பூதத்தி லொழிந்த பூதங்கள் மூன்றுமுள வாயில் பிருதிவிபூதத் துளவாகிய ஜலத்து பிருதிவியும், அக்கினியும், காற்றும் உளவாகல் வேண்டும். பிருதிவியாகக் காணப்பட்ட பூதத்தாகிய [3]ஜலஹ்ருதமாகிய பிருதிவியாதியிலு மிவ்வாறும். தத்ஹ்ருதமாகிய ஜலத்தினுமிவ்வாறும். இவ் வாறு நோக்க அநவஸ்தையும், அநந்தமுமாகி, நில நீரென்று விவகரித்தலுமரி தாகி, [4]அயுக்த பிரலாபமாம். அன்றியும், ஜலத்திலே அக்கினி நிற்குமென்றிது வென்ன பிரமாணத்தாற் கூறினே? அக்கினியில் ஜலமும், ஜலத்து அக்கினியும் நிற்குமாயிற் பிரகாசத்து அந்தகாரமும், அந்தகாரத்துப் பிரகாசமும் நிற்றலுமா

1 விடுபட்டதற்குக் கூட்டப்பட்டது.

2 திட்ட விரோதம் - திருஷ்ட விரோதம்.

3 ஜலஹ்ருதம் - ஜலத்தைச் சேர்ந்தது.

4 அயுக்த பிரலாபம் - பொருந்தாத பேச்சு.

மன்றே ? இப்படியாக லோகத்துக்கு [1]ஸஹாவஸ்தானமும், பரஸ்பர பரிஹாரமு மில்லையாகுமன்றே ? இப்படி அயுக்தமாயின நீ சொல்லுதலினன்றே நின்னைப்போல வெல்லாரும் அயுக்தஞ் சொல்லுவரென்னுங் கருத்தினால் [2]" விகலு யொடிநயஃஹஹைாஃ " என்பதனால், ஸர்வசப்தங்களும், அஸத்விஷயங்களும, அப்பிரமாணங்களுமென்று சொல்லுவாயாயினை; புத்தனே! நின்புத்தி யிருந்தவாறிதுவோவென்று சொன்னானெனறவாறு.

இன்னும், 'நின்புத்தி யிருந்தவாறிதுவோ' வென்பதனால், நீ ஒழிந்தபொருள்களை அறிந்தவாறு மிதுவோவென்று ஹாஸ்யஞ் செய்தாருமாமென்பது. (நஅ)

501 தன்மை கரும மவற்றன வேறென்ற றானென்னைவே
றின்மை முடியினை னிட்ட முரைப்பினுங் கெட்டதென்னோ
மன்னுமங் நான்கு மறுதலை தத்தமு ளாதலினா
[3]லென்னு மியல்பும பயனு மழிக்குமென் பேனல்லனோ.

(இ - ள்) நிலமுதலாயினவற்றுக்குத் தன்மையுங் கருமமுமாகிய விலக்கணங் கூறவேண்டுவது நிலமுதலாயின வேறு பெறினனறே ? நிலதுக்கிலக்கணமாகக் கூறப்பட்ட வன்மை அந்நிலத்தினகணுண்டாகிய வொழிந்த பூதங்கட்கு மொக்குமன்றே யாதலின, நிலம் வலிதென்றும், நீர்துவளுமென்று மிவ்வாறு வேறிலக்கணஞ் சொல்லுவது பிழையாகுமனறே? நீ தத்துவ ஸ்வரூபமறியாயெனில், எனக்குச் சிஷ்யனாய் எனனல் [4]உபதிஷ்டமானபடி சொன்னாலுனக்கு வருவதெனனோ? இனி அவை அந்யோந்ய விருத்தஸ்வபாவத்தன வாகையால் ஒன்றையொன்றழித்துச் சூன்யமாமென்று சொல்லேனோ? சொன்னால் நீ அதற்குச் சொல்லுமுத்தர மென்னெனறவாறு.

நெருப்பையும், நெருப்பின் தன்மை கருமங்களையும் நீர் கெடுக்கும்; நீரையும், நீரின தனமை கருமங்களையும் நெருப்புக கெடுக்கும். இவ்வாறே யொழிந்தனவுஞ் சொல்லிக்கொள்க. (நக)

502 ஊரிது காடிது தானென லென்னை யொருங்குளவே
னீரிது தீயிது தானென லாமோ [5]நிகழ்வுடனே
யாரிவை கேட்டறி வாரவை யட்டக மென்னி னலாற்
பேரிது வேறெனச் சொல்லுத றானும் பிழைக்குங்கொலோ.

(இ - ள்) ஊருங்காடு மொருகாலத் தோரிடத்தே யுளவாமாறென்னை? உளவாயி, லூர் வீடுங்குடியுமாயிருக்கும், காடு தூறும் புதலுமாயிருக்கு மென்றவற்றுக்கிலக்கணஞ் சொல்லுமாறெனனை? அவ்வாறே நீருந் தீயு மொருகாலத் தோரிடத்துளவாயினீர்க் கிலக்கணமிது, தீக்கிலக்கணமிது வென்று சொல்லுமாறென்னை? பூதங்களை அஷ்டகமென்பதல்லது, பிருதிவியாதி நாமங்கொடுத்து வழங்குதலும்

---

1 வி. கு. காண்க. 2 ?
3 என்னும் - எதுவும். 4 உபதேசிக்கப்பட்ட.
5 நிகழ்வுடனே - ஒவ்வொரு பொருளின் நிகழ்ச்சியோடு.

பிழையாகு மென்ப தையமாமோ வென்றவாறு. கொலைலாவனபது ஐயமோ என்றவாறு.

வனமைத் தன்மையோடுகூட நிலம், ஒழிந்த பூதங்களை யொழிய வேறு பெறினன்றே நிலம் வலிதென்று சொல்லலாவதென்பது போந்தது. (௪0)

503 தொக்கவை யாயுட னேயவை நிற்பினு மாங்க வற்றுண்
மிக்கத னாற்பெயர் சொல்லுவன் யானென்று வேண்டுதியேற்
புக்கன தாம்பொறி யானின் புலமன்றிப் பொய்யெனத்தா
னக்கனர் சாக வெனுநீ யுரைக்கு நயங்க ளென்றாள்.

(இ - ள்) பூதங்களு முபாதாக்களுந் தொக்குநின்றன வெனினும், "குழீயிவற்றுண் மிக்கதனாற் கூற்றுடைய" வென்ப தென்னேத்தாகலிற் பிருதிவிமிக வொழிந்த பூதங்கள் குறைந்து நின்றவழிப் பிருதிவியென்றும், ஜலமிக வொழிந்தன குறைந்து நின்றவழி ஜலமென்று மிவ்வாறே யொழிந்தனவற்றிற்கும் பெயரிட்டு வழங்குவனெனில், பிருதிவிமிக ஜலங்குறையில் ஜலம் பிருதிவியிற் சுவறிச் சூன்யமாம்; ஜலமிகப் பிருதிவி குறையில் ஜலத்திற்கரைந்து சூன்யமாம். இவ்வாறே யொழிந்தனவு மறிந்துகொள்க. இவ்வாறாதற்கண் எட்டுங்கூடி யொருங்கு நிற்றல் அயுக்தமாம். அன்றியும் நெருப்புக் கட்புலமாவ தொனறன்றே யாதலால் நின்கண்ணுக்குப் புலமாயினவாறே யொழிந்தார் கண்களுக்கும் புலமாமனறே; மஹாஜலத்து ளுண்டாகிய அல்பாக்கினி, யாதிற்கு விஷயம்? மஹாக்கினி ஜ்வாலையு ணின்ற அல்பஜலம் யாதிற்கு விஷயம்? இந்த மஹாக்கினி ஜ்வாலையுணின்ற அல்பஜலத்தை சம்பந்தித்து நிற்பதொரு லிங்கங் காணுமையில் அநுமானத்திற்கும் விஷயமன்று; இதற்கென் சொல்லுதி யென்றூர்கரு பிருதிவி விசேஷமாகிய காஷ்டத்திற் காஷ்டாந்தர க்ஷணத்தால் அக்கினி தோன்றுதலிற் பிருதிவியில், அக்கினி காணப்பட்டதன்றேவெனிற் காஷ்டத்தில் அக்கினி காஷ்டாந்தர க்ஷணத்தால் பிறந்ததல்லது க்ஷணத்திற்கு முன்பு காஷ்டத்தில் அக்கினியில்லை; உளதாயில் காஷ்டத்தைப்பற்றி அக்கினி யெரியவேண்டாதோ?

அன்றியும், மாயாதேவி யதூஉம், சுத்தோதன னதூஉம், கூட்டத்தில் நீ தோன்றினை யெனினுங் கூட்டத்திற்கு முன்பு அவருழை நீ யில்லையானவாறு போல வென்பது.

காஷ்டாந்தர க்ஷணத்தால் அக்கினி பிறத்தற்குக் காஷ்டத்திலே சக்தியுண்டன்றேவெனில், நின்னைப் பெறுதற்கு [1]சக்திமதியாகிய மாயாதேவியுழை நீ முன் பில்லையானவாறுபோல காஷ்டத்தில் அக்கினி முன் பில்லையென்று கொள்ளென்பது. "வெயிலொடு காற்றோரிடத்த வாயினவொழித்தியோ நீ யென்று" னென்பதனால் வெயிலுங் காற்றுங் கூடி நிற்பது கண்டாமன்றே; அவ்வாறே அஷ்டகபிண்டத்து பூதங்கள் கூடி நிற்குமென்று சொன்னேனெனில், கூடி நின்ற வெயிலுங் காற்றுங் கூடின வெனினும் வெயிலுட் காற்றில்லையென்பதூஉங் காற்றில் வெயிலில்லை யென்பதூஉம் பிரசித்தமன்றே? பூமியுள் கூபஜல முதலாயின

1 சக்திமதி - சக்தியுடையவள்.

காட்டினு மவை ஹஸ்துஜலவ ஊயாரமெய ஹாவத்தால் நின்றவன்றே? ஒன்றிஞென் றுள் புக்கு நின்றனவோ? இவ்வாறு அயுக்தஞ் சொல்லுகின்றது நின்வாக்கியங் கேட்டார் சிரித்துச் சாதல்வேண்டிச் சொல்லுகின்றாயோவென்று சொன்ஞரென்றவாறு.

நயமாவது - ஹாஸகாரணமாகிய வசனம். (சுக)

504 உருவுடை யட்டக மன்றியு மைந்தினுட் பட்டவெல்லாம்
மருவொடு கூடியுந் தீண்டியு மாக்குந் திறமரிதான்
மருவுடை யார்களை மாயங்கள் சொல்லி மருட்டி யுண்ணுந்
திருவுடை யா [1]யவ காயத்துத் தேரை யடித்தெருட்டாய்.

(இ - ள்.) [2]ரூப திரவயமாகிய அஷ்டகங்கள் தம்முட் கூடுதலருமை சொன்னேன; இனி, அந்த ரூபஸ்கந்தம் அரூபமாகிய விஜ்ஞாஞதிகளோடு கூடுமாறென்னை? நின்ஞேடு கலப்புடையார்க்கு மாயஙகள் சொல்லி, அவரை மயக்கி நின் உதரபூர்த்தி பண்ணுகின்ற நீ அரூபமும், ரூபமுந் தம்முட் கலக்குமாயில் ஆகாசத்துத் தத்திய தவளையுடைய வடிக்காட்டல்வேண்டு மென்றவாறு. (சுஉ)

505 திரிவே தனைகளுந் தீரா நுமக்குள வாதலன்றே
[3]கரிவே தனையவர் காமுறு காமங் கடிந்தது தான்
பரிவே பெரிதுடை யீர்முன் னுரைத்தபல் செய்கைகளின்
விரிவே யவையோரின் வேதனை வேறில்லை யாம்பிறவே.

(இ - ள்.) மூன்று வேதனைகளு நுமக் குண்மையினன்றே பெட்டைக் கழுதையைப் பெறுது வேதனைப் படுகின்ற கழுதைகளோடு ஸங்கமிப்பீ ராயினீர்.

இத்துணையும் ஹாஸ்யஞ் சொன்னவாறு. மூன்று வேதனையாவன - ஸ்திரீ வேதனை, புருஷ வேதனை, நபும்ஸக வேதனை. அம் மூன்று முடைமையினன்றே புமாஞகிய கழுதைகளோடு ஸங்கமித்தது. கரியென்பது - பெட்டைக் கழுதை. கரிவேதனையவ ரென்பது - திணைமயக்கம். சுகவேதனை, துக்கவேதனை, ஸமவேதனை யென மூன்று முன்சொன்ன ஸம்ஸ்கார ஸ்கந்தத்தினது காரியமாயின், [4]மிருத் காரியமாகிய கடம் மிருத்தில் வேறன்றாயினற்போல ஸம்ஸ்கார ஸ்கந்தத்தில் வேறு வேதனஸ்கந்த மென்பது பெறப்படாதாம். ரூபஸ்கந்தமும், விஜ்ஞான ஸ்கந்தமும் போல பின்னமாயினன்றே வேறொரு ஸ்கந்தமாவ தென்றவாறு. (சுங)

---

1 அவகாயம் - ஆகாயம். 2 உருவப்பொருள்.

3 கரிவேதனையவர் - பெட்டைக்கழுதை யின்மையா லுண்டாகிய வேதனை யடைந்த ஆண் கழுதைகள்; ஆண் கழுதைகளை வேதனையவர் என்றது - திணை மயக்கம்; அதாவது, திணைவழு வமைதி.

4 மண்ணலாகிய.

506 உணர்ச்சியி னற்செய்கை யாக்கியச் செய்கையி னுழுப்பாம்
உணர்ச்சியி னங்கோர் பொருட்சுவ டுள்ளது போல்கின்றதா
லுணர்ச்சியொ டல்லன வொன்றொன்றில் நோக்கில வாமெனினு
மிணர்ச்சி யிழந்து பிறபிற வாகிப் பெறலிலவே.

(இ - ள்.) உணர்ச்சியாற் செய்கையா லுழப்பாதலி னவற்றுக்கு ஸம்பந்த முண்டெனில், உணர்ந்தும், செய்தும் பயனுகர்வா னோர் ஜீவனுளனும். அஃதன்றி ரூப விஜ்ஞானம் போல அந்யோந்யம் பின்னங்களவையெனில், உணர்ந்து செய்து பயனுகரவென்பது ஸம்பவியாமையி லுணராது செய்தலுஞ் செய்யாது அனுபவித்தலுங் கூடாமையி னவை மூன்றும் பெறப்படாவா மென்றவாறு. (சச)

507 ஆறினி னொன்றே நிகழும் பொழுதினல் லாவுணர்வு
தேறின வாறலற் றுண்மை யெனக்குத் தெருட்ட னலிந்
தாறின வேலில்ல தாழ்ச்சியி னுள தாமெனினீ
கூறிய வாற்று னுயிருண்மை கூறலுங் குற்றமென்னே.

(இ-ள்.) ஆறு விஜ்ஞான ஸ்கந்தங்க ளுள்ளு மொரு விஜ்ஞான ஸந்தான நிகழ்கின்ற காலத்து, ஒழிந்த ஐந்து விஜ்ஞான ஸந்தானங்களு முளவாய் வைத்து நிகழா தொழிந்தனவோ? இல்லையாய்க் கெட்டு நிகழா தொழிந்தனவோ? உளவாய் நிகழா தொழிந்தன வெனில், அவற்றுண்மை யறிந்தவா றெமக்குச் சொல்லுவாயாக. அவை யுளவாயிற் றோன்றாமைக்குக் காரண மென்னை? நிகழ்கின்ற விஜ்ஞான ஸந்தானம அனுபவ பிரசித்தமானவாறுபோல அவையுந் தோன்ற வேண்டு மன்றோ? அனறியும் "நாகாரணம் விஷய:" என்பதனால் விஷயங் காரணமாக வன்றே ஞானம் பிறப்பது, விஷயமிலலாத வழி ஞானம் பிறக்குமாறுண்டோ? இனி நிகழ்கின்ற ஸந்தான மொழித் தொழிந்த ஐந்து விஜ்ஞானமுங் கெட்டன வெனில், பினபு விஷயம பெற்றாலும் பிறவா தொழியல் வேண்டும; பிறக்கில் ஸந்தானமறக் கெட்ட புத்தனும் பிறக்க வேண்டும்.

இனி, சக்தி ரூபத்தால் தாழ்ந்துளவென்று சொல்லில் இவை தாழ்ந்து கிடத்தற்கு ஒரு ஆதாரமுளதாகல் வேண்டும். அசேதனமாகிய சரீரத்து ஞானந் தாழ்ந்து கிடத்தல் கூடாதாம்; கூடில் சர்வாசேதனங்களுள்ளும் ஞானமுளதாக வேண்டிச் சேதனசேதன வியவஹார வியவஸ்தை கெடும். ஆதலால், சரீர வியதிரிக்தமாகி ஐந்து ஞானமு மாழ்ந்துகிடத்தற்கு ஆதாரமாகிய தொரு திரவ்ய முளதாகல் வேண்டும். இவற்றால்ஆத்ம திரவ்யமுளதென்றற்கட் குற்றமென்னை யென்றவாறு.

இன்னும், ஐந்து விஜ்ஞானமு மாழ்ந்து கிடக்கினது விஷயம் பெற்றே யாழ்ந்து கிடக்குமோ, விஷயமின்றியு மாழ்ந்து கிடக்குமோ? விஷயம் பெற்றே யாழ்ந்து கிடக்குமெனில், எப்பொழுது மாழ்ந்தே கிடத்தல் வேண்டும். விஷயமின்றி யாழ்ந்து கிடக்கில், "நாகாரணம் விஷய:" என்பதனாற் காரணமாகிய

விஷயமின்றிக் காரியமாகிய ஞானம் பிறத்தல் கூடாதாம். விஷயமின்றியும் ஞானம் ஆழ்ந்து கிடக்கில், அதற்கு ஆதாரமாகியதொரு ஜீவத் திரவ்யமுமாழ்ந் துளதாகல் வேண்டுமென்பது. (சுரு)

508 ஓருணர் வுள்ள பொழுதி னெழுந்த வுணர்வுகடம்
பேரு முணரப் படாமைபெற் றூமென்னும் பேச்சுமுண்டா
லீருணர் வில்லை யிருமூன் றெருங்குள வென்றுரைக்கு
மோருணர் வேயுடை யீர்சொற்க ளொன்றென் றழிப்பனவே.

(இ - ள்) [1]"ஏகஸ்மிந் ஜாயதே சித்தம்" மென்பதனால் ஆறுணர்வுளு மோருணர்வு விஷயம் பெற்று நிகழ்கின்ற காலத்துப் பிறிதோருணர்வில்லை யென்பது பெறப்பட்டது ; பெறப்படவும் ஐந்துணர்வு மாழ்ந்து கிடக்க மேலோருணர்வு மிதந்துகிடக்குமென்னும் அறிவுடையீர்! நுஞ் சொற்க ளொனறையொன் றழிக்கு மென்றவாறு. (சுசு)

509 ஒன்றே யுணர்வாய் நிகழற்குக் காரண மவ்வுணர்வாய்
நின்றே யறிவான் றனிமையி னூலென த தெரிணிநீ
யன்றே யெனினவை யாறுந்த முண்மையின் வேறென்னலாற்
சென்றே [2]புலந்தலைப் பெய்தலறி வுடன் சேர்க்குமன்றே.

ஶப்த, ஸ்பரிஶ, ரூப, ரஸாதி விஷயங்கள் பலவும் ஸந்நிஹிதமாகவும், எல்லாவிஷயமும் பற்றி எல்லா ஞானமும் ஒரு காலத்துப் பிறவாது ஏக விஷயம் பற்றி ஏக ஞானமே பிறப்பது அனுபவத்தாற் காண்டும் ; அதுதானும் அந்த ஆறு விஜ்ஞானங்களுக்கும் ஸ்வாமியாகி, [3]தீபத்திமுதலாயினவற்றிற் பிரித்து ரத்னம் காணப்படாதவாறு போல அநந்த ஞானங்களிற் பிரித்து வேறு காணப் படாதாகித் தற்காலத்து ஏக விஷய ஞான ரூபனாகிய பரமாத்மாவினது ஸ்வாதந்த்ர்யத்தாலென்று புத்தி பண்ணுவாயாக.

தனிமை - ஸ்வாதந்த்ர்யம் ; தனிமையைத் தலைமை யென்றூற்போலக் கொள்க. அவ்வாறன்றி ஞானங்கள் ஸ்வயம் சித்தமெனில், அவையாறும் தத் தம் விஷயங்களைப்பற்றி எப்பொழுது முடனே சம்பவிக்க வேண்டும் ; அவ் வாறு காணப்படாமையிற் [4]கடிப் பேற்றினால், முரசு சார்வாக வொலி பிறந்தாற் போல [5]விஷய ஸந்நி வாதத்து உடம்பு சார்வாக உணர்வு பிறக்குமெனறு நீ சொல்லியது அயுக்த மன்றோ ? என்னை சொன்னவாறெனில், [6]"மற்றுடம்பு

---

1 ? 2 புலம் - விஷயம்.

3 ஒளி.

4 கடிப்பு - கோல் ; ஏறு - அடி. 5 ஸந்நிவாதம் - உறைப்பு.

6 ?

சார்வாக வுணர்வெழூஉ மெழுதற்குப், [1]பெற்றிமை பறையடிப்பப் பெறு மொலியே யுரையாதோ" வென்று நீ சொல்லுதலினென்பது. ஆதலாலிதற் கொரு காரணஞ் சொல்ல வேண்டுமென்பது. சீர்க்கும் - சம்பவிக்கும். (சஎ)

510 இச்சையில் லாமையி னெல்லா மொருங்குண ராவெனினு
மிச்சையெல் லாத்திற்கும் வேறே லொருங்குட னெய்துமன்றி
யிச்சையெல் லாத்திற்கு மொன்றேற் குணிப்பொரு ளிச்சையெனாய்
தச்சனஞ் சிச்[2]சா ரகழ்கள்வ னென்கின்ற தன்மையினாய்.

(இ - ள்) விஷய ஸந்நிதானத்து எல்லா வுணர்வும் பிறக்கவேண்டும்; பிறவா தொழிந்தது இச்சையில்லாமையெனில், இச்சைபிரத்தியேகமுளதெனில், எல்லா வுணர்வு மெப்பொழுதும் பிறக்கவேண்டும்; அஃதன்றி எல்லா வுணர்வுக்கும் இச்சையொன்று தஜ்ஜந்ய ரூபமாக வுணர்வு பிறக்குமெனில், ஞானதத்துக்கு ஆதார மாகியஜீவனை இச்சையென்று பேரிட்டு வழங்கினாய்போலும். இராஜத்துரோகஞ் செய்து இராஜ பயத்தாலோடிப் போகினானொருதச்சன் இராஜ புருஷர் களைக் கண்டு பயப்பட்டு,ஒரு சுவராடியி லொதுங்கினானை அவர் பிடிப்ப, அவ னும் நான் தச்சனல்லேன்; சோர விருத்தி பண்ணுதற்காகச் சுவரகழ்கின்றே னொரு கள்வனென்றானவனைப் போலும் தனமையுடையா யென்றவாறு. (சஅ)

511 பிறந்துபிறந்துநி னிச்சை கெடலன்றிப் பின்னொன்றின்மேற்
சிறந்து சிறந்தாங் குணர்ச்சி விரியுந் திறமரிதாற்
கறந்த கறநத கலஞ்சுவைத் திட்டாற் கறைக்கலங்க
ணிறைந்த நிறைந்தவை பாறயிர் மோரெனத் தானென்னையோ.

(இ - ள்) இச்சைதானும் க்ஷணவர்த்தி யாதலாற் பிறந்த க்ஷணத்தே கெடுவ தல்லது, உணர்வைப் பிறப்பித்தற்கு சக்தமாகாது. என்னை? கறக்கின்ற பால் கறக்கக்கறக்கப் பாண்டத்திற் சுவறுமாயிற் பால், தயிர், மோர் என்பன ஸம்பவிக் குமோவெனறவாறு. (சகூ)

512 எல்லா வுணர்ச்சியு மிச்சை வழியா லெழுமெனலா
லில்லாம் [3]பிறநுன திச்சையு மிச்சைமு னின்மையினால்
வல்லா யிதற்குமுண் டாயின் வரம்பின்மை யாமதனாற்
சொல்லா விடுநதிற மென்னோ விரிவிற்குச் சூனியமே.

(இ - ள்) உணர்வுகளெல்லாம் இச்சானு ரூபமாகப் பிறக்குமென்று சொல் லுதலால், இச்சை உணர்வுக்குமுன்னே யுளதாகல் வேண்டும். அஃதாயில் அந்த இச்சை யாங்கண்ணது? சரீரத்ததெனில் அசேதனமாகிய சரீரத்தி லிச்சை கூடாதாம். கூடில், பிருதிவியாதியிலும் இச்சை யுளதாகல் வேண்டும். இனி

1 பெற்றிமை - தனமை. 2 சார் - சுவர்.
3 பிற - அசை.

இச்சை ஞானத்தவெனில், இச்சை முன்பே யுண்டாயினல்லது ஞானம் பிறவாமையில் ஞானத்துக்கு இச்சையுண்டாதல் கூடாதாம். இனி இந்த [1]பிரஸ்துதமான இச்சை பிறிதொரு இச்சையிற் பிறக்குமெனில், அதற்குச் சொல்லிய குற்றம் வரும்; அதற்குமொரு இச்சை யுண்டாயினதற்கு மிவ்வாறு குற்றமாய் அநவஸ்தையாம். ஆதலால் இச்சையெனபதொன்று பெறப்படாமையில் இச்சையாற பிறப்பதாகிய ஞானமும் பெறப்படாதா யந்த ஞானத்தால் வருவனவாகிய ஸம்ஸ்கார வேதனைகளு மிலவாகிச் சூனயமா மென்று சொல்லாதவாறென்னை யென்றவாறு. (௩௦)

513 வெளிப்பட்டு நின்றதொன் றன்றி யொழிந்த விஞ்ஞானங்கடாங்
குளித்தன தாங்கொள்ளப் பாடின்மை பாலின்மை கூறிநின்றேற்
[2]களித்தவை தங்களுக் [3]காலய மாலய மாமெனநீ
யொளித்தனை கொள்ளலுற் றாயுயிர் தன்னையோர் பேருரைத்தே.

(இ - ள்) விஷயம்பெற்று நிகழாநின்ற ஏக விஜ்ஞான ஸந்தான மொழித் தொழிந்த தாழ்ந்துகிடத்தற்கு ஒரு ஆதாரமில்லாமையினும், பெறப்படாமையினும் அவை யிலவென்று சொல்லுதற்கண் அந்த விஜ்ஞானங்கள் ஆழ்ந்து கிடத்தற்குச் சரீரம் ஆதாரமாமெனில், சரீரம் அசேதனமாதலிற் பிருதிவ்யாதிபோல ஆதாரமாகாது என்றார்க்கு நீர் சொல்லும் ஆத்மாவுக்குச் சரீரம் ஆதாரமானவாறுபோல அசேதனமே யெனினும், ஆதாரமாமெனினும், 'யான கண்டிர் நோன்பிகாள் முனனேயோர் பிறப்பினுண் முயலானேன' என்பதனால், சரீரதனுக்கு முன்பே யுளதாகிய பூர்வ ஜனமத்துந் தனனாற் செய்யப்பட்ட கர்ம வசத்தால் ஆதமா சரீரத்துடன கூடிற்றாகலின் அதற்கு அது ஆதாரமாகு மெனறார்க்கு, விஜ்ஞானமு மிவ்வாறாகலி னதற்குச் சரீரம் ஆதாரமா மெனில், நீ சொல்லுகின்ற விஜ்ஞானம் க்ஷணநஶ்வரமும், சரீரத்து உத்பவிப்பதூஉ மன்றிப் பரலோகத்தினினறும் இகலோகதது வந்தும், இகலோகத்தினின்று பரலோகத்துச் செல்வதுமொரு வஸ்துவாகில், யாஙகள் ஜீவனென்றும், ஆத்மாவெனறும் வழங்குவதனை நீ விஜ்ஞானமென்றும், சித்தமென்றும் வழங்கினையாமாதலால், ஒரு சரீரத்து ஆறு ஆத்மா உளவாம். அதற்கண் [4]நைராத்மவாதம் [5]நிரஸ்தமாம். அனறியும் சரீரத்து முன்னே ஞானமுளதா மென்று சொல்லுவது சித்தாந்த விரோதமாம. எனனை?

"மற்றுடம்பு சார்வாக வுணர்வெழூஉ மெழுதற்குப்
பெற்றிமைப் பறையடிப்பப் பெறுமொலியே யுரையாதோ"

என்பதனால் சரீரமிடமாக விஷயம்பெற்று ஞானம் பிறக்குமென்று சொல்லினை

1 பிரஸ்துதமான - குறிக்கப்பட்ட.

2 அளித்தவை - கூறிய ஆறுவித உணர்வுகள்; 'அளிவிதங்களுக்கு' என்றும் பிரதி பேதம். 3 ஆலயம்-முதலுணர்வாகிய ஆலய விஜ்ஞானம்; ஆதாரம்.

4 நைராத்மவாதம் - ஆத்மா இல்லை என்கிற வாதம்.

5 நிரஸ்தமாம் - இல்லையாம்.

யாதலில், சரீரத்துக்குமுன் விஜ்ஞானமு மில்லையாம். அன்றியும் அசேதன மாகிய சரீர விஷய ஸந்நிதானத்து ஞானம் பிறக்கில், சதுர்வித பரிணமமாகிய சரீரத்து உணர்வு பிறக்குமென்று சொல்லுகின்ற [1]சார்வாகனே நின் ஸ்வாமியா மன்றே ? அசேதனமாகிய சரீரத்து ஞானம் பிறக்கில் சவ சரீர முதலானவற் றுள்ளும் ஞானம் பிறக்கு மன்றே எனருர்க்கு ஜீவிதேந்திரியமு முதலுணர் வாகிய ஆலய விஜ்ஞானமும், ஞானங்களுக்கு ஆதாரமாகிச் சரீரத்து நிற்கும் ; அவைபோதலில் சவசரீரத்துணர்வு பிறவாது, பொத்த பறையிலொலி பிறவாத வாறுபோல. என்னை ?

[2]"செத்தார்க்கு மாமெனின் சீவிதையு முதலுணர்வும்
பொத்தமையா லாகாது பொத்தற் கொலிபோல"

வென்பதாகலினெனில், ஜீவிதேந்திரியமு முதலுணர்வும் சரீரந்தானேயோ ? சரீர வியதிரிக்தமோ ? சரீரந்தானே யெனில் லோகாயதமே நிலை நிற்பதாம் ; சரீர வியதிரிக்தமாகிச் சரீரத்துக் கூடி நிற்கில், நீ ஆத்ம தத்வத்தினை ஆலய விஜ்ஞானமெனவொரு பெயரிட்டு ஒளிதுக்கொள்ளலுற்ரு யெனறவாறு. (ருக)

514 இருளுடை மாலைக்கண் டோன்ரு தெனகடுகென நண்பகலே
பொருளுடை யார்பொருள் கொள்வா [3]னகழுநன் போன்றிலையோ
வருளுடை யார்சொல்லு மாருயி ராலய மென்றிருக்கும்
மருளுடை யாய்நின மாண்பழிந் [4]தெற்ருன மயங்கினையோ.

(இ-ள்.) அருளுடையாராகிக் கொல்வதூஉந் தின்பதூஉந் துறந்த ஜைனராற் சொல்லப்படுகின்ற புண்ணியபாப கர்மகர்த்தாவும், தத்பல போக்தாவுமாகிய ஆத்மா வினை நீ ஆலய விஜ்ஞானமெனறு வேறொரு பெயரிட்டுக்கொள்ள வேண்டிய தென்னை யெனருர்க கவ்வாறு கொள்ளாதவழி ஞானங்கள் பிறத்தற்கு ஆதார மில்லாமையில் சூன்யமாவது கண்டு தத் பரிஹாரார்த்தமாகக் கொண்டே னென் கின்ற பித்தனாகிய நீ யாவனோடொத்தியெனில், இருளின் மாலைக்கண் டோனரு தென்று பகலே சுவாகழ்கினற கள்வனோடொத்தி யெனறவாறு.

மாலைக்கண் டோன்ருமையால வருமிடையூறு பரிஹரித்தற்காகப் பகலிற் சுவாகழப்புக்குத் தன் பிராணனிழந்தவனேபோல நீயும் விஜ்ஞானங்கட்குப் பிறப் பிட மில்லாமையால் வரும் வாதெ பரிஹரித்தற்கு ஆலய விஜ்ஞானம் வேண்டி நைகாத்ம பக்ஷமாகிய நின்ஸித்தாந்தத்தைக் கெடுத்தா யென்பது போந் தது. (ருஉ)

515 மூக்கொடு நாமெய்யிம் மூன்றுந்தம் மூன்று புலன்களையுந்
தாக்கிய போழ்தே யறிதலுந் தத்துவ மாமென்றியா

1 சாரவாகன் - சார்வாக தரிசனன். 2 ?
3 'அகழ்ந்தனன்' என்றும் பிரதிபேதம்
4 'எத்தான்' என்றும் பாடபேதம்.

லாக்கிய மூன்றி லறிவு மருவா லவையொருவாப்
பாக்கியஞ் செய்தாய் பரிசங்கள் கொள்ளும் பரிசென்னையோ.

(இ - ள்.) "கண் செவி யுறுவனவல்ல தம் புலன்களை யென மொழிந்தா" னென்பதனால் மூக்கும், நாவும், சரீரமுந் தம் புலன்களையுற்றபொழு துணர்வு பிறக்குமென்று சொல்லுதியாதலிற் கேவலம் அசேதனமாகிய இந்திரியங்கள் விஷயத்தையுற வுணர்வு பிறக்கில், சவ சரீர முதலாயினவற்றிற் புலங்களுற்று முணர்வு பிறக்கவேண்டும். அஃதன்றி இந்த மூன்று இந்திரியங்களாலும் பிறக்கின்ற உணர்வு புலன்களை யுறுமெனி லந்த வுணர்வுகள் பிறந்தாலன்றிப் புலன்களையுறுதலு முற்றாலன்றி யுணர்வு பிறத்தலுங் கூடவாம். அன்றியும் ஏகாந்தம் அமூர்த்தமாகிய ஞானம் புலன்களையுறுமாறென்னோ கூறுயென்றவாறு.

பாக்கியஞ் செய்தாயென்பது-ஆக்ஷேபம். பரிசம்-ஸ்பர்சம். நீங்களும் இந்திரியங்கள் மூர்த்தகஸ்பர்சக்ராஹிகளென்றலினுங்கட்குமிக்குற்றமொவ்வாதோ வெனில், ஒவ்வாது; நாங்கள் கர்மஸம்பந்தத்தால் கதஞ்சித்மூர்த்தனாகிய ஆத்மாவினுக்கு ஸ்வரூபமாகிய ஞானமுங் கதஞ்சித் மூர்த்தமாமென்று வேண்டுதலினுமுன்பு பிறிதொரு விஷயத்தினின்ற ஞானம் விஷயாந்தர ஸந்நிதானத்துப்புடைபெயர்ந்து தத்விஷயக்ரஹணம் பண்ணுமென்று சொல்லுவதல்லது விஷயஸந்நிதானத்து ஞானம் பிறக்குமென்று சொல்லாமை பெறுது மென்பது. (ருங).

516 உற்றிலவாயொலி கொள்ளுஞ் செவியென வோதுகின்றாய்
கற்றிலை மெய்ம்மைநீ கட்புலந் தன்னோடோர் காலத்துநாற்
பெற்றில நாமதன் பின்கொள றானும் பெருந்தவத்தாய்
மற்றிது தான்றன் பொறியுறு காறும் வரலினன்றே.

(இ - ள்.) "கண்செவி யுறுவனவல்ல தம் புலன்களை யென மொழிந்தான்" என்பதனாற் செவியுற்றுக் கிரகியாதென்று நீ சொலலுதலாலுனக்குத் தத்வஞானமில்லைபோலும். செவியும் கண்ணேபாதியும் அஸ்ப்ருஷ்டக்ராஹியாகில், வண்ணான் புடவையொலிக்கின்ற காலத்துப் புடைவை கனமேற்படக் கண்ட காலத்தேயந்த வொலியுங் கேட்கப்படாததென்னோ? பின்பு சிறிது தாழ்த்துக் கேட்கப்படுதலினிது செவியை வந்துறுங்காறுந் தாழ்த்தவாறன்றோ வென்றவாறு.

அன்றியும் ஸப்தம் அஸ்ப்ருஷ்டக்ராஹியாகில் காற்றுப்போகிற திக்கில் நின்றால் கிரஹிக்கப்படுதலு மொழிந்தவாற் கிரஹிக்கப்படாமையும், சுவர்முதலாயினவற்றாற் றகைப்படுதலுங் கூடாவென்பது. (ருச).

517 வாய்த்துரை யீதென வாம னிதுசொல்லும் வந்துறுமேற்
சேய்த்தெனக் கோடலுஞ் சேரா தொலிசெவிக் கண்ணதெனி

னீத்தன தாமல வாயினு நீசொல்லு முற்றறிவின்
றீத்தனைப் போலவுந் தேறென் றவனைத் தெருட்டினளே.

(இ - ள்.) ஒலியினைச் செவியுற்றுக் கிரஹிக்குமாகில் ஒலி செவியிற் பட்டதாம்; பட, இது தூரத்தெழுந்த வொலி, இது கிட்டவெழுந்த வொலி என்று கொள்ளுதலும், ஒரு செவியுட்பட்டதாகில் எப்பக்கமும் நின்ற வெல்லார்க்கும் யோக்யமான பிரகாரத்தாற் கேட்டலும், இவ்வொலி கிழக்கெழுந்தது மேற்கெழுந்த தென்றலுங் கூடாதாதலினிது வாய்த்தவுத்தரமென்று சுகதன் சொல்ல, உற்றுக்கிரஹிப்பனவாக நுன்னுற் சொல்லப்பட்ட அக்னிஸ்பர்ஶ முதலாயின வற்றுக்கு மிது, ஒத்தலின், அவைபோலக் கொள்ளென்று நீலகேசியார் ஸுகதனைத் தெளிவித்தா ரென்றவாறு.

அன்றியும் ஸ்பர்ஶனேந்திரியாதி தம் புலன்களை யுற்றவழி ஞானம் பிறக்குமெனறற்கண், இந்திரியங்களா லுறப்பட்ட புலம்பற்றி யுணர்வு பிறக்குமோ? பிறிதொரு புலனபற்றி யுணர்வு பிறக்குமோ? உறப்பட்ட புலம்பற்றி யுணர்வு பிறத்தல் கூடாதாம். என்னை? உறப்பட்ட புலம் உறப்பட்ட க்ஷணததிலே கையற நசித்தலால். நசியாதாயின அக்ஷ[1]ணிகவ்யவஸமாதலி னென்றூர்க்கு,

[2]"உருவுகள் கணிகமே லொப்பக் கொளினென்று
ளுருவுகள் வழித்தோன்றி யொப்பனவு முளவென்றான்"

என்பதென்னுத் தாதலி னுறப்பட்டது நசித்ததே யெனினு மதன்வழி அதுபோலத் தோன்றுவதாகிய புலம்பற்றி யுணர்வு பிறக்குமெனில், அதனையுமுற்றுப் பிறக்க வேண்டுதலி னதற்குமிக் குற்றமொக்கும். அதன் வழித்தோனறியதற்கு மிக்குற்றமாமாதலா லுணர்வு பிறத்தல் கூடாதாம். உறப்படாத பிறிது புலம் பற்றி யுணர்வு பிறக்கில் ஸர்வேந்திரியங்களு முறுதே விஷய கிரஹணம் பண்ணுவனவாம். இன்னும் உணர்வுகள் விஷய கிரஹணம் பண்ணுமிடத்து, அனுகூலமானவிஷயத்தைக் கிரஹிக்குமோ அனுகூலமல்லாதவிஷயத்தைக கிரஹிக்குமோ? அனுகூலமான விஷயத்தைக் கிரஹிக்கில் அனுகூலமான விஷயம் தத்க்ஷணத்தே நசிக்கும்; அதன்வழித் தோன்றிய விஷயமும் அனுகூலமாகிய க்ஷணத்திலே நசிக்கு மாதலால் விஷய கிரஹணம் பண்ணுதல் கூடாதாம். அனுகூல மல்லாத விஷயத்தைக் கிரஹிக்கில் யாவராலு மெல்லா விஷயமும் எவ்வாற்றாலும் கிரஹிக்கப் படுதலில் விஷயநியம முதலாயின பெறப்படாவாம். இவ்வாறவனை நீலகேசியார் தெளிவித்தா ரென்பது. (ருரு)

518 பெற்ற வெழுத்தேற் பிரிவின்க ளுறும் பெயர்நுனது
முற்ற வுணர்ந்து முடித்துரை யென்னை முதலெழுத்து

1 க்ஷணிகத்துக்கு மாறான முடிபு.
2 கு. கேசி.

பற்றின சித்தம் பலவுணர்ந் தேயவை பாழ்படலாற்
கற்றினி யெல்லாக் கணக்குங் கலந்துழை காண்பெண்ணேயோ.

(இ - ள்.) நினது 1பெயராற் பெறப்பட்ட வெழுத்துப் பிரித்து நோக்க வாறும். நின்பெயர் சொல்லுறுவார்க்கு அவ்வாறனுள்ளும் முதலெழுத்தாகிய பகாரத்தைப் பற்றிப் பிறந்த சித்தம் தத்க்ஷணத்தே நஷ்டமாதலில், அந்தக்ஷணத் தெழுந்த சித்தமும் பகாரத்தையே பற்றித் தத்க்ஷணதது நஷ்டமா யிவ்வாறே பிறக்கும் பிறக்குஞ் சித்தமெல்லாம் பகாரத்தையே பற்றி நஷ்டமாதலி னொழிந்த 2 வெழுத்துக்கண் முழுவது மடைவே யுணர்ந்து சொல்லுதல் யாவர்க்கு மருமையில் விநயபிடக முதலாகிய பௌத்த சாஸ்திரத்துள்ள அக்ஷரங்களையும், அவற்றின பொருள்களையு மோதி யுணாதலும், தாமோதியவாறே பிறர்க் குரைத்தலு முதலாயின கூடுமா றென்னே யென்றவாறு.

3க்ஷணிகைகாந்தபக்ஷத்து சாஸ்திர பிரவிருத்தி கூடா தென்பது போந்தது. (௫௬)

519 ஓதிய கந்தங்க ளொற்றுமை யாலுயி ரென்றதுபோற்
4போதிய னுய்நின்னைப் புத்தனென் றலது பொய் 5பிறவோ
6வாதியி னும்புத்தி யாவதல் லாலந்தத் தன்களையா
நீதியி னுற்சொல்வி நின்றநின் பேரு முணர்விலையே.

(இ - ள்.) பஞ்சஸ்கந்த சமுதாயத்து, பரமார்த்த நயத்தாலன்றி வியவகார நயத்தா லொரு உயிருளதென்றற்போலப் புத்தனென்று நின்னைச் சொல்லுவதூஉம் வியவகார நயமாதலிற் பொய்யாமன்றே? ஆதலாற் புத்தி யென்னும் பகுதிமிசை இதனை யுடையவ னென்னும் பொருடோற்ற வருவதாகிய அன் னென்னும் விகுதியைக் களைந்து நீ நின்பெயர் கேட்டார்க்கு, 'நான் புத்தி' என்று சொல்லுவதல்லது புத்தனென்று சொல்லில் நின்னையும், நினபெயரையு மறியாது மயங்கிச் சொல்லுகின்றா யென்றவாறு. (௫௭)

520 ஆன்றியு நின்சொ லறிபொருட் டாணில வாதலினு
லொன்றி யுரைத்த வுனக்கு மெனைத்து முணர்வருமை
யென்றினி யாமுந் தெளிந்தோ மிதனு லெனவுரைத்தாள்
வென்றி யுடையன வல்லது சொல்லா விரிகுழலாள்.

(இ - ள்.) 7" நார்த்தான் சப்தா வதந்தியமீ " என்பது நின்னேத்தாகலின் நின்னுற் சொல்லப்பட்ட பிடகதிரய முதலாயினவற்றுக் கோர் பொரு

1 பெயர் - புத்ததேவன்.
2 'எழுத்துக்கண முழுவதும்' என்றும் பாடபேதம்.
3 க்ஷணிகமே என்னும் ஒரே முடிபையுயுடைய பக்கம்.
4 போதி - ஞானம். 5 பிற, ஓ - அசைகள். 6 ஆதி - பகுதி.
7 நார்த்தான் சப்தா வதந்தியமீ.

ளின்மை பெறப்பட்டது. படுதலின், பெயர்க்கும், நின்றுற் சொல்லப்பட்ட பிட கதிரயத்துக்கும் பொரு ணீயுமறியா யென்பது தெளிந்தோமென்று நீலகேசி யார் சொனளு ரென்றவாறு. (ருஅ)

வேறு

521 ஆறுகுறி யாவனவு மாயபுலந் தாமுங்
கூறுகுறி யாறுமவை கொள்ளும்வகை தாமும்
மாறுகுறி மாறிக்குறி யென்றுமயக் காதே
வேறுகுறி தாமுணர்வின் விள்ளுவ லினிக்கேள்.

(இ - ள்) ஸஂஜ்ஞாஸ்கந்த மாறுவனவும், அவற்றின்விஷயங்களும், அவை விஷயகிரஹணம் பண்ணுமவவாறும் மயக்கமாகாத வண்ணம் வியக்தமாகச் சொல் லுக வென்றவாறு. மாறுகுறி மாறிக்குறி யென்பது - ஒருவிடன் குறி வாசிப் புழி ஒரு குறியையே மாறுகுறி யென்றும், மாறிக்குறி யென்றும் மயக்கிளு னவனே போலு மயக்காதே யென்றவாறு. (ருகூ)

522 கண்ணின்குறி மூக்கின்குறி மெய்யின்குறி செவியி
னண்ணுங்குறி நாவின்குறி நாடின்மனத தோடு
மெண்ணுங்குறி யாவனவிவ் வாறுமெனக் கொண்ணீ
பண்ணின்குறி யேசுமொழிப் பாவையெனச் சொல்லும்.

(இ - ள்.) அவை யிவை யென்று சொல்லியவாறு. (சுo)

523 அறிவுகுறி யென்பனவி னுயபுல மொன்றே
லறிவுகுறி யென்பனவு மாகுமவை யொன்றே
பிறிதுகொளு [1](புலமு)ள்ள தாகுமெனிற் பேதளு
சிறிதுநெறி காட்டினது சொல்லுமெனச் சொல்லும்.

(இ - ள்.) விஜ்ஞான ஸஂஜ்ஞா ஸ்கந்தங்கட்கு விஷய மொன்றெனி லவ் விரண்டு மொன்ருகி ஏகஸ்கந்தமாம். அஃதன்றி விஜ்ஞான விஷயத்தின் வேறு ஸஂஜ்ஞாஸ்கந்தத்தினுக்கு விஷயமுளதாயினது கொள்ளப்படுமென்று சொன்ளு ரெனறவாறு. (சுக)

524 உண்மைகுறி கொள்ளுமுணர் வின்புலம தெய்தா
தெண்ணினுணர் வோடுகுறி யிவ்வகைய வென்னி
லுண்மையுணர் வின்புலமோ டொன்றெனில தொன்றே
நண்ணலில வேலுணர்வி னுயபுல னின்றே.

(இ-ள்.) ஸஂஜ்ஞாஸ்கந்தத்தினுக்கு விஷயம் வஸ்துவின்கண்ணுளதாகிய உண் மையாமது விஜ்ஞான ஸ்கந்தத்துக்கு விஷயமாகாது. இஃதவற்றின் விஷய பேத

1 விடுபட்டதற்குக் கூட்டியது.

மெனில், விஜ்ஞான விஷயத்திேேடு ஸஂஜ்ஞா விஷயமேகாந்த மொன்றெனில், கிராஹ்யமொன்ருதலில் கிராஹகமு மொன்றேயாய் ஸஂஜ்ஞை யெனறும், ஞானமெனறு மிரண்டின்றி ஒன்றேயாம். ஸஂஜ்ஞாவிஜ்ஞானங்கடம்முட் கூடலின்றி இரண்டு மிரண்டேயெனில், ஸஂஜ்ஞை சென்று குறித்த க்ஷணத் திலே ஸஂஜ்ஞாவிஜ்ஞானங்கட்குப் பொதுவாகிய விஷயங்கெடும். பின்பு அதன் வழித் தோன்றிய விஷயமும் ஸஂஜ்ஞாவாற் குறிக்கப்பட்ட க்ஷணத்தே கெடும். இவ்வாறு கெடுதலி லொரு பொழுதும் விஜ்ஞான ஸ்கந்தத்திற்கு விஷய மில்லையா மென்றவாறு.

இனி, ஸஂஜ்ஞா விஜ்ஞானங்களுடைய விஷயமிரண்டுங்கூடாது வேருகு மெனினும் ஸஂஜ்ஞா விஷயமாகிய உண்மையிற் றீர்ந்து நிற்பதோர் வஸ்துவின் மையிலும நிராதாரமாகியதொரு உண்மையின்மையிலும் ஸஂஜ்ஞாவிஜ்ஞானங் களிரண்டிற்கும் விஷயமில்லையா மெனபதூஉங் கொள்க. "உணர்விற்கே புல னில்லை" யென்று விலக்கிஞெனினும ஒப்பின் முடித்த லென்னும் தந்திர யுத்தியாற் குறிக்கும் விஷயமில்லை யெனபது கொள்க. (சுஉ)

525 ஒருங்குகுறி யோடுணர்வு தோன்றியுடன் கொள்க
வொருங்குபுலந் தோன்றியவை யொத்தகெட லாறு
லொருங்குகுறி யோடுணர்வு தோன்றலில வாமே
லொருங்குபுலந் தோன்றுதலி ஞென்றுமுணர் வில்லை.

(இ - ள்.) ஸஂஜ்ஞா விஜ்ஞானங்களுடைய விஷயம் ஒருங்கு தோன்றுதலில் ஸஂஜ்ஞா விஜ்ஞானங்களு மொருகாலத்தே தோன்றியுடன்கொள்வனவாக. அஃ தன்றிக் குறித்து அனந்தரத்தே யுணர்வு பிறக்க வேண்டில், உணர்வுக்கு விஷய மில்லாமையி லுணர்வு மில்லையா மென்றவாறு.

ஸஂஜ்ஞா விஜ்ஞானங்கள் ஒருங்கு நிகழாவிடின் ஒரு க்ஷணத்தே நான்கே ஸ்கந்தமா மென்பது. அறிவுங் குறியுமொரு காலத்தே பிறக்கு மெனில், அனு பவவிருத்தமாம். என்னை? ஸஂஜ்ஞாகிரஹணனந்தரத்தே உணர்வு பிறக்கக் காண்ட லால். (சுங)

வேறு

526 உள்ளஞ் சொல்லுடம் பென்றிவை மூன்றிஞற்
கொள்ளு நுங்குச லாகுச லங்கடா
[1]மெள்ளி னேரு மிவையின்மை காட்டுவே
[2]னுள்ளக் காக வுரைத்தவம் மூன்றிஞள்.

(இ - ள்.) மானஸிகமும், வாசிகமும், காயிகமு மென்று சொல்லப்பட்ட குசலா குசலஸம்ஸ்காரங்கள் அயுக்தமாமாறு காட்டுவேனென்றவாறு. 'உள்ள... ஞள்' என்பது - மேலே ஸம்பவிக்கும்.

1 எள்ளின் நேரும் - எட்பிரமாணமும்.
2 உள்ளக்கு - அத்துச்சாரியை கெட்டு வந்தது.

1 " தீவினை யென்ப தியாதென வினவி
ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய்
.............................பிரமரு மாகி "

என்பது மணிமேகலை.

" மருடரு மனம்வாய் மெய்யிற் கொலைமுதல் வினைபத்தாமே " என்பது சித்தாந்தத் தொகை.

இவ்வாறு பாவம் பத்தெனறு வரையறுத்தலாற் கள்ளும், அர்த்த பரிக்கிரஹமும் பாவ மென்று கொள்ளப் படாவாயின. 2"மையலுற்ற மகனைநெய்தல்" னென்று சொல்லுதலாற் கள்ளுண்டு மயங்கினன் செய்த கொலை முதலாயின பாவமாகாமையிற் கள்ளுண்டல் பாவ மாகா தெனபது. (கச)

527 வேண்ட லேயென்றும் வெஃகுத லாயினு
மீண்டி நின்ற நினித்தொடைப் பாடெலாந்
தீண்ட லன்னெனத் தீண்டிய வந்தவோ
வீண்டை யேநிற்ப விஃது மறிகிலை.

(இ - ள்.) மானஸிகமான பாவம் மூன்றுள் வெஃகுதல் என்பதன் பொருள் வேண்டுதலன்றே; ஆனால், இவ்விடத்து நின்ற இந்தத தொடைப்பாடுக ளெல்லாம் நீ வேண்டேனெனறு தீண்டா தொழியவும் பலாத்காரத்தாலுன்னைத் தொடர்ந்து பற்றிக்கொண்டு நின்றனவோ? இஃதொன்று மறிகிலை யென்ற வாறு.

தொடைப்பாடாவன:—குடையே, பாதரக்ஷையே, மண்டையே என்றிவை முதலாயின. பகவதர்ஹத் பரமேஶ்வரனுக்கு 3வ்யாதிஹாய-ா ஷிவஷிஹ்ரூஹ முளதன்றோ வெனில், அவை தேவர்களால் செய்யப்படுஞ் சிறப்பாதலினன்று; அவர்தா மவ்விடத்து நின்று பூஜை பணணின புஷ்ப 4தோயாதி யவற்றால் பகவானுக்கு ஒரு பிரயோஜன மின்மையி னவற்றின 5ஐெஜஹாவ மில்லை.
6 " வ்யாதிஹாய-ாஷிவிஹஹை வஷிஷ்கூ-தொஜெஹதொவி விரக்தா ஹவா நஹஷ " என்பதாகலின். நினக்கு வெயிலுக்குக் கவிக்கக் குடை வேண்டுதலினும், பருக்கை முதலாயின ஊன்றுமற்குப் பாதரக்ஷை வேண்டுதலினும், இரத்தற்கு மண்டையேந்த வேண்டுதலினும், தாம்பூல சேவைக்கு வேண்டுவனவும், சயன ஆசனத்துக்கு வேண்டுவனவும், பிறவும் பரிக்கிரஹிக்கவேண்டுதலினும் அவை நினக்கு பரிக்கிரஹங்களேயாம்.

ஆதலால் வெஃகுதல் பாவமென்று உபதேசிக்கின்ற நினக்கும், நின் 7சட்டர்க்கும் வெஃகுதல் பலவு முண்மையினும் மனப்பூர்வமாக வெஃகுதலொழித்தா

1 மணிமே - 24,123 - 39.
2 ? 3 வி. கு காண்க.
4 தோயம் - தண்ணீர். 5 எனது என்னும் எண்ணம்.
6 ? 7 சட்டர் - ஒழுக்கத்தை யநுஷ்டிப்பவர்.

யல்லை யென்றார்க்கு யான் கிருதார்த்தனும், நிரபேக்ஷயனு மல்லாமையி லெனக்கு ஊணும், உறக்கமும், தாம்பூல சேவை முதலாயினவும் வேண்டுதலி னவை பரிக்கிரஹித்தேனல்லது, எனக்கு வெஃகுதலில்லை யெனில், இவ்வாறு கொள்ளில் சர்வ ஜனங்களும் வெஃகுத லொழிந்தாராம். அன்றியும், மனமில்லாததற்கு வினையில்லை, யென்றன்றே நீ சொல்லுவது ; அஃதாயில் நீ திருஷ்டி விஷமான காலத்து நினக்குக் கொலையுள்ள மில்லையெனினும், கண்விழிக்கிற் பிராணிசாமென்றறிந்து அதற்கஞ்சி விழியாது கிடந்த தென்னோ? பள்ளியுட் சங்கத்தாரோடுகிடந்த உபாசகன நித்திராவசத்தால், சங்கத்தார்மேல் காலேறட்டு விழித்தாலதற்குப் பச்சாதாபப்படுவது பாவமுண்டென் றஞ்சி யன்றோ ? இது வொன்று மறிகிலை யென்பது. (௬௫)

528 நன்மை வெஃகுதல் நன்றெனச் சொல்லலு
மன்மை வெஃகுத லன்றெனக் கூறலு
மின்மை யால்வெஃக லென்றதுந் தீமையி
னின்மை யாய நெறிமொழி நீயினி.

(இ - ள்.) போனகாதையிலுனக்கு வெஃகுதலுள தென்றற்கண் எனக்கு வெஃகுதலுளதெனினு மொழிவார்க்கு நன்றென்று உபதேசித்தே னெனில், உன்னை யொழிந்த ஸம்ஸார ஜீவன்களுக்கு நன்மை வெஃகுதல் நன்றாதலும், தீமைவெஃகுதல் தீதாதலுமன்றி வெஃகுதலெல்லாந் தீதென்று உபதேசித்தனையால் ; நின்னை ஆப்தனென்று வெஃகுதலும், [1]நைராத்மிய தர்சனம் மோக்ஷமார்க்கமென்று வெஃகுதலும், பிறவும் வேண்டாமையில் வினையாக்கும் மார்க்கானுஷ்டானங் கூடாதாதலி னிந்த உபதேசத்தை நீ யொழி என்றவாறு. (௬௬)

529 தீய வாய வெகுளியை யொப்பன
மாய மான முலோப மனத்தன
காய்வு செய்திலை கண்டுநின் கள்ளமே
நீய வையவை நேர்தலி னும்பிற.

(இ - ள்.) நின்னாற் றவிர்கவென்று உபதேசிக்கப்பட்ட வெகுளியை யொப்பனவாகிய மாயமு [2]மானமு முலோபமும் மற்றுந் தீயனவாகிய மனோவிர்த்திகளுந் தவிர்கவென்று உபதேசித்திலை உபதேசியாதது அவற்றுக்கு நீ யுடம்படுதலினன்றோ? நின்வஞ்சனை யறிந்தோ மென்றவாறு.

கொலைமுதலாயின வாக்குமென்று வெகுளி யொழிந்தாயாகில் காரணாற் பாவமியைந்தா யாகுதி ; வெகுளி ஆத்மஹத்யையும், பரஹத்யையும் முதலாயின பண்ணுவிக்குமாப் போல மானமு மவை பண்ணுவிக்கும். இனி, வெகுளி கொலை முதலாயின வாக்குமாறுபோல மாயாலோபங்களுங் களவுமுதலாயினவும் ஆத்ம

1 நைராத்மிய தர்சனம் - அநாத்மதரிசனம்.

2 மானம் - கர்வம்.

பீடையுமாக்கும். ஆதலால் மானமுதலாயின வெகுளியோ டொக்கும். வெஃகுத லும், லோபமும் ஒன்றல்லவோ வெனில், வெஃகுதலாவது - பிறிதின் மேற் செல்லும் வேட்கை; லோபமாவது - ஸ்வயமானதனில் வரும் பற்று; அன்றியும் நீ மானமாகாதென்றன்றே நின்னைப் பணியாது [1]மானித்து நின்ற அரசன் முன் வில்லேற்றி அவன் மானம் தவிர்த்து, மற்றுநின்ஞாதிகள் தமது மானத்தால் நின்னை அவமதிப்ப, அவர்களது மானம் போக்குதற்கு நீ [2]ரித்தி காட்டினமை மறந்தாயோ? ஒருவன், தன் ஸ்திரீயுடனும்கூட மச்சேறி அப்பஞ்சுட்டுத் தின் பானது லோபம் போக்குதற்கு நீ யவ்வழிச்சென்று அப்பமிரந்தது அறியாயோ? இவ்வாறு செய்கின்ற நீ இவை மானசிகமான பாவமாகச் சொல்லாத தென்னோ? மற்றும் மானஸிகமாய்ப் பிறக்கும் பாவங்களுக்கு வரையறை யுளதோ? ஆத லால் மானஸிகமான பாவம் மூன்றென்றது நின் பேதைமையேயா மென்பது. 'தீயவாய' வென்பது, 'மனத்தன' வென்பதனோடு கூட்டுக. (௬எ)

530 காட்சி நல்லன காண்ட லினைத்தினு
மாட்சி யாமெனின் மன்னுமஃ தொட்டுவேன்
வேட்கை யாலிது நன்றென வேண்டினு
மாட்சி யொட்டி [3]வழித்தன னல்லனே.

(இ - ள்.) நற்காட்சி நன்றென்பதூஉந் தீக்காட்சி தீதென்பதூஉ மிசை வேன்; நினது காட்சி நற்காட்சி யென்று நீ நின் வேட்கையாற் சொல்லுவது கொள்ளேன்; அது [4]துஷ்ட மென்பது சொல்லுகின்றேனாதலா லென்றவாறு.

அன்றியும் நின்பக்ஷத்தால் நினக்குத் தீக்காட்சியுளது. என்னை? நின் பக்ஷத்து நற்காட்சியாவது க்ஷணிகமே ஸர்வமுமென்று புத்திபண்ணித் தெளிகை யன்றே? அதுவாயின், "யான்கண்டீர் நோன்பிகாள் முன்னேயோர் பிறப்பில் முயலானே" னென்று முயலான வன்றுதொட் டினறளவு நின்றுயாகப் பேசு தலினென்பது. தீக்காட்சி தீதென்பது, அர்த்தாபத்தியாற் பெறப்பட்டது. நல்லன காண்டலாவது—பட்டாங்கறித லெனவே பட்டாங்கறியாமை தீக்காட்சி யாம். ஆட்சி யென்பது - நின் சித்தாந்தத்தைப் பற்றி யென்றவாறு. (௬அ)

531 பொய்குறள்ளை கடுஞ்சொற் பயனில்சொ
லைத வில்லன நான்கி வினாவினுஞ்
செய்கை தீயன வாமெனச் செப்பினீ
ரைய நன்மையென் றீரவற் றப்புடை.

(இ - ள்.) பொய்யும், குறளையும், கடுஞ்சொல்லும், பயனில் சொல்லும் என விந்நான்கும் வாசிகமான பாவமென்று சொல்லுதலா லவற்றி னீங்கிய சொற்களெல்லாம் புண்ணிய காரணமென்று சொல்லப்பட்டதா மென்றவாறு.

---

1 மானித்து - கர்வித்து. 2 ரித்தி - சித்து.
3 வழித்தல் - துடைத்து நீக்கல். 4 துஷ்டம் - நிந்திக்கத்தக்கது.

ஒரு பள்ளியு ளிருந்த சங்கத்தார்பலருட் சிலரைத் தோஷவான்க ளென்றும், ஸஹபோஜன ஸஹவாஸங்களுக்கு யோக்கியரல்ல ரென்றும் கழித்தால் ஒழிந்தா ரெல்லாரும் யோக்கியரானவாறு போலக் குற்றமென் றுன்றைக் கழிக்கப்பட்ட நான்குசொல்லு மொழிந்தொழிந்தன புண்ணியகாரணமா மென்பது. அவை குறளையல்லா மெய்யுரை முதலாயின. அவற்றுட் சில வருமாறு:—

மஹா ஸபாஸ்தானத்துள் தர்மோபதேசஞ் செய்யா நின்ற புத்தன் [1]சிந்தா மாணவையையும், [2]பரிவ்ராஜிகையையும் வதித்தவாறறிவா னொருவன், இவன் தார்மிகர்போல தர்மோபதேசம் செய்யா நின்றான்; சிந்தாமாணவையையும், பரிவ்ராஜிகையையும் வதித்த வாறிது வென்று சொல்லுதலும், இவன் [3]கண்மாளஸ்திரீ பக்கல் செக்கானுக்கு ஜனித்து மாதாவினது வலமருங்கில் பீறிப் பிறந்தா னெனறலும், கபிலபுரத்து முன்னொருநாள் நீலகேசியாரோடு பொருட் சொல்லித் தோற்றானென்றலும், குண்டலகேசி முன்னே சென் றிவள், தன் பர்த்தாவைக் கொன்றாளொரு பாபிஷ்டை யென்றும், காளன் முன் சென் றிவன் பல வழியுங் களவுகண்டு திரிந்தா னொரு கள்வ னென்றும், ஓதா திருப்பானோர் சீலியுழைச் சென் றிவன் அஜ்ஞானி யென்றலு முதலாகிய அநிஷ்ட வசனமும் மெய்க்கோளும், ஸத்வதாமு முதலாயின.

இவை உண்மை சொல்லுதலாலும், முட்டுத லின்றி யெதிர் நின்று சொல்லுதலிற் குறளை யன்மையினும், மெதுவெனச் சொல்லுதலிற் கடுமொழி யன்மையினும், புததன் முதலாயினாரைக் குற்ற மேற்றிப் பிறரைக் குணமேற்றும் பயனுடைமையினு மிவையும், இவைபோல்வனவும் புண்ணியகாரணமா மென்பது. இனிப் பொய் யெல்லாம் பாபம் எனில், புத்தன் அடி தாமரைபோலு மென்புழிப் புத்தன் அடி தாமரையன்றாயினு மதனைத் தாமரையாகச் சொல்லுதலாற் பாபமா மென்பது. (௬௯)

532 மண்டை கெண்டிகை மாட மடாமனை
கொண்டை [4]குண்டிகை கூறை குடங்குடை
யுண்டி கட்டி லுடம்புயி ராதிய
பிண்ட மாய பிறபிற யாவையும்.

இ - ள்.) இச்சொல்லப் பட்டவை யென்றவாறு. (௭0)

533 கூட்ட மான குறியெனி னலதை
பூட்ட லங்கோர் பொருளின்மை வேண்டியு
மீட்டு மீட்டிவை சொல்லின மெய்யுரை
நாட்டு மாறென்கொ லோவிளி நாசநீ.

1 சிந்தா மாணவை - சிந்தாவெனும் பெயருடைய உபாஸக ஸ்த்ரீ.

2 பரிவ்ராஜிகை - தவப்பெண்.

3 கண்மாளர் - கம்மாளர்.

4 குண்டிகை - கமண்டலம்.

(இ - ள்.) பிரதிவியாதியின் கூட்டமாகிய அஷ்டக பிண்டங்களுக்கிட்ட குறி யென்பதல்லது அவை யென்னும் பொருளின்மை நின் பக்ஷமாக வைத்தும் அப்பேருடைப் பொருளாக அவற்றைச் சொல்லுதல் பொய்யாதலி னவ்வாறு சொல்லுகின்ற நீ மெய் சொன்னு யாமா றென்னை யென்றவாறு. (எக)

வேறு

534 நிலம்பொய் நீர்பொய் நெடுநகர் தாமும்பொய்
கலம்பொய் காற்றொடு தீயும்பொய் காடும்பொய்
குலம்பொய் யேயெனக் கூறுஞ்செங் கூறையாய்
சலம்பொய் யன்றிதொன் றேநுங்கள் சத்தையே.

(இ - ள்.) இச் சொல்லிய வெல்லாநுங்கள் பக்ஷத்தாற் பொய்யாதலி னுங்கள் சத்திய வாதித்வ மொன்றன் றென்றவாறு. (எஉ)

535 குற்ற மென்ற குறளையே யொப்பன
மற்றுஞ் சால வுளபிற மாண்பில
வொற்றைப் பெண்ணுரை யாடுதல் போகங்கள்
கற்ற லேகடுஞ் சொல்லின்ன காத்தலும்.

(இ - ள்.) கொலை போலத் தீயன மற்றும் பலவுள. அவை யொற்றைப் பெண்ணுரையாடுதலும், போகாடாஸங்களு முதலாய கடிய சொற்கள் காத்தலும் வேண்டுமென்றே யென்றவாறு.

ஒற்றைப் பெண்ணுரையாடுதலாவது - தனியே நின்றாளைப் போகார்த்தியாகிச் சொல்லும் வார்த்தைகள். போகங்கள் கற்றலாவது - மைதுனோபாயாதி பிரயோகம் பண்ணுதல். (எங)

536 பையச் சொல்லுத னல்வினைப் பாலென்று
லெய்யக் குற்ற வெறியப் புணர்க்குங்கால்
வையத் தியாவரு மந்திர மாமவை
செய்யச் சொல்லுநர் செவ்விய ராபவோ.

(இ - ள்.) இரகஸ்யமாக மெத்தெனக் கொலை முதலாயின வேவுதல் புண்ணிய காரணமா மென்றவாறு.

கொலை யேவுதல் கொலையுளடங்குதலிற் பாபமன்றோ வெனில், கொலையுங் களவுங் காமமுங் காயிகமான பாவமாதலினுங் கொலை யேவன் முதலாயின வாசிகமான பாவத்துளுரையாமலாலு மடங்காதென்பது. கடுஞ்சொல் என்பது கடிய சொல்லன்றே? பிராணிகளுக்குப் பீடையைப் பண்ணும் வாக்கியங்களெல்லாம் கடுஞ் சொல்லாமெனிற், பிராணிகளுக்கு அஹிதமான வார்த்தை சொல்லு

தல் பாபமென்ன வமையாதோ? விந்தப் பாகுபாட்டாற் பயந்ததென்னை யென்பது. அன்றியும்,

1" கெட்டகழு தைக்குரல தென்பர்குயில் கூவி
னட்டவர்கள் போன்மகிழ்வர் நண்பதனோ டென்னை
பட்டபொருள் சொல்லலுற லுண்டெனினும் யாரும்
வெட்டென வுரைத்தலை விடுத்திடுமி னென்றான்"

என்பதனாற் கடுஞ் சொல்லுக் கவ னிலக்கணஞ் சொல்லியவா றறிந்து கொள்க.

537 கடுக்கத் தாமடி கள்ளெனக் காய்ஞர்யா
றொடுக்கச் சாம்பிவை தானுவப் பாரில்லை
கொடுக்க வென்றல் குசலமன் றென்பதோ
படுக்க லுற்ற பதகநின் பாடமே.

(இ - ள்.) அடிகளெனக் கடிதாகச் சொன்னதற்காக வருந் தீமையும், மெத்தெனப் [2]பருஷித்ததற்காக வரு நன்மையு மில்லை யன்றே? உண்டெனிற் கொடுக்கவெனக் கடிதாகச் சொல்லுதல் பாபமா மென்பதோ? பாவி நின்வாக்ய மென்றவாறு. (எா)

538 பாவ மாம்பய னில்லன சொல்லலேற்
பூவ மேபொருள் கைக்கொண்டு புற்கலா!
சாவச் சொல்லுவ தத்துவ மாம்பிற
வோவ னன்றென்றி யொப்பவொன் றில்லையே.

(இ - ள்.) பயனில சொல்லுதல் பாபமெனிற் பயனுடையன சொல்லுதல் புண்ணியமா மன்றே நின்பக்ஷத்தால். அவ்வாறாயில் ஒரு பிரயோஜன நிமித்தமாக ஒருவரைச் சாவச் சொல்லுதலு நின்பக்ஷத்தாற் புண்ணியமா மாதலி னிந்த மார்க்கத்தை யொப்ப தொன்று மில்லை என்றவாறு. ஒருவன் யாசகன் கொலையேவல் பாவமன்றோவெனில், வாசிகமாகச் சொல்லப்பட்ட பாபநான்கிலுங் கொலை முதலாயின அடங்காமையினுங் கொலையேவன் முதலாயினவற்றோடுங் கூட்டி வாசிகமான பாவம் ஐவகைத்தென வோதாமலாலுங் கொலை முதலாயின காயிகமென்றே யோதுதலானு நின் பக்ஷத்தாற் கொலை யேவல் பாவமன்றென்பது. (எக)

539 காயத் தாற்கொலை காமங் களவென
நீ[3]யத் தாசொன்ன நேருந் திறமென்னோ
மாயத் தான்மன மின்றி யவையவை
தேயத் தியாருளர் செய்பவ ரென்பவே.

---

1 ? 2 பருஷித்தல் - கடிதல்.
3 அத்தா - ஆப்தனே.

(இ-ள்.) கொலையுங் களவுங் காமமுங் காயிகமான பாவமென்று நீ சொன்னவதற்கு லோக மியையுமாறென்னோ? என்னை இயையாத வாறெனிற் கொலையுள்ள மொழியக் கொலையும், களவு காண்ப னென்னுமுள்ள மொழியக் களவும், காம வுள்ள மொழியக் காமமுஞ் செய்து முடிப்பார் லோகத்து யாவருமில்லாமையி னென்றவாறு.

மானசிகமான பாவம் காயவாக்குக்களை அபேக்ஷியாத வாறு போலக் காயிகமான பாவம் மனோ வாக்குக்களை அபேக்ஷியாதாகல் வேண்டுமென்பது. இனிக் கொல்வே னென்னு முள்ள முதலாயின மானசிகமான பாபத்துட்பட்டதில்லை யென்றார்க்கு, வெகுளியா லனறே கொலையுளளம் வருவது; வெகுளியை விலக்கினமையின அதுவும் விலக்கிற்றன்றோவெனின், லீலார்த்தமாகவும், கறிநிமித்தமாகவுங் கொல்வுழி வெகுளியொழியக் கொலையுள்ளம் வருதலில் வெகுளியிற் படாதென்பது. இனிக் கொல்வேனென்னுஞ் சொல் முதலாயின வாசிகமான பாபத்துட்பட்டனவில்லை 1(யென்றார்க்கு)க் கடுஞ் சொல்லுட்படுமன்றோ வெனின, வெட்டென வுரைத்தலே கடுஞ் சொற்கிலக்கணமாக வோதினமையிற் படாதென்பது. (எஎ)

540 வழிமுள் ளூன்றன் மனைகடன் மாந்தரைக்
குழியு ளூந்துதல் கோயிற் கலஞ்செய்த
லொழிவில் யானைமுன் னோட்டலோ டின்னவும்
பழியும் பாவமு மாக்குவ வல்லவோ.

(இ - ள்.) இவையுங் காயிகமான பாவமன்றோ? மூன்றே பாவமென்றதெற்றிற் கென்றவாறு.

வழிமுள் ளூன்றல் - வழியிற் படுகுழி கல்லி முள்ளூன்றுதல். கோயிற் கலஞ்செய்தல் - கோயிலிடித்தன முதலாயின. (எஅ)

541 ஒன்றி நின்ற வுயிரை யுயிரிது
வென்று சிந்தித் தழிப்ப னெனவெண்ணி
நன்றி யிஃதொழி தோற்ற நவையினாற்
கொன்ற தேகொலை யென்றைந்திற் கூறினாய்.

இது, "வீதல் வீவதுயிராத" லென்னுங் காதையை அனுகரித்தது. அஃதாமாறு :—

ஒன்றி நின்ற வுயிரை யென்பது - வீவதுயிராதல் கூறிற்று. உயிரிது வெனறு சிந்தித்தென்பது - உயிரென்னுங் குறிகோள் கூறிற்று. அழிப்பனென வெண்ணியெனபது - காய்தல் சொல்லிற்று. நன்றியிஃதொழிதோற்ற வென்பது - கோறல் கூறிற்று. நவையினாற் கொன்றதே யென்பது - வீதல் கூறிற்று. இத்துணையாலும், 'வீதல், வீவதுயிராதல், அக்குறி, காய்தல், கோறல்' என்னுமைந் தங்கங்களுஞ் சொல்லப்பட்டன. கொலையென் றைந்திற் கூறினாயென்பன

1 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

இவை. "ஓய்தலின்றி யுடனாத லால்வருஞ், சேதனைக்குக் கொலையாதல் செப்பி னான்" என்பதனாலிவ் வைந்தங்கமுங் கூடியதே கொலையாவது; ஒழிந்தது கொலை யாகாதென்றவன் கூறியவாறு கூறிற்று.

இவ்வாறு பஞ்சாங்கங்களுங் கூடியதே கொலையென்றதனாற் கொலைக்குப் பாபமில்லை யென்பது பெறப்பட்டது; என்னை? அங்கமைந்தும் உடன் கூடல் கூடாமையால். அஃதாவது:—உடனாதலென்பதற்குப் பொருள் - ஒருகாலத்து அங்கங்களைந்து நிகழ்தல்தான், ஓரிடத்திவ்வைந்து நிகழ்தல்தான என விரண்டல்ல தில்லை; அவற்று ளொரு காலத்து நிகழ்தலும் கூடாதாம்; உயிரென்று குறிகொள் வது ஒரு காலத்துங் காய்தலொரு காலத்துங் கோறலொரு காலத்தும், வீத லொரு காலத்து மல்லது இவ்வைந்து மொரு காலத்தே நிகழ்தல் கூடாமையால்.

இனி, யோரிடத்து நிகழ்தலும் கூடாதாம்; யாங்ஙனமெனில், பதார்த்தம் க்ஷணவர்த்தியாதலால் உயிரென்று குறிக்கப்பட்ட தொன்று, காயப்பட்டததன் வழித்தோன்றிய பிறிதொன்று, கொல்லப்பட்டததன்வழித தோன்றிய பிறி தொன்று, செத்ததுவுமதன் வழித்தோன்றிய பிறிதொனறு. இத்துணையும் ஒன்றின்கண்ணே நிகழில் அக்ஷணிகமாம். இவற்றுட் குறிகோளும் காய்தலும் கோறலும் கொல்வான் பிண்டத்தின; ஏனையன கொல்லப்படும் பிண்டத்தன; ஆதலா லோரிடத் தாதல் கூடாதாம். "ஓய்தலின்றி யுடனாதலா" லென்றமையா லிடையறவின்றி நிகழலே யுடனாதலெனில், காய்தல் நிகழ்ந்த அநந்தரத்தே கோறல் நிகழாது பிறிதொரு சித்த விருத்தி நிகழ்ந்து, பின்பு கோறல் நிகழிற் கொலையில்லை யெனபதாம். ஆதலால் ஐந்தங்கமும் கூடாமற் கொலை சம்பவியா தாம். "வீதல்" கொலைக்கு அங்கமென்று வேண்டவே உயிர்க்கழு, நடைத் தூண் டில், சிறைச் செய்தல், அங்கச் சேதாதி யென்றிவையும், அடித்தல், கட்டுதல், [1] சூடுதல் முதலாயினவற்றால் வியசனித்தலும், பிறவும் கொலையுட்படா. உயிர்க் கழு, நடைத் தூண்டில்களாற் காலாந்தரத்து வீதலுண்டெனில், அங்கங்களோய்த லின்றி யுடனாகாமையிற் கொள்ளப்படாதென்பது. வீவ தயிராதலென்பது வேண்டவே யொழிந்த வங்கங்கள் கூடினுங் குற்றியை மகனென்னும் புத்தியால் வெட்டினானுக்குக் கொலையில்லையாம். உயிரென்னுங் குறிகோள் வேண்டவே யொழிந்த வங்கங்கள் கூடினு மரமென்னுங் குறிகோளால் புருஷனை வெட்டி னானுக்குக் கொலையில்லையாம். காய்த லென்பது வேண்டவே கறி நிமித்த மாக வும், பொருள் நிமித்தமாகவும், கிரியை நிமித்த மாகவும் வந்தகொலை, கொலையல் லவாம்; கோற லென்பது வேண்டவே ஊர்சுடுதல், பூமியுட்கல்லிப் புதைத்தல், கடல் முதலியவற்றுட் கட்டிப் புகவிடுத லிவை முதலாயின கொலை யல்லவாம். ஆதலால், ஐந்தங்கங்களும் கூடியதே கொலை யென்றலாற் கொலைக்குப்பாபமில்லை யென்பது போந்தது. (எக)

542 தேவ னையிவன் றேவ னெனவெண்ணிப்
பாவ னையிற் பணியு மனத்தனுய்த்

---

1 சூடுதல் - சூடுபோடுதல்.

தூவென மும்மையே தோற்றித் தொழானங்கோர்
[1]தாவ னைதொழு தான்றவ றெய்துமோ.

(இ - ள்.) தேவதையைத் தேவதை யென்று புத்திபண்ணி பக்தி செய்து
ழுதற் கிரியைகளாற் றொழாது தத்பிரதிமையே, [2]ஸ்துபையே, [3]அஸ்தி
யென்றிவை கண்டு தொழுதான் புண்ணியம் பெறுது கெடுமோ? கெடாது
ஜீவனையே யன்றி, அதனது வடிவையும், மாம்ச முதலாயினவு மழித்தல்
லப்பாற்படு மென்றவாறு.

ஓகார மொழியிசைப் பொருண்மேல் வந்தது. இக்காதையாற் றொழுதலுந்,
ழப்படுவான் புத்தனுதலும், புத்தனென்னுங் குறிகோளும், அவன் மேற்
ழ மிறங்கியு மிருந்து நின்றுந் தொழுங் கிரமங்களு மெனஐந்தங்கங் கூறிறு
ரபது. (அ0)

543 ஒத்த வன்றனை யுறுபகை யேயெனக்
குத்தி னற்குங் கொலைவினை யில்லெனப்
புத்த னீருரைத் தீரங்கோர் புற்கலன்
செத்த வாறது சிந்திக்கற் பாலதோ.

(இ - ள்.) இவ்வாறு கொலைக்கிலக்கண மோதில், பகைவனைப் போல்வா
ருவனைப் பகைவனென்று குறித்துக் கொன்றூர்க்குக் கொலையில்லையாம்.
னை யெனில், பகை யென்னுங் கருத்தினற் பிறனைக் கொன்றமையிற் பகை
க் கொன்றிலனும். பிறனைக் கொல்வே னென்னு முள்ள மின்மையிற்
னக் கொன்றிலனு மாதலா லவனுக்குக் கொலையில்லையென்று புத்தனுரே!
சொன்னீர். அவ்விடத்தொரு புற்கலன மரித்தது விசாரிக்கத்தகு மென்ற
. பிறனைக் கொல்வே னென்னு முள்ள மின்றியுங் கொலைமுடிதலிற்
லைப் பாவமாமெனில், உள்ளமின்றிக் கொலை முடிந்தவழி யெல்லாங் கொலைப்
மாகல் வேண்டு மென்பது. (அக)

544 கொன்ற பாவமுண் டாயிற் [4]குறட்கண்ணு
மொன்று மேயென் றுரைப்பனெப் பாரியார்
பொன்றி னும்புத்த ரேநீவிர் சொல்வின
சென்று [5]சேர்தலைச் சித்தம தின்மையால்.

(இ - ள்.) இதனுற் றமது மதங்கூறினு ரென்பது. (அஉ)

பட்டி லன்பகை யாலெய்து பாவமங்
கொட்டி நீயவ் வுயிர்க்கொலை யாலென்னிற்

---

1 தாவனை - ஸ்தாபனம். 2 ஸ்துபை - புத்தன் கோயில்.

3 அஸ்தி - எலும்பு.

4 குறட்கண்ணும் (- ஐந்திற்) குறைந்ததிலும்.

5 சேர்தலை - சேர்தலுக்கு ; உருபுமயக்கம்.

றுட்ட னைத்தொழு தோன்றுறந் தாமெனனக்
கெட்ட னன்னிது கேட்க வினைநிலே.

(இ - ள்.) பகைவனைக் கொன்றதனு லவனும் பாபம் படான் ; கொலையால் வரும் பாவம் படுமென் றிசைந்து சொல்லில், ஒரு மொட்டையன் தூர்த்தனுயுள்ளான் செம்படம் போர்த்துச் செருப்புத் தொட்டு வெற்றிலைதின்று வருவானை ஒரு உபாசகன் சஙகத்தா னென்று நினைத்துத் தொழுதான் ; சங்கத்தாரைத் தொழுதபலம் பெறுது தூர்த்தனைத் தொழுதானுய்க் கெடல்வேண்டு மிது கர்ம ஸ்வபாவ மென்றவாறு.

பாவமென்பதனை இருவழியும் கூட்டிக் கொள்க. (௫௩)

546 ஆய்ந்த வைந்தினு மாம்வினை யார்ப்பெனின்
வீய்ந்த தின்மையின் வெய்ய வவீசிதான்
காந்தி பாலி யிரங்கக் கலகனைப்
போழ்ந்து கோடல் பொருந்தல தொக்குமே.

(இ - ள்.) ஐந்தங்கமுங் கூடியதே கொலையுமா யதனுலே கர்மபந்தமாமெனிற் கலகனென்னும் ராஜா, க்ஷாந்திபாலியை வதிக்கப் புக்கவளவிலே, அவீசி யென னும நரகம் வந்து அவனைக் கொண்டுபோயிற்றென்றது அயுக்தமாம். என்னை ? நின பக்ஷத்தால் ஐந்தங்கமுங் கூடியதே கொலை யென்பது அயுக்தமா மென் பது. (௫௪)

547 கொல்வ னென்றவன் கூர்மபடை குன்றினுஞ்
செல்வ னென்றய லார்மனைச் சேரினுங்
கல்லு வானொடெல் லார்க்குங் கருவினை
சொல்லு வானே டுலகமுஞ் சுற்றமே.

(இ - ள்.) கொல்வனென் றெழுந்திருந்தான் ஆயுதக்குறைப்பாட்டான் மீளினும், பரஸ்திரீ கமனம் பண்ணுவான் வேண்டி பரகிருகம் பிரவேசித்து விக்கி னப்பட்டு மீளினும், களவு காண்டற்குச் சுவரகழ்ந்து விக்கினப்பட்டு மீளினும் கொலையும், காமமும், களவுமாமென்னும் ஜைனரே சர்வஜீவன்களுக்கும் பந்துக் களாவார். நீ ஐந்தங்கமுங் கூடிற் கொலை யென்று சொல்லிய உபாயத்தாற் பிராணி களைக் கொல்வித்தலிற் சர்வஜீவன்களுக்கும் சத்துரு வாகுதியென்றவாறு. (௫௫)

548 துப்பி னல்வினை சொல்லலன் யானென்று
1வப்பி னூர்முலை காய்வது வாமனீ
யிப்ப லாரிடை யென்னையி தென்பதோ
செப்பி னுலுஞ் சிதைகின்ற தில்லையால்.

(இ - ள்.) துப்பினல் வினைசொல்லே னென்று சொல்லுதலாற் பயன்கள் யாவையும் வினையாக்காமையில் ஸ்திரீஸேவையும், சுராஸேவையு முதலாயின

1 வப்பு - வம்பு ; கச்சு.

வும் பயனுதலா லவற்றால் வருவதோர் குற்றமின்மை யறிந்தும், கச்சணிந்த முலையாரைச் சித்திரத்திலும் நோக்கேனென்று நீ காய்வது பலருமறியச் சொல்ல வேண்டுமோ? என்னு நினைவே காம சேவையாமெனறால் நின் சித்தாந்தத்துக்கு மலை வொன்று மில்லையன்றோ வென்றவாறு. "உறுப்போ ரெண்மாத் திரை வைக்குமாயி லது காமவாழ்க்கையே" என்பதனுற் காமத்துக்கு எட்காயளவிசைதலாலும் மலைவிலை யென்பது. (அசு)

549 பண்டு தான்வைத்தப் பண்டத்தை யொப்பதொன்
றுண்ட தாயி னதுவது வேயெனக்
கொண்டு போகினுங் கொள்ளினுங் குற்றமில்
கண்ட போழ்துங் களவன்ற தென்றலால்.

(இ - ள்.) ஒரு கிரகத்துள் தான் முன்பு வைத்ததொரு பண்டம் போலும் மற்றொரு பண்டத்தை, அதுவிது வெனனுங் கருத்தினுற் கொண்டு தேசாந்தரத்துப் போகினும், போகாது கொண்டிருப்பினும் முன்பு தான் வைத்த பண்டமென்னு முள்ளத்தா னெடுத்தமையி னவனுக்குக் குற்றமில்லை; கண்டு பிடிப்பினு நின்பக்ஷத்தாற் கள்வனன்றென்று சொல்லுதலா லெனறவாறு.

உறையிட்டதோர் புஸ்தகத்தை வைதது அதுபோ லுறை யிட்டிருப்பதோர் வஸ்திர விசேஷத்தினை யெடுத்துக்கொண்டானைக் கண்டுபிடித்தாலும் புஸ்தகமென்னு முள்ளத்தாலெடுத்தமையிற் களவாகாதென்பது. 'உடைப்பண்பில்ல களவுதான்' என்று களவுக் கிலக்கண மோதினமையால் உடைப் பண்புடையதுங் காற் பொன்னிற்றுழ விலை பெற்றதுங் களவு கண்டதாயினுங் கொடுக்கக்கொள்வதூஉங் களவு காண்கின்றேனென்னு முள்ள மின்றிக் கொள்வதூஉந் தேசாந்தரத்துப் போகாது கொள்வதூஉங் களவன்றென் றுடன்படுதலு முண்டென பது. (அஎ)

550 பஞ்சி மெல்லடி நோவப் பகனடந்
தஞ்சி லோதியு மல்க வவளென நீ
துஞ்சு மில்லுடை யாளைச் சுமந்துபோய்
வஞ்சி யான்கொள்க வாழ்கபுத் தன்னென.

(இ - ள்.) சுவஸ்திரீயுந் தானும் வழிப் போந்தொரு கிருகத்துட்டங்க, 'அவளென் சுவஸ்திரீ' என்னு முள்ளத்தால், அம்மனையில் வாழ்வாளோர் இளமயிற் சாயலாளைச் சுமந்து கொண்டு போகித் தன் சுவஸ்திரீ யனமை யறிந்தும், சுவஸ்திரீ யென்னுமுள்ளத்தாற் கொடுபோந்தேனுதலிற் புத்தவசன பிரமாணத்தால் யான் பரஸ்திரீ கமனம் பண்ணுகின்றேனல்லேன்; சுவஸ்திரீயைத் தீண்டுகின்றேனென்றே கருதி அவளை அனுபவிப்பானுக புத்தனை வாழ்த்தியென்றவாறு.

வஞ்சியா னென்பது - சுவஸ்திரீ யல்லாதாளை சுவஸ்திரீயே யென்று கருதினே னென்னு முள்ளமின்றி யென்றவாறு. (அஅ)

551 கந்த மாவன காகதந் தம்மெனப்
பந்த மின்மையிற் பாழ்செய் திட் டேனினி
யந்தி னீசொன்ன வாரிய சத்தையுஞ்
[1]சிந்தை யுஞ்சிதைப் பேன்சில சொல்லினால்.

(இ - ள்.) பஞ்சஸ்கந்தங்களை யுக்தி சம்பந்தமில்லாமையில் காகதந்தத் தோபாதி சூன்யமாமாறு காட்டினேன். இனி, அநித்தியாதி நான்கு வாய்மையையும், மற்று நின் மதங்களையும் தூஷிப்பேன் சில வசனங்களா லென்றவாறு. (அகூ)

வேறு

552 பிண்டமொன் றாயினும் பிரியநோக் கின்னது
கொண்டுநின் றன்பிற கூறினைந் தேயெனக்
கண்டநான் மெய்ம்மையுங் காட்டுவா மீங்கெனி
னுண்டுதா மாகுல முணர்வுதான் கூறுவேன்.

(இ - ள்.) மக்கட் பிண்டமென வொன்றே யாயினும் பிரித்து நோக்கின வழி ஐந்தாகக் கூறினையாயின், அவ்வாறைந்தாக வரிதினிற் கைக்கொண்டோ மினி யிவவழி வாய்மை நான்குங் காட்டுதியாயிற் குற்றங்கள் பலவுமுள சொல்லுவன் கேள் என்றவாறு.

அரிதினில் ஐந்தாகக் கொண்ட தென்னை யெனில் ரூபம், அரூபம் என இரண்டாவதல்லது, ஐந்தாக லரி தென்றார்க்கு ரூபஸ்கந்தம்போல வொழிந்த ஸ்கந்தங்களும் பின்ன லக்ஷணத்தனவன்றோ வெனில், அரூப வஸ்துவினது ஸ்வபாவமாகி, அதனிற் பிரித்துப் பெறப்படாத குணங்களன்றோ? ரூபஸ்கந்தத் தோபாதி பினன லக்ஷணங்களெனில், சரீர பிண்டத்துக் காண்பதன்றாம். அன்றியும் ரூபஸ்கந்தம் வேறு பெறப்பட்டாற்போல சரீர பிண்டத்தையொழிய விஜ்ஞானாதியும் வேறு பெறவேண்டும். அன்றியும் அரூப வஸ்துவிலுண்டாகிய ஞானாதி நான்கையும் நான்கு ஸ்கந்தமாகக் கொள்ளில் ரூபஸ்கந்தத்துளவாகிய வர்ணாதி யெட்டையும், எட்டு ஸ்கந்தமாக்கி, ஸ்கந்தம் பன்னிரண்டாகக் கொள்ளல் வேண்டும். இனி, வர்ணாதி யெட்டையும் ரூபமென ஒன்றாகக் கொள்ளில், ஞானாதி நான்கும் அரூபமென ஒன்றாக்கிப் பொருளிரண்டே யாமாதலால் பஞ்ச ஸ்கந்தமென்பது பிழையாமென்பது போந்தது. (கூ0)

553 முழுதுந்துன் பம்மென மொழியினஃ தாகிய
பொழுதினு னல்லவும் புல்லுமா மாதலாற்
பழுதுதா னவ்வுரை பன்மைதா னின்மையில்
[2]இழுதையா னன்குள வென்றுசொன் னுயென.

---

1 சிந்தை - மதம். 2 இழுதை - அறிவின்மை.

(இ - ள்.) இது சர்வமுந் துக்கமென்று சொல்லுதற்கண் அநித்தியம், அசுசி, அநாத்மாக்களுந் துக்கமாய் அடங்குதலி னென்றாகியவதனை நான்கென்று சொல்லியது நினது ஏழைமையா மென்றவாறு. (கக)

554 உழப்புமூன் றும்முட னுக்கநோக் கின்னது
வழுக்கில்லா வாய்மையேல் வாய்மைசொல் லி[1]யினி
யிழுக்கினய் நீபிறர்க் கின்பமீந் தேனெனல்
பழுக்களே காய்வது பண்டுமுண் டேபிற.

(இ - ள்.) சுகவேதனை, துக்கவேதனை, ஸமவேதனை யென மூன்றாகச் சொல்லியதூஉம் துக்கமேயாயில், "இன்பஞ்சால் பெரும்பார மீரைந்து முட னிறைத்து" எனவும், "இன்பம் பிறழா நெறி" எனவும், "இன்னற்கு மினி யன யிரந்தார்க்கு மின்றீம்பால், குனறாமற் பொழிந்திட்ட குன்றாய குணத்தி னன்" எனவும் இவ்வாறு பிறர்க்கு இன்ப மீந்தேனெனறு தப்பச் சொல்லினை யாதலால், சத்திய சதுஷ்டயஞ் சொல்லிப் பழுவொடித்தாய்; பழுவொடிப்பது பண்டுமுனக் கியல்பன்றோ வென்றவாறு. (கஉ)

555 துக்கமே யாயினற் றொழிலுமொன் றாய்ப்பய
மொக்கவே வேண்டுமா லுயர்விலாக் கீழ்க்கதி
புக்குவீழ்ந் தார்பிறர் பொங்கினின் றாரேமா
மிக்கதே யென்னெறி யென்றுவேண் டல்லெவன்.

(இ - ள்.) சர்வமும் துக்கமே யாயிற கர்மமும், பாபகர்மமுமேயாய்ப் புண் ணிய கர்மமிலதாய்க் கர்ம பலமும் துக்கமே யாதல் வேண்டுமாதலில், பௌத்த மார்க்கத்து நின்றார் சுகிகளென்றும், ஒழிந்த மாரக்கங்களில் நின்றார் துக்கிக ளென்றும், பௌத்த மார்க்கமே சன்மார்க்கமென்றுஞ் சொல்லுமாறென்னை யென்றவாறு. (கங)

556 உறுதிகூ றல்லொழி யொழுக்கங்காத் தல்லொழி
யிறுதியிஃ றுன்பமே யின்பமில் லாயினற்
சிறிதுநீ தீப்புகாய் சேர்வதென் னைங்கிழல்
இறுதியில் லாத்துய ரின்னசெய் யாயினி.

(இ - ள்.) நீ பிறர்க்குத் தர்மோபதேசஞ் செய்தல் முதலாயின தவிர் வாயாக; தர்மானுஷ்டானத்தாலும் சுகமின்றித் துக்கமேயாதலால். அன்றியும் துக்கமேயுள்ளதெனில், நெருப்பிற் புகப் பாயாது நீருட் குளித்து மாம்சம் புசித் துத் தாம்பூல சேவை பண்ணிப் போதிமரத்தடியி லிருப்பதென்னை? வாளா விருப்பினும் நினக்குத் துக்கமேயாயில், [2]"மூயிட்டுப் புழுக்காய் முழங்கையைத்

1 இனி - இப்போது.
2 முன் 163-ஆம் செய்யுளுரையிலும் இவை வந்துள்ளன.

தேயாய், தீயிற் சுடாய் பருமுண்மேற் பாயாய்'' மற்று மிவை போல்வனவெல்லாம் செய்யாய், வாளா விருப்ப தென்னினி யென்றவாறு. (கூச)

வேறு

557 தூய்மை யில்லை முழுவது மென்பதை
வாயும் நீசொல்லும் வாய்மைய தாயினுற்
றூமஞ் சாந்தம் புனைபவர் தாமெலாம்
ஏம நன்னெறி கண்டில ரேபிற.

(இ - ள்.) சர்வமும் அசுசி யென்பது நின்வாய்மையானுல், மலமூத்திராதி போல மாலையுஞ் சாந்து முதலாயினவும் அசுசியாம்; ஆனுல், மலமூத்திராதி களைந்து சுத்தி செய்தலும், மாலையுஞ் சாந்து முதலாயின அணிதலுஞ் செய்யாதாரில்லை யன்றே? அவரெல்லா நன்னெறி யறியாது தீநெறி யொழுகுகின்றாரென்றவாறு. (கரு)

558 ஓது மோத்து மொழுக்குநின் னுண்டியுங்
கோதில் தூய்மைய வாமெனக் கூறியும்
யாது நீ[1]யசு வாமெனச் சொல்லுவாய்
நாத னீபிற நன்கறிந் தாயவை.

(இ - ள்.) நின்சாஸ்திரமும், ஆசாரமும், நீ பக்ஷிப்பனவும் எல்லாம் சுத்தியுடையவென்று சொல்லியும், சர்வமும் அசுசி யெனறு சொல்லுவாய்; நீ விருத்தபாஷி யெனினும் நன்றறிந்த ஆப்த னுகுதி யென்றவாறு. (கசு)

559 நீயி னேசொன்ன மெய்ம்மையை நோக்கலார்
தூய்மை யாம்பிறர் தூய்மை யிலரென்று
காய்ப வேகவி மண்டைக ளென்றனள்
வேயி னன்மை விலக்கிய தோளினுள்.

(இ - ள்.) நீ இவ்வாறு சர்வமும் அசுசி யெனறு சொல்லவும்,அதையறியாது நின்மாணுக்காராகித் தலைகவிந்த மண்டைகொண்டிரக்கும் சாக்கிய ரெல்லாம் யாங்கள் ஸ்நான பான தாம்பூலாதிகளால் சுத்தரென்றும், அவை செய்யாதார் அசுத்தரென்றும் சொல்லுதலி னவர் நின்னேடு விருத்தாராயினுரோ வென்று சொன்னுளென்றவாறு. (கஎ)

560 சென்று சென்றன செக்நெறி கண்டவர்
பின்றைத் தூய்மை பெறுவது மில்லையே
[2]வின்று மின்று மியல்வது வாக்கொள்வாய்க்
கின்றித் தூய்தன்மை யென்னை யிழைத்ததோ.

1 அசு - அசுசி. 2 இன்றும் - அவ்வின்மையும்.

(இ - ள்.) சன்மார்க்கானுஷ்டானம் பண்ணுவார் பின்பு பெறுவதோர் சுத்தியில்லையாயின், மார்க்கானுஷ்டானம் வியர்த்த மாதலில், மார்க்கானுஷ்டானம் பண்ணினவன் அசுத்தியோடு பண்ணாதவன்; அசுத்தியோடுன் [1]வாசியென்னென்றவாறு. (கூஅ)

561 அழுகு பூசுமி னங்கண மாடுமின்
கழுகு ஞாத்தையோ டேனவுங் கவ்வுமின்
மெழுகு மின்னிடை மெச்சிய மல்லதின்
முழுதுந் தூய்தன்மை சொல்லிய மூடர்கள்.

(இ - ள்.) மலம் பூசுதன் முதலாயினவெல்லாஞ் செய்ம்மின்; சுத்தமானவை யொன்று மின்றிச் சர்வமும் அசுத்தமே யென்று சொல்லும் [2]அபோதாக்கரென்றவாறு.

அழுகு - மலம். அங்கணம் - [3]புரீஷோத்ஸர்ஜ்ஜனம் பண்ணும் க்ஷேத்திரம் முதலாயின. மெச்சிய மல்லதின் - மெச்சப்படாத மலம் முதலாயினவற்றில். (கூகூ)

வேறு

562 நில்லா வென்னி னில்லன்மை யாலும் நில்லாவா
யில்லா மென்ற லின்புறு மேற்கோ ளிழுக்காகு
மெல்லாந் தானே யென்றலி [4]னேன விழவெய்தி
நல்லாய் சொன்ன நான்மையை நாட்டுந் திறமென்னே.

(இ - ள்.) சர்வமும் அநித்யமென்று சொல்லுதலால், அநித்தியமாந் தன்மையும் அநித்ய மாதலில் நித்தமென்பதொன்றில்லையாய் மேற்கோளழிவாம்.

இனி, எல்லாம் அநித்யமென்று சொல்லுதலால் ஒழிந்த வாய்மைகளும் அநித்ய வாய்மையுட்பட்டு வாய்மை யொன்றாதலின் நான்கென்று சொல்லுமாறென்னை? என்றவாறு.

இனி, ஒரு வஸ்துவிற் கிடந்த அநித்யமான தன்மையொழித்து ஒழிந்த தன்மைகள் நித்தமெனில், ஒரு வஸ்துவில் பல தன்மைகளுளவாய் நித்யாநித்யாத்மகமாம். (கoo)

563 உழுவார் வணிக ரென்றிவ ருள்ளிட் டுலகத்துள்
வழுவார்க் கீய வான்பொருள் வேறாய் மறியும்மே
லழுவார் தமையுங் காண்டுமஃ தாமா றுரையீரோ
புழுவாழ் கென்று புனன்மழை தந்த புகழுள்ளீர்.

(இ - ள்.) லோகத்து உழவு முதலாகிய தொழில்களால் ஜீவிக்கின்ற ஜனங்கள் தம்மால் ஆர்ஜிக்கப்பட்ட பொருள் ராஜ சோராதிகளால் வேறுபட் டழிந்த

---

1 வாசி - பயன். 2 அபோதாக்கள் - ஞான மில்லாதவர்.
3 புரீஷோத் ஸர்ஜ்ஜனம் - மலம் கழித்தல். 4 ஏன - மற்றைய.

வழி எம் பொருள் இழந்தோமென்றழுது அல்லலுறுவாரைக் காண்கின்றோம்; நும் பக்ஷத்தால் க்ஷணந்தோறும் பொருள் கெடுகின்றதாதலின் க்ஷணந்தோறும் பொருள் இழக்கின்றீராயினும் ஒரு காலத்து அழுகின்றவாறென்னோ? இதற்குக் காரணங் கூறீர், மத்ஸியமாய்ப் பிறந்தும் மழை பெய்வித்த பெரும் புகழுடையீ ரென்றவாறு.

வேறு பட்டழிதலாவது - தேச, கால, ஹாவங்களால் வேறுபட்டழிதல். இராஜ, சோராதிகளால் கவரப்பட்டழிந்தன - தேசத்தால் வேறுபட்டன. அக்கினியால் [1]மறவி முதலாயினவற்றாலழிந்தன - காலத்தால் வேறுபட்டன. ஆத வஸ்திராதி சாம்பலாதன் முதலாயின - ஹாவத்தால் வேறுபட்டன. ஆதலால் வஸ்துவிற்கு சர்வதா நாசம் இல்லையென்பது பெறப்பட்டது. [2]“காற்றெறியப்பட் டவிந்த விளக்குக் கங்கோர் பழங் கூரை புக்கதோ” என்பதனால் விளக்கின்கட் சர்வநாசமுண்மை காணப்பட்ட தன்றோவெனில், எண்ணெய் முதலாகிய காரணங்களால் விளக்காய்ப் பரிணமித்து நின்ற புற்கலப் பொருள் காற்று முதலாகிய காரணம் பெற்று இருளாய்ப் பரிணமித்த தாகலின், அங்கும் சர்வ நாசம் இல்லையென்பது.

[3]“தீவ: ஸஸ்: வாஸுமயஹாவ தோஷி”

என்பதோத்தாகலின, நீர் சர்வநாசஞ் சொல்லுகின்ற தென்னை? சொல்லீர் என்றவாறுமாம். இதனால் க்ஷணந்தோறும் வஸ்துவிற்கு ஸர்வநாசம் பிறக்கின்ற தென்று நீர் சொல்லக் கேட்கின்ற உபாசகரும் வேறுபாட்டையே கேடாகப் புத்தி பண்ணி யிரங்குதலால் லோகத்து வஸ்துவிற்கு நாசமாவது வேறுபடுதலே, சர்வநாசமில்லை யென்பது விளங்கும். (க0க)

564 தெய்வத மென்று தேறினர் செய்யுஞ் சிறப்பென்றும்
கையது வீயக் காமுறு தானக் கலப்பென்று
மெய்தல ரேயின் னிவையிவை யெல்லா மிழுக்காவோ
மெய்பிளந் திட்டு வேண்டுநர்க் கீயும் விழுமிய்யீர்.

(இ - ள்.) தெய்வமுளதென்று தெளிந்த ஆஸ்திகர் செய்யும் பூஜைகளும், ஹஸ்தகத மாகிய வஸ்துவெல்லா நேர நன்மை காமுற்றுச் செய்கின்ற தானங்களும், மற்றுமிவை போலுங் கர்மங்களும் செய்தவர்கள், தத்பலங்களைப் பெறாராயின், இந்தப் புண்ணிய காரணங்க ளெல்லாம் வியர்த்தாயாஸமாகிக் குற்றமா மன்றோ? புத்தத்வ பிராப்தி நிமித்தமாகச் சரீரத்தைப் பிளந்து இரந்தார்க்குக் கொடுத்த விழுப்ப முடையீரென்ற வாறு.

என்னை? செய்தவன் கர்மபலனைப் பெறாதவாறெனில், க்ஷணத்திலே பொருள் கையற நசிக்கு மென்கின்ற பௌத்தபக்ஷத்துக் கர்மகர்த்தாவானவன், பலன்காலத் தளவு நில்லாமையில் கர்மபலனைப் பெறுனென்றார்க்குக் கர்மகர்த்தா

1 மறவி - மறத்தல்
2 ? 3 ?

வினது சந்தானத்தே பலிக்கு மாதலிற் கர்மகர்த்தா கர்ம பலன் பெறுமன்றோ வெனில், சந்தானத்துப் பலித்தலாவது கர்மகர்த்தா, தானேபலனைப் பெறுவ னென்ற வாறோ? தத்சந்தானத்து ஜனித்த பிற னொருவன் பெறுவ னென்ற வாறோ? தானே பெறுவ னெனில், க்ஷணந்தோறும் பொருள் கையறக் கெடு மென்பது பெறப் படாதாகும். இனி, தத்சந்தானத்து ஜனித்த பிறனொருவன், பெறுமெனில், கர்மங்களைச் செய்தவன் பலன் பெறாமையும், செய்யாதா னொரு வன் தத்சந்தானத்து ஜனித்துப் பலபோக்தா வாகையுமென, [1]அதிப்ரஸங்கமாம். ஆதலால், க்ஷணிக பக்ஷத்துக் கர்மகர்த்தாவுக்குப் பலன் அநுபவித்தல் இன்மையில் க்ஷணிகவாதி யாகிய சுகதன், தன்உடம்பு பிளந்து கொடுத்தது பேதைமையாமென் பது போந்தது. (௧௦௨)

565 ஒள்ளிழை யாரே யுறுபொருள் பிச்சைக் குரியார்கள்
தள்ளின போழ்தின் னவையவை தன்னைத் தலைநிற்பார்
கள்ளர்க ளன்மை காட்டலு மாமோ கருணையாற்
பிள்ளைக ளேங்கப் பிறர்களுக் கீந்த பெருமையீர்.

(இ - ள்.) விவாஹவிதியாற் கொள்ளப்பட்ட ஸ்திரீயைப் பிறிதொரு க்ஷணத் தும் என்னுடைய ஸ்திரீ யென்று கைப்பற்றிய பர்த்தாவும், தன்னால் தேடப் பட்ட அர்த்தத்தைப் பிறிதொரு க்ஷணத்துக் கைக்கொண்ட ஸ்வாமியும், பிக்ஷை புக்கு வந்த சோற்றை யொருவழி வைத்து ஸ்நானம் பண்ணிவந்து உண்ணலுற்ற பிக்ஷுவும் க்ஷணத்திலே பொருள் கையறக்கெடுமென்பது மெய்யாகிற் றம்முடை யனவல்லாதவற்றைத் தம்முடையனவென்று பற்றினாராகுவ ராதலின், அவர் கள்ளராகுவர்; அவர்களை க்ஷணிகபக்ஷஞ் சொல்லுகின்ற நும்மாற் கள்வரல்ல ரென்று சாதித்துக் காட்டலாமோ? நும்புத்திரர், தமக்கு வருவதாகிய பீடைக்கு அஞ்சி, நுங்கால்பற்றிக் கிடந்து கூப்பிடவு மதற்கு இரங்காது, எனக்குச் சேவை செய்தற்கு அடிமையில்லை; நும் புத்திரரை அடிமையாகத் தாருமென்றிரந்து அவர்களை அப்பொழுதோர் கொடிகொண்டு மோதுகின்ற அந்தணனுக்குக் கருணை செய்துகொடுத்த பெருமையுடையீ ரென்றவாறு.

இதனாற் கிருபை பண்ணுமா றறியானென்பது போந்தது. என்னை? வியச னப்படுவாரன்றே கிருபை பண்ணப்படுவார்? வியசனப்படா நின்ற பிள்ளைகளை யும், அவர்களைத் தேடி எழு [2]சக்கரவாள மெல்லாம் அழுது, அரற்றி யுழன்ற மாதாவையும், கிருபை பண்ணாது, அவர்களைப் பீடை பண்ணவேண்டி வந்திரந்த பார்ப்பனத்தி மூர்க்கனைக் கிருபை பண்ணுதலா னென்பது. [3]"வண்டுளங் கொள்......பிரானே" இதனாலவன் கொடுத்தவாறறிக. (௧௦௩)

---

1 அதிப்ரஸங்கம் - பொருந்தாத சொல்.

2 சக்கரவாளம் - C. F. மணிமேகலை, 6, 176-183.

3 வண்டுளங்கொள் - குண்டலகேசி வாதச்சருக்கம். 33. ஆம் செய்யுளுரை யில் வந்துளது.

566 நில்லா தாகக் கூறுத றன்னை நெறியென்றீர்
பல்வகை யானும் பாழ்செய்து பின்னே பரிகாரஞ்
சொல்லுவி ராயிற் சொல்லிய மெய்ம்மை துறவாமன்
கொல்சின வேழங் குறிநிலை செய்த குணத்தின்னீர்.

(இ - ள்.) சர்வதா அநித்தியம் என்று நீர் சொல்லுதற்கண், யாங்கள் லோக பிரவிருத்தி, சாஸ்திர பிரவிருத்தி, புருஷ பிரவிருத்தி, கர்மபல சம்பந்த முதலாயின சம்பவியாமை காட்டி தூஷிப்ப, நித்திய சூசகமாகிய சந்தானம், வாசனை, சக்தி யென்பனவற்றாற் பரிகாரம் பண்ணுவீராயின், அநித்தியமே யன்றி நித்தியமுமாய் சர்வதா அநித்தியமென்பது கெடுமன்றோ? கொல்லவந்த வேழத்தை நுங் குறிப்பிலே நிறுத்தின குணமுடையீ ரென்றவாறு.

கொல்லவந்த வேழத்தைக் குறிநிலை செய்தலாவது - ஒரு அரசன் பௌத்த தர்சனங் கொண்டு மிகவும் புத்த பக்தனாய்ச் செல்ல, பிரீதனாகிய புத்தனும் அரசன் சாவாமை வரங்கொடுப்ப, இராயஜ்ம்பண்ணிச் செல்லாநிற்ப, புத்தன் சிஷ்யவர்க்கத் துள்ளாரொருபிக்ஷு இராஜ புத்திரனை நோக்கி, "குமாரனே! பகவான் நின்பிதாவுக்குச் சாவா வரங் கொடுத்தனராதலின் உனக்கு இராஜ்ப் பிராப்தி யில்லையென்று சொல்லக் கவன்ற இராஜகுமாரன் பிக்ஷு உபதேசித்த தொரு உபாய பிரயோகத்தால் இராஜாவை வதித்து, இராஜ்யங் கொண்டு செல்வான் தன் மித்திரனாகிய பிக்ஷுவுக்குப் புத்தத்வங் கொடுப்பான் வேண்டிப் புத்தன் பிக்ஷைக்குப் போகின்ற வழி யொரு மத்தகஜத்தைக் கொல்லக் குறிசெய்து வரவிட, அதனை நோக்கிப் புத்தர் தங் கைகவித்து, தர்மோபதேசஞ் செய்து, அதனை உபசாந்தமாக்கினா ரென்பது. [1]"உணர்ந்தவன் விடப்பட்ட களிநாகம் விசையவித்த கையினா...னல்லனோ;' என்பதனாலும், பிறவாற்றாலும் இதன் விருத்தி யறிந்துகொள்க.

இனி, லோகப் பிரவிருத்தி கூடாமையாவது - [2]"ஒள்ளிழையாரே!' என்பதனாலறிக. சாஸ்திரப் பிரவிருத்தி கூடாமையாவது - [3]"கற்றினி யெல்லாக் கணக்குங் கலந்துரை காண்பென்னையோ' வென்பதனாலறிக. புருஷப் பிரவிருத்தி கூடாமையாவது - [4]"பாலனாகிய புருஷனன்றேனே க்ஷணிக பக்ஷத்துக் கூடாமை யறிந்துகொள்க" என்பதனாலறிக. கர்மபல ஸம்பந்தங் கூடாமையாவது - [5]"தெய்வத மென்னத் தேறினர் செய்யுஞ் சிறப்" பென்பதனா லறிக.

567 ஓதி யாது முயிரில்லை யென்ப துரைத்து நின்றாயேற்
கோதி லங்கோர் குறியுயிரே கொள்ளி னுங்கோ ளழிவாம

1 ?
2 ?
3 ? } விளங்கா மேற்கோள்கள்.
4 ?
5 ?

வேதி லார் [1](சொல்) பரிகற்ப னையி ஞலின் மைசொல்லி
னீதி யாநின் கருத்திஞ லுண்மை யுந்நேர்ந் தாயன்றே.

(இ - ள்.) [2]“க்கமத்தி...விஜ்ஜஇ” எனவும், [3]“நாஸ்தி ஆத்மேதி வயம் பௌத்தா ப்ரூம:” எனவும், [4]“யாப்பவிழவும் யானில்லை யெனதில் லென்று மென்றூள்” [5]“கருத்திஞற் பெற்றுமே கண்ணேபோற் கொளப்படுக” எனவும், [6]“ஆமையின் கேசத்தாற் கயிறிடுதி” என்றும் இவ்வாறு ஜீவனென்ப தோர் பொருளில்லாமையிற் சர்வம் அநாத்மகமென்று சொல்லி,

“[7]கூறுதிரோ வுயிரென்றூள் கூறுது முயிரென்றூன்
கூறுமி னுயிரெமக்குக் குழுவாகித் தடுமாறி
யீறு விடாவுடையா னிவனன்றே வெனமொழிந்தான்”

என்பதஞல் உயிருண்மை கூறில் ஸ்வ வசன விரோதமும், ஜீவனில்லை யென் னும் பிரதிஜ்ஞா ஹாநியு மாம்.

இனிப் பிறர் சொல்லும் உயிரையில்லை யென்றே னென்னினும் பிறர் சொல் லும் லக்ஷணத்ததாகிய வுயிருள்ளதென் றிசைந்தாயாகுதி; அதஞல் சர்வம் அநாத் மகமென்னும் பிரதிஜ்ஞாஹாநியா மென்றவாறு.

அன்றியும் அநாதியாகிய ஸம்ஸாரத்துத் தடுமாறிப் பொன்றக் கேடாகிய மோக்ஷபர்யந்தமாக நின்ற சித்தங்களெல்லா மொரு ஜீவனுமென்று சொல்லினை யன்றே; அவ்வாறு சொல்லில் வந்த சித்தங்கள் புண்ணிய பாப கர்மங்களைச் செய்தும், தத்பலங்களை யனுபவித்தும் சம்சாரத்துச் சுழன்று மோக்ஷிக்க வேண்டுதலில் க்ஷணந்தோறும் கெடுகினறனவல்லவாம். கெடில் இகலோகத்தி னின்றும் பரலோகத்துச் செல்வதாகி [8]ஜீவவ்யபதேசம் பெற்றதி யாவதாம்? அன்றியும் மோக்ஷ பர்யந்தமாக நின்ற சித்தங்கள் எல்லாந் திரண்டு இகலோகத்தி னின்றும் பரலோகத்துச் சேறல் முதலாயின கூடுவனவுமல்ல. சில நாள் கழிந்து முக்தஞகக் கடவனீ இதுபொழுது சம்பூர்ண ஜீவனுமல்லையே யென்றூர்க்கு முப்பது திவசங்களை ஒருமாசமென்று குறியிட்டவாறுபோல க்ஷணந்தோறும் கெட்டனவாயினும் மோக்ஷபர்யந்தமாக நின்ற சித்தங்களை உயிரென்று குறியிட் டேனெனில், மாசப் [9]பிராரம்பந்தொடங்கி, [10]அவஸானத்தளவும் நின்ற காலத் தை அறிதலில் மாசமென்று குறியிடலாம். முதலின்றி க்ஷணந்தோறும் நசித்துச் சூன்யங்களாகிய சித்தங்களை யறிவதொன்றின்மையி லுயிரென்று குறியிடல் முடிவதாமன்று; புஷ்பங்கள் பலவற்றை மாலையென்று குறியிடலாகாதவாறு போலவென்பது. பிறவு மெய்துங் குற்றங்களறிந்து கொள்க. (௧௦ரு)

1 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.
2 க்கமத்தி...விஜ்ஜஇ. 3 நாஸ்தி ஆத்மேதி வயம் பௌத்தா ப்ரூம:
4 ? 5 ?
6 ? 7 ?
8 ஜீவனென்ற பெயர்.
9 பிராரம்பம் - ஆரம்பம். 10 அவஸானம் - முடிவு.

568 ஒன்று மில்லை யுயிரென் றுரைத்த நீயுண் மையின்மை
நின்ற வாறே நெறியாக நேர்கின் றாய்நீ யாவனோ
வன்றி முன்சொன் னவத்திறமெத் திறத்தா னும்மா காமையா
லின்றுந் நின்றுந் நீமொழிந்தா யெம்மிறை யேயிறை யாகவே.

(இ - ள்.) உயிரென்பதொன்றில்லையென்று சொல்லிப் பின்பு,

1"இயல்பொடு வேறல்ல னொன்றல்ல னில்லல்ல
னியல்புளவா வுளனாகு மியல்பிலவா வில்லாகு
மியல்பாதி யின்மையான் முதற்றோற்ற மிலனிடை
யியல்பெலாந் தானிறுதி யுடைமையா லனித்தியனே"

என்பதனால் அஸ்திநாஸ்தி ரூபனாகவும், நித்யாநித்ய ஸ்வபாவனாகவும், பேதாபேத மூர்த்தியனாகவும் ஜீவனைச் சொல்லுகின்றாய், நீயாவனாகுதி? அல்லதூஉம் ஏகாந்த வாதிகளாயினார்க்கு இவ்வாறு அநேகாந்த ந்யாய நாயகனாகிய அர்ஹத்பரமேஸ்வரனையும் ஆப்தனாகத் தெளிந்து சொல்லினை யென்றவாறு. (௧௦௬)

569 போற லானு மதுபோ லாதென் றும்பு னைவினாலும்
வேறல் லதில் லையெனவும் வினைவ லியும்யோ கினாலுந்
தேறி நின்ற பொழுதோ டிவ்வேழாந் திறத்தினாலுங்
கூற லாமோ மீட்டுணர்வு கொண்டு ணர்வா னில்லாக்கால்.

(இ - ள்.) போறலானு மெனபது-ஆபோலுமா மாவென்றல். போலாதென்று மென்பது - அதுபோலா திது வென்றல், புனைவினாலு மென்பது. பூர்வம்அல்ப ஞானியாயினா னிதுபொழுது சகலசாஸ்திர பாரங்கத னென்றல். வேறல்லதில்லை யென்பது - அதனோடிது முன்பு வேறுபட்டிருக்கும். இது பொழுது வேறுபாடில்லை யென்றல். வினைவலி யென்பது - முனபு சர்வகாரிய சமர்த்தன், இது பொழுது 2அகிஞ்சித்கா னென்றல். யோகெனபது - முன்பு மகாயோகியாய் 3பூஜ்ய பாதனாய்ச் செல்வா னிது பொழுது 4ஸீலப்ரஷ்டனா னென்றல். தேறி நின்ற பொழுதென்பது - முன்பு மயங்கினா னிப்பொழுது தெளிந்தா னென்றல்.

இவ்வேழு திறத்தாலு முண்டான 5ப்ரத்யபிஜ்ஞான பூர்வாபராவஸ்தைகளை யறிவதொரு ஆத்மாவில்லாத பொழுது ஸம்பவிக்குமாறென்னோ வென்றவாறு.

ஒப்புமுதலாயினவற்றால் அஃதல்லாததனை யதுவென்று கிரஹித்தலில் 6பிராந்தி ஞானமாம். என்னை? முன் தாமரைப்பொய்கை கண்டான், பின்னொரு

1 ?
2 அகிஞ்சித்கரன் - ஒன்றும் செய்யாதவன்.
3 பூஜ்யபாதன் - பூஜிக்கத்தக்க பாதமுடையோன். 4 ஒழுக்க மழிந்தோன்.
5 பிரத்ய பிஜ்ஞாந பூர்வாபராவஸ்தை. 6 பிராந்தி - மயக்கம்.

னா ளப்பொய்கை நீரறவற்றி நீர் பெற்றுத் தாமரை பூத்தகாலத்துக் கண்டு அத் தாமரைப் பூவென்றலும், முன்பு புளிப்பதொரு புளியம்பழந் தின்ருன், பின் பொரு புளியம்பழங் கைக் கொண்டு இப் பழந்தின்றே னிது புளிக்கு மென்றலும், அம்மயி ரிம் மயிரென் றலு முதலாயின, பிராந்திஞான மன்றோ வெனில், நன்று சொல்லினை, பிரத்தியபிஜ் ஞானங்களு ளொன்று பிராந்த மானதற்காக எல்லாம் பிராந்தமாயில் பிரத்தியக்ஷத்திலு மொன்று பிராந்த மாகில் எல்லாம் பிராந்தமாக வேண்டும். அன்றியும் பூர்வாபராவஸ்தான முடையதற் கல்லது இவ்வாறு உணர் தல் கூடாமையால் பூர்வாபராவஸ்தான முடையதோர் பொருளையொழிய இவ் வாறு ணர்தலும் ஸம்பவியாதாம்.

இனி, பிரத்தியபிஜ்ஞானங்களெல்லாம் பிராந்திஜ் ஞானங்களாகில், 'யான் கண்டீர் நோன்பிகாள் முனையோர் பிறப்பினுள் முயலானே' னென்றதூஉம் பிராந்தி ஜ்ஞானமாய்ப் பிராந்தனுகிய நீ ஆப்தனல்லாமையில் பௌத்த சமய மெனபதொனறிலதாம். இது பிரமாண பூதமான பிரத்தியபிஜ்ஞானமாகில் பூர்வாபராவஸ்தான முடைத்தாகி ஞானுதாரமாகிய தொரு ஜீவத திரவ்ய முள தாகல் வேண்டுமென்பது.

எழுதிற மென்பது - தாம் வேண்டு மாற்றாலன்று, பிறர் வேண்டு மாற்றுற் கூறினரெனபது. (கoஎ)

570 நாம சீவன் முதலாய நான்மை களின்முன் மூன்றி லுந்
தூய்மை சீவ னுடைத்தாகு மன்றே னின்சொன் மாறுமாந்
தாம சீவன் முழுவது மென்று தருக்கு கின்றாய்
வாம சீவ னிவற்றினு லுண்மை மறுக்க லாகுமோ.

(இ - ள்.) [1]"நாமஸ்தாபநாத்ரவ்யபாவ" மென்கின்ற நான்கினுள் ளும் நாமமும், ஸ்தாபனையும், திரவ்யமு மென்கின்ற மூன்று முண்மையால், ஜீவததிரவ்ய மோர் குற்ற மின்றியுளதாம். என்னை ? உளபொருட்கல்லது லோகத்துப் பெயரில்லாமையில் ஜீவனென்னும் பெயருளதாகவே ஜீவதிரவ்ய மும் உளதாகும். என்னை ?

[2]"ஜீவஸமௌயபு ஹ்ராஷ்பு வொஹ்ர உக்ஷ்டுெவெக்ஷகெ ஸம்ஜ்ஞ க்வாசமெள்கிகா ஹ்ராம்தவுத ஷெகவாஜிஸ ஷுவக"

என்ப தோத் தாகலின் என்றார்க்கு, [3]வெ புஷ்ப முதலான பெயர்களுண்மையில், அவையு முளதாகல் வேண்டுமென்றோ வெனில், வேண்டா ;

[4] "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தன்றே
தொடர்மொழி யல்லாக் காலை யான"

என்று சொல்லோத் துடையாரும் சொன்னு ராதலிற் றொடர் மொழிகளிற் சில

1 தத்வார்த்த சூத்திரம். 2 ?
3 கபுஷ்பம் - ஆகாய புஷ்பம். 4 ?

வன்றித் தனிப் பெயர்களெல்லாம் பொருளுடைய. இவ்விடத்தும் ஆகாசத்துப் பூவில்லை யென்பதல்லது ஆகாசமென்னும் பெயரும், புஷ்பமென்னும் பெயரும் பொருளுடைய வாதலால் ஜீவனென்னும் பெயர் தனிப் பெயராதலால் பொருளுடைத்தென்பது. வடிவுடைமையாலும் ஜீவத்திரவ்யமுளது. இல்பொருட்கோர் வடிவின்மையால், [1]ஸ்வஸம்வேதந ப்ரத்யக்ஷத்தாலும், [2]வ்யாஹாராதி விசேஷாநு மானத்தாலும், தனக்கும் பிறர்க்கும் ஜீவதிரவ்யத்தினது உண்மை சித்தமாதலில் ஜீவதிரவ்யமுளதாம். அனறெனில் நின் சொல்லெல்லாம் லோகத்துக்கு விரோதமாகும். என்னை? புத்தனென்னும் பெயரும், தத்பிரதிமையும், புத்தனாகிய நீயும் லோகத்து இல்லை யாதல்வேண்டும்; இல்லையாகவே பௌத்த சமய மென்பதொன்றில்லையா மாதலின், ஆத்மா நாஸ்தித்வவாதம் இல்லை யாமாதலில் என்பது. அவையுள வெனில் சர்வம் அநாத்மாவென்பது பெறப்படாதாம்; யான ஆத்மாவல்லேன்; பஞ்சஸ்கந்த பிண்டம் என்பாயெனில், தெங்கேறி இளநீரிடுவுழித் தெங்கிற்குடையான், 'தெங்கேறினார் யாவர்?' என்ன, 'யானொரு மட்டை' என்னுமாதனைபோல நீயும் ஆத்மாவென்னும் பெயரை யொழித்துப் பஞ்சஸ்கந்த பிண்டமென வேறொரு பெயரிட்டு வழங்கினை யாம். ஆதலால், நாமாதிகளுண்மையில் ஜீவத்திரவ்யத்தினதுண்மை யின்றல் மறுக்கப்படாதென்றவாறு. (கCஅ)

571 அறியும் மெய்ம்மை யும்மைங்கந் தம்மாட் சியுமல்ல[3](வையுஞ்)
சிறிதும் மென்முன் னிலையின்மை காட்டிச் சிதைத்தே னினிப்
பிறிதொன் றுண்டே லுரைய்யென வுரைத்தாள் புத்தன் றன்பெரிதும்
மெறிபட் டென்னெ றியினூலே யடக்கு வன்னி னையுமென்றான்.

(இ - ள்.) சத்ய சதுஷ்டயமும், பஞ்சஸ்கந்தமும், மற்று க்ஷணிகபிரவிருத்தி முதலானவையுந் தூஷித்து நீக்கினேன்; மற்று நீ வல்லதுண்டேற் சொல்லென்று நீலகேசியார் சொல்ல, புத்தன் மிகவுங் கோபித்து எனது மார்க்க நியாயத்தால் நினது கர்வமெல்லா மடக்குவே னென்று சொன்னானென்றவாறு. (கOக)

### வேறு

572 ஆதி யலாத வகன்றடு மாற்றமுஞ்
சாதி யறுக்குந் தகையு மிவையென
வோதி வினைப்பயத் தொப்புரைப் பார்க்கன்றி
நீதி யிலாநெறி நேரல னென்றாள்.

(இ - ள்.) அநாதியாகிய ஸம்ஸார மோக்ஷங்கள் ஸம்பவிக்கு மாறும், ஸம்ஸாரத்தைப் போக்குவதாகிய ஸன்மார்க்காநுஷ்டானம் ஸம்பவிக்குமாறு மிவ்வாறென்று கூறிக் கர்ம பலங்களுக்கு ஸம்பந்தஞ் சொல்லுவார்க்கன்றி, க்ஷணிக

---

1 தன்னைத் தானறியும் காட்சி. 2 பேச்சு முதலான.
3 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

வாதியாகலி னவை சொல்லமாட்டாத நினது துன்மார்க்கத்திற்கு நான் அகப்படு வேனோ வென்று சொன்னானென்றவாறு. (கக0)

573 வித்தின் வழிவழித் தோன்றும் முளைகிளை
சத்தியி னுபசந் தானத்தை மாற்றென்பன்
[1]வெத்தவ வித்தினின் வேறன்று வீடிது
தத்துவ மாக்கொ டளிரிய லாயே.

(இ - ள் ) பீஜத்தின வழி அங்குரம், அங்குரத்தின் வழி கிளை முதலாயி னவுமாய்ச் செல்லுகின்ற இந்த சந்தானத்தை ஸம்ஸார மென்பேன்; வெந்த வித்துப் போல முளையாது விடுதலை வீடென்பேன்; இதனைத் தத்துவமாகப் புத்தி பண்ணுவாயாக வென்று சொன்னா னென்றவாறு. (ககக)

574 வினையு முளது பயனு முளது
தினைபனைத் தாயினுஞ் செய்ஞனு மில்லை
பெனையவுங் கநத மிருகண நில்லா
நினையினமற் றென்று னெறிபயந் தானே.

(இ - ள்) கர்மமுளது, பலமுமுளது, கர்மத்தைச் செய்வானும் பலத்தைப் புஜிப்பானுமாகிய ஜீவனில்லை; எல்லாப் பொருளும் க்ஷணத்தே நசிக்குமென்று சுகதன் சொன்னா னென்றவாறு.

[2]"காரகோணகிரிரூ...அவிஂஜஉ" என்பதனால் ஜீவனில்லை யெனபதும, [3]"க்ஷணாஊர்த்வம் நதிஷ்ஂடந்தி" என்பதனால் க்ஷணவிநாசமுமறிக. (ககஉ)

575 குணம்பொரு ளென்றி கொடைபொரு ளென்றி
புணர்ந்துசெய் துண்பா னொருவனி லென்றி
கணந்தனி லேநிலை கநதமு மாயக்காற்
பிணங்குவ தொக்குநின் பேரெமக் கென்றாள்.

(இ - ள்.) விரத சீலானுஷ்டானாதி குணங்க ளன்றென்றும், தானம் பண்ணுதலன்றென்றும் சொல்லுதி; அவற்றையும், அவற்றைச் செய்யும் கிரமத்தையுமறிந்து, அவற்றைச்செய்து, அவற்றின் பலங்களை அனுபவிப்பானொரு ஆத்மனில்லையென்று சொல்லுதி; சகல பதார்த்தங்களும் உத்பத்தி க்ஷணத்திலே நசிக்குமென்று சொல்லுதி. இவ்வாறு சொல்வாயானால் நினது புத்தனென்னு நாமம் என்னோடு பிணங்குவது போலு மென்றவாறு.

பிணங்குதலாவது - புத்தனென்னும் சப்தத்திற்குப் பொருளறிந்தானென் பதாம். இவ்வாறு அயுக்தஞ் சொல்கின்ற உன்னைப் புத்தனென்று வழங்குதல்

1 வெத்த - வெந்த; வலித்தல் விகாரம்.

2 காரகோணகிரியாஅவிஜ்ஜயி - செய்பவனும், பலமும் இல்லை.

3 க்ஷணாத் ஊர்த்வம் நதிஷ்டந்தி-ஒருக்ஷணத்திற்கு மேலேஇருப்பனவல்ல.

எனக்கு [1]விஷாத காரணமென்பது போந்தது. என்னை? அயுக்தஞ் சொன்னவா றெனில், [2]பீஜாங்குர முதலாயினபோலச் சித்தத்தின வழிச் சித்தம் பிறந்து செல்கின்ற சித்தவொழுங்கினை ஸம்ஸாரமெனறும், வெந்த வித்துப்போல மேற் சித்தம பிறவாது பொனறக் கெடுதல் மோக்ஷ மென்றும் சொல்லினையனறே; இந்த ஸம்ஸார மோக்ஷங்கள் யாதனுடையன? சித்தங்களுடையன வெனில் அழுகிதன்று; சித்தங்கள் பூர்வ க்ஷணத்துள்ளனவன்றி உத்பன்னமாய்த் தத்க்ஷ ணத்தே நசித்து மேற் பிறவாதனவற்றுக்கு ஸம்ஸாரமென்பதொன்று ஸம்ப வியாதாம்.

இனி, பந்தமானதற்கே முக்தியுமாதலி லவற்றுக்கு மோக்ஷமும் ஸம்ப வியாதாம். சித்தங்களுக்கு ஸம்ஸாரமாகில் முக்தி யாதனுடையதாம்? ஸம்ஸார மோக்ஷங்கள் ஒருவழிக் கிடத்தல் வேண்டுதலின், மோக்ஷமும் சித்தங்களுடைய வெனினும், அவை ஸம்ஸாரிகளாகி ஸங்மார்க்க மனுஷ்டித்து முக்தங்களாகில் க்ஷணவிநாசம் ஸம்பவியாதாம்.

[3]"அவாச் சார்ந்து பற்றுகும் பற்றினல் வினைமுதிர்வாந்
தவாதவிவ் வினைமுதிர்வாற் பிறப்பாகும் பிறப்பினற்
குவாவிய பிணிமூப்புச் சாக்காடின் கூட்டமா
யுபாயவித் தடுமாற்ற மொழிவின்றி யுருளுமே"

இவவாறாகிய ஸம்ஸார காரணங்களைச் செயது ஸம்ஸாரியாகி நைராத்ம பாவனை முதலாயின பாவித்துப் புத்ததர்ம மநுஷ்டித்து சக்தங்களாகை சித்தங்களுக்கு ஸம்பவியாமை அறிந்துகொள்க.

இனி, [4]ஸத்வப்ரஜ்ஞப்தியாகிய ஸந்தானபுத்கலனுக்கு ஸம்ஸார மோக்ஷங் கள் சொல்லினும் ஸந்தானபுத்கலனென்று நீ கொண்டது மோக்ஷபர்யந்தமாக நின்ற சித்தங்களை யன்றே. [5]"குழுவாகித் தடுமாறி யீறுவிடாவுடையா, னிவ னன்றோ வென வுரைத்தான்" என்பது நின்னோத்தாதலில், ஸந்தானபுத்கலனு கின்றதூஉம் அந்தச் சித்தங்களேயாம். ஸந்தானபுத்கலனுவது, - அச்சித்தங்களி யல்பாகப் பிறப்பது; பிறிதொன்று; [6]"கண்டனும்முயிர் யாவதென்றானாக் கந்தங் கள், கொண்டனவு மிறந்தனவுந் தோன்றுவவு மியல்பாகப், பண்டைத்தன் குற்றத்தாற் றடுமாறி வீட்டின்க, ணுண்டாக விடுவானெனம் முயிரெனப்படுவா னென்ப தெம்மோததாகலி னெனின், சித்தங்களில் [7]வியதிரிக்தனுகி, அநாதி யாக அவா முதலாகிய ஸம்ஸார காரணங்களை நிகழ்த்தி, ஸம்ஸார துக்கங்களை அனுபவித்து முக்தனுவனெனில், அவன் பரமார்த்த சத்தோ அல்லனோ? பர மார்த்த சத்தெனில், [8]"கற்பித்துக் கணமென்றெங் காலம் வேறில்லென்றான்"

---

1 விஷாத காரணம் - துக்ககாரணம. 2 பீஜாங்குரம் - வித்து, முளை.
3 கு. கே. ?
4 ஸத்வபிரஜ்ஞப்தி - உண்மையான அறிவு.
5 கு. கே. ? 6 கு. கே. ?
7 வியதிரிக்தன் - வேறுபட்டவன். 8 ?

[1]"மேலையெம் முயிர்தானும் வேண்டியவா றிதுவென்றான்" என்று [2]கல்பிதா தாவாகச் சொல்லியதூஉம், [3]"உணர்வதியா தெனவுரைத்தாளுணர்வென வெதிர் மொழிந்தான்" எனவும், [4]"ஆசையா லுடம்பளவிற் றுயிரென்பாயாமையிற், கேசத்தாற் கயிறிடுதி கெடுகநின் னுரையென்றான்" எனவும், [5]"கருத்தினுற் சீவனைச் சுருக்காக வுணர்தியேற், சுவர்க்கத்துத் தண்ணீரோ" எனவும் இவ் வாறு ஆத்மநாஸ்தித்வஞ் சொன்னதூஉம் அஸம்பந்த பிரலாபமாம்.

இனி, பரமார்த்த சத்தல்லன் லோகவிவகாரம்பற்றிக் கல்பித்துக் கொள்ளப் பட்டானெனில், [6]வந்த்யைக்கு ஒரு புத்திரனைக் கல்பித்து அவனுக்கு [7]வாக்ய பாடவ முதலாகிய குணங்களை வர்ணிக்கவும் அமையும். அவ்வாறே ஒரு ஆத் மனைப் பெறினும் அதுவும் [8]க்ஷணவிநச்வா மாதலின் அதற்கும் ஸம்ஸாரகாரண நிகழ்த்துதலும, ஸம்ஸார பந்தனுதலும், மோக்ஷித்தலும் ஸம்பவியாதாம். ஆத லாற், "பிணங்குவதொக்கு நின்பெய" ரென்று சொன்னுரென்றவாறு. (கசங)

576 தீதுள்ள மேலது தீயுழப் பேசெய்யும்
யாதுள்ள மாண்புள மேவின்ப மாமென்னை
மாதுளம பீசமுண் மாணரக் கின்னிறம்
போதுள்ளங் காண்பது போலமற் றென்றான்.

(இ - ள்.) இதனுற் கர்மபல ஸம்பந்த மாமாறு சொல்லுகின்றான். உள்ளம் யாதொன்று தீதாகில் ஸந்தானத்துத் துக்கத்தைப் பண்ணும்; உள்ளம் மாட்சிமை யுடைய வுள்ளமாகில், சந்தானத்துச் சுகத்தைப் பண்ணும்; எங்ஙனமெனில், ஒரு மாதுளை வித்தில் காராக்கும், ஒரு மாதுளை வித்தில் செவ்வரக்கும் பூசிப் பூமியுள்ளிடத் தத்சந்தானமாகிய பூவிற் கருமையுஞ் செம்மையுமான நிறம் தோன்றியவாறுபோல வென்ற னென்றவாறு. (கசச)

577 [9]எட்டினியன்ற விரண்டினு ளாங்கவை
யட்ட வரத்தமு மல்லது மாய்ப்பய
மட்டார் மலர்க்கண்ணுஞ் செம்மையு மற்றுமா
விட்டமுங் காட்டுவ னீங்கிது போல.

(இ - ள்.) முன் பவன் சொல்லியவாறு விரித்தது. (கசரு

578 ஐந்தி னியன்றவர்[10]பிண்டத்த ராகிய
மைந்த ரிருவர் குசலா குசலத்தர்

---

1 ?
2 கல்பிதாதா - கற்பனையான ஆத்மா. 3 ?
4 ? 5 ?
6 வந்த்யை - மலடி. 7 வாக்யபாடவம் - வசனசாமர்த்தியம்.
8 க்ஷணவிநச்வரம் - க்ஷணவிநாசம்.
9 எட்டினியன்ற இரண்டினுள் - அஷ்டக பிண்டமாகிய வித்திரண்டில்.
10 பிண்டத்தாாகிய - ஸ்கந்த பிண்டத்தாாகிய.

சிந்தையி னல்லவன் றன்வழித் தேவனும்
வெந்தொழி லான்வழி வீறி னரகனும்.

(இ - ள்.) அஷ்டக பிண்டமாகிய விததிரண்டிற் செவ்வரக்குக் கூட்டப்பட்ட வித்தின்வழிச் செம்பூவுங் காரரக்குக் கூட்டப்பட்ட வித்தின் வழிக் கரும்பூவுந் தோன்றியவாறுபோலப் பஞ்ச ஸ்கந்தமாகிய புருஷர் இருவருள் குசல சித்த முடையான் வழி சுவர்க்கத்துத் தேவனும், அகுசல சித்தமுடையான்வழி நரகத்தொரு நரகனுமாய்த் தோன்று மெனறவாறு. (கககூ)

579 பீச மெனப்பட்ட தெட்டே பிறிதங் [1]கொன்
றுசொன்று மில்லைய வைந்திற்கு மன்னது
நீசொன்ன வாறிது நேருந திறமென்னை
யேசுவன் கேள்யா னெடுத்தினி யென்றாள்.

(இ - ள்.) பீஜமென்று சொல்லப்பட்டது அஷ்டக பிண்டமொழியப் பிறிதொன்றுமில்லை. [2]தாஷ்டாந்திகமாகிய புருஷ பிண்டமும், பஞ்ச ஸ்கந்த பிண்டமொழியப் பிறி தொன்று மில்லை. இவ்வழி நான சொல்லுங் குற்றங்கள் கேளென்று சொன்னா ளென்றவாறு. (ககஎ)

580 அயலரக கட்டக பீசமுண் டாங்கு
[3]வியலகத் தைந்திற்கும் வேறொன்று காட்டாய்
குயலமு மல்லது மாயினன் றுகும்
மயல் [4]படைத் தாயொழி மாதுளங் காட்டல்.

(இ - ள்) அஷ்டக பிண்டமாகிய விதநுக்கள் தம்மில் அயலாகிய [5]லாக்ஷா ரஸாஷ்டகத்தோடு ஸம்பந்தமாதலில், தத்சந்தானத நுண்டாகிய புஷ்பததிற் செம்மை கருமை தோன்றுவது யுக்தம். புருஷ [6]வியபதேசம் பெற்ற பஞ்ச ஸ்கந்த பிண்டஙகளில் சம்பந்தித்தது பிறிதனமையில், தத்சந்தானத்துண்டாகிய பஞ்ச ஸ்கந்த பிண்டத்து, [7]"காரணாஸாவாக காய—ாஸாவ:" எனபத னால் சுகதுக்கங்கள் தோனறுவது கூடாதாம். குசலா குசல ஸம்ஸ்காரமுள தன்றோ வெனில், அது பஞ்ச ஸ்கந்த பிண்டத்து ளொன்றாதலில், [8]கேவல மாகிய பீஜாஷ்டக ஸந்தானத்தில் செம்மை, கருமை பெறப்படாதவாறுபோல, கேவல பஞ்சஸ்கந்த பிண்ட ஸந்தானத்துச் சுகதுக்கங்கள் ஸம்பவியாவாமாதலில் திருஷ்டாந்தத்தோடு தார்ஷ்டாந்திகம் பொருந்தாமையி லிந்தத் திருஷ்டாந் தத்தை யொழி என்றவாறு.

---

1 ஒனறு - பொருந்தும். 2 தாஷ்டாந்திகம் - உபமேயம்.
3 வியல் - பெருமை. 4 'படுத்தாய்' என்றும் பாடபேதம்.
5 லாக்ஷா - அரக்கு. 6 வியபதேசம - நாமம்.
7 காரணாபாவாத் கார்யாபாவ:-காரணமின்றிக் காரியமாகாது.
8 கேவலம் - தனி.

காரியசித்திக்கு வேண்டுவதல்லது, திருஷ்டாந்தத்து வந்தனவெல்லாம் தார்ஷ்டாந்திகத்து வருகவென னும் நியம முண்டோவெனில், மாதுலிங்க பீஜாஷ்டக சந்தானத்துளதாகிய புஷ்பாஷ்டகத்து வர்ணபேதம் பீஜாஷ்டகத்துளொன்றாலன்றிப் பிறிதாகிய லாக்ஷாரசத்தால் வந்தது. புருஷ வியபதேசம் பெற்ற பஞ்சஸ்கந்தபிண்ட ஸந்தானத் துளதாகிய பஞ்சஸ்கந்த பிண்டத்துச் சுகாதிக்குப் பிறிதொரு காரண மின்மையிற் காரிய சித்திக்கு வேண்டுவதில்லை யாதலில் திருஷ்டாந்த தார்ஷ்டாந்திகம் பொருத்த மில்லையாம். (கக அ)

581 பூவின்கட் காட்டல் பெருநாதா தன்வழி
[1]மாவின்க ணாக மகன்செய் வினைப்பயன்
தேவன்கட் போலத திருந்திய மாதுளஞ்
சாவின்கட் செய்கையுஞ் சாவிகளைத் தாயே.

(இ - ள்.) மனுஷ்ய சந்தானத்தொரு பிண்டத்துளதாகிய [2]குசலகிரியாபலம் தேவசந்தானத்தொரு பிண்டத்துத் தோனறுமாயி விதற்கு மாதுலிங்க பீஜத்துப் பூசிய லாக்ஷாரச காரியம் தத்ஸந்தானமாகிய புஷ்பாஷ்டகத்துத் தோனறுதலினிது திருஷ்டாந்தமாகாது. அன்றியும் மாதுலிங்க பீஜஸந்தானம் புஷ்பிக்கு மளவும் சாவாதொழியினன்றே லாக்ஷாரஸ காரியந் தோன்றுவது; சாவிற்றோன்றாது; மக்கட் சந்தானத்தொரு பிண்டத்து வினைப்பயன் தத்ஸந்தான நாசத்தல்லது தோனறாமையின் திருஷ்டாந்த மாகாதென்பது. (ககக)

582 வித்தொடு பூவின்கண் வேற்றுமை காட்டினுந்
துத்தல் குழவி கிழவன்கட் சொல்லென்பன்
பித்துடை யார்போற் பிதற்றி வினைப்பய
மெத்திறத் தின்னு மியைத்துரைக் கில்லாய்.

(இ - ள்.) வித்திலிடப்பட்ட லாக்ஷாரஸ காரியம் புஷ்பத்திற்றோன்றியவாறுபோல மக்கட் சந்தானத்து வினை தேவசந்தானத்துப் பலித்தலால் திருஷ்டாந்தமாம், பேதமுண்மையினெனில், மக்கட் சநதானத்துக் குழவிப் பருவத்துச் செய்தது தத்சந்தானத்துக் கிழவனாகிய பருவத்துப் பலிக்கிலிது திருஷ்டாந்தமாம், ஏகசந்தான பேத மாதலி னென்பது. ஆதலாற் கர்மபல சம்பந்த முனக்குச் சொல்லுத லரிதென்றவாறு. (கஉ0)

583 அங்குரந் தன்கண்ணுஞ் செல்லா தாக்கொடு
மங்கின பீசத் துருவ மலரின்கட்
டங்கின வென்னுஞ்சொற் றத்துவ மாக்கொண்ட
வங்குலி மாரனை யாதன்மற் றென்னாய்.

---

1 மா மரணம்.
2 குசலகிரியா - நல்லொழுக்கம்.

(இ - ள்) வித்திலூட்டப்பட்ட லாக்ஷா ரஸம் கையற நசித்தலில் அங்குரத்தின் கண்ணுங் காணப்படாதவிது புஷ்பத்துக் காரியஞ் செய்ததென்பது கேட்டு நின் தத்துவங்கொண்ட [1]அங்குலிமாரனை [2]அபோத்தா வென்று நீயே சொல்லா யென்றவாறு.

என்னை அவன் அபோத்தாவாயினவாறெனில், கையறக் கெட்ட லாக்ஷா ரஸமும், புண்ணியபாப கர்மங்களும் சிலநாட் கிடந்து காரியஞ் செய்யில் கையறக் கெட்ட அவித்யாராகாதியுங் கையறக் கெட்ட ஸ்கந்தனும் பின்பு தோன்றல் வேண்டுமென்றே வென்று கேளாது நீ சொல்லியது கேட்டலினென்பது. கேடிருவகைத்துப் பயன்செய்தற் குரித்தாகக் கெடுவதூஉம், பயன் செய்யாது பொன்றக் கெடுதலுமென. [3]"கெட்டதோர் பயன்றோன்றுதென்றியேற் பயக் குரித்தாய்க் கெட்டது" எனவும், [4]"பொனறக்கே டின்மையாற் பொருள் வழிப் பொருள் தோன்று" மெனவுஞ் சொல்லுதலிற், பயன்செய்தற் குரித்தாய்க் கெட்டதெனில், நன்று சொல்லினை! முன்னொருநாண் மரித்துப் போயினு ளொரு மகடே வின்றொரு புத்திரற் பெற்றாளென்றானைப் பேதாயிது கூடுமோ வென்றார்க்கு, இன்று புத்திரற் பெறுதற்குரியளாகி யன்றிறந்தா ளென்றோர் ஆதன் கூறியதே போலும், பயக்குரித்தாய்க் கெட்டதென்று நீ சொல்லிய தென்பது.

> [5]" பண்டே யிறந்தாளோர் பைங்தொடி யின்றொரு
> மிண்டனைப் பெற்றா ளனலொக்கும்—பண்டுசெய்
> நல்வினையுந் தீவினையுங் கெட்டன வின்றுதம்
> பல்பயன் செய்யு மெனல்."

அன்றியும் காரியந்தோன்றக் கெடுகின்ற பொருள்கள் பொன்றக் கெட்டப் பொரு ளோபாதி கெட்ட தோவில்லையோ? கெட்டதெனிற் பொன்றக் கெட்ட புத்தனைப்போல மேற் காரியம் செய்யாதாம். அவ்வாறு கெட்டதில்லை யெனிற் பொருள் கெடுதலுங் கெடாமையுமாய் நித்யாநித்யாத்மகமாம். அங்குலிமார னென்பானொருவன் வித்தை சாதிப்பதுடையனாய் அதற்கு ஆயிரம் விரல்தேட வேண்டி, அதற்கு இரண்டு குறைய ஆயிரம் விரல்தேடி இதற்குத் தன் மாதா வின் விரலிரண்டுங் குறைக்கப்புக, அவண் புத்தனுர் சென்று அவனைத் தார்மிக னுக்கித் தவம்படுத்தா ரென்றவாறு. (கஉக)

584 அப்படி யாலரக் காமது போன்மெனிற்
றப்புடை யானுழப் பெய்வழித் தங்குத
றப்புடை யான்சுர னுகிய வன்றுய்க்க
விப்படி யாயினீ யென்றுரை யாயோ.

---

1 அங்குலி மாரன் - வி. கு. காண்க.
2 அபோத்தா - அறிவில்லாதவன்.
3 ? 4 ?
5 ? from Jaina source ?

(இ - ள்.) வித்திலூட்டப்பட்ட வரக்கின் நிறமே பூவிலும் வந்ததேபோலுங் கர்மங்களும், பலமும் எனில், தலைசிரைத்தன் முதலாகிய தவம்பண்ணினன் ஜன்மாந்தரத்து மத் தவம் பண்ணுதல்வேண்டும். அஃதன்றியவன் சுரலோகத்து விஷயசுகம் அனுபவிக்கிலிது திருஷ்டாந்தமாகாது; இதற்கென் சொல்லுதி சொல்லா யென்றவாறு. (கஉஉ)

585 எம்மை யுவப்ப வினைவழித் துப்பெனிற்
செம்மை வழியது தீஞ்சுவை யென்றில்லை
யெம்மை வினைவினை யாக்குநின் பூவுரை
யிமமையோ டும்மை யிவையிலை யாலோ.

(இ - ள்.) எம்மை விரும்புவித்தற்காகக் கர்மத்தின் வழி பல மென்று சொல்லுதி யாயினு மதற்குத் திருஷ்டாந்தமாவது - செம்மை வழித் தீஞ்சுவை பிறப்பதொன்றும்; அஃதன்றிச் செம்மையே திருஷ்டாந்தமாகக் காட்டிலது [1]பிரஸ்துததுக்குத் திருஷ்டாந்த மாகாதாதலில், இஹலோகத்துக் கர்மஞ் செய்தலும், பரலோகத்துப் பலம் அனுபவிததலும் நினக்குப் பொருந்தாதென்ற வாறு. (கஉரு)

586 உண்டது போலு முறுபயன் பன்மலர்
கண்டது காரண மாகக் கருதினு
மண்டையா மான்றசை மீன்றடி தோன்றிய
வண்டுணை வாகலு மாமத னாலே.

(இ - ள்.) வித்திலூட்டப்பட்ட அரக்கினது நிறம் பல பூக்களுன் பலகாலும் வந்தவாறு போலச் சில செய்கையால் பல பயமாமென்று சொல்லினும் சாக்கியன் தபசு பண்ணுகின்ற காலத்து ஒரு மண்டையா லிரந்துண்டானுயினும் ஜன்மாந் தரத்து ஆயிரம் மண்டையாலிரந்துண்டலும், ஒரு மான்றசை தின்றா னுயிர மான்றசை தின்றலும், ஒரு மாசத்துக் கொருகாற் றலை சிரைத்தானுயிரக் காற் றலை சிரைத்தலும் வேண்டும். ஆதலாற் செம்மை வழித் தீஞ்சுவை யல்லது செம்மை வழிச் செம்மை பலங் காட்டுதல் திருஷ்டாந்த மாகாதென்றவாறு.

'ஆண்'டென்பது, விகார வகையால், 'அண்' டென நின்றது. (கஉசு)

587 தீயுழப் பேசெயுந் தீவினை யென்பது
[2]வாயுழப் பாம்வழி யேபுகுந் தாயினி
நோயுழப் பாகிய நுஞ்செய்கை யாவையும்
நீயுழப் பாய்பிறர்க் கேயுழந் தாயால்.

(இ - ள்.) பாபகர்மம் துக்கத்தைப் பண்ணுமென்று சொல்லுதியாயி லது தத்துவமாம். நீ யொரு ஜன்மத்துத் தலை யரிந்து கொடுத்த பாபத்தாற் பிறி

1 பிரஸ்துதம் - எடுத்துக் கொண்ட விஷயம்.

2 வாய் - மெய்; 'வாய்மை' என்பது மைகீறு கெட்டு நின்றது.

தொரு ஜன்மத்து உடம்பு பிளப்புண்டனை; உடம்பு பிளந்த பாப பலத்தால் பிறிதொரு ஜன்மத்தே உயிருடனே யிருந்து அல்பம் அல்பமாகச் சேதிக்கப் பட்டனை; தத்பலத்தாற் பிறிதொரு ஜன்மத்து ரக்தபானம் பண்ணக் கொடுத் தனை; தத்பலத்தால் காடையாய்ப் பிறந்து வெந்து இறந்தனை. இவ்வாறு நீ ஒரு ஜன்மத்து, தானம் என்று நினைத்துச் செய்த பாபத்தாற் பிறிதொரு ஜன் மத்து, துக்கமுழந்தாயாயினை, பிறர்க்கே யுழந்த பேதாய் என்றவாறு.

தலையரிதன் முதலாயின பாபமாதலினன்றே நீ பிறிதொரு ஜன்மத்துத் துக்க முழப்பாயாயினை; தலையரிதன் முதலாயின தான் வேண்டிச் செய்தலிற் கர்மவச பிரவிருத்தியன்றெனில், தாம் வேண்டித் தலை யரிந்து கொள்வாரும், நான நிறப்பாரும், நஞ்சுதின் றிறப்பாரும், தீப்பாய்வாருமுதலாயினோருடைய பிரவிருத்தியன்றுமெனபது. தர்மங் காரணமாகச் செய்தலிற் கர்மவச பிர விருத்தி யனறெனி லிவரும் தர்மார்த்த காமங்களுளொன்று பற்றி யல்லது சாவாரெனறவாறு. (கஉரு)

598 உள்ளம் வினையென வோதினை யேற்செய்கை
யெள்ளின் றுணையுமஃ தின்மை யினைங்கெனக்
கொள்ளுந் திறமென்னை கூறாய் [1]குணந்தினிக்
கள்ளமல் லாலென்று மக் கட்டுரை யாயால்.

(இ - ள்.) குசலா குசல ஸம்ஸ்கார மென்பதூஉம் சித்தமே யன்றிச் சித் தத்தில் வியதிரிக்தமா யிருப்பதொன றில்லையாகில், பஞ்ச ஸ்கந்த மென்பது வியர்த்தப் பிரலாபமாம். இவ்வாறுகவும் சதுஸ்கந்த மென்பதன்றிப் பஞ்சஸ்கந்த மெனறு சொல்லுகின்றது கள்ளமாகு மெனறவாறு. (கஉசு)

589 நின்னுடை யுள்ளமுஞ் செய்கையு மொன்றெனிற்
றன்னிடை யெய்துந் தரும தருமிமற்
றென்னிடைக் கொண்டிலை யெங்குப்பெற் றாயிது
முன்னுடம் பாட்டின் முரணுள தாமால்.

(இ - ள்.) சித்தமுஞ் செய்கையு மொனறாய் வைத்து அவ்விரண்டும் பிரித் துப் பெறப்படாமையி லொனறென்பா யெனில், ஞானத்மாக்களும் பிரித்துப் பெறப்படாமையின் ஒனறாயினமையில் தர்ம தர்மிகளிரண்டு முளவாம். இது நினக்குப் பக்ஷமல்லாமையில் யாங்குப் பெற்றனை? நீ முன்பு ஞானமே யல்லது, ஞானவானில்லை யென்று சொல்லியதனோடு மாறுகொள்ளு மன்றே வென்ற வாறு.

குசலத்வ மென்பதொரு தர்மமாகவும், ஞானமாவ ததனை யுடையதோர் தர்மியாகவுஞ் சொல்லினை; அவ்வாறே ஞானத்மாக்களையுங் கொள்ளென்பது.

---

1 குணந்து - பெருக்கி.

590 சித்தமுஞ் செய்கையும் வேறென்றி யேயெனி
லொத்த வினையுடம் பாடின்றி யாமினித்
துத்த லையாதின் வழித்தெனச் சொல்லுதி
[1]யொத்திய வல்ல துரையலை யாயால்.

(இ - ள்.) சித்தமுஞ் செய்கையு மொன்றல்ல வேறெனில், சித்தத்தை யொழியச் செய்கை யுண்டாமாதலில் மனமொழிய வினையுண்டாவதாம். இனிச் செய்கை சித்தத்தில் வேறென்றெனில், அனுபவம் யாதுகாரணத்தால் வந்ததாம்? ஆதலால், அயுக்தமல்லது சொல்லா யென்றவாறு. (கஉஅ)

591 கண்டுணர்ந் தார்வத்தி னற்செய்கை யாதலை
யுண்டெனி னற்குண மொன்றினுக் கொட்டினை
பிண்டிநீழலவன் பேரறஞ் சார்தலிற்
கொண்டநின் கோளின்கட் குற்றமுண் டாமோ.

(இ - ள்.) நின்னைக் கண்டு நின் ஸ்வரூபத்தை யறிந்து நின்மேற் பத்தி செய்து நினக்குப் பூஜை முதலாயின செய்ய வேண்டுதலிற் காட்சி முதலாகிய குண நானகு மவற்றை யுடையானுமாகச் சித்தத்திலொரு பொருட்டு நாலு குணமிசைந்தா யாகுதி. இது, ஜைனர் வேண்டுவதல்லது நினக்குப் பக்ஷமன்றாயினுமிது கொண்டாயாயில், ஜைன தர்மத்தைக் கைக்கொள்ளுதலி லுனக்குக் குற்றமென்னோ வென்றவாறு. (கஉகூ)

592 விளைவத னல்வினை யாக்குமென் பார்சொ
லுளைவதிங் கென்செய வோவுணர் வில்லாய்
தளைபெய்து வைத்தென்னைத் தம்பொறி யெல்லா
மளைவது நன்றிது தானற மாமேல்.

(இ - ள்.) பயனால் வினையாமென்று சொல்லும் ஜைனவசனங் கேட்டு வெறுப்பதென்? பயனால் வினையாகாதாகில், காமசேவாதிகள் பயனுதலி லவற்றையுஞ் செய்யென்றவாறு. (கங0)

593 ஆர்வத்தி னல்வினை யாக்கு மெனச்சொல்லி
னார்வத்தைச் சித்தமென் றாருரைப் பாரினிச்
சேர்வித்த துப்பினிற் செய்கையு மாதலை
நேர்வித்த வாறது நீயறி யாயால்.

(இ - ள்.) விஷயானுபவனத்துக்கண் விஷயங்களிலே [2]காங்க்ஷையாயதனாலே கர்மங்களாமெனில், விஷய காங்க்ஷை குசலா குசல சித்தமின்றி யவற்றிற்

1 ஒத்திய - விலகிய.
2 காங்க்ஷை - பற்று.

குக் காரணமாகுமெனில், விஷய காங்க்ஷை பலாநுபவனத்துக் கர்மத்தை யாக்கு வதாமாகப் பயனால் வினையா மென்றவாறாயிற்று. (கஙுக)

594 உணர்வினை யார்வ மெனவுரைப் பாயேற்
புணரும் பிறர்கடம் பொற்றொடி யார்மே
லுணர்வன்ற தார்வ முழப்பெனச் சொல்லி
னிணர்பிரி யாத்துப்பி னால்வினை யென்றாய்.

(இ - ள்.) ஆர்வமாவதுணர்வெனில், பரஸ்திரீயை யுணர்ந்தமாத்திரத்தாலே பாபமாதல்வேண்டும். இனி, ஆர்வம் உழப்பெனில் பயனால் வினையாயிற்றாம். ()

595 சிதத முடைசசெய்கை செய்வினை யாதலிற்
சித்த முடைத்துப்புஞ் செய்வினை யாம்பிற
சித்தம் வினையெனச் செப்புத லாலெங்குச்
சித்தமுண் டவ்வழிச் செய்கையு முண்டே.

(இ - ள்.) மனசினோடு கூடிய செய்கை காமமாகில், மனசினோடு கூடிய அனுபவமுமொரு செய்கை விசேஷமாதலி லதுவும் கர்மமே யாதலிற் சித்தத் தோடு கூடிய பிரவிருத்தி யெல்லாம் கர்மமேயாமென்று கொள்ளென்பது. ()

596 செய்கையி னாற்றுப்பு மாக்கியத் துப்பினிற்
செய்கையு மாம்வகை செப்புவித் தேனினிப்
பொய்கைசெய் தேசொன்ன பூவொடு வித்துரை
வைகவென் றாண்மல ருண்கண் மடவாள்.

(இ - ள்.) ஒருகாற் செய்த கிருஷ்யாதி வியாபாரத்தின் பயனாகிய தான்ய முதலாயின, பிறிதொரு கிருஷ்யாதிக்குக் காரணமானவாறுபோல, வினையாற் பயனும், பயனால் வினையும் வருமாறு சொல்லினேனினி வித்தொடு பூக்கள் திருஷ்டாந்தமாகச் சொல்லுதல் விதி[illegible]வென்றவாறு.

வைக - வைக்க. (கஙுச)

597 இருவகைப் பீசத் தியல்வு மழித்தத
திருவகைத் தேவொடு பூவுஞ் சிதைத்தே
மருவகை யாய்நின் மதுரஞ்செய் மாவுந்
தருவனை யாயிற் றகரு மதுபோல்.

மருவகையாய் - மருவுதலுடையாய். தருவனையாயில் - கொடுவந்து திருஷ் டாந்தஞ் சொல்லில். (கஙுரு)

598 வலிசெய்து பீசத்தின் மாண்பு மழித்திட்
டலிசெய்து விட்டே னமையு மதன்மேற்

பலிசையி னீசொல்லும் பாடங்க ளெல்லா
நலிவசெனன் றென்று நடுவுணர்ந் தென்றாள்.

அலிசெய்துவிட்டேன் - அகிஞ்சித்கா மாக்கினேன். பலிசை - பலவாய்ப் பல்குதல். (கரு௬)

599 பிறந்தவப் பிண்டம வினையினோ டாஙகே
யிறந்தன வெத்திறத தின்னுமற் றென்றாற்
சிறந்தவத் தேவெய்திச் சேர்தலுஞ் [1]சீரா
தறஞ்செய் தருனு மவம்பிற வன்றே.

(இ - ள்.) உத்பன்னமாகிய பஞ்சஸ்கந்த பிண்டங்களெல்லாம் சர்வதா நசிக்கின்றனவாயில் அறஞ்செய்தான் தத்க்ஷணத்தே யொழிவறக் கெடுதலில் தேவலோகத்துச் சென்று இன்பமுறுதல் அருமையில் தர்மானுஷ்டானம் வியர்த்தமென்றவாறு. (கரு௭)

600 உரந்தனை யாது மொடுக்ககி லாகிச்
சுரந்தபல் குற்றஞ சொலக்கேட் டிருந்தான்
பரந்தினி நீசொன்ன பல்வழி யெல்லாங்
கரந்தனை போதலைக் காட்டுவன் கேணீ.

(இ - ள்.) இவ்வாறு பல குற்றங்களுஞ் சொல்லக் கேட்டிருந்த சுகதன், அதற் குத்தரஞ் சொல்லக் கேளென்று சொன்ன னென்றவாறு. (கரு௮)

601 அரக்கொடு பீச மறக்கெட்ட வாற்றல்
கரப்பது போலிடைக் காண்பரி தாகி
மரத்திடை சென்று மலரின்கட் டோன்றிப்
பரக்குமென் றேன்பயம் பைந்தொடி யென்றான். (கரு௯)

602 அன்னணஞ் செய்தா னறங்கேட் டவன்வழித்
துன்னுஞ் சந்தானத் தொடர்ச்சி நிகழ்ச்சியிற்
பின்னை யதுபெறு மாதலின் யான்கண்ட
நன்னெறி நின்று னறிவரி தென்றான்.

(இ - ள்.) அரக்குக் கூட்டப்பட்ட வித்து அந்த அரக்குடனே யொழிவற நசிக்கவும் அதனதாற்றல் கரப்பது போலப் போந்து, மலரின்கட் டோன்றிய வாறுபோல கர்ம பந்தனுயினு னத்தோடு கையற நசித்தானே யெனினும், அவன் சந்தானத்துப் பிறன் பெறுவனுதலின் கின்னுமொரு குற்றமுஞ் சொல்லப்படாதென்று சொன்னு னென்றவாறு. (௬௰)

---

1 சீராது - நேராது.

603 கந்தங்க ளெல்லாங் கடையறக் கெட்டக்க
ணந்தமி லாக்குற்ற மாமென நீசொல்லுஞ்
சந்தங்க டம்முட் 1சவலைச் சந்தானமும்
வந்தஃ தெவன்செய்யும் வாமமற் றென்றாள்.

(இ - ள்.) பஞ்ச ஸ்கந்த பிண்டங்களெல்லாம் உற்பத்தி க்ஷணத்திலே ஒழிவறக் கெடுகின்றவாகில், வினை செய்தான பயன்றுய்த்தல் கூடாதென்பது முதலாகப் பல குற்றஞ் சொல்ல, ஸந்தானத்தே பலிக்குமென்று நீ சொல்லுதியன்றே; அந்த ஸந்தானங் கொண்ட தெற்றுக்கு? அஃதுண்டெனினும் வினை செய்தார்க்கன்றிப் பயன் பிறர்க்காமாயினென்று சொன்னா ளென்றவாறு. (கசக)

504 ஆற்ற மகன்கெட்ட போழ்தே யமரிற்
றோற்றமு மென்னை துடித விமானத்து
ளேற்ற தவத்தவன் றேவென லென்கொல்
சாற்றுஞ்சந் தானத்தைச் சந்தித்துக் காட்டாய்.

(இ - ள்.) தானாதியுந் தபசு மாற்றிய மகன் கையறக் கெட்ட வழிச் சுவர்க்க லோகத்துத் 2துடித விமானத்து அவன் தோற்றுமா றென்னை? தோற்றிலவ னொழிவறக் கெட்டிலனும். தபசு பண்ணியவன் அவ்வாறு கெட்டா னெனினும், அவன் வழிப் பிறனொருவன் சுவர்க்கத்துத் தோன்றில், தபசு பண்ணினவன் சுவர்க்கத்துத் தோன்றினா னெனபது சொல்லுமாறென்னை? நீ சொல்லும் சந்தானத்தை இவ்விடத்துச் சம்பந்தித்துக் காட்டிக்கா ணென்றவாறு. (கசஉ)

605 மக்க ளுடம்பொடு தேவ ருடம்பிடை
மிக்க விடம்பெரு வெள்ளிடை யாலிது
புக்க தொடர்வில்லை யாதலி னீகொண்ட
பக்க முடன்கெடு மாலென்னை பாவம்.

(இ - ள்.) தானாதிகளோடு கூடி யிறந்த மனுஷ்ய சரீரத்துடன் தத்பல போகத்தாவாகிய தேவ சரீரத்தளவும் வித்தோடு பூவிடை நின்ற 3சாகா ஸந்தானம் போல நின்றதொன் றின்மையின், மனுஷ்ய சரீரத்து நின்றதொன்று தேவ சரீரத்துச் சென்ற தென்றதொரு தொடர்ச்சியின்மையில் நின்பாப சித்தாந்தங் கெடுதற் கென் சொல்லுதி யென்றவாறு. (கசங)

606 புளிபொறி வாழ்நிழ றண்மதி யின்ன
தெளிவுள தாஞ்செல வின்முடி வெண்ணில்
விளிபவ னுளபொழு தேவினை துய்க்கு
மொளிகிளர் தேவ னுளனென்னு மாறே.

---

1 சவலை - பலனுடைய.

2 துடித விமானம் - துடிதமென்ற தேவலோக விமானம்.

3 சாகாஸந்தானம் - மரத்தொடர்ச்சி.

(இ - ள்) மனுஷ்ய சரீரத்து நின்றுந் தேவ சரீரத்துச் சென்றதொன்றில்லை யெனினுஞ் செல்லாச்செல வென்பதொன்று வேண்டுதலிற் சென்றதாகக் கோடல்வேண்டும்; என் போலவோவெனில், புளியும் வேம்பும் முதலாயின வொருவழி யிருக்க, அந்த ரஸம் வாயுள் வருதலும், ஒருவழி யிருந்து யந்திர முறுக்க வது சேறலும், கண்ணடியுள் முகஞ் சேறலும் [1]பயோகடத்துச் சந்திர மண்டலஞ் சேறலு மினனவென்றதனு லொரு வழி யிருந்தோதிய மந்திரஞ் சேறலும் போலவெனிற், புளி முதலாயின உண்டான காலத்தே செலவுண்டானவாறுபோல தானுதி பயின்ற மனுஷ்யனுளனுய் நின்றபொழுதே தேவ லோகத்து இவன்வழி யொரு தேவன் பிறக்க வேண்டுமாதலி னிறந்த பின் பிறத்தற்கிவை திருஷ்டாந்த மாகாவென்றவாறு. (கசச)

607 சென்றில தேலிடை யற்றுழித் தோன்றுக
வென்றலு மிங்குள தோவது தானெனி
ன்றல பல்பொரு டாமொளி யாதிய
நின்றல வோவுல கெங்கு நிறைந்தே.

(இ - ள்) சந்திர பிம்பத்தினின்றும் ஜலத்திலே வந்ததொன்று மில்லையாயி லிடையந்தரத்துக் கூரை முதலாயினவற்றால் மறைத்த வழியும் ஜலத்தினிழல் தோன்றவேண்டு மென்றார்க்கு, சந்திர பிம்பம் ஜலத்து வந்ததாயின் ஜலத்துக் கையிட்டுத் துழாவினுலுங் காணவேண்டுமெனில், ஒளி முதலாகிய புத்கலங்களுள ; அவற்றுள் சாயாபுத்கல மென்பதொன்று சந்திர மண்டலத்திற்றொட்டு ஜலத்தளவும் வந்ததன்றோ வென்றார்க்கு சாயாபுத்கல மெவ்வழியதென்னில், லோகத்து எங்கும் ஸம்பூர்ணமாய் நின்றதன்றோ வென்றவாறு. (கசரு)

608 தண்மதி கெட்டதன் சாயை யுடன்பெற
லுண்மை யுண்டாயினி [2]ன்றுற்றுரை யொட்டுவன்
கண்மதி யாததெங் காரிய மேயின்ன
வெண்மதி யாயை விலக்குநர் யாரோ.

(இ - ள்) மனுஷ்யன்மரிக்க, அவன் வழித் தேவன் தோன்றுவதற்கு திருஷ்டாந்தமாவது சந்திர மண்டலம் அஸ்தமித்த வழி ஜலத்துட் சாயை தோன்றினனறே? அவ்வாறு தோன்றில் யானுமிசைகுவன் ; சந்திர மண்டலமும், முகமு முள்ளபொழுதல்லது சாயை பெற மாட்டாமையில், திருஷ்டாந்த மாகாதாயினு நின் பேதைமையாலிது கூறினை யென்றவாறு.

கண்மதியாத தென்பது - நீ யிது பொழுது கட்குடித்து மதியாதொழிந்த தெங்காரிய மென்றவாறு. [3]"கொலைகளவு கட்காமம் பொய்யெனக் கூறினன்" என்பதனுற் கள்ளும் நிஷேதித்தேனன்றோ வெனி னுலகங் கடிதலி னுலகத்துக்காகக் கடிந்தே னென்பதல்லது, மானஸிகமும், வாசிகமும், காயிகமு

1 பயோகடம் - ஜலக்குடம்.
2 'ஒத்துரை' என்றும் பாடபேதம். 3 கு. கே.

மாகிய பத்துவகைப் பாவங்களு ளொண்ணிற்றில்லை யன்றே. அன்றியும், 1"மையலுற்ற மகனன்ன தெய்தலன்" என்று நீ சொல்லுதலாற் கட்குடித்து மயங்கினான் செய்த சகல பாபங்களு முள்ள மில்லாமையிற் பலியாதென்றனை யன்றே; அன்றியு முயிரின்மையில் 2விடக்கு மண்ணோடொக்கு மென்று நினைகின்ற நினக்கு உயிரின்மையிற், கள்ளு நீரோடொக்குமென்று குடித்த விற் குற்றமென்னோ? 3'நாவினுள் வைத்த தசைபய னல்லதி, யாவினை யூட்டிய" தென நீ மாம்ச முண்டல் புண்ணிய பலமென்று சொல்லுதலாற் கள்ளுண்டு களித்து மயங்குவதூஉம் புண்ணிய பலமன்றோ? அன்றியும் மஹாயான மந்திரயானங்களுட் கட்குடித்தல் தர்மமாகக் கூறினையன்றோ?

4கள்ள தாத லதுகுடிப் பேனென்னு
முள்ள வுண்மை யதுவுண்டே லென்றிவை
யெள்ள லின்றி யியைந்த வியைவரோ
கள்ளை யுண்ட களிநீர்மை யாவதே."

என்பதனால் நீ கள்விலக்கினவாறுதானு மிதுவன்றோ? ஆதலால் நீ கட்குடித்தல் நிஷேதித்தது வஞ்சனையேபோலு மாதலினின்னைக் கட்குடித்தல் விலக்கல்வல்லார் யாவருமில்லை யென்றவாறு. (௧௬௬)

609 மதியென்று மில்லெனி னில்லொளி தானும்
புதியதும் பாழது பொன்றிய போழ்தே
கதியினை நாட்டிய காட்டி யெமக்கிங்
கதுவென்னை சொல்லிய வாறுரை யாத்தா.

(இ-ள்) சந்திரமண்டல சாயைகள் திருஷ்டாந்த மன்மை காட்டும், 'புதியதும், பாழதும் பொன்றியபோழ்தே' என்பது. புதிதாகிய தேவபிண்டமும், கெடும் மனுஷ்ய பிண்டமும் கெட்ட பொழுதாதலின். மனுஷ்ய பிண்டமுள்ள பொழுதுள்ளதாகிய தேவபிண்டம் மனுஷ்ய பிண்ட நாசத்து நசிக்கல்வேண்டுமென்றவாறு. (௧௬௭)

610 அடியொடு பூவி னிடையற வின்றி
நெடியதோர் கொம்பினை நீமறந் தாயோ
மடியிலார் செய்த மானுயர் தெய்வப்
படியிது வென்றிடை பாழ்செய் திட் டாயால்.

(இ-ள்) வித்திலிடப்பட்ட லாக்ஷாரசம் பூவிற் பலித்தது, அடிதொடங்கிப் பூவளவும் சாகை நிற்றலா லன்றோ? அது மறந்தாயோ? மனுஷ்யனோடு தேவனிடை, இடையறவு செய்து வெளியாக்கினை யென்றவாறு. (௧௬௮)

1 கு. கே? 2 விடக்கு - மாம்ஸம்.
3 கு. கே? 4 கு. கே?

611 தோற்ற மிடையற வில்லாத் தொடர்ச்சியைச்
சாற்றுதும் யாமுஞ்சந் தான மெனவெனிற்
காற்றுஞ் சுடருங் கரகத்துட் டாரையு
மேற்றன வல்ல விரண்டுண்மை யாலே.

(இ - ள்) பஞ்சஸ்கந்த பிண்டங்க ளிடையறவின்றித் தோன்றுந் தொடர்ச்சியை ஸந்தான மென்றேன். வாயுஸந்தானமே, தீபஸந்தானமே, தாராஸந்தானமே, நதிப்ரவாஹ ஸந்தானமே, பிபீலிகா ஸந்தானமே யென்றிவைபோல வெனி லது பொருந்தாது; அவை பல வுண்மையில், ஒன்றேயொன்றி யைந்து ஸந்தானமாகலால், இங்கொன்றுள்ளகாலங் தோனறினமையில். சந்தான மென்ப தினமையி லெனறவாறு. (கசக)

612 பித்தொடு சனவிடைப் பேயின் மயங்குநர்க்
கொதத வுணர்வுண்மை யொட்டல தென்செய
தத்துவ மாயசந் தான முளதெனிற்
புத்தநின் சொற்கள் பொருளில வேயால்.

(இ - ள்) அநாதி வரலாற்றதாகிய மோக்ஷ பர்யந்தமாக நின்ற ஸம்ஸாரத்து ஸந்தான மென்பதொன் றிடையறாது நின்றதுளதாயிற் பித்த முதலாயினவற்றால் மயங்கினருழையு மந்தச் சித்தசந்தான முளதாகல் வேண்டும்; உளதாகவே, அனுபவ சித்தமாகிய விஷய [1]பரிசித்த முதலாயின [2]பிரஸன்னவஸ்தையிற் போல மூர்ச்சாவஸ்தையிலும் பெறவேண்டு மது பெறப்படாமையின், மூர்ச்சாவஸ்தையிலுணர் வுண்மை யிசையாதொழிவ தெற்றுக்கு? இசைவா யெனின, லோகம் ஸாக்ஷியாக மூர்ச்சிததானுழை ஞானப் பிரவிருத்தி யினமையி னின வாக்கியம் நிரர்த்தகமாம்; இனி யிசையா தொழியினும் நின்வாக்கியம் நிரர்த்தகமாம்; எனனை? மூர்ச்சிதத வழிச் சந்தான மிடையறுதலின், மேன மூர்ச்சை நீங்கிச் சித்தம் பிறத்தற்குக் காரண மின்மையி னெனபது. மூர்ச்சாவஸ்தையில் சிதத ஸந்தான மாழ்நது கிடந்த தென்பாயெனில், சநதானமாவது, ஒரு சிதத்ங்கெட ஒரு சிததந தோன்றி வருவதன்றே? சித்தப் பிரவிருததி யில்லாத வழிச் சந்தானமு மின்மை யினது கூடாதென்பது. (கரு௦)

613 மூத்தல் வகையு முதலத னம்மையு
மாத்த கணந்தோ றலர்ந்த நிகழ்ச்சியுஞ்
சாத்திரத் தாலத் [3]தவிரன்கட் டாழ்ச்சியும்
போத்தந்து காட்டுந் திறமென்னை புத்தா.

(இ - ள்.) பஞ்ச ஸ்கந்த பிண்டமாகிய பாலன கிரமத்தாலே மூதது விருததனாதலும், அவனுழைப் பஞ்ச ஸ்கநதங்கள் கிரமததாலே வளர்தலும், அவை

---

1 பரிசித்தம் - உணர்ச்சி. 2 பிரஸன்னவஸ்தை - ஜாக்கிரம்.
3 தவிரன் - விருத்தன்.

தாமே விருத்தனுய வழிச் சக்தி குன்றித தாழ்தலும் நிரம்ச க்ஷணிகத்துக் கூறு மாறு காட்டுவாயாக வென்றவாறு. (கறுக)

614 கப்பம் பலபல கண்ணிமை யானுக்குத்
துப்பு முறைத்தென்னை தோன்றிய வக்கணத்
தொக்க விளைவுரைப் பாய்பின் வழிவழிச்
செப்புதி யேற்செய்கை சென்றுசென் றுண்டே.

(இ - ள்) தானுதியும், தபசும் பண்ணி யிறந்தான் வழிச் சுவர்க்க லோகத்துத் தோனறிய தேவன் தத்க்ஷணததே நஷ்டனென்று சொல்லுவாய்; அவன் பல கல்பகாலம் சுகமனுபவிப்பனென்று சொல்லிய தென்னை யென்முர்க்கு, பிரதம முத்பன்னனுகிய அவன் தத்க்ஷணத்தே நஷ்டனுனே யெனினும் அவன் வழிவழி அநேக சித்தங்கடோன்றி நெடுங் காலம் அனுபவிக்கு மென் பா யாயில் வழிவழித தோன்றுகின்ற சித்தங்கள் யாதனுடைய காரியம்? தேவ லோகததுப் பிரதமமுத்பன்னமாகிய சித்தததின் காரியமெனில்,பயனின் வழிப் பயனுகச் செய்கை வழிப் பயனன்ருய் ஒருநாளும் ஸ்வர்க்கததினின்றும் வழுவு தல் கூடாதாம். நல்வினை செய் திறக்கின்ருனது அந்திய சித்தத்தின் கார்யம் தேவ சிததங்களெனலு மாகாது, ஏகசித்தம் அநேக கார்யம் செய்தல் கூடாதாத லால். கூடினும் வழுவுதல் கூடாதாம்.

இனி, தேவலோகத்துச் சென்று இன்புறுகின்ற சித்தங்களெல்லாம் செய்கை வழித தோன்றின வாயில் சித்தந் தோறு மோரோர் செய்கைச் சித்தமுளதாகல் வேண்டும். அஃதின்மையின் அயுக்தஞ் சொல்லுகின்ருயா மென்ற வாறு. இதனுல் சில சித்தங்கள் வினை செய்யச் சில சித்தங்கள் பயனுய்க்கு மென்றறகட் குற்றங் கூறப்பட்டதா மென்பது. (கறுஉ)

615 காரண மென்னினுஞ் சென்றின்மை யாலில்லை
யேரண தேவ [1]விழுதைமை சொல்லுதி
[2]யூருணி நீர்நிறை வுண்டோ வுறுபுனல்
வாரண வாய்க்கால் வரவில்லை யாக்கால்.

(இ - ள்.) நல்வினை செய் திறந்தானது நல்வினைச் சித்தங்கள் தேவ சித தங்களுக்குக் காரணமா மெனினு மவை நெடுங்கால முன்னுடைததாக நஷ்ட மாதலில், கார்ய மாகிய தேவ சித்தங்க ளுள வாகா; வாய்க்காலால் வானீர் புகு தாத வழிக் குள நிறைத லுளதோ? நீ அயுக்தமே சொல்லுதி யென்றவாறு.
ஏரணதேவ - இளந் தவசிகள்; ஸ்வாமி. (கறுங

616 நில்லா தறக்கெடுந் தோன்றிற்றுந் தோற்றமு
மெல்லா வகையினு மில்லதற் கேலில்லை

1 இழுதை - அயுக்தம். 2 குளம்.

சொல்லாய் தொடர்ச்சி தொடர்ச்சியென் றேநின்று
பல்லார் களையும் படுத்துண்ணும் பண்பா.

(இ - ள்.) உத்பன்னமாகிய சித்தம் தத்க்ஷணத்தே யெவ்விடத்து மெக்காலத்து மெவ்வகையானு மின்றிக் கையற நசித்ததாயில் க்ஷணிகமாம். நசித்தது நசியாததாயில் அது நினக்குப் பக்ஷமன்றாம். இனி, மேற்றோனறுவதூஉ மெவ்விடத்து மெக்காலத்து மெவ்வகையானு மில்லாதாயி னதற்குத் தோற்ற மில்லையாம். ஓரிடத் தொருகாலத தோரியல்பா னுள்ளது பிறிதோரிடத்துப் பிறிதொரு காலதுப் பிறிதொரு தன்மையாற் றோற்றுதல் தோற்ற மென்பா யெனில், வஸ்துவினுக்கு அதயந்த நாசமின்றி நாசா நாசாதமக மாகி, அஃது னக்குப் பக்ஷமனறாம். ஆதலால், ஒரு சித்தம் கையற நசித்தலும், பிறிதொரு சித்த மில்லாதது தோன்றுதலும் ஸம்பவியாமையில் சந்தான மென்பதொன் றில்லை ; உளதாயிற சொல்லாய். சந்தானம் சந்தானமென்றொன்று சொல்லிப் பலரையும் [1]விப்ரலம்பிக்கின்ற [2]துச்சீலனே யென்றவாறு. (கருச)

617 சுடருடைத் தோற்றத் தொடர்ச்சியைச் சொல்லி
யிடருடைத் தாக விவையிவை காட்டி
யடர்படுத் திட்டாட் கதற்கொன்று நாடிச்
[3]சடருடை வாசனை சாதிக்க லுற்றான்.

(இ - ள்.) சநதான சத்பாவம் காட்டுதற்கு பிரதீபஜ்வாலை க்ஷணந் தோறுங் கெடுமாறுந் தோற்றுமாறு மதனது [4]நைரந்தர்யததா லது ஒன்றாய்த் தோன்றுமாறுஞ் சொல்லிக் காட்ட, அவனிடர்ப்படுமா றிவை யிவை யென்று பல குற்றங் காட்டி யடர்த்தாளாக, அதற்குப் பிறிதொன்று விசாரித்துச் சட ராகிய பூர்வ பௌத்தர் சொல்லும் வாசனை சாதிக்கலுற்ற னெனறவாறு.

இடருடைததாகப் பல குற்றங் காட்டுதலாவது - நின் சித்த க்ஷணங்கள் கையற நசிக்கப் பிறிதொனறு தோன்றுமாறுபோல பிரதீபஜ்வாலை நிரன்வயமாகக் கெடப் பிறிதொரு ஜ்வாலை [5]தீபாக்ரததுத தோன்றுகின்றமை யில்லை ; உளதெனில், விளக்கிற்கு அவித லெனபதொன்றுளதாகா தனறே? சித்த சநதானம்போல வொழுக்கறாது நெடுகச் செல்ல வேண்டு மென்றார்க்குச் சித தங்களுளொனறு பொன்றக் கெட்டால் மேற் சிததம் பிறவாதவாறுபோல பிரதீப ஜ்வாலையுளொன்று பொன்றக் கெட்டால் மேல் ஜ்வாலை பிற வாது ; [6]"பொனறக்கே டின்மையாற் பொருள்வழிப் பொருடோன்று" மென்ப தென்னேததாகலி னெனில், நன்று சொல்லினை! பூர்வ ஜ்வாலை பொனறக் கெட்டதில்லை யெனவே கெட்டதூஉங் கெடாததூஉமாய் நித்யாநித்யாதமகமாய் நின்றமை பெறுதலில், பிரதீபம் நினக்குத் திருஷ்டாந்தமாகா தென்பது முதலாயின. (கருரு)

---

1 விப்ரலம்பம் - மோசம். 2 துச்சீலன் - ஒழுக்கமற்றவன்.
3 சடர் - வஞ்சனையுள்ள புத்தர். 4 நைரந்தர்யம் - இடையற்றது.
5 தீபாக்ரம் - சுடர்நுனி. 6 கு. கே?

618 கெட்டபி னூற்றல்க ளெல்லாம் வழியதற்
கொட்டு நறுமலர் வாசமோ டோட்டின்கட்
சுட்டுவ தொப்ப வெனச்சொல்லு நீகண்ட
விட்ட மிவற்றோ டியையல தென்றாள்.

(இ - ள்.) ஒரு சித்தங் கெட அதன் கண்ணுண்டாகிய சக்தி முதலாயின வெல்லாம் மேற் பிறந்த சித்தத்து வரும். பாதிரிப்பூக் கெட அதனது கந்தம் ஓட்டில் வந்தவாறுபோல வென்று சொல்லி லது நின் பக்ஷத்தோடு பொருந்தா தென்று சொன்னா ளென்றவாறு. (கஙகு)

619 முன்னைய துள்ள பொழுதத்து மற்றதன்
பின்னைய தில்லை யதுபெற்ற போழ்து
தன்னையு மில்லை யெனச்சொல்லின் வாசனை
யென்னை யியையுந் திறமிவை தானே.

(இ - ள்.) பூர்வ சித்த முள்ள காலத்து உத்தர சித்தமில்லை; உத்தர சித்த முள்ள காலத்துப் பூர்வ சித்தமில்லை யென்றுஞ் சொல்லுவாய்க்கு வாசனை யென்பதொன்று பொருந்தா தென்றவாறு. (கஙள)

620 ஓடு மலரு மொருங்குள வாதலிற்
கூடும வாசமுங் குற்றமொன் றில்லெனிற்
கேடும் பிறப்பு முடனில்லை யாதலிற்
கூடல வென்பது கூறின மன்றே.

(இ - ள்.) புத்தோடும் புஷ்பமு மொருகாலத் துண்மையிற் புஷ்ப கந்தம் ஓட்டில் வருவது கூடும். பூர்வோத்தர சித்த மொருகாலத் தின்மையில் வாசனை சம்பவியாதென்பது முன்னுஞ் சொன்னோ மென்றவாறு. (கஙஅ)

621 கெடுவத னுண்ணின்று தோன்றுவ தன்கண்
வடுவறச் செல்வது வாசனை யென்னப்
படுவதொன் றன்றுநின் பக்கத்தை யெல்லாஞ்
சுடுவதோர் கொள்ளி சுவடித்த வாறே.

(இ - ள்.) பூர்வ சித்தத் துள்ள தொன்று உத்தர சித்தத்து வருமெனவே பூர்வ சித்தங் கையறக் கெட்டதில்லை யாதலில் நீ வாசனை யென்று சொல்லு கின்றது கெடுதலுங் கெடாமையுமாகி, நித்தியாநித்தியாத்மகமாய் ஜைன சித் தாந்தத்தை விளக்கி நினது க்ஷணிக வாதத்தை தகிப்பதோர் அக்கினி ஜ்வாலை தோன்றியவாறே போலுமாதலி னது வாசனை யென்று நின்றாற் சொல்லப் படாதென்றவாறு. (கஙக)

622 போதின்க ணின்றும்புத் தோட்டிற் பொருந்திய
தாதின நாற்றந்தண் ணீருக்குச் சொல்லுதி
யோதின கந்த முடன்கெடின் வாசனை
யாதினதாகு மறிந்துரை யேழாய்.

(இ - ள்.) புஷ்பகந்த மோடு முதலாயினவற்று வந்தவாறு போல ஒரு சித்தத்துளதாகிய வாசனை மேன்மேலுள்ள சித்தங்களுள் வருமாயிற் பூர்வ சித்தங் கையறக் கெட்டதில்லையாம். கையறக் கெடில் வாசனையும் அதனோடு கூடக் கெடுமாதலின் வாசனையென்று நீ சொல்லுகின்றது யாதனுடையதாம்? சொல்லா யென்றவாறு. (கசுO)

623 வாசனை வாசனை யென்று வழிவழி
நீசொன்ன நீசொன்ன நோவதிங் கென்செய்ய
[1]பாசன மாகிய பாதிரிப் பூவினைப்
பூசின தெப்பொருள் போத்தந்து காட்டாய்.

(இ - ள்.) வாசனையென்று நீ சொல்லிய திசையவேண்டுவதில்லை. புஷ்ப கந்தம் ஸ்வபாவத்தால் வந்தவாறுபோலக் குசலாகுசலாதி விகாரம் சித்தத்திற்கு ஸ்வபாவமாக வருமென்று சொல்லலுமா மென்றவாறு. (கசுக)

624 பூவின்கட் கேடும்புத் தோட்டின்கட் டோன்றியு
மேவிய வாசனை யெங்குமுண் டாமெனிற்
சோபனமாக [2]சுவாகதம் போந்ததென்
றேவன் றிருந்தடி சிந்திமற் றென்றாள்.

(இ - ள்.) புஷ்பகந்தம், புத்தோடு முதலாயினவற்றுச் செல்லுமாறு போல, ஒரு சித்தத்துக் குசலாகுசலாதி விகாரம், வாசனைமேற் பிறக்குஞ் சித்தந்தோறும் செல்லுமென்று சொல்லுவாயெனில், நித்தியாநித்தியாத்மகம் பொருளென்று கொண்டாயாகுதி; இனி ஜிநேந்திரனே தேவதை யென்று சிந்திப்பதுஞ் செய் யென்றவாறு. (கசுஉ)

625 அதற்கு மறக்கே டுளதெனில் வாச
மதற்குமுண் டாயினி யெல்லையன் றேடு
மிதற்கெண்ணு மில்லெனி னில்லை யதற்கு
முதற்சொன்ன குற்ற முடிந்தன வாமே.

(இ - ள்.) முன்சொன்ன குற்றம் பரிகரித்தற்காகச் சித்தங் கெடுகின்ற பொழுதே தத்வாசனையுங் கெடும்; கெடவும் அந்த வாசனைக்கண்ணுள்ளதோர் வாசனை மேன்மேற் செல்லு மென்னிலு மதற்குமிக் குற்ற மொத்தலிற் பிறி

1 பாசனம் - மட்பாண்டம். 2 சுவாகதம் - வரவேற்பு.

தொரு வாசனை கற்பிக்கவேண்டும்; இவ்வாறு கற்பிக்கில் அநவஸ்தையாம்; இனி வாசனைக்கு வாசனை கல்பியோமெனில், வாசனை யென்பதொன்றில்லை யாதலில் - வாசனை கெடாதே வந்து நித்யாநித்யாத்மகத்வம் வருதல்செய்யு மாதலின் முனைசொன்ன குற்றந் தீராதா மென்றவாறு. (கசுங)

626 சென்றதென் றுலதன் கேடின்மை யாஞ்செல
வின்றதென் றுலத னுற்றமு மில்லற்க
நன்றிதென் றேசொல்ல நல்லது நாமறிந்
தன்றிதென் றென்முனே யாருரைக் கிற்பார்.

(இ - ள்.) ஒரு சித்தத் துளதாகிய வாசனை சித்தநதோறும் மென்மேற் செல்லில் நித்யதவமாம். அன்றியும் பூர்வமுளதாகிய மிதயாத்வ வாசனையு மிப்பொழுது நினக்குளதாக வேண்டும். இனி வாசனை - மேனமேற் செல்லா தாகில் பூர்வசித்த விருத்தி உததரசித்தத்துத தோன்றுதாம். (கசுச)

627 கேடது தான்முழு தாதலி னீசொல்லும
வீடது வாகலும் வேண்டும் விழுததவம்
கூடு பவர்க்குங் குணமில் லவர்க்கு
நீடல தேயுள தாநிரு வாணம.

(இ - ள்.) க்ஷணநதோறும் கெடுகினற சித்தங்கள் சிறிது நிற்கச் சிறிது கெடுகின்றனவோ? நிரவசேஷமாகக் கெடுகின்றனவோ? சிறிது நிற்கக்கெடில், நித்யாநித்யாத்மகமாம்; நிரவசேஷமாகக் கெடுமெனில், கெடுகின்றதுதான் மேற் பிறக்குமோ பிறவாதோ? பிறக்குமெனில், நிரவசேஷமாகக் கெட்ட தில்லையாம்; மேற்பிறவாதெனில், அந்தச் சித்த முக்தமாயிற்றும். இவ்வாறு சம்சார காலத்துள்ள சர்வசித்தங்களும் க்ஷணநதோறும் மோக்ஷிகின்றனவாத லில், தபசு பண்ணுகின்றாருடைய சர்வசித்தங்களும், பஞ்சபாதகாதி செய் கின்றாருடைய சர்வசிததங்களும் க்ஷணந்தோறும் மோக்ஷிக்கின்றனவாதலில் மோக்ஷம் சர்வ சாதாரணமாதலில் தர்மானுஷ்டானமும் விபலமாய்ச் சம்சார மென்பதொன்றிலதா மென்றவாறு. (கசுரு)

628 தோற்றம் வழியென்று சொல்லுத லாற்றடு
மாற்ற மதுவிதன் மார்க்கத்து மாண்பெனச்
சாற்றுதி யேலுஞ் [1]சவறது வாதலைத்
தேற்றுவன் கேணீ தெருண்டிருந் தென்றாள்.

(இ - ள்.) ஒரு சித்தத்தின் வழி ஒரு சித்தந் தோன்றுதலே ஸம்ஸார மாவதென்று சொல்லுதி யாயி லங்கு வருங் குற்றங் கேளென்றவாறு. (கசுசு)

---

1 சவறு - குற்றம்.

629 தன்வழித் தோற்றிக் கெடுமோ வதுகெடப்
பின்வழித் தோற்றம் பெறுமோ விரண்டனு
ளென்வழித் தோற்றமஃ தாமா றிருளற
நின்வழித் தோற்றத்தை நீயுரை யென்றாள்.

(இ - ள்.) ஒரு சித்தத்தின் வழிப் பிறிதொரு சித்தந் தோன்றுகின்ற வழிப் பூர்வசித்தம் உத்தர சித்தத்தைப் பிறப்பித்துக் கெடுமோ? பூர்வசித்தங் கெட்ட பின் உத்தர சித்தம் பிறக்குமோ? எனனை? சித்தம் பிறக்குமா றதனை நீ சொல்லா யென்றவாறு. (கஉஎ)

630 வழியொன்று தோற்றிக் கெடுமேன் மகப்பெற்
றழிகின் றவள்போ லிணைவுள தாகு
மொழிகின்ற தேயது காணல தென்னிற்
கழிகின்ற கன்னிக்கோர் [1] காதலற் காட்டாய்.

(இ - ள்.) உத்தர சித்தத்தைத் தோற்றுவித்துப் பூர்வ சித்தங் கெடில் பூர் வோத்தர சித்தங்களுக்கு ஸம்பந்த முளதாய் க்ஷணாந்தரத்து நின்றதாம்; பூர்வ சித்தங் கெட்டதாயின் மேற் பிறப்பிக்க மாட்டாதாம்; பிறப்பிக்கில், மரித் தாளொரு கன்னிகை ஒரு புத்திரனைப் பிறப்பிக்கவேண்டும். இவ்வாறாகவும் ஒரு சித்தம் கெட்ட அனந்தரத்தே பிறத்தலால் அது பிறப்பித்ததாமெனில், புத்தனது அந்திய சித்தம் நசித்த அனந்தரத்தே ஒரு சித்தம் நரகத்துப் பிறக் கில், அந்திய சித்தம் பிறிதொரு சித்தத்தைப் பிறப்பித்ததாகி ஸம்ஸார சித்த மாம். இனி நரகத்துப் பிறந்த சித்தம் பிறிதொரு சந்தானத்துச் சித்தமன்றோ வெனிலும், ஒரு சித்தம் கெட ஒரு சித்தம் தோன்றுதல் மாத்திரையே ஸம் ஸார மென்றலாலு மொன்றோடொன்று சம்பந்த மில்லாமைக்கு இரண்டு மொத்தலிற் றூனென்றும், பிறிதென்றும் பெறப்படாமையிலும் புத்தன ஸம் சாரியே யாமென்றவாறு. (கஉஅ)

631 பிறப்பித்துக் கேடும்பின் றோற்றக் கெடலும்
இறப்பவும் [2]கூடா திருதிறத் தானுந்
துறப்பித்த வாறிது தூவெனக் கேட்டை
மறப்பித் துரைத்ததுண் டோசொல்லு வாம.

(இ - ள்.) பிறப்பித்துக் கெடு மென்பதூஉம், பிறப்பதன்முன் கெடு மென் பதூஉம் அயுக்த மாமாறு சொன்னோ மாதலில், சர்வநாச மில்லை யென்பது சொன்னோம்; நின்னை யொளித்துச் சொல்லியதுண்டோ வென்றவாறு.
தூவென - தூய்தாக. (கஉகூ)

---

1 காதலன் - புத்திரன்.

2 'கூடாது' என்பதை இரண்டிடத்தும் கூட்டுக.

632 சுலாப்பல சொல்லிச் சுழன்று விடாதே
துலாத்தலைத் தூக்கமு மோக்கமுங் காட்டி
நிலாத்தலை யல்லா விரண்டுமொன் றுண்டா
யிலாத்தலை யில்லே லமைவது மன்றே.

(இ - ள்.) பல சுலாவுரைகளுஞ் சொல்லி யலமந்து பின்பும் விடாதே துலாதண்டத்தின் தலையிரண்டினு மொன்றினுக்குத் தாழ்வாவது வொழிந்த தலையினது எழுச்சி யன்றே; இவை யிரண்டு மொருகாலத்து நிகழ்ந்தவாறு போல பூர்வோத்தர சித்தங்களினுடைய நாசோத்பத்தி யொரு காலத்து நிகழு மெனில், இரண்டு தலையும் ஒரு காலத்தே யுளவாதலி னொன்றின்தாழ் வொன்றி னேற்றமாதல் கூடு மிது காரண காரிய ரூபத்தால்; ஒரு சித்த முள காலத்து ஒழிந்த சித்த மில்லை யாதலி னித்துலா தண்டத் தலைகள் திருஷ்டாந்த மாகா வென்றவாறு.

சுலாவுரை பல சொல்லுதலாவது :—

1"இறந்தது காரணமே வில்லதனாற் பிறப்பில்லை
இறந்தின்று காரணமே வியைந்துள தென்றாளா
விறந்ததற்கும் பிறந்ததற்கும் காலமொன் றாதலைச்
சிறந்துணர்வு முறக்கத்தின் றீர்வுமே யுரையாரோ"

என்று சொல்லுதலால், இனி 2நித்ரா விரஹமும், 3பிரபோதோத்பத்தியு மொரு காலத்து நிகழ்ந்தவாறுபோல பூர்வாபர சித்தங்களுடைய விநாசோத்பத்தியு மொரு காலத்து நிகழுமெனில், சித்தங்களுக்கு விநாசோத்பத்தி ஒரு காலத்து நிகழினும், உத் பன்னமான க்ஷணத்தே நசிப்பினும் ஏகக்ஷணத்தே பூர்வாபர சித்தங்கள் உளவாம். அன்றியும் காரண காரியமாகிய பூர்வாபர சித் தங்களுக்குக் காரண காரிய மல்லாத நித்ரா பிரபோதங்கள் திருஷ்டாந்த மாகா; காரண விநாசமுங் காரி யோத்பத்தியும் ஒரு காலத்து நிகழ்ந்தன உளவாயிற் காட்டு; உணர் வுணர்வின் காரியமாவதல்லது உறக்கத்தின் காரியமாமோ? கடவிநாசமுங் 4கபாலோத்பத்தியுங் காட்டில், கடத்தின் மண் கபாலத்திலும் வருதலினது ஒழிவறக் கெடாமையினால் திருஷ்டாந்த மாகாதென்பது.

இனி, நித்ரா பிரபோதங்கள் போல பூர்வாபர சித்தங்கள் விருத்த மல் லாமையில் திருஷ்டாந்தமாகா வெனச் சுலாவுரை விட்டுத் துலாதண்டஞ் சொன்னா னென்பது. (௬௩௦)

633 இல்லதற் கேயில்லை கேடென்னை காக்கையின்
பல்லதற் கோதார் பருமையு நுண்மையுஞ்
சொல்லிதற் காவதுண் டேலெனச் சொல்லினை
ணல்லதற் கல்லது நாப்பெய ராதாள்.

---

1 கு. கே. 2 நித்ரா விரஹம் - தூக்கம் நீங்குதல்.
3 பிரபோதோத்பத்தி - அறிவெழுதல்; விழித்தல். 4 கபாலம் - ஓடு.

(இ - ள்.) இல்லாததற்கு விநாசோத்பத்திகளில்லை, காக்கைப் பல்லுக்குப் பருமையும், நுண்மையுஞ் சொல்லப்படாதவாறுபோல. இதற் குத்தர முளதாயிற் சொல்லென்று சொன்னாள், நல்லதல்லது சொல்லாதா ளென்றவாறு. (கஎக)

634 துலாமில்லை யட்டக மேயது தானு
மிலாமிரு பாற்றலை யேதலை தாமு
நிலாம்வகை யில்லுயர் வோடிழி வெங்கும்
[1]கலாமவை யாய்க்கடை கண்டது பாழே.

(இ - ள்.) அஷ்டக மல்லது துலாமில்லை; இரண்டு தலையுமொழிய அஷ்டக பிண்டமாகிய துலாமில்லை; பணிவெழுச்சிக ளொழியத் தலையிரண்டு மில்லை. இவவாறு நின் பக்ஷமாயின் முடிவில் சூன்யமே கண்டதென்றவாறு.

635 ஓலை குளவி குருட்டெண்ணெய் வாணிச்சி
கோலஞ் சிதையுமென் றெண்ணெயட் டாளென்னும்
பாலகர் பாட்டுரை போன்றது மற்றுநின்
நூலுரை யெல்லா நுழைநதுணர் வார்க்கே.

(இ - ள்.) இந்தப் [2]பாலபிரலாபிதம்போலும் நின் சித்தாந்தம் என்றவாறு.

636 கோற்றிர ளொன்று யதன்றலைக் கேயுட
[3]னாற்றியு மோக்கமு நாட்டினை யஃதொப்பத்
தோற்றமுங் கேடுந் தொகுபிண்ட மொன்றிற்குச்
சாற்றுதி யாய்விடிற் றக்கதென் னேனே.

(இ - ள்.) துலாதண்ட மென்பதொன்று நிற்ப வதனது தலையிரண்டினுக் கும்பணிவெழுச்சி காட்டியது போல [4]உதபத்தி ஸ்திதி விநாசாதமகம் பொருளொன்று சொன்னா யெனில், தததுவஞான முடையை யென்று சொல்லுவ னென்றவாறு. (கஎச)

637 தலையன தாழ்ச்சியு மெழுச்சியு மன்றி
நிலையிலை கோலிடை நீக்கலு நீங்கு
மிலையென வெட்டி னிடுகுறி யொன்றினிற்
பலவினி யிங்குப் படுவன கேணீ.

(இ - ள்.) [5]அக்ரங்களது பணிவெழுச்சி யொழியக் கோலில்லை யெனில், பிரத்தியக்ஷ விரோதமாம், பணி வெழுச்சிகளி னீக்கிக் கோல் பெறப்படுதலில்.

---

1 கலாம் - பகை. 2 பால பிரலாபிதம் - குழந்தை உளறல்.

3 நாற்றி - தாழ்வு.

4 உத்பத்தி, ஸ்திதி, விநாசாத்மகம் - உத்பத்தி முதலிய மூன்று தன்மையு முடையது. 5 அக்ரம் - நுனி.

அஷ்டகமல்லது கோலில்லை யெனிற் பல குற்றமும்வரும். அவை அறியென்ற வாறு. (கஎரு)

638 கோலுந் தலையு முடனில்லை யாமெனின்
மேலு முரைத்தன மேயதன் மேற்பழி
வாலுந் தலையு நடுவு மவையின்றிப்
பாலும் படுவதோ ராவுள தென்னாய்.

இது விளங்கும். (கஎசு)

639 புணரிய தாமவை பொய்யெனச் சொன்னேற்
குணர்வதங் குண்மையு மொட்டுவை யாயிற்
குணகுணி யாயு மவயவி யாயும்
பிணபிணக் கெய்துமப் பேரிடர் செய்தாய்.

(இ - ள்) அஷ்டக மொழியத் துலாதண்டமில்லை யென்றற்கண் ணது போல அஷ்டக மொழிய நீ புணர்த்துச் சொல்கின்ற [1]சைத்யமுங் கடபடாதியுமான சகல பதார்த்தமும் பொய்யாகு மென்றேனுக, அஷ்டக மொழிய வவையு முண்டென வுணர்க்தொட்டுதியாயில் குண குணிகளு மவயவாவயவிகளு முளவாகி நின் சாஸ்திரம் குருவிப் பினனல்போல நினக்குப் பெரியதோர் துக்கஞ் செய்துகொண்டா யெனறவாறு. (கஎஎ)

640 இருபிண்ட முப்பிண்ட மெண்ணிரில்பல் பிண்டம்
வருபிண்ட மேற்பல மற்றவை நீங்க
வொருபிண்டங் [2]கொண்டாங் குயிர்க்குறு யிட்டுத்
திருவுண்ட செய்கையிற் செய்தவ னுக.

(இ - ள்.) பஞ்சஸ்கந்த மயமாகிய புருஷ பிண்டம் க்ஷணந்தோறுங் கையறக் கெட்டுப் புதிதாக மேன்மேற் பிறந்து வருதலில் இரண்டு முதற் பல வகைப்படும். அவற்றுள் ஒரு பிண்டத்தைப் புண்ணிய பாப கர்மகர்த்தாவாகச் சங்கல்பிதத்துக்கொண்டே னென்றவாறு. (கஎஅ)

வேறு

641 வினைசெய்தான் றுய்க்குமோ வேறொருவ னேயோ
வனைவரு மோவில்லை யோசொல்லா யோவென்னக்
[3]கனைகடலி னுண்மணலிற் கண்ணினையு மீந்தா
னினைவகைய கேளென் றெடுத்துரைக்க லுற்றுன்.

---

1 சைத்யம் - ஆலயம்.

2 கொண்டு - கொண்டேன்; உ - தன்மை யொருமை விகுதி.

3 "தொடுகடல் மணலும் பற்றுவெல்லைய" சிந்தாமணி-நாமகளிலம்பகம்.

(இ - ள்.) கர்மகர்த்தாவாயினுனே பல மனுபவிக்குமோ? அவனை யொழியப் பிறனொருவனோ? பிறனுமவனுமாகவோ? கர்மகர்த்தாவுக்குப் பலமில்லையோ? சொல்லப்படாதோ? வென்று நீலகேசியார் கேட்ப, ஸௌகதன் சொல்லலுற்றானென்றவாறு.

செய்தவனே பயன்பெறில் அக்ஷணிகமாம்; பிறனெனிற் செய்தாற்குப் பலனில்லையாம்; அவனும் பிறனுமெனில், ஒருவன் கர்மஞ் செய்ய தத்பலம் லோகமாகப் பெறவேண்டும்; பயனில்லையெனில், தர்மோபதேசம் பண்ணப்படாதாம். இதனையும் சொல்லிக்கொள்க. (கஎக)

642 அவனேயு மென்னேன் பிறனேயு மென்னே
னவனும் பிறனு மவரேயு மென்னே
னெவனேயு மெய்தா னெனலேயு மாகா
வெவனோ விதுதுப்பா னின்னணங்கே ளென்றான்.

(இ - ள்.) கர்மகர்த்தாவே பலம் பெறுவானென்றும், பிறனே பெறுவானென்றும், அவனும் பிறரும் பெறுவாரெனறும், கர்மகர்த்தாவுக்குப் பலமில்லையென்றும் சொல்லே னிவ்வாறு சொல்லுவன்கே ளென்றவாறு. (கஅ௦)

643 அதுவேயு மென்னேன் பிறிதேயு மென்னேன்
அதுவும் பிறிது மவையேயு மென்னே
னதுபொன்ற வல்ல ததன்வழியின் மற்றொன்
றிதுபோல வென்பே னெடுத்துரையுங் கேணீ.

(இ - ள்.) அஃறிணைவாய்ப்பாட்டாற் கர்மகர்த்தாவை யொப்பித்துக் கர்மகர்த்தா வனழுக்கிக் கர்மகர்த்தாவின் வழித் தோன்றிய பிறிதொன்று பயன் பெறுமதற்குத் திருஷ்டாந்தமுங் கேளென்று சொன்னா னென்றவாறு. (கஅக)

644 இடுபீச மன்று விறுங்காதி யன்றால்
வடுவாய வவ்விரண்டும் வந்தனவு மன்றால்
நெடிதாய தீங்கரும்பு நெல்லுமே போல
நடுவாக நோக்காய் நறுநுதலா யென்ன.

(இ - ள்.) இட்டவித்து மன்றாகி, அதனின் வேறாகிய சோளமுதலாயினவுமன்றி, அவ்விரண்டுமாய் வந்ததுமன்றி, நெல்லின்வழித் தோன்றிய நெல்லும், கரும்பின்வழித் தோன்றிய கரும்பும்போலக் கர்மகர்த்தாவின் வழித தோனறிய பலபோக்தாவை மதயமரூபத்தாற் புததிபண்ணுவாயாக வென்று சொன்னா னென்றவாறு. (கஅஉ)

645 ஆத்தாவ தன்றேற் பிறிதா மரும்பெற
னுத்தான் வருத்தநீ நாட்டியதியாங் காணேன்

போத்தாகா தேற்குதிரை பெட்டையது போலென்
[1]சாத்தாகு மாகாமை சாதிக்க வல்லையோ.

(இ - ள்.) பல போக்தாவாகிய புருஷ பிண்டம் கர்மகர்த்தாவாகிய வது வன்றாயிற் பிறிதொன்றாமாதலின், நீ வெகுபிரகாரத்தாற் சொல்லியதிலொரு பொருள் கண்டிலேன்; முன்பு நின்றதொரு குதிரை போததல்லவாயிற் பெட்டையாமதுபோல. இனி மத்திமரூபததாற்காண்டலாவது சர்வதா கர்மகர்த்தாவு மன்றிப் பிறிதுமன்றி யிருப்பதொன்றெனில், அது ஜைனர் சொல்லும் ஸ்யாதவாதமாம். என்னை? கர்மகர்த்தாவாகிய ஜீவனே பல போக்தாவாதலின், ஒருவகையாற் றானுகியும், கர்ததிருத்துவாதி அவஸ்தைகளை [2]பரித்யஜித்து, போக்திருத்துவாதி அவஸ்தைகளை பஜித்து நாமாதிகளால் பேதிதது நிற்ற லால் ஒருவகையால் பிறிதாகியும் கர்மபல சமபந்தம் வருதலினெனபது. இவ வாறாகாமை கர்மபல சம்பந்தம் ஸாதிக்கவல்லையோ வென்றவாறு. (கஅரு)

வேறு

646 அவன்பெற லானு மவனன்மை யானு
மவன்றன் வழியா னவனுத லானு
மவன்றான் பிறனே யவனென்ற லானு
மவன்றான் பிறனே யெனவழிவ துண்டோ.

(இ - ள்.) கர்மகர்த்தாவை யொக்கும் பல போக்தாவெனபது முதலாக இக்காதையுட் சொல்லின வெல்லாம் கர்மகர்த்தாவில் அன்னியன் பல போக்தா வென்றற்கு ஞாபகமாதலிற் செய்தவனுக்குப் பலமின்றி யவன்வழித் தோன்றி யவனே டொப்பானெரு பிறனுக்குத் தர்மானுஷ்டானம் பலமாமெனறவாறு.

வேறு

647 கண்போலக் கயலெனினுங் காடன்றித் தூறெனினும்
பெண்பாலாற் பல்கியு மெல்லாம் பிறவேயாம்.

இதுவும் கர்ததாவோடு பல போக்தாவுக்கு வேற்றுமை முடிக்கும். (கஅ௬)

வேறு

648 அயலானே துய்க்கு மவன்றுவ்வா னென்பாய்
முயலானு மில்லான் முகஞ்சிறிதே யொப்பான்
வயலாமை போல்வதோர் மக்குளி யிலானென்
றியலா தனவே யெடுத்துரைத்தி யென்றாள்.

(இ - ள்.) கர்மகர்த்தாவுக்குப் பலமில்லை; அயலானே அநுபவிப்பனெனில், நடுவு நீ சொல்லிய வெல்லா மென்னும் முடிந்ததென்று ஹாஸ்யஞ் செய்த வாறு. மக்குளி - கூன். (கஅ௬)

---

1 சாத்-ஸ்யாத்வாதம். 2 பரிதயஜித்து.

649 அயற்பிறனு மல்ல னவன்ருனு மல்லன்
புயற்[1]றி றலைங் கூந்தலிதன் போலப் பிறனுக்கேல்
முயற்பிறவி மேயினீர் முன்செய்தா னங்கோர்
பயப்பெறுவ தில்லையேற் பாழ்பயனி தென்றே.

(இ - ள்.) கர்மகர்த்தா பல போக்தாவில் விஜாதியனுகிப் பின்னனுய் ஞனு மல்லன ; கர்மகர்த்தாதானு மல்லன் ; கர்ம காத்தாவைப் போல்வானேர் அன்னிய னெனில், முயலாய்ப் பிறந்து தர்மோபதேசம் பண்ணி தத்பலத்தால் புதததவம் பெற்றீர், காம கர்த்தா வாயினனை பலபோக்தாவாகானுயி லவண போலும் பிறன பலம்பெற் றென் பெருதென னெனறவாறு.

முயற் பிறவி மேயினீ ரென்பதன் கருத்து - முயலாய்ப் பிறந்த காலத்து அனுஷ்டித்த தர்ம பலம் தத விஜாதியமாகிய [2]சௌதத்தொதநியாகி அநுபவிததீ ரென்பது. (கஅஎ)

650 தற்பிறிதே யாகிப் பிறபிறிது தானல்லா
நெற்பிறிது போன்மெனவு நீயுரைத்தா யஃதொழிந்து
சொற்பிறிது சொன்னுய் சுவர்க்கத் தவர்க்குரைப்
பிற்பிறனே யாகிப் பெறப்பிறனே யாகாதே.

(இ - ள்.) தன்னினததுப் பிறிதாகி வேற்றினத்துப் பிறிதன்ருகிய நெல் லைப் பல போக்தாவுக்குத திருஷ்டாநதமாகக் கூறினு யதுவானுல், மனுஷ்யன் தர்மஞ் செய்ய வேற்றினத்து பின்னனுகிய தேவன் அனுபவிக்கப் பெருன ; பெறில், வேற்றினதது பின்ன பலம் அனுபவித்தானும். ஆதலால், ஸ்வவசன விரோதஞ் சொனனு யாகுதி யென்றவாறு. (கஅஅ)

651 நெல்லின் வழிக்கரும்பு நீள்கரும்பி னுனெல்லுஞ்
சொல்லுநீ சொல்லாயேற் சொல்லியநின் சொல்லெய்தா
வல்லனுய்ச் செய்த மகன்வழியி னுன்மகன்ரு
னல்லனுய்ச் சொல்லின் னுலங் கருவாமே.

(இ - ள்.) தாஷ்டாநதிகமாகிய மனுஷ்ய தேவர்கட்குத் திருஷ்டாந்தம் நெல்லின்வழிக் கரும்பும், கரும்பின்வழி நெல்லும் சொல்லுவாயாக ; சொல் லாயாயில் அயுக்தமாகச் சொல்லினு யென்றவாறு. (கஅக)

652 செய்தானுஞ் செய்தானே துப்பானுந் துப்பானே
யிஃதாலென் மெய்ம்மை கிடந்தவா றென்ருனுக்
கெய்தார் [3]பிறவோ விருசார் விணைப்பயனுஞ்
செய்தார்க டாமெனலுஞ் சிந்தித் திருந்தானுல்.

---

1 திறல் - பகை. 2 சௌதத்தொதநி - புததன.
3 பிற - அசை.

(இ - ள்.) செய்தானோடு துய்த்தானிடை சம்பந்த மில்லையா யிருவரும் அத்யந்தம் பின்னரே ; அது வாஸ்தவமென்று சொல்ல, புண்ணிய பாப கர்மங்கள் செய்தார்க்குப் பலமில்லையோ வெனறு சொல்லுதலும் சிந்தாகுலனு யிருந்தானாக வென்றவாறு. (கூ௧0)

653 கண்ணுந் தலையும் பிறவுங் கருந்தடியும்
பெண்ணுங் கொடுத்துப் பிறர்க்கே யுழந்தாய்முன்
னெண்ணுங்கா லின்னுநீ யெவ்வினையுஞ் செய்தா[1]ரை
யுண்ணுந் திறமொன்று மோதா தொழிந்தாயோ.

(இ - ள்.) கண் முதலாயின கொடுத்துப் பிறர்க் குழந்தது ஒரு பலத்தை உத்தேசித்தன்றே? அவ்வாறுயும் புண்ணியஞ் செய்தார் பலம் பெறுமாறு கூறிற்றில்லை யென்றவாறு. (கூகக)

654 எனைத்துணையு நீவருந்தி யெத்துணையோர் கால
நினைத் [2]திருப்பி னல்லது நின்காட்சி தன்னால்
வினைப்பயத்தின் கூட்டம் விரித்துரைப்ப னென்னிற்
றினைத்துணையு மாகாமை தேரிதுநீ யென்றாள்.

(இ - ள்.) எதத்துணைக்காலம் வருந்தினும் க்ஷணிகபக்ஷத்துக் காமபல சம்பந்தஞ் சொல்லமாட்டா யென்றவாறு. (கூகஉ)

655 முழுக்கேடு வேண்டாயேன் முன்னின்ற துண்டாம்
வழுக்குமே லவ்வுரைக்கு மாறுகோ ளிஃதா
மிழுக்காமை புத்தீ ரெனைப்பலருங் கூடிக்
குழுக்களாய் வந்துநுங் கோளிறுமி னென்றாள்.

(இ - ள்.) பொருளுக்குச் சர்வதா நாசம் வேண்டாயாயிற் கெடுதலும், கெடாமையுமாகி நித்தியா நித்தியாதமகமாம்; சர்வதா நாசம் வேண்டில் செய்தவனுக்குப் பலமின்றித் தர்மோபதேசம் மாறுகொள்ளும். எல்லாருங் கூடி இதற் குத்தரஞ் சொல்லுமினென்று ரென்றவாறு. (கூகங)

656 நின்றே நிலையுமெனி னித்தியமே யாமொழியு
மன்றேயஃ தாயி லநித்தியமா மவ்விரண்டு
மென்றே யுரைக்கி லிருவழிக் குற்றமுமா
மென்றே யுரைக்கின்று யேகாந்த வாதியோ.

(இ-ள்.) சர்வதா நித்தியமே யெனில், அர்த்த கிரியா காரி யன்றும்; அநித்தியமே யெனில் அர்த்த கிரியாகாரியுமன்றிக் கர்ம பல ஸம்பந்தாதியும் ஸம்பவியாவாம் ; இரண்டுமாமெனில் இருவகைக் குற்றமுமாமென்று சொல்லுவார்

1 ஐ - சாரியை. 2 இருப்பு - அஸ்தித்துவம்.

அனேகாந்தவாதிகளாகிய ஜைனரன்றே; நீ இவ்வாறு சொல்லில் ஏகாந்த வாதியாமா றென்னை யென்றவாறு. (கசுச)

657 உசசேதந் தானு மொருவகையா லவ்வகையே
யசசேத மின்மையு மவ்விரண்டு மாய்நிகழ்ந்து
பொய்ச்சேத மல்லாப் பொருண்முடிபொன் றுண்டாக
மெச்சாயே நீயெனயான் மெச்சுவனே யென்றான்.

(இ - ள்.) பொருள்களுக்கு நாசமாவதூஉ மெல்லாவகையானு மன்றி யொருவகையாலாம்; இதனாற் போந்த பொருள், பொருளெல்லா வகையாலு நசிக்கில் க்ஷணிக வாதி தானும் உதபததி க்ஷணத்தே ஸர்வதா நஷ்டனுமாகவே யிவனுக்குப் பொருள்களினது சர்வதாநாச மறிந்து சொல்லுதல் கூடாதென் பது.

இனிப் பொருள்களுக்கு நிததியத்துவமு மவ்வாறும். பொருளெல்லா வகையானு நித்தியமாயி லதனை யறிநதுரைததல் நிததியவாதிக்குங் கூடாதாம். ஆதலால், அனுவிருத்த வியாவிருத்த ஸ்வபாவங்களா லவவிரண்டு ரூபமு முடைததாகிப் பாலனனவனே விருத்தனானெனபுழி, அனுபவ பிரசித்த மாகி யிருப்பதொரு பொருளுளதாக இன்னமும் புததிபண்ணுகின்றிலேயோ வென்று நீலகேசியார் சொல்லக் கேட்டு ஸுகதனும் விநயபரனாகி, இனி யெல்லா மவ்வாறே புத்தி பண்ணுகின்றே னென்று சொன்னா னென்றவாறு.
பொய்ச் சேதம் - பொய்க்கூறு. (கசுரு)

658 இறைவன்ற னூலுணரி னெவ்வுருவி னுரு
முறையினா லெய்துவர்தா முன்னியவீ டென்றாண்
மறையினா லாயினு மற்றொருவா றேனு
நிறையினாற் சொல்லென்று நேரிழையுஞ் சென்றாள்.

(இ - ள்.) அருகத் பரமேச்வரனா லருளிச் செய்யப்பட்ட ஆக மார்த்தங் களை யறிந்து தெளிந்தாற் பாஷண்டிகளே யெனினும் கிரமத்தால் முக்த ராகு வர்; ஆதலில, நீயும் யான் சொல்லியவாறே தத்துவங்களையறிநது குப்தமாக வாயினும், பிறவாற்றானாயினும் தததுவத்தை மறவாதே கொண்டு செலுத் தென்று நீலகேசியார் சொல்லி, அங்கு நின்றும் போந்தா ரென்றவாறு. (கசுசு)

**நீலகேசித் திரட்டில் புத்தவாதச் சருக்கம் முற்றும்.**



ஆறாவது

# ஆஜீவக வாதச் சருக்கம்

659 கண்ணார் சிறப்பிற் கபில புரங்கடந்து
விண்ணாறு செல்வாள் வியன்மலைபோற் றோற்றத்தாள்
உண்ணால் வினையு மொருவி யொளிர்மேனி
யெண்ணா துணர்ந்தானை யேத்தத் தொடங்கினாள்.

உண்ணால் வினை - ஞானாவரணீயம், தர்சனாவரணீயம், மோஹநீயம், அந்தராயம். (க)

660 [1]அங்கம் பயந்தா னறைந்த [2]சுதக்கடலுள்
பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லுளவோ
பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லேபோற்
புங்கவன்றன் சேவடியைச் சேராத பூவுளவோ.

பங்கம் - ஸப்த பங்கம். (உ)

661 பூர்ப்பம் பயந்தான் புகன்ற சுதக்கடலுட்
சார்த்திப் பிறவாத் தவநெறிக டாமுளவோ
சார்த்திப் பிறவாத் தவநெறிக டம்மேபோற்
றீர்த்தன் றிருநாமங் கொள்ளாத தேவுளவோ.

பூர்ப்பம் - பூர்வாகமம். (ங)

662 புலவ னுரைத்த புறக்கேள்வி சாரா
துலக நவின்றுரைக்கு மோத்தெதங் குளதோ
வுலக நவின்றுரைக்கு மோத்தேயு மன்றிப்
பலவும் பகர்வாப் பயந்தனவே யன்றோ.

புறக்கேள்வி - பகிசுருதி. (ச)

663 அலரொடு சாந்த மணிந்தெதம் மிறைவர்
மலரடியை யல்லதியா மற்றறிவ தில்லை
மற்றறிவ தில்லாத வெம்மை மலரடிகண்
முற்றவே செய்து முடிவிக்கு மன்றே. (ரு)

664 புனையுலகிற் காதிய புங்கவ னார்த
மிணையடியை யல்லதியா மின்புறுவ தில்லை

1 அங்கம் - அங்காகமம். 2 சுதம் - சுருதம்; ஆகமம்.

யின்புறுவ தில்லாத வெம்மை யிணையடிக
டுன்புறவி லக்கதியுட் டோன்றுவிக்கு மன்றே. (௬)

665 இரவிடைநன் மணிபோலு மெண்ணு துணர்ந்தான்
றிருவடியே யல்லதென் சிந்தனையி னில்லைச்
சிந்தனையொன் றில்லாத வெம்மைத் திருவடிக
ளாநிணையில் பேராற்ற லாக்குவிக்கு மன்றே. (எ)

வேறு

666 தொக்குட னுயவென் றொல்வினை தீர்கென
முக்குடை யானடி மூன்றினும் வந்தித்துக்
[1]குக்குட மாநகர் நின்று கொடிமினிற்
றக்கதிற் றன்போய்ச் சமதண்டம் புக்காள்.

மூன்றினும் - மனோவாக் காயங்களால். சமதண்டம் - ஊர். (அ)

667 ஈண்டி யிருந்த விலிங்கியர் தங்கட்கு
மாண்ட துகிலல்குல் மாத ரிதுசொல்லுங்
காண்டற் கினிதே கடிமலர்ப் பூம்பள்ளி
யீண்டுறை வாரிவர் யாவர்கொ லென்றாள். (௯)

668 காரணம் வேண்டாக் கடவுட் குழாந்தன்னிற்
பேருணர் வெய்திப் பெரிதும் பெரியவன்
பூரண னென்பான் பொருவறக் கற்றவ
னாரணங் கன்னுட் கறிய வுரைக்கும்.

காரணம் வேண்டாக் கடவுட் குழாம் - காரணத்தாற் காரியமா மென்று வேண்டாத கடவுட் குழாம். (௧௦)

669 புயலிருங் கூந்தற் பொலங்கொடி யன்னா
யயலியர் தாமல்ல வாசீ வகர்கள்
வியலிடத் தியாரும் வியக்குந் தகையர்
மயலறு காட்சியிம் மாதவ ரென்றான்.

அயலியர்தாமல்ல வாசீவகர்கள் - திகம்பரத்வ மொப்பினும் அநேகாநத வாதிகளாகிய [2]நிர்க்கிரந்த ரல்லர் ஆஜீவகர். (௧௧)

670 ஆத்தனு நூலும் பொருளு நிகழ்ச்சியும்
பாத்தன சொல்லப் பயம்பெரி தாகலி

---

1 குக்குடமாநகர் - கோழிநகர்; இஃது உறையூரின பெயர்.

2 நிர்க்கிரநதர் - திகம்பர ஜைநா

ஞேத்துரை யேயிங் குரையென் றுரைத்தனள்
சாத்திரம் யாவையுந் தன்னிக ரில்லாள்.

(இ - ள்.) ஆப்தாகம பதார்த்த பிர விருத்திகள் சொல்லக் கேட்டலும் பிரயோஜன முடைததாதலில், நுன் சாஸதிரத்துச் சொன்னவாறே சொல் லென்று சொன்னா ளென்றவாறு. (கஉ)

671 என்றனு மற்கலி தானே யிறையினி
யொன்பது வாங்கதிர் நூல்யா முடையன
மன்பெறு நுண்பொரு ளைந்தியல் பாயவை
யென்ப நிகழ்சசியுங் [1]காழ்ப்பா டௌ சசொல.

(இ - ள்.) மற்கலி யென்பான் எமக்கு ஆப்தன்; ஒனபது கதிர் எமக்கு நூல்; அதி ஸூக்ஷ்மமாகிய நில, நீர், தீ, கால், உயிரெனனுமைந்து மெமக் குப் பொருள்; உள்ளது கெடாது; இல்லது தோனறாது; ஆழ்தல், மிதத்தல் எம்பொருள் நிகழ்ச்சி யெனறு சொல்ல வென்றவாறு. (கஙூ)

வேறு

672 அறிநதா னிறைவ னவனு குதலாற்
செறிந்தான் பெரிதுஞ் செறியா றுரைப்பி
னெறிந்தா னனைய வியல்பா குதலான்
மறிநதான் றடுமாற் றகத்தே மயங்கி.

(இ - ள்.) இறைவன் முழுது முணர்ந்தா னாகுதலால் மிகவுஞ் செறி வுடையனாகி [2]ஸ்தப்தனா யிருததலிற் பேசான்; பேசில் உலகம் பிராணியா னிறைந்த தாகலி னிவன் பேச்சா லறை யுண்டு அநேகம் பிராணி மறிக்குமாத லின் வாளிட்டுச் சிலரை வெட்டினான் போலும் பாபமுடைய னாதலில் ஸம் ஸாரததுப் பிறந்து ராகாதியான் மயங்கிக் கெட்டானே யென்றவாறு. (கச)

673 உரையா னிறைவ னுணனு மிலனுய்ந்
திரையா னரையான் றெரிவில் லுருவாற்
வரையா வகை [3]வானிடுவில லனையன்
புரையா வறிவிற் புகழ் பூரணனே.

(இ - ள்.) வாக்கியப் பிர விருத்தியும், புக்தியும், நரை திரை முதலாயி னவு முடையனல்லனாகி ஆகாச தலத்து இந்திர தனுசுப்போலத தோன்றும் தோற்றததை யுடையனாகிக் குற்றம் படாத வறிவை யுடையன் பூரண னென னு மெம்முடைய ஆப்தன் என்றவாறு. (கரு)

1 காழ்ப்பாடு - வயிரம், வயிரமல்லாதது; - ஆழ்தல், மிதத்தல்.
2 ஸ்தப்தன் - அசைவற்றவன். 3 சீ. சி. 951.

674 அடங்கல் குறிக்கோண் முதலா யினவாய்க்
கிடந்த கதிருட் கிளந்த பொருளுந
தொடங்கி யுரையாந் தொகையா குவதே
[1]யுடங்கே யணுவைந் துருவா யுளதே.

(இ - ள்.) அடக்கமுங் குறிகோளு முதலாகிய பொருள்களைப் [2]பிரதி பாதிக்கு நவகதிருட் சொல்லப்பட்ட பொருள்களெல்லாம் தொகைவகை யனறி விரிவகையாற் சொல்வோ மப் பொருடாம், நிலவணு, நீரணு, தீயணு, காற்றணு, உயிரணு வென்னும் மூர்த்த திரவியங்களா மென்றவாறு. (கசு)

675 நிலநீ ரெரிகாற் றுயிரின் னியல்பும்
பலநீ ரவற்றின் படுபா லவைதாம்
புலமா கொலியோன் றெழிய முதற்காஞ்
சலமா யதுதண் மையையே முதலாம்.

(இ - ள்.) நில முதலாகச் சொல்லப்பட்டனவற்றி னியல்பும், அவற்றின் பாலும் பலவாம். அவற்றுள் நிலப் பாலாவன - சப்த மொழிய ஸ்பரிச ரூபரச கநதங்கள்; நீரப்பால் - தண்மை முதலாக வுடையனவா மென்றவாறு. (கஎ)

676 எறித்தன் முதலா யினதீ யினவாஞ்
செறித்த [3]லிரையோ டிவைகாற் றினவா
மறித்தல் லறிதல் லவைதா முயிராங்
குறித்த பொருளின் குணமா லிவையே.

(இ - ள்.) சுடுதன முதலாயின தீப்பாலாம்; அறைதலுஞ் சப்நிததலு முதலாவுடையன காற்றின பாலாம்; அறிதலும், பிறரை அறிவித்தலு முத லாவுடையன உயிர்ப் பாலாம். இவை யெல்லா முன்பு குறித்துச் சொல்லப் பட்ட ஐவகை யணுக்களி னியல்பாவன வென்றவாறு. (கஅ)

677 அணுமே யினவைந தவைதா மனைத்துங்
குணமே யிலவாங் குழுவும் பிரியு
முணன்மே யினுமுள் புகுதல் லுரையேங்
கணமே யெனினும் மொருகா லமிலே.

(இ - ள்.) அணு [4]சந்தோஹமாகிய பிருதிவியாதி ஐந்துங் குணங்களை யுடைய வல்ல; கூடுவதூஉம், பிரிவதூஉஞ் செய்யும்; ஒன்றி னொன றடங் கினு முள் புகுவனவாகச் சொல்லேம்; கணமென் றுரைப்பினுங் கால மென்ப தோர் பொருளில்லை யென்றவாறு. (கக)

---

1 உடங்கு - ஒருங்கு. 2 பிரதி பாதிக்கும் - தெளிவிக்கும்.
3 இரை - ஒலி. 4 சந்தோஹம் - கூட்டம்.

678 இவையே பொருள்க ளிவற்றி னியல்பும்
சவையே யறியச் சிலசாற் றுவன்கேள்
சுவையே யுடையம் மெனநீ யிகழல்
லவையே பிறரா லறிதற் கரிய.

(இ - ள்.) சுவையே யுடைய மென நீ யிகழல் - ஸரஸமா யிருந்துமென் றிகழாதொழி. (உ0)

வேறு

679 அண்ணலு நூலும் பொருளு நிகழ்வு மிவையெனவு
[1]மெண்ணினு மேனை யெழுத்தினு மிக்காங் கிருந்தவர்முன்
கண்ணினு மன்றிக் கருத்தினும் வேறெனக் காட்டலுற்றுப்
பண்ணலங் கொண்டசொல் லாளவை பேர்த்தும் பகர்ந்தனளாய்.

(இ - ள்.) ஆப்தாகம பதார்த்த பிரவிருத்திகளைக் கேட்டுப் பிரத்திய க்ஷாதி பிரமாணங்களோடு அயுக்தி காட்டலுற்று மீட்டு மவற்றை அனுவதித் தென்றவாறு. (உக)

680 முற்ற வறிந்துரை யாதவன் [2]மோனுந் திருந்தனனேற்
செற்றம் பெரிது முடையனச் சீவன்க டம்மொடெல்லா
[3]மற்ற முடையவர் சொல்லின வாகம மன்மையினுஞ்
பெற்ற வகையென்னை பேதா யதனைப் பெயர்த்தனவே.

(இ - ள்.) சகல பதார்த்தங்களையு மறிந்து ஸ்தப்தனுகி, ஆப்தனுகிய அவன் பேசாதிருப்பி னவன் பிராணிகண்மேற் செற்ற முடையனும் ; என்னை? தானறிந்த பொருளை அறியாத பிறர் விறுவினுலும் உரையாததூஉம், வினவாது சென்றுரைப்பதூஉம், நிக்கிரஹானுக்கிரக வியாபாரத்தாலா மாதலில். இனி அவனுரையா னுகில், வேறுசில ராகாதிமான்கள் சொல்லுவது பிரமாண மென்றுயில், நூல் பெறுமா றென்னை ? சொல்லு பேதா யெனறவாறு. (உஉ)

681 ஒக்கலி யோகலி யென்றிரு தெய்வ முரைத்தனவேன்
மற்கலி யார்போ லறிந்தன வாயிற் செறிந்தனவாம்
தக்கில வேயறி யாதன சொல்லுத றத்துவத்தை
யிக்கலி யாள ருரைத்தவு மேதமெ னுய்பிறவோ.

(இ - ள்.) ஒக்கலி ஒகலி யென்னு மிரண்டு தைவதங்களும் ஆகமோப தேசஞ் செய்யுமெனில், அந்த தைவதங்கள் மற்கலியார்போ லறிந்தன வாயின் ஸ்தப்தங்களா யுரையாவாம் ; அவ்வா றறியாவாயில் அந்த தேவதை

---

1 தி. கு. 392. 2 மோனுந்து - மௌனமாகி.
3 அற்றம் - மறைவு ; பற்று மயக்கம்.

கள் சொன்னது தத்துவ மாகாதாம்; ஆகில் இக் கலி காலததார் சொல்லினவும் பிரமாண மாகல் வேண்டு மென்றவாறு. (உ௩)

682 அறிந்தா னறிநதன தான்சொல்லி ளுர்வச் சினத்தனனு
யெறிந்தா னனையதோ ரேதத்தை யெய்துமவ் வேதத்தினுன்
மறிந்தா னகன்றடு மாற்றத் தகத்தெனின் மாண்புணர்ந்தாய்
செறிந்தாங் கிருக்கிற்பி னீயுஞ்சிற் ருத்தனை யாகிற்றியே.

(இ - ள்.) ஆப்தன், தானறிநத பொருளைச் சொல்லின் ராகாதிமானுகி ஸம்ஸாரததுப் பிரமிப்ப னென்பது நன்குணர்ந்தாய்; நீயுஞ் செறிந் துரையா திருந்தனையாயில் ஒரு சிற்ருத்தனுகுதி யென்றவாறு. (உ௪)

683 ஆத்த னறிநதன யாவையுஞ் சொல்லல ளுய்விடினிச்
சாத்தனும் யானு மவன்றன்னிற் சால விசையுடைய
நாத்தனை யாட்டியோர் நன்மைகண் டானு நினக்குரைத்து
மீத்தன முண்டு மிருமைக்கு மேதமி லம்பிறவோ.

(இ - ள்.) ஆப்த னுயினுன அறிநதானே யெனினு முரையானுயில், அறிநத தொன்றைப் பிறர்க குரைததும், இரந்து வநதார்க் குயதாசக்தி தானம பண்ணியும் உபய லோகஹிதமாகிய கிரஹஸ்தா தர்மாவலம்பிகளாகிய யாமே நல்லே மென்றவாறு. (உ௫)

684 [1]வானிடு வில்லின் வரவறி யாத வகையனென்பாய்
தானுடம் போடு பொறியின ளுதலிற் சாதகனு
மீனடைந் தோடும் விடுசுட ரான்கதிர் வீழ்புயன்மேற்
ருனடைந் தாற்றனு வாமிது வாமதன் றத்துவமே.

(இ - ள்.) வானத்து இந்திர தனுஸ்ஸுப்போல இன்னவாறு வந்தன னென் றறியாமற் ருேன்றுவன எம்முடைய ஆப்தனென்று சொல்லுவாய், அவன சரீரேநதிரிய புததியாதிகளுடைய ளுதலிற் பிறப்புடையனும்; சரீராதி களையுடையான் பிறப்புடையனுகக் காணப்படுதலான். இனி, ஆதித்யகிரணம் ꞏபடலத்துப் பட்டால் வில்லுப் பிறக்கும்; அதுபோல மற்கலி தேவனும் ண ஜன்யனுக விசைதியோ என்றவாறு. (உ௬)

685 முற்ற வறிநதனன் யானென்று மோனங்கொண் டேயிருந்தா
னற்ற மகலவென் ருனீ யறிந்தமை யாதினினும்
பெற்ற வகையெனப் [2]பேசின்மை யாலெனிற் பிள்ளைகளும்
மற்றிம் மரமு மலையுமம் மாண்பின வாம்பிறவோ.

(இ - ள்.) சர்வததையும் அறிந்தேன் யானென்று மௌனங் கொண் டிருந்தால், இவன் சர்வததையும் அறிந்தமை நீ யாதினுற் பெற்ருய் யென்று

1 வானிடு வில்லின் வரவறியா - நாலடியார் கடவுள் வாழ்தது.
2 பேசு - முதனிலைத் தொழிற்பெயர்.

கேட்ப, இவன் பேசாமையாற் பெற்றே னென்பாயாயிற் பேசாத பால, மூக, பர்வதாதிகளு மெல்லாம் முழுது முணர்ந்தனவாமோ வென்றவாறு. (உஎ)

686 முடக்கு மெனினு நிமிர்க்கு மெனினுந்தன் மூக்குயிர்த்து
நடக்கு மெனினு மிருக்கு மெனினுந்த னல்லுறுப்பி
னடக்கு மியல்பல்ல னன்னவற் றூர்வந்த துருமன்றி
யுடக்கு மிவையில்லை யேனுயிர் தானுண்மை யொட்டுவனே.

(இ - ள்.) முடக்குதன் முதலாயின விவன் செய்யி லடக்கமிலாதானும், ராகாதிமானுமாம். அவை செய்யானெனில், அவனைச் சேதனமென்று சொல்ல விசையே னென்றவாறு. (உஅ)

வேறு

687 நிலப்பாலு நீர்ப்பாலுந் தீப்பாலுங் காற்றின்
புலப்பாலு நெட்டுயிரின் போகவில்லாப் பாலுஞ்
சொலற்பால வல்லாத சொல்லுதலால் யானு
மலப்பா தொழியேனிவ் வாசி வகனை
யருகிருந்தார் தாமறிய வாசீ வகனை.

(இ - ள்.) அலப்பா தொழியேன் - அலையா தொழியேன். அருகிருந்தார் தாமறிய வாசீவகனை - எல்லாரு மறியத் தொழில்செய்து ஜீவிக்கின்றானை. தொழிலாவன- [2]கர்ப்பநியாஸ முதலாயின. (உக)

688 வண்ணாதி யெல்லாம் வகுப்பின் னிலப்பாலா
நண்ணாத மூன்றிற்கு நன்பால் பிறவாகிக்
கண்ணாதி யாலவற்றைக் காணப்பா டில்லையா
யெண்ணாதே யிந்தியக்கோ ளெய்தாமை வேண்டும்
எனைத்தும் பெறப்பாடு மில்லாத வேண்டும்.

(இ - ள்.) வர்ண, கந்த, ரஸ, ஸ்பர்ஸங்களை நிலத்துக்கே பாலாக வோதி னமையால், அவை உயிரொழித் தொழிந்த பூதங்களுக்குப் பாலாகா வாதலில் அவை கண் முதலாய பொறிகளுக்குப் புலனாகா தொழியல் வேண்டும்; இவற் றுக்குப் பெறப்பாடில்லை யாகலும் வேண்டு மென்றவாறு. (௩0)

689 நீர்ப்பாலுந் தீப்பாலு நில்லா வளிப்பாலும்
பேர்ப்பாலே பற்றிப் பிறப்பிறவா நீபெருக்கி
யோர்ப்பியாதுஞ் செய்யா துறைந்தா யுறைந்தமையிற்
[3]கூர்ப்பியாது மின்றிநின் கோளழியு மன்றே
கொணர்ந்துநீ யைந்தென்ற கோளழியு மன்றே.

1 உடக்கு - உடங்கு; வலித்தல் விகாரம்; 'ஒருங்கு' என்பது இதன் பொருள். 2 கர்ப்பநியாஸம் - கர்ப்பாதாநம். 3 கூர்ப்பு - உண்மை.

(இ - ள்.) வாண, கந்த, ரஸ, ஸ்பரிசாதியை நிலத்துக்கே பாலாக வோதி னமையின், நீர் முதலாயினவற்றுள்ளும் வாணாதி யுண்மையில், அவையு நில மாகல்வேண்டி நிலமுமுயிரு மென இரண்டு பொருளாவதல்லது ஐந்தென்று நீ சொல்லிய பிரதிக்ஞை யழியு மென்றவாறு. (௬௧)

690 பொருடாமி வைநதொழியப் போத்தந் துரைப்பா
யிருடாமி வைந்தனு ளெக்கூற்ற தாமோ
விருடாமி வைந்தினுளு மெக்கூற்று மில்லே
லருடாழ்நது நீயிருப்ப தியாதின்பா லாமோ
அணுமயமாங் கந்தங்க டாமனந்த மன்றே.

(இ - ள்.) நினனாற் சொல்லப்பட்ட பொருளைநது மனறி யிருளென்பது மோர் பொருளுண்மையி னது யாதின்பாற் படும்? இவ்விருளொன்றின பாலும் படாதாயின நீ என்சொன்ன யாகுதி? பிருதிவியாதி யெல்லாம் புதகலமாகிய அணுஸங்கோதாஹங்கள் அனநத மன்றே? நீ யிவ்வாறு மயங்கிய தெனனை யெனறவாறு. (௬௨)

691 பலவாக நீசொன்ன பாலெல்லாந் தம்முட்
கலவாவா யப்பொருளே யாதலையுங் கண்டா
னுலவாதோ வொற்றுமையும் வேற்றுமையு மென்றாற்
[1]சலவாதி யொன்றுஞ் சமழலையே கண்டாய்
[2]சமத்திடை யொன்றுளு சமழலையே கண்டாய்.

(இ - ள்.) ஒன்றற்குப் பலபால் கூறினை யாகலின், அப்பால் பலவாயும், அப்பொருள் ஒனறாயு மிருததலில் ஒன்றும் பலவுமாய்க் குணமும் குணியும் பெறப்படும்; படவுங் குணமில்லை யென்று சொல்லுவதற்கு லஜ்ஜியாய்கா ணென்பது. (௬௩)

692 பாறும் பலவாகிப் பாலாகு மப்பொருளே
வேறாது மில்லை யெனவே விளம்புவாய்
[3]நீறாக நின்ற நிலப்பால் பெறவேலா
[4]நாறா வகையெனக்கு நன்குரைக்கல் வேண்டும்
நவிந்தாற் பிறபொருட்கு நாட்டலே வேண்டும்.

(இ - ள்.) பலபலவாகச் சொல்லப்பட்டன வெனினும் பொருளையொழிய வேறு பெறப்படாமையிற் பாலென்ப தில்லை; பொருளே யுள்ளதெனில் நில மென்பது நிலப்பாலாகிய வர்ணாதி பிறவெல்லாம் தோனறாமற் பொருளை பெறப்பட வேண்டும்; பாலை யொழித்து வேறுநிலம் பெறப்படா தெனினும்

1 சலவாதி - குற்றம் பொருந்திய வாதி. 2 சமம் - அடக்கம்.
3 நீறாக - கெட. 4 நாறா - தோன்றாத.

நிலத்தை யொழித்து வேறுபால் பெறப்படா வெனினு முளவாகல் வேண்டு மெனபது கருத்து. (௩௪)

693 இன்றேய தாயி னிவைபா லிவைபொருள்க
ளென்றே பலவா வெடுத்துரைப்ப தென்செய்யக்
குன்றோ மலையோ குவடோ வடுக்கலோ
வன்றேவ தன்றலல தியாப்பாதல் வேண்டும்
அவையவையே சொன்னலல தியாப்பாதல் வேண்டும்.

(இ -ள்.) பாலென்பது வேறின்றிப் பாலாவதும் பொருடானே யாகி லிவை பா லிவை பொருளென வுடையது முடைப் பொருளுமாகக் கூற வேண்டுவ தில்லை; மலை, குவடு, அடுக்க லென்பனவற்றைக் குன்றிற்குப் பாலாகச் சொல் லப்படாத வாறுபோல. இனி, நிலமும், பாலும் ஒன்றாயினு முடையது முடைப்பொருளுமாக ஸம்பவிக்கில் மலை முதலாயினவுங் குன்றும் உடையது முடைப்பொருளுமாகிச் சம்பவிக்கவேண்டு மெனறவாறு. (௩௫)

694 நோயில்லை வாழி கடவு ளெனவுரைத்தா
னுயுநோ யின்மையினேர்ந் தாய வெழியொருநாட்
டீயினும் வெய்யநோய் சேர்தலையுங் காண்டுநீ
சாயினுந் தத்துவத்தைச் சாராதா யன்றே
தடுமாற்றக் காழ்ப்பாடுந் தானுளதே யன்றே.

(இ - ள்.) ஒருகாலதது நோயில்லாதான் பிறிதொரு காலத்து நோயுடை யவனுயில், அவிசலித நிதயதவம் கெடுமாதலின், உனக்குத் தத்துவ ஞான மில்லையாம்; அன்றியும் முக்தனுமை ஸம்ஸாரம் கெடாது நிற்கவேண்டுமென்ற வாறு. (௩௬)

695 கடுங்கதிரோன் மீதூறக் காணுக்கோ ளெல்லாம்
படும்பொழுது மெழுச்சியினுந் தம்பயனே செய்யு
நெடுங்காலம் பல்பிறவி நின்றன வெல்லா
மொடுங்காதே மேய்ந்துண் டுழிதரலே வேண்டு
முதவாத வார்தலையு மொட்டலே வேண்டும்.

(இ - ள்.) ஆதித்யனுடன் கூடுதலால், அப்பிரகாசகதன வாகிய கிரஹங் களும், உதயாஸ்தமயங்களில் தத்தம் பலங்களைச் செய்வது காண்கின்றன மாத லில், அனுதி வரலாற்றதாகிய ஸம்ஸாரம் கெடாது மறைநது நின்றதாயி னொரு காலம் மனுஷ்யனுன பொழுதே பூர்வமுளவாகிய ஜனன காரியங்க ளெல்லாம் காண்டல் வேண்டும்; வேண்டவே, முன்னொருகால் வராகமாகியும் ஜனித்தா னன்றே? ததஜனன காரியமாகிய மலபக்ஷணுதியு மிசைதல் வேண்டு மென்ற வாறு. (௩௭)

696 எப்பாலுந் தான்கெடா வில்லனவுந் தோன்றுமென்
[1]றொப்பியாது மில்ல துரைத்தளியின் றுனுண்ணும்
[2]துப்பாய தூச்சோற்றுத் தூய்தல்லா தாழ்ந்துளதென்
றிப்பாவி செய்யு மிழிதகவி தென்னே
விழுதைதான் செய்யு மிழிதகவி தென்னே.

(இ - ள்.) எல்லா வகையாலு முள்ளது கெடாது இல்லது தோன்று தென்று இவ்வாறு சொல்லுவனுயிற் றுனுண்ணும் சோற்றிலே மேலாகக்கடவ தாகிய மலம் மறைந்து கிடந்த தென்று கோடல் வேண்டும். இப் பாவகர்மா இவ்வாறு சொல்லுதற்குக் காரணமென் னென்றவாறு. (௬அ)

697 நின்றீக கொண்டீக வுண்டீக தின்றீக
வென்றிவைகள் கூறி யிடுவார்க் [3]கறமவேண்டான்
கொன்றீகை தீதென்றுங் கொல்பாவ மில்லென்றுந்
[4]தன்றீகை யுண்ணுதான் றன்கண்ட தென்னே
தவத்தினுமில் வாழ்க்கை தான்கண்ட தென்னே.

(இ - ள்.) நின்றீக வென்பது முதலாயின கூறி, தானம் பண்ணுகவென்றும், தானம் பண்ணினுற்குப் புண்ணியமில்லை யென்றும், கொலையாகாதென்றும், கொலைப்பாவமில்லை யென்றும் இவன் கண்ட தெவ்வாறோ? தான் றுறந்து தவஞ் செய்கின்றுனுயில், தன்னுழை யில்வாழ்க்கை நின்றதாகக் கண்ட தெவவாறோ வென்றவாறு.

இதன் கருதது - இல்லது தோன்றுதாயில் தானம் பண்ணினுனே யெனினும் புண்ணிய கர்ம பநதனுதலும், ததபலாநுபவமும் ஸம்பவியாதாம். அன்றியும் அவிசலிதநித்ய மென்றலானு மிவை கூடாவாமெனபது. (௬௯)

698 இல்லாது தோன்று கெடாவுள் ளனவென்பாய்
சொல்லாயே நெய்சுடராய்ச் சுட்டிடுமா றென்றேனுக்
கல்லாந் தயிர்த்தோடி யாழ்மிதப்புச் சொல்லுதியா
லெல்லாமொன் றொன்றிற் கிடங்கொடா வன்றே
யிழிவுயர்ச்சிக் காரணமு மில்லாதா யன்றே.

(இ - ள்.) இல்லாதது தோன்றுது உள்ளது கெடாதென்று சொல்லுதலால், நெய்யின்மேற் றேன்றுவதாகிய அக்கினி நெய்கருள்ளே மறைந்து கிடந்ததாமாயில், நெய் [5]ஏர்கியிருக்கு மாறென்னே? இழுதாயிருக்கின்ற காலத்

1 ஒப்பியாது மில்லது - ஒப்புதல் சிறிது மில்லாதது; பொருநதாதது.
2 துப்பாய - திருக்குறள், 12. 3 அறம் - புண்ணியம்.
4 தன்றீகையுண்ணுதான் - தன் தவததை அனுஷ்டிக்காதவன்.
5 ஏர்கி - குளிர்ச்சியாகி; அதாவது, உறைந்து.

தில்லாத நெருப்புப் பின்பு தோன்றிச் சுடுமாறென்னோ? அந்நெருப்புத் தானே நெய் யாறவைத்த காலத்துக் கெட்டவாறெனனோ? இனி யாழ்ச்சியு மிதப்புங் கூறினையாயினு மொன்றினுக்கொன் றிடங் கொடுத்தல் கூடுமோ? கூடில் கன்னிகை வயிற்றுட் புத்திர னுளனாகுமோ? ஒருகாலத் துளதாகிய வாழ்ச்சி ஒரு காலத்துக் கெடுதற்கும், ஒருகாலத் துளதாகிய மிதப்பு ஒரு காலத்துக் கெடுதற்குங் காரணமுளதோ? நீ காரணத்தாற் காரியம் வேண்டாதா னொருவனன்றே யென்றவாறு. (௬௦)

699 [1]ஓட்டுங் குதிரையு மொன்றே யெனிற்குதிரை
யூட்டும பொழுதொடுதான் புல்லுண்ணும் போழ்தின்கா
ணுட்டியவீதி யதிசயத்தை நீ யெமக்குக்
காட்டி யுரைப்பினின் காட்சியைக் கோடும்
கடவுட் குழாத்தார்தங் காழ்ப்பெலாங் கோடும்.

(இ - ள்.) ஓட்டு மோடுகின்ற குதிரையுங் கதஞ்சிப் பின்னமாவதன்றி யெல்லா வகையானு மொன்றே யெனிற் குதிரை யோடும்பொழுதன்றி அது பந்தியுள் நின்று புற்றின்னுங் காலத் ததனது [2]வீதி முதலாகிய கதிகளி னுடைய அதிசயத்தைக் காட்டுநியாயின் நின் காட்சியை யாமுங் கைக்கொள் வோம்; மற்றும் ஆழ்ச்சி மிதப்புங் கைக்கொள்வோ மெனறவாறு. (௬௧)

700 வண்ண முதலா வுடையகுண மெல்லாம்
எண்ணுங்கா லப்பொருளே வீந்தி னிளங்காய்க்கட்
கண்ணினாற் கண்ட பசுமை கனிக்கண்ணுந்
திண்ணிதாக் காட்டிற் றெருண்டாயே யென்றும்
திரிந்தொழிந்த காட்டினாற் றேவனே யென்றும்.

(இ - ள்.) வர்ணாதியாகிய குணங்களெல்லாம் அப்பொருடானேயாயின, பொருள் நித்தியமாவதூஉமாயில், அவை ஒருபடியே எப்பொழுதுங் காண்டல் வேண்டும்; அஃதாயின்வீந்தி னிளங்காய்க்கண் ணுண்டாகிய பசுமை நிறம், பழமாய கால் காணவேண்டு மவ்வாறு காட்டில் நீ தெளிவுடையை யென்று புத்தி பண்ணுதும்; மற்றும் திரிவுடையனவற்றை யெல்லா மொருபடி காட்டுதியாயி னுன்னைத் தேவனென்று புத்தி பண்ணுது மென்றவாறு. (௬௨)

701 வட்ட முதலா வுடைய பொருளெல்லா
மொட்டிநீ யப்பொருளே யொன்றும்வே றில்லென்பாய்
தட்ட மழித்தோடஞ் செய்தா லதன்கண்ணும்
விட்ட வடிவு விரித்துநீ காட்டாய்
விகார மனைத்தும் விரித்துநீ காட்டாய்.

---

1 ஓட்டும் - ஓடுதலும்; தொழிற்பெயர். 2 வீதி - நேராயோடல்.

(இ - ள்.) வட்டமுதலாகிய ஸம்ஸ்தானங்களையுடையவாகப் பொருள்களை யிசைந்து, அப்பொருளையன்றி ஸம்ஸ்தானம் வேறில்லையென்று சொல்லு வாய், தட்டமழித்து ஓடஞ்செய்தவழித தட்டமாகி விருததாகாரததானின்ற வஸ்து வொழிவறக் கெடாதே யோடமானவாறுபோல விருததமாகிய ஸம்ஸ் தானமுங் காண்டல் வேண்டு மதனைக் காட்டாய்; மற்றும் விகாரப்பட்ட பொருள் களின பூர்வாகார மெல்லாங் காட்டா யெனறவாறு. (௬௩)

702 மிதப்பனவு மாழ்வனவும வேண்டுவன்யா னென்னிற்
[1]பதப்பொருடா னுன்கின் பன்மை முடித்தாயா
மிதப்பனவே யாழ்வன தாம் வேறியாது மில்லை
லுதபபேனு நின்சொ லுதவலவே கண்டா
லுடனேநின் பக்க முடைத்திட்டாய் கண்டாய்.

(இ - ள்.) பொருள் நிததமாகையால், கெட்டதூஉம் தோன்றியதூஉ மில்லை; தட்டமானது [2]ஆழ்ந்து நின்றது, ஓடமானது [3]மிதந்து நின்றது என் பாயெனில், நனறு சொல்லினை! ஆழ்ந்து நினற தட்டமும், மிதந்து நினற ஓடமும் தம்மில் வேறோ வொனறோ? [4]ஏகாந்தம் வேறெனில், பதார்த்தம் பூர் வோத்தர க்ஷணங்களில் நான்கு வகையானும் அந்யங்களாதலில் [5]வெகு தாவாம்.

நான்கு வகையாவன - [6]பொருளாதி நான்மை. தட்டமாய்நின்ற பொருளு மோடமாய் நின்ற பொருளும் அன்யமாதலும், தட்டமாய் நின்றவிடம் க்ஷேத் திர வின்னியாஸமும், ஓடமாய் நின்ற க்ஷேத்திர வின்னியாசமும், அன்னிய மாதலும், இருவகைக் காலமும் அன்னியமாதலும், பயனும் வடிவு முதலாகிய விருவகைத தன்மையும் அன்னியமாதலுமாம். இவ்வாறாக க்ஷணிகவிததாந்தம் நிலைநினறு நின்வித்தாந்தம் நிலைநில்லாதாம்.

இனி மிதப்பதூஉம், ஆழ்வதூஉம் ஏகாந்தம் ஒன்றேயெனிற் பொருளாதி நான்கு வகையானும் ஒன்றேயாம். ஆகவது பிரததியக்ஷ விரோதமாம். என்னை? தட்டமாய் நின்ற ஸ்வர்ணதிலோஹமே யோடமாகியு நின்ற தெனபதல்லது ஒழிநத க்ஷேத்திர வின்னியாஸாதி பேதிக்கவே காண்டலால். அன்றியுமுன்பு தட்டமாய் மிதந்து நின்ற திப்பொழுது ஆழ்நது நின்றதாயில் இப்பொழுது மிதந்து நினற வோடம் யாங்கு நின்றும் வந்ததாமென்றார்கருத் தட்டமாய் நின்ற ஸவர்ணதி லோஹமே யோடமாய் நின்றது, அதற்கொரு வேறுபா டில்லை; அதன் கண்ணே தட்டமாயவழி யுளதாகிய க்ஷேததிர வினனியா ஸாதி ஆழ்ந்து ஓடமாயவழி உளதாகிய க்ஷேத்திர வின்னியாஸாதி மிதநது நின்ற தென்பாயெனில், வஸ்துவினகண் ணுளவாகிய அனுவிருத்த வியாவிருத்த

---

1 பதப்பொருள் - பதார்த்தம். 2 ஆழ்ந்து - அடங்கி; புலப்படாது.
3 மிதந்து - வெளிப்பட்டு. 4 ஏகாந்தம் - ஒரேபக்ஷமாய்.
5 வெகுதாவாம் - பலவாம்.
6 பொருளாதி நான்மை - பொருள், இடம், காலம், பாவம் என்பன.

ஸ்வபாவங்களாகிய திரவ்ய பரியாய ரூபங்களால் வஸ்து நித்தியா நித்தியாத்மக மென்னும் ஜைன சித்தாந்தமே நிலைநின்று நினது [1]நித்யைகாந்தபக்ஷ நிலை நில்லாதாம். ஆதலா [2]லுதம்பிச் சொல்லினு மெனினு நின்சொற்கள், நின் சித்தாந்தத்திற்கு உதவாவாதலின், நின்சித்தாந்தத்தைக் கெடுத்தா மென்ற வாறு. (சச)

703 தொழிற்சொற் குணச்சொல் வடிவுச் சொன்மூன் றும்
பிழைப்பில் பதமாப் பிரிவிடத்துக் காண்டு
மிழுக்கில் பொருளோ டியைத்தக்காற் சந்தி
யெழுத்தியலிற் கூட்டமு மெப்பொழுதுங் காண்டு
மிலக்கண நின்சொ லியையலவே கண்டாய்.

(இ - ள்.) தொழிற் சொன் முதலான சொற்கள் பிரிந்த வழியுங் காணப் பட்டு எழுத்ததிகாரத்துச் சொல்லுகின்ற லக்ஷணப்படி கூட்டக்கூடுவது மெப் பொழுதுங் காண்டலின் நீயவற்றை யில்லையென்றலி னிலக்கணத்தோடு நின் வாக்கியங்கள் பொருந்தா வென்றவாறு.

'உண்டான்' என்பது - தொழிற் சொல்; 'கரியான்' என்பது - குணச் சொல்; 'கூனன்' என்பது - வடிவுச் சொல; அவை உணவு, கருமை, கூன் எனப் பிரிந்த வழிப் பெறப்பட்டுக் கூட்டின வழி உண்டான், கரியான், கூனன் எனப்பட்டன. (சரு)

வேறு

704 அதுவா வதுவு மதுவாம் வகையு
மதுவாந் துணையு மதுவாம் பொழுதுஞ்
சதுவா நியதந் தனவா வுரைத்தல்
[3]செதுவா குதலுஞ் சிலசொல் லுவன்யான்.

(இ - ள்.) ஆவதாம், ஆமாங்காம், ஆந்துணையாம், ஆங்காலத்தாம் என்னும் சதுர் [4]நியதங்களும் அயுக்தமாமாறு சொல்லுவ னென்றவாறு. (சசு)

705 அரிவை யவளாங் குழவி யவளை
யுரிய வகையா லுவந [5]தாங் கெடுத்தா
லரிய முழமூன் றளவாம் பொழுதாங்
வரிசை யுரைத்த வருடம் பதன்பின்.

(இ - ள்.) அரிவைப் பருவத்தை யுடைய பெண்குழவி, இது ஆவதா மென்னு நியதம்; பிறிதொன்று அரிவைப் பருவமுடையதாதலால் அஃதவ் வாறுவது. அதனை வளர்த்தற்குரியவாறு வளர்த்தால், இது ஆமாங்காமென்னு நியதம்; மும்முழமாகிய உத்சேத முதலாயின பெறுதலில், இது ஆந்துணையா

1 நித்யைகாந்தபக்ஷம் - என்றும் ஒரே முடிபுடைய பக்கம்.
2 உதம்பி - கடிந்து. 3 செது - அயுக்தம். 4 நியதங்கள் - முறைகள்.
5 ஆங்கு - ஆமாங்காம்.

மென்னு நியதம ; பன்னீராண்டிலரிவையா மென்பது ஆங்காலத்தா மென்னு நியதம். இவையந நானகு நியதத்திற்கு முதாரண மென்றவாறு. (௪எ)

706 குழவித் திறமுந் துறவா ளவளும்
முழுவித் ததுவும் முளையா துளதா
மிழவெத் துணையு மியல்பேன் முடியா
தழிவித் திடுவே [1]னயநீ விரையல்.

(இ - ள்.) உள்ளது கெடாதென்பது நின் மேற்கோளாதலில் அப்பெண் குழவி, குழவித தன்மையை நீங்காளாம் ; விதது அங்குரமாகியும், விருக்ஷமாகி யும் பரிணமியாதாம் ; ஆதலால், ஆவதா மென்னு நியதத்தினை யழிததேன் ; [2]அக்ஞா ! நீ விரையாது கேளென்றவாறு.

ஆவதாமெனனு நியதம் கூடுவது அவஸ்தை கெடவும், அவஸ்தை யுடை யது கெடாதும் வஸ்து நிதயாநிதயாதமகமாயி னன்றே. உள்ளது கெடா தென்று அவிசலித நிதயதவம் வேண்டுகின்ற உனக்கு அந் நியதங் கூடாதென் பது. (௪அ)

707 முலையும் [3]மகவும் முறுவல் லவையும்
தலையுண் மயிரும் முகிரும் முடனே
நிலையில் லமையு மிலதா மெனினே
யலையுந் நினகோ ளுடனே யெனலும்.

(இ - ள்.) இல்லது தோன்றா தென்றற்கண் முலை முதலாகச் சொல்லப் பட்டன கை முதலாயினபோல முன்பே யுளவாயி னல்லது பின்பு தோற்றப் பெறாவாதலில் ஆவதாமென்னு நியதங் கெடுவதா மென்றவாறு. அவை தோற்றியுளவாயி னன்றே யரிவைப் பருவ மெய்தலாவ தென்பது. (௪௯)

708 உளவே யெனின்முன் னுரைத்தந் நியதங்
களவே யெனலாங் கடையா மெனநீ
கிளவா தொழியாய் கிளந்த குழவிக்
களவே முழுமா வவைதாம் பலவால்.

(இ - ள்.) முலை முதலாகச் சொல்லப்பட்டன குழவிப் பருவத்து முள வாயி னுவதா மென்பது முதலாகிய நியதங் கெடும் ; குழவிப் பருவத்தே யவை யெல்லாமுளவாயின் மேலாதலென்ப தின்மையி னென்பது. அவ்வாறாகவும் நியதி கூறுவது களவாம் ; அன்றியும் குழவிப் பருவத்து அவை யெல்லா முள வாயிற் பிரத்தியக்ஷ விரோதமாம் ; என்னை ? ஒரு முழக் குழவியின மும்முழ உயர்ச்சி முதலாயின உண்மை கூறுதலி னென்றவாறு. (௫௦)

---

1 அய - அஞனே ; அறிவில்லாதவனே ; யகரம் போலி.

2 அக்ஞா - அறிவில்லாதவனே. 3 அகவும் - பேச்சும்.

709 உடையள் ளிவடன் னுதாத் தொருபெண்
ணடையு மவளுக் கவளவ் வகையாற்
கடையில் குழவி யவைதன் னியல்பா
நடையு மதுவே னகையாம் பிறவோ.

(இ - ள்.) இல்லது தோன்றாது உள்ளதே தோன்று மென்றற்கண் குழவிப் பெண் வயிற்றுள்ளு மேல் வருவதாகிய குழவிப்பெண் ணிப்பொழுதுள்ளதா யவள் வயிற்றுள்ளும் அவ்வாறு யிவ்வாறே அனந்தம் குழவிப் பெண்கள், பிரஸ்துதமாகிய குழவிப்பெண் வயிற்றுளாத லியல்பாய் நடைபெற வேண்டுதலிற் கேட்டார்க்கு நகையா மென்றவாறு.

என்னை நகையாமாறு? விறகுள் நெருப்பு முன்னே யுளதாதலி னன்றே கடைந்தபொழுது தோன்றியது; அதுபோல மேற் றோன்றுவன வெல்லா மொரு பொருட்கண் முனபே யுளவாகல் வேண்டு மன்றே; இல்லையெனில், அவை யாங்கு நின்றும் அவவழி வந்தன வெனபா யெனின், காரணம் பெற்றால் நெருப்புத் தோன்றுதற்கு விறகில் சத்தியுள தென்பதல்லது விறகுள் நெருப்பு இருந்த தென்னப்படாது; இருக்கில் விறகு தானே வேவ வேண்டு மன்றே; அதுபோல மேற்றோன்றுவன தோன்றுதற்குச் சத்தி யொரு பொருட்கண் உளதென்பதல்லது மேற்றோன்றக் கடவ பொருளெல்லாம் ஒரு பொருளினகண் எப்பொழுது முளவென்பது நகையேயா மென்பது. ஆதலால், உள்ளது கெடாது எனினும், இல்லாதது தோன்றாதாயினும் ஆவதா மெனனு நியதி கெடுமென்றவாறு. (ருக)

710 இனியாம் வகையு மிசைந்தி யெனினுங்
நனிகா ரணமாய் நடுக்கு நின்கோட்
டனிகா ரியமும் முளதேற் றவைறு
முனிலா மொருவன் பொழுதும் முடிவாம்.

(இ - ள்.) ஆமாங்கா மென்றற்கட் காரணத்தாற் காரியமாய்க் காரணபாவஞ் சொல்லுதல் மலைக்கும். ஆந்துணையா மெனறற்க ணில்லது தோன்றாது, உள்ளது கெடாது என்பனவற்றோடும் மலைக்கும். ஆங்காலத்தா மென்றற்கட் காலமில்லை யென்பது மலைக்கும். ஆகலாற் காரண ஸத்பாவமு முன்பில்லாத காயோதபத்தியுங் கால ஸத்பாவமு முடிவுபெறு மெனறவாறு. (ருஉ)

711 நியதந் நிகழ்ச்சிந [1]நியதா வுரைப்ப
தயதி யெனினீ யமையுஞ் [2]சலமேல்
வியதி யெனினும் வெருளல் விழுதை
பயதி யெனினு நினக்கோர் பயனே.

---

1 நியதா - நித்தியவாதி. 2 சலம் - பிடிவாதம்.

(இ - ள்.) நிதயா வாதியாகிய நீ, ஆவதாமென்பது முதலாகிய சது நிய தஞ் சொல்லுதலமையாது ; வஸ்து நிதயாநித்யாதமக மென்னும் ஜைனர்க்கே கூடுவது; நீ விளையாடிச் சொல்லுதியாயி னமையும்; அன்றி யிதுவே பரமார்த்த மென்று சலங் கொண்டு சொல்லுதியாயில் நினக்குக் கேடாமாயினும் வெகுளா தொழி; வெகுளில் நின்னை யிவனுக் கிவ்வாறு அயுக்தஞ் சொல்லுதல் பிரகிருதி ஸ்வபாவமென்று பிறர் சொல்லுவதே நினக்குப் பிரயோஜனம் ஏழா யென்ற வாறு.

1'அஸதி' எனபது 'அயதி' என நின்றது. 2'விஹதி' என்பது 'வியதி' என நின்றது. 3'பிரகிருதி' என்பது, 'பயதி' என நின்றது. (௫௩)

வேறு

712 பாலைப் பழத்தி னிறத்தன வாய்ப்பல மாட்டொடுகண்
ணூலைத் துணையு மகன்றைந்து நூறும் புகையுயர்ந்து
ஞாலத் தியன்றன நல்லுயி ரென்பது நாட்டுகின்றாய்
மாலித் துணையுள வோநீ பெரிதும் மயங்கினையோ.

(இ - ள்.) பாலைப்பழம்போன்ற நிறத்தை யுடையனவா யிடம் வலம் முத லாகிய பல பக்கங்களாலும், பல விடங்களாலும் எத்துணையு மகன்று, ஐந்நூறு யோஜனை யுயர்நத லோகத்துளவாயின ஜீவன்களென்று சொல்லுவாய், நீ இவவாறு சொல்லுதற்கு மாலேறினையோ ? மயக்குமருந் துண்டாயோ? வென்ற வாறு.

என்னை மயக்கமெனில், அது மேலே கூறுவர். 'புகை' என்பது-யோஜனை; 'எததுணையு மகன்' றென்பது - 'இருநூற்றைம்பது யோஜனை யகன்' றென்ற வாறு. (௫௪)

713 ஒன்றினு ளொன்று புகலில வென்ற வுயிர்களெல்லா
நின்றன தந்த மகலமு நீளமும் பெற்றனவாய்
நன்றுநீ சொல்லுதி நாந்தொக் கிருந்துழி நல்லுயிர்க
டுன்றின வென்பது சொல்லா தினியென்ன சொல்லுதியோ.

(இ - ள்.) ஒரு பொருளி லொருபொருள் புகாதென்று சொல்லுதலால் ஒருயிருள் ஒருயிர் புக்கடங்கா தென்று சொல்லப்பட்டனவாகிய உயிர்கள் தத தம் அகல நீளங்கள் பெற்று நின்றனவென்று சொல்லுதி யன்றே ; அஃதா யின் நாம் பலர்சேர விருந்தவழி யோருயிரு ளோருயிர டங்கிற் றாயின் மூர்த்தமாகிய விவை பல சேர்ந்தாற் பிரத்யக்ஷ விஷயமாக வேண்டாவோ ? இதற்கென் சொல்லுதி ? யென்றவாறு. (௫௫)

714 தானுள தாய வழியவன் றன்பா லியல்பெனலா
மூனுள தாய வுயிர்ப்பிர தேச முணர்வதுபோல்

1 அஸதி - விளையாட்டு. 2 விஹதி - கேடு. 3 பிரகிருதி-மூலதத்துவம்.

வானுளம் போயுழி மன்னு மறிவிலை யேலதனை
நானுள தென்றுரை யேனதற் கியாரினி நாட்டுகிற்பார்.

(இ - ள்) யாதொரு பொருளாயினும் அது தானுளவழியன்றே அதற்குப் பாலாகிய வியல்பு முண்டாவது. ஆனால், சரீரகதமாகிய விடமொழிய வொழிந்த விடத்துயிர்ப்பாலாகிய அறிதலும், அறிவித்தலும் பெறப்படாவெனில், அவ வழி ஜீவனில்லை யென்று சொல்லுவன்; அதனை யுண்டென்று நாட்டுவார் யாவரென்றவாறு.

சரீர பிரதேசதக் காணப்பட்ட ஆத்மாவைக் காணப்படா தொழிந்த விடத்திலு முளதென்று ஒரு பிரதேசதக் காணப்பட்ட அக்கினி முதலாயினவற்றை யெல்லாவழியு முள வென்று சொல்லுதலுமாம். அவ்வாறாகில் 1 பிராதேசிகமாயிருப்பதோர் பொருளு மில்லையாகிப் பிரதியக்ஷ விரோதமுமாய், இதுசேதனம், இது அசேதனம், இது ஜலம், இது அக்கினி யென்பது முதலாயின பெறப்படாவாகி எல்லாப்பொருளும் 2ஸங்கீர்ணங்களும், 3வியதிகீர்ணங்களுமாகிக் கெடு மென்பது. (௬௬)

715 ஒன்றென நின்ற வுயிர்தா னுருவித னாதலினாற்
பொன்றுந் துணையும்பல் போமெய்தும் பூசணிக் காயினைப்போ
லின்றெனி னாகம மாறதுவா மினி யவ்விரண்டு
மின்றெனிற் சால வெளிதாம் பிறவத னின்மையுமே.

(இ - ள்.) ஒன்றென்று சொல்லப்பட்ட ஜீவன் மூர்த்த மென்று சொல்லுதலால், ஒன்றென்று சொல்லப்பட்ட பூசணிக்காய் சேதிக்குந்தோறும் பலவான வாறுபோல, உயிருமொரு சஸ்திரவிசேஷத்தால் சேதிக்க வொன்றென்று சொல்லப்பட்ட வுயிர் பலவேறு வகைப்படும்; மூர்த்த மன்றெனில் ஆகமவிரோதமாம்; மூர்த்தமுமன்று, அமூர்த்தமுமன் றுயிரெனில் மூர்த்தமும், அமூர்த்தமு மில்லாத பொருளில்லை; கரவிஷாணம் போல வென்றதற் கின்மை சொல்லுத லெளிதா மென்றவாறு. (௬௭)

716 எண்டனை யாக்கி யிடவகை யுட்பொரு ளீறுசொல்லி
மண்டல மாக்கி மறுத்துங் கொணரு மனத்தினையேற்
கண்டிலை நீமெய்ம்மை காழ்ப்பட்டு நின்ற கனவுயிர்க்கெண்
ணுண்டெனி னில்லை யகன்றடு மாற்ற முலப்பின்மைபோல்.

(இ - ள்.) லோகத்துப் பிரதேசந்தோறும் அநந்தானந்தம் ஜீவனாகி லோகமெங்கு மிடைந்து கிடக்கின்ற ஜீவன்களை யெல்லாம் ஒரு தொகையுட்படுத்தித் தொகையிட்ட ஜீவன்கள் ஒரோ வொன்றாக முக்தமாக ஜீவன் மாளுவதாக்கி, அது மாளாமற்கு முக்த மான ஜீவனை மீட்டும் பிறப்பித்து மண்டலமோக்ஷ மாக்கு

1 பிராதேசிகம் - இடமுடையது. 2 ஸங்கீர்ணங்கள் - கலந்து நிலையழிதல்.
3 வியதிகீர்ணங்கள் - முறண்பட்டு நிலை யழிதல்.

கின்ருய் ; [1]'' கைநம்தொாஃஸரோவ்யாஃ நவஸாநஸு'' என்பதனல் அனநதமென்றதன் பொருள் மாளா தென்ற வாறன்றே? ஜீவனுக்கு ஸம் ஸாரந [2]தொகைப் படாமையின் மாளாதவாறு போல, ஜீவராசியும் தொகைப் படாமை பல பல ஜீவன்களும் மோக்ஷிப்பினும் ஜீவன் மாளாதென்பது. என்னை? மஹா பரிமாணததன வாகிய சமுததிர பூமிகளது ஆழமு [3]மடுப்பமும் வதஸாந தோறும்பகுவித நதிகளால் பூமியுள் மண்கரைத்து ஸமுத்திரதது்ப் புக விடப் பட்டும் மாளாத வாறு போல வென்பது. [4]ஸஸ்யாதிகளால் பூமிக்கு விருததி சொல்லினும் அது பூமியுள் நின்றும் எழுநது பூமியுள் வீழ்தலில் பூமிக்கு விருததியில்லை யாதலில் தொகைப்படாதது மாளா தென்பது.

என்னைத தொகைப் படாத வாறு பகவானது கேவலக்ஞானத்தால் அளக் கப்பட்டதன்றே யெனில், நாழியாலளக்கப்பட்ட பொருள் நாழியான வாறு போல, அநநதமாகிய கேவலக்ஞானத்தா லளக்கப்படுதலிற் பொருள் அனநத மென்றலில் தொகையுடைத தனறென்பது. இன்னதுணை யென்று தொகைப் பட வறியானகி லிவன் பொருட்டொகை அறிந்திலனன்ரே வெனில், தொகைப்படு பொருளைத தொகைப்படுதெதி யறியாறுயினன்றே இவனறிவிற் குக் குற்றமாவது ? தொகையுடைததல்லாப் பொருளை யவ்வாறறிதல் குற்றமன் றெனபது.

அன்றியும் ஆதித்ய கிரணத்தாற் பொருள்கள் பிரகாசிக்கப்படுகின்றவழித தொகையுடையன தொகையுளவாகவுந் தொகையில்லாத [5]தொத்துக்கண் முத லாயின தொகையில வாகவும் பிரகாசிக்கப்படுகின்ற வாறுங் காண்கினறதில்லை யோ வென்பது. (௫அ)

வேறு

717 மேற்சேர தீயோ டுயிர்காற்று விலங்கு சேராம்
பாற்சேர நீரு நிலந்தானும பணிந்த சேரா
மேற்சேர மேற்போம் விலங்கோடு விலங்குசேர்கீ
ழாற்சே ரவிழும் மவை யென்னினு மாவ தென்னே.

(இ - ள்-) அக்கினியுஞ் சீவனு மேற்சேர ; காற்று விலங்குசேர் ; நீருநிலமுங கீழ்ச்சேர ; இவற்றுள் மேற்சேர மேனேக்கியெழும் ; விலங்குசேர் குறு [6]விலங்கு நெடுவிலங்கு மோடும் ; கீழ்ச்சேர கீனேக்கி விழும் என்றிவவாறு சொல்லினு நினக்கு ஒருபயனில்லை யென்றவாறு. (௫௯)

718 தீயு முயிருந் தமக்காய திசையி ஞலே
போயு மொழியா திவணிற்றல் பொருத்த மன்ருல்

1 அநந்தோஸ மாப்யோ நவஸாநஸ்ச. 2 தொகை - கணக்கு.
3 மடுப்பம் - "என்ஞேற்றனே" என்னும் மருதக்கலி யீளுரையிடத்து, 'மடுப்பை' என வந்திருத்தல் காண்க. 108.
4 ஸஸ்யாதி - பயிர்வகை. 5 தொத்துக்கள் - கொத்துக்கள்.
6 விலங்கு - விலகிச்செல்லல.

வீயும் வகையும் வினையாக்குந் திறமு மெல்லா
நீயு மவற்றை நினையாயுள வாக வன்றே.

(இ - ள்.) அக்கினியுஞ் சீவனும் மேற்சீரெனில், எப்பொழுதும் மேனோக்கிப் போவதல்லது இவ்விடத்து நிற்கப்பெறா ; உயிர் மேனோக்கி யேறுமாகில், யா மிந் நெடுநாள் சந்திர மண்டலத்துச் செல்லாதவா றென்னோ ? அது பிருதிவி விசேஷமாதலிற் கீழே விழுகின்ற தன்றோ ? ஜீவன் மேனோக்கிப் போமெனில், இதனுக்குக் கர்ம பந்தவசமாகிய ஜனன மரணாதி ஜீவனுக்குளதாகச் சொல்லாயோ ? சொல்லில், விலங்கு நீராயும் போய்ப் பிறக்கவேண்டு மன்றோ வென்பது. (சுo)

719 தென்றைய [1]துளையத் திசைதானுறப் போய காற்றேற்
பின்றை யொருநாட் பெயராததோர் பெற்றி யஃதான்
முன்றை தழுவி முனிவார்க்கும் வடநதை யத்தா
வின்றைப் பகலே யிதன்மெய்ம்மை யிசைக்கிற் றியோ.

(இ - ள்.) தென்றல் வடக்குப் போனால் மீளாதொழிதல் வேண்டும் ; மீளில் அநித்யத்வ பிரசங்கமாம் ; தைமாசததிற்கு முன்னாக வுண்டாகிய வாடை தெற்குப் போகின்றபொழுது முன் வடக்குப்போன காற்று மீண்டதோ வது பிறிதொரு காற்றோ ? அருததி யூதப் பிறநத காற்று மேனோக்கி யெழுவதும், சுவாஸாதி வாயுக்கள் கீழ் நோக்கி விழுவதூஉங் காண்கின்ற திதன் மெய்ம்மை யினறே யறிந்து சொல்லென்றவாறு. (சுக)

720 முன்சென்று வீழுந் நிலநீ [2]ரை முகிலு ணின்று
பின்சென்று பெய்யுந துளிதானும் பெருந் தவத்தா
யென்சென்ற தெய்துந் திறந்தன்னை யெனக் குணா
நின்சென்ற வாற்றா லுரைத்தானெறி யாற்ற நன்றே.

(இ - ள்.) நிலமும், நிலத்து நீரும் கீழ்நோக்கி வீழ்கின்றன வாயின மேனின்று விழுகினற மழைத்துளி செனறெய்துமாறு சொன்னையாயின் மிகவு நன்றென்றவாறு. (சுஉ)

721 பாலெங்கு மோதப் படுகின்ற பதப் பொருட்குக்
காலங்கள் சொல்லா யதுதானுன் கணக்கு மென்றாற்
சீலங்கள் காத்துக் குணமின்மையைச் செப்பு கின்றாய்
மாலிங் குடையை யதுதீர்க்கு மருந்து முண்டோ.

(இ - ள்.) பாலுஞ் சீரு மோதப்படுகின்ற பஞ்சாணுக்களுக்கு ஒரு காலமுளதாகச் சொல்லாய் ; ஆம்பொழுதா மென்று நியதி சொல்லுதி ; பொருள் அவிசலித நித்யமென்று சொல்லுதி ; புடை பெயர்வதாகவுஞ் சொல்லுதி ;

1 உளை - ஒலி. 2 ஐ - சாரியை ; அல்லது அழகு.

விரத சீலானுஷ்டானங்கள் வேண்டுதி ; அதனுலொரு குணமுண்டாகச் சொல்லாய் ; இவ்வாறு பிதற்றிச் சொல்லுகின்ற நின் பித்தந் தீர்த்தற்கு மருந்தில்லையென்றவாறு. (௬௩)

722 நோயுற்ற நன்போற் குணமொன்றில னுய யானும்
பேய்மற் றிவடா னெனக்கண்டோர் பெரிய வன்று
னீமற்றி துண்ணென் றறநல்க விளங்கப் பெற்றேன்
[1]வாமத்து னீயும் மதுபோலு மருந்தில் லையே.

(இ - ள்.) நின்னைப் போலக் குணமிலனுகிக் கண்டார்க்குப் பேயாய்த் திரிய வொரு பெருந்தவனீ யிம்மருந்துண்ணென்று தர்மாமிர்தந் தரப் பெற்றேன் ; அந்தத் தர்மாமிர்த மருந்திற்குப் பிரதான ஔஷதமாகிய பரமேஸ்வர பக்திபோலும் மருந்தில்லை யென்றவாறு. (௬௪)

723 [2]நோயைத் துணிந்தே யுறுநோய்முத னுடி யந்நோய்க்
காய மருந்தே யறிந்தூட்டுமஃ துண்டு காட்டிற்
[3]பாய மறுக்கும் படியாமது பல்லு யிர்க்குங்
கூயத்தி னென்னை குரவருப தேச மென்ருள்.

(இ - ள்.) நோயையும், நோய்க் காரணத்தினையும், நோய் மருந்தினையுமறிந்து மருந்துண்டால், நோய் தீருமாறுபோல ஸம்ஸாரத்தையும், ஸம்ஸார காரணத்தையும் தத்விருத்தமாகிய ஸம்ஸாரம் தீர்க்கும் மருந்தாகிய தர்மாமிர்தத்தையுமறிந்து உபயோகிக்கில் ஸம்ஸார ரோகம் தீரும் ; இது பரமகுரு உபதேசம் என்றவாறு. (௬௫)

724 சாதி முதலாப் பிணிதாமிவை யப்பி ணியிற்
காதி [4]யறியில் லவைதீவினை யூண தனுற்
றீதின் றிதனில் லழுந்தல்திரி தோடத்தி னுல்
வேத னையது தீர்ப்பது மெய்யுணர் வாமே.

(இ - ள்.) ஸம்ஸார ரோகமாவது - பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்பன ; அவற்றிற்குக் காரணம் - கர்மம் ; அக்கர்மம் - மித்யாஞானம், மித்யா தர்சனம், மித்யா சாரித்திரம் என்னும் திரிதோஷத்தாலாம் ; அந்த ரோகம் தீர்க்கும் மருந்தாவது - அந்தத் திரிதோஷத்துப் பகையாகிய ஸம்யக் ஞானுதி மூன்றில் ஸம்யக் தர்சனத்திற்கும், ஸம்யக் சாரித்திரத்திற்கும் காரணமாகிய ஸம்யக் ஞான மென்றவாறு. (௬௬)

---

1 வாமத்து - வாமனுடைய பக்தியாகிய மருந்து.

2 தி. கு. 948. 3 பாயம் - பாசம்.

4 அறியில்லவை தீவினை - அறிதல் இல்லாத மித்தியா ஞானம் முதலிய மூன்றின் வடிவமாகிய தீவினை.

725 மானின்ற நோக்கின் மறவேனெடுங் கண்ணி னல்லாய்
மேனின்ற வெல்லா மிகநல்லவிம் மெய்யு ணர்ச்சி
தானின்ற தன்மை தவிராதுரைக் கிற்றி யேனின்
னூனின்ற வாறே பொருளோக்குவன் யானு மென்றான்.

(இ - ள்.) மான்போன்ற பார்வையினையும், வேல் போன்ற கண்ணினையு முடைய நல்லாய்! நீ சொல்லிய வெல்லாம் மிக நல்ல; இனி மெய்யுணருந் திறஞ் சொல்லுதியாயின் நினது சாஸ்திரத்தின் வழியே யானப் பொருள்களை யறிவேனென்றா னென்றவாறு. (கஎ)

726 நின்ற விரலுந் நிலையாழ்ந்து முடங்க லாயிற்
சென்றவ் விரலும் மெனத்தானின் கூற்ற தாயிற்
றென்றவ் விரலே யுறலுண்மையு மின்மை யும்மா
மென்றவ் விரலே யிதுவென்றனள் வேற்க ணல்லாள்.

(இ - ள்.) நீலகேசியார், தங்கை விரலு ளொரு விரல் நின்றவாறு காட்டி அவவிரலை முடக்கிநின்ற தன்மை யாழ, முடங்கிய தன்மை மிகுப்ப, அவவிரல் முடக்கதை யடைந்தவாறு காட்டி யவ்விருகூறுமாகிப் பரிணமிததொரு விரலே யென்று சொல்லி, இவவாறே சில பர்யாய மாழச் சில பர்யாய மிதப்ப வஸ்து நிலபே றுடைததாதலின், நித்யா நிதயாத்மகமாமாறு சொல்லி, அவ் விரல் தா மொரு வழி யுளதாயு மொரு வழியிலதாயு மிருந்தவாறு காட்டி யவ னைத தெளிவித்தா ரென்றவாறு. (கஅ)

727 ஆழ்ச்சி யொருபா லதுவல்லன தம்மோ டாழா
தேழ்ச்சி யொன்பா லிதுதன்னொடு மின்ன தென்னச்
சூழ்ச்சி யமைந்த துணைத்தோளியர் சொற்க ளொன்று
தாழ்ச்சி மனத்தா லிதுதத்துவ மென்ற னன்றே.

(இ - ள்.) ஒரு பர்யாயந் தாழ்ந்ததாகவும், ஒரு பர்யாய மிதந்ததாகவும் அப் பொருளோடு கூட்டிக்காட்டி இப்பொருளை நித்யாநித்யாதமக மென்றும், அஸ்திநாஸ்தி ஸ்வபாவத்ததென் றும் எனக்கு விளக்குமாறு சொல்லினராதலில், அவரது வார்த்தாசாதுர்ய மிருந்தவாறென்னென்று நீலகேசியாரை வியந்து உப சாந்த மனத்தனா யிதுவே தத்துவமென்று புத்தி பண்ணினனாக வென்ற வாறு. (கக)

728 பொய்ந்நின்ற வெல்லாம் புரைத்தாயினிப் பூர ணன்னே
மெய்ந்நின்ற பெற்றி யறிந்தாயிதன் மேலு நன்றாக்
கைந்நின் றுமுண்டுங் கடைப்பள்ளி வழியு மாக்கிச்
செய்ந்நின்று நீசெய் தவந்தானெனச் செப்பி னளே.

(இ - ள்.) மித்யாதவமெல்லாம் போக்கி வஸ்து [1]யாதாத்மியமு மறிந்தனே; இனி நீ இப்பள்ளிக்கண் ணிருந்து தபசு பண்ணுகவென்று சொன்னு ரென்ற வாறு.

கடைப்பள்ளி வழியுமாக்கி யென்பது - இப்பள்ளியிடத்து நின்வழிச் சிலரைத் தார்மிகருமாக்கி யென்றவாறு. (எ௦)

729 கல்லாதறிந்த கடவுள் ளிறை யாகு மெய்ந் நூல்
சொல்லானு மல்ல னவன்சொல்லின தாகு மும்மூன்
றெல்லாப் பொருளுந் தம்பான்மை யியல்பு மேன்று
பொல்லாத போக்கி யினிப்பூரண சென்மி னென்றுள்.

(இ - ள்.) கற்றலின்றி, மேகபடல நீங்க, ஆதித்ய கிரணம் [2]பிரஸரித்த வாறே போல ஆவரண நீங்க, பிரஸரிப்பதாகிய கேவல ஞானத்தால் சகல பதார்த்தங்களையும் பிரத்தியக்ஷீகரிதது அறிந்து கிருதார்த்தனுதலில் சம்பூர்ணனுகியவனே ஆப்தனுகும்; அவன்றன் ஆக மோபதேசம் பண்ணுதானுமல்லன், அவனுலருளிச் செய்யப்பட்ட ஆகமமு மொன்பது திறததானின்றது ; அப்பரமாகமத்துச் சொன்னவாறே எல்லாப் பொருள்களையும், அவற்றின் ஸ்வபாவங்களையும் மிதயாதவத்தினை நீங்க உணர்ந்து பூரணனுகி நீ செலுதவெதன்று சொனனு ரென்றவாறு.

ஆகம மொன்பதாவது - அங்க பூர்வ பஹிசுருதிகளை [3]அர்ததாபிதான பிரத்யயங்களா [4]லுறழவாம். (எக)

நீலகேசித்திரட்டில் ஆஜீவகவாதம் முற்றும்.



1 யாதாத்மியம் - தத்துவம். 2 பிரஸரித்தல் - பரவுதல்.
3 அர்த்தாபிதான பிரத்யயங்கள் - உரை, பெயர், கருத்துக்கள்.
4 உறழ - பெருக்க.

ஏ ழ ॥ வ து

# சாங்கிய வாதச் சருக்கம்

730 ஆங்கவன் சொல்லவவ் வத்தின புரத்து
ளோங்க வொருகொடி நட்டுரைக் கிற்பவ
னாங்க ணெவர்க்கு மறையென் றிருந்தவச்
சாங்கியன் றன்னைத் தலைப்பெயச் சென்றாள்.

(இ - ள்.) நீலகேசியாரும் பூரணன் சொல்ல, ஹஸ்தினபுரநகரத்து வாதஞ் சொல்லுதற்கு ஒரு கொடியெடுத்து அறைகூறி யிருப்பானொரு சாங்கியனைச் சென்று கண்டாரென்றவாறு. (க)

731 சென்றா ளவன்றன் சிரத்தையைக் கண்டோது
நின்றா ளவன்று னெறிபகர் கின்றனன்
பின்றான் பிரளையத் தாக்கமும் பேர்சியு
மொன்றா வகையா னுரைகளை யொட்டா.

(இ - ள்.) அவனுடைய முக பிரசாதங்கண்டு அவன்றனது சாஸ்திர மோதுவிப்பச் சிலரோதுவது பார்த்து நின்றாள். அயுக்தமான வசனங்களைப் பற்றிச் சிருஷ்டி, திதி, ஸம்ஹாரங்களாகிய தனது மார்க்கத்தினைச் சொல்லா நின்றானென்றவாறு. (உ)

732 [1]பாலொத்து நின்ற பரமாத் துமனொடு
மூலப் பகுதியு மல்லாப் பகுதியு
மேலொத் தியன்ற விதிவிகற் போடு
நூலிற் கிடந்தவ னுண்பொரு ளன்றே.

(இ - ள்.) சர்வ வியாபியாகிய பரமாத்ம தத்வத்தினையும், பிரகிருதி விகற்பத்தினையும் சாஸ்திரோக்தமான பொருள்கள் இவையென்று சொன்னானென்றவாறு. (ங)

733 ஒருங்கிருந் தார்கட் குடனவை யெல்லாம்
[2]பருங்கினன் மெய்யும் பராசரன் றன்னை
விரும்பினள் போல வினவின ளன்றே
யருங்கல மாய வறிவினுள் மிக்காள்.

1 பாலொத்து நின்ற - எப்பக்கமும் நிறைந்த.

2 பருங்கினன் - பருக்கினன்; மெலித்தல் விகாரம்; பருகுவித்தான் அதாவது, சொன்னான் என்பது இதன் பொருள்.

(இ - ள்.) தன்னுடன்கூட விருந்தார்கட்குத் தத்துவங்களை யெல்லாம் சொல்லாநின்ற பராசரனை விரும்பிக் கேட்பார் போல வினவினுள், ஞான ரததினுபாணத்தால் மிக்காளென்றவாறு. (ச)

734 என்னைப் பயந்தீ ரிஃதென்னெனக் கேட்டன
ணன்னுத லாயிது வென்னெறி யென்றனன்
னன்னனஃ தாயி னறிவி யெனச்சொல
வின்னன கேளென் றெடுத்தனன் சொல்லும்.

(இ - ள்.) அப்பரே! என் சொல்லுகினறீ ரெனறு நீலகேசியார் கேட்ப, யானென் மார்க்கப் பிரகாசம் பண்ணுகின்றேனென, அதனையெனக் கறிவிப் பீராகவென அவையிவை யென்று சொன்னு னென்றவாறு. (ரு)

735 மன்னுயிர் தெற்றன வில்லது மான்செருக்
கென்னவு மிந்திய மைநதைந தொருமன
மன்னதன் மாத்திரை யைந்தைநது பூதமும்
பன்னிய வையைம் பதப்பொரு ளென்ருன்.

(இ - ள்.) ஆத்மாவும், பிரகிருதியும், மஹானும், அகங்காரமும், ஞானேந் திரியமைந்தும், கர்மேந்திரியமைநதும், மனமும், பஞ்ச தன்மாததிரையும், பஞ்ச பூதமுமென விவை இருபத்தைந்து தததவமென்ரு னென்றவாறு.

தெற்றனவில்லது - பிரகிருதி; செருக்கு - அகங்காரம். ஞானேந்திரியம் ஐநதாவன - ஸ்பர்சன, ரஸன, க்ராண, சக்ஷு, சுரோதர மென்பன. கர்மேந் திரியமைந்தாவன - வாக், பாத, பாணி, பாயு, உபஸ்தம் என்பன. இவற் றின விஷயம் - வசன, கமன, கிரஹண, விஸர்க்க, ஆனந்தம் என்பன. பஞ்ச தனமாத்திரையாவன - சப்த, ஸ்பரிஸ, ரூப, ரஸ, கந்தம் என்பன. (சு)

736 எத்திறத தின்னுஞ் செய்யான்குண மொன்றிலன்
றத்துவ னின்பன பேதன லேபக
னித்திய னெங்கு முளனெடுங் காட்சியன்
றுதத னுடையனென் ருேன்றனு மென்ருன்.

(இ - ள்.) எல்லா வகையாலும் நிஷ்கிரியனும், நிர்க்குணனும், தத்வமா யுள்ளானும், ஸுகரூபனும், அபேதனும், [1]அலேபகனும் நித்தியனும், வியாப் தனும், திருஷ்டாவும், போக்தாவுமாயுள்ளானும் ஆப்தனென்று சொன்னு னென்றவாறு. (எ)

737 நின்று பரந்தரு வாய்ப்பொறி யேதுமிக்
கொன்று கிரிகையின் [2]றப்பியத் தம்மது

1 அலேபகன் - பற்றில்லாதவன். 2 அப்பியத்தம் - அவ்வியத்தம்.

சென்றுசெய் மானிற் செருக்கத்தி னீரெட்டு
மன்றியு மைவகைப் பூதமு மன்றே.

(இ - ள்.) அவிசலித நித்தியமாகி வியாப்தமுமாய் அமூர்த்தமுமாகி, இந்திரிய லிங்கங்களால் [1]வேத்திய மன்றாகி ஒன்றாகி நிஷ்கிரியமானது அவ்வியக்தமாகிய பிரகிருதி யென்பதாம்; அந்தப் பிரகிருதியிற் பிறந்த மஹானில் அகங்காரமாம்; அந்த அகங்கார தத்துவம் மனசும், பஞ்சதன்மாத்திரையும், ஞானேந்திரியமைந்தும், கர்மேந்திரிய மைந்துமாகப் பதினாறும் பிறக்கும்; பஞ்ச தன்மாத்திரையிற் பஞ்சபூதம் பிறக்கு மென்றவாறு. (அ)

738 ஐயைம் பொருளு மிவையிவை யல்லது
தையன் மடவா றத்துவ மிலலென
மைய லுடையவர்க் காமற்றை யார்க்கிவை
பொய்யென் றுரைத்தனள் போதரிக் கண்ணாள்.

(இ - ள்.) [2]பஞ்சவிம்சதி தததுவமாவன விவையாம்; இவை யல்லது வேறு தத்துவமில்லை யென்று சொல்லுதலும், நீலகேசியார் சொல்லுவார், நின்னைப் போல மயங்கினார்க்கு இவை தத்துவமாம்; தெளிவுடையார்க்குத தத்துவமாகாவென்று சொன்னா ளென்றவாறு. (கூ)

739 கதக்களி யானைமுன் கல்லெறிந் தாற்போற்
பதப்பொரு டம்மைப் பழுதென் றுரைப்ப
மதத்தினின் மிக்கவன் மாதரை நோக்கி
யுதப் பென்னுங் குற்ற முரையெனக் கென்ன.

(இ - ள்.) மதஹஸ்திமுன் கல்லெறிந்தாற் போல பதார்த்தங்களுக்குத் தூஷணஞ் சொல்லக் கேட்டுக் கர்வத்தான் மிக்கிருந்தவன், இநதப் பஞ்சவிம்சதி தத்துவத்தினுக்குச் சிறிதாயினுமொரு குற்றஞ் சொல்லென்று சொன்னானாக வென்றவாறு. (கο)

740 செய்யா துயிரெனச் செப்புகின் றாய்நின்னை
வையா யுயிருள தன்றெனின் வாக்கிவை
மெய்யாம் பிறசெய்கை யாதலி னாலிவை
மையா மினிநின்றன் மார்க்கமு மன்றே.

(இ - ள்.) ஆத்மா நிஷ்கிரியனென்று சொல்லுதலால், நீ நின்னை ஆதம தத்துவததுட் கூட்டப் பெறாய்; கூட்டில் நீயுமொரு ஆத்மா வாகுதி; ஆனால், நின்னுழை வாக்யப் பிரவிருத்தி முதலாகிய பல செய்கைகள் காண்டலில், ஆத்மனை நிஷ்கிரியனென்று நீ சொன்ன நெறி குற்ற முடைததா மென்ற

1 வேத்தியம் - அறியப்படுவது.
2 பஞ்சவிம்சதி - இருபத்தைந்து.

வாறு. நின்னை நீ ஆத்ம திரவியனல்லனென்று சொல்லுதியாயி லது பிரத்தியக்ஷ விரோதமாமென்பது. (கக)

741 எத்திறத் தின்னுஞ்செய் யானவ னென்றலிற்
றத்துவஞ் சொல்லுந் தலைமக னாகிய
சித்தியு மில்லாந் திருட்ட விரோதமும்
பொய்த்தலுள் ளிட்டவும் புல்லுமற் றென்னை.

(இ - ள்.) ஆத்மா சர்வதா நிஷ்கிரியனென்று சொல்லுதலால், சாங்கிய தத்துவஞ் சொல்லுவானொரு ஆப்தனுக்குச் சித்தியில்லையாம்; இனி ஆத்மா நிஷ்கிரிய னென்பது பிரத்தியக்ஷ விரோதமுமாம். என்னை?

[1]" ஸஹம்ஜாநாமி பஶ்யாமி கரோமி "

எனத் தனக்கும், [2]கரோதி, [3]பஶ்யதி, [4]ஜாநாதி யெனப் பிறர்க்கும் ஆத்மாவினது கிரியாவார்த்தை பிரசித்த மாதலால் இவ்வாறு பிரசித்தமான கிரியையில்லை யென்று சொல்லுதலால் பொய்யுரைத்தலு மாகுதி யென்று சொல்லவென்றவாறு. (கஉ)

742 பெருமை யுயிர்க்குரை யேன்செய்கை பின்னும்
இருமை யுயிரென தாமிடை யொன்றுங்
கரும வுயிரு மிவற்றினி னன்றே
யருமை யுடைச்செய்கை யாக்கமு மென்றான்.

(இ - ள்.) பரமாத்மாவும், அந்தராத்மாவும், கர்மாத்மாவுமென மூவகை ஆத்மாக்களுள்ளும் பரமாத்மாவுக்குக் கிரியை யுளதாகச் சொல்லேன்; ஒழிந்த என்னுடைய இருவகை ஆத்மாக்களாலுங் கிரியாபிரவிருத்தியா மென்றானென்றவாறு.

இடையொன்று - அந்த ராத்மா. (கங)

743 செய்யு முயிர்களுஞ் செய்யா வுயிர்களு
மெய்யி னுளவெனின் மேற்கோ ளழிதலும்
பொய்யும் பொதியறை மையுமற் றல்லவு
மெய்து மிதற்கினி யென்செய்தி யென்றாள்.

(இ - ள்.) ஆத்மா நிஷ்கிரிய னென்று முன் சொல்லி வைத்துப் பின்பு கிரியாவிரகிதமான ஆத்மா வொன்றும், கிரியா வத்தான ஆத்மாக்களிரண்

1 அகம்ஜாநாமி, பஶ்யாமி, கரோமி - நான் அறிகிறேன், பார்க்கிறேன், செய்கிறேன்.

2 கரோதி - செய்கிறான். 3 பஶ்யதி - பார்க்கிறான்.

4 ஜாநாதி - அறிகிறான்.

டும் சரீரத்துள வெனில், பிரதிஜ்ஞாஹாநி முதலான தோஷங்களாம்; இதற்கென் செய்தி யென்றவாறு.

பிரதிஜ்ஞாஹாநி யாவது - பஞ்சவிம்சதி தத்துவத்துள் ஒன்றென்று சொல்லப்பட்ட ஆத்மாவை மூன்றென்று சொல்லுதல். பொய்யாவது - கிரியையுடைத்தாக அனுபவிக்கின்ற ஆதமாவை நிஷ்கிரிய னென்று சொல்வது. பொதியறையாவது - இல்லை யென்று சொல்லப்பட்ட கிரியையே உள்ளது போல வலிந்து சொல்லுவது. மற்றல்லவு மெண்பது - 1ஸப்த விம்சதி ததவமாதலும், ஒரு சரீரதது மூன்று ஆத்மாவுளவாதலும் முதலாயின. (கஐ)

744 சோம்பன் குணமிலன் றென்று வொளிப்பினை
றோம்பற் கருமையி னுண்ணுமாற் றாயினு
நாம்பின்னைச் செய்தடுதெ னன்கவ னின்றியும
போம்பொழு தேலவ னுப்பொரு ளென்றே.

(இ - ள்.) நிஷ்கிரியனு நிர்க்குணனும அனுபவ பிரசிததனல்லா தானுமாகிய பரமாத்மனுண்பனுயினு மோம்புதற் கருமையினவனுற் பயந்தெதென்னை? அவனை யொழியவும் அந்தர கர்மாத்மாக்களாற் கார்யசிததி யாகலி னுமிவனைக் கல்பித்த தென்னை யென்றவாறு.

உண்ணு மாற்றாயினு மெனபது - நிஷ்கிரிய னுதலில் இவன் போக்தாவாதலு மரிது; போக்தாவாயினும் ரக்ஷித்தற்கரிய னென்று ஹாஸ்யஞ் சொன்னவாறும். (கரு)

745 ஆண்டரு வாய்த்தொழில் யாதுமில் லாயின்
வேண்டின்மெய் யாகி விகிர்தி விகற்பொடு
தீண்டலு மொட்டலுந் தேரினி லாதவன்
காண்டற்குந துத்தற்குங் காரண மென்றே.

(இ - ள்.) ஏகாந்தம் அமூர்த்தனும், நிஷ்கிரியனுமாகிய இவன் சரீராதி 2விக்ருதியோடு தீண்டுதலும் ஒட்டுதலுமிலனுதலின், அறிதல், காண்டல், அுத்தலுமுடையனல்ல னென்றவாறு. (கசு)

746 முத்தாத் துமனை முனிந்தோ வதுவன்றிப்
புத்தாத்து மாக்கட் புரிந்தோ விரிந்தெங்குஞ்
சித்தாத் துமனுய்த் திரிவின்றி நின்ற
சுத்தாத் துமனைச் சுழற்றுவ தென்றாள்.

(இ - ள்.) பரமாத்மாவை வெறுத்தோ, அஃதன்றிப் பரமாத்மனேடுகூடியன்றிக் கார்யகரமல்லாத அந்தர கர்மாத்மாக்களை விரும்பியோ, வெவ்விடததும் வியாப்தனுகி முடிந்த ஸ்வரூபத்தினை யுடையனுகி, அவிசலித நித்தியனுகி நின்ற சுத்த பரமாத்மாவை ஸம்ஸாரத்து நிகழ்த்துவதியாதினு லென்றவாறு.

1 ஸப்த விம்சதி - இருபத்தேழு. 2 விக்ருதி - மாறுபாடு.

நித்தியனும், வியாபியுமாகிய ஜீவனுக்குப் பிரகிருதி முதலாயினவற்றோடு கூட்டமும், தேசாத் தேசப் பிராப்தியு மில்லாமையில் இகலோகத்தினின்றும் பரலோகத்துச் சேறலும், பரலோகத்தினின்றும் இகலோகத்து வருதலும் இன்மையில், ஸம்ஸாரங் கூடாதென்பது போந்தது. (கஎ)

747 பரமாத் துமனைப் பளிங்கடை போல
வருமாத்து மாக்களின் மன்னும் விகாரந்
தருமாத் திரையன்றித் தக்கதோன் றுக
[1]வொருமாத் துமனை யுரைத்திடு கென்றாள்.

(இ - ள்.) பரமாத்மாவை, பளிங்கைச் செம்பஞ்சி யடைந்து [2]விகரிப்பிக்குமாறுபோல, விகரிப்பிப்பனவாகிய அந்தர கர்மாத்துமாக்களால், கர்த்ருத்வாதி விகாரங்களைப் பரமாத்மாவிற்குச் சொல்லுதல் மாததிரமல்லது, பிரகிருதியாதியோடு கூடுதற்குங் கர்தருத்வாதி விகாரமடைதற்கும் யோக்கியமாவது பரிணமியான ஆத்மாவன்றோ? அதனைச் சொல்லுவாயாக; நித்தியனும், வியாபியுமாகிக் காரியகரமல்லாத ஆத்மாவைச் சொல்லா தொழி யென்றவாறு. (கஅ)

748 செல்லு மெனினுஞ் சிதையுஞ் செல்லானென்று
சொல்லு மெனினுமுன் சொல்லிய தாமெய்தும்
பல்லுறன் றுவும் பதையா துரையன்றி
யெல்லுந் துணையு மிருவினை யென்றே.

(இ - ள்.) புடை பெயர்ச்சி யுடையதற்கல்லது பிரகிருதியாதி ஸம்பர்க்கமுங் கர்த்ருத்துவாதி விகாரமுங் கூடாதாதலின், பரமாதமா புடைபெயர்வதோ வென்றற்கண் புடை பெயர்வதெனின் நித்தியமும், வியாபியு மென்பது கெடும்; புடைபெயராதெனில், பிரகிருதி யாதி ஸம்பர்க்கமும், கர்தருத்துவாதி விகாரமும், மஹதாதி தோற்றமுங் கூடா.

இனி, நீ நிதயத்வ சாதனுர்ததமாக தந்த தால்வாதி வியாபாரங்களை விட்டு அந்தியளவு மிருப்பாயாக வென்றவாறு. (கக)

749 யானென தென்னுஞ் செருக்கினை யீன்பது
மானெனப் பட்டது மன்னுமோர் சேதனை
[3]தானினை யாக்குத றக்கின்ற சேதனை
மேனினைத் தானுரைத் தானல்ல னென்றாள்.

(இ - ள்.) யான், எனதென்னும் ரூபததாகியா, அகங்காரத்தைப் பிறப்பிப்பது மஹானென்பதாம்; அந்த மஹான் சேதன விசேஷமாதலில், [4]"ப்ரக்ருதெர்மஹாந்" னென்பதோத்தாகலின், அசேதனமாகிய பிரகிருதி பிறப்

1 ஒரும் - பரிணமிக்கும். 2 விகரிப்பிக்கும் - வேறு படுத்தும்.
3 தானினை - தன்னை; மகானை. 4 "பிரகிருதேர் மஹான்" -

பிப்பது பொருந்தாது. சேதனு சேதனங்கள் [1]விருத்தங்களாதலில், அக்கினியால் ஜலமும், ஆகாசத்தாற் சரீர பிண்டமும்போல பிரகிருதியால் மஹான் தோற்றுதல் கூடாது. கூடாமையில் அதிற் பிறப்பவாகிய ஷோடச கணங்களும், அவற்றிற் பிறப்பதாகிய பஞ்சபூதமும் பிறத்தல் கூடாமையில் முன்பு இந்தத தத்துவஞ் சொன்னவன் விசாரியாது சொன்னு னென்றவாறு.

[2]"𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌮𑌹𑌾𑌂𑌸𑍍𑌤𑌤𑍋𑌽𑌹𑌂𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌗𑌣𑌶𑍍𑌚
𑌷𑍋𑌡𑌶𑌕𑌃 𑌤𑍇𑌷𑍍𑌵𑌪𑌿𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌂𑌚𑌭𑍂𑌤𑌾𑌨𑌿"

—சாங்கிய காரிகா - ௨௨.

என்பது அஸம்பந்தப் பிரலாபமாம். பரமாதமாவோடு கூடியும் பிரகிருதியிவை பிறக்குமென்னிலும் நித்யமும் வியாபியுமாகிய ஆதமாவுக்கு பிரகிருதி ஸம்பர்க்க முதலாயின கூடாது. கூடில் ஆத்மா நிதயாநிதயாத்மகமாய் நின் சித்தாந்தங் கெடுமென்பது. (௨௦)

750 மான்முன் பகுதி வழித்தோ வழித்தன் றித்
தான்முன் பிறிதோர் பொருளோ விரண்டொடு
மூன்றுவ தொன் றினி யின்று விருந்தவிச்
சான்று ரறியவுஞ் சாற்றினி யென்றாள்.

(இ - ள்.) மஹானென்பது பிரகிருதியைப்பற்றிப் பிறந்ததோ? அஃதன் றி சுவாதந்திரமாகியதொரு அர்த்தாந்தரமோ? இரண்டுமன்றி மூன்றுவதொரு விகல்பமில்லை; இதற்கொன்று சொல்லென்று சொன்னு ரெனறவாறு.

751 மூதற்பொரு ளேயாங் குணமது வாகின்
அதற்பிறி தென்னி னதுமன்று முண்டா
விதற்கினி நீசொலற் பாலதென் னென்றாள்
சுதப்பொருண் மேனன் றுஞ் சொல்லுதல் வல்லாள்.

(இ - ள்.) மஹான் பிரகிருதி வழித் தோன்றியதென்னில், [3]மிருததின வழித தோன்றிய மிருத்துப்போல அசேதனமாகிய பிரகிருதி வழித் தோன்றிய மஹானும், அசேதனமாய் அவ்வாறே அதனிற் பிறந்தனவு மெல்லாம் அசேதனமாய்ச் சேதனே யென்பதொன் றில்லையாம். பரமாத்மாவோடு கூடிய பிரகிருதியிற் பிறப்பினுஞ் சேதனு சேதனமாவ தல்லது சேதனமேயாய்ப் பிறப்பது கூடாது. சேதனு சேதனங்கள் கூடிய வழி சேதனமே பிறக்கில் அசேதனமே பிறக்கவு மமையும். இனி பிரகிருதி வழித் தோன்றியதன்றிப்

1 விருத்தம் - விரோதம்.

2 பிரகிருதேர் மஹாந் ததோ ஹங்கார ஸ்தஸ்மாத் கணஸ்ச ஷோடசக: தேஷ்வபி தன்மா த்ரேப்ய: பஞ்ச பூதாநி. —சாங்கிய காரிகா - ௨௨.

3 மிருத்து - மண்.

பிறிதொன்றென்னில், நித்யங்களும், வியாபிகளுமாகிய கார்ய காரணங்களல்லாதவற்றில் வந்ததன்ருகி, ஞானுதி பிறததற்கு ஆதாரமாகிப் பரிணுமியாகி, ஸ்வதந்திர வஸ்துவாய், [1]" ப்ரக்ருதெ:ர்மஹாந் " என்பது கெடும். இதற்கென்ன உததரஞ் சொல்லுதி யென்ருரென்றவாறு. (உஉ)

752 அருவாய காரண மாயவ் வியத்த
முருவா மறுதலை யொப்பிக்கு மென்பாய்
மருவாத சொல்லினை [2]மாதிரந் தானே
பருவாய்ப் பதக படைத்திடு மென்ருய்.

(இ - ள்.) அமூர்த்தமும், அகாரணமுமாகிய பிரகிருதி மூர்த்தமும், ஸகாரணமுமாகிய மஹானை பிரஸவிக்குமென்று சொல்லுவாய். இவ்வாருகிய ஆகாசததாலது பிறந்ததென்று சொல்லா யென்றவாறு. (உ௩)

753 பகைக்குண மாகிய பகுதி விகுதி
மிகைக்குணந் தோன்றுநின் மேற்கோ ளழித்துத்
தொகைக்கணம் யாவையுஞ் சூனிய மாமா
நகைக்குண மல்லது நம்பலை யென்ருள்.

(இ - ள்.) பிரகிருதி, [3]விகுருதிகள் அந்யோந்ய விருத்தங்களாதலில் ஒன்ருென்றைப் பிறப்பியாமையிற், " ப்ரக்ருதெ:ர்மஹாந்" என்பது முதலாகிய பிரதிஜ்ஞையுங் கெட்டு ஷோடச கணமும் பிறவுந தோன்ரு வாதலில், சூன்யமாய் ஹாஸ்ய காரணமா மென்றவாறு. சூன்யமாய் விரோதமாவது - சேதனு சேதனமாதல். (உச)

754 புத்தேந் திரியமுங் கம்மேந் திரியமும்
பத்தேந் திரியத்தோ டொன்ருப் படைத்தனை
பித்தேந் திரியமும் பேயேந் திரியமும்
குத்தேந் திரியமுங் கொண்டிலை யன்றே.

(இ - ள்,) ஞானேந்திரிய மைந்தும், கர்மேந்திரிய மைந்தும், மனசும் எனப் பதினெருு தத்வஞ் சொல்லினை; இவ்வாறு தத்வங் கொள்ளில் சரீரத்துக் கைகாலும் பிரதானமாகில் பித்தமும், சிலேஷ்மமும், வாதமும் இந்திரியமாகக் கொள்ளாதவாறென்னே வென்றவாறு,

பேயமென்பது - பானம் பண்ணப்படும் வஸ்து; அதனைப்பற்றி வரும் சிலேஷ்மாவைப் பேயமென்று சொன்னுர். குத்துதலாவது - வலிததலாதலிற் குத்தென்று வாதத்தைச் சொன்னுர். (உரு)

1 " பிரகிருதேர் மஹான் " 2 மாதிரம் - ஆகாயம்.
3 விகுருதிகள் - வேறு பட்டவை.

755 தந்திர மாவன தாமிடைத் தோன்றுவ
வந்தர வாத்தும னேந்தென வேண்டினே
சிந்தனை யுள்ளிட்டுச் சீவன் குணமெனி
னிந்திரன் ருனு மிணை நுனக் காமோ.

(இ - ள்.) பரமாத்மாவாகின்ற வரசனுக்குந் தந்திரம் போன்றனவாகிப் பஞ்ச விம்சதி மத்தியத்துத் தோன்றுவனவாகிய ஞானேந்திரியங்களாநதும் அந்த ராதமா வென்று வேண்டினே ; மனசினேடுங்கூட இவ்வாறு ஞானததினை யும் ஜீவ குணமாகவும்,ஜீவன் அவற்றிற் பிரித்துப் பெறப்படாது ஒற்றுமை வேற் றுமை வகையால் நின்றதாகவும் புததி பண்ணினையாயின் நினககு [1]ஸத்ருசர் யாவருமில்லை யென்றவாறு. (உக)

756 கைகளுங் காலு மிருசா ரிடக்கரு
மெய்திய வாக்குமற் றிந்திய மாமெனிற்
செய்யும் புலனு மறியு மறிவுமற்
றெய்த வுணர்ந்திங் கெடுத்துரை யென்றுள்.

(இ - ள்.) கைகளும், கால்களும், அபானமும், உபஸ்தமுமாகிய விருவகை யிடக்கரும் வாக்குமென று சொலலப்பட்ட ஐந்துங் கர்மேந்திரிய மென்கின்று யாயில், அவற்றின் விஷயங்களும், அவற்ருல் அறியும் அறிவுகளும் அறிந்து சொல்லென்றவாறு. (உஎ)

757 காட்டிய வாறுங் கருமந்தி ருமெனி
னூட்டு முலையு முதடும் புருவமுங்
மாட்டுங் கவுளு மறமெல்லும் பற்களும்
கூட்டி மிடறுங் கொளக்குற்ற மென்றே.

(இ - ள்.) கைகளால் கிரஹணமுங் கால்களாற் கமனமும், இடக்கிரண் டாலும் விஸர்க்க ஆனந்தங்களும், வாக்கால் வசனமுமென விவையவற்றின் விஷயங்களெனில், இவ்வாறு தொழிற்படு முறுப்புக்களை யெல்லாம் இநதிரிய மென்று வேண்டில் பிள்ளைகளுக்கு முலை கொடுக்கு முறுப்பாகிய முலையும், மூடுதற்குந் திறததற்கும் பிறவற்றிற்கும் உறுப்பாகிய உதடும், ஏற்றுதற்கு மிழிததற்கு முறுப்பாகிய புருவமும், ஒன்றைப் பக்ஷிக்குங் காலதது சலிப்பிக்கு முறுப்பாகிய கதுப்பும், மெல்லுதற் குறுப்பாகிய பல்லும், விழுங்குதற் குறுப் பாகிய மிடறும் இந்திரியமாகக் கொள்ளுதற்கட் குற்றமென்றே வென்றவாறு.
அன்றியும் நயனேந்திரிய முதலாயினவுஞ் சில தொழில் செய்தற்கு உறுப்பாதலின், அவையுங் கர்மேநதிரியமா மென்று சொல்லிக்கொள்க. இன் னும் கைக்கு கிரஹணம் விஷயமென்றதனை எழுதுதன் முதலாயினவுங்

1 ஸதுருசர் - சமானமானவர்.

குற்றுதன் முதலாயினவுஞ் சொறிதன் முதலாயினவுங் கட்டுதன் முதலாயினவும் விடுதன் முதலாயினவும் பிறவும் விஷயமன்றே ? காலுக்கு கமனமேயன்றி நிற்றல், பாய்தல் முதலாயினவு முடக்குத னிமிர்த்தன் முதலாயினவும் விஷயமாம். ஒழிந்தவற்றிற்கு மிவ்வாறு சொல்லிக்கொள்க. (உஅ)

758 ஐந்து தன்மாத்திரை தாமணு வா([1]ற்றொடர்)
கந்தங்க ளாதியிற் காம்புல னேயவை
வந்து பெருகி வரிசையி னான்மிகும்
புந்தியி னல்வகைப் பூதமு மென்றாள்.

(இ - ள்.) பஞ்சதன்மாததிரையாவது - ஸப்த, ஸ்பரிஸ, ரூப, ரஸ, கந்தமன்றே? அவை பரமாணு சந்தோஹங்களாற் பெறப்பட்டு, இந்திரிய விஷயமாயின. அவற்றுள் சப்தமாவது - புருஷ பிரயத்னாதி காரணங்களாற் றோன்றுவதாகி, மூர்ததமாகிய பரமாணு ஸ்கந்த விசேஷம். என்னை? கடிப்பாலோசை யெழுமாறுபோல சப்தத்தால் [2]கம்ஸாதி லோஹங்களு ளொலி யெழுமாறும, பர்வத பார்சுவாதி பிரதேசங்களுள் சப்தத்தாற் பிரதிதொனி யெழுவதூஉங் காணப்படுதலி லென்பது. ஒழிந்த ஸ்பரிசாதியும் பரமாணு ஸந்தோஹமாகிய வஸ்துக்களுடைய குணமாம். என்னை? நிராதாரமாக அவை பெறப்படாமையில்.

இனி இந்தப் பஞ்ச தனமாத்திரைகள் சேதன விசேஷமாகிய அகங்காரத்துப் பிறக்குமா றென்னை? சேதனதது அசேதனம் பிறத்தல் கூடாமையில் கூடில், ஜலததில் அக்னி பிறததலுங் கூடும். ஆதலால், பஞ்ச தனமாததிரை [3]பௌத்கலிகமாம்.

இனி, பரமாணுக்க ளெத்தனைப் பலவுங் கூடியவழிப் பிருதிவி யப்தேஜோ வாயுக்க ளென்னும் சதுர்ப்பூதங்க ளாவதல்லது ஸ்பரிசனாதி, ஒருவஸ்துவின் குணமாதலின் பிறததல் கூடாதா மென்பது. (உகூ)

759 ஒன்றாய்ப் பரந்திவ் வுலகு மலோகமுஞ்
சென்றாய்க் கிடந்த தசேதனை தானென்று
மன்றா யருவா யதுவ்வா காயமு
மென்றா ளெழினெடுங் கண்ணிணை நல்லாள்.

(இ - ள்.) தானொன்றாகி லோகாலோக மெங்கும் எக்காலத்தும் சென்று வியாப்தமாகி, அசேதனமாகி, அமூர்த்தமாகியது ஆகாசமென்னும் பொருள்; அது, அநேகமாகி [4]க்வசித்கதாசித்ஸம்பவிப்பதாகி மூர்த்தமாகிய சப்தத்திற்பிறத்தல் கூடாதென்றார் நீலகேசியா ரென்றவாறு. (௩௦)

1 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

2 கம்ஸாதி - வெண்கலம் முதலாகிய.

3 பௌத்கலிகம் - புத்கலசம்பந்தம்.

4 க்வச்சித் கதாச்சித் - எவ்விடத்திலாவது, எப்பொழுதாவது.

760 தானரு வாய பொருளது வாமொலி
மேன்மரு வாதுரு வாதலி னுண்மெய்ம்மை
நூன்மரு வாதுசொன் னயிது வென்றனள்
மான்மரு வாவந்த நோக்கு மரியாள்.

(இ - ள்.) ஆகாசந்தான் அருப திரவ்யம்; சப்தம் அதனோடு பொருந்த மில்லா ரூபதிரவ்ய மாதலின், நீ [1]ஶப்தவகவெழ என்று சொன்னது தத்வ சாஸ்திராப்பியாச மில்லாமையி லென்று சொன்னா ளென்றவாறு. (௬௧)

761 பகுதியின் மானில்லை யிலைநினு மலைநில்லை
தொகுதிசெய் பல்குண தோறறமு மில்லா
மிகுதிசெய் பூதத்து மெய்ம்மை பெருமற்
றகுதியின் [2]றத்தநின் றத்துவ மென்னை.

(இ - ள்.) பிரகிருதியில் மஹானும், மஹானில் அகங்காரமும், அதனில் ஷோடச கணமும், பஞ்ச தன்மாத்திரையிற் பஞ்சபூதமும் பிறவாமை யுக்தியா லேற்றுதலி லவை அவ்வாறு பெறப்படாமையில் அயுக்தமென்று சொல்ல வென்றவாறு. (௬௨)

762 குருடனும் பங்குவுங் கூட்டத்திற் கூடிப்
பொருடம தாக்கமும் போத்தந் நுழைப்பிற்
றெருட லிலையவர் செய்கையிற் செய்கை
யிருடன்னை யின்றி யிவையெய்து மென்றாள்.

(இ - ள்.) ஒரு குருடனும், ஒரு முடவனும் தம்முட்கூடி ஒரு நகரம் புக வேண்டிக் குருடன் முடவனை வஹிப்ப, முடவன வழிகாட்டப்போய் நகரம் புக்கவாறுபோல, பிரகிருதியும், பரமாத்மாவும் தம்மிற்கூடி மஹதாதி தத்துவங் களுக்கு உத்பததியா மெனினுங் குருடனுக்கில்லாத வழிகாண்டல் முடவனுக்கு உண்மை யாலும், முடவனுக்கில்லாத கமனங் குருடனுக் குண்மையாலும் அவ விருவருங்கூட வலைதாம். பிரகிருதியு மாத்மாவு மவ்வாறன்றி நிஷ்கிரியங்களும், புடைபெயரா நித்யத்வத்தினவு மாதலின் மஹதாதி யுத்பத்தி அவற்றா லின் மையி னீ தெளிவில்லை யென்றவாறு. (௬௩)

763 எவ்வகை யின்னும் விகார மிலாப்பொருட்
கிவ்வகை தம்மை யெடுத்துரை யென்செயு
மெய்வகை யாலொப்பின் மேற்கோண் முதலிய
வவ்வகை யெல்லா மழிவுள தாமே.

---

1 சப்தவத்கம் - ஆகாசம் சப்தத்தை யுடையது. 2 அத்த - ஆப்தனே.

(இ - ள்.) எல்லா வகையானு நிஷ்கிரியங்களாகிய இவற்றினுக்கு பகு கிரியா ஸமர்த்தராகிய குருடர், முடவரைத் திருஷ்டாந்தமாகக் காட்டுதலின், மேற்கோ ளொப்பின்மை முதலாகிய வெல்லாக்குற்றமு முளவா மென்ற வாறு. (௩௪)

764 கூடியு மாகாக் குணத்தின நீயவட்
பாடி யுரைத்த வுயிரும் [1]பகுதியும்
பேடிகள் சாரினும் பிள்ளைப் பெருமையை
நாடியுங் காணென்று நண்ணுத னக்காள்.

(இ - ள்.) நின்னாற் சொல்லப்பட்ட பிரகிருதியும், ஆத்மாவும் கூடப் பெறினு மவை மஹதாத் யுதபத்தியைப் பண்ணு ; பேடிக ளிருவர் தம்முட் கலந்தாலும் புத்திரோத்பத்தி யில்லை யென்பது ஆராய்ந்தறி யென்று சொல் லிச் சிரித்தா ரென்றவாறு. (௩௫)

765 இல்லுளி யின்றிமற் றெங்கு மிவைமுன்னும்
புல்லின வேயாற் புணர்ச்சி புதிதெனச்
சொல்லின தென்செயத் தோற்றப் படுபொருள்
பல்லன தாமவை பண்டு முளவே.

(இ - ள்.) இல்லாத விடமின்றி யெங்கும் வியாப்தமா யிவ்விரண்டும் அநாதியாகவே ஸம்பந்தமாதலி லவற்றைப் புதிதாகச் சம்பந்தித்தாற் போலச் சொல்லிய தென்னை ? புதிதாகத் தோற்றக்கண்ட பொருள்களு முன்பே யுள வாக வேண்டும். இனி இவை எப்பொழுதுங் கூடி நிற்றலால் ஜனன மரணாதி யும் ஸம்பவியாதா மென்றவாறு. (௩௬)

766 ஆட லழித்தல் படைத்த லடங்குதல்
வீடுபெற் றுங்கண் விளங்கு நிலைமையுங்
கூடிய வைந்து குணத்தின னுதலி
னுடிய குற்றங்க ணண்ணல வென்ன.

(இ - ள்.) ஆளுதலும், அழித்தலும், படைத்தலும், தபசு பண்ணுதலும், மோக்ஷித்தலு மென்னு மைந்து குணத்தினையு முடைய ஏகாத்மாவே தத்வம் ; அநேகாத்மா வென்பது தத்வமென்று கொள்ளாமையில், எமக்கொரு குற்றமு மில்லை. அக்குற்றங்கள் அநேகாத்ம சாங்கியனுக்கே வருவனவென்று சொன்ன னென் வென்றவாறு. (௩௭)

767 ஓதிய வெல்லா மொருவனி னங்கொரு
நீதி வகையா னெறிமைப் படுதலும்

1 பகுதி - பிரகிருதி.

வாதுசெய் வார்கள் பிறராய் வருவது
மூதிய மில்லை யொழியென் றுரைத்தாள்.

(இ - ள்.) இச் சொல்லப்பட்ட ஆட்சி முதலாயின வெல்லா மொருவன் செய்கையென்று சொல்லுவா னொருவனுங் கேட்பா னொருவனும் அதற் கெதிர்வாதியாகிய ஆத்ம நாநாத்வஞ் சொல்லுவானைக் குறித்துப் பரிகாரம் பண்ணுதலும், எல்லாம் ஆதம நாநாதவத்தை யொழியக்கூடா வாகலி னேகாத்ம வாததா லொரு லாபமில்லை; இதனை நீ யொழியென்று சொன்னா ளென்ற வாறு. (௩அ)

768 யானை குதிரை முதலாப் படைகுடி
யேனைய தாங்களு மெல்லா மவனெனிற்
றுனென்று மாள்வது தன்னை யெனினங்கள்
கோனிவ னுமெனக் கூறினார் யாரோ.

(இ - ள்.) யானையுங் குதிரையு முதலாயினவையும், படையுங் குடியு மென்றும் ஆளப்படும் வஸ்துவும், ஆள்கின்றவன்றானே யென்னில், தானே தன்னை யாள்கின்றானு மாதலி லெனக்கு ஸ்வாமி யிவனென னொருவனை யொருவன் சொல்லுமா றென்னை யென்றவாறு.

இதனால் ஆளப்படுவதும், ஆளுமவனுமென விரண்டுளதாயின், ஆதமநாநாத்வம் ஸித்திப்பதாம்; இல்லையாயின், ஆட்சி கூடாதா மெனபடு போந்தது. மாயையால் ஆளப்படுவானு மாள்வதுமாகத் தோன்றுகின்றதெனின், மாயை யாருடையது? ஏகனாகிய ஆத்மனுடையதெனில் அந்த ஆதமனே மாயையால் [1]அயதார்த்த கிரஹணம் பண்ணுகின்றானாதலில், ஏகாத்மவாதம் அயுக்தமாம். இனி மாயை உபாதிக் கண்ணதெனில், அயதார்த்த கிரஹணமும் உபாதிபதே யாம். அவ்வாறாயின் உபாதிகளெல்லாம் சேதனங்களாம்; சேதனத் தல்லது உணர்வு பிறவாமையில். உபாதிகளெல்லாம் பிரத்தியேக சேதனங்களாயில் ஆத்ம நாநாதவம் ஸம்பவிப்பதாம்.

இனி, உபாதி [2]ஸ்வாதந்த்ர்யேண சேதனமாயினன்றே யஃதாவது. ஏகாத்மனாகிய சேதன [3]ஸம்பர்க்கத்தால் சேதனமாயிற்றெனில், ஏகாதமா சர்வத்ர வியாப்த னாதலில் பிருதிவியாதி ஸகலா சேதனங்களும் சேதனங்கள் ஆதல் வேண்டும். ஆதலினும் அசேதனமாகிய உபாதி ஸம்பர்க்கத்தால் சேதனனுக்கு அசேதனதவம் வருதலினும், சேதனாசேதன வியவஸ்தை கெடும். இன்னும் ஸகலோபாதிகளிலும் ஏகாத்ம ஸம்பர்க்க முளதாயில் ஒருவர்க் குளதாகிய பிரதீதி முதலாயின ஸர்வர்க்கு முளதாகல் வேண்டும்; வேண்டவே ஏகாத்மதத்வம் உனக்கு பிரதிபாஸித்தவாறே யாவர்க்கும் பிரதிபாஸிப்பதாகும். இனி உபாதி யுக்தனாகிய ஆத்மாவின்கண் மாயையெனில், நீயும் உபாதியுக்தனாதலில்

1 அயதார்த்த கிரஹணம் - பொருளை இல்லாதவாறு உணர்தல்.
2 ஸ்வாதந்திரியேண - தன்னுரிமையாலே. 3 ஸம்பர்க்கம் - சேர்க்கை.

மாயையும் அயதார்தத கிரஹணமு முனக்கு முண்மையில் நீ ஏகாதம தத்வஞ் சொல்லியது அயதார்த்த கிரஹணத்தாலாம். ஆதலால், ஏகாத்ம வாதம் அயுக் தமாமெனபது. (ருக)

769 என்னை யொழித்தினி யெல்லா மவனெனச்
சொன்ன முறைமைய ஞரு மவனெனிற்
றன்னை யொழித்துத் [1]தபுததுடன் றின்றிடிற்
பின்னை யவனேயோர் பித்தனென் ஞேமோ.

(இ - ள்.) பிரதிவாதியாகிய வென்னை யொழித் தொழிந்தனவெல்லாம் அவனெனினும், ஆத்ம நாநாதவம் ஸம்பவிப்பதாம். இனி யொருவன் மேஷாதி திரியக்குக்களை வதித்து பக்ஷித்த வழித் தன்னைத் தானே கொன்று பக்ஷித் தாஞதலில் ஏகாதமனெனறு நின்ஞற சொல்லப்படுகினறவன் உன்மதத்ஞகா ஞே? ஒருவன், தானே தன்னைக் கொனறு பக்ஷித்தல் கூடுமா றென்ஞே வென்றவாறு. (௱௦)

770 தன்கையிற் றன்கண்ணைத் தானே [2]பொதக்குத்தி
யென்செயக் குத்தினை யென்பார் பிறரில்லைத்
தன்கையிற் றன்கண்ணைத் தான்பொதக் குத்துவ
தென்செய வோவிதன் காரணஞ் சொல்லாய்.

இது, ஹாஸ்யஞ் சொன்னவாறு.

771 தன்னைப் படைப்பின்முன் ருனின்மை யாவில்லை
பின்னைப் படைக்கிற் படைக்கப் படுவதின்
முன்னைப் படைப்பென் முடிவில்லை மூடனே
நுன்னைப் படைத்தவர் யாரினி நோக்காய்.

(இ - ள்.) தான் படைக்கப்படும் பொருளெனிற் ருன்படையாதபோ துள ஞகாஞதலிற் படைப்பென்ப தொன்றில்லையாம். இனித தானுளஞய்ப் பின் னைப் படைப்பனெனில், தானுளஞகி நின்று பின்படைக்க உளஞயினஞே? தான் படைக்க உளஞயினஞே? படையாதுளஞயினஞே? பிறன் படைக்க உளஞயினனெனில், பிறனும் படைக்கப்படு பொருளாயின் முன் சொன்ன குற்றம் வரும். இனித் தனனைத் தானே படைததுக் கொள்ளுமெனில், முன்பில்லாத தான், தன்னைப் படைததலுங் கூடாதாம்; கூடில் ஒழிந்தாரும் தம்மைத்தாமே படைக்கவும் அமையும். தான்படையாதுளஞயிற் பிறரும் படையாதுளராக அமையும். ஆதலிற் படைப் பென்பதொன்றில்லை. இவ் வாறு அயுக்தஞ் சொல்லுகின்ற உன்னை யார் படைத்தா ரென்றவாறு. (சஉ)

---

1 தபுத்து - கொல்வித்து. 2 பொதக்குத்தி - தொளைபடக்குத்தி.

772 கொன்றுகொன் றிட்டுத் தவஞ்செய்யி னத்தவம்
பொன்றுமற் றாதலி னஃதும் பொருத்தமின்
றின்றுதின் றிட்டுப் படைப்பிற் றெருட்சிமற்
றென்று மிலன்பெரி தேழையு மாமே.

(இ - ள்.) லோகத்து ஸர்வ கிரியைகளும் இவனாற் செய்யப்படுகின்ற வென்று சொல்லுதலால் லோகததுப் பிராணிகளைக் கொல்கின்றானும், தபசு பண்ணுகின்றானும் இவனாதலில் இவனுக்கு இவன் செய்யும் தவம் பயன்படாது கெடு மாதலிற் கொலையாளன் தவஞ் செய்வது பொருந்தாதாம். இனி லோகத்துப் பிராணிகளைக் கொன்று பக்ஷிததுப் பின்பும் அவற்றைப் படைத்து பக்ஷிப்பானாயில் அவன் [1]அபோத்தாவாகு மென்றவாறு. (௬௩)

773 ஓர்ப்பவன் சொல்லவ னூனவன் றினவன்
தீர்ப்பவ னேயவன் சீறு மவனுயிர்
நீப்பவன் சாபவ னீப்பவ னோற்பவன்
பேர்ப்பவ னாயும் பெறுகின்ற தென்னே.

(இ - ள்.) முன்பு [2]ஸேஶ்வர ஸாங்கிய தத்துவம் அறியாது பின்பு கேட்டோர்ந்துணர்கின்றானும் அவன்; அது உபதேசிக்கின்றானும் அவன்; தின்னப்படும் விலங்கு ஜாதியாய்ப் பிறந்து மாம்சமாகின்றானும், மாம்சம் தின்கின்றானும் அவன்; வியாதிகளைத் தீர்க்கின்றானும் அவன்; வியாதி கொண்டு துன்புறுகின்றானும் அவன்; சீறுகின்றானும் அவன்; சீறப்படுகின்றானும் அவன்; பிறஜீவன்களைக் கொல்கின்றானும் அவன்; கொல்லப்படுகின்றானும் அவன்; ஒன்றைப் போக்குகின்றானும் அவன்; போக்கப்படுகின்றானும் அவன் என இவ்வாறு அயுக்தஞ் சொல்லுகின்றதனாற் பெற்ற தென்னை யென்றவாறு. (௬௪)

774 நாயாய்க் கடிக்கு நரியாய்ப் பலகொல்லும்
பேயாய்ப் புடைத்துண்ணும் பெற்றமு மாய்க்குத்து
மீயாய் நலியு மெறும்பாய்த் தெறுமெங்கும்
தீயா னொருவனின் றேவனு மென்றாள்.

(இ - ள்.) சர்வமும் அவன் செயலென்றற்கண் ஹராஸ்யஞ் சொன்னவாறு. (௬௫)

775 வீடு தலைபெற வெந்துநெஞ் சாண்டிடத்
தாடி தவஞ்செய்த தன்கா லழித்திடப்
பாடிய கையிற் படைக்கு மிவனெனின்
மூடர்கட் டேற்ற முடிவுமுண் டாமோ.

1 அபோத்தா - ஞானமில்லாதவன்.

2 ஸேஶ்வர ஸாங்கியதத்துவம் - ஈச்வரனுளனெனும் சாங்கிய தரிசனம்

(இ - ள்-) ஒருகாலத்து வீடு பெறுவானும், ராஜ்யம் பண்ணுவானும், தபசு பண்ணுவானும், அழிப்பானும், படைப்பானும் ஒருவனே யென்றற்கண் ஹாஸ்யஞ் சொன்னவாறு. (எசு)

776 *நித்திய மாய பொருணின வாதலின்*
*வித்தினு ளுண்டென வேண்டுதி நீள்பனை*
*யெத்துணை யோவது வென்னினு நின்கைக்கு*
*மித்துணை யுண்டென்ப தென்னைகொ லேழாய்.*

(இ - ள்.) நின்பக்ஷத்தால் வஸ்து அவிசலித நித்தியமாதலின் மேலாகக் கடவதாகிய நெடும்பனை, வித்தாகிய பனைமுட்டையு ளிப்பொழுதுளதாக வேண்டுதி யன்றோ? ஆனாற் பனை முட்டை எதத்துணை அளவு பெறுமென் றார்க்கு நீ நின் கை காட்டி இத்துணை யளவுடைதென்று சொல்லுமா றென்னை? ஏழாய் என்றவாறு.

இன்னும் அவிசலித நிததியமே தததுவ மென்றற்கண், உண்டவனுறங்குதலும், உறங்கினான் விழித்தலு முதலாயினவும், ஒன்று கற்றவன் பிறிதொன்று கற்றன் முதலாயினவும், பாலனானவன் தானே வளர்நது விருத்தனாதலும், ஒன்றை மறத்தலும், அதனைப் பின்பு நினைத்தலும், பிரத்தியபிஜ்ஞான முதலாயினவும், கர்மஞ் செய்தான கர்மபலம் அனுபவித்தலும், ஸம்ஸாரியாகியவன் தானே ஸன்மார்க்க மறிந்து அனுஷ்டித்து முக்தனாதலும், பிறவும் நிததியாநிததியமாகி வஸ்து பரிணமிக்கு மென்பார்க்கல்லது கூடாவென்பது. அஃதேல் முன்பு அநிததியத்திற்குத் தூஷணஞ் சொன்னீர்: இதுபொழுது நிததியத்திற்குத் தூஷணஞ் சொன்னீர்: ஆதலால், அவ்விரண்டையும் விடுவதல்லது அவ்விரண்டையுங் கூட்டி நிததியாநித்திய மென்று சொல்லுதலமையாதெனில், நன்று சொல்லினை! அவிசலித நித்தியமாகிய கூடஸ்த நிததியத்தினையும், உதபததி க்ஷணத்திலே கையற நசிப்பதாகிய அநிததியத்தினையுங் கூட்டி நிததியாநிததிய மென்கின்றே மல்லேம்; நரனையும் ஸிம்ஹத்தினையுங் கூட்டி யன்றி ஒரு அவயவததால் நரத்துவமும் பிறிதொரு அவயவததால் ஸிம்ஹதுவமுடையதொரு [1]ஜாத்யந்தர ரூபத்தை நரஸிம்ஹ ரூபமென்று சொன்னவாறு போல, அனுவிருதத வியாவிருத்த ரூபங்களால் வருவதாகிய ஸ்வபாவ விசேஷத்தை நித்தியாநித்திய மென்று வேண்டுதும்; முகமாத்திர தர்சனத்தால் ஸிம்ஹத்துவமும், முகமொழிந்த சரீர மாத்திர தர்சனத்தால் நரஸிம்ஹத்துவமும் பிரதீதமானவாறுபோல, வர்ணமும், வசஞ்செய்தலும், வர்க்கெனவு முதலாகிய அனுவிருத்தி ரூப [2]விவக்ஷையில் நித்யத்துவமும், மகுடமான தனமை முதலாகிய வியாவிருததி ரூப விவக்ஷையால் அநித்தியததுவமும், உபய ரூப விவக்ஷையால் உபயாத்மகத்துவமும், சுவர்ணாதி வஸ்துவில் பிரதீதமாகின்றதன்றோ வென்பது.

1 ஜாத் யந்தரரூபம்-வேறு ஜாதி ரூபம். 2 விவக்ஷை-குறிப்பிட்ட முறை.

புருஷ மிருகம், மகண்மா, [1]குக்குட ஸர்ப்பம் முதலாயினவுஞ் சொல்லிக் கொள்க.

பாலனானவன் விருத்தனாய்ப் பரிணமித்த றன்னையே யான, அவிசலித நித்தியமென்று வேண்டினேனெனில், அதனை நிரவயவ விநாசமாகிய அநித்தியமாக வேண்டாதவாறென்னோ வெனாரர்க்கு, நிரவயவ விநாசத்தில் பாலனானவன், தானே விருத்தனாதல் கூடாதெனில், அவிசலித நித்தியத்தில் பாலனானவன் பால்யத்தை விட்டு வார்த்தகத்தை பஜித்தல் கூடாமையில் அதனையு மொழி யென்பது.

ஆதலால், வஸ்து அவிசலித நித்தியமே யாகில், பனைமுட்டையினெடி தாகிய பனை எப்பொழுது முளதாகல் வேண்டும்; இப்பொழுதின்றி மேற்றோன்றில் அவிசலித நித்தியத்துவங் கெடுதலி னென்பது. (எஎ)

777 இப்பொழு தில்லை யெதிரதற் குண்டெனி
னப்பொழு துண்மையு மின்மையு மாக்கி
னெப்பொரு டாங்களு மின்னன வேயெனச்
செப்பினள் தத்துவஞ் சேயரிக் கண்ணாள்.

(இ - ள்.) பனைமுட்டையிற்பனை இப்பொழுதில்லை; பின்பு உளதாமெனிற் பனையாய்ப் பரிணமித்தற்குச் [2]சக்திமத்தாகிய முட்டை யோக்கிய ஸாதனம் பெற்றுப் பனையாய்ப் பரிணமித்ததாம். அன்றியும் பனை ஒரு காலத்துளதாகவும், ஒரு காலத்திலதாகவும் சொல்லுதலாற் பொருள் அஸ்தி நாஸ்தி யென்பதும் பெறப்பட்டது. இவ்வாறே எல்லாப் பொருளும் அஸ்தி நாஸ்தியும், நித்தியாநித்தியமுமாய் இருக்குமென்று புத்தி பண்ணுவாயாக வென்று தத்துவோபதேசஞ் சொன்னா ளென்றவாறு. (எஅ)

778 உருவோ டருவவா காயமு மூன்று
மிருபதின் மேனுமைந் தாக விசைந்தனை
யருவோ டலோக மசேதன மூன்றிற்
செருவோ [3]டிரிமையிற் சேர்பவு மன்றே.

(இ - ள்.) ரூபமும், அரூபமும், ஆகாசமுமென மூன்றுருவதனை இருபததைந்தாகக் கூறினை. அரூபமும், அலோகமும், அசேதனமுமென மூன்றுருவதனை இருபததைந்தாகச் சொன்னா யென்றவாறு. (எகூ)

779 ஒன்றொன்றி னொன்றி யுலகுள் வழியெங்குஞ்
சென்றவ னுண்மை பகுதி யிதுமன்று

---

1 குக்குட ஸர்ப்பம் - சிந்தாமணி - பதுமை [199] "அரிகுரற் கோழி நாமத்தர விவட் கடித்ததாக" என்பதனாலுணர்க; மேருமந்தரம் - நால்வரும் சுவர்க்கம்புக்க சருக்கம் 36-ஆம் செய்யுளிலும் இது கூறப்படுதல் காண்க.

2 சக்திமத - சக்தியோடு கூடியது. 3 'அருமை' என்றும் பாடபேதம்.

மென்றனை யெண்முறை யறிமற் றீண்டுபு
நின்றன வீறு நிலமுத லன்கே.

(இ - ள்.) அணுக்கள் பல கூடிக் கர்ம [1]பிராயோக்கியஞ் சென்று உலகத்தெங்குமுளவாய், ஞானவாஞதி ரூபததால் ஆத்மனோடு அநாதி வாலாற்றால் ஸம் பந்திதது [2]விகலஜ்ஞானாதி விக்ருதிகளைப் பயப்பதாகிய அதனைப் பிரகிருதி யென்றும், அணுக்கள் மிகப் பலவுங் கூடிப் பிருதிவியாதி சதுர்பூதமுமா மென்றுஞ் சொன்னையாகக் கொள்ளென்றவாறு. (௭0)

780 பத்த [3]னை யாய்நின் பரமாத் துமனையுஞ்
சித்தனை யாகக் கருதியல் சீவன்கட்
கத்தன்மை ஞானமு மென்ன யவனுக்குத்
துத்தலுங் காண்டலுஞ் சொல்லினை யன்றே.

(இ - ள்.) நீ பரமாத்ம னென்று சொல்லுகின்றவனைச் சித்த பரமேஷ்டியாகப் புத்தி பண்ணி பக்தி செய்வாயாக; இனி ஸம்ஸாரத்து நிகழ்கின்ற ஜீவன்களுக்கு ஞானம் ஸவபாவமென்று சொல்லுவாயாக; அந்த ஆதமனுக்கு போக்திருத்துவமும் திருஷ்டதுவமுஞ் சொல்லுகினறனை யன்றோ வென்றவாறு. (௭க)

781 வண்டார் குழற்பெயர் மாணிழை யிற்றெனக்
கொண்டே னெனவவன் கூறினன் கூறலும்
பண்டே லறியெனப் பராசர னீயினிக்
கண்டா யெனசசொல்லிக் காட்சி கொடுத்தாள்.

(இ - ள்.) நீலகேசியார் தததுவமிருந்தவாறு சொல்ல அவனும் அதற்கு உடன்பட்டு இதுவே தத்துவமென்று சொல்லுதலும் பராசரனே! நீ பாக்கியஞ் செய்தனை கண்டா யென்று சொல்லி ஸம்யக் தர்சனமிர்தத்தினைக் கொடுத்தா ளெனறவாறு. (௭உ)

782 ஐந்து மிருபது மாகிய சொற்பொரு
டநதிவை யல்லது தத்துவ மில்லென்ற
சிநதை யொழித்துச் சினவரன் சேவடி
வந்தனை யேசெய்து வாழிநீ யென்றாள்.

(இ - ள்.) பஞ்சவிம்சதி தததுவமே தத்துவமென்று சொல்லுதலொழிந்து, பிறரையு மொழிவிததுப் பகவதருஹத் பரமேஶ்வரனையே சரணமாகவடைந்து, அவனது ஸ்ரீ பாதகமலங்களை பக்தி புரஸ்ஸரமாக வந்தித்து வாழ்வாயாக வென்று சொன்னாளென்றவாறு. (௭௩)

**நீலகேசித் திரட்டில் சாங்கியவாதச் சருக்கம் முற்றிற்று.**

---

1 பிராயோக்கியம் - தகுதியாம் வகை.

2 விகலஜ் ஞானாதிவிக்ருதிகள் - குறைந்த ஞானம் முதலிய காரியப் பொருள்கள். 3 ஐ - சாரியை.

## எட்டாவது

# வைசேடிக வாதச் சருக்கம்

783 ஆட்டினு ளவனையு மாக்கிச் செல்பவள்
வீட்டினுர் நெறியென விரித்த மேலையோர்
காட்டினுர் பலருளுங் கணாத னேயெனு
[1]மீட்டினு னுலோகன திடத்தை யெய்தினுள்.

(இ - ள்.) வஸ்திராதியை மாசு நீங்குமளவும் நீருள்ளிட்டு அலைக்குமாறு போல பகுவித [2]சோதயங்களால் அலைத்து, அவனது மித்யாத்வத்தினை நீக்கி, அவனை ஸம்யக் திருஷ்டியாக்கி, அங்கு நின்றும் செல்வாள் மோக்ஷமார்க்கஞ் சொன்ன பலருளும் [3]கணாதனைப்போலும் பெருமையுடைய லோகஜித் தென் பானுடைய ஆச்சிரமத்துச் சென்றாளென்றவாறு. (க)

784 வனப்புடை மாதரைக் கண்டு மாதவன்
சினப்புடைக் கருத்தின னென்னச் சிந்தித்தே
நினக்கினி நெறிவயி னின்ற மெய்ம்மையை
மனக்கொளக் கிளக்குவென் மன்னுங் கேளென.

(இ - ள்.) லோகஜித்தென்னும் ரிஷியும், நீலகேசியாளைக் கண்டு, வாதஞ் சொல்லுங் கருத்தினள்போலு மென்று புத்தி பண்ணி, எனது தத்துவமிருந்த வாறு கேளென்று சொல்லவென்றவாறு. (உ)

785 நெறியெனப் படுவது நின்ற மெய்ம்மையங்
கறிதலுக் கரியன வாறு சொற்பொருள்
செறியயான் சொலிற் றிரப்பியங் குணந்தொழில்
பொறியினுய் பொதுசிறப் புடன் புணர்ப்பதே.

(இ - ள்.) எனது தத்துவ மார்க்கமாவது, அறிதற்கரிய பரமார்த்தத்தை யுடைத்தாகிய ஷட்பதார்த்தங்களுமாம். அவையாவன: திரவ்ய குண கர்ம ஸாமாந்ய விசேஷ ஸமவாய மென்பனவாம்.

பொது - ஸாமான்யம். சிறப்பு . விசேஷம். உடன்புணர்ப்பு - ஸமவாயம். ()

786 பூதமைந் தொடுதிசை மனம் பொழுதாவி
ரோதினப் பொருள்கடா மொன்ப தாமவை

---

1 ஈடு - பெருமை. 2 சோத்யங்கள் - ஆராயும் கேள்விகள்.

3 கணாதன் - வைசேஷிக தர்சன கர்த்தா.

நீதியிற் குணமவற் றியல்பு செய்கையும்
போதரும் பொருட்புடை பெயர்ச்சி யாகுமே.

(இ - ள்.) அச்சொல்லப்பட்ட பதார்த்தமாறிலும் முன் சொல்லப்பட்ட திரவ்யம் பூதமைந்தும், திக்கும், மனசும், காலமும், ஜீவனும் என அவை ஒன்பதுமாம். குணமாவது - அப்பொருள்களது இயல்பாம்; கர்மமாவது - அப்பொருள்களது புடை பெயர்ச்சியா மென்றவாறு. (௪)

787 பெரியதும் பின்னது மாய தப்பொது
வுரிதனிற் பொருள்களைச் செலுத்து மொற்றுமை
தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக்
கிரியைக ளிதற்கெனக் கிளத்தல் கூட்டமே.

(இ - ள்) மஹா ஸாமான்யமும், அவாந்தர ஸாமான்யமும் என ஸாமான்யம் இருவகைத்தாகும். அன்றி, பரம், அபரம் எனறுமாம். அவற்றுள் முதலது, ஸத்வம், வஸ்துத்வம் முதலாயின; ஒழிந்தது, திரவியத்வம், குணத்வம் முதலாயின. அதுதான் நித்தியமும், வியாபியுமாகிப் பொருள்களுக்கு ஒரு ஒற்றுமையைச் செய்வதாம். பொருள்களுக்கு அந்யோந்யம் வேறுபாட்டைச் செய்வது விசேஷ மென்பதாம். பொருளுடன் அத்யந்தம் பின்னமாகிய குண கர்மங்களை இதனிது வென்னுமாறு ஸம்பந்தித்து நித்யமும் வியாபியுமாகியது ஸமவாய மெனபதா மென்றவாறு. (௫)

788 ஆறின் முதன்மூன் றத்தி மற்றவற்
றீறின் மும்மையு மின்மையை யெய்தின
கூறினப் பொருள்களுங் குணனுஞ் செய்கையும்
வேறென விரித்தனன் விசேட வாதியே.

இ - ள்.) சொல்லப்பட்ட பதார்த்தமாறினுள்ளும் முதற்கட் கிடந்த திரவிய குண கர்மங்களில் அஸ்தித்வம் ஸாமான்யம் கிடப்பதாம். இனி, இறுதிக்கட்கிடந்த ஸாமான்ய விசேஷ ஸமவாயங்களுள் அஸ்தித்வ ஸாமான்ய விசேஷங் கிடவாதாதலின் அவை அஸ்தித்வ முடைய வல்லவாம். ஸாமான்யாதியில் அஸ்தித்வம் கிடக்கில், அஸ்தித்வ ஸாமானயத்திலும் அஸ்தித்வ முளதாய் அதனிலும் பிறிதொரு அஸ்தித்வ முளதா யோடு மாதலின. இனி, திரவியமும், குண கர்மங்களும் அந்யோந்யம் பின்னங்களா மெனறு விசேஷவாதஞ் சொன்னனென்றவாறு. (௬)

789 தத்துவ மிவையெனத் தலையுந் தூக்கினை
கொத்ததன் றேவென வுரைநல் லாயினி
யித்தவ மிப்பொரு டேறி யான்செயிற்
பொய்த்தவ மாதலிற் போவ னென்னவே.

(இ - ள்) விசேஷவாதி, தனது தத்துவஞ் சொல்ல, நீலகேசியார் அதனை அநாதரித்துத் தலை சாய்த்திருந்தாராக, யான் சொல்லிய தத்துவங்கள் யுக்தி யுக்த மன்றோவென, இந்தத் தபசை இப்பொருடேறியான் செய்வனாயிற் கெடுவன் இது பொய்த் தவமாதலி னென்றவாறு.

என்னை பொய்த் தவமானவாறெனில், கிரியையும், ஆத்மாவும் அத்யந்தம் பின்னங்களாதலிற் றபசு ஆத்மாவினுக்கு ஸம்பந்தியல்லவாதலி னென்பது. ஸமவாயம் கிரியையையும், ஆத்மாவையும் ஸம்பந்திக்கு மென்னினும் அது கொண்டுகூட்டாதாகலின் மெய்த்தவமாகா தென்பது.

போவனென்பது - கெடுவனென்றவாறு. (எ)

790 மெய்ந்நெறி யிதுவென விரிப்பக் கேட்டிருந்
திந்நெறி யமைதியின் றென்னுஞ் சொல்லினாய்
பொய்ந்நெறி யாதலைத் தேற்றிப் போகெனக்
கைந்நிறுத் தாளது காட்டக் கேளென.

(இ - ள்.) யான் சொல்லிய தத்வநெறி கேட்டிருந்து அயுக்த மென்று சொல்லுகின்றனையாயில், அயுக்தமானவாறு தேற்றிப்போவாயாக வென்று அவன் சொல்ல அவ்வாறு செய்கின்றேன் கேளென்று கையமைத்தா ளென்றவாறு. (அ)

791 நிலமுதற் பூதமாய் நின்ற நான்மையுங்
குலமுதன் மூர்த்தியாய்க் கூறி னொன்றவை
யலமுதற் பொருள்களாப பன்னி னாயவை
வலமுறை யிடமுறை வருதல் காட்டுகோ.

(இ - ள்.) நிலமுதலாகச் சொல்லப்பட்ட நான்கு பூதமும் ரூபதிரவ்யமென வொன்றாம். அவற்றை நான்காகச் சொல்லினை ; அவை ஒன்றாகத் திரியுமாறு காட்டுவனென்றவாறு. (கூ)

792 உரியதோர் நீரனைத் துப்ப தாகுநெய்
யெரியெழு முளர்ச்சியா லிசைக்குங் காற்றதாம்
பெரியதோ ருருமுனீர்ப் பிண்டம் வெந்துநீர்
வரிசையிற் படலமாய் வந்த வல்லவோ.

(இ - ள்.) ஜலதிரவ்யம் மிருத்தாகிய உப்பாய்ப் பரிணமித்தது ; ஜலத்துட் படுவதாகிய நெய் அக்கினியாய்ப் பரிணமித்தது ; அக்கினி மிக் கெரிவுழிக் காற்றுப் பிறக்குமாதலின், அது காற்றாய்ப் பரிணமித்தது ; ஜலமாகிய மேகபடலம் இடியாகி அக்கினியாய்ப் பரிணமித்தது ; நீரிடைநீர் இரண்டு முத்தாயிற்று. இவ்வாறே [1]சுக்திகாபுடத்துப்புக நீர் முத்தாய்ப் பரிணமித்தது ; பிருதிவியா

1 சுக்திகாபுடம் - முத்துச் சிப்பி.

கிய சந்திரகாந்தக் கல்லும், உப்பும் ஜலமாய்ப் பரிணமித்தன ; சூர்ய காந்தமும், காஷ்டமும் அக்கினியாய்ப் பரிணமிததன. இவ்வாறு திரிந்து வருதலின் அவை ஒன்றன்றே ; நான்காகச் சொன்னவாறென்னை ? என்றார்க்கு) அவை பின்னலக்ஷணததவாதலினும், லோகபிரஸித்தியும் பற்றி நான் கென்று கொண்டே னெனில், பிருதிவிதானும் ஸ்நிக்த பிருதிவியென்றும், கரபிருதிவி யென்றும் இருவகைத்து ; அவற்றுள் முதலது - உவர்மண், களிமண் என்பன முதலாக அநேக பேதப்படும் ; ஒழிந்ததும் ஸ்நிக்தம் - ரூச்சம் என்பன முதலாகப் பல வகைப்படும் ; ஜலமும் சமுத்திர, மேகஜலம் என்பன முதலாகப் பலவகைப்படும். அக்கினியும் வடவாக்னி, உதராக்னி முதலாகப் பலவகைப் படும் ; காற்றும் தென்றல், வாடை, ஸ்வாஸ முதலாகப் பலவகைப்படும். ஆதலான், அவையும் பின்ன லக்ஷணத்தனவும், பிரசித்தங்களுமாதலில் தத்வம் அநேகதாவாகக் கொள்ளப்படுமன்றோ வென்றார்க்கு, அவை அவ்வாறு மெனினும், பிருதிவியாதி நான்கிலும் அடங்குதலின் நான் கென்று கொள்ளப் படுமெனில், அந்நான்கும் ரூபமென வடங்குதலின் ஒன்றேயாகக் கொள்ளப் படுமெனபது.

இனி. பிருதிவியாதி விகல்பம் பிருதிவியுளடங்கும் ; காஷ்டாதியும், க்ஷீராதியுமவற்றுள் அடங்குமாறென்னை யென்றார்க்கு, கடின ஸ்வபாவததன யாவற்றையும், பிருதிவியுள்ளும், திரவ்ய ஸ்வபாவததன யாவற்றையும் ஜலத்துள்ளும், கமன ஸ்வபாவததன யாவற்றையும் காற்றுள்ளும், உஷ்ண ஸ்வபாவத்தன யாவற்றையும் அக்கினியுள்ளுமடக்கி நான்காகக் கூறினேனெனில், பிருதிவியாதி போல காஷ்டாதியும் பரமாணு ஸங்ாேதாஹத்தால் முடிந்தன வாதலின் அவற்றையும் வேறு வேறு பொருளாகக் கொள்வதன்றி காடிநயாதி ஸ்வபாவம் பற்றி நான்காகக் கொண்டனையாயில் வர்ணாதி ஸ்வபாவம்பற்றி யாவற்றையும் ரூபதிரவ்ய மென்றே கொள்ள வமையுமாதலி னொன்றை நான கெனக் கொண்டா யென்பது. (௧0)

793 ஒலியதன் குணமென வுரைததி யாதலால்
வலியுடை நிலையில மற்றெப் பூதமும்
பொலிவொடு முதறம்முட் புல்ல வின்மையாற்
கலிசெய லொழிகநின் காய மென்றனள்.

(இ - ள்.) [1]"ஆகாஶகுணஶப்த:" என்பதனால் ஆகாச மொழித்தொழிந்த பூதங்கள் ஸ்வதந்திர ரூபததால் நிலைபேறுடையன வல்லவாம். என்னை யெனில், பரமாணு ஸங்கோதஹமாகி பிராதேசிகமாகிய சப்தம் ஆகாச குணமாவதாகில், அவ்வாறாகிய பிருதிவியாதியும் ஆகாச குணமாகவே அமையுமென்றார்க்கு, சப்தம் பரமாணு ஸஙகோதஹ மன்றெனில், பிரதிதொனி யெழுதலும், சப்தோதபத்தியில் கம்ஸாதி சப்தித்தலும், இந்திரிய கிராஹியமாதலும் கூடாவாம்.

1 "ஆகாசகுணஸப்த :" - ஆகாசத்தின் குணம் சப்தம்.

இனி ஸப்தமாகிய குணமும், ஆகாசமாகிய குணியும் தம்முட் பொருந்தாமையில் நீ ஆகாசங்கொண்டு கர்வித்தலொழி யென்றவாறு.

என்னை பொருந்தாமை யெனில், ஆகாசம் நித்யமும், அமூர்த்தமும், வியாபியுமாம்; சப்தம் அநிதயமும், மூர்த்தமும், பிராதேசிகமு மாதலிற் பொருந்தாதென்பது. இனி ஆகாசத்தை யொழியுங் குற்ற மென்னையெனில் குணமுளவழி குணியுமாதலால், ஆகாசம் பிராதேசிகமாம். என்னை? அக்கினியின் குணமாகிய செம்மையும், வெம்மையு முளவழி அக்கினி யுளதாவதன்றி அக்கினியுள் ஒரு பிரதேசத்து அவையுளவாகின்றனவோ? ஜலத்திற்குக் குணமாகிய திரவதவமும், சைதயமு முளவழி ஜலமுளவாவதன்றி, ஜலத்துளொரு பிரதேசத்து திரவ்யதவ முதலாயின உளவாகின்றனவோ? க்ஷீரதநின் குணமாகிய வர்ண ரஸங்க ளுளவழி க்ஷீரமுளதாவதன்றி க்ஷீரத்துளொரு பிரதேசதது வர்ணுதி யுளதாகுமோ? ஆதலால், குணமுளவழியே குணியுமாதலில், ஆகாசம் பிராதேசிகமாம்.

இனி, ஆகாசம் அநித்யமுமாம்; என்னை? வர்ணுதி குணங் கெட்டவழி க்ஷீராதி திரவயங்கள் கெடுமாறு போல சப்தமாகிய குணங் கெட்ட வழி ஆகாசமுங் கெடவேண்டுதலின். இனி ஆகாசம் இந்திரிய கிராஹியமாதலும் வேண்டும்; வர்ணுதி குணங்களும், திரவயங்களும் இநதிரிய கிராஹியமானவாறுபோல, சப்தம் இந்திரிய கிராஹியமாகில் ஆகாசமும் இநதிரிய கிராஹியமாக வேண்டுதலின். இனி க்ஷீராதி திரவயமுள்ள தேச காலத்து ளெல்லாந ததகுணமாகிய வர்ணுதி பெறப்படுமாறுபோல, ஆகாசமுள்ள தேச காலதது ளெல்லாம் புருஷ பிரயத்னுதி யொழிய சப்தம் முதலாகல் வேண்டும். அவ்வாறாயின், 'அ' என ஒரு சப்தம் எழுந்தால், அது எவ்விடத்துள்ளாராலும், எக்காலத்துள்ளாராலும் கேட்கப்பட வேண்டுதலில், [1]ஆகாராதி சப்தோத்பத்தி பிறக்கவும் பெறுதாகிப் பிரத்தியக்ஷ விரோதமுமாம்.

இனி, [2]ஸ்போடாதியால் தேசாதி நியதி சப்தத்திற்குச் சொல்லுதலில் சப்தம் நித்யமாமெனில், கமனுதிகிரியைகளும் எக்காலத்தும், எவ்விடத்து முள்ளதான ஸ்போடாதி யொன்றினுல் ஒரு காலத தோரிடத்து சப்தம்போல வெளிப்படுதலில் நித்யமாமெனவு மமையும் என்றார்க்கு, புருஷ பிரயத்னுதி காரணத்துக்குத தக்கவாறு கமனுதி கிரியைகள் தோன்றி நசிப்பது பிரத்தியக்ஷ ஸித்தமாதலில், அவை அநித்யமெனில், அவ்வாறாகிய சப்தமும் அநித்யமாமாதலில் சப்தவிநாசத்து ஆகாசத்துக்கு விநாசமுளதா மெனபது. ஆதலால், ஆகாசத்தைக் கொண்டு கர்வித்தலொழி யென்றவாறு. (கக)

794 சுட்டின திசைத்திறஞ் சொல்விற் சூரியன்
பட்டது மெழுந்ததும் பற்றி நான்குமாய்
யெட்டெனப் பலவென வின்ன தன்மையாற்
கட்டினர் வழங்கினுங் காய மெய்துமே.

---

1 ஆகாராதி - 'ஆ' முதலாகிய.

2 ஸ்போடம் - பூர்வமீமாஸ கொள்கை: சப்தம் நித்தியமெனல்.

(இ - ள்.) நின்றால் அர்த்தாந்தரமென்று கருதிச் சொல்லப்பட்ட திக்கி னது பரமார்த்தஞ் சொல்லில், ஆதித்யனது உதயாஸ்தமயம் பற்றி நான்கென வும், எட்டெனவும், பலவெனவும் [1]விவக்ஷாவசத்தால் வழக்குப் பெற்று நடப்பி னும் அது ஆகாசத்தில் வியதிரிக்தமாகிய ஸ்வதந்திர பதார்த்தமன்று; ஆகாசம் சார்வாகப் பெறப்படுவ தென்றவாறு. (கஉ)

795 மண்டிலம் பலரையு நிறுவி மததிமங்
கொண்டுநின் றுன்றிசை கூறு மின்னென
வெண்டிசை யவன்வயிற் பிறக்கு மென்பவேற்
கண்டில நின்பொருள் காட்ட வல்லையோ.

(இ - ள்.) ஒருவனை நடுவு நிறுத்திச் சூழப்பலரையு நிறுத்தி நடுநின்றான் சுற்றி நின்றாரைத தனிததனியே, நான் நினக்கு எத்திசையே நின்றேனென வினவ, அவன், எல்லாத் திக்கிலு நின்றானாகப் பெறப்படுதலின் அவன் வியாப்தனுயினானோ? அல்லவெனில் திக்கு விவக்ஷாவசததால் வந்ததாம். அஃ தன்றி ஸ்வதந்திர பதார்த்தமென்று சொல்லிக் காட்டவல்லையோ வென்ற வாறு. (கந)

796 அத்திசை யவனுமா யல்ல னும்மென
வெத்திசை யவர்களு மிசைப்பி னேகநீ
பத்திசெய் தினியென்னைப் பரமன் பாதமே
சித்தியு முடிகெனச் சேர்ந்து வாழ்தியே.

(இ - ள்.) ஒருவனே விவக்ஷாவசததால் ஒருகாலத்து அநேகதிக்கி னின்றா னாகப் பெறப்படுதலின், வஸ்து அநேகாந்தமாம்; அவ்வாறு கொண்டானையாயில் ஜினேநதிரனையே உபாசிப்பாயாக வென்றவாறு. (கச)

797 மன்னுமம் மனமெனப் படுவ தாவதே
யின்னுயி ருருவினோ டியைந்த வொற்றுமை
யின்னுமக் காலமு மிருமைத் தாகலி
னின்னுடைப் பொழுதவ ணிற்ற லில்லையே.

(இ - ள்.) மனசாவது சரீராத்ம ஸம்பந்ததுதுப் பெறப்படுவதாதலில் ஸ்வ தந்திரமாயுள்ளதொரு பதார்த்தமன்று. இதனை ஒரு பதார்த்தமென்று கொள் ளில் இவ்வாறாகிய இந்திரியங்களைந்தையும் ஐந்து பதார்த்தமாக்கி திரவிய மொன்பதன்றிப் பதினாலாகக் கோடல்வேண்டும். இனி, காலமாவதும் சேதனா சேதன திரவியங்களது புடை பெயர்ச்சியாற் பெறப்படுதலின் அதுவும் ஸ்வதந் திர பதார்த்தமன்று. ஆயில் சேதனா சேதனம்போலப் பெறவேண்டுமென்பது.()

1 விவக்ஷாவசம் - வேண்டியபடி.

798 குணங்களுந் தொழில்களுங் கூறி வேறெனிற்
பிணந்தனைச் சீவனுப் பெற்ற தென்னையோ
வுணர்ந்தில னுரையுமொன் றிலனெனி னுறுதிநாம்
புணர்ந்தில மவன்வயிற் போந்த தில்லையே.

(இ - ள்.) குணகர்மங்களும், திரவ்யங்களுஞ் சொல்லி, அவை அத்யந்தம் பின்னமென்று சொல்லுதியாயில், ஞானுதி குணங்களிலும்,[1] வியாஹாராதி கிரியைகளிலும் அத்யநதம் பின்னமாதலில், [2]சபநிர்விசேஷமாகியதனை உயிரென்று பெற்றவாறென்னை? பெறிலன்றே ஸமவாயம் அதனோடு ஞானுதியை ஸம்பந்திப்பது. அன்றியும் இந்த உயிரினுல் நாம் பெற்றதென்னை? ஒன்றை யறிதலும், சொல்லுதலுமில்லையாயின் ஒரு பயனுமில்லையாம். அனறியும் அறிதலும், சொல்லுதலும் இலனுயின், அவனது உண்மையும் பெறப்படுத லில்லையென்றவாறு. அன்றியும் ஞானுதி குணங்களிலும் வியாஹாராதிகிரியைகளிலும் வியதிரிக்தமாகிய ஜீவனும், செம்மை வெம்மை முதலாகிய குணங்களிலும், தகனுதிகிரியைகளிலும் வியதிரிக்தமாகிய அக்நினியும் எத தன்மையவென்றூர்க்கு இன்னதன்மையவெனில், அதத‌ன்மையும், அவற்றிற்கு குணமாதலின், அதனேடும் அவை பின்னமாம். ஆதற்கண் அவவிடத்தும் இக்குற்றம்வரும், ஆதலால், குணகர்மங்களில் வியதிரிக்தமாகிய ஜீவாதி சூன்யமாமென்பது போநதது.

799 எப்பொரு ளெக்குணத் தானு மில்லையே
லப்பொரு ளக்குணத் தயல தாதலாற்
செப்பிலக் குளிரினுற் றீய துண்மைபோற்
றுப்பெனப் பொருள்களு தோற்ற மில்லையே.

(இ - ள்.) எல்லாப் பொருள்களும், தத்தங் குணங்களோடு ஸ்வபாவத்தாற் கூடி நிற்றல் ஸம்பவியாதாகில், அந்த அநதப் பொருள்கள் அந்த அந்த குணத்திற் பின்னமாதலால் சைததியததுடன் அக்கினி ஸம்பவியாதவாறுபோல, செம்மை வெம்மைகளுடனும் அக்கினிக்கு ஸம்பவமில்லையாம்; ஆதலால், எல்லாப் பொருளும் தத்தங் குணங்களுடன் ஸம்பவியாமையின், எல்லாம் சூன்யமென்றவாறு. (கஎ)

800 குணத்தொடு குணிகளைக் கூறி வேறெனப்
புணர்ப்பதோர் பொருளினை வேண்டிற் பொய்யெனிற்
குணத்தொடு குணிகளுங் கூட்ட மின்மையா
லுணர்த்துதற் கரிதவை யுளவு மல்லவே.

(இ - ள்.) குணத்தையும், குணியையும் அத்யந்தம் பின்னமாகச் சொல்லி, அவற்றை ஸம்பந்தித்தற்கு ஸமவாயமென்பதொன்று வேண்டுகின்றனையாயில்

1 வியாஹாராதி - பேச்சு முதலாகிய. 2 சப நிர்விசேஷம் - பிணத்தோடு ஒப்பது.

ஸமவாயந் தானும் ஸாமான்யாதி திரயத்தில் ஸத்வமில்லாமையில் பொய்ப் பொருளா மாதலின், அதனாற் குணகுணிகளுக்குக் கூட்டமின்மையில் இதன் குண மிதுவென்றும், இந்தக் குணமுடைத் திப் பொருளென்றும் உணர்த்து தற்கும் அரிது, அவை உளவாதலும் அரிதென்றவாறு.

ஞானாதி குணங்களும், வியாஹாராதி கிரியைகளும் ஜீவாதி திரவ்யத்தில் அதயந்தம் வேறேயெனில், குணகர்மங்கள் எவவழி நிற்பனவாம்? அஜீவ திரவ யத்து நிற்பின், அது திருஷ்ட விரோதமாம்; அஜீவ திரவ்யதது ஞானாதி குண மும், வியாஹாராதி கிரியைகளும் ஸமவாயங் கூட்ட அவ்வழி நின்றனவோ? ஸ்வயமேவ நின்றனவோ? கூட்ட நின்றனவெனில், அக்கினியில் வெம்மையை ஜலததுக்கூட்டலும், ஜலத்திற் சைததியததினை அக்கினியிற் கூட்டலுமாம். ஸவயமேவ நிற்பில் ஜீவ திரவ்யத்திலும், ஞானாதி ஸ்வயமேவ நிற்க அமை யும். ஜீவாஜீவ திரவியங்களி லன்றிப் பிறிதொரு வழிக் குணகர்மங்கள் நிற்குமெனினும் நிராதாரமாய் நிற்றல் கூடாதாம்; கூடில் என்றும் பிறிதொரு வழிக் குணகர்மங்கள் ஸ்வதந்திரங்களாகி நிற்கவும் அமையும்; ஜீவாதி திரவ யங்களோடு ஞானாதி குணங்கள் அநாதியாக ஸம்பந்திதது நிற்குமெனில், ஸம வாயம் கூட்டிற்றன்றும், அநாதிக்குக் கூட்டமில்லாமையால். இனிக் குணத தில் வியதிரிக்தமான குணி, கரவிஷாணம்போலப் பெறப்படாது; குணியில் வியதிரிக்தமான குணம் நிராதாரமாதலிற் பெறப்படாாதம். ஆதலில் இரண் டும் சூன்யமாமென்பது. (கஅ)

801 ஒன்பதுந் தத்தம துண்மை யாற்பல
வென்பது மெனைத்தென வெண்ணப் பட்டதும்
வன்பிதன் குணமிது வென்னப் பெற்றது
மன்பதற் குடைமையி னறியப் பட்டதே.

(இ - ள்) ஒன்பது திரவ்யங்களும் ஸ்வாதந்திரததாற் பலவாதலாலும், அவை பலவாக வெண்ணப்பட்டதும், வன்மை பிருதிவியாதிக்கு குணமென்று சொல்லுதலும் எல்லாம் நின்பக்ஷபாத மென்பது அறியப்பட்ட தெனறவாறு. ()

802 அதனது குணமதற் கயல தாதலா
லிதனது குணமென விழுக்கிற் றென்னையோ
உதனமு முணர்விலை யொன்ற தென்றக்கால்
விதனமும் படாயது மெய்யு மாகுமே.

(இ - ள்.) குணமும் குணியும் அத்யந்தம் பின்னமாயில் நெருப்பின் குணம் வெம்மை, நீரின் குணம் தண்மை யென்னவேண்டுவதில்லை; நெருப் பின குணம் தண்மை, நீரின் குணம் வெம்மை யெனவும் அமையும். இனி, அவை அதயந்தம் பின்னங்களல்ல, தாதாத்மிய ஸம்பந்தங்களென்றால் ஒரு 1 சோத்யமில்லை. அதுதான் பரமார்த்தமு மாதலின் அவவாறு கொள்ளாமை யின் நீ உணர்வுடையை யல்லையென்றவாறு. உதனமும் - சிறிதும். (உ0)

1 சோதயம் - ஆக்ஷேபனை.

803 கெடக்கெடும் பொருளெனிற் கேடு முண்டெனப்
படப்பெறு மதற்குநீ பரிவ தென்னையோ
வடக்குந்தன் றேற்றமு மொட்டி மும்மையு
மடக்கிலு மதுபெரி தழகி தாகுமே.

(இ - ள்.) குணமும் குணியும் அதயந்தம் பின்னங்களன்றி கதஞ்சித அபின்னமுமாயில், குண விநாசத்திற் குணிக்கும் விநாசம் வரும்; பின்ன மாதலினன்றே, கருமை கெடச் செம்மை தோன்ற [1]ஒதநி கெடாததூஉம், இளமைகெட முதுமை தோன்றப் புருஷன் கெடாததூஉம், சுருட்சிகெட நிமிர்ச்சி தோன்றப் பாம்பு கெடாததூஉம் காணப்பட்டதெனில், கருமையோடு நின்றது செம்மையை யடைதலும், இளமையோடு நின்றது முதுமையை யடைதலும், சுருட்சியோடு நின்றது நிமிர்ச்சியை யடைதலும் அவிசலித மாகிய கூடஸ்த நித்தியத்தில் ஸம்பவிக்குமாறுண்டோ? இது ஸம்பவிததலில் கதஞ்சித் அநித்யத்வமும் வரப்பெறுமாதலின், நீ இதற்குப் பரிவதென்னோ? கெடுகின்ற குணம்பற்றிக் கேடும், தோன்றுகின்ற குணம் பற்றித் தோற்றமும் ஒன்றை தியஜித்து ஒன்றைப் பஜிக்கின்ற திரவிய ரூபத்திலுக்கு நிலை பேறு மாகக் கொள்வா யெனின், மிகவும் அழகி தென்றவாறு.

அன்றியும், அர்த்த கிரியாகாரி யானதன்றே வஸ்துவாவது; குண காமங் களில் வியதிரிக்தமாக, அது காவிஷாணம்போலப் புடை பெயராமையில், அர்த்தகிரியாகாரியாமோ வென்றார்க்கு, குண கர்மங்களோடு கூடிய திரவ்யம் அர்த்தகிரியா காரியாகுமெனில், வஸ்துவாவதும் அதுவேயாமாகலில், வஸ்து வில் ஓரம்சம் கெடுதலும், ஓரம்சம் கெடாமையுங் கொள்ளெனபடு. அன்றி யும், குண கர்மங்கள் திரவியத்திற் பின்னமாயில் கடபடாதிபோல வேறு பெறப்படாதவாறெனனை யென்றார்க்கு, அவற்றை ஸமவாயங் கூட்டுமெனில், ஸமவாயங் கூட்டினவழி அவற்றன பேதம் ஒழிவறக் கெட்டதோ? ஒன்றும் கெட்டதில்லையோ? ஒழிவறக் கெட்ட தெனில், அணு முதலாயினபோல வொன்றாகச் சொல்லுவதன்றித் திரவ்யமென்றும், குணமென்றும் சொல்லு தல் அயுக்தமாம். ஒன்றும் கெடாதெனில், கடபடாதிபோல வேறு பெறப் படவேண்டும். கெட்டதூஉம், கெடாததூஉமெனிற் பொருளும் அவ்வாறாதல் பொருந்துமென்பது. (உக)

804 குணங்கடாங் குணியெனுங் கூற்று முண்மையிற்
பிணங்கலாய்ப் பொருள்வயிற் பேறு முள்ளதே
யிணங்கலா விருமைய தின்மை யுண்மையும்
வணங்கலாம் வகையதோர் மாட்சி மிக்கதே.

(இ - ள்.) குணமென்னும், குணியென்னு மிரண்டு கூற்று முண்மையால், அவை ஏகாந்தம் ஒன்றெனப்படாவுமாகி, திரவ்யம் குணத்தில் அத்யநதம்

1 ஓத்தி - ஓந்தி.

பின்னமாயில் அதனை குணியென்று வழங்குதலும், திரவயததில் அத்யந்தம் பின்னமாயில் குணத்தை குணமெனறு வழங்குதலும் ஸம்பவியாமையில் ஒனறை யொன்று விட்டு நீங்காவாதலிற் கடபடாதிபோல வேறெனப்படாவு மாகி, அவவிரண்டும் பேதாபேத ரூபத்தால் வஸ்துவாதலில், வஸ்துவிற் பெறப் படுவதாகிய அர்த்தகிரியா லாபமுமுண்டேயாய் குணத்திற்கு குணியுடன் உண் மையும், பிறவழி இன்மையும், குணிக்கு குணததுடன் உண்மையும், பிறவழி இன்மையுமாய் இணங்கி யிருத்தலாற் பெரியதோர் சிறப்புண்டாயிற் றெனற வாறு. (உஉ)

805 பண்பினுற் பொருள்களுக் காய பல்பயஞ்
செண்பினு னறிவினுன் செறிவி னுனென
மண்பொனுற் குணநிலைக் காய மாட்சியா
நண்பினு னல்லது நடத்த வில்லையே.

(இ - ள்.) குணங்களாற் குணிக்கு சதுரனென்றும், அறிவுடையனென றும், செறிவுடையனென்றும் பல பிரயோஜனங்களு முளவாயின், பொற் கெனவு மிருத வி சேஷமாகிய வளையலிலு முளதேயெனினும், பொன்னென னும் பொருளா லதன்கணுண்டாகிய பொற்கெனவும் 1ஸம்பாவநீயமாயிற்று. இவ்வாறு ஒன்றிற்கொனறு உபகாரகமாதலில், அவை கதஞ்சித பேதமாயி னல்லது நடவாதென்றவாறு.

செண்பு - சதுர். (உங)

806 விலைபெறு நன்மையால் வெறுப்ப தீமையாற்
கொலைபெறுங் களவினுற் குணத்தி னக்குண
நிலைபெறும் பொருளினு னின்ற வொற்றுமை
யலைபெறும் வேறெனி னுவ தில்லையே.

(இ - ள்.) நனமை யென்னுங் குணததாற் குணி விலைபெறும், தீமை யென்னுங் குணத்தாற் குணி கழிக்கப்படும்; களவு முதலாகிய தீத்தொழில் களாற் பொருட்குக் கொலையாவதாம்; ஞானப்யாஸாதி நற்றொழில்களாற் பொருள் 2பூஜ்யமாம்; வெண்மை 3பலாகாதி பிறவற்றிலு முளவேயெனினும் ரஜததில் வெண்மை தததிரவ்யததால் 4சிலாகை பெற்றது. விஶ்வஸ்த புருஷ திரவ்யததினுல் தத்வாக்யம் பிரமாணமாயிற்று. ஆதலால், குணகர்மங் களும், திரவியங்களும் பின்னமென்பது கெடும். பின்னமாயின் இவை இவ் வாருகா வென்றவாறு. (உச)

807 நல்வினைப் படுதலுந் தீவினைப் படுதலும்
பல்வினைப் பாகினுற் பயங்க ளெய்தலு

1 ஸம்பாவநீயம் - போற்றத்தக்கது. 2 பூஜ்யமாம் - பூஜிக்க யோக்கியமாம்.
3 பலாகம் - கொக்கு. 4 சிலாகை - பெருமை.

மில்வினைக் குணங்கடா மென்றும் வேறெனிற்
சொல்லில சுழற்சியும் வீடுந் தோற்றமே.

(இ - ள்.) புண்ணியஞ் செய்தாலும், பாவஞ் செய்தாலும் ததபலானுப வனமுமில்லையாம்; குண கர்மங்களும் திரவ்யமும் ஏகாந்தம் பின்னமாயில். ஸம்ஸார மோக்ஷங்களுந தோற்றததை யடையா வென்றவாறு. (உரு)

808 ஆட்டுடை யாடன வாட றுங்களு
மோட்டுடைக் குதிரையு மோட்டு மென்றின்ன
கூட்டிய வப்பொருட் கொடைய வாதலான்
மீட்டவை யொன்றென வேண்டல் வேண்டுமே.

(இ - ள்.) [1]விலாஸிநியது நிருததமும், அச்வத்தினது சீக்கிர கமனமு முதலாகிய கிரியைகள், கிரியாவானகளுக்கு ஸம்மான காரணங்களாதலில் அவை யொன்றென வேண்டுமெனறவாறு. (உசு)

809 கூத்த ராடலுங் குதிரை யோடலு
மோத்துரை யுள்பட வொழிந்த யாவையு
நீத்தன வேயல்ல நிலையு முண்மையிற்
போத்தரல் வேண்டினப் பொழுதி னுருமே.

(இ - ள்.) கூததாடன் முதலாகிய தொழில்களெல்லாம் கையறக் கெட்டன வல்ல. கெட்டனவாயில், அவை பின்பு அந்தக் கிரியாவான்களிடைப் பெறப் படாவாகல் வேண்டும். வேண்ட, முன்பு படித்ததனைப் பின்பு படியாதொழியல் வேண்டுமாதலில் அவை வியக்தி ரூபத்தாற் கெட்டனவெனினும் சத்தி ரூபத்தாற் பொருட் கண்ணே நின்று வேண்டிய பொழுது புலப்படும்; திரவயத்துடன் கதஞ்சித் பேத முண்மையில் குண கர்மங்களுக்குக் கெடாமையும் சக்தி ரூபத்தா லுளதாமாதலி னென்றவாறு. (உஎ)

810 [2]பிணங்கல வாய்த்தம்முட் பிறக ளாகிய
குணங்களுந் தொழில்களுங் குழுமிக் கெட்டன
புணர்ந்துடன் பொருள்வயிற் போந்த வாறுநீ
யுணர்ந்திலை யதுவுநின் னுடைய தேயிற.

(இ - ள்.) தம்முட் சேராவாய், அந்யோந்யம் பின்னங்களாகிய குண கர்மங்களும், திரவ்யமும் ஸம வாயத்தாற் கூட்டப்பட்டுக் கூடுமெனில், ஸமவாயங் கூட்டுகின்ற கூட்டத்திற்கு முன்னேயுளதாகிய ஞானநிலைய ஆதமனுடன் கூட்டுமோ? முன்பு இலாததனைக் கூட்டுமோ? இல்லாததனைக் கூடடுமெனிற் [3]கபுஷ்பத்தை ஜீவனோடு கூட்டவும் அமையும். முன்பே யுள்ளதனைக் கூட்டு

1 விலாஸிநி - நிருத்த மாது. 2 பிணங்கல் - நெருங்கல்; பின்னல்.
3 கபுஷ்பம் - ஆகாச புஷ்பம்.

மெனிற் பிறிதின கண்ணே நின்ற ஞானுதியை ஆதமனுடன் கூட்டுமோ? ஆத்மன் தன் கண்ணே நின்ற ஞானுதியை ஆத்மனுடன் கூட்டுமோ? பிறிதின் கண் உளதாய் நின்ற ஞானுதியை ஆதமனுடன கூட்டுமெனின், ஞானுதி பிறி தின்கண் ணுளதாய் நிற்கின்ற ஸமவாயங் கூட்ட நிற்குமோ? தானே நிற்குமோ? ஸமவாயங கூட்ட நிற்குமெனில் கூட்டுகின்ற போதே ஞானுதியை ஜீவனிலே கூட்டவமையும்; அன்றியும் பிறிதொன்றிலே முநதிக் கூட்டியதனை அத னினறும் வாங்கி ஜீவனிற் கூட்டில் ஜீவனிலே [1]ஜடத்வாதியைக் கூட்டலுமாய் பிருதிவியாதி திரவய பேதமும் ஸம்பவியாதாம்.

இனி, ஒன்றிலே முந்துறக் கூடியதனை அதனினின்றும் வாங்கிப் பிறி தொனறிற் கூட்டுதல் ஸமவாயததிற்குக கூடுவது மன்று. கூடில் எப்பொழுது மவவாறு மாறிக் கூட்டவேண்டும். அனறியும் பிறிதொனறில் ஞானுதியைக் கூட்டுகினற கூட்டத்திற்கு முன்பேயுள்ளதனைக் கூட்டுமோ? இல்லதனைக் கூட்டுமோ? வென்பது முதலாகிய குற்றமும் வரும். பிறிதில் ஞானுதி குணங தானே கூடில் ஜீவனிலும் தானே கூட அமையும்.

இனி, ஜீவன்கண்ணே யுள்ள ஞானுதியை ஜீவனேடு கூட்டுமெனில், அதற்குக் கூட்டமென்ப தொன்றில்லை, தானேயாம். கூட்டினும் கூட்டத திற்கு முன்பே யுள்ளதனைக் கூட்டுமோ? இல்லதனைக் கூட்டுமோ? வென பன முதலாகிய குற்றம் வந்து சக்ரப் பிரசங்கமாம். அனறியும், குண கர்மங்க ளோடுண்டாகிய வேற்றுமை திரவ்யத்துளுண்டோ இல்லையோ? இல்லை யெனில், அவை ஒன்ருும்; உளதெனில் அது திரவியததோடு ஸ்வபாவததால் ஸம்பநதமாயில் குணங்களும் ஸ்வபாவததால் ஸம்பந்தமாக அமையும். இனி ஸமவாயங் கூட்டக் கூடுமெனில், திரவியததினுள்ள வேற்றுமையைத திரவ யத்தோடு கூட்டிற்ருே? பிறவழி யுள்ள வேற்றுமையைத திரவ்யத்தோடு கூட்டிற்ருே? வென்பது முதலாகிய குற்றங்கள் வரும். குண கர்மங்களோடு திரவயத்துக்கு உண்டாகிய வேற்றுமை ஸமவாயங் கூட்டுவதன் முனபு திர வியத் தில்லையாகில், குண கர்மங்கள் திரவியததோடொன்ருவதாம். ஆதலிற் கூட்டம் வேண்டாதாம்.

இனிக் கூட்டுவதன் முன்னே திரவியத்திற் குண கர்மங்களோடே வேற் றுமையுளதாகில், அதுபோல குண கர்மங்களுந திரவியத்திற் ருமே யுளவாம். ஆதலில், ஸமவாயங் கூட்ட வேண்டுவதில்லை. இன்மையில் குண கர்மங்கள் தாமே வஸ்துவிற் குழுமி நின்றன. இனி ஸத்தாய குண கர்மங்கள் கெடில் ஸத்தாய திரவியமு மொழிவறக் கெடவமையும். அஸத்தாகிய குண கர்மங்கள் தோன்றில், அஸததாகிய கரவிஷாணுதியும் தோன்ற அமையும். அது தோன் ருமையில், அஸத்துக்கு உற்பததி கூடாதாம்; ஆதலின, ஸத்துக்கு அத்யநதம் நாசமும் கூடாதாம்; ஆதலின், உள்ளது ஒழிவறக் கெட்டு இல்லாதது தோன ருதாயின், லோகம் சூன்யமாம். ஆதலால், சமுததிரததுத திரை சமுததிரத அத தோன்றி யவிநதவாறு போல வியக்தி ரூபததாற் கெட்ட குணகர்மங்கள்

---

1 ஜடதவம் - அசேதனம்.

சக்தி ரூபத்தால் அந்த திரவ்யத்து நின்று காரணம் பெற்றுப் பின்னும் வியக்தி ரூபததாற் புலப்பட்டனவாதலில், வியக்தி ரூபத்தாற் கெட்டன சக்தி ரூபத்தால் அந்தப் பொருளோடு கூடிப் போந்தவாறு நீ அறிந்திலேயோ? அறிவிற் பின்னனுதலில் உனக்கு அறியாமை ஸ்வ பாவமன்றோ வென்றவாறு. (உஅ)

811 பொதுவெலாப் பொருளொடும் பொருந்தி நின்றதே
லதுவெலாப் பொருள்களை யாக்கு மொற்றுமை
யிதுவலா லவைதமமு ளியைத லிலலையேல்
செதுவலாம் பிறவது சென்ற தென்றலே.

(இ - ள்.) ஸாமான்ய மெனபதொன்று எனைப் பொருட் கண்ணும் நின்றதுண்டாயில், அது எல்லாப் பொருள்களையும் ஒன்றாகச் செய்யுமெனபது கொள்ளலாம். இது நினறமையு மின்றிப் பொருள்களும் அதயந்தம் அபின்னங்களுமாவன. ஆயில், நின்வாக்கியம் அஸதபிரலாபமா மென்றவாறு.

என்னை? சாமான்யம் பொருள்கடோறும் நில்லாதவாறெனில், அனுவிருத்தி பிரதயய நிமிததமாகிய ஸாதாமத்தை யொழிய ஸாமானய மென்பதொன்று பிரததியக்ஷாதி பிரமாணங்களால் திரவியாதி த்ரயம்போலே [1]பிரதிபன்ன மாகாமையின் என்றூர்க்கு [2]அனுகம பிரதயயம் ஸாமான்யததால் வருவதாதலின், அதனுல் ஸாமான்யததினுக்கு பிரதீதி யுளதெனில், [3]அததிரயம் போல பிரதி அனுகம பிரதயயமாவது [4]இதம்ஸத் இதம்ஸத எனவும், [5]இயம்கெள இயம்கெள எனவும் பிறக்கும் பிரதீதியன்றே. அஃதாயி லுண்மைபற்றி, இதம்ஸத தென்றும், கோவான தனமைபற்றி இயம்கெள என்றும் ஸாதர்மியததால் பிறந்ததல்லது, நீசொல்லும் ஸாமான்யத்தாற் பிறந்ததன்று. பிறக்கில், உண்மைததன்மை யுண்டாந்தன்மை யில்லாத முயற்கோடு முதலாயினவற்றில் இதம்ஸத் தென்றும், கோவாநதன்மை யில்லாத அஸ்வாதியில் இயம் கெள என்றும் பிறக்கல் வேண்டும்.

இனி, ஸாதர்மியம் ஸாமான்யத்தாற் பிறந்ததெனில், ஸத்வாதியும் ஸாமான்யததாற் பிறந்ததாம். பிறகக, ஸாமான்யம் அஸத்திலே ஸத்வாதியைப் பண்ணிற்றும். இனி ஸதவாதி தர்மஙகளை ஸாமான்யம் பண்ணுமாயில், ஒழிநத சுக்லத வாதியையும் வேறே சில பண்ணுதல் வேணடும். இனி, சுக்லதவாதி [6]ஸ்வதஸித்தமெனின், ஸத்வாதியும் ஸ்வதஸிததமாக அமையும். ஆதலால், ஸாமான்யம் பிரமாணஸிதத மன்மையிற் கல்பனையா மென்பது. அன்றியும் ஸாமான்யாதி திரயததில் ஸத்வமில்லாமையாலும், ஸாமானயம் கல்பனையாம்.

---

1 பிரதிபன்னம் - அறியப்படுதல்.

2 அனுகம பிரத்யயம் - ஏகஜாதியான பொருள்களிலுள்ள பொதுத தன்மை. 3 அத்திரயம் - அந்த மூன்று.

4 இதம்ஸத இதம்ஸத் - இதுஉளது, இதுஉளது.

5 இயம்கெள இயம்கெள - இதுபசு, இதுபசு.

6 ஸ்வதஸித்தம் - தானே சிததமாயுளது.

இனி, ஸாமான்யாதி திரயத்தில், [1]ஸாமானயஸததை இல்லை யெனினும், [2]ஸ்வரூபஸத்தை யுளதெனில், க புஷ்பாதியிலும் ஸாமான்யஸததை யில்லை யெனினும் ஸவரூபஸத்தை யுளதாய் அஸதபதார்த்த மென்பதொன் றிலலை யாம். ஆதலால், ஸாமான்யத்தினுக்கு பிரதீதி யின்மையில், அது பொருள் தோறும் நின்றமையில்லை யென்பது. இனி, அது உளதெனினும், ஸாதர் மியத்தால் வரும் ஒற்றுமை யொழிய ஸாமான்யத்தால் வருவதொன் றில்லாமை யில் பொருள்களுக்கு இதனுல் வருவதொரு ஒற்றுமை யில்லை யென்பது. ஆத லால், நின்வசனம் அயுக்த மென்பது. (உ௧)

812 அன்றியும் பொதுவது வந்த மில்பொருட்
சென்றதே யென்றலாற் சிதர்ந்து பன்மையாய்க்
குன்றியுங் கூடியு நின்றுங் கொள்பய
மின்றியும் போதலா லென்னை யாயதோ.

(இ - ள்.) அன்றியும் ஸாமான்ய மெனபது சகல பதார்ததங்களிலும் செனறது என்பாயாயில், அது அந்தப் பதார்ததங்களிற் பின்னமோ, அபின் னமோ? பின்னமெனில், அவற்றிற் பின்னமாகிய ஆகாஸத்தாற்போல ஸாமான யததால் ஒற்றுமை பொருள்களுக் குளதாகாதாம். ஸமவாயங் கூட்டக் கூடு மன்ருே வெனினும் பொருள்தோறுங் கூடி நின்றும் பின்னமாகிய ஆகாசம் ஒற்றுமை பண்ணுதவாறுபோல ஸாமான்யம் பொருள்களுக்கு ஒற்றுமை பண் ணுதாம்.

இனிப் பொருள்களோடு அபின்ன மெனில், மிருத்திற் கிடநத மிருத்வம் மிருததுவததுக் கட கபாலாதி நாநாதவத்தை யடைநதவழி நாநாவாயும், லவ ணுதியாய்த திரிநதவழித திரிந்தும், ஜலாதியாற் கெட்டவழிக் கெட்டும் இவ வாறு பகுபிரகாரமாம். இனி, ஜலத்துவ ஸஹிதமாகிய ஸதவமும், [3]பாவகதவ ஸஹிதமான ஸதவமும் என இவ்வாருகியும் சிதறி ஸாமான்யம் நாநாதவத தினை யடையும். இனி லோகததுள் கடாதிவஸ்துக்கள் குறைநதவழி கடத வாதி ஸாமான்யம் குறைந்தும், அவை கெட்டவழிக் கெட்டும், கடாதி புதி தாகத் தோன்றியவழி வநது தோன்றிக் கூடியும், பதார்த்தங்கள் நின்றவழி நின்றும், அவை சென்றவழிச் சென்றும் நித்யமும், வியாபியும், ஸத்தாவி ரஹிதமு மாதலில், அர்த்தகிரியா காரியன்ருகியும் ஸாமான்யம் பதார்த்தங்களிற் பினனமுமாய் அவற்றிற்கு ஒற்றுமையைப் பண்ணுதென்று சொல்லில் ஸாமான்ய கல்பனையால் கொள்வதோர் பயனின்ருகியுங் கெடுதலால் இது திர வியமாகிய தெவவா றென்றவாறு. (௩0)

813 பொதுவெனப் படுவதோர் போலி யாதலாற்
பொதுவெனப் படுவன போன்ற தாங்களே

---

1 ஸாமான்யஸத்தை-சர்வ பொருள்களுக்குரித்தான உண்மைத்தன்மை.

2 ஸ்வரூபஸததை - தனிததனி பொருளின் உண்மைத்தன்மை.

3 பாவகத்வ ஸஹிதம் - உஷ்ணத்துவத்துடன்.

யதுவென மீட்டிருந் தாமென் றெண்ணுவா
யிதுவென வென்னையிங் கிதனோ டேழெனுய்.

(இ - ள்.) சாமான்யமாவது ஸாதர்மியமே, பிறிதில்லையெனில், ஸாதர்மியமே சமான்ய மாவதாயில், அது திரவ்யத்தில் அத்யந்தம் பின்னமன்றாகி, திரவ்ய ஸ்வரூபமாகி, சுக்லத்வம்போலப் படத்வமும் ப்ரதீதமாதலில் ஸத்தையை யுடைத்து மாகி, தர்மிநாசத்து தர்மியுடனே நசிப்பதுமாகி, தர்மியிற் பிரித்துப் பெறப்படாது, தர்மி தானேயா யிருத்தலில், இது குண வியதிரிக்தார்த்த மன்று; குணவிசேஷமாம் என்றார்க்கு, ஒரு திரவ்யத்தும் கிடக்கின்ற மாதுர்யாதி குணங்கள் [1]பிரகர்ஷ தாரதம்யமுடைய; சாமான்யம் பிரகர்ஷ தாரதம்ய முடைத்தன்றெனில், [2]அஶ்வத்வாதி சாமான்யத்திற்கும் பிரகர்ஷ தாரதம்யம் காணப்படுகின்ற தன்றோ என்றார்க்கு, அஶ்வத்துவ மொக்கு மெனினும் பிறிதொரு காரணத்தாற் பிரகர்ஷ தாரதம்யம் வருகவென்னில், மாதுர்யத்வ மொக்குமெனினும், பிறிதொன்றால் பிரகர்ஷ தாரதம்யம் வருதல் கூடும்.

இனி, அஶ்வவிசேஷ மெனினும், மாதுர்ய விசேஷ மெனலுமாம். இனி மாதுர்ய பிரகர்ஷத்தால் மாதுர்ய முடைப் பொருள் [3]பிரகிருஷ்ட மாமெனில, அஶ்வத்வ பிரகிருஷ்டத்தால் அஶ்வத்வமுடைய திரவ்யமும் பிரகிருஷ்ட மாம், ஆதலால், சாமான்யமும் குணவிசேஷமாம். அன்றியும் இம்மாத்திர மாகிய விசேஷத்தால் அர்த்தாந்தரமாகக் கொள்ளில், மற்றுப்பிறவாறு கந்தம் புறப்பட்டுங் கமழுமாதலின், அதுவும் அர்த்தாந்தரமாக வேண்டுதலில், தத்துவ மேழாகக் கோடலுமாம். சாமான்யம் சாதர்மியத்தைப் பண்ணுமெனில், திரவியத்திற் குணத்தைப் பண்ணுவதாக, [4]குணகிருத்தென ஒன்றைக் கல்பித்து அதற்கு சாமான்யத்தை இல்லையெனினும் ஸ்வரூபமாத்திரமாக்கித் தத்துவ மேழாகக் கோடலுமாம். அஃதன்றிப் பலவாகக் கோடலுமாம். அவ்வாறு கொள்ளா யென்றவாறு. (ருக)

814 சிறப்பெனப் படுவது தெரியி னப்பொரு
ளறப்பெற நின்றவக் குணம தாதலி
னிறப்பவு மிதுதன தின்மை யோயிறாய்
புறப்படுத் திடுவனுன் பொருளு மெண்ணிலே.

(இ - ள்) விசேஷமென்று சொல்லப்படுகின்றது தான் பொருள்களுள், ஜீவாதி[5] பிரபோதகமாகிய வியக்தியோ பிறிதொன்றோ? பிறிதொன்றெனில், அந்த விசேஷ மென் செய்வதாம். ஜீவாதி வியக்தியைப் பண்ணுமோ பண்ணாதோ? பண்ணுமெனில், ஜீவாதி வியக்தியைப் பண்ணுவது பிறிதொன்று

1 பிரகர்ஷ தாரதம்யம் - மேன்மையின் உயர்வு தாழ்வு.

2 அஶ்வத்வாதி சாமான்யம் - குதிரைத்தன்மை முதலிய ஜாதி.

3 பிரகிருஷ்டம் - மிகவும் மேலானது.

4 குணகிருத - குணத்தை செய்வது. 5 பிரபோதகம் - அறிவிப்பது.

கல்பிக்கவும் வேண்டி விசேஷ கல்பனைக்கு பிரயோஜனமில்லையுமாம். இனி, வியக்தியைப் பண்ணுமெனில், பொருள்களுள் ஜீவவியக்தியாவது - புத்தியாதியாம். அஜீவவியக்தியாவது - வர்ணாதியாம். அவ்வழி அசததாகிய விசேஷம் சத்தாகிய புததியாதியைப் பண்ணுதல் பொருந்தாதாம்; பண்ணில் க புஷ்பமும் ஒரு சத்தைப் பண்ணவமையும்.

இனி, ஜீவாதி பிரபோதகமாகிய வியக்தியே விசேஷமெனப் படுமெனில், அவாநதர சாமான்ய மென்பதொன் றில்லையாம். என்னை? ஜீவதவ மென்னும் சாமான்யமாவது ஜீவபிரபோதகமாகிய வியக்தியை ஒழியக கூடாதாமாதலின். அனறியும் விசேஷமென்பது [1]சாகல்யேன திரவயததினுக்குப் புறப்பாடு செய்யும் ஸ்வபாவ விசேஷமாதலின், அது குணமேயாம்; ஆதலின், நின்றுற் கல்பிக்கப்படுகினற விசேஷ மென்பதொனறில்லை பாம்; ஆதலிற் பதார்த்தங்களோ டெண்ணுத லொழிததேன், ஒழி யென்றவாறு.

புறப்படுத்திடுவ னெனத் தன்மையா லோதிற்று - [2]சாதாமிய சாமான்ய வகையால் எல்லாப் பொருள்களுக்கு மொற்றுமையும் [3]வைதர்மியமாகிய விசேஷ வகையால் பொருள்களுக்கு வேற்றுமையும் கொள்கை, ஸ்யாதவாத பூஷிதமாகிய ஜைனசிததாநததது நினற வெமககல்லது ஏகாநதவாதியாகிய நினக்குக் கூடாமையிற் புறப்படுததிடுவே னென்று சொன்னவாறும். (௩௨)

815 கூட்டினு லல்லது கூட்ட மில்லையேற்
கூட்டுவான் செல்வதுங் கூட்ட மில்லையே
பாட்டினுற் பலவுமாம் பயமி லாதன
மூட்டினு லுரைத்தியோ முனிவு போக்கிதோ.

(இ-ள்) திரவயததுடன் குணகர்மங்களுக்கு சமவாயங் கூட்டினல்லது கூட்டமில்லையாயில், திரவ்யத்துடன் குணகர்மங்களைக் கூட்டுவதாகக் கல்பித்த சமவாயந்தானும், உம்மையால், சமவாயத்தின் குணமாகிய [4]சமவயிப் பித்தலும், ஞானதியை ஜீவனேடு சமவயிப்பிததலும், பிருதிவியாதியோடு சமவயிப்பியாமையும், அக்கினியுடனவெம்மையைக் கூட்டுதலும், குளிர்ச்சியைக் கூட்டாமையும், ஜலததுக் குளிர்ச்சியைக் கூட்டுதலும், வெம்மையைக் கூட்டாமையும் முதலாயின எல்லையில அமையும்.

ஆதமகுணமாகிய, புத்திக்குக் குணமாகிய ஸம்யக்தவமித்யாத்வ [5]நைசித்ய மாந்த்யாதி குணங்களும், ரஜதம் க்ஷீரமுதலாகிய பொருள்களினுடைய சுக்ல வர்ணத்தின் விசேஷ குணங்களும், இவ்வாறே ஒழிந்த வர்ணததின் விசேஷ குணங்களும், க்ஷீரசர்க்காதி திரவயத்தினுடைய மாதுர்ய ரசத்தின் விசேஷ குணங்களும், புளிப்பு முதலாகிய ரசங்களின் குணங்களான கடுமை மெனமைகளும், ஒழிநதரஸகநத ஸ்பர்சங்களுடைய விசேஷகுணங்களும், ஞானததின

1 சாகல் யேன-முழுதும். 2 சாதர்மிய சாமான்யம்-ஒற்றுமைத தனமை.
3 வைதர்மியம் - வேற்றுமை. 4 சமவயிப்பித்தல் - சேர்ப்பிததல்.
5 நைசித்யமாந்தயாதி குணங்கள் - கூர்மை, மநதம் முதலாகிய குணங்கள்.

குணமாகிய மித்யாத்வ குணமாகிய மௌட்டியம் [1]வைபரித்யம் சம்சயித்தல் முதலாயினவு மாகிய குணத்தின் குணங்களும், தானாதிகிரியைகளினுடைய நன்மைக் குணமும், ஹிம்சாதி கிரியைகளினுடைய தீமைக்குணமும், ஹம்ஸம் விருஷபம் அவைபோலும் ஸ்திரீ புருஷாகளுடைய கமனகிரியைகளின் நன்மைக்குணமும், [2]உஷ்ட்ராதியும் உஷ்ட்ராதி போல்வார்களு முடைய கமனகிரியைகளிற் றீமைக் குணமும், யானை குதிரை முதலாயினவற்றினுடைய ஓட்டுக்களின் விசேஷகுணங்களும், முதலாகிய கிரியாகுணங்களும், பிறிதொன்று கூட்டினல்லது, தத்தம் முதல்களோடு கூடாவாம்.

இனி, அவற்றைப் பிறிதொன்று கூட்டில், அதனையும் பிறிதொன்று கூட்டவேண்டி அநவஸ்தையாம். யாவற்றையும் சமவாயங் கூட்டு மெனில், சமவாயந்தன்னை திரவயங்களோடும், தனகுணங்களைத் தன்னோடனும் தானே கூட்டிற்றும். ஆகவே சமவாயங்கூட்டுமாப்போல ஒழிந்தனவும் தம்குணங்களைத்தாமே கூட்டிக்கொள்ள அமையும். ஆதலில், ஸமவாய மென்பதொன்று வேண்டாவாம். ஆகவும், நீ பயனின்றியும் இவ்வாறுபலவாகச் சொல்லுகின்றது மௌட்டிகத்தாலோ, ஆலஸ்ய நிவிர்த்தியர்த்த மாகவோ? சொல்லா யென்றவாறு. (௩௩).

816 கொக்கொடக் கருமையைக் கூட்டு விக்குநுந்
சுக்கொடத் துவர்ப்பினைத் துன்னு விக்குநுந்
சிக்கென வேற்றுமை தீர்ப்பி நீயெனா
நக்கன ளனியனே நயவ னென்னவே.

(இ - ள்.) கொக்குடன கருமை நிறங் கூட்டுதலும், சுக்குடன துவர்ப்பைக் கூட்டுதலுஞ் செய்து, கொக்குடனும், கருமையுடனு முண்டாகிய வேற்றுமையும், சுக்குடனும், துவர்ப்புடனு முண்டாகிய வேற்றுமையினையுந தீர்ப்பிப்பாயாக, பின்னமானவைக்கு வெண்மையுங் கருமையு மொக்குமாதலி னென்றார்க்கு, யோக்கியமான குண கர்மங்களைத் திரவ்யதநுடன் ஸமவநிப்பிக்கு மெனினும், பின்னமான இவற்றுக்கு யோக்கியதை ஸமவாயத்தாலோ, பிறிதொன்றாலோ, ஸ்வயமேவவோ? ஸமவாயத்தாலெனில், அதற்கு முன் சொலலிய குற்றம் வரும்.

இனிப் பிறிதொன்று யோக்கியதையைப் பண்ணுமெனிற் கொக்குடன் கருமைக்கு யோக்கியதையைப் பண்ணவமையு மென்பது முதலாகிய குற்றம் வரும். இனி, ஸ்வயமேவ யோக்கியதை யுளதாமெனிற் கூட்டமும், ஸ்வயமேவ ஆகவமையும். இனி ஸமவாயதநினுக்கு இவ்வாறு செய்வது ஸ்வபாவமெனில் ததஸ்வபாவமும், ஸமவாயமும் பின்னமோ அபின்னமோ? அபின்னமெனில், குணகர்மங்களும் அபின்னமாக அமையும். பின்னமெனில், அவற்றைப் பிறிதொனறு கூட்டுமோ, ஸ்வயமேவ ஸம்பந்தமோ? ஸ்வயமேவ ஸம்பந்தமெனில், குணகுணிகளும் அவ்வாறாம். இனிப் பிறிதொன்று கூட்டு மெனில், அநவஸ்தையாம். அன்றியும், ஸமவாய ஸ்வபாவத்தைப் பிறிதொனறு

1 வைபரித்யம் - மாறுபாடு. 2 உஷ்ட்ராதி - ஒட்டை முதலிய.

கூட்டாது, ஸமவாயம் தன்னுடன் கூட்டுதல் ஸ்வபாவமாயில், [1]ஸ்வபாவ ஸ்வபாவிகள் பினனமாதலில் ஸமவாயத்துக்குச் சொல்லிய குற்றம் வரும். ஆதலால், மிகவும் ரஸிகனிவனென்று சொல்லிச் சிரித்தா ரென்றவாறு.

இனனும், வேற்றுமை தீர்ப்பியெனவே, குணகர்மங்களோடு திரவயதேதா டுண்டாகிய வேற்றுமையுங் குணமாதலால், அவற்றிற் பின்னமாகிய அதனை, அவற்ருேடு சமவாயங் கூட்டிற்றனறே? இல்லையாயில் குண கர்மங்களும், திரவயமும் ஒன்ருகு மன்றே? வேற்றுமையை ஸமவாயங் கூட்டுதலி னன்றே குணகர்மங்களும், திரவ்யங்களும் வேருயின. இனி, அவற்றைக் கூட்டுமென்றனையாயில், முன் ஸமவாயததாற் கூட்டப்பட்ட வேற்றுமையைப் பிறிதொன்ருக நீக்குவிப்பாயாக வென்றுங் கொள்க. இன்னும் வேற்றுமை தீாப்பி யென்றதனுல் ஸமவாயததால் திரவயத்துடன் கூட்டப்பட்ட குணகர்மங்கள் திரவயததின வேறுபட்டுப் பிரிதலை முடிவு செய்தற்கரிய தென்றவாறு.

முடிவுசெய்தற் கருமை யென்னையெனில், ஸமவாயம் குணகர்மங்களைத் திரவ்யததுடன கூட்டுவதல்லது பிரிப்பதன்று; பிரிப்பது பிறிதொன்று கல் பித்திலை; தாமே பிரியுமெனிற் கூட்டும்பொழுதுந தாமே கூடவமையுமாதலின. இனி, குணகர்மங்கள் திரவ்யததிற் பிரிகின்றனவல்ல நசிக்கினறன வெனில், திரவயத்துடன குண கர்மங்கள் கூடுகின்றன வல்ல; அவை திரவயததுத் தோனறுகினறன என்னவுமமையும். ஆதலால், விசேஷவாதி அயுக்தஞ் சொல்லுகின்ருனென்று சிரிததா ரென்றவாறு- வேற்றுமை பிரிதற் பொருண்மேல் வருமாதலினும் தீர்தலென்பது முடிவு செய்தற் பொருண்மேல் வருமாதலினு மிவவாறு பொருளுரைக்கப்பட்டது- (௩௪)

817 என்றுமப் பொருள்களு மியல்புந் தங்களோ
டொன்றென வருதலா லொன்று மாகுமே
தென்றவி லிருமையுந் தெரியி னின்மையா
லின்றினிக் கூட்டுவ தில்லை யில்லதே.

(இ - ள்.) அனுதியாகக் குணகுணிகள் பிரிக்கப்படா, தொன்று தொட்டு வருதலில். [2]தாதாதமிய சம்பந்தத்தால் ஒன்றெனவுமாய், உம்மையால் குண மெனவும், குணியெனவும் பெறப்படுதலின் வேறெனவுமாகும். அவவாறன்றி அவை அத்யநதம் பினனமெனில், குணியிற் பினனமான குணம் நிராதாரமாகிப் பெறப்பட்டதாம். குணத்திற் பின்னமான குணியும், [3]காவிஷாணுதி போலப் பெறப்படாதாம். ஆதலால், இரண்டும் சூன்யமாமாதலில் இரண்டையுங் கூட்டுவதாகி, [4]சத்தாவிரஹிதமாகிய ஸமவாயமுமில்லையா மென்றவாறு. ()

818 ஒன்றுநற் பொருள்கடாங் குணங்க டாம்பல
வென்றுநீ [5]யேகம் [6]வே றென்ப தென்னெனப்

1 ஸ்வபாவ ஸ்வபாவிகள்-குணகுணிகள். 2 தாதாதமியம்-அதே சொரூபம.
3 காவிஷாணம்-கழுதைக்கொம்பு. 4 சத்தாவிரஹிதம்-உண்மையில்லாதது.
5 "வேறென்பதென்செயப்" என்பது பாடபேதம். 6 ஏகம்-ஏகாந்தமாக.

பொன்றுமக் குணமெனிற் பொருட்கு மாமென
நன்றினிக் குணமுண்மை நாட்ட மாமென.

(இ - ள்.) குணியாகிய பொருளொன்று, அதின் குணங்கள் பல ஆதலால் அவவிரண்டும் ஒன்றாயிற் குணிக்கு நாநாத்வமும், குணத்துக்கு ஏகத்வமும் வருமென்றும், குணம் அநித்யமாதலின், அதனோடு ஒன்றாகிய குணிக்கு அநித்யத்வமும், குணி நித்யமாதலின், அதனோடொன்றாகிய குணத்தினுண்மைக்கு நன்றாக நித்யத்வமும் வருமெனவும் புத்தி பண்ணிக் குணகுணிகளை, ஏகாந்தம் பின்ன மென்கின்ற தென்செய்ய? அவை அவ்வாறாயினும் குற்றம் வருவதில்லை யென்றவாறு.

என்னை, குற்றமில்லாதவாறெனில், குணிகடாம் ஒன்றாகி நின்று கூறுபடுக்கலாகா தொன்றாயினவோ, கூறுபடுக்கலா யொன்றாயினவோ? கூறுபடுக்கலாகாதொன்றாயின வெனில், ஒரு பொருளை வெளியது, நறியது, இனியது, சிறியது எனவும், உணர்வது, காண்பது, செய்வது, துய்ப்பது எனவும் இவ்வாறு சொல்லுதலும், அவை, அவ்வாறாதலும் கூடாவாம். இனி, கூறுபடுக்கலா யொன்றா யிருக்கும் பொருளெனிற் குணங்களுடனுண்டாகிய ஐக்கியதையால், குணிக்குக் கூறுபாடுபற்றிக் கதஞ்சித் நாநாத்வம் வருவதாம். இனி, குணங்கடாம் பலவாகி நின்று கடபடாதிபோல லவதந்த்ர ரூபத்தால் அத்யந்தம் பின்னங்களாகிப் பலவாகின்றனவோ? வேறு பிரிதலும் பெறப்படாவாகிப் பொருட்குத் தன்மையாய்ப் பொருட்கண்ணே பெறப்படுவனவாகி, லக்ஷணங்களாற பாக்க, பின்னமாகிப் பலவாகின்றனவோ? பிரதம பக்ஷமெனில், குணங்களுக்குத் திரவ்யத்துக்கண்ணே பெறப்பாடின்றி, ஒன்றற்குக் குணங்களெனப் படாவாம். இனி த்விதீய பக்ஷத்தால் பிரிதலும் வேறு பெறப்படாமை முதலாகிய பிரகாரத்தால், குணியோடைக்கியதை பற்றிக் குணங்களுக்கு [1]ஸ்யாத ஐக்கியதை வருவதாம்.

இனி, குணி நித்யமாகின், அது அவிசலித நித்யமாகின்றதோ? ஒன்றொன்றாய்ப் பரிணமியாநின்று நித்யமாகின்றதோ? அவிசலித நித்யமெனில், அவிகாரியாய், அர்த்தகிரியா விரகிதமாகி அவஸ்துவாம். அன்றியும் குணத்தினீங்குதலும், [2]குணாந்தர யோகமும் கூடாதுமாம். இனி, பரிணாமி நித்யமெனில், நித்யமே யன்றி அநித்யமுமுளதாவதாம். அது, அநித்ய குணத்துடன் குணிக்குண்டான ஐக்கியத்தால் வந்ததாம். இனி, குணம அநித்யமாயின, அது ஒழிவறக் கெட்டு அநித்யமாகின்றதோ? சக்தி ரூபத்தா லன்றி வியக்தி ரூபத்தாற் கெட்டு அநித்தியமாகின்றதோ? ஒழிவறக்கெட்டு அநித்திய மாகின்றதெனில், மூர்ச்சாதி அவஸ்தையில் ஞானதி கெட்டவழி ஒழிவற சக்தி வியக்திவ்ய ரூபத்தாற் கெட்டதாயிற் பின்பு அந்த ஜீவனுக்கு ஞானதி பிறக்கப்பெறுதாம், கடபடாதியிற் பிறவாதவாறுபோல. [3](த்விதீயபக்ஷத்தில், பொருள் ஒழிவறக் கெடாது நித்யாநித்யாத்மகமாய் அநேகாந்தமாம்.)

---

1 ஸ்யாத ஐக்கியத்தை - ஒரு பக்ஷத்தால் ஒற்றுமை.

2 குணாந்தரயோகம் - வேறு குணத்தோடு சேர்க்கை.

3 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

வியக்தி ரூபததாற் கெடுதலாவது - வித்தின்கண் உத்பவித்து நின்ற அங்குரம் [1]சேதனாதி காரணததாற் கெடுதல். சக்திரூபத்தாற் கெடுதலாவது - வித்திற் பின்னொருகால் அங்குரம் பிறவாதவாறு தகனாதியாற் கெடுதல்; இன்னுமொரு காலதது ஓதிய சாஸ்திரார்த்த ஞானம் காலாந்தரோதபவ யோக்யமாகக் கெடுதல் வியக்திரூபத்தாற் கெடுதலாம். காலாநதரோதபவ யோக்யமன்றிக்கெடுவது சக்தி ரூபததாற் கெடுதலாம். மூர்ச்சாதி அவஸ்தையில், இவ்விரண்டு ரூபத்தாலும் கெட்டதாயில் ஞானம் பினபு பிறக்கப்பெறாதாம்; பிறக்கில் ஒழிவறக் கேடு ஞானாதிகுணததிற் கில்லையாம். அது, குணியுடன குணத்துக் குண்டாகிய ஐக்கியதையால் வநததாம். அன்றியும் குணகுணிகளை சமவாயம் கூட்டினவழி அவற்றின் பேதஞ் சிறிது கெட்டதாயில் ஒன்றுக்குவநத விகாரம் ஒழிநததற்குச் சிறிது வருவது யுக்தமாம். பேதமொன்றும் கெட்டதில்லையாயில் அவறறுக்குக் கூட்டமில்லையாம். ஆதலால், ஏகாந்தவாதிகட்கே நீ சொனனது குற்றமாவது. சியாத்வாதிகளுக்கு ஒரு குற்றமும் வாராதாம். [2]"ஒன்றுநற் பொருள்கடாங்குணங்க டாம்பல" எனனும் சோதய பரிஹார முகததால் [3]யுகபதநேகாநதஞ் சொன்னவாறும், "பொன்றுமக் குணமெனிற் பொருட்குமாம்" எனனும் சோதய பரிகாரமுகத்தால் கிரமானேகாந்தம் சொன்னவாறு மறிநதுகொள்க. கிரமானேகாந்தஞ் சொன்னவா றென்னை யெனில், கிரமததால் அநேகாந்தமாந தன்மை பொருட்கு இல்லையெனில் ஜீவன், தேவன, மனுஷ்யன என்றாதலும், பாலன் குமாரனென்றாதலும், ஸ்வர்ணம் மகுடாதியாதலும் கூடாவாம். (௩௬)

819 குணிக்கணா னேக்கினாற் குணங்க ளில்குணாத்
தணிக்கணா னேக்கினா லதுவு மன்னதே
பிணிக்கலாம் பிரிக்கலாம் பெற்ற நான்மையிற்
றுணிக்கலாந துருநெறி துன்னு நன்மையே.

(இ - ள்.) ஜீவன் அஜீவன் எனவும், மனுஷ்யன் தேவன் நரகன் எனவும், பிருதிவி, அப்பு, பால், சோறு, நெய் எனவும் இவவாறு திரவய ரூபத்தால் நோக்க குணங்களும், திரவ்யஸ்வரூபமாகித திரவ்யத்து ளடங்கும். வெண்மை, நீர்மை, இனிமை, தண்மை என குணரூபத்தால் நோக்க, குணி, குணததுள் அடங்கும். இவவாறுபெறப்பட்ட பிரகார நானகாலும் குணகுணிகள் ஒன்றாக்கலும், வேறாககலு மாவனவாதலில், ஏகாந்தவாதிகள் ஏகாந்தம் ஒன்றென்றும், வேறெனறும் சொல்லும்வழி வருவதொரு நன்மையுளதாகப் புததிபண்ணியிருநதாராகில் அது, பேதிக்கப்படு மென்றவாறு.

---

1 சேதனம் - வெட்டுப்படுதல்.

2 'ஒன்றுநற் குணிகடாம்' என்றும் பாடபேதம்.

3 யுகபதநேகாந்தம் - ஒருகாலத்து அனேகாந்தம்.

பெறப்பட்ட நான்காவன - 1𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌭𑌾𑌵𑌮𑍍, 2𑌅𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 3𑌏𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 4𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌭𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 என்பன. இவற்றால் குணகுணிகள் ஒன்றாக்கவும், வேறாக்கவுமா மென்பது. இனி, இந் நான்கும் ஒன்றாக்குவனவாக்கி 5𑌪𑍃𑌥𑌙𑍍𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌮𑍍, 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑌮𑍍, 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍍𑌰𑌤𑌿 𑌪𑌤𑍍𑌤𑌿, 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌮𑍍 என இந்நான்கும் வேறாக்கு வனவாகக் கோடலுமாம். பெற்ற நான்மை என்றமையின், இக்காதையால் 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌭𑌾𑌵𑌮𑍍 சொன்னார். அதனால், இனம்பற்றி ஒழிந்தன வும்பெறப்படுதலிற் பெற்றநான்மை யெனறா. (௩எ)

820 இல்லையக் குணங்குணிக் குண்மை தானெனச்
சொல்லினக் குணிகுணந் தொன்று மாதலா
லல்லதக் குணங்களு மவைக ளாமென
நல்லதித் துணிவென நயந்தி லெய்தினான்.

(இ - ள்.) குணிமுகத்தா னோக்கக் குணமில்லை; குணமுகத்தா னோக்கக்
குணியில்லை யென்று சொல்லுதலால், அவ்விரண்டு மில்லை யென்பதே சாலு
மெனபாயாயில், ஒனறில் ஒனறு அநதர்பவிக்கு மென்பதல்லது, அவற்றை
இலவெனறு சொல்லுவதில்லை. அந்தாபவிக்குமா றென்னை யெனில், குணத்
துக்கண்ணே குணியும், குணிக்கண்ணே குணமும் ஒன்றிநிற்கு மாதலின், அக்
குணங்களே குணிகளாகும்; குணிகடாமே குணங்களுமாம்; இது, குணகுணிக
ளது ஸ்வரூபமென்று சொனனாராக, லோகஜிதனென்பானும், தனது மித்
யாத்வ நீங்கி, இவ்வாறு தெளிதல் சால நல்லதுபோலு மென்று பிரிதனையி
னென்றவாறு. (௩அ)

821 பொருளொடக் குணந்தொழிற் குண்மை யொன்றெனத்
தெருள்வது மும்மையிற் றெரிய வைப்பது
மருளுடை யறநெறி யண்ணல் சேவடி
யிருள்கெட நினைந்தலு மினையை யாகென.

(இ - ள்.) திரவ்யத்துக்கும், குணகர்மங்களுக்கும் வேறுவேறன்றி ஸத்வம் 6ஸஹைவ ஸம்பவித்தலில், அம்மூன்றற்கும் ஸத்வம் ஒன்றென்று தெளித

1 அந்யோந்யாந்தர்பாவம் - ஒன்றினொன்றடங்கும் தன்மை.
2 அப்பிரதக் பிரதேசிதவம் - வேறு வேறான இடமின்மை.
3 ஏகத்வேன கிராகியதவம் - ஒன்றினால் ஒன்று அறியப்படும் தன்மை.
4 தத்பாவ பாவித்வம் - அது அதுவாம் தன்மை.
5 பிரதங்நிர்தேசம், பிரதக் பிரதேசம், பிரதக் பிரதிபத்தி, ஸ்வசாமித்வம்- 1, 2, 3, 4-இவ்வற்றின் எதிர்பதங்கள்.
6 ஸஹைவ - கூட.

லும், ஸகல பதார்த்தங்களும் உத்பத்தி, ஸ்திதி, விநாசாத்மகங்க ளென்று தெளிதலும், கிருபாமூர்த்தியாகி, ஸம்யக்தர்சன ஞானசாரித்திராத்மகமாகிய ஸத்தர்ம மார்க்கத்தினைப் பிரகாசித்தருளிய பகவதர்ஹத் பரமேஸ்வரனது [1]ஸ்ரீபாதநகமயூக சமூஹத்தினை, ஹிர்தயத்துளதாகிய மித்யாத்வதிமிரம் [2]நிச்சேஷமாகக் கெடுமாறு அநவரதம் சிந்தித்தலுமாகிய இத்தன்மையையுடையை யாவாயாக வென்று சொல்லி யென்றவாறு. (௩௯)

822 ஓம்படுத் துலோகனை யொழியச் சொல்லியான்
காம்புடைக் [3]கடநெறிக் கடப்ப னென்னவே
[4]பேம்படுப் பவரொடும் பிரிவின் றுமையைத
தேம்படு கிளவிநீ சிந்தி யென்னவே.

(இ - ள்.) முன்சொன்னவாறே சொல்லி, லோகஜித் தென்பானை [5]ஓம்படுத்தி, யான் போவலென்று நீலகேசியார் சொல்லுதலும், லோகஜித்து, எனக்குத் தத்வஞான சக்ஷுஸ்ஸினை விழிப்பித்த மஹோபகாரிணியாகிய புண்யவதியே! நின்னை மறக்குமாறென்னை? [6]"பேயொடும் பிரிவின்னாது" என்பதறிதியன்றே? இதனை விசாரிப்பாயாக வென்று சொல்ல வென்றவாறு. (௪0)

823 ஒக்குமவ் வுரையென வுள்ள தேயென
நக்கன [7]ளாகிய நாதன் சேதியஞ்
சிக்கென வேத்துதல் சிறந்த தென்னவே
தக்கதென் றவன்சொலத் தானு நீங்கினள்.

(இ - ள்.) 'பேயொடும் பிரிவின்னாது' என்று நீ சொல்லியது யானும் பெரிது மறிவன்; அஃதவ்வாறே யொக்கும் என்று சிரித்து நின்னுடன் பாந்தவ்யமில்லாமல் விட்டுப் போகின்றேனல்லேன; [8]தீர்த்த வந்தநார்த்தமாகப் போகின்றேனென, அவனும் அஃதொக்குமென் றுடன்பட, அங்கு நின்றும் போயினு ளென்றவாறு. (௪௧)

நீலகேசித் திரட்டில் வைசேஷிக வாதச் சருக்கம் முற்றும்



1 ஸ்ரீபாதநகமயூக ஸமூகத்தினை - பகவானுடைய பாத நகத்தின் கிரணத்தினை.
2 நிச்சேஷமாக - மீதியில்லாமல். 3 கடம் - மலைச்சார்பு.
4 பேம்படுப்பவர் - பயமுறுத்துவோர்; பேய்கள்.
5 ஓம்படுத்தி - சம்மதிக்கச் செய்து.
6 "இன்னாதே பேஎயோடானும் பிரிவு" பழமொழி - 126.
7 'ஆதிய நாதன்' என்றும் பாடபேதம்.
8 தீர்த்த வந்தநார்த்தமாக - புண்ணிய ஸ்தலங்களில் வணங்குவதற்காக.

ஒன்பதாவது

# வேதவாதச் சருக்கம்

---

824 காதம் பலவுங் கடந்தபின் காகந்திக் கடிநகருள்
வேதமு மங்கமும் விச்சைக ணிலைமையும் வேண்டுநர்கட்
கோதவுங் கேட்பவு முரைத்தலி னுலகினு ளறியப்பட்டான்
பூதிக னெனப்படு மந்தணா ளேத்திடம் புக்கனளே.

(இ - ள்.) பலகாதமும் போகிக் [1]காகந்தி யென்னும் நகரம்புக்கு அந்த நகரத்து வேதமும், வேதாங்கமுமாகிய வித்யாஸ்வரூபங்களை விரும்பித் தன்னை யடைந்தார்களை, ஓதுவித்து, முன்பே ஓதியவற்றுள் சந்தேகிக்கப்பட்ட அர்த்தங்களைக் கேட்டார்க்கு அவற்றை [2]யதாவத் உபதேசித்தும், இவ்வாறே லோகத்து பிரசித்தனாயினான் பூதிக னென்பானோர் பிராஹ்மணனுடைய அத்யயனசாலை புக்கா ளென்றவாறு. (க)

825 என்னை யிங்குநும் பொருளென வினவலு மிவ்விருந்த
வன்னைதன் வரவிதே லாதியி லருமறை யதுமுதலாப்
பின்னைவந் தனகளு மிவையெனப் பையவே பெயர்ந்துரைத்தான்
முன்னமங் கிருந்தவோர் மூதுமக னவைதன் முறைமையினே.

(இ - ள்.) இவ்விடத்து நும் சித்தாந்த மாவதியாதென்று நீலகேசியார் கேட்டலும், இவள் பரசித்தாந்த மாராய்தற்குப் போதவும் வல்லளென நினைந்து, அநாதி ஸத்தாகிய வேதம் எமக்குச் சாஸ்திரம்; அது முதலாகப் பிறந்தன லோகத்து [3]பஞ்சவிம்சதி தத்வ ப்ரதிவாதியாகிய ஸாங்கிய தந்த்ரமும், ஷட்பதார்த்த ப்ரதிவாதி யாகிய வைசேஷிக சாஸ்திரமும் [4]ஸ்ருஷ்டிவாத ப்ரதிவாதி யாகிய சாஸ்திரமும், [5]ஸ்ருஷ்டிஸம்ஹாரவாத ப்ரதிவாதியாகிய சாஸ்திரமும், வைஷ்ணவமும், மாஹேஶ்வரமும், பாசுபதமும், பாஞ்சராத்ரமும், பரிவிராஜிகமும், அவற்றுள் அந்தர்பேதமும், மற்றுமுள்ளனவுமென்று முறையே சொன்னான், அறிவான் முதிர்ந்த பூதிகனென்னும் பிராஹ்மண னென்றவாறு. (உ)

---

1 காகந்தி - காவிரிப்பூம் பட்டினம். மணிமேகலை. (22):37.
2 யதாவத் - உள்ளபடியே.
3 பஞ்சவிம்சதி தத்வபிரதிபாதி - 25-தத்துவங்களை விளக்குவது.
4 ஷட்பதார்த்த பிரதிபாதி - ஆறு பொருள்களை.
5 சிருஷ்டிவாத பிரதிபாதி - உலகம் படைப்பு என்பதை விளக்குவது.

826 நாத்திக மல்லது சொல்லலை யாயின்மு னுன்பயந்த
சாத்திர மாவது வேதமன் றேவது தான் [1]சயம்பு
சூத்திரி நீயது வல்லை யலாமையிற் சொல்லுகிலாய்
போத்தந்தி யோவதன் றீமையென் றுன்பொங்கிப் பூதிகனே.

(இ - ள்.) நாஸ்திகமல்லது சொல்லுகின்றிலை. என்றுற் சொல்லப்பட்ட சாஸ்திரமாவது, அபௌருஷேய வேதமன்றே? அது நின்னுல் அறியப்படுவ தன்மையின, அதற்கு தோஷஞ் சொல்லுதல் நினக்கரிதென்று கோபித்துச் சொனனுன பூதிகனென்றவாறு.

நாஸ்திகஞ் சொல்லுதலாவது - முனபு வேதத்தைப்பற்றிப் பிறந்த தரிசனங்கள் பலவுளவெனறு சொல்லுதற்கண் அவை நின்கருததால் யுக்தமோ? அயுக்தமோ? யுக்தமெனில், மீமாம்ஸையைவிட்டு அவற்றைக் கோடல்வேண்டும்; மீமாம்ஸையே யுக்தம், அவை அயுக்தமெனில், சரீரத்தினின்றும் மூத்திரமே, [2]புரீஷமே, [3]அதோவாயுவே, வேர்ப்பே, சிலேஷ்மமே என்றிவை முதலாயின பிறந்தன வெனினும், சரீரதுக்கு அவற்றல் வருவதோர் சிலாக்கியதை யில்லை யெனறு சொல்லுதல் [4](போல அவற்றல் வருவதோர் சிலாக்கியதை இல்லை யென்று சொல்லுக); சூத்திரஸ்திரீயாகிய நினக்கு அறியப் போகாது வேதம் என்று சொல்லிய தென்னை ஹீனஜாதியாகிய நீங்கள் அறிகின்றது யானறிதற்கெட்டா தென்னை? யென்றேற்கு, ஹீனஜாதியானவா றென்னை யெனில், நுங்கள் ஸநதானததுப் பிரதான புருஷராகியவஸிஷ்டனே, அகஸ்தியனே, சக்தியே, பாராசரனே, வியாஸனே, சுகனே யென்றிவருள், வஸிஷ்டனும், அகஸ்தியனும், பிரமா, திலோத்தமை யென்னும் அப்ஸரஸ்ஸைக் கண்டகாலதது‌க் கலசத்துஜனிததனர். வஸிஷ்டனுக்குச் சண்டாளி கருப்பத்து ஜனித்தான் சக்தி யென்பான்; சக்திக்கு ஶ்வபாகிபாற் பிறந்தான் பாராசரன்; பாராசரனுக்கு மத்ஸயத்துப் பிறந்த மத்ஸியகந்தியைபாற் பிறந்தான் வியாஸன்; வியாஸனுக்குத திலோததமைபாற் பிறநதான் சுகன;

[5]“ நத்ர்கீ ஶஸம்ஜாதோ வஸிஷ்டோ நாம மஹாமுநி꞉
தபஸா ப்ராஹ்மணோ ஜாதஸ்தஸ்மா ஜ்ஜாதிரகாரணம். (1)

வாஸ்வீ ஶஸம்ஜாதஸ்துக்த்ர்நாம மஹாமுநி꞉।
தபஸா ப்ராஹ்மணோ ஜாதஸ்தஸ்மா ஜ்ஜாதிரகாரணம் (2)

ஶ்வபாகீஶ ஸம்ஜாத꞉ பராஶரமஹாமுநி꞉
தபஸா ப்ராஹ்மணோ ஜாதஸ்தஸ்மா ஜ்ஜாதிரகாரணம். (3)

---

1 சயம்பு - சுயம்பு; ஸ்வயம்பு. 2 புரீஷம் - மலம்.
3 அதோவாயு - கீழ்ப்போகும் வாயு, அபானம்.
4 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது. 5?

உத்ஸ்ருஷ்டஸ்ய ப்ரவ்ருத்தஜா விஷ்ணு வ்யாவொ நாஉ உஹாஉ¯நி ஃ|
தவஸா ஸ்ரூாஹணொ ஜாதஸ்யஷா ஜாதிரகாரணம்ழ."  (4)

என இவ்வாறு நீரே சொல்லுதலி னென்பது. அன்றியும் பிராஹ்மணராகிய நுமக்கும் அப்பியாஸத்தாலன்றி வாராதெனில், எமக்கும் அப்பியாஸத்தால் வரும். (ரு)

827 பூதிகன் றனது சொல்லலும் யானது வல்லனெல்லாம்
சாதிகண் டாயெனத் தான்றனை ராது சாற்றுகென்றுட்
காதியென் றுனுமோ ரந்தமென் றனுமுண் டேலதற்கு
நீதியி னுலுரை நீயினி யானது நோவனென்றான்.

(இ - ள்.) பூதிகன், நீலகேசியாரை நோக்கி, நீ வேதததுககு தோஷஞ் சொல்ல வல்லையோ வென்று சொல்லுதலும், யான் அதற்குத் தூஷணம் பண்ணுகின்றேன்; அதனை நன்றெனறு சாதிப்பாயாகவெனறு சொல்லுதலும், வேதத்திற்கு ஓர் ஆதியும் அநதமும் உளதாகில் சொல்லு; அதற்குத் தோஷ முளதாக யான இசைவனென்று சொன்ன னென்றவாறு. (சு)

828 செய்கையும் புதுமையு முடைமையிற் றிருட்டத்தின் மறுதலையிற்
பொய்யொடும் பொருளொடுங் [1]குவகொடுஞ் சாலவும் பொருந்துதலின்
மையுறு மயக்கமு மாற்றொடு கொலைமன்னு மருவுதலி
னையமி றீக்கதிச் செலுத்துவ ததுவென்னை யாவதென்றாள்.

(இ - ள்.) செய்கைத்தன்மை யுடைமையாலும், புதுமை யுடைமையாலும், [2]பிரதீதி விரோதமாகையாலும், பொய்யுடைமையாலும், பொருள்வேட்கை செய்யுமாதலினும், குவகொடு கூடுதலாலும், இருளுற்ற மயக்கத்தைப் பண்ணு மாதலினும், தடுமாறு பொருண்மைத்தாதலினும், கொலை முதலாயினவற்றுப் பிராணிகளைப் பிரவர்த்திப்பிக்குமாதலிற் றீக்கதி செலுத்துமாதலினும் அஃ தெங்ஙனம் ஆதியும் அந்தமுமின்றி நினக்குறுதி பயப்பதென்றவாறு.

செய்கை யுடைமையாவது - செயற்கையாகிய லௌகிக வாக்கியங்களோடு வைதிக வாக்கியத்தினுக்கு வர்ணபத வாக்கியார்த்தங்களில் விசேஷமில்லா மையினும். இவ்வாறு விசேஷமில்லாத புதுக் கிணறும், பழங்கிணறும் முதலா யின செயற்கையாயினவாறுபோல வென்பது.

" ஊநாஃிஃ காஙஃ ப்ரக்ரு தவெஉவ்யாவாரவாநு காஙக்வாஸ
ஊயு¯நாதந காஙவஸ "

என்பதனுல் வேதம் அபௌருஷேய மென்பது பெறப்படுமெனில், இவ்வாறு பிடகத்திரயாதிக்கும் அபௌருஷேயதவம் சொல்லலாமாதலின், அபௌரு ஷேய மென்பது லோகத்துப் பெறப்படாதாம். அன்றியும்,

1 குவகு - குற்றமுள்ள வகுப்புக்கள்.
2 பிரதீதி - காண்டல்.

[1]"ஸ்ய மஹதோ பூதஸ்ய நிஸ்வஸிதமேதத்யத்ருக்வேதோ
யஜுர்வேதஸ் ஸாமவேதோऽதர்வாங்கிரஸ இதிஹாஸ: புராணம்"

எனபது முதலாகிய வேத வாக்கியங்களாலும் வேதம் செய்கையுடைதது என்பது பெறுதும். வேததஅுக்குத 'தைததிரி' யென்றும் பேராதலினும் செய்கையுடைத்தாம். "தித்திரிணா ப்ரோக்தம்(தைத்ரி)" யென்று [2]நிர்வசிததலின.

"வக்தா நஹி கஸ்சித் கஸ்சித் ஸ்வாதந்த்ர்யேண ப்ரவக்தா
தத்யயமேவாஸ்ய பரம்பரா ப்ராப்தி ஸம்ப்ரதாயம் வேதம் விவக்ஷதி"

என்பதனல், உபதேச பரமபரையால் வருகின்றதன்றி ஸ்வாதநதிரத்தால் ஒருவன சொல்லாமையின வேதம் செயகையுடைததன்றெனில், பிடகததிரயாதியும உபதேச பரம்பரையால் வருகின்றதெனறு சொல்லலாமாதலின, அதுவும் செய்கை யுடைததனறும.

இனி, பிடகததிரயம புததாதியாற் செய்யப்பட்டதெனபது பௌதத சமயததுப் பிரசிததமெனில், வேதம மஹாபூதாதியாற் செய்யப்பட்டதென்பது வேதததுப் பிரசிததமெனறாககு, வேதம் இனனன் செய்தானெனறு லோகத்துப் பிரசிதத யினமையில் வேதம் செய்கையுடைததன்றெனில்,

"ப்ராஹ்மணா நாம் ப்ரஹ்ஞாயஸ்வாயம் ஸமுத்பாதிதே
உத்ஸ்ருஜ்ய ... ஸ்வாயம் ...
தேவாஸ்ய"

என்பது முதலாயினவும் இன்னனற் செய்யப்பட்டன வெனறு லோகததுப் பிரசிததியுடைய வனமையின, அவையும் செய்கையுடைய வனவாய் வேதம் போல [3]அனுஷ்டேயங்களாம்.

இனி, பிராஹ்மண துவேஷியும், காமுகனுமாயினனெருவனற் சொல்லப்பட்டதெனபது இநத வாக்கியந தனனலே விளங்குமன்றே வெனில், வேதமும் ஹிம்ஸாபிரீதியும், மதய பிரீதியும், பிராஹ்மண பிரீதியும் முதலாயின வுடையானெருவனற் செய்யப்பட்டதெனபது வேதந தன்னலே விளஙகும். எனனே யெனில்,

[4]"(a) ஸ்வஸ்தம் ஸாமகாவதே| (b) உக்தம் உக்தம் யஜ்ஞம் விப்ரவ: ப்ராஹ்மணா ஸமவேதாயோவ: காமயதே ஸோமம் ப்ராஹ்மணம் ..."

---

1 பிருகததாரண்யகம். 2 நிர்வசிததல் - பொருளுரைததல்.

3 அனுஷ்டேயம் - அனுஷ்டிககததக்கது.

4 (a) cf. தைத்திரீய ஸம்ஹிதா : 2-1; 1-1. (b) ஐதரேய பிராம்மணம்.

என்பனவற்றால் ஹிம்ஸாபிரீதி முதலாயின விளங்குமாதலினென்பது. ஆதலால், பலராற் சொல்லப்பட்டுக் காலதேசவயத்தால், இன்னார் சொன்னவென றறியப்படாத 1ஸுபாஷிதங்களை ஒருவன் ஒரு கோவை படத் தொகுத்தாற் போல வேதமும் வியாஸனாற் றொகுக்கப்பட்டதென்பது. வேதம் செய்கையும், புதுமையுடைமையு முதலாயின மேலிற் காதைகளாலுந் தெளிக. இனி, செய்கை யுடைமையாற் புதுமை யுடைமையும் பெறும்.

இனி, திருஷ்ட விரோதமாவது - லோகதநுக் காண்கின்றபடியை மறுதலைப்படச் சொல்லுதல். அஃதாவது, புற்றிலும், கலசத்திலும், பூமியிலும், மத்ஸ்யத்திலும், மிருக முதலாயினவற்றும் மனுஷ்யா பிறந்தா ரென்றலும், சண்டாளி கருப்பத்துத் தோன்றினான் பிராஹ்மணனாகு மெனறலும், அருணனென்னும் புருஷனுடன் இந்திரனும், சூர்யனு மெனறும் புருஷர் ஸங்கமிக்க, அவன் வாலியும், சுக்ரீவனு மென்னும் வானரங்களைப் பெற்றனனென்றலும், இந்திரனுக்குப் புருஷசின்ன மில்லாமையின் ஓர் ஆட்டினது 2சேப்ப மரிந்து கூட்டக் கூடிற்றென்றலும், ஜீவன் நித்யமும் வியாபியு மென்று சொல்லி வைத்து ஜீவனுக்கு 3கதி பிரதயாகதி முதலாயின சொல்லுதலும், கவச குண்டலாதியோடு குந்திதேவியாற் கர்ணன் பிறந்தா னென்றலும், புத்ரோற்பத்தி நிமித்தமாகப் பிராத்ருபார்யா கமனம் தர்ம மென்றலும் முதலாயின; அவையெல்லா மறிந்துகொள்க.

இனி, பொய்யொடு பொருந்துதலாவது :—

4"அந்தோ மணிமவிந்தத், தமநங்குலிராவயத், தமக்ரீவம் ப்ரத்யமுஞ்சத்| உத்தாநா ஏவ தேவயாவஹந்தி"

எனறல். குருடன் மணிகண்டெடுத்தலும், விரலிலாதான் மணி கோத்தலும், எருது மல்லாந்து பொதிசுமத்தலும் முதலாயின ஸம்பவியாமையிற் பொய்யொடு பொருந்திற்றும். அன்றியும், "யஜமான: ப்ரஸ்தர:" எனவும், "யஜமான ஏவ ப்ரஸ்தர:" எனவும், ஜைமினி பண்ணுகின்ற 5அவதாரணத்தால், வேதம் யாகாதிகர்ம விதியிலே ஒரு பிரமாணமாவது; ஒழிந்தவழி அர்த்தவாதமாவ தல்லது பிரமாணமாகாதென்று சொன்னமை பெறப்படுதலினும் பொய்யொடு பொருந்திற்றும்.

அன்றியும், 6" (a) ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம: (b) நேஹ நாநாஸ்தி கிஞ்சந"

என்று ஞானகாண்டத்து, பிரபஞ்ச மித்தியாத்துவம் சொல்லிக் கர்ம காண்டத்து, 7"அந்ருஹோத்ரம் ஜாஹாயாத் ஸ்வகாலே:" என்பது முத

1 ஸுபாஷிதம் - நன்மொழி. 2 சேப்பம் - ஆண் குறி.

3 கதி பிரதயாகதி - போதல் வருதல். 4 ?

5 அவதாரணம் - நிச்சயித்தல்.

6 (a) சாந்தோக்கிய உபநிஷத் 3. 14. 1. (b) காடகோ - உபநிஷத் 4. 11.

7 மைத்திராயணீய ஸம்ஹிதா - 1-8-6.

லாகிய வாக்கியங்களால் பிரபஞ்ச ஸத்பாவஞ் சொல்லுதல் முதலாகிய பூர்வாபர விரோதங்களாலும் பொய்யொடு பொருந்திற்றும். பூர்வாபரவிரோதமாகச்சொல்லுவார் அஸத்தியவாதிக ளென்பது லோகத்துப் பிரஸித்தம். பூர்வாபர விரோதங்களெல்லா மறிந்துகொள்க.

பொருள் வேட்கை செய்தலாவது - கிருஹ, க்ஷேத்திர, சுவர்ண, தில, வஸ்திர, கோ, மகிஷ, கஜ, துரகாதிகளைத் தானம் பண்ணுக வென்றும், 1 "ஐநகொ௦ணெலெஹொ ஸஹூஷஸிணெ ந யஜெ௯ நயஜெ" என்றும் சொல்லுதல். இவ்வாறு சொல்லவே, பாதரபூதராகிய ஜனங்களுக்கு அவற்றின்மேலே வேட்கை செல்லு மென்பது.

முன்னொரு தேவதத்தன் இருவர் புத்திரரை யுடையான், ஒரு புத்திரன் மரிக்க, அந்தப் புத்திராம்சமான க்ஷேத்ரத்தையும், கோமஹிஷாதியையும் அத்யயநாநுஷ்டான பரனாகிய சுரோத்திரிய பிராஹ்மணனுக்குத் தானம் பண்ணினன்; அவனும் கிருஷ்யாதி வியாபாரவானாகிச் செல்வான், பிறனொரு பிராஹ்மணனுக்குத் தன் கார்யத்தி சொல்லுவான், ஒரு புத்திரன் மரிக்க, அவனுடைய அம்சத்தினைத் தானம் பண்ணின னாதலில், ஒழிந்த புத்திரன் மரித்தால் அந்த அம்சமும் தானம் பண்ணுமாதலிற் பின்பு யான் கிருதார்த்த னாகுவேனென்று சொல்லினா னாதலின், இவ்வாறு பொருள் வேட்கை செய்யுமென்பது. ஜைநாகமமே ஆகார, அபய, ஔஷத, சாஸ்திர தானங்களைச் சொல்லுமாதலிற் பொருள் வேட்கை செய்யாத தென்பது.

குவகென்பது - கள்ளும், காமமும், மாம்ஸமும்.

கள்ளோடு கூடுதலாவது-சௌத்திராமணி யென்னும் யாகங் கள்ளாற் செய்யப்படுதலிற் கள்ளுண்டு, குடுமி குலைந்து, கை கோத்து நின்று, "ஊஓ௦ஷீ ய ஊஓ௦ஷீய ஷீய௯ூ௦தி வி௦யவஃ" என்று ஆடுவாராதலினும், 2 "தவஷ்ரீணி ஶீஷ-ரிணி ஸொஜெவா ந஁ ஸ ரா வா ந஁ கூ ஊ ந஁" என்னும் வாக்கியத்தாற் சொல்லப்படுகின்ற பிராஹ்மணன் தேவேந்திரனும், தேவர்களு முண்ணவைத்த கள்ளை யுண்டலில், இவனை இந்திரன், வஜ்ராயுதத்தால் வதித்தனன்; வதித்தலில் இந்திரனை பிர்மஹத்தி தோஷம் விதித்தலில், இந்திரன் ஸ்திரீ ஜனங்களையும், விருக்ஷங்களையும், பூமியையும், ஜலத்தையும் பிரார்த்தித்து, அவற்றின் மேற் றன் பிரமஹத்தியாதி தோஷத்தை விட்டனன்; அதுவும் ஸ்திரீகள் பக்கல் ரஜஸ்ஸாயும், விருக்ஷங்களுழைப் பிசினாயும், பூமியுட்களராயும், ஜலத்துள் நுரையாயும் நின்றது. இது தவஷ்ரீணி யென்பது முதலாகிய வேத வாக்கியத்திற் கண்டுகொள்க.

அசுர மந்திரியாகிப் பிராஹ்மணனாகிய சுக்ரனுழைச் செத்தாரை யெழுப்புவதொரு மந்திர முண்மை கண்டு, அதி பெறவேண்டிப் பிரகஸ்பதி புத்திரனாகிய புதனும், சுக்ர புத்திரியாகிய தேவயானையொடு சங்கமித்துச் செல்வுழி,

1 பிருகதாரண்யக உபநிஷத் - 3-1.
2 பாகவதம் - 6-9.

அசுரர், புதனைக் கொலலுநதோறும் சுக்ரபுத்திரி நிர்ப்பந்தத்தால் அவனை எழுப்பிக் கொடுப்ப, வர்த்தித்துச் செல்லுநாளில், அசுரர் பொருது, சுக்ர பகவான் பானம் பண்ணும் சுரா பாண்டங்களுள் ஒரு பாண்டத்து, சுரையொடு புதனை ஹிம்ஸித்துக் கரைத்துக்கொடுப்ப, அவனும் மதுவுண்ட மயக்கத்தால், அஃதறியாது அவனை மதுவொடு குடித்தனன். இதுவும் வேதத்தும், மஹாபாரதத்துங் கண்டு கொள்க. ஆதலாலன்றே மதுவுண்டல் வேதத்தாற் பிரதிபாதிக்கப்படுகின்றது. ஆதலிற் கள்ளோடு கூடிற்றும். பிறவு மறிந்துகொள்க.

இனி, காமத்தொடு கூடுதலாவது - "கவோ த்ர்யஸ்ரம தி ந - காவஸ்தி" என்பதனால், பிராதரு பார்யை முதலாகிய ஸ்திரீகளுமையும், பசு முதலாகிய பிறவற்றிலும் மைதுனமிசைதலாம. அதுவும் ஆராய்ந்துகொள்க. "ஐஹோ க்ஷாவா ஐஹாஜாவா ஸ்ரோத்ரியாய விஸஸ்ரேத" என்பதனாலும் யாகத்திலும், சிரார்த்தாதியிலும் மாம்ஸ பக்ஷண மிசைதலினும் மாம்ஸத்தோடு கூடிற்றும்.

மயக்கத்தைப் பண்ணுதலாவது - ஒருகால் விஷ்ணுவே தெய்வம்; அவனை, ஒழிந்தார் யாவரும் உபாஸித்தன ரென்றும், ஒருகால் ஈஸ்வரனே தெய்வம்; அவனை விஷ்ணு முதலாயினா உபாஸித்தனரென்றும் இவ்வாறு இதுபோல்வன பலவுஞ் சொல்லுதலில், மயக்கத்தைப் பண்ணுமென்பது.

தடுமாறு பொருண்மைத்தாதலாவது - "அக்நிஹோத்ரம் ஜுஹுயாத் ஸ்வர்க்க காமஃ" என்றால் அக்கினியில் [1]ஹோமஞ் செய்வான ஸ்வர்க்கம் வேண்டினவனென்றும், நாய் மாம்ஸந்தின்பான் ஸ்வர்க்கம் வேண்டினவனென்றும் இவ்வாறு பொருள்படுதல். 'அக்னிஹோ, என்பது - நாய்; 'உதரம்' என்பது - மாம்ஸம; 'ஜுஹுயாத' என்பது - பக்ஷிப்பான் என்றவாறு. இவ்வாறு தடுமாறு பொருண்மைத்தாதல் [2]பரசாஸநத்துக்கு மொக்குமோவெனில், அவை [3]புருஷ பிரணீதங்களாதலிற் புருஷோபதேச சம்பிரதாயத்தால் [4]அர்த்த நிர்ணீதி கூடுதலிற் றடுமாறுமென்பது. வேதாாததுமம உபதேச சம்பிரதாயத்தால நிர்ணீதமாகாதோவெனில், ஆகாது. [5]வேதார்த்தோபதேஷ்டா வேதார்த்தத்தினைப் பிரத்யக்ஷீகரித்துச் சொல்லுமோ? அதுவன்றிப் பிரதிபாஸித்தவாறு சொல்லுமோ? பிரத்யக்ஷீகரித்துச் சொல்லுமெனில், ஸர்வ விஷயியாகிய வேதார்த்தத்தைப் பிரத்யக்ஷிகரிப்பான் ஸர்வக்ஞனாகல்வேண்டும்; அவனை இசையாமையில் அது கூடாதாம்; இசையில் அவனால் வேதத்துக்குப் பிராமாண்யமாவதாய் வேதம் [6]சுவத பிரமாணமென்பது கெடும்; கெட, "யஉ—

1 ஹோமம் - ஹோமம்.   2 பரசாஸநம் - வேற்று தரிசனம்.

3 புருஷ பிரணீதம் - புருஷனால் சொல்லப்பட்டது.

4 அர்த்த நிர்ணீதி - பொருள் நிச்சயம்.

5 வேதார்த்தோபதேஷ்டா - வேதப்பொருளை உபதேசிப்பவன்.

6 சுவத பிரமாணம் - தானே பிரமாணம்.

வொாஉவெெநவ வ்ராணமூ'' என்னும் [1]அவதாரணம் நிரர்த்தகமாம். அன்றியும் ஸர்வஜ்ஞ ஸத்பாவத்தில், ஸர்வஜ்ஞன் றன்னாலே தர்மாதி ஸித்தித்தலில் ஸர்வஜ்ஞனால் வேதார்த்த நிர்ணயம் பண்ணி, அதனால், தர்மானுஷ்டானம் பண்ண வேண்டுவதில்லை யென்பது.

இனி, பிரதி பாவித்தவாறு உபதேசிக்கில் எல்லார்க்கு மொக்கப் பிரதி பாவியாமையில் தடுமாறு பொருண்மைத்தாம்.

ஒக்க பிரதிபாவியாமையாவது - முன்னொரு நாள் தேவர்களும், பிராஹ்மணருமிருந்து, [2]"அஜைர்யஷ்டவ்ய" மெனனும் வேத வாக்கியத்துக்கு அர்த்த நிருபணம் பண்ணுகின்ற காலத்து தேவர்கள், [3]"ஸ வஊாமெரா ஹ்யஜா ஜெேயொ நாநூ: வபஶுரிதி ஸ்திதி:" என்பதனால், அஜசப்தார்த்தமாவது-'ஆடு' என்றனா; பிராஹ்மணர், [4]"பீஜைர் யஜ்ஞேஷு யஷ்டவ்ய மிதிவை வைதிகீ ஶ்ருதி: அஜஸஞ்ஞாநி பீஜாநி சாகம் நோ ஹந்துமர்ஹத" என்பதனால், 'அஜசப்தார்த்தமாவது - தான்ய விசேஷம்' என்றனர். இவ்வாறு வ்ருதி பண்ணி, உபரிஸ்திரவஸு வெனனும் இராஜகுமாரனை இருதிறத்தாருங் கேட்ப, [5]"தேவாநாம் து மதம் ஜ்ஞாத்வா வஸுநா பக்ஷஸம்ஶ்ரயாத்| சாகேநாஜேந யஷ்டவ்ய மேவமுக்தம் வசஸ் ததா"

என்பதனால் தேவர்கள் மேற் பக்ஷபாதித்து வஸுகுமாரனும், "அஜசப்தார்த்தமாவது - ஆடு" என்றனன. பிராஹ்மணருங் குபிதராகி,

[6]"ஸுரபக்ஷோ க்ருஹீதஸ்தே யஸ்மாத் தஸ்மாத் திவ: பத| அத்யப்ரப்ருதி தே ராஜந் ஆகாஶே விஹதா கதி: அஸ்மச்சாபாபிகாதேந மஹீம் பித்வா ப்ரவேக்ஷ்யஸி"

என்பதனால் நீ பக்ஷபாதஞ் சொல்லினை யாதலிற் பூமி பிளக்க வீழ்ந்து ரஸாதலம் பிரவேசிப்பாயாக வெனறு சபித்தலும், அவனுமவ்வாறு சென்றனன். அவனைத் தேவர்கள் கண்டு,

[7]"விப்ராணாம் வேதவித்தாணாம் வக்தவ்யம் ஹிதாத்மநா ஸுமஹாஸ்தவ யஜ்ஞாகாமாத் ப்ரவிஷ்டோ ரஸாதலம்"

எனபதனால் நீ வேத விருத்தமாயின சொல்லிப் பிழை செய்தனை; தத்பலததாலன்றே நரகதுகக மனுபவிக்கின்றனை என்று சிக்ஷித்தனர். இது, மஹா

1 அவதாரணம் - நிச்சயம்.

2 மஹாபாரதம் - சாந்தி பர்வம் - 345. (Kumbakonam Edition.)

3 Ibid. 4 Ibid. 5 Ibid.

6 Ibid. 7 Ibid.

பாரதத்து, மோக்ஷ தர்மத்து வஸுசாபகதந மென்னும் அத்தியாயத்துக்கண்டு கொள்க. இவ்வாறாதலிற் றடுமாறு பொருண்மைத்தாம். பிறவும் அறிந்து கொள்க. கொலை முதலானவற்றுப் பிராணிகளைப் பிரவர்த்திப்பிக்குமாறு மறிந்து கொள்க. [1]துஸ்ஸஹமாகிய சித்ரவதங்களால் வதிக்குமாறு யாகாதி கர்மங்களிற் கண்டு கொள்க. யாகாதியில் வதம் தேவபூஜா நிமித்தமாதலில், தர்ம மன்றேயெனில், கொன்று வழி யடிக்கும் வேடன் முதலாயினாரும், அந்த வஸ்துவால் தாம் வழிப்பட்டுப் போதும் தேவதா பூஜை பண்ணுவராத லில், அதுவும் தர்மமும், அனுஷ்டேயமு மாகல் வேண்டும்; அது பாபமாய்த் துர்க்கதி நிமித்தம்; யாகவதமும் பாபமாய்த் துர்க்கதி நிமித்தமாதலின், நினக் குறுதி யாமா றெவ்வன மென்றவாறு போந்தது. (ரு)

829 யாரது செய்தவ ரறியிலிங் குரையெனி லங்கொருவ
னாரது நடுவணோ றுறையுளில் மலம்பெய்திட் டொளித்தொழியிற்
பேரினு முருவினும் பெறலில னாதலின் றக்குறித் தந்
தேரினு மினியது செய்தவ ரில்லெனச் செப்புவையே.

இதுவும் வேதஞ் செய்கை யென்பது கூறும்.

(இ - ள்.) வேதஞ் செயற்கை யென்று சொல்லுவாய்; வேதஞ் செய்தார் யார்? நீ அறியிற் சொல்லுவாயாக வெனில், ஒருவனோர் ஊர் நடுவே இராத்திரி சமயத்து, ஒருவருமறியாமை மலோத்ஸர்க்கம் பண்ணிப் போயின பின், பிற் றைநாள், அது கண்டவெல்லாரும், இஃதொருவன் செய்தானென்று புத்தி பண்ணுவதல்லது, மலோத்ஸர்க்கம் பண்ணினானது பேரும், வடிவும் பெறப் படாமை குறித்து, இது யாரும் செய்தாரில்லை யென்று சொல்லுவரோ வென்றவாறு.

இதனாற் போந்த பொருள் வேதமும் இதுபோல வென்பது. (௬)

830 தோற்றமு நாற்றமுஞ் சுவையுட னூறினுந் தொற்றொடுங்கி
யாற்றவு மாயிரு வேதம்வல் லார்களஃ தறிந்துரைப்ப
மேற்குலத் தாரோ டிழிந்தவ ரென்பது மெய்ம்மைபெறு
நூற்றிறஞ் செய்தவ ரறிகுவர் நுழைந்தறி வுடையவரே.

இதுவுமது.

(இ - ள்.) மலத்தினது தோற்றம் முதலாகிய குணங்கள் பற்றி ஆயுர் வேதம் வல்லார், இது ரோகியுடையது; அரோகிய [illegible]மலமென்றறிந்து சொல்லுவார். பிராஹ்மணனுடையது, சண்டாளனுடையது மலமென்பதே நம்மாலறியப்படாதது. அதுபோல நூல்களையும் புத்திமான்களாயினார் இந் நூல் குணவான் செய்தான், தோஷவான் செய்தானென்றறிந்து சொல்லுவர். இன்னகுலத் தின்னான் செய்தானென்னும் வியக்தியே நம்மாலறியப்படாத தென்றவாறு. (எ)

---

1 துஸ்ஸஹம் - சகிக்க முடியாது.

831 மூயற்சியி னிசைத்தலி னெழுத்தினிற் பதத்தினின் முடிவதனுற்
செயற்பட லுடையத னியற்கையிற் செய்தவர் பெயர்பெறலா
லியற்கைய தன்றுநின் வேதமென் றேதுவி னெடுத்துரைத்தாள்
புயற்றிற லிகலிய கூந்தலின் பெயருடைப் புலமையினுள்.

(இ - ள்.) புருஷப் பிரயத்தனத்தாலிசைததலும், எழுத்தும், பதமும், வியாகரணத்தால் முடியும் பதமுடிவும், பிறவுஞ் செயற்கையாக, நின்றுற் கருதப்பட்ட [1]யாமள ஷட்கங்களிற்போல வேதத்திலு முண்மையில், வேதம் செயற்கையோ டொதத இயல்புண்மையாலும், வேதம் இன்னுன் செய்தானென்று வேததுதும் பெறப்படுதலாலும், வேதம் ஸ்வபாவஸித்த மன்றெனறு சொன்னுள், நீலகேசி யென்னும் பெயருடைய [2]விதுஷி யெனறவாறு.

செய்தவன் பெயர் பெறுதலாவது - [3]“ப்ரஹ்மணா ப்ரஹ்ம ஸ்வயம்பு ப்ரஹ்மணே நம:” எனவும், [4]“ஹோதார அக்னிஷ்ட ஹவ்ய நிஸ்ருஷ்ட தேவேஷு” எனவும் சொல்லுதலிற் பெறப்பட்டது. ‘பிரஹ்மம்’ எனபது - வேதம் ; ‘ஸ்வயம்பு’ என்பது - ஸ்வபுத்தி பலததால் வநத தெனறவாறு. (அ)

832 கதியவர் தம்பெய ரின்னவை சுட்டின காட்டலினு
முதியவர் நாள்களொ டொப்பில விப்பொழு தொத்தலினும்
விதியது வாதலின் வேதத்தை யாஞ்சொல்லுங் கீதத்தைப்போற்
புதியது வேயெனச் சொல்லுது நாமது பொருந்து மென்றுள்.

இதுவும் புதுமையுடைமை கூறுகின்றது.

(இ - ள்.) பிறப்புடையாராகிய சில புருஷர் பெயர் கூறுவது காண்டலானும், பூர்வகாலத் துள்ளதுபோலாது இக்காலததுபோன் றிருத்தலானும், வேதததை நம்போல்வாராற் பாடப்பட்ட குமாரஸம்பவாதிபோலப் புதிதெனறு சொல்லுவோம் ; இது கடனுதலிற் பொருந்து மெனரு ரென்றவாறு.

புருஷர் பெயர் கூறலாவது - [5]“யாஜ்ஞவல்க்ய உவாச” எனவும், [6]“ஜநகோ ஹ வைதேஹ” எனவும் இயவாறு சொல்லுவது. இக்காலத்துள்ளது போறலாவது - பூர்வ காலதது ஸஹஸ்ரமும், தசஸஹஸ்ரமும் முதலாகிய தீர்க்காயுஸுககளுண்மை பிரசிததமன்றே யாகவும், [7]‘ஹவை ஸூர்யத்ர’ என்னும் சதவர்ஷததை வேதமநதிரங்கள் பிரார்ததித்தலும், பூர்வ காலததுள்ள உத்தம புருஷர்க்குச் சம்பவியாத பிராத்ருபார்யா கமனமே,

1 யாமள ஷட்கம் ஆறு தநதிர நூல்கள் :—1. ஆதி யாமளம் 2. பிரம்ம யாமளம் 3. ருததிர யாமளம் 4. விஷ்ணு யாமளம் 5. கணேச யாமளம் 6. ஆதித்திய யாமளம் இவற்றின் விவரம்வராக தநதிரத்தில் காண்க.

2 விதுஷி - ஞானமுள்ள பெண். 3 ?

4 பிருகதாரண்யகம். 5 ?

6 ? 7 ?

ஸ்வபாகி முதலாகிய அஸ்பிருஸ்ய ஸ்திரீஜன சங்கமமே என்றிவை முதலாகிய அநாசாரங்களை விதித்தலுமாம். (க)

333 கொல்வது தீதெனப் பொருள்வழி வேள்வியிற் கொலப்படுவ
வெல்லையொன் றிலவெனப விணைவிழைச் சொழிகென்ப வம்முகத்தாற்
செல்கதி யுளதென்ப தீர்த்திக நெறியென்றுந் தீயவென்று
பல்லவர் துணிவுமெம வேதத்தி னுளவெனப் பயின்றுரைப்ப.

இதுவும் மலைவு காட்டும்.

(இ - ள்.) 1" ந ஹிம்ஸ்யாத் ஸர்வாபூதாநி " என்பதனாற் கொலை தீதென்று சொல்வர் ;

2"ஸர்வமேதே ஸர்வம் ஹந்யாத், ப்ராஹ்மணே ப்ராஹ்மண மாலபேத க்ஷத்ராய ராஜந்யம் மருத்ப்யோ வைஸ்யம் தபஸே சூத்ரம் தமஸே தஸ்கரம் ஸ்வர்கம் ஸமாமயேதே "

என்பனவற்றால் அர்த்தம் நேரச் செய்வதாகிய யாகத்துக் கொலை தர்மமென்று சொல்வர் ; 3இணைவிழைச்சு ஆகாதென்று சொல்லுவர் ; 4"ஸர்வத்ர ஸ்ம்ருதி நாஸ்தி" எனபதனால், சண்டாள ஸ்திரீயுடனாகிலும் புத்திரார்த்தமாகக் காமஸேவை பண்ணுவது தர்மமாதலின், அதனால் ஸுகதியாமென்று சொல்லுவர் ; வேதமொழித தொழிந்த சாஸ்திரங்களாற் சொல்லப் பட்ட மார்க்கங்கள் துர்மார்க்க மென்று சொல்லுவர் ; 5"அநந்தா வை வேதா:" வேதங்களுக்கு எல்லையில ஆதலில், வேதத்திடங்காப் பொருளில்லை யாதலில், வேதோக்தமானவையே ஸகல மார்க்கமு மென்று சொல்லுவரென்ற வாறு.

வேதத்து அர்ஹத் பரமேஸ்வரனை ஸ்துதிக்குமோ வெனில், ஸ்துதிக்கும். என்னை ?

6" அர்ஹந்பிபர்ஷி ஸாயகாநி தந்வா, அர்ஹந் நிஷ்கம் யஜதம் விஸ்வரூபம், அர்ஹந்நிதம் தயஸே விஸ்வமப்வம் நவா ஓஜீயோ ருத்ரத்வதஸ்தி "

எனவும்,

7" அர்ஹந் பிபர்ஷி ஸாயகாநிய த்வா - அர்ஹந் நிஷ்கம்யஜதம் விஸ்வரூபம் அர்ஹந்நிதம் தயஸே "

என்னும் ஜிநேந்திர பிரதிமா பிரதிஷ்டா காலத்தை முதலி ஸ்துதித்தது.

1 2 ? 3 இணைவிழைச்சு - சற்பில்லாமை.

4 பிரசித்தமானஸ்மிருதி. 5 அநந்தாவை வேதா:-வேதங்களுக்கு எல்லையில.

6, 7 ரிக்வேதம் 2, 7, 17, 10.

[1]"தீக்ஷ்ணாக்ராணி யௌநாநி வக்ஷ்யம்த்யாயதாநிவ்யாம் தேஷாம் உத்பவஸ்ய காரணாநி நிஶ்சயே விஹோ:"

என்று ஜைநாகமத்து மிவ்வாறு சொல்லப்பட்டது. இன்னும் பல்லவர் துணிவு மெம் வேதத்திலுளவென்றதனால் வேதவாதிகள் ஸஜ்ஞாநிராகரணம்பண்ணுப; "ஸ வேத்தி விஶ்வம் நஹி தஸ்ய வேத்தா தமாஹு: அக்ர்யம் புருஷம் மஹாந்தம்" எனவும், "ஹிரண்யகர்ப்ப: ஸர்வஜ்ஞ:" எனவும், வேதத்துள் ஸர்வகஞன் சொல்லப்படுகின்றன னென்றுஞ் சொல்லுப. சிருஷ்டி வாத நிராகரணம் பண்ணுப; [2]"ஊர்வேதாவ்யாஹரணமஸ்யஜஃ' என்பது முதலாகிய வாக்கியங்களால் வேதத்து சிருஷ்டி சொல்லப்படுகின்றதென்று சொல்லுப. அத்வைத நிராகரணஞ் செய்ப; "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம நேஹ நாநாஸ்தி கிஞ்சந" என்பதனால் அத்வைதம் வேதத்துச் சொல்லப் படுகின்றதென்று சொல்லுப. வேதம் புருஷபிரணீத மனறென்று சொல் லுப; "அஸ்ய மஹதோ பூதஸ்ய......ஸ்மரணம்" என வேதத்து, வேதம் பௌருஷேயமாகச் சொல்லப்பட்ட தென்றுஞ் சொல்லுப. இவ்வாறே பிறவு மறிந்துகொள்க. தீர்த்திகராவார் - சாஸ்திர கர்த்தாக்கள். (௧0)

834 [3]சாதிகைகட் பயவா தவப்பயந் தவுமெனத் தந்துரைப்ப
வாதிக்க ஞன்வழி நால்வர தமைதியை யமர்ந்துரைப்ப
சூதித்த தோற்றமும் பிழைப்பெனச் சூத்திரப் பிறவிகொள்ளார்
[4]வாதித்த வாறென்று தெருண்டவர்க் கிவைபிவை மயாமயக்கே.

(இ - ள்.) ஒரு ஜனனத்துப் புண்ணியஞ் செய்தாற் பிறிதொரு ஜனனத் துப் பலிகளு மெனறு யாகாதி கர்மங்களையும், தபஸ்ஸுக்களையும் விதிப்ப, அவை பயவாது கெடுமென்றும் சொல்லுப; எல்லாரு மிப்போது பிறக்குமாறு போலப் பிறப்பது பிழையென்று, பிரஹ்மாவினது முகம் முதலாகிய அவயவங் களில் பிராஹ்மணர் முதலாகிய நான்கு ஜாதியும் பிறந்ததென்று சொல்லுவர்; அவ்வாறு சொல்லியும் பிரஹ்மாவினது அவயவத்துப் பிறந்த சூத்திர ஜாதி தானமுந் தபஸ்ஸும், யாகாதியும் செய்தற்கு யோக்யமென்று கொள்ளாது நீசஜாதி யென்றே கொள்ப; இவையெல்லாம் பூர்வாபரம் [5]வியாஹதமாயினவா றென்று தெளிந்தோர்க்கு மிகவும் மயக்கமா மென்றவாறு.

---

1 ?

2 cf. புருஷஸூக்தம்.

3 சாதி - பிறப்பு.

4 வாதித்த - முரண்பட்ட.

5 வியாஹதம் - முறண்பாடு.

ஜாதி யென்பது - ஜனனம். புண்ணிய பலம் கெடுமென்று சொல்லுத லாவது - ஒருவன் தபஸ்ஸாலானும், தானததாலானும், யாகாதியாலானும் புண்ணியம் ஆர்ஜித்து, இந்திர பதம் முதலாயின பெற்றுவது அனுபவிப்ப தற்கு முன்பே பிறனொருவன் அவ்வாறு செய்த பொழுது அந்தப் புண் ணியபலம் கெடுமென்னுங் கருத்தினால், இந்திரன் முதலாயினார் யாகாதி செய் வாரை இடையூறு செய்வாரெனபது; அது பிரசிததம்.

" சூதித்த தோற்றமும் பிழைப்பென ஆதிக்கணுன வழி " யென்று கூட் டுக. சூதித்த - பிறக்கின்ற. சூத்திரப் பிறவி யாகாதி யோக்யமாகக் கொள் ளாமையிற் குற்றமென்றேயெனின், பிரஹ்மாவினது அவயவத்துப் பிறந்த சூத்திரரை யாகாதி யோக்கிய ரென்று கொள்ளாயாயில், இவ்வாறு பிறந்த பிராஹ்மணரும் யோக்கியரனறெனறே கொள்ளெனமுர்க்கு. பிராஹ்மணர் முதலாயினார், உயர்நத அவயவத்துப் பிறத்தலில் யாகாதிக்கு யோக்கிய ராவார்; சூத்திரர் தாழ்நத பாதத்துப் பிறத்தலில, அதற்கு யோக்கியரனறெனில், விஷ்ணுவினது பாதத்துப் பிறந்தும் கங்காஜலம் தீர்த்தமாகின்றது; அவனது சிரோபாகத்து ஜனித்தும் ஸ்வேத ஜலம் அவ்வாறாகின்றதில்லை; அவனது நாபியிற் பிறந்தும் பிரஹ்மா தலைவனாயினான; அவனது கர்ணமூலத்துப் பிறந் தும் மது கைடவர் அவ்வாறாகினறிலர்; ஆதலால், அவயவங்களது உச்ச நீச பாவத்தால் அவயவங்களுட் பிறந்தார்க்கு, உச்சநீச பாவங் கோடலரி தெனபது.

ஆதலால், இநநானகு ஜாதியும் பிரஹ்மாவினது அவயவங்களாற பிறந்த தன [1]முதல்; பிறகில், நானகு ஜாதியும் ஒத்தல் பெறவேண்டுமாதலிற் பிரஹ் மாவினது அவயவங்களிற் பிறப்புச் சொல்லி, உச்சநீச பாவஞ் சொல்லுதல் மலைவாம் என்பது. (கக)

835 மறுதலை நத்தமு ளாக்கி மயக்கமுஞ் செய்தமையாற்
பெறுதலை யென்னைகொ றந்நுவந் நனையன்று பேறுமுண்டே
யுறுதியுஞ் சால்பு முடையன யாவையு முண்மையினாற்
செறுதலை யேவில்ல சிர்த்தன செய்விக்குஞ் சிட்டிநூலே.

(இ - ள்.) இவ்வாறு பூர்வாபர விரோதங்கள் சொல்லி, அப்பியசித் தார்க்கும் மயக்கததைச் செய்வ தொன்றாதலில், இந்த வேதத்தால் தத் துவ ஸ்வரூபம் பெறப்படாதாம். இனி, இதனாற் பெறப்படுவது உறுதியுஞ் சால்புமுடையனவாகிய ஸ்வர்ணதானமே, க்ஷேத்திரதானமே, கோதானமே, மகிஷ தானமே, அஸ்வதானமே, கஜதானமே, பார்யாதானமே, கன்னியா தானமே என்றிவை முதலாகிய தானங்களும், காலைக் கோடலும், சிராத் தங்கோடலு முதலாயின மெய்ம்மை வகையாற் கடியப்படாவாகிய பிராதரு பார்யா ஸேவையும், ஸுராஸேவையும், மாம்ஸ ஸேவையும் முதலாகிய இச்

1 ஆதல் - வியங்கோள் வினைமுற்று; "மனத்துக்கண் மாசிலனாதல்" திருக்குறள் - 34.

சானுகூலமான பிரவிருத்திகளை, தன்னை அப்பியஸித்தாரைச் செய்விக்கும் சாதுர்யமே யென்றவாறு.

சிட்டு - சாதுர்யம். சீர்த்தன - இச்சானுகூலமாயின. (கஉ)

836 வசுககளொ டுருத்திரர் பிதிரரோ டிவர்முத லாப்பலர்க்கும்
பசுக்களோ டெருமைகள் குதிரைகள் புலியொடு நாய்முதலா
விசுக்கழிந் தனபல கொலைகளு மிரங்கலிர் கொன்றவரை
யசிப்பவர் போன்றனி ராயினு மருவினை யாநுமக்கே.

(இ - ள்.) வசுக்கள் முதலாகச் சொல்லப்பட்ட பலர்க்கும் பசு முதலாகச் சொல்லப்பட்ட பிராணிகளைக் கிருபை யின்றி வதிதது, வஸுக்கள் முதலாகச் சொல்லப்படுகின்றாரைத் [1]தீற்றுகின்றீர் போலத் தின்றீராயின் நுமக்குப் பாப மாம் என்றவாறு.

இசுக்கழிந்தன - செவ்வையற்றன. 'ருஜு' என்பது 'இசு' என நின்றது. செவ்வையற்ற கொலையாவது - அஸ்திர ஸஸ்திரங்களாற் கொலையாளர் கொல்லு மாறு கொல்லாது வாயும், மூக்கும் புதைதது‌க் கழுததுததிருகிச் சிததிரவதமாக வதித்தல். அசிப்பிப்பவரென்பது - அசிப்பவரென நின்றது, செய்யுள் விகாரத் தால். (கரு)

837 தேவரும் பிதிரரும் நுதலிய கொலைகளிற் றீவினைதா
மேவர வல்லன வேண்டுவல் யானென வேண்டுதியேல்
யாவரை நுதலியு மவரவர் செய்தன வவரவர்க்கே
யாவரி னடையுமவ் வருவினை நுமக்கறி வரியதென்றாள்.

(இ - ள்.) தேவர்களையும், பிதுர்க்களையும் குறித்துக் கொன்ற கொலைக் குப் பாவமில்லை யென்று வேண்டுவெனெனிற் கொன்றார்க்குக் கொலைப் பாவம் வருவதாயின, யாவரைக் குறித்துக் கொல்லினும் பாபமாம். அது கொலை வினை யராகிய நுமக்குத் தெரியாது. குறிக்கப்பட்டானுக்கும் பாபமாவது, அவனுக் குடன்பாடுளதாயி னன்றே; அஃதில்வழிக் கொன்றார்க்கே பாபமாமென்பது போந்தது. (கச)

838 ஊட்டுதும் யாமென் றுமர்களை நுதலியோர் சாலைவைத்தால்
வீட்டினங் கிடலின்றி வினைநிலை நுமக்கறி வரியதுபோற்
கூட்டிமற் றவர்களை நுதலிய கொலைவினை தங்களையுங்
காட்டுகில் லாரவர் தாமவை யறிவதோர் கணக்கிலரே.

(இ - ள்) பிராஹ்மணராகிய வுங்களைக் குறித்து ஒருவன் சாலை வைத் தான்; நீயிருண்ணுமதன்றிச் சாலை வைததான் புண்ணியம் பெறுமாறு அறி தற்கு மரிதாயவாறுபோலத தேவர்களை நுதலி, நீயிர் கொன்றனீராயின் நுமக் குக் கொலையால் வரும் பாவம் தேவர்களுக்குளவாகா. இனி, நீயிர் சாலையுண்ட

---

1 தீற்றுகின்றீர் - ஊட்டுகின்றீர்.

லாற சாலை வைத்தமை யறிவீர்; தேவர்கள், நீர் கொன்றிட்ட மாம்ஸந் தின்றமையின், அவர், தம்மை நுதலிக் கொன்றமை யறியும் பெற்றியு மிலரென்றவாறு.

வீட்டினங்கிட லென்பது - அகத்திடல்; அஃதாவது, உண்டல். காட்டுகில்லார் - காட்டுகிலா ரென்றவாறு; செய்யுள் விகாரம். (௧௫)

839 சிறந்தவர் தங்களுக் கெய்துக வென்றெண்ணுஞ் சிந்தையரா
யறம்பல செய்தவர்க் கல்லதங் கவர்களுக் காகுமென்றாற்
றுறந்தவர் வீடுபெ ற்றார்களை நுதலிய தொடர்வினையும்
பிறங்கியிப் பிறவியிற் போக்குமற் றிவையெல்லை பேதைமையே.

(இ - ள்) சிறப்புடையாராகிய தேவர்கட்காக வென்று பூஜை முதலாயின செய்தால் அதனால் வரும் அறமும், பாவமும் செய்தார்க்கு வருவதன்றித் தம்மை நுதலிச் சிறப்புச் செய்தமையு மறியாமையின், அதனின் உடம்பாடில்லாத தேவர்க்கு வருமெனில், முத்தராயினாரைக் குறித்து ஒருவன் சிறப்புச் செய்தவழி, அதனால் வரும் வினை, முத்தனுக்காகி, அவனை ஸம்ஸாரத்து மீட்டும் பிறப்பிக்கவேண்டுமாதலின், இவ்வாறு சொல்லுதல் பேதைமை யென்றவாறு. (௧௬)

840 நண்பரை நுதலியும் பகைவரை நுதலியு மமிர்தொடுநஞ்
சுண்பவர்க் கல்லதங் கவர்களுக் காமென வுரைக்குநாயார்
பண்பிலி தேவரை நுதலிய கொலையினிற் பல்வினைதா
னுண்பல வகையினி னடைந்தவை விளையுங்க ளுமக்குமென்றாள்.

(இ - ள்.) ஒருவன், தன் மித்திரனையினான் இனிது வாழ்தல் வேண்டி அமிழ்துண்டான்; ஒருவன், தன் சத்துரு நசித்தல்வேண்டி நஞ்சுண்டான். அவ்வழிக் குறித்தார்க்கு அன்றி, அமிழ்து நஞ்சு முண்டார்க்கே தத்தம்பலமாயினவாறுபோல, தேவர்கள் திருப்தராதல் வேண்டி, இவர்க [1]ளொக்கி, நீர் கொன்று மாம்ஸந்தின்றீரே யெனினும் கொலைப்பாவம் நமக்கே விளைவதென்றவாறு. ()

841 கொன்றவர்க் கல்லது நுதலப்பட் டார்களைக் கூடலவேற்
றின்றவர்க் கியாவையும தீவினை சேரல தேவர்க்குப்போ
லென்றுரைப் பார்க்கெய்து மேழைமை யுண்டவ் வெளிமையாக்
கொன்றுவி யேனல தீவினை யூன்றுவர்க் கொப்பவென்றாள்.

(இ - ள்.) தேவர்களைக் குறித்துக் கொன்றார்க்கல்லது தேவர்களுக்குப் பாவமாகாதெனின், தின்பாரைக் குறித்துக் கொன்றார்க்குப் பாவமாவதன்றித் தின்பார்க்குப் பாவமாகாதென்று கோடல் வேண்டுமெனில், அது பேதைமையாற் சொல்லினாய்; தின்பாரைப்போலத் தேவர்கள், நீர் கொன்றிட்ட மாம்

1 ஒக்கி - பொருந்தி

ஸத்தைத் தின்றாரெனிற் கொலைப்பாவம் அவர்க்கு உளதாமென்று சொல்லு வேன்; அவர் தின்னாமையிற பாவமுளதென்று சொல்லே னெனறவாறு. ()

842 ஈகளு நாய்களுங் கொன்றவ ரீவகண் டின்புறலிற் றீயவை யேசெய்யுந தேவரத் தீவினை தீர்க்கிற்பவோ நோய்களும் பேய்களு மொழிக்குவ மெனினவை நுங்களுக்கு மாய்விடினு ணரினஃ தாம்வினை யகற்றுதற் கரியவென்றாள்.

(இ - ள்.) ஈயும், நாயு முதலாகிய பிராணிகளை வதித்து, நீங்கள் கொடுப்ப, அது கொண்டினபுற்று, அல்லாக்கால இனபுறாராயில் அநதத் தேவர்கள், நுங் கட்கு வதாதியால் வந்த பாபததை யெவவாறு நீக்குவர்? இனி, அவரை ஆஸ்ரிதது, நோயும், பேயும் தீரத்துக்கொள்வே மெனினும், யாகாதிகள் செய்த நுமக்கும் அவை யுளதாயில், ஜன்மாநதர கர்மம் போக்குத லரி தென்றவாறு.

யாங்கள் யாகாதிசெய்து ஹவிஸ்ஸு கொடுக்கில் அவர்கட் கினபமும், அல்லாக்காற் றுனபமுமாகினற தனறு. தம்மை நோக்கி, யாகாதி செய்ததற்கு அநுக்கிரஹம் பண்ணுவரெனில், பக்ஷபமே, சருவே, சாந்தே யெனறிவற்றால் தம்மை நோக்கிப் பூஜை செய்யவுந் திருப்தரா யனுக்கிரஹிப்பர். பிராணி வதம் வேண்டுவதில்லை. அஃதனறிப் பிராணிவதத்தால் மாம்ஸமிடிலல்லது, திருப்தராகாராயில், நாம் அவவாறு கொடுத்தபோது திருப்தியும், கொடாத போது அதிருப்தியு முடையராவ ராதலின், நம்மாற குறைகொள்கின்றார்; நங் குறை தீர்க்கமாட்டா ரென்பது. (கக)

843 நம்முறு துன்பங்க ளொழிக் கல்லலம் பிறருறுப வெம்முறை யாயினும் போக்குதற் கரியவிங் கிவர்களைப்போற் றம்முறு துன்பமுந தாமொழிக கில்லலர் பிறர்களையே யெம்முறை நோய்களுஞ் செய்குப வவரென விகழ்ந்தனளே.

(இ - ள்.) நமக்கு வநத துயரம் பிறரை ஆஸ்ரிததுத தீர்க்கினற நாம் பிறர்க்கு வந்த துயரம் தீர்க்கமாட்டாதவாறுபோல, நம்மால் தம்குறை தீர்ததுக் கொள்கின்ற தேவர்கள் நமக்குக் குறைதீர்க்கின்றவா றெங்ஙனமென இகழ்ந்தா ரென்றவாறு. (உ0)

844 நாங்கொன்று கொடுக்குமவ் விலங்கினை நலிவதோர் பசியினரேற் றாங்கொன்று தின்குவ ராய்விடி னவர்களைத் தவிர்க்குநர்யார் தீங்கொன்று முரையன்மின் றேவர்தம் மூணினைச் சேணின்றுதாம் வாங்குத லல்லது முடையொடு சோறுண்ணும் வயிற்றினரே.

(இ - ள்.) தேவர்கள், நாங் கொன்றிட்ட மாம்ஸததை பக்ஷிப்பதொரு பசியுடையாராயிற் றாமே ஆடு முதலாயின வுள்வழிச் சென்று வதித்துத தின் புழித் தவிர்ப்பாருளரோ? இஃதென் சொல்லினை? நீ கொடுக்கின்ற மாம்ஸத்

தினையும் தூரத்து நின்றே கைக்கொள்கின்றா ரன்றே? நின்னை இரந்து சோறு மிறைச்சியுந் தின்னும் வயிற்றினரோ? அல்லர்கா ணெனறவாறு.

நாங்கள் கொடுக்கினற மாம்ஸம் பசியாற் றின்கின்றா ரல்லர்; அவரை நோக்கிப் பிராணி ஹிம்ஸா பூர்வகம் [1]யஜிக்க நமக்கு நன்மைகளுளவா மென்று சொல்லிற் பகை, பசி, பிணி, பயம், ஆர்வம், செற்றங்களுடைய இவர்களைநோக்கிச் செய்ய, நமக்கு நன்மையுளதாமாயில், இவவாறாகிய [2]சுவா முதலாயின வற்றை நோக்கி, அவையுவக்கும் மலம்முதலாயின இட்டாலும் நமக்கு நன்மை யுளதாகல் வேண்டும். இனி ஆட்டு வாணிகரும், தாம் ஆடறுக்கும்போது தம் தெய்வததை நினைப்பா ராதலின், அவர்க்கு நன்மையுளதாகல் வேண்டும். அன்றியும், நாம் கொடுதத மாம்ஸம் அவருண்ணா ராகவும் நன்மை நமக்குப் பயக்குமாயில், பூவே, சாந்தே யென்றிவை முதலாயினவற்றால் யஜிக்கவும் நமக்கு நன்மை பயக்கும்; அசுத்த திரவியமாகிய மாம்ஸத்தால் யஜிகக நன்மை பயக்கில் விசுத்தமாகிய புஷ்பாதியால் யஜிகக நன்மைபயக்குமென்பது இனிது முடியுமாதலிற் புஷ்பாதியே யக்ஞ திரவியமாம். இஃதனறி மாம்ஸம் யக்ஞ திரவிய மாவதாயில் அவர் மாம்ஸம் தினபாராவர்; ஆக ஆடு முதலாயின வுள வழித் தாமே சென்று வதித்துத் தின்ன வமையும். அது காணாமையில் அவர் மாம்ஸந் தின்னும் வயிறுடைய ரல்லரென்பது. அசுரர் முதலாயினாருடன் பகையுடைமையும், [3]ஹவிர்புக்குக்களென்றும், [4]ஹவிராதானம் பண்ணுவரென் றும், அமிர்த மதனம் பண்ணினாரென்றும் சொல்லுதலிற் பசியுடைமையும், அசுவினி தேவர்களை உடைமையிற் பிணியுடைமையும், பிறர் பண்ணும் தபஸை அழித்தலில் அச்சமுடைமையும், ஸ்திரீகளோடு வாழ்தலில் ஆர்வமுடைமை யும், யுத்தங்கள் செய்தலிற் செற்றமுடைமையும் முன்பொருவன ஸர்ப்ப யாகம் பண்ணும்வழி அஞ்சினென [5]...................................

..........................................................................................

..........................................................................................

.......................................................................................... [6]சம் ஸித்து லோகதாதுவாகிய பஞ்சாஸ்தி காயங்களின் முதற்பதமாகிய ஜீவ ஸ்வ ரூபத்தினையும், புண்ணிய பாபங்களால் சுகதுக்கம் வருமாறும், ஜீவன்களைக் கிருபை பண்ண வேண்டுமாறும் சொல்லி, ஒழிந்த புத்கலாஸ்தி முதலாயினவுந தொகை வகையாற் சொல்லி, வேத வாதத்து நின்றிவ்வாறு பாபஞ் செய்தாரும் அதனை விட்டு ஸன்மார்க்கானுஷ்டானஞ் செய்யில் மோக்ஷிப்பரென்பதுஞ் சொன்னாரென்றவாறு. (உக)

---

1 யஜிக்க - யாகம் செய்ய. 2 சுவா - நாய்.

3 ஹவிர்புக்குக்கள் - ஹவிஸை உண்போர்.

4 ஹவிராதானம் - ஹவிஸைக் கைக்கொள்ளுதல்.

5 இங்கிருந்து இச்செய்யுளின் மீதி உரையும் 22முதல் 29வரை 8 செய்யுட்களும் 29வது செய்யுளின் முற்பகுதி உரையும் சுவடிகளில் இல்லை.

6 சம்ஸித்து - துதித்து.

852 பொய்த்துரை யாநன்மை போதுவ தேலில்லை பூதிகனே
சத்திய மேயுரை நீயெனத் தானுமஃ தேயுரைத்தா
னெத்திசை யார்களு மேத்துதற் கேற்றன னிவனு மென்றார்
தத்துவ ரேநின்று தத்துவ ரெனப்படுந் தன்மையினர்.

(இ - ள்.) பூதிகன் சிஷ்யவர்க்கதுள்ளாரும் பூதிகனை நோக்கி மித்யாவாகிய வேதார்த்தானுஷ்டான கிலேசததினல் வருவதொரு நன்மையில்லை; இதனை விடுவதே தகுவதாயில் கடுகச் சொல்லென்று சொல்ல, பூதிகனும் இதனை விடுவதே தகுவதெனமுன்; எனறலும், தத்வஜ் ஞானமுடையாரெல்லாரும் இவன் குணகிராஹி யென்று பூதிகனை ஸ்துதித்தாரென்றவாறு. (௯௦)

853 நன்பொரு ளாவன விவையென வவனோடு நகரத்துள்ளா
ரின்புறும் வகையினி னெடுத்தன னுரைத்தபின் விடுக்கலுற்றாட்
கன்புபட் டவர்களு மறநெறி யறிவித்த வார்வத்தினாற்
பின்புசென் றெழிதுமென் றதுசெய்து வலங்கொண்டு பெயர்ந்தனரே.

(இ - ள்.) நனமுகிய தத்வ மிவையென்று ஸப்த ததுவங்களை நகரததுள்ளார்க்கும், பூதிகனுக்கும் இனிதுணருமாறு கூறி நீலகேசியார் போகலுற்றாராக, அவர்கள் அவரை, மிகவும் ஸ்நேகிதது தர்மவாத்ஸல்யததாற் பினசென்று வலங்கொண்டு மீண்டா ரென்றவாறு. (௯௧)

நீலகேசித் திரட்டில் வேதவாதச் சருக்கம் முற்றும்.



பத்தாவது

# பூத வாதச் சருக்கம்

854 வேத வாதம் வெளிறுசெய் தாளங்கோர்
பூத வாதியும் பொங்கினன் மேற்செல
[1]வாத வாதி யிவனை யடக்கினு
[2]லேத ஆதிய மில்லென வெண்ணித்தான்.

(இ - ள்.) வேதவாதந தூஷித்து நீக்கிச் செல்வா ரங்கொரு பூதவாதியைக் கொண்டு, இவன் அஜ்ஞானியாகிலும, இவன் கர்வதநினை அடக்கினுல், வருவதோர் குற்றமில்லை யென்று விசாரித்தா ரென்றவாறு. (க)

855 நில்லப் பாவினி நீகண்ட தத்துவஞ்
சொல்லற் பாலையிங் கென்னலுஞ் சொல்லுவான்
மல்லற் றூனை மதனசித் தன்னெனுங்
கல்லொத் தோங்கிய தோட்களி யானையான். (உ)

856 அணிகொ ளாரத் தரசவை கேட்கெனப்
பிணிகொள் மூஞ்சிப் பிசாசகன் சொல்லுவான்
குணிகு ணம்மெனுங் கூற்றில ஞலதன்
றுணிவைம் பூதங்க ளேதொழில் சொல்லுவேன்.

(இ - ள்.) நின் தத்துவ மிருந்தவாறு சொல்லென்று நீலகேசியார் கேட்டலும் மதன சித்தன் என்னும் ராஜாவினது ஆஸ்தானத்துள்ளார் கேட்க, பிசாசக னென்னும் பூதவாதி சொல்லுவான்: குணிகுண மென்பன கொள்ளேன்; பஞ்ச பூதமே பொருளென்று துணிந்தேன்; தொழிலுஞ் சொல்லுவே னென்றவாறு. (ங)

857 திண்ணென் றீநில நீர்வளி காயத்தாற்
கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய்
வண்ண நாற்றஞ் சுவையினெ டூறொலி
யெண்ணுங் காலை யியைந்துழி யெய்துமே.

(இ - ள்.) ஸ்திரங்களாகிய அக்கினியும், நிலனும், நீரும், காற்றும், ஆகாயமும் என்றிவற்றுல் முறையே கண்ணும், மூக்கும், நாவும், மெய்யும், செவியும் என்னும் பொறிகளும், வண்ணம், நாற்றம், சுவை, ஊறு, ஒலி என்னும் புலம் ஐந்துமாகு மென்றவாறு. (ச)

1 ஆதம் - அஜ்ஞானம். 2 ஏதஊதியம் - குற்றம் வருவது.

858 ஐந்துங் கூடி யறிவின்ப மாதியாய்
வந்து தோன்றி மதுமயக் காற்றலி
னந்தி நாளுங் குடஞ்சுடர் நாட்டம்போற்
சிந்தி னலவை சென்றினஞ் சேருமே.

(இ - ள்.) மாமுதலாகிய வைந்து திரவியத்தின் கூட்டத்தின் மத்ய சக்தி பிறநதாற்போல, பிருதிவியாதி பஞ்சபூத ஸமவாயத்து, ஞான ஸுகாதி தோன்றி, அவை வளர வளர்ந்து, அந்தப் பூதங்கள் பிரிந்தால் அவை தம் இனமாகிய பூதங்களிற் சேரும் ; சேரவே, ஸுகாதி சேதனை ரூபதவம் கடமும் பிரதீபமும் இன்னவழிப் புக்கன வென்றறியாமல் நசித்தவாறுபோல நசிக்கு மெனறவாறு.

'நசிக்கும்' என்றொருசொல் வருவித்துக் கொள்க- (ரு)

859 உலகெ லாமவை யேயுயி ருண்டெனச்
சொல வலாரன சொற்றெளிந் தேநின்று
பல கலாங்களுஞ் செய்யப் பயனிலார்
புலவ ராவதன் றேவங்குப் போந்ததே.

(இ - ள்.) லோகததுப் பொருளாவன அந்தப் பூதங்கள் ஐந்துமே ; வாக்மி களாயினோர் சொல்லும் வார்த்தை கேட்டு உயிருண்டென்று அறியாதார் கதற் றுக்கள் கத்துவர் ; கதறினோேனும் அதனாற் பெறுவது வாக்பாவமே; ஜீவஸித்தி யில்லை யென்றவாறு- (சா)

860 சென்ற காலத்துஞ் செல்கின்ற காலத்து
நின்ற காலத்தி லும்மிந நிகழ்ச்சியே
யென்று மிவ்வுல கித்தன்மைத் தேயிது
வன்ற தென்றுரைப் பாரயர்ப் பார்களே.

(இ - ள்) எக்காலதது மிவ்வைந்துமே பொருள் ; பிறிதொன்று சொல்லு வா ரறிவில்லாதார் என்றவாறு. (எ)

861 இட்ட மாவ திதுவெனக் கேட்டவள்
சிட்ட ரன்றியுஞ் சென்றிருந் தார்க்கெலா
மொட்டி மீட்டு முரைத்துளந் தான்கொளீஇக்
கட்டு ரைய்யெடுத் தாள்கயற் கண்ணினாள்.

(இ - ள்) அவன் சொல்லியது கேட்டு, அவன் சொன்னவா றெல்லாரு மறிய அநுவதித்து, அதற்குக் குற்றங்கூறத தொடங்கினார் நீலகேசியாரென்ற வாறு. (அ)

862 [1]வினையி னீங்கி விளங்கிய ஞானத்தோர்
முனைவ னின்மையி னுன்முத னூலில்லை
யனைய மாண்பின தாகம மாதலாற்
புனைவ னின்னுரை பொய்யெனச் சொல்லியே.

(இ - ள்) ஐந்து பூதங்களுங் கூடிச் சரீரமானவாறும், ஞானுதி தோன்றிய வாறும், நீ பிரத்தியக்ஷததாற் கண்டு சொல்லுகினருயோ? அனுமானத்தாற் சொல்லுகின்ருயோ? ஆகமத்தாற் சொல்லுகின்ருயோ? பிரத்தியக்ஷததாற் கண்டாயெனின், எல்லாம் பிரத்தியக்ஷததால் 2(காண்டலில்) மாதாவினது உதரதது பஞ்சபூத ஸமவாயங் காண்டல் வேண்டும்; பஞ்சபூத ஸமவாய மொன்ருல் அநுமித்தனையாயில், ஜீவனையு மொன்ருல் அநுமிக்குகவொள்; சரீரத்துக் காணப்பட்ட வற்கெனவு முதலாகியவற்ருல் பூதஸமவாயம் அநுமித்தேனெனில், அசேதனமாகிய பூதத்துக்கு ஸம்பவியாத ஞானுதியால் சேதனனை அநுமிக்கவு மமையும்; இனி, ஆகமததாலறியில், ஆகமமாவது கர்மததி னீங்கி, விசுதத ஞானவானுகிய ஆப்தனது வசனமாம்; ஆப்தனில்லாமையில் நினக்கு ஆகமமில்லை; இன்மையின நீ சொல்லுகின்றது அஸம்பந்த பிரலாபமென்று சொல்லுவே னென்றவாறு.

நீ, வினையினீங்கி விளங்கிய ஆப்தனல்லாமையில் நின்வாக்கியங் கொள்ளப் படாதென்றுமாம். (க)

863 [3]கவைத்த கோலொடு கட்டில் [4]கடிஞைகாந்
தவததிற் கொத்தன தாங்கினிந் நாடநம்
அபத்த மேபிற வாருயி ரில்லையேற்
சுதத்தி னுய்த்தல் குதது வாருமே.

(இ - ள்.) ஆதமாவின்மைக்கட் பரலோக மில்லை; இம்மைக்கண் தவம் பண்ணுவது வியர்த்தாயாஸ மாதலில் யதேஷ்டம் சரிப்பதே நன்றென்றவாறு.

864 பூத மல்லது பொய்பிற நூலென்று
வாதஞ்செய்து வருந்தி முடிப்பதென்
நாத னன்னெறி நல்வினை நற்பயன்
யாது மில்லை யெனினஃ தவத்தமே.

(இ - ள்.) பஞ்சபூதமே யல்லது ஆப்தனும், ஆகமமும், ஸங்மார்க்கமும், நல்வினை தீவினையும், அவற்றின் பயனுகிய பரலோகத்தும் பலிப்பதொரு பிரயோஜனமு மில்லையெனில் அவை யில்லையென்று வாதஞ்செய்து பயந்ததென்னை? வாதஞ்செய்கின்ற ஆயாஸம் வியர்த்தாயாஸமா மென்றவாறு.

---

1 "வினையினீங்கி விளங்கிய" தொல்காப்பியம் - சூத்திரம். (1594)

2 விடுபட்டதற்குச் சேர்க்கப்பட்டது.

3 கவைத்தகோல் - கவைக்கோல். 4 கடிஞை - பிச்சைப் பாத்திரம்.

என்னை ? பரலோக மில்லை யெனனும் பக்ஷத்து, ஆப்தாதிகளை உண் டெனறு நினைதது, இருநததற்காக வருவதொரு குறறமினமையி லெவவாறு நினைததிருக்கவு மமையுமாதலி னெனபது. (கக)

865 யாது மில்லை யுயிரிவை யாஞ்சொல்லும்
பூத மேயெனப் போந்திருந் தென்னொடு
வாதஞ் செய்கின்ற பூதமவ் வாதமோ
யாதைம் பூதங்க டம்முள்ளு மஃதினி.

(இ - ள்.) உயிரென றொன்றுமில்லை, பஞசபூதமே தத்வமென்று என் னுடன வாதஞ் செய்கின்றது பூதங்களைநதுமோ ? அதுவன்றி அவற்றுள் வாத மொனறுமோ ? யாதோ ? அது சொல்லெனறவாறு.

ஐநதினது ஸமவாயததுத தோனறுவதெனினும் அவற்றுக்கு ஸமவாயாதி ஸம்பவிததலரிது. எனனை ? ஆகாசம் அமூர்ததமாதலால், மூாததமாகிய பூத சதுஷ்டயததோடு கூடாதாம் ; இனி, ஜலாக்னி முதலாகிய பூத சதுஷ்டயந் தாமுந தம்முள் விருத்தமாகையால் தம்மிற கூடாவாம். ஆதலில் இவை ஐந்துங் கூடி யொனறுத லரிதெனபது. (கஉ)

866 அளித்த வைந்திற் கறிவின்ப மாககுவான்
களித்தற் காறற லுடையன காட்டினாய்
களித்தற் காரண காரிய மூர்த்தியா
லொளித்து நின்ற வுணர்வுரு வென்றியோ.

(இ - ள்.) பஞ்சபூதங்களுஞ் சோறடுகின்ற வழிக் கூடினவாறு காணப் பட்டதன்றோ? அவவாறு கூடிய வழி யுண்டாகிய சரீரதது சுகதுக்க ரூபமாகிய சேதனைசக்தி யுண்டாம், மா முதலாயினவற்றின் கூட்டத்திலுண்டாகிய [1]மத யத்து [2]மதிப்பிக்கும் சக்தி தோனறியவாறுபோல வென்று திருஷ்டாந்தங் காட் டினும், அடுகின்ற வழி அநத ஐநதுங் கூடினவாயில், அங்கு சேதனைசக்தி யுடையதொரு சரீரந தோன்றுதவாறென்னை? மா முதலாயினவற்றின கூட்ட முள்வழியெல்லாம் களிப்பிப்பதாகிய மதயம் தோன்றுகின்றதில்லையோ? மா முதலாயினவற்றின் கூட்டததாலாகிய மத்யம், தான களிததலன்றித தன னொடு கூடிய பிறனைக் களிப்பிககுமாறு போல பஞ்சபூதங்களாலாகிய சரீரமும, தான் சுகதுக்க முடைத்தன்றுகித தன்னுடன் கூடினானுக்கு சுகதுக்கங்களைப் பண்ணுமென்று கொள்கின்றாயோ ? இனி, பஞ்சபூத காரியம் சேதனை யென னினும், சேதனைக்குப் பஞ்சபூதந் துணைக்காரணமோ ? முதற்காரணமோ ? துணைக்காரணமெனின, முதற்காரணம் பிறிதொன்று வேணடும் ; பிறிதொன றினமையில், பூதந்தானே முதற்காரணமெனில், துணைக்காரணமின்றி முதற் காரணததாற் றோன்றுவதொரு காரியமில்லை ; அன்றியும், மூர்ததமும், முதற் காரணமுமாகிய மண்முதலாயினவற்றால் பிறந்த குடம் முதலாயினவும் களித்

1 மத்யம் - மது. 2 மதிப்பிக்கும் - களிப்பிக்கும், மயங்கச் செய்யும்.

தற்காரணமாகி, ஔஷதங்களாற் றோன்றிய மதயமும் மூர்த்தமாகக் காண்கின்றனவாம்; அவ்வாறே மூர்த்தமாகிய, பூத காரியமாகிய சேதனையை மூர்த்தமென்று வேண்டுதியோ வென்றவாறு. (கங)

867 உருவின் காரிய மேனுரு வென்றுணா
ரருவின் காரிய மேலவா காயக்கா
மொருவன் காரிய மன்றுணர் வென்கின்றாய்
மருவுங் காரண காரிய மற்றெறனே.

(இ - ள்.) ரூபமாகிய பூதகலத்தின் காரியமாயிற் சேதனை ரூப திரவியமாக வேண்டும். அரூபத்தின் காரியமெனின், ஆகாச காரியமாகல் வேண்டும். ஒரு ஆத்மாவின் காரியம் ஞானாதியெனறு கொள்ளாதாய் சேதனா சேதனங்களாகிய சரீராத்மாக்களுக்குக் காரண காரிய மெவ்வாறு சொல்லா யென்றவாறு.

சரீரம் வளருந்தோறும் சேதனை வளரவும், அது கெடுந்தோறும் கெடவுங் காண்டலானும், சரீரத்தில் பிரிதனுச் சேதனம்பெறப்படாமலாலும், சேதனை சரீரகாரியமெனில், பிருதிவி விசேஷமாகிய இந்தனம் பெருகுந்தோறும் பெருகி, அது சுருங்குந்தோறும் சுருங்கி, அதனில் வேறு பெறப்படாதாகி, இந்தனமில்லாத வழி யில்லையாகின்ற அக்னி, இந்தனகாரியமாகி, இந்தனத்தொடன ஒன்றாகாதவாறு போல சேதனம் சரீரகாரியமாய்ச் சரீரத்தோ டொன்றாகாதென்பது. அன்றியும் மஹா சரீரவானில், அல்ப சரீரியாயினான் ஸகல சாஸ்திர ஞானதி ஞானமுடையனாகக் காண்டலில், சரீர விருத்தியால் சேதனதனுக்கு விருத்தியில்லை யென்பது. அன்றியும் கண்ணினாற் காணப்படுவதாகிய ரூபமும், நாவினாற் காணப்படுவதாகிய ரஸமும், தம்மில் வேறுமாகிக் காரண காரியமுமாகாதவாறு போல இந்திரியத்தாலும், மனஸாலும் காணப்படாநின்ற காய சேதனங்கள் வேறுமாகிக் காரண காரியமுமாகா வென்பது. ஆதலாற் காரண கார்யமென்னை யென்றவாறு. (கச)

868 வையு மண்ணு மயிரு மலமுமோர்
பையுள் வைக்கப் பளிங்கும் பயக்குமோ
பொய்யைம் பூதம் புணர்ந்துணர் வொடுன்பம்
செய்யு மென்பது சிந்திக்கற் பாலதோ.

(இ - ள்) வைக்கோலும், மண்ணும், மயிரும், மலமூர்த்திராதியுமொரு தோற்பையுள் வைக்க, ஸ்படிகத்தா லொருபாவை தோன்றுமோ? தோன்றுதாயிற் பஞ்ச பூதங்கள் கூடினவழி ஞானசுகாதி ரூபமாகிய சேதனை தோன்றுமென்பது பொய்; இது விசாரிக்க வேண்டுவதுண்டோ வென்றவாறு. (கரு)

869 கள்ளப் பூதமுங் காமிக்கும் பூதமும்
வெள்ளப் பூதமும் மல்லவு மல்லவா

லுள்ளப் பூதமொன் றாக்குவ துண்மையைக்
கொள்ளப் பூதக் குணமவை யல்லவோ.

(இ - ள்) பஞ்சபூதங்களாற் றோன்றிய புருஷரி லொருவன் கள்வனுகும்; பிறனொருவன் காமுகனுகும்; ஒருவன் தார்மிகனுகும்; இவவாறு குண பேதங்களுக்குக் காரணமாகியது ஜலமுதலாகிய பூதமும், அவற்றன் குணவிசேஷமு மல்லவன்றே; ஆகில், சரீர பிண்டங்களுள் அவை காண்டல் வேண்டும்; காணுதாயினு முளதெனில், ஜீவனு முளதாமன்றே; அஃதின்மையி லுள்ள முடைதாகிக் களவுகாண்டன் முதலாகிய குணங்களை யாக்குவதொரு பூதாந்தர முண்டென்று கொள்வாயாக; அல்லது, பஞ்சபூதங்களுக்குக் களவு காண்டலாதி குணமல்ல வென்றவாறு. (கசு)

870 பொறியைந தாலைநது பூதத்தி ஞகிய
வறிவைந் தாலைநது மவ்வைந்திற் காகுமோ
பிறிதொன் றேபொருட் பெற்றிமற் றிற்றெனக்
குறிகொண் டாயொன் று கூறெனக் கென்னவே.

(இ - ள்) ஐநது பூதஙகளாலாகிய ஐநது இந்திரியங்களாலும் ரூபாதி ஞானம் ஐந்தும் பிறநதனவென்று சொல்லுதலால் ஐநதறிவு தனிததனி ஒரோவொரோ இநதிரியங்களால் ஒரோ வொரோ அறிவாப் பிறநததோ? ஓரறிவு ஐந்து இந்திரியததாலும் பிறநததோ? அன்றி ஓரிநதிரியததால் ஐந்தறிவும் பிறநததோ? இந்திரிய வியதிரிக்தமாகிய தொன்றால் ஐந்தறிவும் பிறந்ததோ? குறியுடையா யொன்று சொல்லுவாயாக எனக்கென்று நீலகேசியார் சொல்ல வென்றவாறு. (கஎ)

871 ஒன்றன் காரிய மொன்றென வொட்டினுஞ்
சென்றெ லாமவை சேதனை யாகுமே
யன்றெ லாமவை யாக்குமொன் றேயினி
யென்ற லானுமஃ தின்னுயி ரெய்துமே.

(இ - ள்) ஒரோ வொரோ இந்திரியங்களால், ஒரோ வொரோ அறிவு பிறக்குமெனில், பஞ்சபூத ஸமவாயதது அறிவு பிறக்குமென்று முன் கூறியது அஸம்பந்த பிரலாபமாம். எனன? ஒரு பூதம் ஒரு இநதிரியமாய் நினறு ஒரு அறிவைப் பிறப்பிததலின. அன்றியும் ஐந்து பூதங்களும் தனிததனி இநதிரியங்களாய ஐந்து ஞானங்களையும் ஜனிப்பிக்கில், ஐந்து பூதங்களும் சேதனையாதல்வேண்டும். என்னை? சேதனத்தல்லது, அசேதனத்து ஞானம் பிறவாதாகையால். பிறக்கில், கடபடாதிகளிலும் ஞானம் பிறக்கவேண்டும். இனி ஐநது இந்திரியங்களும் ஒரு ஞானத்தைப் பண்ணுமென்னிலும் ரூபஞானம் நயனத்தைப்பற்றிப் பிறந்ததென்பது பொருந்தாது. அன்றியும் இந்திரியக் குறைபாடுடைய எறும்பு முதலாலாயினவற்றுக்கும், [1]ஜாத்யநதன் முதலாயினுர்க்

1 ஜாதயநதன் - பிறவிக்குருடன்.

கும் ஞானுதியொன்றும் பிறத்தல் கூடாதாம். ஓர் இந்திரியத்தால் ஐந்து ஞானமும் பிறக்கில், பஞ்சபூத ஸமவாயத்து ஞானம் பிறக்குமென்பது பொருந்தாது. என்னை ? ஒரு பூதமே ஐந்து ஞானத்தையும் பிறப்பிக்குமாதலால். இனி, பூத வியதிரிக்தமாகிய பிறிதொன்றுல் ஐந்து ஞானமும் பிறக்கில் அது ஆதமாவாதலில், ஆத்ம சித்தியாம், அசேதனத்து ஞானம் பிறத்தல் கூடாமையி னென்பது. (கஅ)

872 அனைத்துப் பூதமு மேயறி வாக்கினுன்
மனத்துக் கின்னுமோர் பூதத்தை மன்னுநீ
நினைததுக காணன்றி நேடியுங் காணாயா
வெனக்கு நீசெய்வ திதது‌ணை யேயினி.

(இ - ள்.) ஐந்து பூதங்களும் ஐந்து இந்திரியங்களாகி, ஐந்தறிவையும் பண்ணுமாகில், மனதைப் பண்ணுவதொரு பூத மின்மையில் மானஸமான ஞானம் பிறக்குமாறு சொல்லெனறவாறு. (கக)

873 பிண்ட மாகிப் பிறந்தன யாவையு
முண்டுங் கண்டு முணர்ந்தவுஞ் செய்தவுங்
கொண்டு மீட்டவை கூறுதல் கூறுங்கால்
கண்ட பூதத்துக் காரிய மென்றியோ.

(இ - ள்.) பஞ்ச பூத மயமாகிப் பிராணிகளெல்லாம் முன்புதாம் உண்டனவும், கண்டனவும், அறிந்தனவும், செய்தனவும் மீட்டுமுணர்ந்து கூறக் காண்கின்றனம் ; இதனையுங் காணப்பட்ட பஞ்சபூத காரியமென்று சொல்லுதியோ வென்றவாறு.

இந்திரிய ஞானமல்லாத பிரத்தியபிஜ்ஞான முதலாயின பூத காரிய மாதல் கூடாமையின் என சொல்லுதி யென்பது போந்தது. (உ0)

874 பிறந்த நாள்களுட் பிள்ளையு மல்லவு
மறிந்து தாய்முலை யோடல்ல வுண்டிக
ளறிந்த வாறென்கொ லோவைந்து பூதமுஞ்
செறிந்த நாள்களுட் செய்வன வல்லவால்.

(இ - ள்) மனுஷ்யர் முதலாகி ஸர்வ பிராணிகளும் ஜன்ம காலாந்தரமே ஆகார வேட்கை தோற்றித தத்தமக்குத தக்க ஆகாரமறிந்து கைக்கொண்டு திருப்தமாகின்ற தெவ்வாறே ? அசேதனமாகிய பஞ்ச பூதங்களுங் கூடித் துஞ்சின நாள்களின் இவற்றிற்கு ஆகார வேட்கை முதலாயின வுண்டாகுமோ ? இஃதெதற்றாலாயிற்று ? ஜன்மாந்தர வாஸனை யுடையதொரு ஜீவ திரவியங் கொள்ளாயாயின் என்றவாறு. (உக)

875 புத்தி யானின்றிப் பூதத்தி னுயவேற்
பத்து மல்லவும் பன்றிக்கு நாய்கட்கு

மொத்த தன்மைய பன்மைய குட்டிகள்
வித்தி னுய விணைவிகற் பாம்பிற.

(இ - ள்.) ஆத்மாவின்றியும் பூத பஞ்ச ஸம்யோக மாத்திரத்தாற் பிராணிகள் பிறக்கின்றனவாயிற் பன்றி, நாய் முதலாகிய ஒரு சாரனவற்றுளதாகிய பூத ஸமவாயம் ஓரினத்துப் பல பிராணி ஜனித்தற்குக் காரணமாதலும், யானை முதலாயினவற்றுளதாகிய பூதஸமவாயம் ஒரு கன்று ஜனித்தற்குக் காரணமாதலும், பூதங்களது கூட்ட மொழியப் பிறிதொரு காரணமில்லையாயில் ஆமாறு இல்லை. ஆதலின், அது, கர்மகாத்தாவும், பல போக்தாவுமாகிய ஜீவனது கர்ம பேதந்தானே யாமெனறவாறு.

பததியான - ஆதமா. சுகல சோணித ஸம்யோகத்து ஆத்மா வந்து ஜனிக்கு மென்கின்ற பக்ஷத்திலும் ஒன்றன வயிற்றுள் ஒரு ஜீவன் வந்து ஜனித்தலும், ஒன்றன வயிற்றுட் பல ஜீவன வந்து ஜனித்தலு மாமாறென்னை யென்று [1]சொதநியம் வருமெனில் வராது, ஜனிக்கின்ற ஜீவனதூஉம், அது ஜனித்தற்கிடமாகிய ஜீவனதூஉம் கர்ம வசத்தால் அது கூடுமாதலி னெனபது. சில பல குட்டியிடுதலும், சில ஒரு குட்டியிடுதலுய ஸ்வபாவமெனில், ஒருகால் ஒரு குட்டியிட்டது பின்பொருகாற்பல குட்டியிடுதலும, ஒருகாற் பல குட்டியிட்டது ஒருகால் ஒரு குட்டியிடுதலும் காண்டலில் அது, ஸ்வபாவமாதல் கூடாது, ஸ்வபாவமாவ தொருபடி யிருத்தல் வேண்டுதலி னென்பது. (உஉ)

876 குறைந்து பூதங்கள் கூட்டமுண் டாமவ
ணுறைந்த பூதத் துணர்வல்ல தின்மையா
லறைந்த பூதங்க ளைந்துமங் கில்லெனின்
மறைநத பூததநி லுண்மைவந் தெய்துமால்.

(இ - ள்) துவீந்திரிய முதலாகிய [2]விகலேந்திரிய பிராணிகட்கும் சரீரமுண்மையில் பஞ்ச பூதமுங் கூடுதலன்றி ஒன்று மிரண்டும் பூதங்கள் குறைந்துங் கூடுமோ எனருர்க்கு அவ்வாறுங் கூடும் காணப்பட்ட இந்திரியங்களைப் பண்ணும் பூதமல்லது, ஐந்து பூதமு மில்லை யெனில் ஐந்து பூதங்களினுண்மையு மெய்தும் அது காட்டு மென்றவாறு. அது, வருகின்ற காதையில் விளங்கும்.

877 நீருங் காற்றுமல் லாநில மில்லையோ
ஊருஞ் சங்கினோ டூர்மசசி மூக்கில
தேரி யுண்டலிற் றீயுமுண் டில்லைகண்
காரி யஞ்செவி காணலங் காயக்கென்.

(இ - ள்.) சங்கும், ஊர்மச்சியும் முதலாகிய துவீந்திரியங்களது சரீரத்து உடம்பைப் பண்ணும் காற்றும், நாவைப் பண்ணு நீருமனறிப் பிருதிவி விசேஷ

1 சொதநியம் - ஆக்ஷேபம், கேள்வி.
2 விகலேந்திரியம் - குறைந்த பொறி.

மாகிய அஸ்தி முதலாயின உண்மையினும், மண்ணைத் தின்றலினும் துவீந்திரிய பிராணி சரீரத்து நிலமில்லையோ? நில முண்டாயுமவை மூக்குடையவல்ல; ஆகார வேட்கையால் ஜீவித்தலில், உதராக்கினி முதலாயின உண்மையில் அக்னி யுண்டு; உண்டெனினும் அவற்றுக்கு அக்னியாலாவதாகிய கண்ணில்லை; உதர விவர முதலாகிய விவரமுண்மையானும், ஆகாசம் வியாப்த மாதலினும் ஆகாச முண்டென்றற் கென்னையோ? அஃதுண்டெனினும் அதனாலாம்செவி துவீந்திரி யங்களுக் கில்லை யென்றவாறு. (உச)

878 ஒன்றொன் றாக வுணர்ச்சி முறைமையாற்
சென்று பூதங்கள் சேர்வதற் கேதுவென்
குன்றித் தந்தமுள் யாவையுங் கூடுமே
னின்ற மெய்ம்மை நினதென நேர்வல்யான்.

(இ - ள்.) ஓரறிவுயிரை யொரு பூதமும், இரண்டறிவுயிரை இரண்டு பூதமு மாக்கி, இவ்வா றுடப்பறிவு செய்யுங் காற்றோடு நாவறிவு செய்யும் நீரும், மூக் கறிவு செயயும் நிலனும், கணணறிவு செய்யும் தீயும், செவி யறிவு செய்யும் ஆகாசமும் கிரமத்தாற் கூடுதற்குக் காரணமெனனை? கண்ணறிவு செய்யுந் தீயும், செவி யறிவு செய்யும் ஆகாசமுமாய் இவ்வாறு விபரீதமாகக் கூடாதவா றென்னை? இனி, பிருதிவியாதி பிறிதொன்று கூட்டக் கூடுவதல்லது, தான் கூடக் கண்டறிவதில்லை. இப்பூதங்கள் தாமே கூடியவாறு என்னை? கமன சீலத்ததாகிய காற்று முதலாயின பிறவற்றோடு கூடி நிற்குமாறென்னை? மேக முதலாயின தாமே கூடக கண்டனமன்றோ வெனில், ஜல பரிணமஞ் சென்ற பரமாணு ஸ்கந்தங்கள் பிராணிகளது அதிர்ஷ்ட விசேஷத்தால், ஒரு வழிக் காற்றினாற் றிரண்டு ஜலமாகி வீழ்வததல்லது பூதங்கடாமே கூடினவல்ல; அவ் வாறே பரமாணு ஸ்கந்தங்கள் ஜீவனது அதிர்ஷ்ட விசேஷம் பற்றிச் சூக்ஷ்ம ரூபத்தால் சரீரேந்திரிய விஷய முதலாகிய திரவியங்களாகிப் பரிணமிக்கு மென்று சொல்லுதியாயின் நீ பரமார்த்த ஞானி யென்பது யான் இசைகுவ னென்றவாறு. (உரு)

879 ஐந்து பூத மவற்றவற் றோலைந்து
மிந்தி யங்க ளியையு மிவையெனுஞ்
சிந்த னையொழி நீயெனச் செப்பினா
ளைந்து வாழு முயிருண்மை யொட்டினாள்.

(இ - ள்.) ஐந்து பூதங்களாலும் ஐந்து இந்திரியங்களாயவற்றால் ஐந்து விஜ் ஞானங்களா மென்பதொழி யென்று சொல்லி, அவனைத் தெளிவித்தார், கர்ம கர்த்தாவும், பல போக்தாவுமாகிப் பூர்வ சரீரத்து நின்றும் வந்து, உததர சரீ ரத்துச் செல்வதாகி, மத்திம சரீரத்தினின்றும் வாழ்வதொரு ஜீவதிரவியமுள தென்னும் ஸித்தாந்தமுடைய நீலகேசியா ரென்றவாறு. (உசு)

880 உணர்வு மின்பமு மோரறி வாதிக்கட்
புணரு மேயெனிற் பொய்தொகைக் கண்ணென
லுணர்வு மின்பமு முள்வழி யேயுயிர்
புணரு மென்றனள் போதன கண்ணினள்.

(இ - ள்.) அறிவும், சுகதுக்க முதலாயினவும் ஏகேந்திரிய முதலாகிய பிராணிகளுள் உளவாகில் ஐந்து பூதங்களுங் கூடின வழி அறிவும், சுகதுக்க முதலாயினவும் ஆமென்பது பொய்யாம்; கூட்டத்துககண்ணன்றிப் பிரத்தியேகம் பஞ்சபூதங்கள் ஒரோ வொரு ஞானங்களையும், சுகதுக்கங்களையும் ஆக்குமாயில், பஞ்சபூதங்களும் ஞானதியுடையவாம்; ஆதலின், அவை சேதனங்களாம். எனனே? ஞானதிகளையுடையதியாது, அது, சேதனையாமாதலினென்று சொன்னர், விகஸித [1]நீலொ தபலச்சவியதாகிய நயன யுகளமுடைய நீலகேசியாரென்றவாறு.

இது, நீ ஜீவனை இல்லை யெனபான் புகுந்து, அஜீவனகளாகிய பஞ்சபூதங்களையும் ஜீவனுக்கினை யென்று அதிபிரஸங்கங் கூறிற்று. (உஎ)

881 காற்றி னுலுடம் பாமெனிற் காற்றினே
தோற்றி னுயிர் தான்றொகை யென்செயு
மாற்றிவ் வைநதினு மாருயி ராமெனு
மாற்ற மாயின் மனங்கொளற் பாலதே.

(இ - ள்.) காற்றொன்றினுலு முடம்பாகுமாயில், உயிரை யொழிய உடம்பாகாதாகலின், உயிருங் காற்றினுலே பெறப்பட்டதாம்; பெறில் பஞ்சபூத ஸமவாயதது உடம்பு முயிருந் தோன்று மென்றது பிழையாமாதலான் முனபேயுளதாகிய ஜீவன், பூதங்களால் வர்த்திக்கு மென்பாயாயின, அது புததி பண்ணத் தகுமென்றவாறு. (உஅ)

882 வேறு வேறைந்து பூதமு மெய்ம்மையா
லீறுந் தோற்றமு மில்லுயி ராயின
பாறி யாவையும் பாழ்த்தொழி யும்மெனக்
கூறி னுயது குற்ற முடைத்தரோ.

(இ - ள்.) ஐந்து பூதங்களும் ஐநது அறிவினை யாக்கு மென்றலின் அவை தனிததனி அறிவுடையனவாதலின், அநாதிநியதங்களாகிய ஜீவன்களாயின. [2]திரணி முதலாகிய கோலாற்கடையினும் வாழைத் தண்டில் அக்கினி புறப்படாதவாறு போலப் பூதங்கள் தனிததனி யுணர்வுடையவல்ல; ஆயில், பூதாந்தர ஸம்யோகத்திலும் உணர்வு தோன்றுதாம். ஆதலில், மூர்ச்சிததுக் கிடந்

1 நீலோதபலச்சவி (஛வி) - நீலோற்பல ஒளி, அழகு.

2 திரணி - நெருப்புண்டாக்கும் செடி.

தானது உணர்வு சந்தனாதி ஸம்பர்க்கத்தால் தோன்றினவாறு போல பூதத்தினுணர்வும் பூதாந்தர ஸம்பர்க்கத்தாற் புலப்படுமாயிற் பூதங்கள் உணர்வும், உயிரும் உடையவாயின. ஆதலாற் பூத ஸமவாயத்தாற் தோன்றியவை பிரிந்தாற் கெடுமென்று சொல்லியது அயுக்த பிரபலாபமா மென்றவாறு.

இனி, இவ்வாறன்றிப் பஞ்சபூதங்கள் பரமார்த்தங்களும், [1]அநாதிநிதனங்களுமாதலின், அவற்றாலாகிய பர்வதாதி போல சேதனங்களும், அநாதிநிதனங்களாமாதலிற் சேதனை நசிக்குமென்று சொல்லி, அது அயுக்தமாமென்பதுங் கொள்க. பூதத்தாலியன்றதெனினும், சேதனை கடாதிபோல அநித்யமெனில், பூதங்களாற்றானே தோன்றிய சேதனைக்கு கும்பகாராதி பிரயத்தனத்தாற்றோன்றிய கடாதி திருஷ்டாந்த மாகாதென்பது. அன்றியும் பூதங்களானியன்றவற்றுள் நித்யங்களுமுளவாதலில், ஜீவன் அநித்யமாக வேண்டுவது மில்லை. ஜீவன் நித்யமென்பது, மேலைக் காதையினுஞ் சொல்லுவர். (உக)

883 குழவிக் காலத்துக் கூறின யாவையுங்
கிழவுக் காலத்துக் கண்ணவை கேட்டலா
லிழவெக காலு மிலாணினி யார்களோ
தொழுவிப் பானங்கோர் தோன்றலுந் தோன்றுமே.

(இ - ள்.) பாலனான காலத்துச் செய்தன விருத்தனான காலத்து அறிந்து சொல்லக் காண்டலால், எக்காலத்தும், நசியாதாகிக் கர்மங்களில் நீங்கிய காலத்து அநந்த ஞானாதி குணம் பற்றி, நல்லாராற் றொழப்படுவானாகிய ஜீவன் உளனாகுமென்றவாறு.

கருப்பாதி மரண பரியந்தமான காலத்தன்றி, எக்காலத்து முளதாதல் கூடாது. கருப்பாதி மரண பரியந்தமான காலத்தல்லது சேதனத்துக் காட்சியின்மையிலெனில், கருப்பாதி மரண பரியந்தமான காலத்தல்லது யாவராலுங் காணப்படாத பூதங்களு மெக்காலத்து முளதாதல் கூடாது; கூடில், சேதனமு மெக்காலத்து முள தென்பது. சேதனங்களொருசார் நசிப்பதும், பூதங்கள் நிற்பதும் காண்கின்றமையிற் பூதங்கள் நித்தியமெனில், அக்கினி முதலாகிய வொருசார் பூதங்கள் நசிப்பதும், சேதனங்கள் நசியாது நிற்பதும் காண்கின்றமையும் பெறப்படுதலிற் சேதனமும் நித்யமேயா மென்பது. (௩௦)

884 துன்பந் தூய்மையுந் [2]துட்கெனவுட்கலும்
அன்பு மானமு மாயமு மாண்மையு
மின்பு மென்றிவை யாக்கிய நீதென
முன்பு நின்று முறுக்கவும் வல்லையோ.

---

1 அநாதி நிதநம் - ஆதியந்த மின்மை. 2 துட்கெண - அச்சக் குறிப்பு.

(இ - ள்.) துன்ப முதலாகச் சொல்லப்பட்டன இன்ன பூதத்தால் வந்த வென்று காட்டவும் வல்லையோ ? அவை ஒருவர்க்குளவாய் ஒருவர்க்கிலவாத லும், ஒருவருக்கு மந்தமாகவுளதாய், ஒருவர்க்குத தீவிரமாகவுளதாதலும், ஒரு காலத துளவா யொருகாலத் திலவாதலு முண்மையின, எற்றினுனுயிற்றுச் சொல்லா யென்றவாறு.

அன்றித துன்ப முதலாயின பூதங்கள் கூடிய வழி பூதங்கள் தமக்கோ ? பிறர்க்கோ ? இன்னதற்குச் சுகாதியாயிற்றென்று சொல்ல வல்லையோ வெனறு மாம். (௩௧)

885 கனவு மந்திரஞ் சிந்தனை வாழுநாள்
வினவு சோதிடங் கேட்டுரை புட்குர
லனகள் யாவையு மென்னைநின் பூதங்க
ளனகொ ணீயிங் கறிந்தனை சொல்லெனை.

(இ - ள்.) கனவு முதலாகச் சொல்லின பூத கிருததியமோ சொல்லுக வென்றவாறு. (௩௨)

886 வைத்த வதது மறுபிறப் பிற்றமர்க்
குய்த்துக் காட்டுத லேனுல கொட்டுமா
லெத்தி றத்தினு மில்லுயி ரென்றிநீ
செத்து வம்மெய்திற் சில்லைமை செய்பவால்.

இ - ள்.) ஒரு ஜன்மத்து வைதத தனத்தைப் பிறிதொரு ஜன்மத்து ஜாதி ஸ்மரணததாலறிந்துபந்து ஜனங்களுக்குக் காட்டுதல் உலகத்துப் பிரசிததமாதலா லும், பிசாசங்கள் ஜன்மாந்தர விருத்தாந்தத்தை [1]விஸம்வாதியாமை அறி வித்தலாலும், ஜீவனுண்மை பிரசித்தம். இதனை இல்லையெனறு சொல்லுகின்ற நீ பேதையே யாகுமென்றவாறு. [2]சில்லைமை - அலவலைத் தன்மை. (௩௩)

887 பேயு மில்லை பிறப்பது மில்லென்பாய்
வாயுங் கிள்ளிப் புடைப்ப வருவதென்
மாயத் தாலன்றி மந்திரத் தாற்றெய்வங்
கூயக் காலறங் கோடலை யொட்டெனா.

(இ - ள்.) பேயுமில்லை, பிறவியுமில்லை யென்று சொல்லுவாய் ; பேயுண் மை நினக்கேற வேற்றினுல் ஆஸ்திகனுதல் இசைவாயாக வென்று சொல்ல வென்றவாறு.

வாயுங்கிள்ளி யென்பது - ஹாஸ்யமாம். (௩௪).

---

1 விஸம்வாதியாமை - குற்றமின்றி.

2 சில்லைக் கணன்பினை—நாலடியார், 337.

888 ஒட்டி னேனென் றுரைப்ப வுணர்விலா
முட்டை காண்கென முன்கை முறுக்கியே
சுட்டி ளாங்குத் தோற்றமு நோக்கென
விட்டுத் தான்றன் விகுர்வணை காட்டுவாள்.

(இ - ள்.) அவ்வாறியைந்தே னென்றவன சொல்ல, அபோத்தாவே! காண்பாயாக வென்று விரல் சுழற்றி நிறுத்திப் பேயினது தோற்றம் பார்ப்பாயாக வென்று[1] விகரியை பண்ணுகின்றவ ளென்றவாறு. (௩௫)

889 கழுதுங் காணல ராகிக் கலங்கியே
யழுதுஞ் சாப வகலிடத் தாரிவன்
முழுதுங் காணின் முடியு மெனமுன்னி
வழுவில் வாயும வளைபல்லுந் தோற்றலும்.

(இ - ள்.) பிசாசங்களைக் கண்டிலராயினும் அவற்றைக் கேட்டபொழுது கலங்குவர் உலகத்தார். ஆனால், இவன பிசாசத்தை முழுவதுங் காணில், இறந்து படுமென்று கருதி, வாயையும், வளைந்த பல்லையும் அவனுக்குத் தோன்றுமாறு செய்தவழி யென்றவாறு. (௩௬)

890 கண் புதைத்துக் கவிழ்ந்தனன் வீழவே
திண் பதத்திற் றெருட்டி யெடுத்திரீஇப்
பண்பு தக்கன சொல்லிப் பரியனின்
நண்ப தென்று நடுக்கமுந் தீர்த்தபின்.

(இ - ள்.) பேயினது வாயும், பல்லும் கண்ட மாத்திரத்திலே கண் புதைத்துக்கொண்டு கவிழ்ந்து வீழ்ந்தானைத் தைரிய வசனங்கள் சொல்லித் தேற்றி நிலத்தினின் றெடுத்திருத்திப் பயந் தீர்க்கும் வாக்கியங்கள் சொல்லி, நீகண்ட பேய்க்கஞ்சாதொழி; அப்பேய் நின்பக்கதுக்காணென்று சொல்லிப் பயந் தீர்த்த பின் என்றவாறு. (௩௭)

891 பேய்கண் டாயதன் பெற்றி புரையென
வாய்கண் டேனென்னை வாழ்க்கை வலியன்மின்
நோய்கொண் டேனென வஞ்ச னுனக்கவ
டாய்கண் டாயென்றுஞ் சாதலில் லையென.

(இ - ள்.) பேய் கண்டாயாயில் அதன் ஸ்வரூபஞ் சொல்லுவாயாகெனச் சொல்லுவான், அதனது வாய் கண்டேன் யான் பிழைக்க மாட்டேன்; அதனை நினைத்தலும் பீதனுகின்றேன் என, நீ அதற் கஞ்ச வேண்டுவதில்லை; உனக்கவள் தாயாதலின் மரணமுமில்லை யென்று சொல்லி என்றவாறு. (௩௮)

---

1 விக்ரியை - ரூபம் மாறுதல்.

892 பெற்ற பேரும் பிசாசிக னென்பதே
யற்ற மின்றி யவட்கு மகனீ
குற்ற மில்லறங் கொள்ளின்மற் றெம்மொடு
சுற்ற மாதலிற் சொல்லெனச் சொல்லுவான்.

(இ - ள்.) நின்பெயரும் பிசாசிகனாதலில், நீ அவட்கு மகனாகுதி கண்டாய்; இனிப் பேய் கண்டனையாயில் ஆதமாவும், பரலோகமும், புண்ணிய பாபங்களு முளவென்று தெளியலா மன்றே? அஃதன்றி யுக்தி யுக்தமாக ஜீவ ஸித்தி பண்ணவும் பட்டதன்றோ? இனி, ஸத தர்மங் கைக்கொள்ளுதியாயில் எமக்கு பந்துவாகுவையாதலின், ஸததர்மாநுஷ்டானம் பண்ணுதியாயிற் சொல்லென, அவனுஞ் சொல்லுவா னென்றவாறு. (கக)

893 பிறப்பும் பேயு முதலாப் பிறகளுந்
திறத்தி னீசொன்ன யாவையுந் தேறிநின்
றறத்தை யானு மமைவரக் கொண்டனென்
மறக்க லேனினி மன்னுமை யானென.

(இ - ள்.) ஸம்ஸாரமும், ஸம்ஸாரததுளவாகிய பேய் முதலாகிய ஸர்வ பிராணிகளேயும், அவற்றன புண்ணிய பாபகர்மங்களேயும், அவற்றாலாம் ஸுக துக்கங்களேயும், தர்மானுஷ்டானத்து வருவதாகிய [1]கர்மாபாயத்தில் மோக்ஷத் தினேயும், அந்த மோக்ஷகாலத் துளவாவனவாகிய அனநத ஞானுதி ஆத்ம குண சிததியுமெல்லா முன்பு நின்னு லுபதேசிக்கப்பட்ட யுக்திமார்க்கத்தாற் றெளிந் தேன; தெளிந்தும் [2]மான கர்மோதயத்தால் ஸத்தர்ம விமுகனுயினேன்; இது பொழுது ஆப்தாகம பதார்த்த சிரத்தாந ஞான பிரவிருததி ரூபதததாகிய ஸத தர்மத்தைக் கொண்டேனென, அதனது அருமை பெருமையும் அதனே அனுஷ்டித்தால் வருவதாகிய, [3]அப்யுதயாபவர்க்க மாஹாத்ம்யத்தினே யும், ஸவிஸ்தாரமாக உபதேசித்து, இதை மறவாதொழி யெனறு வற் புறுதத, அகாரண பந்துவாகிய நினனல் உபதேசிக்கப்பட்ட ஸத் தர்மத்தினே யும், நின்னேயும் ஒருபொழுதும் மறவேனெனறு சொல்ல வென்றவாறு. (௬0)

894 பேந்தரு தோற்றப் பிசாசிக னிற்றென
வேந்துமவ் வேத்தவை யாரும் வியப்பெய்தி
யாய்ந்த கேள்வியி னுனே [4]யையாவென
மாந்தர் யாரு மதித்தன ரென்பவே.

---

1 கர்மாபாயம் - கர்மக்கேடு.

2 மானகர்மோதயம் - தானென்னும் கர்வமாகிய கர்மத் தோற்றம்.

3 அப்யுதயாபவர்க்க மாஹாத்மியம் - உண்டாகும் மோக்ஷத்தின் பெருமை.

4 ஐ - ஆப்தன், அல்லது குரு.

(இ - ள்.) பிசாசிகன் இவ்வாறு ஸத் தர்ம சிரத்தாலுவாதலும், இராஜாவும், இராஜ ஸபையிலுள்ளாரும் 1விஸ்மய மெய்தி ஸகல வித்யாஸம்பன்னைகளாகிய நீலகேசியாரை ஸம்பாவனை பண்ணி, ஸத் தர்ம சிரத்தாலுக்களாயினர். இவ்வாறு நீலகேசியாரை, லோகத்துள்ள விதவ ஜனங்கள், பல வித்யாகோஷ்டிகளிலும் நன்கு மதித்து, ஸன்மார்க்க சிரத்தை பண்ண, நீலகேசியார் **தர்ம பிரபாவநஞ்** செய்தாரென்றவாறு.

நீலகேசித் திரட்டில் ஐவகைப் பூதமுஞ் சேதனை செய்த வெவ்வழற்ரூபதன் விசையச் சருக்கம் முற்றும். (௬௧).

---

## நீலகேசி சமய திவாகர விருத்தி

## உரைச்சிறப்பு

1 மெய்ந்நூ னெறியை விளக்கி விளங்காப் பிடகமுநற்
பொய்ந்நூ லிருள்களைப் போகத் துறந்தது பூதலத்தி
லெந்நூலும் வல்லவ ரேத்தச் சமயத் திறைவன்கண்ட
செந்நீல கேசி விருத்திச் சமய திவாகரமே.

2 அருகன் றிருவறத் தன்புசெய் வாரு மழிவழக்காற்
பெருகுந் துருநெறிப் பீடழிப் பாருமிப் பேருலகிற்
பொருவின்றி நின்ற தமிழ்நீல கேசிப் பொருளையெல்லாம்
திரிவின்றிக் காட்டுஞ் சமய திவாகரஞ் சேவிக்கவே.

நீலகேசி விருத்தி சமயதிவாகரம் முடிந்தது.

𑌶𑌾𑌰𑍍𑌦𑍂𑌲𑌂

𑌸𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌸𑌮𑌯 𑌦𑌿𑌵𑌾𑌕𑌰 𑌵𑌾𑌮𑌨𑌮𑍁𑌨𑌿 𑌰𑌾𑌜𑌰𑌾𑌜 𑌵𑌚𑌸𑌾𑌮𑍍
𑌨𑌤𑌸𑌾𑌰 𑌸𑌰𑌿𑌦𑍍𑌵𑌯 𑌮𑌧𑍁𑌰𑌾𑌰𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌿𑌕𑌿𑌰𑌣𑌾 𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌃.
𑌶𑍍𑌰𑍀𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌾𑌯 𑌨𑌮𑌃

---

1 விஸ்மயம் - ஆச்சரியம்.

ஸ்ரீ ஜிநாயநம:

# APPENDIX - A

## Extracts from an unpublished work called "Ashtapadartha"

# அஷ்டபதார்த்தஸாரம்

---

வீதராக ஸர்வஜ்ஞப்ரணீத மாகிய மோக்ஷமார்கம் த்ரிவிதம்: ஸம்யக்தரிசனம், ஸம்யக்ஞாநம், ஸம்யக்சாரித்திரமென. தத்ர ஸம்யக்தரிசனம், தத்வார்த்த ஶ்ரத்தானம்; ஸம்யக்ஞாநம் தத்வாவபோதனம்; அவ்விரண்டோடுகூடிய ஸம்யமவிசுத்திஸம்யக்சாரித்ரமாம். ஏதந் மார்க்க விஷயமாகிய பதார்த்தம் அஷ்டவிதமாகும்: ஆப்த, ஆகம நவபதார்த்த, பிரமாண, பிரவ்ருத்தி, லிங்க, சாரித்திர, பலம்என.

ஆப்தர் இருவகையர், ஸகலாப்த்தர், விகலாப்த்தர்என. ஸகலாப்த்தர் இருவகையராவர், நிஷ்களாப்த்தர், ஸகலாப்த்தர்என. நிஷ்களாப்ததராவர் கர்மாஷ்டக பந்தோதய காரணகார்ய ஸர்வவிகார விநிர்முக்த்தராகி, அநந்தஜ்ஞாந தர்சன சுக வீர்ய நிர்நாம நிர்கோத்ர நிராயுஷ்யஸகலஸம்யக்த்வ பாவமென்னும் விசுத்தாஷ்ட குணஸ்வபாவத்தராகிப் பஞ்சசரீர பரித்யக்த்தராகி த்யக்த தேஹ ஸமாகாரராகித் திரிலோகாக்ரஸ்தாயிகளாகிய ஸித்தபரமேஷ்டிகளாவர்.

ஸகலாப்த்தர் மூவகையர்: தீர்த்தகரர் அநகார கேவலிகள், அந்தர்முகூர்த்த கேவலிகள் என. அவருள் தீர்த்தகரனென்பான், ஜ்ஞாநதர்சனவரண, மோஹாந்தராயமாகிய காதிகர்மங்களில் விப்ரமுக்தநாகி ஜன்மஜராமரண க்ஷுத்பிபாஸா பய த்வேஷ மோஹ ராக சிந்தா ரோக ஸ்வேத கேத மத ரதி விஸ்மய நித்ரா விஷாத மென்னும் அஷ்டாதச தோஷங்களில் விரஹிதநுமாகி ஸப்ததாது உபதாது உதராக்நி வாதபித்தஸ்லேஷ்மமல விண் உபமல மென்னும் சதுர்தச உபசய சரீரபரித்யக்தநுமாகி அநந்தஜ்ஞாந தர்சன, சுகவீர்ய மென்னும் அநந்தசதுஷ்டயங்களால் ஸம்பூர்ணநுமாகி, படுஹித மதுராதிகுண ஸம்பத்ஸமந்விதமாகிய திவ்யவசனங்களால் தத்வோபதேசம் பண்ணிபருளுவானுமாகி தேவேந்திர, நரேந்திர, தரணேந்திராதிகளாகிய

திரிலோகாதிபதிகளால் ஸந்ததம்பூஜனீயனுமாகி, பவ்யபிராணிகட்கு ஜன்ம ஜரா மரணமய மஹாதுக்கங்கள் வாராமல் அஷ்டோத்தர ஸஹஸ்ரதளமாகிய ஹாடக பத்மத்தின் மிசை ஸ்ரீவிஹாரம் பண்ணியருள்வானுமாகி ஸமவஸரண ஸாரபூமண்டலத்து ஸிம்ஹாஸநத்தின் மிசை யிருந்து த்வாதசகணங்களால் பரிவ்ரதநுமாகி மஹாமாணிக்கத்தை யுள்ளடக்கிய ஸ்படிகமலைபோல ஆலோகம் பிரபாமூர்த்தி கனப்பிரபா என்னும் திருவொளிகளால் பரிமண்டிதனுமாகி ஔதாரிக திவ்யதேஹத்தநுமாகிச் சாயாதருப்போல பவ்யாபவ்ய பிராணிகட்கு ராகத்வேஷமின்றி யேயும் ஸுகதுக்கங்களுக்குக் காரணபூதநுமாகி தேவர்களால் நிர்மிதமாகிய அசோக விருக்ஷமும் புஷ்பவிருஷ்டியும், திவ்யத்வனியும், சாமரநிவஹமும், ஸிம்ஹாஸநமும், பாமண்டலமும், தேவதுந்துபியும், சந்திராதித்ய நித்யவிநோத ஸகலபாஜன மென்னும் சத்ரத்ரயமுமாகிய அஷ்டமஹாப்ராதிஹார்யங்களால் பரிவேஷ்டிதநுமாகி, ஸ்வேதாபாவம், ரஜோமலாபாவம், க்ஷீரம் போன்ற ரஸவிசேஷம், ஸ்ரவணப்பிரியமாகிய வசனப்ரவிருத்தி, உபமாதீதமாகிய ஸௌந்தர்யம், பரமாகிய பரிமளகந்தம், ஸ்ரீ தேவி முதலாகிய ஸ்ரீலக்ஷணங்கள், அளவில்லாத மஹாபலம், வஜ்ரவிருஷபநாராச சரிரஸம்ஹநநம், ஸமசதுர ஸ்ரசரீர ஸம்ஸ்தாநமென்னும், ஸ்வபாவிகமாகிய பத்ததிசயங்களையுடையனுமாகி ; அச்சாயத்வம், நிர்புக்தி, நிருபஸர்கம், நிர்நிமேஷம், நிர்ஜந்துவதம், துர்பிக்ஷவிரஹம், ஸகலவித்யேசத்வம் ஸமாந நககேசத்வம், வ்யோமகமநயாநம், சதுராநநத்வம் என்னும் கர்மக்ஷயோத்பன்னமாகிய பத்ததிசயங்களையுடையனுமாகி ; ஸகலபாஷா ஸமன்விதவாக் ப்ரஸரம், ஷட்ருது ஸம்பூதஸஹ ப்ரவ்ருத்தி, ஸர்வபிராணிகளோடு விச்வபிராணிகட்கு மித்ரபாவம், ஸமஸ்த ஜீவன்கட்கு சந்தோஷ ப்ரவ்ருத்தி, மந்தமாருதம் வந்தசைதல், தர்பண தலஸமான பூதலம், வாதகுமாரர் தூள்துடைத்தல், வருணகுமாரர் ஜலம் வாரி தெளித்தல், ஜயஜயவென்னும் தேவகோஷணை, பூமிதலத்துள் ஸர்வஸஸ்ய ஸம்ருத்தி, ஆகாசதிசைகளின் வைமல்யம், அஷ்டமங்கலம், அரவிந்த நிரைகள், தர்மசக்ர மென்னும் தைவிகமாகிய பதினான்கு அதிசயங்களையுடையனுமாகி ; ஸ்வர்காவதரணம், மந்தராபிஷேகம், மஹாப்ரஸ்தாநம், கேவலோத்பத்தி, பரிநிர்வாண, மென்னும்பஞ்ச மஹா கல்யாண ஸஹிதநுமாகி ; காதி கர்ம க்ஷயத்தில் ஸகலாஹாரமலமும் உபமலமும் சப்ததாதுவும் உபதாதுவுமின்றாய், அப்பொழுதே ரஸவித்தமாகிய லோஹதாதுப்போல கநகமயமாகிய திவ்ய தேஹத்

தநுமாகி

அதீத அநாகதவர்த்தமான காலத்ரயவர்த்தி பதார்த்தங்களை ஏக க்ஷணத்தே யறிவானுமாகி, அநாத்யந்தனுமாகி ஸர்வஜ்ஞனென்றும், ஸர்வதர்சியென்றும், அநந்த சுகியென்றும், அநந்த வீர்யனென்றும், ஸர்வேச்வரனென்றும், ஸர்வஹிதனென்றும், மஹாதேவ னென்றும், மஹாவிஷ்ணு வென்றும், அர்ஹத்தேவ னென்றும் இன்னொன்ன ஆயிரத்தெட்டு திருநாமங்களையுடையனுகி நின்ற பகவத் அர்கத் பரமேச்வரனுகும்.

ஈத்ருசனுகிய பகவான் ப்ரக்ஷீணமான அசேஷராக த்வேஷமுடைமையிலவனுக்கு ஓரிடத்து ப்ரஸாதமும் ஓரிடத்துக் குரோதமும் உளவாவனவல்ல. எல்லா விடத்தும் பரமோபேக்ஷா ஸாம்ராஜ்யமாவதாகலில், அவன் உபாஸக ஜனங்கட்கு ஸம்ஸார துக்கவிநாசத்தினையும் ப்ரத்வேஷி ஜநங்கட்கு ஸம்ஸார சக்ரபரிப்ராந்தியினையு மாக்குமாறு யாங்கனமெனில் :—

மஹாஸர்ப்ப விரோதியான கருடனது யதார்த்தமறிந்து ஶ்ரத்தாபூர்வகம் அவனது ஸ்வரூபத்தினை தியானிப்பார்க்கு அவனது பிரஸாத மில்லையாயினும் விஷாபஹரண சக்தி காணப்படா நின்றது; அதுபோல மித்தியாத்வராகாதி நிமித்தமாக அநாதி பரம்பரையால் வாரா நின்ற ஸம்ஸார ஸரித்பாத மென்னும் மஹா துக்கங்கள் இந்த மித்தியாத்வராகாதிகட்கு விருத்தமான அநந்த ஜ்ஞாநாதிப்ரமாணங்களால் அநய யோக்கிய வியவச் சேத பூர்வகம் உண்மையாலறிநது இவனது ஸ்வரூபத்தினை பரம குருவினது உபதேசம் பிழையாமல் அவ்யாக்ஷிப்த சித்தராகி பரமபக்தி புரஸ்ஸரம் அநுஸ்மரிப்பார் யாவர்க்கும் விரோதிகளான மித்தியாத்வாதிகள் நிர்மூலம்ப்ரளயிப்பனவாகும்.

ஆகவே ஆப்தனும் உபாஸக ஜனங்கட்கு ஜபத்தியானுர்ச்சநா பிரகாரங்களால் ஸ்வர்காபவர்க பல ப்ரதனுவன்; இவ்வண்ணம் நிக்ரஹாநுக்ரஹங்களின்றிப் பரமோபேக்ஷாஸாதந நாகிய பகவான் உபாஸக ஜநங்கட்கு சுகத்தினையும் ப்ரத்வேஷி ஜநங்கட்கு துக்கத்தினையும் ஆக்குவனுகு மென்றறிக.

இப்பெற்றிப்பட்ட தீர்த்தகரர் இந்தப் பரத க்ஷேத்திரத்து அவஸர்ப்பிணி சதுர்த்த காலத்து சதுர்விம் சதிசங்கியை யாவர்; விருஷப, அஜித, ஸம்பவ, அபிநந்தன, ஸுமதி, பத்மபிரப ஸுபார்ச்வ, சந்திரபிரப, புஷ்பதந்த, சீதள, ஶ்ரேயாம், வாஸுபூஜ்ய விமல,

அநந்த, தர்ம, சாந்தி, குந்து, அர, மல்லி, முநிஸுவ்ரத, நமி, நேமி, பார்ச்வ, ஸ்ரீவர்த்தமான ரென.

அநகார கேவலிகளாவர்:

பஞ்ச மஹா கல்யாணம் அஷ்டமஹாப்ராதி ஹார்ய ஸமவஸரணாதி பஹிர்விபூதி ரஹிதராகி, அநந்த ஜ்ஞாநாதி சதுஷ்டயாப்பியந்தர விபூதிஸஹிதராகி மணிவித்தமான ஹேமபத்திராஸநமும் ஏகாத பத்ரமும் சாமரயுகளமும் கல்பக விருக்ஷமும் ஏகயோஜனை பிரமாணமாகிய கந்தகுடி மண்டபமுடையராவர்.

அந்தர் முஹூர்த்த கேவலிக ளென்பார்: காதி அகாதிகளை ஏகாந்தர் முஹூர்த்தத்துள் கெடுத்து சித்தி பிராப்தரானவ ராவர்.

விகலாப்தர் த்ரிவிதராவர்: ஆசார்யர், உபாத்தியாயர், ஸர்வஸாது பரமேஷ்டிகளென. அவருள், ஆசார்யராவான், ஸர்வ ஜீவதயாபரனுகி, பாஹ்யாப்பியந்தர பரிக்கிரக தியாகியாகி, ஸம்யக் தர்சன ஜ்ஞாந சாரித்திர பரிபூர்ணனுகி, குரோத மாந மாயா லோப கஷாய ரஹிதனுகி, பஞ்சமஹா வ்ரத பரிபோஷகனுகி, ஷடாவசிய கிரியாதத் பரனுகி, சுத்தாஷ்ட குணுபிலாஷியாகி, நவவித பிரம்ம சர்ய ப்ரவ்ருத்தி ஸஹிதனுகி, தசதர்ம பரிபாலகனுகி, ஜிநதீக்ஷாதாந தக்ஷகனுகி, ஸமர்த்தனுகி, தர்மசுக்லத்தியான பராயணனுகி, மநோவாக்காய குப்தியுக்தனுகி, சதுராநுயோக பரமாகம உபதேசகனுகி, பஞ்சசமிதி பரிரக்ஷகனுகி, ஷட்ஜீவ நிகாய பரிபாலகனுகி, ஸப்தநய ஸகலார்த்த தர்சியாகி, ஈர்யாபதாதி அஷ்டசுத்தி சுத்தனுகி, நவபதார்த்த பரிபாவனு தத்பரனுகி, அநுயோகாதி தசப்பிரமாண நிச்சித ஸகல பதார்த்த வேதியாகி, தசதர்மத்தியா நாநுஸ்மரண லம்படனுகி, நவ நோகஷாய விஜ்ரும்பண விரஹிதனுகி, அஷ்டமதமய பரிஹீண ஹ்ருதயத்தனுகி, ஸப்த பயவிப்ர முக்தனுகி, ஷட்விநய ப்ரவ்ருத்தி ஹீநனுகி, பஞ்ச ஸம்ஸார பரி பீருவாகி, ஜயலாப பூஜாயசஸ் கீர்த்தியென்னும் சதுர்வித ஐஹிக பல விரஹித உபதேசனுகி, காயவைத்திரய தூரனுகி, அந்தரங்க பஹிரங்க சுத்தனுகி அர்ஹந்மார்க்க கோஷணை கபாரதாரகனுகி நின்ற பரமருஷி கணதரனுகிய பரமஸூத்ர கேவலியாகும்.

உபாத்தியாய பரமேஷ்டிகளாவர்: அங்காதி பரமாகம பாராவார பாரங்கதரும், ஜந்மாடவி ஸங்கடேப்ரஷ்ட மார்க்கனு ஜந்துநாம் ஸ

மார்க உபதேசகரும், யமநியம ஸ்வாத்தியாய தியாநபாவ தத்பரரு மாகிய பரமேஷ்டிகளாவர்.

ஸாது பரமேஷ்டிகளாவார்: துக்கஜலாசய மிருத்திய பாதாள வியஸந தரங்க வியாதி கிராக ஜந்மாவர்த்த ஸம்ஸார மஹார்ணவ சோஷண நிர்வாண ப்ராப்தி ஹேதுபூத ஸாதநஸாத்ய மார்காநுஷ் டானமேவ பூஷணமாகவுடைய பரம ஸம்யமிகளாவர்.

**ஆப்த லக்ஷணம் ஸமாப்தம்.**

---

## ஆகம லக்ஷணம்

ஆகமமென்பது முன் சொல்லப்பட்ட ஸர்வ ஜ்ஞவீதராக பரம புருஷனுல் உபதேசிக்கப்படுவதாகித் திரஷ்டேஷ்டப் பிரமாணங்க ளோடுமாறு கொள்ளாததாகி, ஸ்வர்காபவர்க ஸுகஸாதநமாகி, ஜீவாதி ஸகல பதார்த்தங்களையும், தர்மார்த்த காம மோக்ஷமென்னும புரு ஷார்த்தங்களையும் பிரதிபாதிப்பதாகி, கணதர பரமதேவர் முதலான ஆசார்ய பரம்பரையால் வருவதாகி, மித்தியை காந்த வாதிகளால் கல் பிக்கப்பட்ட தூஷண பாஸங்களால் அவிசலிதமாகி, ஸாமாந்யரூபத் தால் அநாத் யந்தமுமாகி, பரம ப்ரமாத்ரு ப்ரமாண, ப்ரமேய ப்ர மிதி ரூபத்ததாகி, ஸம்ஸார சரீரபோக நிர்வேக ஜநநமாகி, பரமாகமம், ஸித்தாந்தம், க்ரதாந்தம், வேதம், சாஸ்திரம், என்னும் இவை முத லான அநேக நாமதேய முடைத்தாகி, ஹேதுவாத முதலான அநேக பேதமுடைத்தாகி, அவிஸம்வாதியு முடைத்தாகிய திவ்ய சாஸ்திர மெனப்படும்.

...................பரமாகமம் மூன்று பிரகாரமாகும். அங்காகமம், பூர்வாகமம், ப்ரகீர்ணகமமென. அவற்றுள் அங்காகமமென்பது துவா தச விகல்பமாகும். ஆசாரம், ஸூத்ரக்ருதம், ஸ்தாநம், ஸமவாயம், வ்யாக்கியா பிரஜ்ஞப்தி, ஜ்ஞாத்ருதர்மகதா, உபாஸகாத்திய யனம், அந்தக்ருத் தசகம், அநுத்தரோ பபாதி கதசகம், ப்ரச்னவியாகரணம், விபாகஸூத்ரம், திருஷ்டிவாதமென.

பூர்வாகமம் சதுர்தச பேதமாகும்: உத்பாத பூர்வம், அக்ராய ணீயம், வீர்யாநு பிரவாதம், அஸ்தி நாஸ்தி ப்ரவாதம், ஜ்ஞாநப்ர வாதம், ஸத்ய ப்ரவாதம், ஆத்ம ப்ரவாதம், கர்ம ப்ரவாதம், பிரத்தி யாக்கியான நாமதேயம், வித்யாநு ப்ரவதாதம், கல்யாண நாமதேயம், ப்ராணவாயம், கிரியா விசாலம், லோகபிந்து ஸாரமென.

ப்ரகீர்ணகம் ஷோடச பிரகாரமாகும் ஸாமாயிகம், சதுர்விம்சதிஸ்தவம், வந்தனை, பிரதிக்கிரமணம், வைநயிகம் க்ருதிகர்மம், தசவைகாளிகம், அநுத்தராத்தியயனம், கல்ப்பிய வியவகாரம், கல்ப்யாகல்பியம், மஹாகல்ப்பியம், புண்டரீகம், மஹாபுண்டரீகம், பத்மம், மஹாபத்மம், சிங்யசீதிகை என.

அதவா பரமாகமம் நான்கு பேதமாகும்: பிரதமாநு யோகம், சரணாநுயோகம், கரணாநுயோகம், திரவ்யாநுயோகமென: அவற்றுள் பிரதமாநு யோகமென்பது தீர்த்தகரபரமதேவர், சக்ரதர பலதேவ வாஸுதேவ பிரதிவாஸுதேவாதி மஹாபுருஷருடைய முக்தி பர்யந்தமாகிய சரிதம் சொல்லும் மஹாபுராணமாகும். சரணாநுயோகமென்பது கிருஹஸ்தர், யதிகள் ஸமாசாரங்களைப் பிரபஞ்சிக்கும் பரமாகமஸிந்துவாகும். கரணாநுயோகமென்பது, பஞ்சாஸ்திகாயமாகிய நிஸ்ச்சய லோகத்தையும் நாளிகாபாஹ்யமும், அதோ லோகம், மத்தியம லோகம், ஊர்த்தவ லோகம், நரகலோகாதி ஸப்தலோக முதலாகிய வ்யவஹார லோகத்தையும், பிரகாசிக்கும் பிரவசனவாரிதியாகும். திரவ்யாநுயோகமெனபது, ஜீவபுத்கல தர்மாதர் மாகாசமாகிய மூலபதார்த்தங்களையும், காலபதார்த்தாதி உத்தரபதார்த்தங்களையும் பிரத்திய க்ஷாநுமாநாதியும், திரவிய க்ஷேத்திராதியுமாகிய லௌகிக பிரமாணங்களையும், அநுயோகாதியும், குணஸ்தாநாதியுமாகிய லோகோத்தர பிரமாணங்களையும் போதிக்கும் ஸித்தாந்தார்ணவமாகும்.

ஆகமலக்ஷணம் ஸமாப்தம்.

---

## பதார்த்தமென்பது

பகவத்ஸர்வஜ்ஞப்ரணீத பரமாகமப்ரஸித்தமாகி அக்கிருத்திம ஸ்வபாவத்ததாகும். உத்பத்தி ஸ்திதிவிநாச ரூபமும், அந்வய விபதிரேக தர்மவிசேஷாலங்க்ருதமும், அநாத்தியந்தமும், பிரத்தியக்ஷாதி பிரமாண பர்யாலோசிதமும் சேதநா சேதநமும், ஸப்ரதேசம் நிஷ்ப்ரதேசம், லோகாலோக மென்னும் பேதமுடைத்தாகி ஜீவாதிதத்வமெனப்படும், பஞ்சாஸ்திகாயம், ஷட்திரவ்யம், ஸப்ததத்வம் அஷ்டபதார்த்தம், நவபதார்த்தம் என்னும் பேதமுடையதாம்.

அவையாவன: ஜீவாஸ்திகாயம், புத்கலாஸ்திகாயம், தர்மாஸ்திகாயம், அதர்மாஸ்திகாயம் ஆகாசாஸ்திகாயமென இவ்வைந்தும்மூல

பதார்த்தமாகும். உத்பாதவ்யய த்ரௌவ்யமென்னும் உண்மை மாத்திரத்தாற் சொல்லப்படுமிடத்து, ஆச்ரய பதார்த்தமாகிய காலத்தோடு கூட்ட அவைதானே ஷட்திரவ்ய மென்று சொல்லப்படும். இவற்றது ஸமவாயம் லோகமென்று சொல்லப்படும். கேவலம் ஆகாச மாத்திரம் அலோகமென்று சொல்லப்படும்.

புத்கலபதார்த்தம் ஒழிந்தன வெல்லாம் அமூர்த்தங்களாகும். தத்ர ஜீவபதார்த்த மென்பது ஸாமர்த்தியா ந்வயமாகிய ஜ்ஞாநதரிசன கிரியாசைதந்யங்களது ஐக்கியத்தை ஸ்வரூபமாக உடைத்தாகி உத்பத்தி ஸ்திதிவிநாசாத் மகத்வமென்னும் அஸ்தித்வத்தை அதிஷ்டாநமாக வுடைத்தாகி கதஞ்சித் அமூர்த்தத்வம் அதிஸூக்ஷ்மத்வம், அவகஹநத்வம், அகுருலகுத்வதம், அஸங்கியாதப்ர தேசத்வம் என்னும் ஸ்வரூபங்களையும், பவ்யத்வம், அபவ்யத்வம், ஜீவத்வம், சரீரத்வம், பராச்ரயமூர்த்தித்வம், பந்தத்வம், பேதத்வம், அஸித்தத்வம், கார்யகாரணத்வம், கிராஹ்ய சரீர பரிமாணத்வம், திரவ்யத்வம், காயத்வம், ஏகத்வம், அநயத்வம், ஊர்த்தவ கதிஸ்வபாவத்வம், லோகாக்ரஸ்தாயித்வம் என்னும் பிண்டான்வயங்களையும், அவர்ணத்வம், அகந்தத்வம் அரஸத்வம், அஸ்பரிசத்வம், அசப்த்தத்வம், அபந்தத்வம், அபேதத்வம், அஸம்யோகத்வம், அவியோகத்வம், வியக்தாவியக்த ரஹிதத்வம், ப்ரவ்ருத்தி யந்வயகுணாதி அந்வய குணங்களையும் ஸாமர்த்யாந்வய குண பேத ஏகாதச வியதிரேக குணங்களையுடையதுமாகும். அவற்றுள், பவ்யத்வமென்பது மோக்ஷத்திற்கு யோக்யதையுடைமை, அபவ்யத்வமென்பது மோக்ஷத்திற்கு யோக்யதை இன்மை. ஜீவத்வமென்பது—தததமக்கு யோக்யமான த்ரவ்யப்ராணநுகளால் ஜீவித்தல்; சரீரத்வ மென்பது சரீரத்துடைய தன்மை; பராச்ரய மூர்த்தித்வ மென்பது—கர்மநோ கர்மமாகிய பர திரவியத்தை ஆச்ரித்து, மூர்த்தியான தன்மை; பந்தத்வ மென்பது, கர்மாதி பரதிரவியததோடு பந்திக்கும் தன்மை, பேதத்வ மென்பது—கர்மாதி பர திரவியத்தில் வேறுபடுதல்; அஸித்தத்வ மென்பது—ஸித்தத்வத்தைப்ராபியாமை; கார்ய காரணத்வ மென்பது—ஜீவந்தானே கர்மாதிகட்குக் கார்யமும காரணமுமாதல்; க்ராஹ்ய சரீர பரிணமத்வ மென்பது கிரகிக்கபட்ட சரீரவளவிற்றாந் தன்மை; திரவ்யத்வ மென்பது, பர்யாயங்களை யடையுந் தன்மை; காயத்வ மென்பது அந்வயவ்யதிரேக தர்மங்களை யடையுந்தன்மை; ஏகத்வ மென்பது—ஜீவந் அஸ்தித்வாதி

அநேக தர்மங்களோடு அபேதமாகை; அந்யத்வ மென்பது சரீராதி பாதிரவியங்களில் வேறு தன்மை; ஊர்த்வகதி ஸ்வபாவத்வ மென்பது—கர்மா பாவத்தில் ஊர்த்வகதி கமனஸ்வபாவ சக்தித்வமாகும்; லோகாக்ரஸ்தாயித்வ மென்பது—சகலகர்மவிப்ர முக்தியில், லோகாக்ரஸ்தாயியான தன்மை; அந்வய தர்ம மென்பது—அநுவிரத்தி ஸ்வபாவம்; வியதிரேக தர்ம மென்பது—வியாவிரத்தி ஸ்வபாவம். வியதிரேக தர்மம்—ஏகாதச விதம். அவையாவன—ஞான தர்சன கிரியா சைதன்யமென்னும் நான்கு குணமும், தனித்தனி, உபலப்தி, சம்ஸ்காரம், உபயோக மென்னும் சக்தித்ரயத்தோ டுறழ்ந்து, தர்சனத்துக்கு சம்ஸ்காரமில்லை யாதலால், ஞானோபலப்தி, ஞான சம்ஸ்காரம் ஞானோபயோகம், தர்சனோபலப்தி தர்சனோபயோகம் கிரயோபலப்தி கிரயோபயோகம், கிரயாசம்ஸ்காரம், சைதன்யோபலப்தி, சைதன்ய சம்ஸ்காரம், சைதன்யோப யோகம் எனவாம்; சக்தி திரயமாவன—ஸ்பாவம், உபலப்தி. சம்ஸ்காரமென; அவற்றுள் ஸ்பாவ மென்பது, திரவ்யஸ்வபாவ சக்தியாகும், அது பாலினைப்போல்வது, உபலப்தி என்பது, ஆவரணக்ஷயோப சமத்திற்றோன்றிய சக்தியாகும். அது வெண்ணெயில் நெய்போல்வது. சம்ஸ்காரமென்பது—படுப யோகத்தினால் வைக்கபட்ட சத்தி விசேஷம், அது இழுதில் நெய்போல்வது, இந்த சக்தி திரயத்தாலும் பிறக்கும் உபயோகமாவது சக்தி விகாசம், அது உருகின நெய்போல்வது, இபபேர்பட்ட குணத்தையுடைய தத்வம், ஜீவதிரவிய மாகும்; அது ஸம்ஸார ஜீவனும் முக்தி ஜீவனுமென இரண்டாம். அவற்றுள் ஸம்ஸார ஜீவனென்பது—அநாதி சந்தாந பிரவர்த்தமாநகர்ம் நோகர்மாதி பா திரவியங்களது சம்பர்க்கத்தால், தனது தன்மை பெறாது, இவற்றது நீக்கத்துத் தனது தன்மைபெற வற்றாகி, ப்ரதிஜந்மம் பெரஹிக்கப்பட்ட சரீர வளவிற்றாகி, சதுர்க்கதிகளிலும் தன்னாற் செய்யப்பட்ட புண்யபாபங்களின் விளைவில், சுகதுக்கங்களை அநுபவியாநிற்பதாகி நர, சுர, நாரகதிர்யக் கென்னும், சதுர்ப்பேதமுடைத் தாகி, ஜனன ஜராமரண, தூஷிதமாகி சகஜமும், ஆஹார்யமுமான மோஹங்களது உதயத்தாற்றானுந் தனது மல்லாத சரீராதி பாதிரவியங்களை, அஹங்கார மமகாரங்களால், அதிதிரடமாக—பரிகிரகித்தலாலும், சம்யகநேகாந்தாத்மகமான சகல வஸ்துக்களையும், அநித்தியாதி ஏகாந்தாத்மாவாக, அதஸ்மிம்ஸ்தத் கிரகணம் பண்ணுகையாலும், ராகத்வேஷாதி தோஷ தூஷிதமாகி, [illegible] சம்சார சக்ரத்துப் பரி

பிரமியா நின்ற அசுத்த ஜீவனாகும். இவனே பஹிராத்மா வென்று சொல்லப்படுவான். அநாதிசந்தான பிரவர்த்தமான காளிகா சம்பர்க்கத்தால், மலிநமான ஸ்வர்ண பாஷாணத்துக்கு, ரஸாயநாத் யௌஷதங்களது ஸம்யோகத்தால், க்ரமேண விசுத்தமான தனது தன்மை புண்டாமாற் போல முன்சொன்ன அசுத்த ஜீவனுக்கே காலலப்தியாதிகளது சந்நிதாநத்து குரு உபதேசாதிகள் காரணமாக தத்வஜ்ஞான முண்டாதலில் மித்யை காந்தவாதிகளான் துருபதேசஜநிதமான அதத்வாபி நிவேசமென்னும் ஆஹார்ய மோஹங்களதுடம், ராகத்வேஷமோஹமென்னும் தோஷங்களதுடம், சரீராதி பர திரவ்யங்களதுடம், விசுத்தஸ்வபாவனாகிய பரமாத்மாவினதுடம், பேதயதாத்மியங் கண்டு பரமவிவேகியாகி நின்ற ஜீவந் அந்தராத்மா வென்று சொல்லப்படும். இவனுக்கு சரீராதி பர திரவ்ய சம்பர்க்க ஸ்பாவமாகிய சம்சாரம் அத்யந்தம் கெடாமையில் அவனும் சம்சார ஜீவனேயாம். அனந்தரஞ் சொல்லப்பட்ட விவேகஜ்ஞாநாப்யாஸ பர்யந்தத்தில் அதற்கு விருத்தமான சம்சார ஸ்பாவம் நீங்க விசுத்தநாகி நின்ற ஜீவநுமுக்த ஜீவனென்று சொல்லப்படும். இவனே பரமாத்மா வெனப்படுவான். இவ்வண்ணம் சம்க்ஷேபித்துச் சொல்லப்பட்ட ஜீவதிரவ்யம் சேதனமென்று சொல்லப்படும். ஒழிந்தவைந்தும் அசேதநமாகும்.

புத்கலாஸ்தி காயமென்பது ச்வேதபீத, ஹரித, அருண, கிருஷ்ணமென்னும், பஞ்சவித வர்ணங்களும், சுகந்த, துர்கந்தமென்னும் த்விவித்கந்தங்களும், திக்த கடுக, கஷாய, ஆம்ல, மதுர, லவணமென்னும், ஷட்விதரஸங்களும், ஸ்நிக்தரூக்ஷ சீத, உஷ்ண, ம்ருது கடிந, குரு, லகுவென்னும் அஷ்டவித பரிசங்களும் என்னும் வர்ணகந்த ரஸஸ்பரிசங்களால் ஐகய லக்ஷணமாகி, பூரண களநஸ்வபாவத்ததாகி நின்ற மூர்த்த த்ரவ்யமாகும். அது அணுவென்றும் ஸ்கந்தமென்று மிருவகைப்படும். அவற்றுள் அணுவென்பது உதபத்தி, ஸ்திதி, விநாசலக்ஷணமான, அஸ்தித்வம், ஏகவர்ன, கந்தரஸங்களும், த்வி ஸ்பரிசங்களும் அதிசூக்ஷமத்வமும், வியக்தி ரூபத்தால், ஏகபிரதேசத்வமும், சக்தி ரூபத்தால் அநேகபிரதேசத்வமும், கர்த்ருத்வமுமென்னும் ஸ்வரூப முடைத்தாகி, அவிபாகியாகி, திரவ்யாதி பிரமாணமூல பிரபவமுமாகி நாநாவித ஸ்கந்த விகார பரிணம ஸாமர்த்திய முடைத்தாகி ஞாநதர்சன சைதன்யரகிதமாகி நின்ற வஸ்துவாகும். ஸ்கந்தமென்பது சொல்

ஸ்நிக்தரூக்ஷத்வ குணகுணி நிபந்தமாக லப்பட்ட பரமாணுக்களது பரஸ்பரானு பிரவேச லக்ஷணமாகி த்வி அணு ஸ்கந்தாதி அநேக பேதமுடைத்தாகி நின்ற ஸ்தூல திரவியமாகும். அது மூன்று வகைப் படும். ஸ்கந்தம் ஸ்கந்த தேசம் ஸ்கந்த பிரதேசமெனா; அவற்றுள் ஸ்கந்தமென்பது, வர்ணகந்த ரஸஸ்பரிச, சதுஷ்டயாபிவ்யக்தி யுடைத் தான, பிரத்வியும் கந்தாபிநி, வியக்திய மொழிந்த மூன்றினது அபிவியக்தியுமுடைய அப்புவும் ரஸகந்த நாபி வியக்திகளும் ஒழிந்த விரண்டினது அபிவியக்தியுமுடைய தேஜோவஸ்துவும், ஒழிந்த மூன்றினது அநபிவியக்தியும், ஸ்பரிசாபி வ்யக்தியுமுடைய வாயுவு மென்னும், பூத சதுஷ்டயமாகும். ஸ்கந்த தேசமென்பது - கர்மாஷ்ட மும் நொகர்ம திரவியமுமாகும்; ஸ்கநத பிரதேசமென்பது, கர்ம பரிணும யோக்யமன்றி அதிசூக்ஷ்மமாகிய ஸ்கந்த விசேஷமாகும். அதவா ஸ்கந்தம் - ஷட்விதமாகும்: சூக்ஷ்ம - சூக்ஷ்ம, சூக்ஷ்மம், சூக்ஷ்ம - ஸ்தூலம், ஸ்தூல - சூக்ஷ்மம், ஸ்தூலம, ஸ்தூல - ஸ்தூல மெனா. அவற்றுள்-கர்மாதி பரிணும யோக்யமன்றி அதிசூக்ஷ்மமாகிய ஸ்கந்த விசேஷம் சூக்ஷ்ம சூக்ஷ்மமாகும். கர்ம பரிணும யோக்யமான ஸ்கந்தம் சூக்ஷ்மமாகும்; நொகர்ம பரிணும யோக்யமான ஸ்கந்தம் சூக்ஷ்ம ஸ்தூலமாகும்; நொகர்ம வர்கணைகளில் ஸ்தூலமாகிய நொகர் மம் இந்திரிய விஷயமல்லாத ஸ்கந்தம் ஸ்தூல சூக்ஷ்மமாகும; சப்த கந்தத மொவாதாதி பரிணும யோக்யமான ஸ்கந்தம் ஸ்தூலமாகும். பிரத்வியாதி பரிணும யோக்யமான ஸ்கந்தம், ஸ்தூல ஸ்தூலமாகும். இவ்வண்ணம் அணுஸ்கந்த பேதாத்மகமான புத்கல திரவியமும் பிரத் யக்ஷாதி பிரமாண கோசரமாதலில் பரமார்த்த ஸத்தாகுமென்பது.

அஷ்டவித கர்மங்களும் நோகர்ம ஷட்கமும் பஞ்ச சரீரமும், சதுர்த்தசோபசயமும், பஞ்ச வஸ்துக்களும் பஞ்சேந்திரயங்களும் போக்யத்வயமும் உபகரண திரயமுமாகிய அஷ்டமூர்த்தி திரவ்யங் களும், புத்கல திரவியங்களாகும்; அவற்றுள், கர்மங்கள் மேற்சொல் லுதும்; நொகர்மங்களாவன—ஷிம்யா ணஷணம் தஹாமம் - ஹெவ்ஹ ஹெஹ்ரா நஜமஹணம், என்னு மிவ்வளவிற்ருகிய அநந்தம் அணுக் களது கூட்டமாகிய திரவிய சம்பத்தும், அங்குலியை அஸங்க் யாதங் கூறிட்ட ஒரு கூற்றளவதாக ஸ்நிக்தரூக்ஷ குணங்களாற் செறியபந்தித்தலென்னும் க்ஷேத்ரசம்பத்தும், வர்ணுதி குணங் களோடு கூடஸ்பாவோபலப்தி சம்ஸ்கார மென்னும் திரிசக்தி களி னீங்காத பாவசம்பத்தும் இந்தலோகமொன்ருக இவ்வண்ணம்

அசங்கியாதலோகங்களை பிரதேசம் பிரதேசமாகப் பார்த்த லெத்தனை பிரதேசமுள அத்துணைப் பிரதேசவளவிற்றுகிய காலமிந்தவர்க்ணை யழியாது நிற்றலென்னு முத்தமகாலமும், ஒரு ஸமயம் நின்றழியு மென்னும் ஜகந்யகால ஸமபத்துமுடைத்தாகி, ஸர்வஜகத்துமொரு பிரதேச மொழியாமற் பிறங்கினவர்க்கணுதிரவியமாகும். அது, ஆஹாரவர்கணு, பஞ்சேந்திரியவர்கணு, காயவர்கணு, உச்வாசவர்கணு, வாக்வர்க்கணு, மனோவர்கணு, என்னுமறுவகைப்படும். அவற்றுள் ஆஹாரவர்கணை என்பது, பர்யாப்தநாமகர்மோதயத்தால் ஆத்மபிரதேசத்து ஆஸ்ரவியாநின்ற சரீரேந்திரியாந்தக் கரணவர்கணைகள் ததாப்ர ஸ்ருத்தமான மனோவாக்காய யொகங்களில் யாதானுமொருயோகம் காரணமாக, நோகர்ம பரியாயமடைவிக்கத் தனக்கும், ஒழிநத நொகர்மங்கட்கும் ஆத்மாவோடு பந்ததனைச் செய்வதாகும்; காயவர்கணை யென்பது—கிராஹ்யசரீரதிரய பிராயோக்யவர்கணைகள், ஸ்வஸ்வசரீரநாமகர்மோதயத்தால் ஆத்மபிரதேசதது ஆஸ்ரவித்த ஸ்வஸ்வ பர்யாப்தி நாமகர்மோதயத்தால் பர்யாப்தியினையடைவிக்கப் பட்டு, அங்கோபாங்கநாமகர்மோதயத்தால், கூருதமான சம்ஸ்தானவ்யவஸ்த்தைகளையுடையவர்ணகந்த ரஸஸ்பர்சநாமாதிகளால் கூருதமானவர்ணுதிகளையுடையவாகிய காயத்து யோகாந்தக் கரண, மதிஞாந ஸ்ருதஞாநங்களை யாக்குவதான, வர்கணைகளாகும். இந்திரியவர்கணை யெனபது—ஸ்பர்ச நெந்திரிய, ரஸநேந்திரிய, பிராணேந்திரய, சக்ஷுஷேந்திரிய, ஸ்ரோத்திரேநதிரிய, பர்யாப்திநாமகர்மோதயத்தால், ஆத்மபிரதேசத்துப் பிரவேசியா நின்றவர்கணைகள், ததாபிரவர்த்தமான யோகத்தால் ஸ்வீக்ரதமாகிய நொகர்மபர்யாயமடைவிக்கபபட்டு முன் சொன்ன ஆகாரவர்கணை, பிரத்யயத்தால், ஆத்மபிரதேசத்து பநதிக்கப்பட்டு, இந்திரிய நிகழ்ச்சியாலெழாநின்ற, அர்த்த வியஞ்ஜநாவக்ரக ஞாநங்களுக்கு நிர்வ்ரத்தக்கமும், ஆஸ்ரயமுமானவர்க்கணைகளாகும்.

உச்வாஸ வர்கணையென்பது, உச்வாஸ நாமகர்மொதயத்தால், ஆத்மபிரதேசத்து, ஆஸ்ரவியா நின்றவர்க்கணைகள் யாதானுமொரு யோகத்தால், நொகர்மபர்யாய மடைவிக்கப்பட்டு ஆஹாரவர்க்கணா பிரத்தியயத்தால் ஆத்மபிரதேசத்து பந்திக்கப் பட்டு, பர்யாப்தி கர்மோதயத்தால் பர்யாப்தியினை யடைவிக்கப்பட்டு, உச்வாஸ நிச்வாஸங்களை யாக்குவதானவர்கணையாகும்.

வாக்வர்க்கணையென்பது, சுஸ்வரதுஸ்வரநாமகர்மோதயத்தால் ஆத்மபிரதேசத்து பிரவேசியா நின்றவர்கணைகள், தத்ர பிரவர்த்தமான யோகத்தால், நொகர்மபர்யாய மடைவிக்கப்பட்டு பர்யாப்திநாம கர்மோதயத்தால் பர்யாப்தியினை யடைவிக்கப்பட்டு, ஸுஸ்வரதுஸ்வரங்களான வாக்யோகத்தையும், வாக்வநதக்கரணமதிஞாநத்தினையும் ஸ்ருதஞாநத்தினையு மாக்குவதான வர்க்கணைகளாகும். மநோவர்க்கணை யென்பது—ஸம்ஜ்ஞபஞ்சேந்திரிய ஜாதிநாம கர்மோதயத்தால், ஆத்மபிரதேசத்து ப்ரவேசியாநின்றவர்கணைகள், நொகர்மபர்யாய மடைவிக்கப்பட்டு ஆஹாரவர்க்கணு பிரத்யயத்தால், ஆத்மாவோடு பந்திக்கப்பட்டு ஆத்மபிரதேச பரிஸ்பந்தத்தையும் அநதக்கரணமதிஞான ச்ருதஞானங்களையு மாக்குவதான வர்க்கணைகளாகும். இவையெல்லா மேககாலத்து, ஆஸ்ரவிக்கத்தொடங்கிச் சொன்ன முறையே பர்யாப்தங்களாகிப் பின்பு உதியாநின்ற ஞாநத்தையாக்கும். ஆஸ்ரவிக்குங்காலத்துத் துளக்கத்தையாக்கும்.

பஞ்சசரீரமாவன—ஔதாரிகசரீரம், வைக்ரியிக சரீரம், ஆஹாரக சரீரம், தைஜஸ சரீரம், கார்மண சரீரமென; அவற்றுள் தைஜஸகார்மணமென்னு மிரண்டுசரீரமும் அநாதிசரீரமாம். ஒழிந்தமூன்றும், க்ராஹ்ய சரீரமாம். ஸ்தூலமாகிய சரீரவர்க்கணைகளான் முடிந்தது, ஔதாரிகசரீரமாம். அது மநுஷ்யர்க்கும் திர்யக்குகளுக்கு முண்டாகுவது. வைக்ரியிகசரீரம் அணுமாதயஷ்ட குணங்கட்கு ஸமர்த்தராகிய தேவநாரகர்கட்குண்டாகுவது. ஆஹாரகசரீரமும் லப்திதைஜஸ சரீரமும் ஜிநபிராப்தராகிய ரிஷிகளுக்கு தபோபலத்தாலுண்டாகும். அவற்றுள், ஆஹாரகசரீரம் தன்கையாலொருமுழவளவிற்றாகி தவளமாகி தனது மூர்த்தாவி னின்றும் புறபட்டு கேவலிகளெழுந்திருந்த விடம்புக்கு சந்தேகங் கேட்டுவருவதாகும். மற்றும், அக்ரத்திமசைத்யாலயம் நமஸ்கரிக்க வேண்டினும் ஆஹாரகசரீரத்தாற் சென்றுவர அந்தர்முஹூர்த்த காலம் நிர்ப்பதாகும். தைஜஸசரீரம்—இருவகைப்படும். லப்திதைஜஸம், அலப்திதைஜஸமென. அவற்றுள் லப்தி தைஜஸமிருவகைப்படும். சுபமும், அசுபமுமென. அவற்றுள்—சுப தைஜஸம் ஒருவனை நோக்கி அநுக்கிரகம் பண்ணினவிடத்துத் தனது வலதுதோளாற் புறப்பட்டு நிலாப்போன்று சீதளமாகி, தவளவர்ணத்ததாகித் தன்னால் அநுக்கிரகிக்கப்பட்டவனைச்சூழப் பன்னிரண்டு யோஜனை பிரமாணம் வியாபித்து சர்வரையும் சந்தோஷிப்பிக்கும். அவனொருவனைக் கோபிக்கின் அவ்வண்ணம் பன்னிரண்டு யோஜனைப்

பிரமாணம் குக்குடகூடாகாரத்தால் அக்நிமயமாகி வாமபாஹுவினுல் புறப்பட்டு தகித்து மீண்டு வந்து தன்னையும் தகித்திடும்; அவனும் தத்க்ஷணத்தே நரகம் பிரவேசிக்கச் செய்வது அசுபதைஜஸமாகும். அலப்திதைஜஸமும் கார்மணசரீரமும் ரிஜுவிக்ரக கதியாலே ஜீவங்களை மத்யாந்தரத்தேறக் கொண்டுபோவனவாம். இச்சொன்ன பஞ்ச சரீரமும் ஒன்றுக்கொன்று சூக்ஷ்மத்வமும் திரவிய பகுத்வமுமுடைய.

சதுர்த்தசோபசயமாவன—ரஸ, ருதிர, மாம்ஸ, மேதா, அஸ்தி, மஜ்ஜா, சுக்லமென்னும் ஸப்ததாதுக்களும், ஸிரெரசர்ம, குலோம், விழுக்கு, வஸெ, ஆந்தரகம் என்னும் உபதாதுவும் உஷ்ராக்நி, வாத, பித்த, ச்லேஷ்ம, மல, உபமலம், இவையுமாம்.

பஞ்சவஸ்துக்களாவன, அஹிம்சா, பரிணமத்துக்கும், சத்ய பரிணமத்துக்கும், அஸ்தேய பரிணமத்துக்கும், பிரம்மசர்ய பரிணமத்துக்கும், அபரிக்ரக பரிணமததுக்கும, காரணமாகிய சுபவஸ்துவும், ஹிம்ஸாதி ஐவகைப்பட்ட பரிணமங்கட்குக் காரணமாகிய அசுபவஸ்துவுமாகும், பஞ்சேந்திரய விஷயமாவன வர்ண, கந்த, ரஸ, ஸ்பர்ச, சப்தங்களாகும்; போக்யமென்பது, போகோப போகங்களாகும்; உபகரணம், திரிவிதம், தர்மோபகரணமாகிய புஸ்தக பிச்சாதியும்; அர்த்தோபகரணமாகிய அளப்பன, நிறுப்பனவும்; காமோபகரணமாகிய, தாம்பூல முதலாயினவுமாகும். புத்கலத்துக்கு விகாரம் திரவிதம், குணவிகாரம், திரவிய விகாரம் கிரியாவிகாரம் என; அவற்றுள் திரவியவிகாரம் சொல்லப்பட்டது; குணவிகாரம் வர்ணதி குணங்களொன்றென்றாகத் திரிதல்; கிரியா விகாரம், கமநாகமநஸ்திதி பேதமாகும்.

தர்மாஸ்திகாய மென்பது—ஜலசரங்களது கமநத்துக்கு ஜலம், போல, கதிபரிணமொநகமான ஜீவபுத்கலங்கட்கு கமநாஸ்ரய காரணமாகி, அஸஹசாரியாகி பரமாணு பிரதேச வளவிற்றன, அசங்கியாத பிரதேசமுடைத்தாகி, அஸ்தித்வம், அதிசூக்ஷ்மத்வம், அவமஹநத்வம், அமூர்த்தத்வம், அகுருலகுத்வம் என்னும் ஸ்வரூப விசேஷமுடைத்தாகி, கதஞ்சிந்நித்யைகவ்யாபி ரூபமாகி, திரிகாலத்துள்ளுமுளதாகி, அத்யந்த மசேதனமாகி, பகவதர்ஹத்பமேச்வரவசந பிரமாணியத்தால் அறியப்படுவதாகிய பதார்த்த விசேஷமாகும்.

அதர்மாஸ்திகாயமென்பது ஸ்திதிபரிணதமான ஜீவபுத்கல பதார்த்தங்கட்கு தரணீ தலம் போல ஸ்திதிவிசேஷாஸ்ரய காரணமாகி

முன்புபோல தர்மாஸ்திகாயங்களுக்குச் சொன்ன சர்வகுணங்களு முடைத்தாகிய பதார்த்த விசேஷமாகும். கமநகாரணம், தர்மாஸ்தி; ஸ்திதி காரணம், அதர்மாஸ்தி. இவை இல்லையாகில், அநந்தா நந்த, பிரதேசியாகிய ஆகாச பிரதேசத்து ஜீவபுத்கலங்கள் யதாயதகமன முண்டாளுல் அணுஸ்கந்தமாதலும், ஸ்கந்தங்கள் ஜீவநுகளோடு பந்தித்தலும் லோகாலோக விபாகமும் மோக்ஷமுமில்லையாகும். காரணு பாவே கார்யாபாவா: என்பதனுல் சர்வ சூன்ய பிரசங்கமாம். முன் சொன்ன அஸஹசாரியாமாறு:—காரண மிரண்டு வகைப்படும்: ஸ்வரூபஸாதனமும் அஸ்வரூபஸாதநமுமென; ஸ்வரூபஸாதனமாகிய முதற் காரணம் திரவ்யம தானேயாம், கடாதிகார்யங்கட்கு முதற் காரணம் மிருத்தாளுற்போல. அஸ்வரூபஸாதனமாகிய துணைக் காரண மிரண்டு வகைப்படும்: நிவர்த்தகசாதநமும், ஆஸ்ரயஸாதனமுமென. நிவர்த்தகமாய் முயன்று முடிக்கும் காரணம், குலாலஹஸ்த தண்ட சக்ரசீவராதிபோல வென்க. ஆஸ்ரயஸாதநமாகி அணைந்து முடிக்குங் காரணம், சக்கிரத்தின் கீழ்க்கிடக்குங்கல்லாம்; அதுபோல, தர்மா தர்மாஸ்தி காயங்கள், கமநா கமநத்துக்கு ஆஸ்ரயகாரணமாம். கமநஸ்திதிகாரணமாகிய, தர்மா தர்மாஸ்திகாயங்கள், ஏகத்ரவ்ய கார்யமான கமநாகமந கிரியா விகாரங்கட்கு அவிரோதே நகாரணம, பக்ஷியது சிறகும், வாநஸ்ய ஸநஸ்டு திக்குப்போல.

ஆகாசா ஸ்திகாயமென்பது:—ஜீவாதி பதார்த்தங்கட்கு அவகாசதாநலக்ஷணத்ததாகி - அஸ்திந்வாத்யநேக குணமுடைத்தாகி, அநந்தாநந்தபிரதேசமாகி அலோகாகாசம், லோகாகாசமென்னும், த்விப்ரகாரமுடைத்தாகி ஸ்வதமேவநித்யாவஸ்திதவியாபிரூபமாகிய தத்வ விசேஷமாகும். தர்மாஸ்தி அதர்மாஸ்தி, ஆகாசாஸ்திகளுக்கு, திரவ்ய விநாசமும், கிரியாவிகாரமுமில்லை; குணவிகாரமேயுளதாகும். காலமென்பது, வியவஹாரகாலம். அந்த வியவஹாரகாலம்—திரவியகாலம், முக்யகாலத்தில் பர்யாயம், விகார விகாரி ஸஹஸ்திநியில் லக்ஷிக்கப்படுவதாகி, அஸ்திக்வா தியநேக குணமுடைத்தன்றுகி, ஸமயாவளி கெமுதலாகிய, அநேக பரியாயமுடைத்தாகிய, வஸ்து விசேஷமாகும். ஸமயாதிபர்யாயமாவது—ஸர்வஜ்ஞபரமவீதராகனது, பரமகேவலஜ்ஞாநத்தாலும், விபஜிக்கமுடியாதாகி ஏகபிரதேசமான பரமாணுப்புடைபெயருமளவிற்ருகிய காலவிசேஷம், ஸமயமாம்; அஸங்கியாத சமயங் கொண்டது, ஆவளிகை; ஆவளிகெ அஸங்கியாதங் கொண்டது,

உச்வாஸ பிராணநு, பிராணங் ஏழுகொண்டது ஸ்தோகம், ஸ்தோகம் ஏழுகொண்டது, லவம்,லவம் 38½ கொண்டது நாடிகை. 2 நாடிகை=ஒரு முகூர்த்தம். 30 முகூர்த்தம்=1திவஸம். 15 திவஸம்=1 பக்ஷம்; 2 பக்ஷம்=1 மாசம். 2 மாஸம்=1 ருது. 3 ருது=1 அயனம். 2 அயனம்=ஸம்வத்ஸரம். சம்வத்சரம் எண்பத்துநான்கு நூறாயிரங் கொண்டது=பூர்வாங்கம், பூர்வாங்கம் அவ்வளவு கொண்டது=பூர்வம், பூர்வாங்கம், நளதாங்கம, நளதம், குமுதாங்கம், குமுதம், பத்மாங்கம், பத்மம், நளிநாங்கம், நளிநம், அமலாங்கம், அமலம், கூட்டியாங்கம், கூடிகம், அட்டாங்கம், அட்டம், அம்மமாங்கம, அம்மம், விஸ்மயம், அதிவிஸ்மயம, லதா, மஹாலதா, சிர: பிரபங்கமென்னுமிவை யொன்றுக்கொன்று பூர்வாங்கம் தொடங்கி எண்பத்துநான்கு நூறாயிரத்தாற் பெருக்கப்பட்டன: பல்யோபம் ஸாகரோபம் என்பனயாவையெனில்: அவற்றுள், பல்யோபம் திரிவிதம்—வியவஹாரபல்லம்உத்தாரபல்லம். அத்தாரபல்லமென. அவற்றுள் வ்யவஹாரபல்லமென்பது ஒருயோஜனை ஆழமும் அகலமும் நீளமுமாக செம்பாற் பண்ணபட்ட குழியிலே வெண்ணய் தின்று வளர்ந்த வெழாம்படிகால வளர்ந்த பள்ளையாட்டின் மயிரை சமசதுரமாக நறுக்கி, அவற்றாற் குழியைக் கூறுகொண்டு நிறைத்தமயிரை நூற்றியாண்டுக்கு—ஒரு மயிராக வாங்க, இப்படியே மயிரை யெல்லாம் வாங்கின கால ஸம்வெர்ஷ, வ்யஹாரபல்லமாகும்; இம்மயிரொன்றை அஸாங்கியாதங் கோடியாண்டை யொவ்வொரு சமயசமயமாகப் பார்த்தாலெத்தனை சமயமுண்டு, அத்தனை சமயததுக்குமத்தனை கூறிவிட்டு இவ்வண்ணமெல்லா மயிரையுங் கூறுபடுத்து குழி நிறைத்தால், உத்தார பல்லமாகும்; அப்பல்லம் பத்துகோடா கோடி கொண்டது, அத்தார பல்லமாகும்; அது பத்துகோடாகோடி கொண்டது, அத்தாரஸாகரோபமமாகும். இப்பெற்றி, அஸ்திகாயமென்றும், திரவியமென்றும், பெயருடைய பதார்த்த ஸ்வரூபம் ஸாங்கிரகரூபத்தால் வியக்யானம் செய்யப்பட்டது. இவற்றுள், பரஸ்பரம் யோகவிசேஷத்தாலும், கேவலம் ஸ்வரூபமாக்குதலாலு முண்டான பர்யாய விசேஷங்கள், உத்தர பதார்த்தமாகும். அவை ஆஸ்ரவாதிகளும், ஆப்தாதிகளுமாகும்; ஆஸ்ரவாதிகளை, ஜீவா ஜீவனென்னு மூல பதார்த்தங்களோடு கூட்ட ஸப்த தத்வமென்னும், அவற்றோடு புண்ய பாபங்களைக் கூட்ட நவ பதார்த்தமென்று மாகும். அவற்றுள்

ஸப்த தத்வமென்பது ஜீவா ஜீவாஸ்ரவபந்த ஸம்வரநிர்ஜராமோக்ஷமெனவாம். நவ பதார்த்தமென்பது, ஜீவா ஜீவ புண்ணிய பாபாஸ்ரவ ஸம்வரநிர்ஜராபந்த மோக்ஷமெனவாம். அவற்றுள் ஜீவனென்பது, முன் சொன்ன லக்ஷணமுடைத்தாகி, பஞ்சேந்திரியங்களும், மனோ, வாக்குக் காயங்களும், ஆயுஷ்யமும், உச்வாஸ நிச்வாசமுமென்னும் உசுபிராணநுகளால் ஜீவியாநின்றதும், ஜீவிக்கக் கடவதும், ஜீவித்து விட்டதென்னும் உத்பத்தியால் ஜீவனென்று நாமதேயமுடைய சேதன திரவியமாகும்.

ஜீவநுஸம்ஸாரா அவஸ்தையினாலு வகைப்படும்; தேவநு, மனுஷ்யன், திர்யக்கு, நாரகநு என; தத்ர தேவர்கள், சதுர் விகல்பமாவர். பவநவ்யந்தர, ஜோதிஷ்க, கல்பவாஸிகளென. இவர்கள் இந்திர, சாமாநிக, திராயதிரம்ஸ, பாரிஷத, ஆத்மரக்ஷ, லோகபால, ஆநீக, பிரக்கீர்ணக, ஆபியோக்ய, கில்பிஷிகரெனப் பத்துவகைப் படுவர். அவருள், இந்திரர், ருஜஸமானர்; ஸாமாநிகர், ராஜகுரு ஸமானர்; திரயாதிரம்ஸர், மந்திரிசமாநர்; பாரிஷதர், பரிஜன சமானர்; ஆத்மரக்ஷகர், பிராதிஹார ஸமானர்; லோகபாலர், தேசாதிகார ஸமானர்; ஆநிகர், சேனை சமாநர்; பிரக்கீர்ணகர், லௌகிக சமாநர், ஆபியோக்யர், வாஹன ஸமானர்; கில்பிஷிகர், வாத்யகார ஸமாநர்; வியந்தரருக்கும் ஜ்யோதிஷ்கருக்கும், திராயதிரம்சரும் லோகபாலருமில்லை.

பவநர்,—தசவிதராவர். அசுரகுமாரர், நாககுமாரர், வித்யுத்குமாரர், ஸ்வர்ணகுமாரர், அக்னிகுமாரர், வாதகுமாரர், ஸ்தநிதகுமாரர், உததிகுமாரர், தீபகுமாரர், திக்குகுமாரரென. வியந்தரர் அஷ்டவிதராவர்: கின்னர, கிம்புருஷ, மருட, காந்தர்வ, யக்ஷ, ராக்ஷஸ, பூத, பிசாசரென. ஜ்யோதிஷ்கர் பஞ்சவிதராவர்: சந்திர, ஆதித்ய, க்ரஹ, நக்ஷத்திர, தாரகாகணங்களென. இவர்கள் மநுஷ்ய லோகதது மஹா மேருவினை பிரதக்ஷிணமாக வருவார்கள். மனுஷ்யலோகமான விரண்டரை த்வீபத்துக்கும ஸீமெயாகிக் கிடந்த மாநுஷோத்தர பர்வதத்துக்குப் புறம்பு அசங்கியாதத்வீப சமுத்திரங்கள். ஆகாச தலத்து அவஸ்திதராவார்கள். கல்பவாசிகள், ஷோடசவிதர்: ஸௌதர்ம, ஈசான, சநத்குமார, மஹேந்திர, பிரம, பிரம்மோத்தர, லாந்தவ, காபிஷ்ட, சுக்கிர, மஹாசுக்கிர, சதார, சஹஸ்ரார, ஆநத, பிராணத, ஆரண, அச்யுதரென. இதன்மேல் நவக்ரைவேயகம், நவாநுதிசை, பஞ்சாநுத்தரமென்னும் கல்பாதீதமாகும்.

அவை, ஹேஷ்டிம ஹேஷ்டிம, ஹேஷ்டிம மத்தியம, ஹேஷ்டிம உப ரிம, மத்தியம ஹேஷ்டிம, மத்தியம மத்தியம, மத்தியம உபரிம, உப ரிம ஹேஷ்டிம, உபரிம மத்தியம, உபரிம உபரிம எனவும்; அச்சா, கச்சா, வஜ்ரா, வைரோசனு, அச்சாமாலினி, கச்சாமாலினி, வஜ்ரா மாலினி, வைரோசனுமாலினி, ஆதித்திய விமானம், எனவும்; விஜயா வைஜயந்தா, அபராஜிதா, சர்வார்த்த ஸித்தி எனவுமாம். இவற் றில் வஸிக்கும் தேவர்கள் அஹமிந்திர தேவராவார்; மநுஷ்யர் த்விவிகல்பர் ஸம்மூர்ச்சநர், கர்ப்பஜரென. தத்திரஸம்முச்சநராவார் மநுஷ்யா யுஷ்ய மதிநாம கர்மோதயத்தால்—மலமலிஸ வநிதாயோ நியாதி பிரதேசங்களுள் - ஸம்மூர்ச்சித்துத் தோன்றுகின்ற சூக்ஷ்ம மநுஷ்யராவர். த்வீந்திரிய ஜீவனுக்கு ஸ்பர்ச நேந்திரியமும் ரஸநேந் திரியமும் காயவந்தக்கரணமும் வாஙுஙகரணமும் உச்வாசமும்ஆயுஷ் யமுமாகிய ஆறுபிராணன்களாம். திரீந்திரிய ஜீவனுக்கு கிராணேந்திரிய மேற ஏழு பிராணன்களாம். சதுரீந்திரிய ஜீவனுக்கு ஸ்பர்சநேந்திரிய மும் கிராணேந்திரியமும் நயநேந்திரியமும்,காயவந்தகரணமும், வாஙு ஙகரணமும், உச்வாசமும், ஆஷ்யமுமென்னும் எட்டு பிராணநு களாம். அஸஜ்ஞிபஞ்சேந்திரிய ஜீவனுக்கு மநோவந்தகரண மொழி ந்த ஒன்பது பிராணங்களாம். ஸஜ்ஞி பஞ்சேந்திரிய ஜீவனுக்கு ஊசபிரா ணநுகளுமாம். ஏகேந்திரிய ஜீவனுக்கு ஸ்பரிச நேந்திரியமும் காயவந் தகரணமும், உச்வாசமும் ஆயுஷ்யமுமென்னு நாலுபிராணநுகளாம். த்வீந்திரியம் நத்தை, சூக்திகை, சங்கு, பலகறை, ஏரல், நாங்கூழ் முதலாயின. திரீந்திரியம் உண்ணி, முகடு, அட்டை, எறும்பு, பேன் முதலாயின. சதுரீந்திரியம் வண்டு, தும்பி முதலாயின. பஞ்சேந் திரியம் பக்ஷிகள், சதுஷ்பாதங்கள், மஸ்யங்கள், பாம்புகள், ஆமை முதலாயின. ஏகேந்திரியம் - பாதரம், சூக்ஷ்மமென இருவகைப் படும். அவற்றுள் பாதர ஏகேந்திரியம் வநஸ்பத்யாதிகள் : ஸூக்ஷ்ம கேந்திரியம் பிரத்விகாயம், அப்புகாயம், தேஜஸ்காயம், வாதகாயமென விவைகள். பாதர சூக்ஷ்ம ஏகேந்திரியங்கள் லோகத் தெவ்விடத்தும் பிறக்கும். பஞ்சேந்திரியம் நாளி கெக்குள்ளே பிறக்கும். த்வீந்திரிய திரீந்திய, சதுரீந்திரிய ஜீவங்கள், ஸ்வயம்பூர மணத்வீபத்திலும், ஜம்பூதாதகிவுஷ்கார்த்தமாகிய இரண்டரை த்வீபத்திலும், லவண, காளோதக, ஸ்வயம்புரமண ஸமுத்திரத்திலும் பிறக்கும். மாநுஷோத்தர பர்வதத்துக்குப் புறம்பும் - ஸ்வயம்புரமண த்வீப

பர்வதத்துக்குள்ளும், அஸங்க்யாத த்வீபஸாகரங்களில் விகலேந் திரியங்கள் ஜநியா. மநுஷ்யர் இரண்டரை த்வீபத்துக்குள் பிறப் பர். நரகம் ஸப்தவிதம் - ரத்னப் பிரபை, சர்க்கரா பிரபை, வாலுகா பிரபை, பங்கபிரபை, தூமபிரபை, தமபிரபை, தமஸ்தமபிரபையென. இவற்றுள் ஹிம்ஸாதி மஹாபாதகங்களால் மஹாபாபம்செய்து ஜநித்து மஹா துக்க மநுபவியாநின்ற ஜீவங்கள் நாரகராவர். இவ்வண்ணம் ஜீவ பதார்த்தத்தினது பேத பிரபஞ்சம் பரமாகமத்துள் கண்டு கொள்க. ஜீவ பதார்த்த பேதம் முன் சொல்லப்பட்டது.

இனி, அஜீவ பதார்த்த பேதம் சொல்லப்படும். புண்யபதார்த்த மென்பது த்விவிதம்: திரவ்ய புண்யம் பாவபுண்யமென, அவற்றுள் திரவ்ய புண்யமென்பது காருண்யாதி சுபபரிணும பரிணமித புத்கல திரவியம். பாவபுண்யம் ஸப்தவிதம்: காருண்யம், பிரஸந்நபாவம், குணுநுராகம், பிரசஸ்த பிரவர்த்தி, தபோநுயோகம், ஜ்ஞாநபிர வர்த்தி, த்யாந பிரவர்த்தியென. அவற்றுள் காருண்யமென்பது வருந்தா நின்ற பிராணிகட்கு கிருபை பண்ணுதல்; பிரஸந்ந பாவ மென்பது - கஷாயங்களது மந்தோதயத்துப் பிறக்கும் சித்த பிர ஸாதம்; குணுநுராகமென்பது ரத்ன த்ரயமாகிய குணங்களை யுடை யார் பக்கலுண்டாகிய அநுராகம்; பிரசஸ்த பிரவர்த்தியென்பது. வ்ரத சீலங்களை யனுஷ்டித்தல்; தபோநுயோக மென்பது தனக்கு யோக்யமான தபஸ்ஸைப் பண்ணுதல்; பண்ணமாட்டாதார் தபஸ்ஸிநு மேல் சித்தம் நிகழ்த்தல்; ஜ்ஞாநபிரவர்த்தி யென்பது வாசநா பிரச்நா அநுப்ரேக்ஷா ஆம்நாய தர்மோப தேசமாகிய பஞ்சவித ஸ்வாத்யாயங் களோடு கூடுதல்; த்யாந பிரவர்த்தி யென்பது ஆர்த்த ரௌத்ரத்யா நங்களை விட்டு அநுப்ரேக்ஷா தர்ம சுக்ல த்யானங்களை சிந்தித்தல். புண்யம் திரிவிதம்—தர்மாநுபந்தி புண்யம், அதர்மாநுபந்தி புண்யம, நிரநுபந்தி புண்யமென. அவற்றுள் தர்மாநுபந்தி புண்யமென்பது- ஆஜ்ஞாதிகமஸம்யக்திருஷ்டிகளது விசிஷ்ட காருண்யாதி பரிணுமபரிண மித மாகிய பரமபஞ்ச கல்யாண நிர்வாண பிராபண காரணமாகிய கர்மஸ்கந்தமாகும். அதர்மாநு பந்தி புண்யமென்பது மித்யா திருஷ்டி களது அவிசிஷ்ட கிருபாதி பரிணும நிபந்தந புண்யம் வாசுதேவ பிரதி வாசுதேவத்வ முதலாகிய காமபோக ஸம்பாதநேந அநந்த துக்க பரம்பரா நிமித்தமாகிய கர்மஸ்கந்த மாகும். நிரனுபந்தி புண்ய மென்பது—சரம சரீரபந்தந மாகிய வவ்விரண்டு புண்யமும் பரம சுக் லத்யான தஹநதாஹ்யதையால் அநுபந்தியாது கெடும் கர்மஸ்கந்த

மாகும். பாப பதார்த்தம் த்விவிதம்—திரவிய பாபம் பாவபாபமென. அவற்றுள், திரவ்ய பாபமாவது அகாருண்யாதி பரிணும பரிணமித புத்கல திரவிய மாகும். பாவபாப மென்பது-அகாருண்யம் சுவ்யஸன பாவம் அகுணுநுராகம் அப்பிரசஸ்த பிரவர்த்தி அதபோறு யோகம் அஜ்ஞாநவ்ரவர்த்தி, அபஜ்ஞாநமெனவாம்.

ஆஸ்ரவ பதார்த்த மென்பது—அஷ்டவித கர்மங்களும் ஆத்ம பிரதேசத்து பிரவேசிததற்குக் காரணமாகிய, மித்யாதவாசம்யம கஷாய யோகமாகிய ஜீவனது பரிணும விசேஷமாகும். அவற்றுள், மநோ வாக்காய வர்கணைகளால் நிர்வர்த்திதமான ஆத்ம பிரதேச பரிஸ்பந்தத்தால் ஆதாநம் பண்ணப்பட்ட கர்மப் பிராயோக்யமானவர் கணைகளை ஜ்ஞாநாவரணுதி விகல்பமுடைத்தான கர்ம பர்யாயத்தை யடைவிக்கும் யோகம் ஆஸ்ரவ காரணமாகும். ஒழிந்த மித்யாத்வா திகள்—அந்தஜ் ஞாநாவரணுதி கர்மபிரக்ருதிகளை ஸ்தித்யநு ருபபாகத் தால், ஆதம பிரதேசத்தோடு பநதத்தைச் செய்யும் பிரதயயமாகும். தத்ரசுபாசுப பரிணுமம் புண்ய பாபாஸ்ரவமாம். தத்ரஞாநா வரணீய மும் தர்சனுவரணீயமும் ஆஸ்ரவத்திற்குக் காரணமாகிய பரிணும விசேஷங்களாவன. பரமாநந்த பிராப்த ஹேதுவாகிய—அநேகாந் தாதம தத்வ விஷயமான ஸம்யக்ஞாந விசேஷத்தினைப் பரோபகார நிரதனுகிய பகவதர்ஹத் பிரணீத பரமாகம பாராவார தீரதர்சியாயினு னெருரு ஆசார்யநு, ஆஸன்னபவ்ய ஜநவிசிஷ்டமாகிய ஜநங்கட்கு வியாக் யானம் செய்யா நின்ற காலத்து மித்யா தர்சநாத்யு பஹதசேதனு யினு னெருவனுக்கு அந்த தத்வஜ் ஞாநத்தை நோக்கி யெழா நின்ற ஸஹஜபிரதெஷ பரிணுமமும், தத்வ சாஸ்திராப் பியாஸவிசேஷமுடை யானெருவனுக்கு ஒரு காரண வசத்தால் அந்த தத்வ சாஸ்திரம் இவ் விடததில்லை போலும், யான் கேட்டறியேனென்று உத்பவியா நின்ற வஞ்சநா பரிணுமமும் ஸகல தத்வ சாஸ்திர, ஹ்ருதயகிரகண, வியாக் யாநங்களில் நிபுணனே யாகிலும் உனக்கு யான் தத்சாஸ்திரம் உப தேசியே னென்றும் ஒரு காரண வசத்தால் எழா நின்ற மாத்ஸர்ய பரி ணுமமும் திரவிய க்ஷேத்திரகால பாவ விசுத்தி பூர்வகம் திரவ்யாது யோகாதி பரமாகமங்கள் அத்தியயநம் பண்ணு நின்றவிடத்து யாதானு மொரு காரணத்தால் அதற்கு விக்நஞ் செய்வேனென்றெழா நின்ற ஆஸாதந மென்னும் பெயருடைய மஹாபாப பரிணுமமும், பேதா பேதாதி ஜாத்யந்தரமாகிய ஒருவனது ஸம்யக்ஞாந விசேஷத்தினை

விரோத வையதிகரணாத்யஸத்தூஷண பிரதிபாதன பூர்வகம், அழிக்க வேண்டு மென்றெழா நின்ற உபகாத பரிணாமமுமென்னு மிவையாம்.

வேத நீய மிருவகைப்படும்—ஸாதவேத நீயம் அசாத வேத நீய மென. அவற்றுள் ஸாதவேத நீயம், ஆஸ்ரவித்தற்கு நிமித்தமான பரிணாம விசேஷமாவன. பூர்வகிருத பாப கர்ம பரிபாக வசத்தால் ஸேவாக்கிருஷி ஸமுத்ரயாநாதிகளால் உபஜநிதமான நாநாவிததுக்கஸமுத்திர மத்தியத்துள் நிமக்நராகி ஸர்வ காலமு மலரா நின்ற ஸர்வபிராணிகள் விஷயமாகவும், அஹிம்ஸை சத்தியம், அஸ்தேயம், பிரம்மசர்யம், அபரிக்ரகஹ முதலான, அநேக விரதங்களை அநுஷ்டிக்கையில் நிபுணரான மஹா தபோதனரும் அவற்றையே ஏகதேசத்தால் அநுஷ்டிப்பாரான கிரகஸ்தருமென்னு மிவர்கள் விஷயமாகவு மெழாநின்ற அநுக்கிரக பரிணாமமும் மஹா விரதங்களும் அணுவிரதங்களுமென்னும் நிவிரத்த, கிரஹஸ்தாசாரங்களை நிரதிசாரமாக அநுஷ்டியாநின்ற மஹாபுருஷர்க்கு குரோதாதி கஷாய விநிவிரத்தமாகிய பகவதர்ஹத் பரமேச்வர சரணகமலஸக்திராக பரவசமாகி யெழாநின்ற பரிணாமவிசேஷ முதலாயினவும், புருஷ வசனாதிகளாலொருவன் உபத்ரவியாநின்ற விடத்து அவன் விஷயமாகக் குரோதமெழாம லென்னும் உத்தமக்ஷமா பரிணாமமும், சகல ஸம்பத்து ஸம்பாதந ஸமர்த்தமான சிந்தாரத்நமேயாகிலும் பரமதிரவியமாகிய வ்தனுள் பற்றுதலில்லென்னும் சௌசபரிணாமமும், ஸ்ரீவிஹாரமஹாபிஷேக முதலானவற்றால் பகவதர்ஹத்பரமேச்வரர்விஷயமாக வெழாநின்ற பூஜாபரிணாமமும், பால்யவார்த்தக்யாதிகளால் தபோநுயோகாநுஷ்டானத்தில் அசக்தரான தபோதநர் விஷயமாகத் தோற்றும் ஆஹாரௌஷதாதி தாநபரிணாமமுமென்னுமிவை முதலாயினவாகும். அஸாதவேதநீயம் ஆஸ்ரவித்தற்குக் காரணமான பரிணாமமாவன: பாம்பு விஷகண்டகாதிகளால் உபத்திரவமுண்டான காலத்து ஏகதேசமும் தத்வஜ்ஞானஸ்பர்சமின்றி வருந்தாநின்ற பிராணிகட்கு எழாநின்ற துக்கபரிணாமமும், புத்ர மித்ர களத்திராதிகள் வியோககாலத்து எழாநின்ற சோகபரிணாமமும், பாபரிவாதமு முதலான காரண விசேஷத்தால் ஸங்கோசணத்தா லெழாநின்ற வநுசய பரிணாமமும், இஷ்டரான பித்ரு மிதாமஹாதி விநாசகாலத்தது தாராகாரவாஹிபாஷ்பவி புளினபூர்வகம், அதிமாத்ரமாக பிரலாபித்த லென்னும் ஆக்ரந்தநபரிணாமமும், மாம்ஸரஸாநுராகமகிரீடை முதலாயினவற்றால் பஞ்சேந்திரியாதி ஜீவர்கட்குமரணப் பிரணிதான பூர்வ

கம் பிராணவியோமஞ் செய்தலென்னும், வதபரிணமமும் இஷ்டகளத் திராதிகட்கு மரணமுண்டான காலத்து எழாநின்ற சோகம் நாலிரண்டு நாளில் உபசமியாதே அநுவர்த்தித்து வருதலென்னும் பரிவேதந பரிணமமுமென்றிவை முதலாயினவாகும்.

மோஹநீய மிருவகைப்படும்: தர்சனமோஹநீயம், சாரித்திர மோஹநீயமெனை. அவற்றுள் தர்சநமோஹநீயமென்பது யதாவஸ்திதாநேகாந்தாத்மகத்வாதிவஸ்து ஸ்வரூபத்தில் "இதமர்த்தமேவ"மென்னும் ஸத் அபிநிவேசத்தை லக்ஷணமாகவுடைய ஸம்யக்தர்சனத்துக்கு உத்பத்தி விரோதஞ் செய்யும் கர்மவிசேஷங்களாகும். அவையாவன: அநந்தானுபந்தி குரோதாதி சதுஷ்கமும் மித்யாத்வ, ஸம்யக்மித்யாத்வ, ஸம்யக்த்வங்களுமாகும். இவை ஆஸ்ரவித்தற்குக் காரணமான பரிணமங்களாவன, அவிசலிதயுக்திகோசரனாகிய ஸர்வஜ்ஞபரம வீதராமனாகிய பரமேச்வரனது வசநங்கள், ஸ்வபுத்தி கல்பிதமான, அஸத்தூஷணமான வசனங்களாகில்லை யென்றும், அவனுக்கு ஜநந மரண க்ஷுத்பிபாஸாதி யுண்டென்றும், புத்ர மித்ர களத்திராதி பரிகிரஙகளுண்டென்று மெழாநின்ற பரிணமவிசேஷமும், அஹிம்ஸா லக்ஷணமான தர்மத்தைப் பிரதிபாதிப்பதாகி ஸர்வலோக தயாபரமாகிய ஸ்ரீமத் பிரவசநவிஷயமாக இது, மதுமத்யமாம்ஸாத்ய சநங்கள் ஸ்வர்க்காதிதருமென்று சொல்லுமென்றும், ஸர்வஜ்ஞ பிரணீதமாகிய வதனை யொருவனுற் சொல்லப்பட்டதன்று, ஸ்வயம்புவென்று மிப் பெற்றி எழாநின்ற பரிணமமும், அஹிம்ஸாலக்ஷணத்ததாகிய ஸதர்மத்துக்கு விபரீதமாக பஸ்வாதிவத முதலானவை தர்மலக்ஷணமென்றெழாநின்ற பரிணமமும், அஹிம்ஸாலக்ஷணத்ததாகிய ஸத்தர்மத்துக்கு அம்ரதாசநமாத்ரசந்துஷ்டராகிப் பரஸ்பரம் நிர்மத்ஸரராகிய தேவேந்திராதி தேவர்கள் மாம்ஸாதி சுராபானுதிகளால் தூஷிதரென்றும், அசுராதியோடு மஹாயுத்தஞ் செய்வரென்று மிவ்வண்ண மெழாநின்ற பரிணம முதலானவையாகும். ஸாமாயிகாதி சாரித்திரங்கட்கு பங்கம் செயயும் கர்மவிசேஷம் சாரித்ரமோஹநீயமென்பதாகும். இது ஆஸ்ரவித்தற்குக் காரணபரிணமமாவன: பரமொபேக்ஷாஹீனங்களான பரதிரவியங்களை இஷ்டமாகவும், அநிஷ்டமாகவும், சங்கல்பித்து இவை விஷயமாக வெழாநின்ற ராகாதிரேகமும் குரோதாதிரேக முதலான பரிணமங்களாகும்.

ஆயுஷ்யம் நாலுவகைப்படும்: நரகாயுஷ்யம், திர்யகாயுஷ்யம், மநுஷ்யாயுஷ்யம் தேவாயுஷ்யமெனை. அவற்றுள் நரகாயுஷ்ய

மென்னும்ங் கர்மம், ஆஸ்ரவித்தற்குக் காரணமான, பரிணாமமாவது: விபரீதமித்யாத்வதீவ்ரோதயமும், தநுதிஷ்டிதமான அநந்தாநு பந்திக ஷாய சதுஷ்டயதீவ்ரோதயமும், தததிஷ்டிதமான ஹிம்ஸாநந்தாதி ரௌத்ரத்யானமும், தநுதிஷ்டிதமான பஹ்வாரம்ப பரிகிரகதையு மாம். இவற்றினுடைய விகல்பமாகிய ஹிம்ஸையிலும், அஸத்யததி லும், சௌர்யத்திலும், பரஸ்திரிகமநத்திலும், ஸக்தராயினரும், க்ரூராத்மாக்களும், துத்ருஷ்டிகளும், ரௌதிரத்யாந தத்பரரும், பிராணிகளுள் ஸ்பாவமே நிர்தயராயினரும், தர்மதுரோஹி களும், அநவரதம் அதர்மமே போஷிப்பாரும், ஸாதுக்களை தூஷிப் போரும், மாத்ஸர்யோபஹதராயினரும், நிக்ரந்தமாகிய தர்மசீல ராகிய தபோதனரை அகாரணமெநிந்திப்பவரும், மதுமாம்ஸபக்ஷ ணமத்யபாநதத் பரராயினரும், தானும் தனதுமல்லாத பரதிரவ்யங் களிலே, தானென்றும், தனதென்றும், தூரபிநிவேசம் பண்ணுவோரு மாகும். இச்சொல்லப்பட்ட பாபகிரியங்களில், அநுமதி பண்ணுமிவர் களும், பத்தநரகாயுஷ்யராவர். திர்யகாயுஷ்யம் ஆஸ்ரவித்தற்கு நிமித் தமான பரிணாமமாவது: தநாதிவிஷயமாக வெழாநின்ற லோபாதிரே கத்தால் வாணிஜ்யாதிவ்யாபாரங்களுள் மாதாபிதாமுதலான ஜநங்க ளிடத்தும் செவ்வை செய்யாமையென்னும் மாயாபரிணாமமாகும். மநுஷ்யாயுஷ்யம் ஆஸ்ரவித்தற்குக் காரணமாவன: அல்பாரம்ப பரி கிரகத்வம் ஸ்வபாவத்தால் விநீதனுதல், பிரஸந்நசுபாவனுதல் குரோ தாதிகள் மந்தமாதல், மரணகாலத்து ஸம்கிலேசமற்றிருத்தல், ஸ்வ பாவமார்தவமென்றிவை முதலாகவுடைய பரிணாமங்களாகும். தேவா யுஷ்யம் ஆஸ்ரவித்தற்குக் காரணமான பரிணாமமாவன: பரமஸ்ராவக ரது ஸ்தூல வைராக்ய பரிணாமமும், ஆபதாகம பதார்த்தங்களது தாதாத்ம்ய ஸ்ரத்தானமென்னும் அஸம்யத ஸம்யக்திருஷ்டிகள், ஸம் யக்தர்ஸந பரிணாமமும், ஸம்யக்தர்ஸநஜ்ஞாநாதியின்றி கதாநுகதி அந்நியாயத்தால், மித்யாதிருஷ்டி ஜனங்கள் அநுஷ்டியாநின்ற பிரஹ்ம சர்யாநுஷ்டாநங்களுமென்றிவை முதலாகவுடைய பரிணாமங்களாகும். சரீராங்கோபாங்காதி ஜநநஸம்பந்தமான நாமகர்மம் இருவகைத்து, சுபா சுபமென. அவற்றுள் சுபநாமகர்மம் மநோவாக்குக்காயங்களது ரிஜுத் துவமாகும், தார்மீகஜனங்களை ஸம்பாவித்தல், சம்சாரத்து வெருவிய சித்தத்தனுதல், தன்னுற் செய்யப்படுங் காரியங்களுள் பிராணிபீடை பரிஹரித்தலென்னுமிவை முதலான பரிணாமங்களால் ஆஸ்ரவிப்ப தாகும். ஒழிந்த கர்மம் இச்சொன்ன பரிணாமங்கட்கு விபரீத பரிணா மங்களால் ஆஸ்ரவிப்பதாகும்.

தீர்த்தகரத்வமென்னும் மஹா புண்ய நாமகர்மத்திற்குக் காரணமான பரிணமங்களாவன: பகவதர்ஹத் பரமேஶ்வர பிரணீதமாகிய பரமவைராக்ய லக்ஷணத்ததாகிய முக்தி மார்க்கத்தில் சுரஹிபிபோல நிர்மலமாகிய ஸம்யக்தர்ஶநத்து அஷ்டாங்க பரிபுஷ்டி யென்னும் தர்ஶநவிஶுத்தியும், ஸம்யக்தர்ஶநாதி விஷயமாக உத்பவியாநின்ற அத்யந்த நிப்ரமான பரமாதரமென்னும் விநயஸம்பன்னத்தையும், அஹிம்ஸாதி மஹாவிரதங்களிலும் அவற்றுள் சம்ரக்ஷணார்த்தமான உத்தமக்ஷமாதி தசவிதசீலாசாரங்களிலும், நிரதிசார பிரவர்த்தி யென்னும் சீலவ்ரதேஷ்வநதிசாரமும், ஜீவாதிபதார்த்த விஷயமாகி ஸம்யக்ஞாநத்தில் நித்யமபிரதனை தன்மையென்னும் அபீக்ஷணஜ்ஞாநோபயோகமும், சதுர்க்கதிப்ராந்த லக்ஷணமாகிய ஸம்ஸாரத்திற்கு அதிமாத்ர பீதசித்தனுதலென்னும் ஸம்வேகநிர்வேகமும், ஆஹாரதாநம், ஔஷததாநம், அபயதாநம், அநேகாந்தாத்ம கத்வபிரதிபாதகசாஸ்திரமென்னும் சதுர்விதமாகிய உத்தரோத்தரமதிக பலமாகிய தேயவஸ்துவினைத் தனது சக்திக்கு அனுகுணமாக ஸத்பாத்ரங்களில் வ்யயித்தலென்னும் சக்திதஸ்தியாகமும், ஸர்வத்ர பரமவைராக்யமென்னும், பரமார்த்த தபஸிநுக்கு அபிவிரத்தி நிபந்தனமான அநசநாதிதபஸ்ஸி னைத்தனது சக்தியநுகூலமாகச் செய்தலென்னும் சக்திததபஸ்ஸும், நாநாவிதமாந சீலவிரதங்களால் ஸம்பூர்ணனாயினு னொருபரம ரிஷிக்கு ஒரு காரணத்தால், தபோவிக்நம் வந்தால் ஸம்ஸாரத்தினது அஸாரபாவ முதலானவற்றையதார்த்த முபதேசித்து அந்த விக்நத்தை பரிஹரித்தலென்னும், ஸாதுஸமாதியும், ரத்நத்ரய பவித்ரகரான பரமஸம்யதிகட்கு வாத பித்தஸ்லேஷ்மவைஷம்யங்களால் திருமேனியில் துக்கம் வந்த காலத்து அதற்கு யோக்யமான பிரதிகாரங்களைச் செய்தலென்னும், வையாபிரதயகரணமும், ஸகலவிமல கேவலஜ்ஞாநத்தாலுணரபட்ட ஸமஸ்தவஸ்து விஸ்தாரமுடையராகி, நிச்சேஷம் பிரக்ஷாளித்தமான ஸகல ராக கல்மஷமுடையரான பகவதர்ஹத் பரமேஶ்வரர்கள் விஷயமாகவும் ஸமஸ்ததத்வசாஸ்த்ர வியாக்யாந நிபுணராகி பரமவீதராகராகிய ஆசார்யார்கள் விஷயமாகவும் அங்கபூர்வபஹுஸ்ருதமென்னும் த்வாதசத்வாரிம்ஸத் பரமாகம பாராவாரபாரகாமிகளாகிய பஹுஸ்ருத விஷயமாகவும், பிரத்யக்ஷாநுமாநங்களோடும், பூர்வாபரங்களோடு மாறுகொள்ளாமை யென்னும் அவிஸம் வாதித்வகுணபூஷிதமான பரமபிரவசனம் விஷயமாகவும், எழாநின்ற அத்யந்தசுபபாவ

ஸஹிதமாகிய பரபக்தியென்னும் அர்ஹதாசார்ய பஹுஶ்ருத பிரவசநபக்தியும் நியதமநுஷ்டிக்கப்படுவதான ஸமத்வீபாவம், பஹவத்ஶ்ரணஸ்தவநாதிகள் ஒரு குறையறுதலென்னும் ஆவஶ்யகா பரிஹாநியும் அவிநாபாவலக்ஷணமாநஸம்யஹநுமாநபிர யோகங்களால் பஹுவித தேசங்கள் புக்கு, ஸமஸ்தநரபதிஸபாஸ்தானங்களில் ஸப்யஸாக்ஷிகமாக ஸம்யஹநேகாந்தாத்ம கத்வமென்னும் ஸ்வபக்ஷத்தை ஸாதித்தலும் மித்யைகாந்தரூபத்ததாகிய பரபக்ஷங்களை நிராகரித்தலும் என்றுமிவற்றாலும் பஹவான் அர்ஹத்பரமேஶ்வரற்கு, ஸ்ரீவிஹார மஹாபிஷேகாதியான மஹாபூஜாவிதாநங்களாலும், அதிதுஸ்சரமான அநசநாதிபஹுவித தபோவிதாநங்களாலும், ஸகலஜகத்தாள்ளும் ஸத்தர்மத்தைப் பிரகாசித்தலென்னும் மார்க்கபிரபாவனையும், ஸம்யத்த பிரஸூதையாகிய பசுவினக்கு த்தனது கன்றினைக் கண்டாற்போல, பகவத்ர்ஹத்பிரவசந ஹிருதயமறிவாரான பவ்யஜநங்களிடத்து வஞ்சனையாலன்றி ஸஹஜமாக வெழாநின்ற பரமஸ்நேஹமென்னும் பிரவசந வத்ஸலத்வமென்றிவை முதலானவையாகும்.

பிராஹ்மண்யாத்யநேக கோத்திரங்களை யாக்குவதான கோத்திர கர்மம் த்விதமாகும்: உச்சைர் கோத்ரம் நிச்சைர் கோத்ரமென. அவற்றுள் உச்சைர் கோத்ரம் ஆஸ்ரவித்தற்குக் காரணமாகிய பரிணமமாவன: பரனது குணவிசேஷங்களை பிரசம்ஸித்தலும், தோஷங்களை, பிரச்சாதித்தலும், தனது குண விசேஷங்களை நிந்தித்தலும், தோஷங்களைப் பிராகஸித்தலும் என்றிவையாகும். இதனது விபரீத பரிணமம் நீச்சைர் கோத்திரம் அஸ்ரவித்தற்குக் காரணமாகும்; தாநம், லாபம் போகம், உபபோகம், வீர்யமென்னு மிவையிற்றினுக்கு விக்நஞ் செய்வதான அந்தராய கர்மம், ஆஸ்ரவித்தற்குக் காரணமாகிய பரிணமமாவன: இச்சொல்லப்பட்ட தாநாதிகளைப் பிறரிடத்து விக்நஞ் செய்யும் பரிணாமமாகும். ஈதிரசமாகிய ஆஸ்ரவவிகல்பம் உசவிதம்: ஹீநாஸ்ரவம், அதிகாஸ்ரவம், ஈர்யாபதாஸ்ரவம், ஸாம்பராதிகாஸ்ரவம், ஞாநாஸ்ரவம், அஞ்ஞாநாஸ்ரவம், புண்யாஸ்ரவம், பாபாஸரவம், திரவ்யாஸ்ரவம், பாவாஸ்ரவம் என. அவற்றுள் ஹீநாஸ்ரவமென்பது விசேஷமில்லாத பாஹ்யகாரணமாக ஆஸ்ரவிப்பது; அதிகாஸ்ரவம் என்பது விசேஷபிரத்தியம் பெற்று ஆஸ்ரவிக்குங் கர்மமாகும். ஈர்யாபதாஸ்ரவமென்பது உபசாந்தகஷாயாக்ஷீண கஷாயா ஸயோகி கேவலிகளென்னும் குணஸ்தாநத்தார்க்கும் கஷாயமின்றி யோகமே காரணமாக ஆஸ்ரவிப்பது. ஸாம்

பராயிகாஸ்ரவமென்பது மித்யாதிருஷ்டி முதலாக சூக்ஷ்மஸாம்பராய பர்யந்தராகிய பத்துகுணஸ்தாநத்தர்க்கும் கஷாயமும் யோகமும் காரணமாக ஆஸ்ரவிப்பதாகும். ஞாநாஸ்ரவமென்பது பாஹ்யவிஷ யோபயோக, பூர்வவிசொதிதரபரிணாமகாரணமாகிய ஆஸ்ரவமாகும். அஜ்ஞாநாஸ்ரவமென்பது, அந்தராபாவமுர்ப்பாண்ட ஸப்தமத்தாத்ய வஸ்தைகளுள் அந்தரங்கபிரதான் யோகபாவ நிமித்தமாகிய, ஆஸ்ரவ மாகும். புண்யாஸ்ரவமென்பது ஸாதவேதநீயமும், புருஷவேதமும், ஸம்யகத்வமும், சுபநாமகர்மங்களும், தேவாயுஷ்யம், மநுஷ்யா யுஷ்ய மும், உச்சைர்கோத்ரமுமாகிய திரவிய கர்மங்களதுதயத்துபோதத் தையும், விபவத்தையும், சுகத்தையும், யசஸ்ஸெயும் சக்கிரவர்த்தி யான தன்மையையும் பண்ணி, தர்மசக்கிரவர்த்தியான தன்மையும் பண்ணும் காருண்யாதி சுபபரிணாமங் காரணமாக ஆஸ்ரவிப்பதாம். பாபாஸ்ரவமென்பது, அகாருண்யாத்ய சுப பரிணாமங் காரணமாக ஆஸ்ரவிப்பது. கர்மதிரவ்யோத்பத்தி திரவ்யாஸ்ரவமாகும். யோக பாவோத்பத்தி பாவாஸ்ரவமாகும். இப்பெற்றியே, கர்மநோகர்மங்கள், ஆஸ்ரவிக்கும் பிரகாரங்களெல்லாம் பரமாகமத்திற் கண்டுகொள்க.

பந்தமாவது மித்யாதர்சந விரதி பிரமாதகஷாய யோகாபந்த ஹேதவா:—என்பதனுல, மித்யாதர்சநாதி பரிணாமம் பந்தபிரத்யங்க ளாக ஜீவங்கர்ம பிராயோக்ய புத்கலங்களை ப்ரக்ருதிஸ்தித்யநுபாக பிரதேச ரூபத்தால், ஆதாநுபண்ணுதலாகும். அது வருமாறு:— அநாதிபிரவாஹரூபத்தால் சரீராதி பரதிரவ்யங்களோடு கார்யாகாரண ரூபத்தால் ஏகிபூதனுய்,வாராநின்ற அசுத்த ஜீவனுக்கு முன்பு ஆஸ் ரவஹேதுவாகச் சொல்லப்பட்ட க்ரோதாதி பரிணாம விசேஷ நிபந்த மாக மதிராதி பரதிரவிய விஷய திரஷ்ணு விசேஷ நிபந்தமாக மதி ராதி பரதிரவ்யங்களோடு போல, கர்மபரிணாம யோக்யமாகி அதி சூக்ஷ்மமாகிய புத்கல திரவ்யங்களோடு பரஸ்பரம் அநுபிரவேசித்த லாகும். உதராக்நியது தீவ்ரமந்தமத்யமரூபத்திற்கு அநுகுணமாக உதரபிரவிஷ்டமான ஆஹாரதிரவ்யம் அநேக ரூபம் அடைந்தாற் போல ஜீவபரிணதி விசேஷமான க்ரோதாதி கஷாயங்களது, தீவ்ர மநதமத்யமாதி ரூபத்தால், ஆத்மபிரதேச பிரவிஷ்டமான கர்ம ரூப பரிணத புத்கல திரவ்யங்கள் நாநாபலமுடையவாகும். அனந்தாநு பந்தி க்ரோதாதி சதுஷ்டயம் நரகாயுஷ்யத்திற்கும், அப்பிரத்யாக்யாந க்ரோதாதி சதுஷ்டயம் திர்யகாயுஷ்யத்திற்கும்,பிரத்யாக்யான க்ரோ தாதிசதுஷ்டயம் மநுஷ்யாயுஷ்யத்திற்கும், ஸஂஜ்வலன க்ரோதாதி

சதுஷ்டயம் தேவாயுஷ்யத்திற்கும், பந்தபிரத்யயமாம். அந்த பந்தம் நாலுவகைப்படும்: பிரக்ருதிபந்தம், பிரதேசபந்தம், அநுபாகபந்தம், ஸ்திதிபந்தமெனை. அவற்றுள் பிரக்ருதிபந்தமென்பது ஆத்மபிரதேச பிரவிஷ்டமான அவற்றன ஸ்வாபாவபேதமாகும். அது எட்டுவகைப் படும்: ஞானாவரணீயம், தர்சனாவரணீயம், வேதநீயம், மோஹநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்ரம், அந்தராயமெனை. அவற்றுள் ஞானாவரணீயம் நயனஸம்பந்தமான வஸ்தர விசேஷம் நயனத்தினது விஷய கிரகணத்தை மறைத்தாற்போல ஜீவபதார்த்த ஸ்வபாவமாகிய ஸ்வஸ்வரூபங்களது பேதபிரகாச ரூபமான ஞானத்தினை மறைப்பதாகும். தர்சனாவரணீயம் தத்வங்களது ஸத்தாஸாமான்ய ரூபத்தைப் பிரகாசிப்பதான தர்சனகுணத்தினை பிரதிஹாரந் தவிர்த்தாற்போல தவிர்ப்பதாகும். வேதநீயம் திக்த்தமதுர ரஸஸம்மிரத்தமான கட்கோபயபார்ஸவம் ஜிஹ்வாபிரதேசத்திற்குப்போல, ஜீவனுக்கு சுகதுக்கங்களை யாக்குவதாகும்.

மோஹநீயம், பானம்பண்ணப்பட்ட மதிராதித்ரவ்யம், மதிவிகார விசேஷங்களை ஜநிப்பித்தாற்போல ஜீவனுக்கு நாநாவிதமான குரோதாதி பரிணமங்களை யாக்குவதாகும். ஆயுஷ்யம் சரணயுகள பந்தமான நிகளம், புருஷனது யதேஷ்டதேசகமனத்தை நிரோதிக்குமாறுபோல, ஜீவனது கதயநதர பிராப்தியை நிரோதிக்கும் கர்மவிசேஷமாகும். நாமமென்பது நாநாகாரத்ததாகிய சித்ரகர்மா அவயவங்களை சித்திரகாரிபோல அநேகாகார சரீராதயவயவங்களையாக்கும். கோத்ரகர்மம் - ஏகரூபமாகிய மிரத்ஸ்னாத்ரவ்யத்திற்கு அநேக ரூபமாகிய கடகடிசராவராதி ரூபங்களை கும்பகாரன் செய்வதுபோல ஜீவனுக்குப் பலவகைப்பட்ட பிராஹ்மண்யாதி ஜாதிபேதங்களை யாக்குவதாகும். அந்தராய கர்மம் மணிமுக்த்தாத்யநேக வஸ்துக்களால், பரிபூர்ணமான பாண்டாகார பிரதேசத்தின் பாண்டாகாரிகன்போல ஜீவனுக்கு போகோபபோகாதி லாபத்தினை விக்நஞ் செய்வதாகும். இவற்றின் மந்த மந்ததர தீவ்ர தீவ்ரதராதி உதயவிசேஷங்களால் அநேக பேதமுளதாகும். அவற்றுள் ஞானாவரணீயம், பஞ்சவிதம்:— மதிஜ்ஞானாவரணீயம், ஸ்ருதஜ்ஞானாவரணீயம், அவதிஜ்ஞானாவரணீயம், மநப்பர்யயஜ் ஞானாவரணீயம், கேவலஜ்ஞானாவரணீயம் எனை. தர்சனாவரணீயம் நவவிதம்: சக்ஷு, அசக்ஷு, அவதி, கேவலதர்சனாவரணீயம், நித்ரை, நித்ரா நித்ரை, பிரசலை, பிரசலா பிரசலை, ஸ்தியாநகிரந்தியெனை. வேதநீயம் த்விவிதம்: ஸாதவேதநீயம், அஸாதவேதநீயம் எனை. மோஹநீயம் துவி

தம்: தர்ஶநமோஹநீயம், சாரித்ரமோஹநீயமென. தத்ர, தர்ஶநமோஹ நீயம் ஸப்தவிதம்: மித்யாத்வம், ஸம்யக்மித்யாத்வம், ஸம்யக்த்வம், அநந்தானுபந்தி குரோதம், மாநம், மாயை, லோபம் என. சாரித்ர மோஹநீயம், த்விதம், கஷாயம், நொகஷாயமென. கஷாயம் த்வாதஶவி தம்: அப்பிரத்யாக்யாந குரோதம், மானம், மாயை, லோபம், இப் பெற்றி, பிரத்யாக்யாநம் - ஸஞ்ஜவலநமென்னு மிரண்டுந் தனித்தனி நாலாக விகல்பிக்க. அனந்தானுபந்தி, அப்ரத்யாக்நம், பிரத்யாக்யாநம், ஸஞ்ஜவலனம் என்னும் குரோத கஷாயத்திற்கு கிரமத்தால் திரஷ் டாந்தம் சிலாகண்டமும், பூகண்டமும், பாம்ஸுரேலைகையுமாம். அனந் தாநு பந்தாதி மாநகஷாய சதுஷ்கத்துக்கு - கிரமத்தால், திரஷ்டாந் தம், சிலாஸ்தம்பமும், அஸ்தியும், திமிசு, தாருவும், செங்கொழுந்து மென்னு மிவையாம். மாயா கஷாய சதுஷ்டயத்துக்கு கிரமத்தினால் திரஷ்டாநதம் ஐரத், வேணுமூலமும், பஸ்தஸ்ரங்கமும், நராசுருளும், பிரசலித விரஷப மூத்ரமும் என இவையாம். லோபகஷாய சதுஷ்ட யத்திற்கு, கிராமத்தால் திரஷ்டாந்தம் - அயஸ்கார நாளகிட்டமும், அக்ஷமி ரக்ஷணமும், வஸ்தர ஸம்பந்த ஹரித்ரையும், துகூல ஜலமும், என இவையாம். குரோதாதிகளில் குரோதமானங்கள், த்வேஷாம்ஶ மும் மாயா லோபங்கள், ராகாம்ஶமுமாம்.

நொகஷாயம் நவவிதமாம்: ஹாஸ்யை, ரதி, அரதி, சோகம், பயம், ஜுகுப்ஸை, ஸ்திரிவேதம், புருஷவேதம், நபும்ஸகவேதம் என. மோகநீய கர்மம் அஷ்டா விம்சதியாகும். அவையாவன: முன்சொன்ன தர்சன மோஹநீய ஸப்தகமும், சாரித்ர மோஹநீய ஏக விம்சதியு மாம். ஆயுஷ்யம் சதுர்விதமாம்: நரகாயுஷ்யம், திர்யகாயுஷ்யம் மநுஷ் யாயுஷ்யம், தேவாயுஷ்யமென. நாமகர்மம் நார்ப்பத்திரண்டாகும். அவையாவன: கதிநாமம், ஜாதிநாமம், சரீர அங்கோபாங்க நிர்மாண பந்த ஸம்காத, ஸம்ஸ்தாந, ஸம்ஹநந, ஸ்பர்ச, ரஸ, கநத, வர்ண, ஆநு பூர்வ, அகுருலகு, உபகாத பரகாத, ஆதப உத்யோத, உச்வாஸ, விஹாயோகதி, பிரத்யேக சரீர, ஸாதாரண சரீர, திரஸ ஸ்தாவர, சுபக, துர்ப்பக, ஸுஸ்வர, துஸ்வர, சுப, அசுப, சூக்ஷ்ம பாதர, பர்யாப்தி அபர்யாப்தி, ஸ்திர, அஸ்திர, ஆதேய, அநாதேய, யசஸ்க்கீர்த்தி, அய சஸ்க்கீர்த்தி, தீர்த்தகரநாமமென. அவற்றுள் கதிநாமம் - சதுர்க் கதி பேதங்களைப் பண்ணுவதாகும்; ஜாதி நாமம் ஏகேந்திரிய, த்வீந்திரிய, திரீந்திரிய, சதுரீந்திரிய, பஞ்சேந்திரியமென்னும் ஜாதிபேதங்களைப் பண்ணுவதாகும்; சரீரநாமம் பஞ்சவிதம்: அவற்றுள் ஔதாரிக

நாமம் மநுஷ்யர்க்கும், திர்யக்ஜீவன்களுக்கும், ஸ்தூல சரீரத்தைப் படைப்பதாகும்; வைகிரீய சரீர நாமம் தேவநாரகர்க்கு விக்கிரியா சரீரத்தை யாக்குவதாகும். தேவர்கட்கு பிரதக்த்வ விக்கிரியையும் ஏகத்வ விக்ரியையுமாம். நாரகர்க்கு, ஏகத்வ விகரியையேயாம் மநுஷ்யர்க்கும் திர்யக் ஜீவங்களுக்கும் லப்தமாய அணுமாத்யஷ்ட குணங்கட்கும் யோக்யமாகிய சரீரத்தைப் படைப்பதாகும.

ஆஹார சரீரநாமம் ரிஷிகட்கு லப்தியினலாகிய ஆஹார சரீரத்தைப் படைப்பதாகும. தைஜஸ சரீரநாமம், லப்தியுடைய ரிஷிகட்கு வெளிப்பாட்டு நிகழ்ச்சி யுடைத்தாகி, ஒழிந்த வழி, ஸர்வ ஜீவங்கட்கும், அடக்கிய நிகழ்ச்சியுடைததாய், அநாதிப் பரம்பரையால் வரும் ஸாமான்ய நிகழ்ச்சியுடைத்தாகி, தைஜஸ சரீரத்தைப் படைப்பதாகும். கார்மண சரீரநாமம் விக்கிரக கதியினும் பிரதரை, பூரண ஸமுத்காதங்களிலும் வெளிப்பட்டு நிகழ்ச்சியை யுடைத்தாகிய, கார்மண சரீரதைதைப் படைப்பதாகும். அங்கோபாங்க நாமம் - ஔதாரி காங்கோபாங்கம் வைக்கிரீயிகாங்கோபாங்கம் ஆஹார காங்கோபாங்கம் எனத் திரிவிதம். அவற்றுள் ஔதாரி காங்கோபாங்கநாமம் ஔதாரிக சரீரததின் அங்கோபாங்க வேறுபாடுகளைச் செய்வதாகும். ஒழிந்தவு மிவ்வாறு கொள்க. நிர்மாணநாமம் ஸ்தாநநிர்மாணநாமம் பிரமாணநிர்மாணநாமம் ஏனத்விதம். அவற்றுள் ஸ்தாந நிர்மாணநாமம் அங்கோபாங்கங்களைத் தத்தம் ஸ்தாநத்து நிறுத்துவதாகும். பிரமாண நிர்மாணநாமம் சதுர்க்கதி ஜீவநகட்கும் யதாயதா யோக்கியமான சரீரோத்ஸேதத்தைப் பண்ணுவதாகும். பந்தநாமம் பஞ்சவிதமாகும். அவற்றுள் ஔதாரிக சரீரபந்த நாமம் ஔதாரிக சரீரவர்க்கணைகளது தொகுதியைப் பண்ணுவதாகும். ஒழிந்தனவுமிவ்வாறு கொள்க. ஸங்காத நாமம் பஞ்சவிதம்: அவற்றுள் ஔதாரிக ஸங்காதநாமம் ஔதாரிக சரீர வர்க்கணைகளதுத் தொகுதியைப் பண்ணுவதாகும். ஒழிந்தனவு மிவ்வாறு கொள்க. ஸம்ஸ்தாந நாமம் ஷட்விதபேதம்: அவற்றுள் ஸம சதுரஸ்ர சரீர சம்ஸ்தாந நாமம் சமசதுரஸ்ர வடிவினைச் செய்வதாகும். நிக்ரோத சரீர ஸம்ஸ்தாந நாமம் ஆல்போல வடிவினைப் பண்ணுவதாகும். ஸ்வாதி சரீர ஸம்ஸ்தாந நாமம்புற்றுப் போல் வடிவினைப் பண்ணுவதாகும். குப்ஜ சரீர ஸம்ஸ்தாநநாமம் கூன் வடிவினைச் செய்வதாகும். வாமந சரீர ஸம்ஸ்தாந நாமம் குறள் வடிவினைச் செய்வதாகும். ஹூண்ட சரீர ஸம்ஸ்தாந நாமம் கூறியில் விளங்காய் பெய்தாற்போலும் வடிவினைச் செய்வதாகும்.

ஸம்ஹநநாமம், ஷட்பேதமாகும். அவற்றுள் வஜ்ர விரஷப நாராசசரீரஸம்ஹநநாமம், வஜ்ர விரஷப நாராச மென்னும் மூன்றுருப்பும், விரவிய யாப்பினைச்செய்வதாகும். வஜ்ரநாராச சரீரஸம்ஹநநாமம் வஜ்ரமே நாராசமே என்றிவ் விரண்டுறுப்பும் விரவி யாப்பினைச் செய்வதாகும். நாராச சரீரஸம்ஹந நாமம் எல்லாவாணியிடைய யாப்பினைச் செய்வதாகும். அர்த்த நாராச சரீர ஸம்ஹநநாமம் பாகவாணியுடைத்தாகும் பாப்பினைச்செய்வதாகும். கீலிகாசரீர ஸம்ஹநந நாமம் பொருந்திய யாப்பினைச் செய்வதாகும். அஸம்பிராப்தஸ்ரபாடிகா சரீர ஸம்ஹநந நாமம் —பொருந்தாத யாப்பினைச் செய்வதாகும். ஸ்பர்ஶ நாமம் ஸ்நிக்தாதி அஷ்ட ஸ்பர்சங்களைப் பண்ணுவதாகும். ரஸநாமம் ஷட்விதரஸ பேதங்களைப் பண்ணுவதாகும். கந்தநாமம் சுகந்த துர்க்கங்களைப் பண்ணுவதாகும். வர்ண நாமம், பஞ்சவித வர்ண பேதங்களைப் பண்ணுவதாகும். ஆநு பூர்வி நாமம் சதுர்கதி ஜீவங்களை கத்தியந்தரத் தேற அடைவிப்பதாகும். அகுருலகு நாமம் சரீரத்தினுடைய அகுருலகுத்வத் தினைப் பண்ணுவதாகும். உபகாத நாமம் ஸ்வாபிகாதத்தைப்பண்ணுவதாகும். பரகாத நாமம் பராபிகாதத்தைப் பண்ணுவதாகும். ஆதப நாமம் உஷ்ண சரீரத்தினைப் பண்ணுவதாகும். உத்யோத நாமம் உத்யோத சரீரத்தைப்பண்ணுவதாகும். உச்வாஸநாமம் உச்வாஸநிச்வாஸங்களைப் பண்ணுவதாகும். விஹாயோகதி நாமம் த்விதம். அவற்றுள் பிரசஸ்த விஹாயோகதி நாமம் பிரசஸ்தகமநத்தைப் பண்ணுவதாகும். அப்பிரசஸ்த விஹாயோகதி நாமம் அப்பிரசஸ்தகமநத்தைப்பண்ணுவதாகும். பிரத்யேக சரீர நாமம் ஏக சரீரத்தில் ஏக ஜீவந் வாழ்தலைப் பண்ணுவதாகும். சாதாரண சரீரநாமம் ஏகசரீரத்தில் அநந்தம் ஜீவங்வாழ்தலைப் பண்ணுவதாகும். த்ரஸநாமம் த்வீந்திரியாதி ஜங்கம சரீரத்தைப் பண்ணுவதாகும். ஸ்தாவர நாமம் பிரத்வீ அப்பு தேஜஸ்ஸுவாயு வநஸ்பதி யென்னும் ஸ்தாவர சரீரத்தைப் பண்ணுவதாகும். சுபக நாமம் காமநீய ரூபத்தைப் பண்ணுவதாகும். துர்பக நாமம் கர்ஹித ரூபத்தைப் பண்ணுவதாகும். ஸுஸ்வரநாமம் ஸ்ரவண பிரியமான ஸ்வரத்தைப் பண்ணுவதாகும். துஸ்வர நாமம் கர்னகடுகமான ஸ்வரத்தைப் பண்ணுவதாகும். சுப நாமம் சுத்த சரீரத்தைப் பண்ணுவதாகும். அசுப நாமம் அசுத்த சரீரத்தைப் பண்ணுவதாகும். சூக்ஷ்ம நாமம் சூக்ஷ்ம சரீரத்தைப்பண்ணுவதாகும். பாதர நாமம் ஸ்தூல சரீரத்தைப் பண்ணுவதாகும். பர்யாப்தி நாமம் ஆஹாராதிநொகர்மங்களை நிறைப்பதாகும். அபர்யாப்தி நாமம் நொகர்மங்கட்கு அபர்யாப்தியைப்

பண்ணுவதாகும். ஸ்திர நாமம் கடின சரீரத்தைப் பண்ணுவதாகும். அஸ்திர நாமம் மிருது சரீரத்தைப் பண்ணுவதாகும். ஆதேய நாமம் ஸர்வராலும் ஆதரித்தலைப் பண்ணுவதாகும். அநாதேய நாமகர்மம் ஸர்வராலும் அநாதரித்தலைப் பண்ணுவதாகும். யசஸ்கீர்த்தி நாமம் யசஸ்கீர்த்தியைப்பண்ணுவதாகும். அயசஸ்கீர்த்திநாமம்அயசஸ்கீர்த்தியைப் பண்ணுவதாகும். தீர்த்தகர நாமம் பஞ்ச மஹா கல்யாணாஷ்ட மஹா பிராதி ஹார்ய சதுர்விம்சதி அதிசயாதி பாஹ்ய விபூதிகளைப் பண்ணுவதாகும்.

அந்தராய கர்மம் - பஞ்சவிதம் - தாநாந்தராயம் லாபாந்தராயம் போகாந்தராயம் உபபோகாந்தராயம் வீர்யாந்தராயமென இவற்றைச் செய்வதாகும. முன்சொன்ன அஷ்டவித கர்மங்கள் மூல பிரகிருதியாகும். இவற்றின் பேதமாகிய நொண்ணூற்றேழும் உத்தரப் பிரகிருதியாகும். இவற்றின் பேதமாகிய உத்தரோத்தர பிரக்ருதி வருமாறு கண்டுகொள்க. இவைதானே புண்யபாப பிரகிருதி ரூபமென த்விதமாகும். தத்ர ஸாதவேதநீயம் - ஸம்யகத்வம் ஹாஸ்யைரதி - புருஷவேத - தேவாயுஷ்ய - மனுஷ்யாயுஷ்ய - சுப நாமோச்சைர் கோத்ரமென்னு நின்ற பிரகிருதிகள்-புண்ய பிரக்கிருதிகளாகும். ஒழிநத அஸாத வேதநீயம் - மிதயாத்வமும் - ஸம்யக்மித வாத்வமும், நவநொகஷாயத்தில், அரதி, சோகம், பயம், ஜுகுப்ஸை, ஸ்திரிவேதம், நபும்ஸகவேதம் நரகாயுஷ்யம், திர்யகாயுஷ்யம், அசுப நாமம், நீச்சைர்கோத்ரம் என. இவை பாப பிரகிருதியாகும். பிரதேச பந்தமென்பது - இச்சொல்லப்பட்ட அநந்தாநந்த பரமாணுக்களது ஸ்கந்தரூபமும் அதிசூக்ஷ்மங்களுமாகிய கர்மங்கள் ஜீவனது மநோ வாக்கு காய யோகமாகிய பரிஸ்பநதத்தால், ஸர்வாதம பிரதேசங்களிலும் க்ஷீரநீரம் போல பரஸ்பராநுபிரவேசத்தால் ஒக்க விழுதலாகும். ஸ்திதிபநதமென்பது இப்பெற்றியாத்ம பிரதேசத்து பந்தித்த கர்மங்கள், பந்தஸமயந துடங்கி, உதயந்தளவும், மோஹநீயத்துக்குங் காலங்களாகும். அது ஞாநதர்சநாவரண வேதநீயங்களுககும் அந்தராயத்திற்கும் உத்தம ஸ்திதி முப்பது கோடாகோடி ஸாகரோபமுமாகும். மோஹநீயத்துக்கு - எழுபது கோடாகோடி, ஸாகரோபமமாகும். நாமகோத்ரங்கட்கு இருபது கோடாகோடி, ஸாகரோபமமாகும். ஆயுஷ்யத்திற்கு முப்பத்துமூன்று ஸாகரோபமுமாகும். ஆயுஷ்யகண்டநமென்பது, சதுர்விதாயுஷ்யங்களில், தேவாயுஷ்யமும், நரகாயுஷ்யமும், அஸம்கியாத வர்ஷ்யாயுஷ்கரான, திர்யக்

மநுஷ்யாயுஷ்யமும், சாமாங்காயுஷ்யமும், பந்தித்த ஆயுஷ்ய ஸ்திதி யில் ஒன்றும் கண்டிக்கமாட்டாது, ஒழிந்த ஸம்கியாத வர்ஷாாண, திர்யங் மாநுஷ்யத்திற்கு, உபகாதபாகாத நாமகர்மோதயம், அப்யந்த ரஸாதநமாகவும், விஷசஸ்த்ர கண்டகாதி பாஹ்ய ஸாதநமாகவும் கண்டநமாம். ஜகந்ய ஸ்திதி ஞாநாவரண மோஹநீய ஆயுஷ்யாந்தரா யங்கட்கு, அந்தர் முகூர்த்தமாகும். வேதநீயத்துக்கு துவாதச முகூர்த்தமாகும். நாமகோத்ரங்கட்கு அஷ்டமுகூர்த்தமாகும். அநு பாக பந்தமென்பது, உபயுக்த்தமான, ஆஹாராதி விசேஷம், பாஹ்ய மான வாயு ஆதபாதி ஸம்யோக அநேகவிதமான பல விருக்ஷாதி கட்கு ஜநிப்பித்தாற்போல, திரவ்ய க்ஷேத்திர காலபாவ பவங் களது ஸந்நிதி விசேஷத்தால் அநேகவிதமான விளைவினை செய்வ தாகும். ஈதிரசமான பந்தத்தினது உண்மையறிவிக்கும் பிரமாணம் வருமாறு. பரமார்த்த ரூபத்தால் சுத்த சைதந்ய ஸ்வபாவனாக நிச்ச யிக்கப்பட்ட ஜீவனுக்கு நாநாவித துக்கமோ ஹாதிரூபமான இழித் தொழில்கள் ஆத்மசரீரவிய திரிக்த்தமான புத்கலதிரவியத்தது ஸம் பந்தத்தால் வந்தன அவையாதலால், மதிராதிபாநஞ் செய்தானது இழித்தொழில்போல வென்பது. மூர்த்தமாகிய புத்கலகர்மம், அமூர்த்தமாகிய ஜீவனோடு ஸம்பந்தியாதெனிலழகிதன்று; மூர்த்த மாகிய ஆஹாராதியோடு அவனுக்கு ஸம்பந்தங் காணப்படுதலில்; அன்றெனில், அதனது ஸம்பர்க்கத்தாலும், சுகதுக்காதியுளதாகாது. அதுபோல அநாதிபிராவாஹரூபத்தால் புத்கலதிரவியமும் தானும் பரஸ்பரம் கார்யகாரண ரூபனாகி கதஞ்சிந் மூர்த்தனாகி வாராநின்ற ஜீவனுக்கு மூர்த்தமான கர்மத்தினோடு ஸம்பந்தம் பொருந்துவதாகும்; ஈதிரசமாகிய பந்தம் ஸந்ததம் உதயம் உதீர்ணோதயமென திரிப்ர காரம். அவற்றுள் ஸந்ததமென்பது பந்தித்தகர்மங்கள் ஆத்மபிர தேசத்திலே உதயம் செய்யுமளவும் கிடத்தலாகும். உதயமென்பது யதாகாலம் உதயஞ் செய்வது பலங்கொடுத்தலாகும். உதீர்ணோதய மென்மது பிரயோகபலத்தால் கதளிபலாதிகளை வலியப் பழுப்பித் தாற்போல, தபோபலத்தால் கர்மங்களது, ஸ்திதி, அநுபாகங்களை கண்டித்து சுருக்குதலாகும். பத்து கோடாகோடி கடற்கால ஸ்திதி யுடைத்தாகிய கர்மங்கட்கு ஆபாதகாலம் ஸஹஸ்ரவருஷங் கழித்து உதயமாகும். பிரத்யயம் பெற்ற காலத்து ஸ்வமுகோதயமாகியும் பெறாத பொழுது பரமுகோதயமாகியும் உதிக்கும். இப்பெற்றி ஒழிந்த ஸ்திதிகளுக்கும் கொள்க.

ஸம்வரபதார்த்த மென்பது முன் சொன்ன ஆஸ்ரவஹேதுக் களால் ஆத்மபிரதேசத்து பிரவேசியாகின்ற ஞாநா வர்ணாதி கர்மங் கட்கு அவற்றன் ஹேதுகட்கு விருத்தமான பரிணாமங்களால் நிரோ தஞ் செய்வதாகும். அவற்றுக்கு விரோத பரிணாமமாவன—ஸம்யக் தர்சனம், கஷாய ரஹிதத்வம், என்னுமிவையும், குப்தியும், ஸமிதி யும், தர்மமும், அநுபிரேக்ஷையும், தபஸ்ஸும், ஸம்யமமும், பரீஷஹ ஜயமுமென்னு மிவையும், சாரித்ரமாகும்.

ஸம்யக யோகநிக்ரஹொகுப்தி என்பதனால் - அப்பிரவிரத்தனகி, மநோ வாக்கு காயங்களை நிரோதம் பண்ணுதல், குப்தி என்று சொல் லப்படும். அது மூன்றுவகைப்படும். மநோகுப்தி, வசிகுப்தி, காய குப்தி என. பிரவர்த்திகாலத்து பிரயத்நசாரியாகிச் செலுத்துதல் ஸமிதியாகும். அவை ஈர்யாஸமிதி, பாஷாஸமிதி, ஏஷணாஸமிதி, ஆதா நநிக்ஷேபணஸமிதி, உச்சாரபரஸவண - க்ஷேள வ ஸிம்ஹாணய விய ளிபதிட்டாபஸமிதி என வைந்தாம். தர்மம் என்பது, தசவித ஸ்ரமண தர்மம். அவையாவன உத்தமக்ஷமை, மார்தவம், ஆர்ஜவம், சௌசம், ஸத்யம், ஸம்யமம், தபஸ்ஸு, த்யாகம், ஆகிஞ்சின்யம், பிரம்மசர்ய மென. அவற்றுள் உத்தமக்ஷமை என்பது - குரோதாதி கஷாயநிரோ தத்தால் பிருத்யா பராதத்தை ஸ்வாமியானவன் பொறுந்தாற்போலப் பொறுத்தலாகும். மார்தவமென்பது, மாந கஷாய நிரோதத்தால் சாந்தனகை. ஆர்ஜவமென்பது மாயா கஷாய நிரோதத்தால் செவ் வியனுதல். சௌசமென்பது, லோபகஷாய நிரோதத்தால், விஷயங் களில் பற்றுள்ள மில்லாமை. ஸத்யமென்பது ஸத்யமாகி ஹிதமாஹிய வாக்கு பிரவர்த்தியாகும். ஸம்யமமென்பது, விஷயங்களிலும், பிராணி களிலும் யதாசக்தி யடங்குதலாகும். தபஸ்ஸென்பது, அநசநாதி தபஸ்ஸுக்களை யதாசக்தி யநுஷ்டித்தலாகும். தியாகமென்பது, பாஹ்யாப் பியந்தர பரிகிரஹங்களை யதாசக்தி பரித்யஜித்தலாகும். ஆகிஞ்சிந்யமென்பது - நிஷ்பரிக்ரஹமாகும். பிரம்மசர்யமென்பது நவவித பிரம்மசர்யத்தை அநுஷ்டித்தலாகும். அநுபிரேக்ஷை என் பது அநித்யம், அசரணம், ஸம்ஸாரம், ஏகத்வம், அந்யத்வம், அசுசித் வம், ஆஸ்ரவம், ஸம்வரம், நிர்ஜரை, லோகம், போதிதுர்லபம், தர்ம ஸ்வாக்யாதத்வம், என்னுமிவற்றின் ஸ்வரூபத்தை சிந்தித்தலாகும். அது வருமாறு: சரீரம், இந்திரியம், அந்தக்கரணம், ரூபயௌவநம், ஆயுஷ்யம், தநம், தாந்யம், புத்திரமித்ராதி பந்துஜநம் ஹோ தாஸி தாஸர் முதலான பரிஜநங்கள் க்ஷேத்திரமென்னு மித்துடக்கத்தன

வெல்லாம் ககநதலத்து ஜலதரபடல பார்ச்வத்துள் விஸ்ம்ருதமாகி நாநாவர்ண விசேஷங்களா லதிரமணீயமான இந்திர சராஸநம் அனந்தரத்து அத்ருச்ய மாறுற்போல, நிலையில்லாவாகும் இவ்விடத்து ஞாநதர்சந லக்ஷணத்ததாகிய ஜீவனெனும் பதார்த்த விசேஷத்திற்கே நிலைநிற்றலாவதென்று சிந்தித்தல், அநித்யத்வாநு பிரேக்ஷையாகும்.

அநேகாஹோராத்ரமெல்லாம் ஆமிஷங் கிடையாமல் அதிமாத்ரம் பிரஜ்வாலித க்ஷுதாபாவக மஹாஜ்வாலையதாகி அதிபலவானாகிய வியாக்கிரிய போதத்தால், வியஜநமாகிய காந்தாரத்துள், உபரோதிக்கப்பட்டு, அதிசபலமான ம்ருகசாபகத்துக்குப்போல, ஜந்ம மிருத்யு ஜராவ்யாதி முதலானவற்றால் அதிநிபந்தமாகிய ஸம்ஸார சக்ரத்துள் பரிப்ரமியாநின்ற ஜந்துவினுக்கு ஒரு சரணமில்லை ; ஜநநதிவஸந்தொடங்கி பஹுபிரயத்நங்களால் பரிபோஷிக்கப்படாநின்ற சரீரம் மிருஷ்டாஹாரவிசேஷ போஜநத்துக்கு ஸஹாயமாவதன்றி மரணகாலத்துக்கு ஸஹாயமாகாது. அஸி, மஷி, கிருஷ்யாதி அநேக கிரியைகளால் அதிக பிரயாஸ பூர்வகம் ஆர்ஜித்து பஹுபிரயத்நங்களால் ஸம்ரக்ஷிக்கப்படாநின்ற தநம், ஏகபதமுமாத்ரமும் பின்செல்லாது ஸமசுகதுக்கத்தராகித் தன்னோடொக்க வளர்ந்த ஸுஹ்ருத்ஜனங்களும், மரணசமயத்தராகார். ஜநகஜநந்யாதி பந்து ஜநங்கள் ஸமுதிதராகிலும் அக்காலத்து ரக்ஷகரல்லர். ஸகஸ்ராக்ஷனேயாகிலும் மரியாநின்ற ஜந்துவை மீட்கமாட்டான். தபோதாநாதிகளால் ஆர்ஜிக்கப்பட்ட, ஸத்தர்மமொன்றுமே அப்பொழுது ஸஹாயமாவதென்று சிந்தித்தல் அசரணாநு பிரேக்ஷையாகும்.

திரவ்ய, க்ஷேத்திர, கால, பாவ, பவங்களென்றும், பஞ்சபரிவர்த்தனத்தை ரூபமாகவுடைய ஸம்ஸார ஸாகரத்துள் நிமக்நனாகி அநாதி சம்ஸாரசக்கிர கிரமத்தால் சுழலாநின்ற ஜீவன், கர்மவசத்தால் ஒரு ஜந்மத்துள் பிதாவாகியவன் இதர ஜன்மத்துள் புத்ரனாகியும், புத்திரனாகியவன் பிதாவாகியும், புருஷனாகியவனே ஸ்திரீயாகியும் ஸ்திரீயாகியவள் புருஷனாகியும், தாஸனாகியவன் ஸ்வாமியாகியும், ஸ்வாமியாகியவன் தாஸனாகியும், உச்சைர்வம்சயனானவன் நீச்சைர்வம்சயனாகியும், நீச்சைர்வம்சயனானவன் உச்சைர்வம்சயனாகியும், தேவநாரக திர்யக்காகியும், இப்பெற்றி ஜந்மந்தோறும் அலமராநின்ற ஸம்ஸாரம் மஹாவியாதி என்றும், அந்த வியாதிக்கு ஔஷதமாவது பகவதர்ஹத்பரமேச்வரசரணஸரஸிஜாநுஸ்மரணமல்லது மற்றொன்

றில்லையென்றும் பாவித்தல், ஸம்ஸாராநு பிரேக்ஷையாகும். பஞ்ச பரிவர்த்தனையென்பது : திரவிய, க்ஷேத்திர, கால, பாவ, பவ, பரிவர்த்தனைகள் என. பரிவர்த்தனமாவது, ஒன்றுவிட்டொன்று கோடல் ; அது த்விபிரகாரத்தது கிரமமும் அக்கிரமுமென. அவற்றுள் கிரமமும், திரவ்யாதியால் ஐந்துவகைப்படும். அவற்றுள் திரவ்ய பரிவர்த்தனம், பாதரமமும், சூக்ஷ்மமுமென இருவகைப்படும். அவற்றுள் ஸ்தூலதிரவ்ய பரிவர்த்தனமென்பது ஒரு ஜீவனே போகோப போக வகையால் ஸமஸ்த புத்கலங்களையும் அநுபவித்தல். சூக்ஷ்ம திரவிய பரிவர்த்தனை இருவகைத்தது : நோகர்ம பரிவர்த்தனம் கர்ம பரிவர்த்தனமென. அவற்றுள் நோகர்ம பரிவர்த்தனம், ஜகந்யம் உத்கிரஷ்டமென்னும் பேதத்தால் இருவகைத்து. அவற்றுள் ஜகந்யநோகர்ம பரிவர்த்தனமென்பது, சூக்ஷ்ம ஏகேந்திரியாபர்யாப்தக னது ஐந்மாரம்ப பிரதமஸமயத்துள் ஸ்திதியாலும், அநுபாகத்தாலும், திரவ்யஸங்கையாலும், க்ஷேத்திரத்தாலும், வர்ணாதி விகாரங்களாலும், ஆஹாரகாயவந்தக்கரண ஸ்பர்சநேந்திரி யோச்வாஸமாகிய நோகர்மவர்க்கணைகள், பந்தித்தன மீட்டும் பெற்றியவாகிய வந்தவர்க்கணைகள் வந்து, அந்த ஜீவன்கட் பந்திந்தலாகும். இதனது நடுவட் காலம் நாலுவகைப்படும். அக்ரஹீதம், மிப்ரகம், க்ரஹீதமுமென. அவை யொரோவொன்று மூன்றுவகைப்படும். அவற்றுள் முதலது அக்ரஹீதமிப்ரகம், கிரஹீதமென ; இரண்டாவது, மிஸ்ரகம் அக்ரஹீதம் கிரஹீதமென ; மூன்றாவது, மிஸ்ரகம் கிரஹீதம், அக்ரஹீதமென ; நான்காவது, கிரஹீதம், மிஸ்ரகம், அக்ரஹீதமென ; இனி, அவற்றுள் முதற்காலத்து மூன்று வருமாறு :—அக்ரஹீதம் அநந்த முறை வந்தால், மிஸ்ரகம் ஏகவாரம் வரும். மீட்டும், அக்ரஹீதம் அநந்தவாரம் வந்தால், மிஸ்ரகம் ஏகவாரம் வரும்; இப்பெற்றி நடுவண் வந்த மிப்ரகம் அனந்தமானவிடத்து, மீட்டு அக்ரஹீதம் அனந்த வாரம் வந்து, மிப்ரகஸ்தானத்திலே கிரஹீதமேகவாரம் வரும். மீட்டும் அக்ரஹீதம், அனந்தம் வாரம் வர, மிப்ரகம் ஏகவாரம் வந்து, இவ்வண்ணம் மிப்ரகம் அனந்தமானால், பூர்வமத் கிரஹீதம் ஏகவாரம் வரும். இப்பெற்றி கிரஹீதமும் அனந்தவாரம் வந்து முதற்காலமுடியும். ஒழிந்த மூன்று காலத்து மும்மூன்று முறைமையுமிப்பெற்றியே. இம்மூன்று காலங்கள் தொடக்கங்களுண்டாகிய விசேஷமாவது, அக்ரஹீதம் ஒன்று குறைய அனந்தம்வாரம்வர, மிப்ரகம், ஏகவாரம்வந்து அக்ரஹீதம், இரண்டு குறைய அநந்தம்வாரம்வர, மிப்ரகம் ஏக

வாரம் வந்து இப்பெற்றியே, அக்ரஹீதம் ஹீநமாய் அக்ரஹீதம் ஏகவாரம் வர, மிஶ்ரகம் ஏகவாரம் வந்தபின், அக்ரஹீதம் ஏகவாரம் வர, மிஶ்ரகமிருக்கால் வந்து அக்ரஹீதம் ஏகவாரம் வர, மிஶ்ரகம் முக்கால் வந்து இப்பெற்றியே, மிஶ்ரகம் அனந்தமாம். இது இரண்டாங்காலத் தொடக்கத்து விசேஷமாகும். மிஶ்ரகம் அனந்தம்வாரம் வர அக்ரஹீதம் ஒன்று குறைய அனந்தம்வாரம் வந்து மிஶ்ரகம், அனந்தம்வாரம் வர கிரஹீதம் ஏகவாரம் வந்து மிஶ்ரகம் அனந்தவாரம் வர, அக்ரஹீதமிரண்டு குறைய அனந்தம் வந்து மிஶ்ரகம் அனந்தவாரம் வந்து கிரஹீதம் ஏகவாரம் வந்து இப்பெற்றி, மிஶ்ரகத்திடை இடையே அக்ரஹீதமாய்ப் பின்பு, கிரமத்தால் மிஶ்ரகம் அனந்தமும் அக்ரஹீதம் ஏகவாரமும், கிரஹீதம் ஏகவாரமுமாம். பின்பு கிரஹீதம் வர்த்தித்து அனந்தம்வாரம் வந்து அக்ரஹீதம் ஏகவாரம் வந்து மிஶ்ரகம் அனந்தவாரம் வருதல் மூன்றுங்காலத்தொடக்கத்து விசேஷமாம். மிஶ்ரகம், ஏகோநாநந்தவாரம் வர, கிரஹீதம் ஏகவாரம் வந்து, மிஶ்ரகம், இரண்டு குறைய அனந்தம் வந்து, கிரஹீதம் ஏகவாரம் வந்து, இப்பெற்றியே மிஶ்ரகம் ஹீநமாய் ஏகவாரம் வந்து, கிரஹீதம் பந்தித்து அனந்தம்வாரம் வந்தால், நாலாங்காலத்தொடக்க விசேஷமாம்.

உத்கிருஷ்ட நோகர்மபரிவர்த்தனமிப்பெற்றியே. விசேஷமாவது, ஸம்ஜ்ஞிபர்யாப்தகவ்யகத் தங்களது, உத்கிருஷ்டயோகத்திலாவது கர்மபரிவர்த்தனமும், ஜகந்யமும், உத்கிருஷ்டமுமென த்விப்ரகாரத்தது. இவற்றது ஸ்வரூபம், நோகர்ம புத்கல பரிவர்த்தனத்தோடொக்கும்; பரிவர்த்தநாதியிற்றொடங்கிக் கொள்ளப்படாதன அக்ரஹீதமும், கொள்ளப்பட்ட கிரஹீதமும், இரண்டுங் கூடினது மிஶ்ரகமுமாம்.

க்ஷேத்திரபரிவர்த்தனமென்பது ஒரு ஜீவன்சூக்ஷ்ம ஏகேந்திரியாபர்யாப்தகனாகி, மஹாமேருமூலமத்யமாகிய சித்ரையுள் சதுரணுப்பிரதேசமும் வஜ்ரையுள், சதுரணுப்பிரதேசமுமாகிய லோகமத்யமமாகிய அஷ்டாணுப் பிரதேசங்களைத் தனது சரீரத்துக்கு மத்யமமாக ஒரு ஜன்மம் பிறந்து, உத்ஸெதகநாங்குலாஸங்க்யேய பிரதேசமாத்ரமாகிய ஸ்வதேஹப் பிரதேசமாத்திரமாகிய அஸங்க்யேய ஜன்மம் அவ்விடத்தே பிறந்து, பின்பிரதேசோத்தரகிரமத்தால், அனந்தகாலம், அந்தரித்து ஓரோவொரு பிரதேசம், அணையப் பிறந்து, இப்படியே லோகப்பிரதேசமெல்லாம் முடியப் பிறந்தலாகும்.

காலபரிவர்த்தநமென்பது, அந்த ஜீவனே, உத்ஸர்ப்பிணிபத்து கோடாகோடி கடற்காலமும், அவஸர்ப்பிணி பத்து கோடாகோடி கடற் காலமுமாக, இருபது கோடாகோடி கடற்காலமும், உத்ஸர்ப்பிணி முதல் ஸமயத்திலே ஒருக்கால் பிறந்து, பின் த்விதீயஸமயத்திலே ஒருக்கால் பிறந்து, இப்படி காலஸமயோத்தர கிரமத்தாலே, இருபது கோடாகோடி கடற்காலமும், முடியப் பிறத்தலாகும்.

பவபரிவர்த்தனமென்பது, கதி, இந்திரிய, காயங்களது ஜகந்யா யுஷ்யம் தொடங்கி உத்கிருஷ்டாயுஷ்யந்தோறும், ஸமயோத்தரகிரமத் தாற் பிறத்தலாகும். அவற்றுள் கதியிற் பிறக்கும் பிரகாரமாவது: ஒரு ஜீவன்நரககதியில், ஜகந்யாயுஷ்யம், பதினாயிரம் ஸம்வத்ஸர முடைத்தாகி ஜநித்து, அந்த ஜகந்யாயுஷ்யமாகிய, பதினாயிரம் ஸம் வத்ஸரத்தை யொரோவொரு ஸமயமாகப் பார்த்து, அத்துணை ஸம யத்துக்கும், அவ்வாயுஷ்யமே ஆயுஷ்யமாக ஒரொவொரு பிறவி பிறந்து முடித்தல்; பின்னை உத்தமாயுஷ்யமாகிய முப்பத்துமூன்று கடற்காலமளவும் ஜகந்யாயுஷ்யமே தொடங்கி, ஸமயோத்தர கிரமத் தால் பிறந்து திர்யக்கதியில் ஜகந்யாயுஷ்யமாகிய அந்தர்முஹூர்த்தமாகிய ஆயுஷ்யத்தாற் பிறந்து, அங்கே முன்புபோலப் பிறந்து, உத்தமாயுஷ்ய மாகிய மூன்று பல்லத்தளவும், ஸமயோத்தரகிரமத்தாற் பிறந்து, தேவகதியில், ஜகந்யாயுஷ்யமாகிய பதினாயிரம் ஸம்வத்ஸரத்தாற் பிறந்து, அங்கு முன்புபோலப் பிறந்து, உத்தமாயுஷ்யமாகிய முப்பத் தொரு கடலினளவும் ஸமயோத்தர கிரமத்தாற் பிறந்து முடிவ தாகும். இந்திரியத்திற் பிறக்கின்ற, ஏக த்வீ த்ரி சதுஷ் பஞ்சேந்திரி யங்களது, ஜகந்யாயுஷ்யந் தொடங்கி, தத்தம், உத்கிருஷ்டாயுஷ்யந் தோறும் ஸமயோத்தரகிரமத்தாற் பிறந்து முடித்தலாகும். காயத் திற் பிறக்கின்ற பிருத்வீஅப்தேஜோவாயுவநஸ்பதி, த்ரஸமாகிய ஷட்காயங்கள் தத்தம், ஜகந்யாயுஷ்யந் தொடங்கி, தத்தம் உத்கிருஷ் டாயுஷ்யந்தோறும் ஸமயோத்தர கிரமத்தாற் பிறத்த லாகும்.

பாவ பரிவர்த்தன மென்பது. ஸம்ஜ்ஞீபஞ்சேந்திரிய பர்யாப்தகனுக்கு யோக்யமாகிய ஸ்ரேண்ய ஸங்க்யேய பாவமாகிய யோகஸ்தாநங்களைத் திரவ ஸ்திதிக்கு யோக்யமாகிய பரிணாமங்கள், அஸங்க்யாதலோகமுள் ஏகஸமயாதிகமாகிய த்விதீயஸ்திதிக்கு யோக்யமாகிய பரிணாமங்களும் அஸங்க்யாத லோகமவற்றுக்கு விசேஷாதிக மென்பதாம் அஸங்க்யாத லோகம் போதரும். இப்பெற்றி திரிதீயஸ்தித்யாதிக்கும் யோஜிக்க. இவ்வகை நின்ற அஸங்க்யாத லோகப் பிரமாணத்ததாகிய பரிணாம

ஸ்தானங்களையும், இப்பரிணமங்களுள், ஜகந்ய பரிணமத்தா லேற்றப் படும்; அநுபாகஸ்தாநங்கள், அஸங்க்யாதலோகம் போதரும், த்வி தீய பரிணமத்தா லேற்றப்படுவனவும், அஸங்கியாத லோகபிரமாணத் தன, இப்பெற்றி, உத்கிருஷ்ட பரிணமந்தோறு முயக்க ஜகந்ய பரிண மததாலேற்றப்படும்; அநுபாக ஸ்தானங்கட்கு த்விதீய பரிணமததா லேற்றப்படும், அநுபாக ஸ்தாநங்கள் அஸங்கியாத லோகமிருக்கும், இப்பெற்றி ஸர்வோத்கிருஷ்டந்தோறும் விசேஷாதிக ரூபத்தாற் கிடக் கும் இப்பெற்றிப்பட்ட அஸங்க்யாத லோகம், அநுபாக ஸ்தாநங்களை யும் அபவ்யபிரா யோக்யாநதாஃ கோடாகோடி பிரமாணமாகிய பரி வர்த்தந யோக்யமாகிய ஜகந்யஸ்திதியிற் றொடங்கி ஸர்வோத்கிருஷ்டந் தோறும் நின்ற ஸர்வகர்மங்களது ஸ்திதிகளையும் ஞாநாவரணதிமூலப் பிரகிருதிகளையும், உத்தர பிரக்ருதிகளையும், உறழுங் கிரமத்தால், பந் தித்தலாகும். அஃதாமாறு ஜகந்ய யோகினல், ஜகந்யாநு பாகத்தால், ஜகந்ய பரிணமத்தால், ஜகந்ய ஸ்திதி ஞாநாவரணீயம், பந்திக்கும்; த்விதீய யோகினல் ஜகநயாநு பாகத்தால் ஜகந்ய பரிணமத்தால், ஜகந் யஸ்திதி ஞாநாவரணீயம் பந்திக்கும்; இப்பெற்றி ஜகந்யாநுபாகத் தோடு ஸர்வ யோகங்களையும் ஒட்டிப் பின் த்விதீயாநு பாகத்தோடு ஸர்வ யோகமும் ஒட்டி, இப்பெற்றி ஸர்வாநு பாகங்களோடு முறழ்ந்து பின் த்விதீயாதி பரிணமங்களோடு இப்பெற்றி உறழ்ந்த பின் த்வி தீயாதி ஸர்வஸ்திதியோடு முறழ்ந்து பின் இப்பெற்றி தர்மநாவர ணதி ஸர்வமூலப் பிரக்ருதிகளோடு ஒட்டியபின் மதிஞ்ஞாநாவரணதி ஸர்வோத்தர பிரக்ருதிகளோடுங் கிரமத்தாலுறழ்ந்து கொள்க. திரவ் யாதி பரிவர்த்தனைகள் கிரமத்தாற் சொன்ன முறைமை அனந்த குணங்கள் திரவிய பரிவர்த்தனம், தன்னுள்ளும் பாதரத்துக்கு சூக்ஷ்மத்துள்ளும் நோகர்ம பரிவர்த்தனத்துக்குக் கர்மபரிவர்த்தநம், அனந்த குணம் நோகர்மங்களும் ஜகந்யத்துக்கு உத்கிருஷ்டம் அனந்த குணம் பெரும்பான்மையும் பவத்தோடு பவததிடை அனந்தங் காலங் கழிந்தாலன்றி ஸம்பவியா. இப்பெற்றிப்பட்ட பஞ்சஸம்ஸாரம் அதீத காலத்து ஏகஜீவனல் அனந்தம் அநுபவிக்கப்பட்டன.

அக்ரம பரிவர்த்தன மென்பது திரவ்யாதி பஞ்சகங்களைச் சொன்ன முறையையன்றி யதாஸம்பவம் அநுபவித்தலாகும். இப் பெற்றிப்பட்ட பஞ்ச பரிவர்த்தனைக்குக் காரணமாகி அநாதியாய்ப் பந்தித்து வரும் ஸம்ஸார சக்ரம் வருமாறு: மித்யாஜ்ஞாநத்தோடு அந்விதமான மோஹத்தாலே, மமாஹங்காரங்கள் ஸம்பவிக்கும்; மமா

ஹங்காரங்களாலே ஜீவனுக்கு ராகத் வேஷங்களாம்; ராகத் வேஷங் களாலே பின்பு கஷாய நோகஷாயங்களாம்; கஷாய நோகஷாயங்களால் மனோ வாக்குக் காயங்கள் பிரவர்த்திப்பனவாம்; மனோ வாக்குக் காயப் பிரவர்த்தநங்களால், பிராணி வதாதிகளாம்; பிராணி வதாதிகளாலே கர்மங்கள் பந்திப்பனவாம்; கர்ம பந்தத்தாலே, ஸுகதி, துர்க்கதி களாவனவாம்; ஸுகதி துர்க்கதிகளாலே, கஷாயங்கள், இந்திரியங்க ளோடு கூட ஜநிப்பனவாம்; இந்திரியார்த்தங்களை இந்திரியங்களாலே கிரகிக்கிறவன் அயதார்த்த ஞாநாந்விதமான, மோஹத்தனும், ஏவம ராகத்வேஷ மோஹங்களை யடைவானும்; மோஹங்களாலே பந்தனும் புநபி புநபி ப்ரமிப்பானும்; இந்த சம்சார சக்கிரம், பவ்யனுக்கு, அநாதி ஸாந்தமாம்; அபவ்யனுக்கு, அநாதி அனந்தமாம். ராகத்வேஷமோ ஹாதியால் உபஹதனாதலில் கர்மங்கட்கு கர்த்தாவாகியவனே ஜன் மாந்தரத்து போகி அதனது பலமான சுகதுக்கங்களை அநுபவிப்பா னிவனே அதனது ஹேதுவான மித்யாதர்சநாதிகட்கு விருத்தமான ஸம்யக்தர்சநாத்யப்பியாஸ பரமபிரகர்ஷத்தினால், நிச்சேஷமாக நிர் மூலிக்கப்பட்ட கர்ம பிரக்ஷத்தனாகி ஸஹஜ பரமானந்தபதம் அடை வானு மென்று விசாரித்தல், ஏகத்வானு பிரேக்ஷையாகும்.

அநாதிப்பிரவாஹத்தால், ஜீவசரீரங்கட்கு ஏகத்வாத்யவஸாய முளதேயாகிலும், லக்ஷணபேதமுண்டாதலின் அவற்றுக்குப் பரமார்த் தரூபத்தால், ஏகத்வமுளதாவதன்று; கட்கமும் கோசமும்போல, சரீ ரத்துக்கு இந்திரியததால் பஹிர்முகமாக வறியப்படுந் தன்மையாகும். ஜீவனுக்கு இதுவாவதன்று அவனுக்கு அஹமென்று அந்தர்முகமான ஸ்வஸம்வேதந பிரத்யக்ஷத்தாலறியப்படுந் தன்மையாகும். சரீரத்து க்கு இது பொருந்தாது. ஜீவனுக்கு ஸ்வபரவிஷயங்களைப் பரோக்ஷதா ஞாநங்களால் கிரகித்தல் ஸ்வரூபமாகும். அசேதனுக்கு அது பொருந் தாது; சரீரம் புத்கலதிரவ்ய பரமாணுக்களது பிண்ட பர்யாயரூபமாத லில் அத்யந்தஸஹிதமாகும்; அவனுக்கு அது பொருந்தாது. அவன் பூர்வோத்தர பர்யாயங்களது, வ்யயோத்பாத திரௌவ்ய ரூபத்தால், அநாத்யநந்தனாதலில் சரீரபரமாணுக்களது பரஸ்பரானு பிரவேசமாத லில், அநேக திரவ்ய ரூபமாகும். ஆபாதமஸ்தகம் வியாபியாகக் காணப்படாநின்ற ஜீவதிரவியத்தினுக்கு பேதமின்மையிலது ஏகதிரவ் யமேயாகும். என்றிவ்வண்ணம் சரீராத்மாக்களது பரஸ்பரவிவேகம் பாவித்தல், அந்யத்வாநு பிரேக்ஷையாகும்.

ஜநக ஜநநீ ஜநங்களது, அத்யந்தாசுசியாகிய சுக்லஸ்ரோணிதங்களை உபாதானமாக வுடைத்தாதலாலும், ஆதலின் அது உதரவிவரத்துள் பரிபூரிதமாகி, அநேக விதமாகிய மலவிசேஷங்களால் பரிவிரதமாதலாலும், அதிபவித்ரமான சந்தநகந்த மால்யாதியாகிய வஸ்துவிசேஷங்களைத் தனது ஸம்ஸர்க்கமாத்திரத்தால் அதிமலினமாகச் செய்வதாதலினுலும், பிரதிக்ஷணம் நவத்வாரங்களால் நாநாவிதமல விசேஷங்களை பரிஸ்ரவிப்பதாதலாலும், அத்யந்தமலிநமாகிய உபசய சரீரத்தின்கண் ஒரு அதிசயங் காணப்படுவதன்று; ஸம்யக்தர்ஸநக் ஞாநசாரித்ரங்களது பாவநாவிசேஷத்தால் பவித்ரனுகிய பரமாத்மாவினுக்கு அதிஷ்டானமாதலினிதற்கு ஒரு குணவிசேஷமுமே யுளதாவதென்று சிந்தித்தல், அசுசித்வாநு பிரேக்ஷையாகும்.

ஆஸ்ரவம் பத்துவகைப்படும். அதனை சிநதித்திருக்கும் பிராகாரமாவது:ஸ்பர்சநேந்திரிய விஷயாபிநிவேசவேகத்தால் கரிணீஸக்தமான வநகஜம்போலவும், ரஸநேந்திரிய விஷயாபிநிவேச வேகத்தால் பளிசாக்ரத்தில் ஸம்பந்தமாகிய மாம்ஸலேசத்தினுல், ஸக்தமாநமத்ஸ்யம் போலவும், கிராணேந்திரிய விஷயாபிநிவேச வேகத்தால், விகஸபத்ம கந்தலோலுபமான மதுகரம்போலவும், நயநேந்திரிய விஷயாபிநிவேச வேகத்தால், பிரஜ்வலியாநின்ற பிரதீபமாலையின்கண் அபிரதமான பதங்கமேபோலவும, ஸ்ரவணேந்திரிய விஷயாபிநிவேச வேகத்தால் வ்யாதனுற் பாடப்பட்ட கீதரஸாநுஷக்தமான மிருககணம் போலவும், பஞ்சேந்திரிய விஷயவசத்தராகிய ஜந்துக்கள் வ்யஸநமஹார்ணவ மத்யத்துள், நிபதிதங்களாகிய ஜந்மாந்தரங்களிலும் பஹுவிதமான நரகாதிதுக்க மஹாஜ்வாலைகளில் பரிதவியா நின்றூர்கள் என்று ராகாத்யாஸ்ரவங்களது தோஷங்களைச் சிந்தித்தல் ஆஸ்ரவாநு பிரேக்ஷையாகும்.

மஹாஜலதிமத்யத்துள் ஓடாநின்ற யாந பாத்ரத்தினது விவரங்கட்கு நிரோதமில்லாத காலத்து விவரத்தால், ஆஸ்ரவியாநின்ற ஜலங்களால் பரிபூரிதமாகியவது, அநேக விதமாகிய ரத்நாதிதநராசியோடுங் கூட ஸமுத்ர ஜலத்தில் நிமக்நமாகும்; அந்த விவரங்கட்கு நிரோதமுண்டாகில் அது இஷ்டமான தேசத்தை அடைவதாகும்; அது போல முன் சொன்ன, ராகாத்யாஸ்ரவங்கட்கு குப்திமுதலானவற்றுல், ஸம்வரமுண்டெனில் பிராணிகட்கு அபிமதமான பரமானந்த பத்தநம் பிராபித்தலாகுமென்று சிந்தித்தல், ஸம்வராநு பிரேக்ஷையாகும். தனது அறியாமை காரணமாகவும், பரநிந்தாகாரணமாகவும்,

உபயோகிக்கப்பட்ட அத்யாஹாரங்கட்கு தத்யோக்ய பிரத்யௌஷதங்களை உபஸேவிக்கவத்தான பலிக்குங்கால மொழிய ரஸவீர்யாதிகளால் மந்தமாகி அல்பகாலத்துள் ஜரித்தலுண்டாகுமதுபோல, அநாதிப்பிரவாஹத்தால், வாராநின்ற, அஜ்ஞாநாதி ஸஹஜமோஹங்காரணமாகவும், துராப்தாது துரூபதேசத்தாலும், வருவதான ஆஹார்யமோஹங்காரணமாகவும், ஸஞ்சிதமான ஞாநாவரணீயாதி கர்மங்கட்கு, அவற்றின் ஹேதுவானமித்யாதர்சந, மித்யாஜ்ஞாந மித்யாசாரித்ரங்கட்கு விருத்தமான ஸம்யக்தர்சன ஞாநசாரித்ரங்களை பகவதர்ஹத்பரமேஸ்வரப்பிரணீத பிரகாரத்தால் அநுஷ்டித்தலுண்டெனில் தான்பலிக்குங்காலமொழிய, ஸ்திதிகளும் வீர்யங்களும் குறைந்து நிர்ஜரித்தலுண்டாகுமென்று சிந்தித்தல், நிர்ஜராநுபிரேக்ஷையாகும்.

லோகஸ்வரூபத்தை விசாரித்தல் லோகாநுப்ரேக்ஷையாகும்.

---

## போதி துர்லபம்

இப்பெற்றிப்பட்ட லோகத்துள், ஏகேந்திரியமாகி ஸ்தாவரஜீவன்கள், அநந்தாநந்த பிரமாணத்தன. அவற்றுள், ஐநியாது ஜங்கம சரீரப்பிராப்தி, ஸமுத்ர ஜலத்துள் வீழ்ந்த ரத்நபாம்சுலேசம்போல, அதிதுர்லபமாகும். ஜங்கமஜீவன்களுள், த்வீந்திரிய, த்ரீந்திரிய சதுரிந்திரியமென்னும் விகலேந்திரியமொழிய பஞ்சேந்திரியமாதல் விசிஷ்ட குணங்களுள், கிரதக்ஞதைச் செய்நன்றி யறிதலென்னும் குணம்போல் அரிதிற் பெறப்படும் பஞ்சேந்திரியங்களுள், பசுபக்ஷ்யாதி திர்யக்ஜாதியொழிய மநுஷ்யபவமும், நாற்சந்தியில்பருஜநஸங்கீர்ணமான பிரதேசத்துள், சுஜநஸம்பாவநம்போலக் கிட்டுவதன்று. கிட்டிற்றாகிலும் ஸர்வலோகப் பிரஸித்தமான க்ஷத்ரியாதி வம்சங்களில் ஜநித்தல், அவிகலேந்திரியனாதல், அரோகனாதல் என்னுமிவை, உத்தரோத்தரம் அதிதுல்லபமாகும். அவை பெற்றாலும் திருஷ்டேஷ்டாவிருத்தமான அநேகாந்தமார்க்க நிபுணமாகிய புத்திவிசேஷமின்றெனில், அந்த ரூபஸௌந்தர்யம், தத்வாதத்வங்களை விவேகித்துக் காணவல்ல லோசநயுகளவிகலமான முகம்போல வியர்த்தமேயாவதாகும். அது பெற்றாலும் அதற்கு பலமாகிய ஸர்வஸங்கவிப்ரமுக்தி ரஹிதமாவதாகில் யுத்தரங்கத்துசபலனால் விடப்பட்ட அச்வரத்நம்போல பலாகாரமாவதன்று. அது பெற்றாலும் ஞாநவைராக்ய தபோ

பாவநாதிகளை சாதநமாகவுடைய பரமாத்மதர்சந லக்ஷணமாகிய பர மத்யாநம் சுலபமாவதன்று என்று சிந்தித்தல் போதிதுர்லபாநு பிரேக்ஷையாகும்.

---

## தர்மஸ்வாக்கியாநம்

பகவதர்ஹத்பிரணீதமான சத்தர்மம் அஹிம்ஸாலக்ஷணத்தது, சத்யமென்னு மதிஷ்டாநமுடையது விநயமென்னும் மூலமுடையது க்ஷமை என்னும் மஹாபரிகரமுடையது பிரம்மசர்யமென்னும் ஸால வலயத்தாற் சூழப்பட்டது நிஷ்பரிகிரஹதை என்னும் பரிகாவலய முடையது வைராக்யமென்னும் மஹாபலமுடையது. இதனைப்பெறுத ஜீவன்கள், கர்மமென்னும் அராதிசக்ரங்களால் பரிபவிக்கப்பட்டு சம் சாரகாந்தாரத்துள் சிரகாலம் பரிபிரமியா நின்றார்கள். இதனைப் பெற் ருல் கர்மாராதிகட்கு அக்லேசமாக விஜயஞ்செய்து விவிதமான அப்யு தய சௌக்யங்களை அநுபவித்து சகஜபரமாநந்த சக்ரவர்த்தி சாம் ராஜ்யமடைகுவரென்றும் குதர்க்கங்களால் அதர்க்யமாகிய தர்க்கமு மிதரமுமாகிய சித்தாந்தத்தின் மிகவும் கிருதார்த்தராகி ஜயலாபாதி யில் விமுகராகி பாரஹிதகரணைகமுகராகிய பரமாசார்யருடைய அப்ர மாதோபதேச வசநம் துராபமென்று சிநதித்தல் தர்மஸ்வாக்யாந தத் வாநுபிரேக்ஷையாகும்.

தபஸ்ஸு இருவகைப்படும். பாஹ்யதபஸ்ஸும் அப்யந்தரதபஸ் ஸுமென. பாஹ்யதபஸ்ஸு ஆறுவன:—அநசநம், அவமோதர்யம், விரத்தி பரிஸங்கியாநம், ரஸபரித்யாகம், விவிக்த்த சய்யாசநம், காய கிலேசம் என. அப்யந்தர தபஸ்ஸு, ஆறுவன:—பிராயச்சித்தம், விந யம், வையாபிரத்யம, ஸ்வாத்யாயம், தியாநம், வ்யுத்ஸர்க்கம் என. அவற்றுள் அநசநமென்பது இஹலோகபலங்களில், அபேக்ஷை யின்றி, ஸம்யமஸித்தி, இந்திரியதர்ப்ப விநாசம், பூர்வகிருதகர்மங்கட் கும் அகாலத்து பிரளயம், த்யாநம் கைவருதலென்னுமிவை காரண மாக பலவாளுகி ஞாநபாவநாபரளுகிய புருஷனது சக்திக்குப் பொருந்த, சதுர்விதாஹாரஙகளை வர்ஜித்தலாகும். அவமோதர்ய மென்பது அதிநித்ராதோஷதகைப் பரிஹரித்தல். பெற்றவதனுல் ஸநதுஷ்டனுதல், என்னுமிவை காரணமாகத் தானுண்ணும் ஆஹாரத் தினைக் குறைத்துண்டலாகும். திரஷ்ணையடக்குதற்கு ஏககிரகம்மிவை முதலானவற்ருல், சர்யாபுனத்தை யளவிடுதல், விரத்தி பரிஸங்கி யானமாகும். இந்திரிய விஜயாதி காரணமாக, கிருதம், க்ஷீரம், ஹுடம்,

தைலம், பலமென்னும் தாது விருத்தி நிமித்தமான பஞ்ச ரசங்களைத் தவிர்த்தல், ரஸபரித்யாகமாகும். பிரம்மசர்யம், நிர்விகல்பத்யாநம் முதலான தன்பொருட்டு க்ஷுத்ரஜந்து பீடாரஹிதமான சூன்யாகார கிரி குஹை பிரேதாவாஸமென்னு மிவைமுதலான ஏகாந்தப்பிரதேசங்களிலிருத்தலும், விவிக்த்தசய்யாசநமாகும். ஸம்யக்தர்ஶநஜ்ஞான சாரித்ரவைராக்யங்களவை வருதலில், ஸம்ஸார பயத்தால் கர்மங்களை சடிதிநிர்ஜரிப்பித்தல் காரணமாக, ஆதபம், விருக்ஷமூலம், வெள் ஆகாசமென்னுமிவற்றுள், கிரீஷ்மகாலம், வர்ஷாகாலம் ஹிமத்காலமென்னும் காலங்களுள், ஸமாதியோகத்தில் தளர்வின்றி பிரதிமைபோல சலியாது நிற்றல் காயக்கிலேசமாகும். பிராயச்சித்தமென்பது, அஜ்ஞாநங் காரணமாக பிரமாதத்தாற் செய்யப்பட்ட பாபாதிகட்கு அதற்கு விருத்தமான வைராக்ய பாவனைகளால் பரிகாரஞ் செய்தலாகும். விநயமென்பது தத்வார்த்த விஷயமான ஸம்யஜ்ஞாந ஸம்யக் தர்சநங்களிடத்தும் ஸம்யக் சாரித்ரத்தின் கண்ணும், இவற்றால் பவித்ரமான மஹாயோகிகளிடத்தும், மநோ வாக் காயபூர்வகம பக்தி பண்ணுதலாகும். வையா பிரத்யமென்பது, ஸம்யக்தர்ஶநாதிகளைத் தாங்கள் ஆசரியா நின்று, ஒழிந்தாரையும் ஆசரிப்பியா நின்ற ஆசாரியர் மோக்ஷ சாஸ்திரத்தை பவ்ய ஜநங்கட்கு யதாவத் உபதேசியா நின்ற உபாத்யாயர்கள், மஹோபவாஸாதி மஹா தபஸ்ஸுக்களைச் செய்யும் தபஸ்விகள், அநேகாந்தமாகப் பிரதிபாதகமான சாஸ்த்ரத்தினை, அப்யஸியா நின்ற சிஷ்ய ஜநங்கள், ரோகாதிகளால் பீடிக்கப்பட்ட க்லாந ஜநங்கள் என்றிவர் முதலாயினார்க்கு, ஆஹாரம், ஔஷதம், சாஸ்த்ரோபதேசம் என்னுமிவற்றால் யதாசக்தி பரிஹரித்தலாகும். ஸ்வாத்யாய மென்பது, தத்வ சாஸ்திரத்தினை சப்த ரூபத்தாலும் அர்த்த ரூபத்தாலும், பிறர்க்கு உபதேசஞ் செய்தல், அதனது ஸம்சயங் கெடுத்தல், அறியப்பட்ட தத்வார்த்தம் திருடமாதல் என்னு மிவை நிமித்தமாக, ஆசார்யர்களை, பிரச்நஞ் செய்தல், அதிகதமான தத்வார்த்தத்தினை மநஸ்ஸினால் அப்யஸித்தல், படிதமான தத்வார்த்த கிரந்தத்தினைப் பலகாலும் பரிவர்த்தித்தல், அஹிம்ஸா பிரதாநமாகிய தர்மத்தினை, யுக்தியுக்த்தமாகப் பிராணிகட்கு உபதேசம் செய்தலென்னு மிவையாகும். தியாநமென்பது பரமார்த்த வஸ்துவின் கண், சிந்தையினை பஹுமுகமாகா வண்ணம், நிறுத்தலாகும். வ்யுத்ஸர்க்க மென்பது, க்ஷேத்திரம் வாஸ்து முதலான பாஹ்ய பரிகிரகங்களையும் காம குரோ

தாதி அப்யந்தர பரிக்கிரகங்களையும், பரித்யஜித்தலாகும். ஸம்யமம் த்வாதச விதமாகும்:—அவற்றுள் விஷய ஸம்யமம் ஆறும், பிராணி ஸம்யமமாறு மெனை. தத்ர விஷய ஸம்யமம் ஆறுவன: பஞ்சேந்திரிய விஷயஸமயமும், மனோ விஷய ஸம்யமமும் என. பிராணி ஸம்யம மாறுவன, பிருத்வீகாயாதி ஷட்காய ஸம்யமமாகும்; பரீஷஹ ஜயம், த்வாவிம்சதி விதம்: க்ஷுத், பிபாஸா, சீதோஷ்ண, தம்சமசக, நாக்ந்ய, அரதி, ஸ்திரீ, சர்யா, நிஷத்யா, ஶய்யா, ஆக்ரோச, வத, யாசந, அலாப, ரோக, திரணஸ்பர்ச, மல, சத்கார, புரஸ்கார, பிரக்ஞ, அஜ்ஞாந, அதர்சந மென்று சொல்லப்பட்ட பரீஷஹஜய மிருவகைப்படும். பாஹ்ய பரீஷஹ ஜயமும் அப்யந்தர பரீஷஹஜயமுமெனை: அவற்றுள் பாஹ்ய பரீஷஹ ஜயம் பத்து வகைப்படும். அவை யாவன

வெப்ப தட்பங் கடிப்பன குத்துவ
வித் திவதையலை புல்லூறு மிக்க
சிறப்பு முறைபாட்டோடு மெய்ம்மாசு தரித்தல்
புறப் பரிசை புல்லியவாம் பத்து.

அப்யந்தரம் பன்னிரண்டு வகைப்படும்.

பசிபேறு நீர்த்தாபஞ் சேலை மேவாமை
யோசியு ஞெய்கோட் பிறவாமையோ
கிவற்றிருதல் கிடதத லறிவுகாண் பின்மை
யகப்பரிசை யாறிரண்டா நற்கு.

சாரித்ர மென்பது சரீராதி பரதிரவ்யாநுஷங்கத்தால், எழா நின்றராகாதி விகாரங்களை பரித்யஜித்து ஸுகதுக்கம், ஜீவித மரணம், பந்து மித்ரம், பிரசம்ஸை நிந்தை லோஷ்ட காஞ்சநம், என்னுமிவற்றுள் ஸமதர்ஶியாகி, ஞாநதர்சநாதி லக்ஷணனுகிய பர மாத்மாவினை, ஸ்வஸம்வேதந பிரத்யக்ஷத்தால், அநுபவித்து நிஶ்சல மாக விருத்தலாகும். அப்பொழுது தீபம் இருந்த கிரகத்து அந்த காரம் பிரவேசிக்க முடியாதாற்போல இந்த தியாநத்து நின்றவீதராக ரிடத்து அஷ்டவித கர்மங்களும் பந்தியாதாகும். இவ்வண்ணம் ஸம் வர ரூபமெல்லாம் பரமாகமத்துக் கண்டு கொள்.

நிர்ஜரை என்பது முன்சொன்ன ஸ்தித்யநு பாகமுடைய வான. ஞாநாவரணுதி கர்மங்கட்கு பலகாலமொழிய அதற்கு யோக்கியமான பரிணும விசேஷத்தால், அகாலத்து பலிப்பித்த லாகும், அதற்குக் காரணமான பரிணுமமாவன: தபஃஸம்யம பரிஷஹ ஜயங்களும், ஞாந த்யாநங்களுமாகும். அவற்றுள் தபஃஸம்யம பரீஷஹ ஜயங்கள் ஸம்வர

பதார்த்தத்துள் சொல்லப்பட்டன. ஞானமென்பது பரமாகமஸ்ரவணம் சப்தத்தாலும் ஐந்மாந்தர ஸம்ஸ்காரமுடையார்க்கு பிபீலிகாதி திரவ்யதர்சனத்தாலும் அந்வய வியதிரேக விசிஷ்டமாக பஞ்சாஸ்தி காயங்களை கிரகிக்கிற சூக்ஷ்ம ஜ்ஞாநமாகிய ஸ்ருதக் ஞானமாகும். தியாநம் இருவகைப்படும். சுபம், அசுபம் என. தத்ர அசுபத்யாநம த்விவிதம் ஆர்த்த ரௌத்ரமென. அவற்றுள் ஆர்த்தமென்பது மநோதுக்கந் காரணமாகத் தோன்றா நின்றதென்றவாறு.

அது நாலுவகைப்படும். இஷ்டவியோகத்தாலும், அநிஷ்டயோகத்தாலும் வநததும், வேதனையால் வந்ததும், நிதாநத்தினால் வநதது உமென. அவற்றுள் இஷ்டவி யோகத்தால் வந்ததென்பது, புத்ர மித்ரகளத் ராதிகளான இஷ்டவஸ்துக்களுக்கு மரணாதிகளால் வியோகம் வந்தகாலத்து அவற்றை நோக்கி, எழா நின்றதாகிய சோகாதிகளால் மிஸ்ரிதமான நினைவினது தொடர்ச்சியென்று சொல்லப்படும்: அநிஷ்டயோகத்தால்வந்ததென்பது, சத்ருக்கள் அஹிவிஷாதிகளென்னுமிவற்றுக்கொரு காரணத்தாற் கூட்டமுண்டானகாலத்து இவறறின் பிரிவினைநோக்கி எழா நிற்பதாகிய வெறுப்பினோடு கலந்கியநினைவினது தொடர்ச்சியென்று சொல்லப்படும். வேதனையால் வநததென்பது, பூர்வகிருத பாபங்களான வினைவிலுண்டான துக்க நிமக்நரான ஜநங்கட்கு, அந்த துக்கத்தினது விநாசம் நோக்கி, எழாநின்ற நினைவினதுதொடர்ச்சியென்று சொல்லப்படும். நிதாநத்தால் வந்ததென்பது : சக்ரவர்த்திகள் தேவேந்திர நாகேந்திர வித்யாதரரொன்னுமிவர்களான அதிரமணீயமான போகோப போகஸாம்ராஜ்ய விபவங் கண்டு, அது விஷயமாக எழாநின்ற மறை திருஷ்ணையோடு கூடிய நினைவினது தொடர்ச்சி என்று சொல்லப்படும். இப்பெற்றிப்பட்ட நாலுவகைப் பரிணமங்களும் அவ்விஷயத்தின்கண் ஏகப்பிரகாரத்தால், அந்தர்முகூர்த்த மிறுதியாக நடப்பனவாகில், அவை ஆர்த்தத்யானமென்று சொல்லப்படும். இந்த ஆர்த்தத்யானத்திற்குப் பலம்: திர்யக் கதிதுககமாகும். ரௌத்திரத்யாநமென்பது, கொடிய பரிணமத்தால் வநததாகும். அது சதுர்விகல்பமாகும். ஹிம்ஸாநந்தம், மிருஷாநந்தம், ஸ்தேயாநந்தம், ஸம்ரக்ஷணாநந்தமென. அவற்றுள் ஹிம்ஸாநந்தமென்பது, பாபர்த்திமுதலானவற்றால் பிராணிகளை ஹிம்ஸித்து கிரீடை பண்ணுதல். பிராணிகளுடைய அவையவங் குறைத்தல், அவற்றை ஸந்தாபாதிகளால் வருத்துதல், அபராதிகளால் அதிபருஷமாக அடித்த

லென்னு மிவைமுதலானவற்றின்கண், மீட்டுமீட்டு மெழாநின்ற ராக விசேஷமாகும். ம்ருஷாநந்தமென்பது, அநிஷ்டஜனங்களை வஞ்சித்தல் காரணமாக, அத்யந்தம், அஸத்யமாகிய வசநங்களை என்ன காரணத் தாற் சொல்லுவது என்றெழாநின்ற ராக விசேஷமாகும். ஸ்தேயா நந்தமென்பது, தனதாந்யாதிபரதிரவ்யங்களை சோரவிர்த்தியால் பரி க்ரகிப்பேனென்று எழாநின்ற ராக விசேஷமாகும். தநதாந்ய கோமஹி ஷாதிகளை அதிதிருஷ்ணையால் பரிக்கிரகித்து இவற்றின் விருத்தி யெல்லாம் தன்னவாக நினைந்து இவற்றை ஸம்ரக்ஷித்தல் காரணமாக அலமராநின்ற ஜந்துவினது, ஹ்ருதயத்துச் செல்லாநின்ற வியாகூல விசேஷமாகும். இந்தப் பரிணாமங்கள் அந்தர்முஹூர்த்த பர்யந்தமாக ஒருபடியே நிகழ்வனவாகில் அது ரௌத்ரத்யானமாகும். இதனது பலம் நரகத்துதீவ்ரதுக்கங்களாகும். இவ்விரண்டு உ¬ஐ-ஃயாநங்களும் ஸம்ஸாரபீத சித்தராகிய ஸம்யக்திருஷ்டி ஜநங்கள் மநஃபிரணிதாநபூர் வகம அத்யந்தம் பரிகரிக்கப்படும். சுபத்யானமென்பது, அவற்றுள் அதற்கு யோக்யமானதேசாதிஎன்பது கிரீடாதத்பரராகிய பாலஜனங் கள் அதிபிரவிருத்தராக பரவஸ்திரீகள் அலிகள் மர்மஸ்தாநாதிசளில் உபத்ரவிப்பனவானக்ஷு ஊஜந்துக்களென்னும் இவற்றால் வர்ஜிதமாகி, அத்யுஷ்ணமும் அதிசீதமுமின்றாகிய சூந்யகிரகம்,ஸ்மசாநப்பிரதேசம், ஜீர்ணோத்யானம், ஸரித், புளினம், பர்வதாக்ர முதலாகிய சித்த வியா க்ஷேபரஹிதமான க்ஷேத்திரங்களுள் பர்யங்காஸனத்தாலொன்றோ, தவாதிரிம் சத் தோஷங்களால் பரிவர்ஜிக்கப்பட்ட காயோத்ஸர்க்கத்தா லொன்றோ, வியவஸ்திதனாகி ஸகளீ கரணமுதலான கிருத்யங்களைச் செய்தலென்னும் இத்யாதியாகும். த்யாதாவென்பான், விசுத்தஸம் யக்திருஷ்டியாகி ஹேதுவாதாதி பேதமுடைய பரமாகமத்தில் சிரபரிச யத்தால் நிரஸிக்கப்பட்ட மித்யைகாநதகாதிகள் நான்கு தர்க்கவாதங்க ளுடையனாகி, ஸம்ஸாரசரீரபோகங்களது அஸாரபாவத்தை அநித்யத் வாதி பிரகாரங்களால் விசாரிப்பானாகி கிருஷ்ண, நீல, கபோதமென் னும் துர்லேஸ்யைகளைப் பரித்யஜித்து தேஜஃ, பத்ம, சுக்லமென்னும் ஸல்லேசைகளைப் பரிக்கிரகிப்பானாகி க்ஷுத்பிபாஸாதி பரிஷஹங்களை ஸஹிப்பானாகி, மநோவாக்கு, குப்தனும்பரம வைராக்யபரனுமாகிய புருஷோத்தமனாகும். புரோக்தமானலேஸ்யைகளுள் கிருஷ்ணலேஸ் யையென்பது, குரோதிக கஷாயதீவ்ரத்வமும் தீர்க்கவைரத்வமும் பிரதிகூலத்வமும், தயா ரஹிதத்வமும், அதீவதிருஷ்டத்வமும் ஒரு வற்கும் வசவர்த்தி இல்லாமையுமாகும். நீலலேஸ்யை என்பது அதிக

நித்ராலுத்வமும், அதிகமாயாவித்வமும், வஞ்சனசீலத்வமும், மந்த புத்தித்வமும, விஷயலோலுத்வமும், அல்பஸத்வமும், அப்யேதியத் வமுமாகும். கபோதலேஸ்யை என்பது புத்திமந்தத்வமும் பரநிந் தையும் ஆத்மபிரசம்ஸையும் அதிகிரத்தத்வமும், அப்பிரசஸ்தகிரியா வர்த்தித்வமாகும். தேஜோலேஸ்யை என்பது கிருத்யாகிருத்யவிசாரத் வமும் தயாதானுதி புண்யபரிணமத்வமும் விசதபுத்தித்வமுமாகும். பத்மலேஸ்யை என்பது மந்தகஷாயத்வமும் பிரஸந்நபாவமும் ஸர்வஜ்ஞாநுராகத்வமும் தர்மவாத்ஸல்யத்வமு முதலாகிய குணங்களாகும். சுக்லலேஸ்யை என்பது ராகாதிபரிணமத்தால், அதிமந்தமாகி நிசித புத்தியாகிஸமத்விபாவமாகிய தர்மாநுராகத்தை யுடைத்தாகியதாகும். த்யேயமென்பது அஷ்டகுணங்களால் பரிபூரணமான ஸித்தபர மேஷ்டிகளும் காதிகர்மங்கள் க்ஷயத்தினுல் அநந்தசதுஷ்டய பிராப்த ரும், நரேந்திர, சுரேந்திர, மிருகேந்திர, முநீந்திரவந்தியரும் வீதராக ஸர்வஜ்ஞருமாகிய அர்ஹத்பரமேஷ்டிகளும், தீக்ஷாதாநம் சாஸ்த்ரோப தேசம் மார்க்காநுஷ்டானமென்னு மிவற்றால் விசேஷிக்கப்பட்ட ஆசார்யபரமேஷ்டிகளும், சாஸ்திரோபதேசம, மார்க்காநுஷ்டாந தத் பரராகிய உபாத்யாய பரமேஷ்டிகளும், மார்க்காநுஷ்டான தத்பரராகிய ஸாதுபரமேஷ்டிகளுமென்றும் ஸ்ரீபஞ்ச பரமேஷ்டிகளும் ஞானதர் மநஸ்வபாவமாகிய ஜீவதிரவ்யமுதலான ஷட்திரவ்யங்களாகும், இதன் பலமாவது ஸகலகர்மவிப்ரமுக்தியும் ஸ்வர்க்காதி ஸுகமுமாகும். சுபத் யாநம் த்விதம்; தர்மத்யாநம், சுக்லத்யாநமென. அவற்றுள் தர்மத் யாநமென்பது ஸம்யக்தர்ஸநக்ஞாந சாரித்ரங்கள் தர்மமென்பதாகும். அதனைவிட்டு நீங்காதாகிய பரிணமவிசேஷம் தர்மத்யாநமாகும். த்யா நம் தசவிதம்: திரவிய விசயம், க்ஷேத்திர விசயம் காலவிசயம், பாவ விசயம், பவவிசயம், ஹிதவிசயம், அஹிதவிசயம், உபாய விசயம், அபாய விசயம், விபாக விசயம் என. அவற்றுள், திரவ்யவிசயமென் பது ஜீவபுத்கல தர்மாதர்மாகாசகாலமென்னும் ஷட்விதமான திரவி யங்களை தியானித்தலாகும். க்ஷேத்திரவிசயமென்பது, பஞ்சாஸ்தி காயங்களுடைய ஸ்வரூபக்ஷேத்திரத்தினையும் ஸர்வசரீரிகளுடைய சரீரமாகிய பிண்டக்ஷேத்திரத்தினையும் த்யானித்தலாகும். காலவிசய மென்பது பஞ்சாஸ்திகாயங்களுடைய ஸ்வரூப காலத்தினையும் ஆயுஸ் தித்யாதி பிண்ட காலததினையும், உத்ஸர்ப்பிண்யவஸர்ப்பிண்யாதி பின்ன காலத்தினையும் சிந்தித்தலாகும். பாவ விசயமென்பது ஔத யிகபாவம், ஔபசமிகபாவம், க்ஷாயோபசமிகபாவம், க்ஷாயிகபாவம்,

பாரிணாமிகபாவமென்னும் பஞ்ச பாவங்களைச் சிந்தித்தலாகும். தேஷா உதயபாவமாவன: கதி 4. கஷாயம் 4. வேதம் 3. மித்யாதர்ஸநம், அஜ்ஞாநம், அஸம்யதம், அஸிதத்வம், லேஸ்யை 6. என. உபசமபாவமாவன: ஸம்யக்தர்ஸநமும் ஸம்யசாரித்ரமுமென. க்ஷயபாவமாவன: அனந்தஜ்ஞாநாதி சதுஷ்டயமும், அனந்தமாநம், அனந்தலாபம், அனந்தபோகம், அனந்தோபபோகம், அனந்தம் ஸம்யக்த்வம் என. க்ஷாயோபசமபாவமாவன: மதிஜ்ஞாநம், ஸ்ருதஜ்ஞாநம், அவதிஜ்ஞானம், மநபர்யாயஜ்ஞாநம், குமதிஜ்ஞானம், குஸ்ருதிஜ்ஞாநம், விபங்கஜ்ஞாநம், சக்ஷுதர்சநம், அசக்ஷுதர்சநம், அவதிதர்சநம், தாநம், லாபம், போகம், உபபோகம், வீர்யம், வேதகஸம்யக்தர்சநம், ஸம்பூர்ணஸம்யமம், ஸம்யமாஸம்யமம் என. பாரிணாமிகபாவம் ஜீவத்வம் அவன் பவ்யத்வம், அபவ்யத்வம் என. பவவிசயம் என்பது, கதீந்திரியகாயங்களுடைய ஸ்வரூபங்களைச் சிநதித்தலாகும். ஹிதவிசயமென்பது, ஜீவன்களுக்கு ஹிதமாகிய மோக்ஷமார்க்கத்தினையும, மோக்ஷஸ்வரூபத்தினையும், சிந்தித்தலாகும். அஹிதவிசயமென்பது ஸம்ஸாரகாரணத்தினையும் ஸம்ஸாரசக்கிர பரிப்ரமணஸ்வரூபத்தினையும் சிந்தித்தலாகும். உபாயவிசயமென்பது ரத்நத்ரயமார்க்க ஸ்வரூபத்தினைச் சிந்தித்தலாகும். அபாயவிசயம் என்பது, ஸம்ஸாரத்து அபாயத்தினையும் சிந்தித்தலாகும். விபாகவிசயமென்பது, கர்மங்களுடைய விபாகத்தைச் சிந்தித்தலாகும். இதனது பலம் ஸ்வர்க்காபவர்க்கஸௌக்யமாகும். சுக்லத்யானம் நாலுவகைப்படும். பிருதக்த்வவிதர்க்க விசாரம் ஏகத்வவிதர்க்க விசாரம். சூக்ஷ்மகிரியா பிரவர்த்திவ்யூபரதகிரியா நிவ்ருத்தி என, இவை அத்யந்தம்பரமவீதராக மஹாயோகிகட்கு கோசரமாவதாகும். அஷ்டவிதகர்மங்கள், கார்யம் செய்யும் பிராகாரமும் தத்பாவத்தில், அஷ்டகுண பிராப்தியுமாமாறு, ஞாநாவரணீயமும், தர்சனாவரணீயமும், ஞாநதர்சன குணங்களிலும், வேதநீயமும், மோஹநீயமும், சதுரந்தராயமும், சைதன்யகுணத்திலும், ஆயுர்நாமகோத்ர வீர்யாந்தராயங்களுள் கிரியாகுணத்திலும், பலஞ் செய்யும் ஞாநாவரணீயங் கெட்டவிடத்து அனந்தஜ்ஞாநமும் தர்ஸநாவரணீயங் கெட்டவிடத்து அனந்ததர்சநமும், வேதநீயமும், மோஹநீயமும் சதுராந்தராயமுங் கெட்டவிடத்து அனந்தசுகமும், வீர்யாந்தராயங் கெட்டவிடத்து அனந்த வீர்யமுமாம். நாமகர்மங் கெட்டவிடத்து நிர்நாமமுங், கோத்திரங் கெட்டவிடத்து நிர்கோத்ரமும், ஆயுஷ்யகர்மங் கெட்டவிடத்து, நிராயுஷ்யமுமாகும். கேவல

சகல சதுர்முகராய் ஸ்பவத்தால், சுத்தராயினரிடத்து வேதநீ யம் க்ஷீணமான விடத்தும், அக்ஷீணமான விடத்தும், கார்யமான சுகதுக்கங்கள், யாதுஞ் செய்யாது கெடுமிடத்து அகாதிகளோடு கூடக் கெடும். மோஹநீயகர்மங் கெட்டவிடத்து உண்டாயதாகிய சுத்தி, அகாதிமல வலயத்தில், பிரஸ்பஷ்டமாய் சகலஸம்யக்த்வபாவ மாம். நிர்ஜரை முற்றும்.

மோக்ஷமென்பது பந்தஹேதுக்களான மித்யாதர்சனாதிகளது பாவத்தாலும் பந்தித்த கர்மங்களது நிர்ஜரையாலும் ஸகலகர்மங்க ளென்னும் மலங்களைக் கழித்து ஞாநாநந்தஸ்வபாவனை தனது ஸ்வரூபத்தைப் பெறுதலாகும். அஃதாமாறு மேற்சொல்லுதும்: பதார்த்த பிரமாணம் ஸமாப்தம். ப்ரவ்ர்த்தி என்பது அநந்தசக்தி பிரகிதமாகி அநேக பர்யாய பரிணமியாகி அதீதாநாகதவர்த்தமான காலத்ரயவர்த்தியாகி, அநேகாந்வயவ்யதிரேகதர்மகலாபாலங் கிருத மாகி நின்ற ஜீவாதி பதார்த்தங்கட்கு லக்ஷணமாகும். பிரதிக்ஷண பிர வர்த்தமான, பிரவர்த்தி ஸ்திரதா உத்பத்தி, ஸ்திதி, விநாசமெனை; தத்ர உத்பத்தி என்பது அபூர்வபர்யாயோத்பததியாகும். விநாச மென்பது பூர்வபர்யாய விராமமாகும். ஸ்திதி என்பது ததஉபய விரத்தி விரஹிதவஸ்துஸ்வரூபமாகும். அதவா, பிரவர்த்திர்நவதா: உத்பத்தியும், ஸ்திதியும், விநாசமும், விரத்தியும் ஹானியும் கோப மும், உபசமநமும் நிமித்தமும், நைமித்திகமுமென: தத்ரஸ்திதி ரூபம் திரவ்யரூபமாகும். சேஷாஷ்டகம் பர்யாய தர்மமாகும். உத பத்தி யென்பது, அபிநவபர்யாயோத்பத்தியாகும். ஸ்திதி யென்பது, உத்பத்யாதி ரஹிதவஸ்துரூபமாகும். விநாசமென்பது, பூர்வபர்யாய விராமமாகும். விரத்தி என்பது பர்யாயவர்த்தனமாகும். ஹாநியென் பது, பர்யாயஹாநியாகும். கோபமென்பது, பர்யாயகலுஷதையாகும். உபசமநமென்பது, பர்யாய சமநமாகும். நிமித்தமென்பது அபிநவ பர்யாய காரண பர்யாயமாகும். நைமித்திகமென்பது காரணகதபர் யாயமாகும். அதவா, பிரவர்த்தி த்ரேதா:—நித்ய பிரவர்த்தி அநித்ய பிரவர்த்தி நித்யாநித்ய பிரவர்த்திரிதி. திரவ்யாதிகள் நித்யபிரவர்த் தயஃ வ்யதிரேக தர்மங்கள் அநித்ய பிரவர்த்தயஃ அந்வய வ்யதிரே காம்சம் முதலியும் ஸாமாந்ய விசேஷமாஸ்ரித்து நித்யாநித்ய பிரவர்த் தயஃ—பிரவர்த்தி லக்ஷணம் ஸமாப்தம்.

## லிங்கம்

*லிங்கத்திரயை வர்ணீர்யத் பிரவி ஹிதவிஷயா ஸங்கமா நம்பஹீநம்
சஸ்தா காராங்கவர்ண ப்ரமிதி கம பஸர்மார்க்க ஹெத்வங்ய யோகம் ।
ஸ்வாங்காயத் தாங்ம ஜார்யத்ய ஜநஸமநந்தத் வவிக்ஞான பாத்ரந்
தச்சோத் ஸர்க்காபவாதோபய விதபவதாத ஸந்ததம் மங்கல் யந்த ঃ ||

லிங்கம்த்விதம்: திரவியலிங்கம், பாவலிங்கம் என; தத்ர திரவிய லிங்கம் த்விதம்: கிரகஸ்த லிங்கம் நிவிர்த்திலிங்கம் என. தத்ர கிரகஸ்த லிங்கமென்பது, ஆயாநாதி கிரியைகளாலும், கத்ரங்வயகிரியைகளாலும் ஸம்ஸ் கரிக்கப்படுவதாகி,பரிமித பரிக்கிரக ஸஹிதமாகி திரிஸூத் ராதி ஏக (தேச) சூத்ராதி ஏகாதச சூத்ர பர்யந்தமான பிரும்ஹ சூத்ரமென்னும் உரோலிங்கமும், மௌஞ் ஜீபந்த முதலான கடிலிங்கமும், சிரோ மௌண்ட்ய முதலான சிரோ லிங்கமு முடைத்தாகி தேவபூஜை, குரூபாஸ்தி, ஸ்வாத்யாயம், ஸம்யமம்தபஸ்ஸூதாநமென்னும், ஆர்யஷட்கர்மங்களை யுடைத்தாகி, திரிவர்ண ஜாதகமாகிய, திவ்யவேஷமும், ஸச்சூத்ராதிகட்கு, ஆயாநாதி, ஸம்ஸ்காரமின்றி, ஸம்யக்தர்சநவிரதாதியால் உபசாந்தமாகி, பரிமிதபரிக்கிரக ஸஹிதமாகிய வேஷமுமாகும்: நிவ்ருத்திலிங்கமென்பது, பூஷணவஸநாநுலேபநாதி பரிக்கிரகங்களால் பரித்யஜிக்கப்பட்டு ஹிமஸாபரிக்கிரக தைந்யபராலீனதார ஹிதமாகிய கேசோலுஞ்சித ஸமந்விதத் வாத்ஜாதரூபம்போல யதாஜாதரூபமாகி, சாலிக்ஷேத்ரம் போல, பஞ்சமஹாவிரதமென்னும் வேலியினுற் சூழப்பட்டதாகி, கிரிதுர்க்க தேசம்போல அவிசலிதமான - குப்திதிரயங்களால் பரிவேஷ்டிதமாகி, யாநபாத்ரம்போல நிவாரிக்கப்பட்ட பஞ்சேந்திரிய மென்னும், சித்ர முடைத்தாகி, சக்ரவர்த்தி ஸாம்ராஜ்யம்போல பஞ்சஸமிதிகளென்னும் மந்திரி கணங்களால் உத்தரிக்கப்பட்ட அசேஷதோஷமுடைத்தாகி, தநபதிசரீரம்போல யோக்யப்பிரயோகங்களால் பரிஹரிக்கப்பட்ட தோஷத்திரயமுடைத்தாகி, ஸூபடமேஹம்போல மூலத்தோடும் உத்பாடநம் பண்ணப்பட்ட, மித்யாதர்சநமாயாநிதாநசல்யமுடைத்தாகி, விஜிகிஷ்டநரபதிபோல தண்டிக்கப்பட்ட மநோவாக்காயதண்டத் திரயமென்னும் அராதிமண்டலமுடைத்தாகி, கொடைக்கூலிக்குக் கொண்ட கிரகம்போல மமத்வபுத்தியினலன்றி யாதானுமொரு ஸாதநத்தால் பரிபாலிக்கப்படுவதாகி, பலசீலபாலகன் போல, விஷயஸங்கமென்னும் மஹாஸர்ப்பத்திற்கு அதிபீருவாகி ஸதிகிரகம்

*ஏட்டிலுள்ளபடியே பதிப்பிக்கப்பட்டது. சுத்த பாடம் கிடைக்கவில்லை.

போல குரோதாதிகளென்னும் தூர்த்தரால் அபிபவிக்கப்படாததாகிய அநேகாந்தவாதம்போல, க்ஷுத்பிபாஸாதி என்னும் பரவாதிகளால், பராஜிதமன்ருகி, பத்மபத்ரம்போல ஆரம்ப பரிக்கிரக ஜலவத்தாலும் அஸ்பிரஷ்டமாகி, குசலசிற்பியாற் பரிகல்ப்பிக்கப்பட்ட சித்ரகர்மம் போல பிரசஸ்தமான ஆஹாரவர்ணநமுடைத்தாகி, நிர்த்தோஷ லோசநம்போல தர்மமார்க்க பரிஹாரமும் ஸந்மார்க்கவிஹாரமுமுடைத்தாகி கரண்டகம் போல ரத்நநிகரபாத்ரபூதமாகி, பரமௌஷதம் போல, க்லேசவிநாசார்த்திகளால் அர்த்திக்கப்படுவதாகி, வியத் கணம்போல நியதாவாஸ சூந்யமாகி, ஸஹஜமலோபலிப்தமேயாகிலும் ஞாநாதியாதிகளால் அதிபவித்திரமும் மங்கலமுமான வேஷமாகும். பாவலிங்கமென்பது ஸம்யக்தர்சந ஜ்ஞாநசாரித்ரங்களாறு பரமவிசுத்தி யென்னும் பரமாத்மசுத்தியாகும்.

லிங்கபதார்த்தம் ஸமாப்தம்

---

## சாரித்ரம்

சாரித்ரம் இருவகைப்படும்: க்ருஹஸ்தசாரித்ரம் நிவ்ருத்தி சாரித்ரமென. க்ருஹஸ்த சாரித்ரமென்பது ஸம்யக்தரிசனஞாநஸஹிதமான அணுவ்ரத, குணவ்ரத, சிக்ஷாவ்ரத மென்று மிவையாகும். ஸம்யக்தரிசனமென்பது: அநாதிமித்யாத்ருஷ்டியாகிய ஆஸந்நபவ்யர்கட்கு மோஹநீயகர்மத்தினது எழுபது கோடாகோடி கடற்காலமான உத்தமஸ்திதியின்றி அந்த கோடாகோடி என்னும் ஸ்திதியினுக்கு உதயமாதலென்னும் காலலப்தியும், அங்கோபாங்கங்களது ஸம்பூர்த்தி யென்னும் கரண லப்தியும், வீர்யாந்தராய க்ஷயோபசமத்திற் பிறந்த வீர்ய லப்தியும், ஞாநாவரண க்ஷயோபசமத்திற் பிறந்த யதார்த்த ஞாநமென்னும் உபயோக லப்தியும், பகவத் அர்ஹத்ப்ரணீத பரமாகமத்து நிபுணனுகி பராநுக்ரஹ பரனுகிய பரமகுருவினது உபதேசாம்ருதமென்னுநின்ற உபதேச லப்தியும் என்னும் 'லப்திபஞ்சக' ஸந்நிபாதத்து ஸ்வரூபதிரவ்யம், ஸ்வரூபக்ஷேத்ரம், ஸ்வரூபகாலம், ஸ்வரூப பாவம், ஸ்வரூபபவம் என்னும் ஸ்வரூபாதிகளைப் பெற்று, லோகமூடம் தேவமூடம் பாஷண்டிமூடம் என்றிம்மூடத்திரயத திலும், பயவிநயம், ஆசாவிநயம், ஸ்நேஹவிநயம், லோகவிநயம், துர்த்தேவதாவிநயம், துர்லிங்கவிநயம் என்னும் ஷட்விநயங்களிலும், ஞாநம், பூஜாம், குலம், ஜாதி, பலம், ரித்திம், தபஸ்ஸு, வபுஸ் என் னும் இவையிற்றினுல் பெரியோம் என்னும் மமத்வமில்லாத ஸம்யக்

தரிசநத்து அங்கங்கள் எட்டாகும்: சங்காபாவம், காம்க்ஷாபாவம், விசிகிச்ஸாபாவம், அந்ய திருஷ்டி ஸம்ஸர்க்காபாவம், தர்மலோபகுஹநம் ஸ்திதிகரணம், வாத்ஸல்யம், தர்மப்பிரபாவநம் என.

கிருஹஸ்தர்க்கு அணுவ்ரதம் ஐந்தாகும்: அவையாவன: அஹிம்சை, ஸத்யம், அஸ்தேயம், பரஸ்த்ரீ நிவ்ருத்தி, பரிமித பரிக்கிரகம் என. அஹிம்ஸை யென்பது த்வீந்திரியாதி ஜங்கமப்பிராணிகளை மநோ வாக்காயங்களால், செய்தல், செய்வித்தல், உடன்படுதல் என்னுமிவற்றால் ஹிம்ஸையை யொழிதலாகும். இதற்கு அதிசாரம் ஐந்துள: பசுவாதிகளை இஷ்டமான தேசங்களில் போகாமல் கட்டிவைத்தலென்னும் பந்தமும், தண்டாதிகளால் பிராணிகளை அடித்தலென்னும் வதமும், கர்ணநாசிகை முதலான அவயவங்களைக் குறைத்தலென்னும் சேதமும், வஹிக்கமுடியாத பாரத்தை ஏற்றுதலென்னும் அதிபாராரோஹணமும் பிராணிகட்கு அந்நபாநாதிகளை நிரோதித்தல் என்னும் அந்நபாநாதி நிரோதமென்னு மிவையாகும்.

ஸ்நேஹத்தாலும், மோகத்தாலும், த்வேஷத்தாலும், அஸத்தியமாகிய வசநங்களைச் சொல்லாமையும், பரபீடாஹேதுவாகிய ஸத்ய வசநங்களைச் சொல்லாமையும், ஸூத்ரார்த்தத்தினை கதிக்குமிடத்து அந்யதா வசநத்தை விடுதலும் ஸத்தியாணு விரதமாகும். இதற்கு அதிசாரம் ஐந்துள. புறங் கூறுதலென்னும் பரிவாதமும், ஸ்த்ரீ புமான்களால் செய்யப்பட்ட ரஹஸ்யத்தினை பஹுஜநமத்தியத்து பிரகாசித்தலென்னும் ரஹோவியாக்கியாநமும், குறளை பேசுதலென்னும் பைசூந்யமும், வஞ்சனையாற் பொய்யோலை யெழுதுதலென்னும் கூடலேக கரணமும், ஒருவனாற் றன்பக்கல் நிக்ஷிப்தமான தனுதி, அவனால் விஸ்மரிக்கப்பட்ட காலதது அதனைக் கொடாதிருத்தலென்னும் நியாஸாபஹாரமுமாம்.

அதத்தமாகிய பதித விஸ்மிருதாதி பரதனங்களை ஸ்வீகரியாதிருத்தல் அஸ்தேயாணு விரதமாகும். இதற்கு அதிசாரமைந்துள:- சோரனுயினு னொருவனை ஒரு காரியத்துப் பிரயோகிததலென்னும் சோரஹ்ருதாதாநமும், பரஸ்பரம் விருத்தமாகிய நரபதிகளால் அழிக்கப்படா நின்ற தேசத்துக் கோடலென்னும் விலோபநமும், அல்ப பிரமாணமாகிய ப்ரஸ்தாதிகளால் பிறர்க்கு தாங்யாதி கொடுத்தலும், அநல்பப் பிரமாணமாகிய ப்ரஸ்தாதிகளால் தனக்குக் கோடலும, என்னும் ஹீநாதிகவிநிமாநமும், கிருத்ரிம ஹிரண்யாதிகளைக் கூட்டுவித்தலென்னும் ஸத்ருசஸம மிச்ரமுமாகும்.

பிறனால் ஸ்வீகரிக்கப்பட்ட அங்கனை, விதவை, கணிகை, கன்யகை, விரதஸ்தை, திர்யக், நபும்ஸகை தேவதை என்றிவர்களிடத்து ஸங்கமறுதல் பரதார நிவ்ருத்தி என்னும் அணுவிரதமாகும். இதற்கு அதிசாரம் ஐந்துள:—பரனுக்கு நியோகித்தாளொரு கன்யகையைத் தான் கோடலென்னும் அந்ய விவாஹகரணமும், காமாதிரேகத்தால், நியாயமொழிய தூர்த்த கிருத்யம் ஆசரித்தலென்னும் அநங்கக்கிரீடையும், விடத்வமும், ஸ்வஸ்த்ரீ விஷயமாக காமபரிணாமத்தால் மிக்கு நிற்றலென்னும் விபுலத்ருஷ்ணையும் உத்பரிகாகமனமுமாகும். க்ஷேத்ர, வாஸ்து, தநம், தான்யம், துவிபாத், சதுஷ்பாத், யாநம், சயநம், ஆஸநம், குப்யம், பாண்டமுமாகிய தசவித பரிக்கிரஹங்களை அளவுபடுத்துக் கோடல் பரிமித பரிக்கிரஹமாகும். இதற்கு அதிசாரமைந்துள. பரிமிதார்த்த ஸம்பூர்த்தி நிமித்தமாகப் பரிப்பிரமித்தலென்னும் அதிவாஹநமும், தத்ஸம்பூர்த்தியின்கண் அதிகமாக பரிமிதஞ் செய்தலென்னும் அதிஸங்கிரகமும், அதிக ஸ்ரீ நிமித்தமாக ஆதரம் பண்ணுதலென்னும் விஸ்மயமும், யதாசக்தி தாநம் பண்ணாமையென்னும் லோபமும், மஹோத்ஸாஹமென்னும் அதிபார வாஹநமுமாகும். குணவிரதம் திரிவிதமாகும். திக்விரதம், அநர்த்ததண்ட விரதம், போகோபபோக பரிமாணம என. திக்விரதமாவது பிராசி முதலான மஹா திக்குகளை யோஜநாதிகளால் பர்வதாதிகளை அடையாளமாக அவதி பண்ணுதலாகும். இந்த விரதமுடையானுக்கு அளவிட்ட தேசத்துக்குப் புறம்பு கமநாதிகளில் பரிணாமமின்மையில், அவ்விடத்து மஹாவிரத யோகமாகும். இதற்கு அதிசாரமைந்துள. பர்வத குஹாதிகளால் அளவிடப்பட்ட தேசத்தை ஊர்த்வ பாகத்தாலும், அதோ பாகத்தாலும், திர்யக் பாகத்தாலும், அதிக்கிரமித்தலென்னுமிவையுங் காரிய முண்டானகாலத்து க்ஷேத்ரத்தை அதிகமாக வரைதலென்னும் க்ஷேத்ர விருத்தியும் வரையப்பட்ட க்ஷேத்ரத்தை மறத்தலென்னும் விஸ்மரணமுமாகும். பிரயோஜநமொழிய பாபஹேதுவான செய்தி, அநர்த்த தண்டமாகும்; இது ஐந்துவகைப்படும். அபத்யானம், பாபோபதேசம், பிரமாதசரிதம், ஹிம்ஸாதாநம், அசுப ஸ்ருதி என. பிரயோஜனமின்றி நரபத்யாதிகளது ஜயாபஜயாதிகளைச் சிந்தித்தல், அபத்யாநமாகும்; இன்ன தேசத்து தாஸிதாஸர்களை ஸுலபமாகக் கொள்ளலாமென்றும், இன்னதேசத்து, கோ, மஹிஷ்யாதிகளைக் கொண்டு இன்ன தேசத்திலே விற்றால் மஹா லாபமாமென்றும், வேடர் முதலாயினார்க்கு வராஹாதிகள் இன்ன

தேசத்து சுலபமென்றும், கிருஷிவலாதிகட்கு கிருஷ்யாதி யின்ன பிர காரத்திறற் செய்யப்படுமென்றும் உபதேசித்தல் பாபோப தேச மாகும். பிரயோஜநமின்றி ஜலஸேசநம் பண்ணுதலும், மிருத்தைச் சூர்ணித்தலும், அக்நியை ஜ்வலிப்பித்தலும் அவித்தலும, விரு க்ஷாதிகளைச் சேதித்தலும், திரணச் சேதம் பண்ணுதலும் என்னுமிவை பிரமாத சரிதமாகும். விஷசஸ்திராதிகளான ஹிம் ஸொபகரணங் கொடுத்தல் ஹிம்ஸாதாநமாகும். ராகாதிவசத்தால் காமகதாதிகளைக் கேட்டல், அசுபஸ்ருதியாகும். இவற்றை விரமித் தல், அநர்த்த தண்ட விரதமாகும். இதனுக்கதி சாரமைந்துள. ராக வசத்தால் ஹாஸத்தோடுங் கூட விசிஷ்டமான வசநங்களைச் சொல்லுத லென்னும் கந்தர்ப்பமும், அந்த வசநத்தோடு பிரயோஜந மில்லாத காய வியாபார மென்னும் கௌகுச்யமும், பஹுஜநமத் யத்து நிஷ்பிரயோஜநம் ஜல்பிதத லென்னும் மௌகர்யமும், தன்னை யொப்பித்தலென்னும் அதிப்பிராஸதநமும், மநோவாக்குக் காயங்களைப் பாராதே விடுதலென்னும் அஸமீக்ஷாதிகரணமுமாகும். போகோப போக பரிமாணமாவது, நிஷித்தமான, மது மத்ய, மாம்ஸங்களும், பஞ்சோதும்பரம்: ஜம்பூதும்பரமாகிய நாவல், இலந்தை, கலிங்கமா கிய கொம்மடி, அலாபுவாகிய சுரை, என. இவற்றின் பலமும், நிம்ப கேதகம், முநியாகிய அகத்தி, கதளி, கிரஞ்சநம், ஆம்ரகம், திரிஞ் சிணி, அர்ஜுனம் ஆகிய மருது, கிம்சுகம், அளர்க்கமாகிய தூதுவளை, சரம்காஷ்டேயாகிய குறுஞ்சூலி, குமுதமதூகமாகிய இலுப்பை, கூமாரியாகிய கற்றாழை இத்யாதிகளின புஷ்பங்களும், தொய்யில் அபுகையாகிய அப்பை, வைகுண்டமாகிய தும்பை, தக்காரியாகிய முஞ்சை, பிம்பமாகிய வண்டில், சுநிஷண்ணமாகிய ஆரை சுச்சு ஆகிய சுண்டில், ஸர்ஷபமாகிய கடுகு என்னுமிவற்றின் சாகங்களும், வேணு முதலான அங்குரங்களும், மஹாவிருக்ஷமாகிய கள்ளி, அமலிகை யாகிய புளிநடலை, பூகந்தமாகிய காளான்களும், பலண்டுவாகிய ஈர உள்ளி, லசுநமாகிய வெள்ளுள்ளி, ஆத்யமாகிய இஞ்சி கந்தங்களென்னு மிவற்றைப் பரித்யஜித்து சேஷவஸ்துக்களை அளவறுத்துக் கொள்ள லென்னும் போக பரிமாணமும், சர்மம், ஸ்ருங்கம், தந்தம், நகம், இத்யாதிகளைப் பரித்யஜித்து சயநாஸநாபரண வஸ்த்ராத்யசேஷ வஸ் துக்களை அளவறுத்துக்கோடலென்னும் உபபோக பரிமாணமு மாகும். இதற்கு அதிசாரமைந்துள. விஷயங்களிலுண்டான தோஷங் களைப் பாராமை யென்னும் விஷய விஷதான பேட்சையும், கத்யா

பாவத்தின் கண், கர்மஸ்வ பாவத்தை விசாரியாதழிக லென்னும் அநுஸ்ம்ருதியும் விஷய லோலதையும், அதிதிருஷ்ணையும், அத்யநுப வமுமாகும்.

சிக்ஷா விரதம், நாலு வகைப்படும்: தேசாவகாசிகம், ஸாமாயிகம், ப்ரோஷதோப வாஸம், அதிதிபூஜை என. தேசாவகாசிகமாவது, சைத்யாலயம், ஸ்வகிரகம், புரம் என்னும் இவற்றுக்குப் புறம்பு கமநாதிகளை, பிரதிதினம் நியமித்தலும், முஹூர்த்தாதி ஸம்வத்ஸர பர்யந்தம் நியமித்தலாகும். இதற்கு அதிசார மைந்துள. பரிமித தேசத்துப் புறம்பு தாஸாதிகளை கிருஷ்யாதிகளில் பிரயோகிக்க லென்னும் பிரேஷணமும், அவ்விடத்து கிருஷ்யாதிபண்ணு நின்ற தாஸாதிகளறியத் தனது சப்த முச்சரிக்க லென்னும் சப்தாநுபாதமும், நியமிக்கப்பட்ட தேசத்திற்குப் புறம்பு நின்றும் ஒன்றைக் கொடுவரப பண்ணுத லென்னும் ஆநயநமும், அவர்களறியத் தனது ரூபங்காட்டுத லென்னும், ரூபாபி விருத்தியும், உபலாதிகளை க்ஷேபித்தலும், புத்கல க்ஷேபமுமென்னு மிவையாகும். ஸாமாயிகமாவது சைத்யாலய முதலான தேசத்து மந: பிரணிதாந பூர்வகம் 'பகவத்பஞ்ச பரமேஷ்டி' களது திவ்ய குணாநுஸ்மரணபுரஸ்ஸரம ஸ்ரீபஞ்ச நமஸ்காரம் ஜபித்தல்; சதுர்பக்த்யாதிகளால் ஸ்ரீதேவதைகளை ஸ்துதித்தல், விசத க்ஞாநஸ்வபாவமாகிய பரமாத்மாவினை அநுபவித்தல், ஜீவாஜீவ பதார்த்தங்களது யாதாத்ம்யத்தை விசாரிக்க லென்னு மிவையாகும். இதற்கு அதிசார மைந்துள; மநோவாக்குக் காயங்களுக்கு ஒற்றுமை யறுதலும், செய்யக் கடவ கிரமத்தில ஆதாமறுதலும், நினைவினது சலந மென்னும் ஸ்ம்ருத்யநுபஸ்தாநமு மாகும். ப்ரோஷதோபவாஸமென்பது, அஷ்டமி பர்வங்களில் தனது சக்திக்கு அநுகூலமாக தர்மகதாஸ்ரவணமும், ஸ்ரீபஞ்ச நமஸ்கார ரூபாதிகளோடு கூடி கிருஷ்யாதிகளை நிவர்த்தித்து உபவஸித்தலும், ஏகபுக்தி பண்ணுதலும் என்னு மிவையாகும். இதற்கு அதிசாரமைந்துள:—பிராணி பீடை பரிஹரியாது நிக்ஷேபித்தலும் ஆதாநமும் மலத்யாகமும், இருத்தலும், சயித்தலும் என்னுமிவையாகும். அதிதிஸம்விபாக மென்பது, ஆஹார ஔஷதாதிகளை ஸம்யக்தர்சநாதிகளால் பவித்ரமாகிய பாத்ரங்கட்கு ஸ்ரத்தா பூர்வகம் உபசாரோபகாரத்தை நோக்காது, பாத்ரங்களது அநுக்ரக லாபம் காரணமாகக் கொடுத்தலாகும். இதற்கு அதிசாரமைந்துள. கதளிபத்ராதிஹரிதவஸ்துக்களால், மூடுதலும் வைத்தலுமென்னும் ஹரிதபிதாந நிதா

நமும் பாத்ர விஷயமாக இச்சை யின்மை என்னும் அநாதரமும், தாக விஷயமாக நினைவின்மை என்னும் அநுஸ் மரணமும், தத்காலத்து பரிஜன முனிதலென்னும் மாத்ஸர்யமாகும். விரத சீலங்கட்கு பேதமாவது, அணுவிரதபஞ்சகத்தோடும், மதுமத்யமாம்ஸ நிவிர்த்தி என்னும் மூலகுணமெட்டும் கிரகஸ்தர்க்கு விரதமாகும். குணவிரதசிக்ஷாவிரதமென்னும் உத்தரகுணமேழும் அவர்க்கு சீலமாகும். நிவிர்த்தருக்கு உத்தமக்ஷமாதி தசவித ச்ரமணதர்மம் சீலமாகும். மூலோத்தர குணங்கள் விரதமாகும. இவ்வாறு சொல்லப்பட்ட விரதங்களையும், பின்பு சொல்லப்படாநின்ற மஹாவிரதங்களையும், அநுஷ்டிக்கும், ஆஸ்ரமஸ்தர் நால்வராவர். கிரகஸ்தரும், பிரம்மசாரியும், பிக்ஷுவும், வானப்பிரஸ்தரும் என. அவருள் கிரகஸ்தர் அறுவர்: தர்சநிகன், விரதிகன், ஸாமாயிகன், ப்ரோஷதோபவாஸன், ஸசித்தவிரதன், ராத்ரிபுக்தன் என. தர்சநிகன் என்பான் முன் சொன்ன உபசமாதி ஸம்யக்தர்சனத்தால், விசுத்தமான ஹிருதயத்தனுகி, குரோதாதிகளான அதிமாத்ரபிரவிர்த்தியினது அபாவத்தால் உபசாந்தனுகி ஸம்ஸாரசரீர போகங்களில் வெறுத்தலென்னும், நிர்வேகமும் ஸர்வப்பிராணிகட்கும் வியஸநம் வந்த காலத்து, தனக்கு வியஸநம் வந்தாற்போல வருந்துதலென்னும் அநுகம்பையும், சூந்யாதி முதலான மித்யாவாதிகளானஸர்வாபாவவசனமுதலானவற்றை ஆதரியாது, பகவதர்ஹத்பரமேஸ்வரனுல் உபதேசிக்கப்பட்ட பரமப்ரவசனங்களையே ஸ்ரத்தைபண்ணுதலென்னும் ஆஸ்திக்யமுடையனுகி பூர்வகிருதமான அப்பிரத்யாக்யானமென்னும் சாரித்ரமோஹநீயகர்மத்தினது தீவ்ரோதயத்தால் ராகத்வேஷாதிகளைப் பரிஹரித்தற்கு அஸமந்தனேயாகிலும் ஜந்மஜராமரணுதிகளால் அதிதாருணமான ஸம்ஸாரபரிப்பிராந்தியினுக்கு அதிமாத்ரபீத சித்தத்தனுகி, ஸ்ரீ பஞ்சபரமேஷ்டிகளுடைய ஸ்ரீபாதகமலயுகளங்களில் அதிபக்தனுமாகிநின்ற ஆஸந்நபவ்யனுகும். இச்சொல்லப்பட்ட தர்சநவிசுத்தியுடையனுகி, அப்பிரத்யாக்யான குரோதமான மாயா லோபமென்னும் ஸகல சாரித்ர மோஹநீயத்ததுக்ஷயோபசமத்தால், அணுவிரத, குணவிரத, சிக்ஷாவிரதத்தில், தேசாவகாசிகம், அதிதி ஸம்விபாகமென்னும், விரதங்களையுடையனுகி, பிரத்யாக்யான ஸஞ்ஜ்வலன குரோதமான மாயாலோபமென்னும், தேசசாரித்ர மோஹநீயத்தது, உதயத்தால் ஸகலஸாவத்ய நிவர்த்தி செய்தற்கு அசக்தனுகி நின்றுன், விரதிகனென்பானுகும். இச்சொல்லப்பட்ட விரதங்களால்,ஸம்பூர்ணனுகி ஸந்தியாத்திரயத்திலும்,'பகவதர்ஹத்பர

மேஸ்வர’னை, சதுர்பக்தியாதிகளால், நியதி பண்ணிவந்திக்குமவன், ‘ஸாமாயிக’னென்பானாகும். இம்மூன்று குணங்களையுடையனாகி, பர்வாஷ்டமிகளில், சதுர்விதாஹாரநிவிர்த்தி என்னும் உபவாஸம், ஏகபுக்தி முதலானவற்றுள் நியதி உடையவன், ப்ரோஷதோபவாஸி என்பானாகும். முன் சொன்ன நாலு குணங்களாலும் பரிபுஷ்டனாகி, மூல பலசாக சாகாகரீரகந்த ப்ரசூநபீஜங்களாகிய, ஆகமங்கள் நியமத்தால், வர்ஜிப்பான், ‘ஸசித்தவிரதன்’ என்பானாகும். முன் சொன்ன ஐந்து குணங்களாலும் அவிகலனாகிப் பகலில் ஸ்திரீஸங்கத்தில் நியமமும், ராத்ரியில், அன்னபானகாத்யலேஹ்ய மென்னும் சதுர்விதாஹாரநிவிர்த்தியுமுடையான் அராத்ரிபுக்தன் என்பானாகும். பிரம்மசாரிகள் சதுர்விகற்பத்தர்:—பிரம்மசாரி, அநாரம்பன், அபரிக்கிரகன், அநநுமதன் என. அவருள் சொல்லப்பட்ட ஷட்குணங்களுள், அபிரதனாகி புருஷவேதமென்னும் மோஹநீயகர்மத்தினது க்ஷயோபசமத்தால் “மலபீஜம் மலயோநிக்கள நீமலம்பூதிகந்திபீபத்ஸ்யம்பஸ்யந்நம் கமநங்காத் விரமதியோ பிரம்ஹசாரீ சஸ:” மலமானதனைகளநமலம் விண்மூத்ராதிகளான பஹுவிதமலங்களை ஸந்ததம்நிர்ஜரிப்பியாநின்றதனை, பூதிகந்திஸ்நாநுலேபநாதிகளால், நாடோறும், ஸம்ஸ்கரிக்கப்பட்டதேயாகிலும்,ஸ்வாபாவிகமான துர்க்கந்தத்தால் தூஷிக்கப்பட்டதனை பீபத்ஸலம் வைராக்ய பரிணமித்தராகிய ஜநங்களால்,அத்யந்தம ஜுகுப்ஸிக்கப்படுவதனை, பஸ்யந்=பாராநின்று, அங்கம்=சரீரத்தை, அநங்காத=காமஸேவையினின்றும், விரமதி=மீளாநின்றான், ய:=யாவனொருவன்,பிரஹ்மசாரி=பிரஹ்மசாரியென்பானாகும்,ஸ:=என்று சொல்லப்பட்டான், ஏழாவதான நிலைமையுடையனாகும். சொல்லப்பட்ட ஸப்தகுண ஸஹிதனாகி “ ஆரம்பாத் ஜாயதேஹிம்ஸாஹிம்ஸாயா: பாபஸஞ்சயம்| பாபஸஞ்சயநாத் பிராந்தி: ஸம்ஸாரகஹநேசிரம்” என்றது: ஆரம்பாத்=கிருஷ்யாதி கிரியையினால், ஜாயதே=உளதாம், ஹிம்ஸா=பிராணிகளை வதித்தல், ஹிம்ஸாயா:=ஹிம்ஸையினால், பாபஸஞ்சய:=பாபங்களைத்திரட்டுதலாகும், பாபஸஞ்சயநாத்=பாபகர்மங்களது திரட்சியால், பிராந்தி=பிரமித்தல், ஸம்ஸாரகஹநே=ஸம்ஸாரமென்னும் திரஸ ஸஞ்சாரமான காந்தார மத்யத்துள்,சிரம்=நெடுங்காலமெல்லாம் என்பது. ஆதலில், அஸி, மஷி,கிருஷி,வாணிஜ்ய, வித்யா, சில்பங்களால் பஹுவிதமான கிரியாவிசேஷங்களைத் தவிருபவன், அநாரம்ப னென்பானாகும்:—இச்சொல்லப்பட்ட அஷ்டகுண ஸஹிதனாகி குரோதாதிகளைப் பரிஹரித்தல் காரணமாக, புத்ராதிகள்

மிசை வைக்கப்பட்ட கிரஹவ்யாபாரத்தனாகி, ஸர்வ பரிக்கிரகங்களிலும், மமத்வமின்றி கிரகஹத்திலிருந்தே அநுஷ்டானஞ் செய்யுமவன், அபரிக்கிரகன் என்பானாகும்; சொல்லப்பட்ட நவகுணங்களோடு கூட்டி கிருஷ்யாதி வ்யாபாரங்கள் மஹா பாபஹேதுவாகிறபடியை, பிரத்யாக்யான குரோதமான மாயா லோபமென்னும் சாரித்ரமோஹநீய கர்மங்கட்கு மந்தோதய முண்டாதலில், பிரத்யக்ஷமாகவே காண்பானாகி ஸம்ஸார துக்கத்திற்கு, அத்யந்தம் பயப்படுவானாகி, எல்லாத் தொடர்ப்பாடுகளில் அநுமதி இல்லாதான், 'அநநுமதன்', என்பானாகும்; பிக்ஷுவென்பான், முன்சொன்ன தசகுணங்களையுடையனாகித் தனக்கென்று நியமிக்கப்பட்ட, ஆஹார, ஔஷத, சயநாதிகளை பரிவர்ஜிப்பானாகி, கௌபீனதாரியாகி, விசுத்தராகிய ஜைந ஜநங்களது கிருகம் புக்கு பிக்ஷா விர்த்திபண்ணிப் பின்பு, ஏகக்கிருகத்துள் புக்கிருந்து, பாணிபாத்ரத்தா லுண்பானாகி, பாஹ்யாப்யந்தர கரணங்களை ஸ்வகோசரங்களிற் போகாதவண்ணம் மீட்டு, பரமாத்ம தர்சநமென்னும், அம்ருத ரஸாநுபவத்தால் பரமத்ருப்தனாகுமவன் உத்கிருஷ்ட விரதனென்பானாகும். வாநபிரஸ்தராவார் பிரமத்தா பிரமத்தாதிகரான நிவிர்த்த சாரித்ரமுடையார். நிவிர்த்த சாரித்ரமென்பது, க்ஷேத்ரம், வாஸ்து, தநம், தாந்யம், த்வீபாதத்து, சதுஷ்பாதத்து, சயநம், ஆஸநம், யாநம், குப்யம், பாண்டமென்னும், தசவித பாஹ்ய பரிக்கிரகங்களையும், மித்யாத்வமும், குரோதமான மாயாலோபமும் நவநோ கஷாயமுமாகிய சதுர்தசவித அப்யந்தர பரிக்கிரகங்களையும் நிச்சேஷமாக பரித்யஜித்தலும், பஞ்ச மஹாவிரதங்களும், பஞ்ச ஸமிதியும் பஞ்சேந்திரிய நிரோதமும், ஸமத்விபாவம், ஸ்துதி வந்தனை, பிரதிக்கிரமணம், பிரத்யாக்யாநம், காயோத்ஸர்க்கமென்னும், ஷடாவச்யகமும் கேசோலுஞ்சநம், ஆசேலகம், அஸ்தாநம், க்ஷிதிசயநம், அதந்த தாவநம், ஸ்திதி போஜநம் ஏகபுக்தம், என்னும் ஸப்தகமுமாகிய, அஷ்டா விம்சதி மூல குணங்களையும், த்வாதச தபஸ்ஸும், த்வாவிம்சதி பரீஷஹ ஜயமுமாகிய சதுஸ்திரும்சத் உத்தரகுணங்களையும், சதகோடி மஹா விரதங்களையும், சதுரசீதி லக்ஷகுண விரதங்களையும் அஷ்டாதச ஸஹஸ்ர சீலங்களையும், நிரதிசார பரமாகத்தின்படி அநுஷ்டித்தலாகும்.

**சாரித்ரம் முற்றும்.**

---

## பல லக்ஷணம்

பலமென்பது - ஸர்வஜந ஹ்ருதய ப்ரீதிகரமாகி, விகல சகல ஸங்க ஸ்வரூபத்ததாகி, ப்ரத்யா ஸந்நபவ்யப்ராணி சுகஜநித புவனராகி, ஸகலதோஷ விப்ரமுக்தராகி, விசிஷ்ட ஸம்ருத்தகுண ஸமந்விதமாகி குமதிபூரி கல்பித பல்லாபாஸம் அன்றாகி விசிஷ்ட மஹா யோகிஸமபிலஷிதமாகி, 'வீதராக ஸர்வக்ஞ பரமேஸ்வர' ப்ரகாசிதமாகி, திருஷ்டி ஜநப்ரவாக துஷ்வாபகமாகி நின்ற, ஆப்தாதி பதார்த்த விஷயமாகும். தத்பலம் த்விதம்: தாத்காலிக பலமும், காலாந்தரபாவி பலமும என. தாத்காலிக பலமென்பது, விசிஷ்ட தர்மாநுபுத்தி புண்ய கர்மாஸ்ரவ பந்தமும், ஞானாவரணாதி பாப கர்ம ஸம்வரமும், புராதனமாகிய அசுப கர்ம நிர்ஜரையும், க்வசிந்மித்யாத்வாதி ஸப்த ப்ரக்ருதி க்ஷயமும், ஸம்யக்தர்ஸநஜ்ஞான சாரித்ரோத்பத்தியும், ஸம்வேக நிர்வேக ஜநநமும், ஹித மார்க்க ப்ரவர்த்தநமும, அஹிதமார்க்க நிவ்ருத்தனமும், ஸம்ஸார காரண ஹேயபுத்தியும், மோக்ஷகாரணோபாதேய போதமும், கோஷ்டபுத்தி, பீஜபுத்தி, பதாநுஸாரி ஸம்பிந்நஸ்ரோத்ர, ப்ராக்ஞ ஸ்ரவணஸ்சஸப்த ரித்தி விபூதியும், லோக பூஜாதிகுசல ப்ரவர்த்திகளுமாகும். காலாந்தர பாவிபலம் த்விதம்: அப்யுதய பலமும் அபவர்க்க பலமுமென. அப்யுதய பலம் திரிவிதம்: உத்தமாப் யுதய பலமும், மத்யமாப்யுதய பலமும், ஜகந்யாப் யுதய பலமும் என. தத்ர உத்தமாப்யுதய பலமென்பது, நவ க்ரைவேயகங்களுள்ளும், அநுதிசாநுத்தரங்களுள்ளுமாகிய, அஹமிந்திரருடைய ஐஸ்வர்யமாகும். மத்ய மாப்யுதய மென்பது, சௌதர்மாதி ஷோடச கல்பங்களுளாகிய இந்திர ப்ரதீந்திர லௌகாந்திகாமராதிகளுடைய மஹா விபூதியாகும். ஜகந்யாப்யுதய பலமென்பது; நரலோகத்துளாகிய சக்ரவர்த்தி வாசுதேவ, பலதேவ, வித்யாதரேந்திர, ப்ரபூதி நரேந்திரருடைய ஸம்பத்து பரம்பரையாகும். அபவர்க்க பலமென்பது, திரவ்ய பாவகாதி கர்மவிப்ர முக்தமாகிபடு ஹிதமதுரா திகுணஸஹிததிவ்ய பாஷோபேதமாகி, திரிலோகாதி பதிகிருத பூஜார்ஹமாகி மணிகநகரஜதவிரசித பத்மயான விஹாரியாகி, ஸமவஸரணஸார பூமண்டலஸ்த த்வாதசகிரணபரி வ்ருதமாகி, சுத்தஸ்படிகஸங் காச ப்ரபாலங்க்ருத திவ்யதேஹதரமாகி, அசிந்த்ய ஸ்வ பாவஸஹிதமாகி, ஜீவாஜீவ ஸகல பதார்த்தோப தேசகனுமாகி, அஷ்ட மஹாப்ராதிஹார்ய விபூதி பூஷிதமாகி, சதுஸ்திரும்சதிசய குணஸம்பத் ஸமந்விதமாகி, ஸர்வத்ரியம்பகாத்யஷ்டோத்தர

ஸஹஸ்ரகுண நாமாபிதேயமாகி, ஸ்வர்க்காவதரணாதி பஞ்ச மஹாகல்யாண ஸஹிதமாகி ராகத்வேஷமோகவிகார விரஹிதமாகி, ஸாதந க்ரமவ்யாகாத தோஷத்ரய விஹீநமாகி, ஸமஸ்த விஸ்தார ஸாக்ஷாத் பிரகாசநகாரி கேவலக் ஞாநதர்சந ஸஹிதமாகி, திரிஜகத் திரிகால விஷய சுகானந்த குணாநந்த சுகாஸ்பதமாகி, அனந்தோத்ஸாகம், அனந்தலகுத்வம், அனந்த விசித்ரம் என்னும் திரிவிக்ரம ஸஹிதானந்த வீர்ய, சக்தியுக்தமாகி நின்ற, பரமார்ஹந்த்ய பதத்தினைத் தான், தாத்ருசம் அநகாரகைவல்ய பதத்தினைத்தான், பிராபித்துச் சென்று அசேஷ கர்மகளங்க விப்ரமுக்த க்ஷணத்தில், கும்பகாரனாற் செய்யப்பட்ட கடம், அவனது அபாவ காலத்தும், தத்பரிணமமாயிருந்தாற்போல, உபஸம்ஹார விஸர்ப்பணங்கட்குக் காரணமான சரீர ஸம்ஸ்த்தாந நாமகர்மத்து,அபாவத்திலும் அனநதரத்யக்த தேஹமாத்திராகாரமாகி, அமூர்த்தமாகி, பூர்வ ப்ரயோகத்தால், ஆவித்த குலால சக்ரம் போலவும், அஸங்கத்வத்தினால், வ்யபகதலே பாலாபு போலவும், பந்தச் சேதத்தினால் எரண்ட பீஜம் போலவும, ஊர்த்வகதிஸ்வபாவத்தினால் தீபசிகை போலவும், ஏகக்ஷணத்து லோகாக்கிர மஸ்தகத்தை ப்ராபித்து, அதன்மேல், அப்ரவிருத்தா காரணமாகிய, தர்மாஸ்திகாய மின்மையில், கமநமின்றி நிஸர்ககத்திரவ்ய விகாரத்வமின்மையில் விகார கமநத்தினையும், அத: பதனத்தினையு முடைத்தன்றி, ஸ்வதஸ்ஸித்தமான குண விகாரங்களை யுடைத்தாகி, புஷ்ப சௌரபம் போலவும், சந்தந சைத்யம் போலவும, ரத்ந தீப்தி போலவும், தனக்கு ஸ்வபாவமாகிய, அனந்தக் ஞாந, தர்சந, சுகவீர்ய, நிர்நாம, நிர்கோத்ர, நிராயுஷ்ய, ஸகலஸம்யக்த்வ பாவமென்னும், சுத்தாஷ்ட குணங்களை ப்ராபித்து, அவ்வண்ணம், ஆகால பர்யந்தம் பரமாத்மாவினுடைய அசல முக்தி பதாவஸ்தாநமாகும்.

**பல லக்ஷண ஸமாப்தம்**

அஷ்டபதார்த்த ஸாரம் முற்றிற்று.



# APPENDIX - B

## Extracts from Mahabharata *re*-'Ahimsa' from the Tamil Edition by

**Pandit - M. V. Ramanjachariar**

## சாந்திபர்வம் — மோக்ஷதர்மம்

அத்யாயம் : 217—பக்கம் - 767 & 768

*ஹிம்ஸையில்லாமை உண்மையுரைப்பது எல்லாப் பிராணிகளிடத்திலும் நேர்மை, பொறுமை, அஜாக்ரதையில்லாமை இவைகள் எந்த மனிதனிடமிருக்கின்றனவோ அவன் ஸுகமுள்ளவனாயிருப்பான். சிறந்ததும் எல்லாப் பிராணிகளுக்கும் ஸுகத்தை அளிப்பதுமான இந்தத் தர்மமானது துக்கத்திலிருந்து விலகுவிப்பதென்று தெரிந்துகொள்ளுகிற உண்மையை அறிந்தவன் ஸுகமுள்ளவனாவான்.*

அத் : 271—பக்கம் - 952 & 953

*ஸகலதர்மங்களிலும் கொல்லாமையே பெரிதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையால், ஸன்யாஸத்துடன் கிராமஸமீபத்தில் வஸித்துக்கொண்டு உறுதியான நியமத்துடன் கர்மகாண்டத்தில் சொல்லப்பட்ட ஹிம்ஸையைத் தள்ளிவிட்டு, இது ஆசாரம் என்று ஆசரியாமல் இருக்கவேண்டும். கர்மபலத்தில் விருப்பமுள்ளவர்கள் அற்பர்கள். மனுஷ்யர்கள் யூபங்களுக்காக விருக்ஷங்களை வெட்டுகிறார்கள்; வீணாக மாம்ஸங்களைப் பக்ஷிக்கிறார்கள். ஆனால் இந்தத் தர்மம் புகழப்படுகிறதில்லை. தூர்த்தர்களால் கள், மீன், தேன், மாம்ஸம் ஆஸவம் (சாராயம்) திலான்னம் இவை (முதலானவை) உண்ணப்படுகின்றன. இவைகள் வேதங்களில் சொல்லப்படவில்லை.*

அத் : 273—பக்கம் - 984

*பகைவர்களைக் காப்பவரே! வனத்தில் ஓரிடத்தை அடைந்து ஒரு பிராணிக்கும் துன்பம் செய்யாமல் கிழங்குகளினாலும் கனிகளினாலும் செய்யப்பட்டாலும், யாகமானது ஸ்வர்க்கத்தை யளிக்கும்.*

அத் : 297—பக்கம் - 1067

சாஸ்திரத்தின் வசனத்தினாலே பிரம்மவித்துக்களான பிராம்மணர்கள், அறியாமையால் செய்யப்பட்ட ஹிம்ஸையை அஹிம்ஸையானது விலக்குகிறது என்று சொல்லுகிறார்கள்.

அத் : 298—பக்கம் - 1069

எவன் அபிமானத்தை விட்டுப் பெரியோர்களை ஸேவித்து வித்வானும் காமமற்றவனுமாகி ப்ரீதியுடன் (உலகத்தைப்) பார்க்கின்றானோ, ஸாமர்த்தியமில்லாமல் தர்மதனுடன் கூடி (ஒரு பிராணிக்கும்) துன்பஞ் செய்யாமலிருக்கிறானோ, அந்த ஆரியன் நல்லோர்களால் பூஜிக்கப்படுகிறான்.

அத் : 300—பக்கம் - 1073

வித்வானான புருஷன் சாஸ்திரத்தாலாராய்ந்து அநாதிஸித்தமான பிரம்மஜ்ஞானத்தை அடையவேண்டும். ஹிம்ஸாரூபமான கர்மாவை விடவேண்டும்.

பக்கம் - 1074

மனிதனானவன் ஆசையுள்ளவனாயிருந்தாலும் ஆசையற்றவனாயிருந்தாலும் தர்மசீலனாயும் வித்வானாயும் எப்பொழுதும் உலகத்தில் ஆத்மபூதனாயுமிருந்து கொண்டு பிராணிகளுக்கு ஹிம்ஸையில்லாமல் நடக்கவேண்டும்.

அத் : 306—பக்கம் - 1097 & 1098

எந்த யோகியானவன் மஹாவிரதமென்கிற விரதத்தில் பற்றி நின்று, நாபி கண்டம் சிரம் ஹ்ருதயம் மார்பு விலாப்புறங்கள் நேத்திரம் ச்ரோத்திரம் க்ராணம் இந்த ஸ்தானங்களிலே தானாகவே ஸூக்ஷ்மனான (தனது) மனத்தை நன்கு சேர்ப்பிக்கிறானோ அவன் மலைபோன்ற புண்ணியபாபகர்மங்களைச் சீக்கிரமாக எரித்துவிட்டு மேலான யோகத்தை அடைந்து தான் விரும்பும்போது முத்தியடைகிறான் என்று சொன்னார்.

'மஹாவிரதம்' என்பது சாஸ்திரவிஹிதமான ஜாதிஹிம்ஸை, தேசவிசேஷத்தில் ஹிம்ஸை, காலவிசேஷத்தில் ஹிம்ஸை, காரிய விசேஷத்தில் ஹிம்ஸை முதலியவைகளைக் கூடவிட்டிருத்தல்.

அத் : 323—பக்கம் - 1161 & 1162

ஞானமானது சிறந்தது யாகங்கள் அப்படியல்ல (மனிதன்) ஞானத்தினால் துர்க்கத்தைத் தாண்டுகிறான். யாகங்களால் தாண்டுகிறதில்லை. ஓ அரசனே, ஞானத்தை அறிந்தவர்கள் ஜனனத்தையும் மரணத்தையும் துர்க்கமாகச் சொல்லுகின்றார்கள்.

அத் : 337—பக்கம் - 1218

ஹிம்ஸை செய்யாமலிருப்பது மேலான தர்மம். பொறுமை மேலான பலம். ஆத்மஜ்ஞானம் மேலான ஞானம். ஸத்தியத்திற்கு மேலானது ஒன்றுமில்லை. உண்மையை உரைத்தலே சிறந்தது. ஸத்தியத்தைக் காட்டிலும் ஹிதத்தைச் சொல்லவேண்டும். பிராணிகளுக்கு மிகவும் ஹிதமாயுள்ளதே ஸத்யமாக நான் நினைக்கிறேன்.

அத் : 344—பக்கம் - 1244 & 1245

பெரிதான அந்த யாகத்தில் எல்லா ஸாமக்ரியைகளுடன் நன்றாகச் சேர்ந்திருந்தன. அதில் பசுவதமானது ஏற்படவில்லை. இவ்விதமிருந்த அந்த அரசன் ஹிம்ஸையில்லாதவனும் சுசியும் பெருந்தன்மையுள்ளவனும் வேண்டுதலில்லாதவனும் (நல்ல) கர்மங்களால் துதிக்கப்பட்டவனுமானான். அதில் வனப்பிரதேசத்திலுண்டான பதார்த்தங்கள் ஹவிர்ப்பாகங்களாக அமைக்கப்பட்டன. அப்பொழுது தேவதேவரும் புராதனருமான பகவான் அவனிடம் பிரீதியடைந்து பிரத்யக்ஷமாக அவனுக்குத் தரிசனம் அளித்தனர். அவர் மற்ற ஒருவராலும் பார்க்க முடியாதவராய்த் தாமாகவே புரோடாசமான பாகத்தை ஆக்ராணஞ் செய்து கிரகித்தார். தேவரான ஹரியானவர் ஒருவராலும் பார்க்கப் படாமல் பாகத்தைக் கிரகித்தார். அதனால் பிருஹஸ்பதியானவர் கோபத்தை யடைந்தவரும் வேகமுடையவருமாகி 'ஸ்ருக்' என்கிற யாக பாத்திரத்தைத் தூக்கி ஆகாயத்தில் எறிந்து ஸ்ருக்குக் கீழே விழுந்தவுடன் ரோஷத்தால் கண்ணீரைச் சொரிந்தார். உபரிசரனை நோக்கி, 'அரசனே! என்னால் எடுக்கப்பட்ட இந்தப் பாகமானது, தேவரால் எனக்குப் பிரத்தியக்ஷமாகி நேரில் கிரகிக்கத்தக்கது ஸந்தேகமில்லை. இந்த யாகத்தில் என்னால் கையிலெடுக்கப்பட்ட யஜ்ஞபாகங்கள் தேவர்களாலே, பிரத்தியக்ஷமாகவே கிரகிக்கப்பட்டனவல்லவா? எதற்காக இந்த யாகத்தில் ஹரியானவர் என் கண்ணுக்குத் தோன்றவில்லை என்றும் சொன்னார். அப்பொழுது மகானான வஸுவென்கிற அந்த அரசனும் ஸபையோரனைவரும் மிகவும் கோபம் கொண்ட அந்த முனி

வரைச் சமாதானம் செய்தார்கள். வஸுராஜன் இப்பொழுது இந்த யாகத்தில் உம்மால் புரோடாசத்தினுடைய எவ்வளவு பாகமானது ஹோமம் செய்யப்பட்டதோ, அவ்வளவும் என்னெதிரில் தேவதேவரான பகவான் கிரகித்துகொண்டார் ஸந்தேகமில்லை' என்று இவ்விதம் சொன்னபொழுது குருவானவர் (திரும்பவும்) கோபத்துடன், 'அரசனே! இந்த யாகத்தில் நான் இனியஜிக்கமாட்டேன். உன்னால் அவமானம் செய்யப்பட்டேன். உன்னால் பசுவானது, தடுக்கப்பட்டது. மாவினால் உண்டாகும் பசுவானது செய்யப்பட்டது. நீ எந்நாளும் தேவரைப் பார்க்கிறாயானால் நான் ஏன் பாராமலிருப்பேன்' என்று சொன்னார். வஸுவானவன் பசுஹிம்ஸையானது யஜுர் வேத முதலான மந்திரத்தால் தடுக்கப்பட்டது.

அத் : 345—பக்கம் - 1249 & 1250

இந்திரனானவன் பூமியை அடைந்து யாகத்திற்குத் தீக்ஷை செய்துகொண்டான். ஸவநீயபசுவினுடைய காலமானது வந்தபொழுது பிருஹஸ்பதியானவர், 'இப்பொழுது பசுவுககாக மாவைக் கொண்டு வரலாம்' என்று சொன்னார். அதைக் கேட்டுத் தேவர்களெல்லாரும் மாம்ஸத்திலாசையுள்ளவர்களாகி ப்ராம்மணஸ்ரேஷ்டரான பிருஹஸ்பதியையும் மற்ற பிராம்மண ஸ்ரேஷ்டர்களையும் நோக்கி 'அஜத்தால் யாகம் செய்யவேண்டும். அந்த அஜமும் வெள்ளாடென்று அறிய வேண்டும். மற்றவை பசுவல்லவென்பது முறை' என்று இந்த வார்த்தையைத் தனித்தனியே சொன்னார்கள். ரிஷிகள் யாகங்களில் தான்யங்களால் பூஜிக்கவேண்டுமென்று வேதவிதியிருக்கிறது. அஜமென்று பெயருடையவை தான்யங்களே. நீங்கள் வெள்ளாட்டைக் கொல்லுதல் தகுதியன்று. ஓ! தேவர்களே! எதில் பசுவானது வதைக்கப்படுகிறதோ அது ஸத்துக்களுடைய தர்மமாகாது.

இது சிறந்ததான கிருதயுகம். பசுவானது எப்படி வதைக்கப்படலாம் என்று சொன்னார்கள். தேவர்களோடு அந்த முனிவர்கள் விவாதம் பண்ணிக்கொண்டிருக்கையில் அந்த வழியில் வந்தவனும் அரசர்களில் சிறந்தவனும் ஆகாயத்தில் சஞ்சரிப்பவனும் ஸ்ரீபொருந்தியவனும் பலமுடைய ஆயிரம் வாகனங்களுள்ளவனுமான வஸுவானவன் அந்த இடத்திற்கு வந்தான். வேகமாக வருகிறவனும் ஆகாயத்தை யடைந்தவனுமான அந்த வஸுவைப் பார்த்து அந்தப் பிராம்மணர்கள் தேவர்களை நோக்கி யாகசீலனும் தானங்களுக்குப்பதியும் சிறந்தவனும் எல்லாப் பிராணிகளுடைய நன்மையிலும் பிரியமுள்ள

வனுமான இவன் சந்தேஹத்தை நிவர்த்தி செய்வான். மஹானுன இந்த வஸுவானவன் ஒருவிதத்திலும் தவறுதலான வார்த்தையைச் சொல்லமாட்டான் என்று சொன்னூர்கள். இவ்விதம் அந்தத் தேவர்களும் முனிவர்களும் ஸங்கேதத்தைச் செய்துகொண்டு எல்லாரும் சேர்ந்து வஸுவென்கிற அரசனுடைய சமீபம் வந்து, 'ஓ அரசனே! அஜத்தினுலா அல்லது தான்யங்களாலா எதனுல் யாகம் செய்யவேண்டும். எங்களுடைய இந்த ஸந்தேகத்தை நிவிருத்திசெய். நாங்கள் உன்னைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டிருக்கிறோம்' என்று கேட்டார்கள். அந்த வஸு அவர்களை நோக்கி அஞ்சலிசெய்து கொண்டு 'ஓ பிராம்மணச்ரேஷ்டர்களே யாருக்கு எந்தப்பக்ஷம் சம்மதம்.ஸத்தியத்தைச் சொல்லுங்கள்' என்று கேட்டான். ரிஷிகள் 'ஓ அரசனே தான்யங்களால் யாகம் செய்யவேண்டுமென்பதே எங்களுடைய பக்ஷம். தேவர்களுக்கோ பசுவினுல் யாகம் செய்கிற பக்ஷமே சம்மதம். ஓ அரசனே! எங்களுக்குச்சொல்'என்று சொன்னூர்கள். அப்பொழுது வஸு, தேவர்களுடைய அபிப்ராயத்தை யறிந்து அவர்களுடைய பக்ஷத்தைப் பற்றி சாகமென்கிற அஜத்தினுலே யாகம் செய்யவேண்டும்' என்கிற வார்த்தையைச் சொன்னுன். அதனுல் ஸூர்யனுக்கு நிகரான காந்தியுடைய அந்த முனிவர்களெல்லாரும் கோபத்தை யடைந்து விமானத்திலிருப்பவனும் தேவபக்ஷத்தின் விஷயத்தைச் சொல்லுகிறவனுமான வஸுவை நோக்கித் தேவர்களுடைய பக்ஷத்தை நீ கொண்ட காரணத்தால் ஆகாயத்திலிருந்துவிழக் கடவாய். அரசனே இதுமுதல் உன்னுடைய ஆகாய கமனமானது கெட்டுப்போகட்டும். அரசனே வேதங்களுக்கும் ஸூத்திரங்களுக்கும் மாறாக நீ சொல்லியிருந்தால் எங்களுடைய சாபமாகிற அடியால் நீ பூமியைப் பிளந்துகொண்டு விழுவாய். நாங்கள் விரோதமான வார்த்தையைச் சொல்லியிருந்தால் அவ்விடத்தில்விழுகிறோம்' என்று சொன்னூர்கள். 'ஓ அரசனே அப்பொழுது உடனே அந்தச் சாபத்தினுல் அந்த க்ஷணத்திலேயே உபரிசரனென்கிற அரசன் விரைவில் பூமியின் துவாரத்தை யடைந்து கீழே யிருப்பவனுனன்.'

## அத் : 358—பக்கம் - 1331

தர்மத்தின் ஞானத்துடன் நன்ருக அனுஷ்டிக்கப்பட்டதும் அஹிம்ஸையென்கிற தர்மத்துடன் கூடினதுமான இந்தக்கர்மத்தினுல் ஈஸ்வரரான ஹரியானவர் பிரீதியடைகிருர்.



சாந்திபர்வம்—மோக்ஷதர்மம்—271-வது அத்யாயம்
953-ம் பக்கம் 8-வது வரி

'பிராமணர்கள் எல்லா யாகங்களிலும் வியாபகரான பரமாத்மாவே (=விஷ்ணுவே) பூஜிக்கத்தக்கவர். பாயஸங்களாலும் புஷ்பங்களாலுமே அவருடைய பூஜை சொல்லப்படுகிறது. . . . (ஆகையால் ஹிம்ஸையில்லாமல் தேவரைப் பூஜிக்கவேண்டும்)' என்றும் சொன்னார்.



# அநுசாஸன பர்வம்



## நூற்றெழுபத்தைந்தாவது அத்யாயம்

**தான தர்ம பர்வம் (தொடர்ச்சி)**

*தர்ம புத்ராருக்கும் பிருகஸ்பதிக்கும் நடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி*

## அஹிம்ஸையைப் பற்றியது

யுதிஷ்டிரர், 'கொல்லாமை, வேதத்திற் சொல்லிய கருமங்கள், தியானம், இந்திரியங்களை அடக்குவது, தவம், குருபணிவிடை இவற்றுள் எது மனிதனுக்கு நல்லது' என்று கேட்க, பிருகஸ்பதி சொல்லலானார்:—பரத சிரேஷ்டனே! நீ சொல்லுகிற ஆறும் தனித்தனியே தர்மத்திற்கு எப்போதும் வழிகளே. ஆகிலும், எல்லாவற்றிலும் சிறந்ததாகிய மனிதனுடைய நல்வழியை நான் சொல்லுவேன் கேள்: வித்வான் அடக்கத்துடன் கொல்லாமையைப் பற்றிய தர்மத்தைச் செய்ய வேண்டும். மனிதன் எல்லாப் பிராணிகள் விஷயத்திலும் த்ரி தண்டத்தை வைத்துக் கொண்டு காமக் குரோதங்களை அடக்கிப் பரிசுத்தனாக இருப்பதனால் நன்மையை அடைவான். தன்னை ஹிம்ஸியாமலிருக்கும் பிராணிகளைத் தடியினாலடித்துத் தன் ஸுகத்தைக் கருதுபவன் மறுமையில் ஸுகம் பெறான். எந்த மனிதன் மற்றப் பிராணிகளைத் தன்னைப்போல நினைத்துத் தண்டிப்பதையும் கோபத்தையும் விட்டிருக்கிறானோ அவன் மறுமையில் ஸுகத்தோடு விளங்குவான். எல்லாப் பிராணிகளையும் தானாகப் பார்ப்பவன் போகும் வழியில் கால் வைக்க இடமில்லாமல் இடத்தை வேண்டும்போது, தேவர்களும் வழியில் நிற்கத் துணியார். தனக்கு எது விரோதமோ அதைப்

பிறருக்குச் செய்யலாகாது. இதுதான் தர்மத்தின் சுருக்கம். இதற்கு மாறுனது ஆசையினுல் உண்டாகிறது. பிறரைப் பற்றிப் பேசுவதிலும் தானத்திலும் இன்பத்திலும் துன்பத்திலும் விருப்பிலும் வெறுப்பிலும் மனிதன் தனனை உவமையாகக் கொண்டு பிறர் விஷயத்தில் நிச்சயம் தெரிந்து கொள்ள வேண்டும். ஒருவன் மற்றவர்களிடத்தில் எப்படி நடக்கிருனே அப்படித் தான் மற்றவர்கள் அவன் விஷயத்தில் நடப்பார்கள். இவ்வுலகம் தனக்கு ஒத்ததைத் தான் செய்கிறது. 'தர்மத்தைச் செவ்வையாகச் சொன்னேன்' என்ருர். சிறந்த புததியுள்ள பிருகஸ்பதி, அந்தத் தர்மராஜாவான யுதிஷ்டிரருக்கு இவ்வாறு சொல்லி நாங்கள் பார்ததிருக்கையிலேயே ஆகாயத்தில் ஏறினுர்.

## நூற்றெழுபத்தாறுவது அத்யாயம்

### தான தர்ம பர்வம் (தொடர்ச்சி)

*ஹிம்ஸை, மாம்ஸ போஜனம் முதலியன ஆகாவென்பது.*

ஜனமேஜய மகாராஜரே! பிறகு பேசுகிறவரிற் சிறந்தவரான தர்மராஜர், சரதல்பத்திற் படுத்திருக்கும் பீஷ்மரைப் பார்த்து 'சிறநத புத்தியுள்ளவரே! ரிஷிகளும் பிராம்மணர்களும் தேவர்களும் வேதத்தைப் பிரமாணமாக அறிநது 'கொல்லாமை' என்னும் தர்மத்தைச் சிலாகிக்கின்றனர். இராஜசிரேஷ்டரே! செய்கையாலும் வாக்கினுலும் மனத்தினுலும் பிறவுயிர்க்குத் துன்பம் செய்யும் மனிதன் துக்கத்தினின்று விடுபடானே? என்று மறுபடியும் கேட்க, பீஷ்மர் சொல்லலானுர்: பகைவரை நாசம் செய்பவனே! அஹிம்ஸை நாலு வகை என்று வேதம் தெரிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்று தவறினுலும் அது அஹிம்ஸையாவதில்லை. ராஜனே! எப்படி நாலுகால்களுள்ளது ஒன்றும், மூன்று கால்களால் நில்லாதோ அப்படியே அஹிம்சையும், மூன்று வகைகளால் நில்லாதென்று சொலலப்படுகிறது. யானையடியில், காலால் நடக்கும் மற்றவற்றின் அடிகள் இருந்தால், அவை எல்லாம் எப்படி, யானையடிக்குட்பட்டுப்போகின்றனவோ அப்படியே உலகத்திலுள்ள எல்லாத் தர்மங்களும் அஹிம்ஸையில் அடங்கிப்போகின்றனவென்று முற்காலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. செய்வதனுலும் சொல்வதனுலும் நினைப்பதனுலும் மனிதனைப் பாவம் பற்றுகிறது. முதலில் மனத்தினுலும் பிறகு வாக்கினுலும் அதன்பின் செய்கையினுலும் வரும் ஹிம்ஸையை விடவேண்டும். ஹிம்ஸையைச் செய்யலாகாது. அந்த ஹிம்ஸையும்

நாலு வகை: தேகத்திலும் மனத்திலும் வாக்கிலும் இது குற்றமாகச் சொல்லப்படுகிறது. மாம்ஸம் தின்றுகவன் எவனோ அவன் இம் மூன்று குற்றங்களாலும் விடப்பட்டவனாகிறான். மனம், வாக்கு, ருசி பார்க்கும் நா, இம்மூன்றிலும் மூன்று காரணங்களினால் இநதக் குற்றங் கள் நிற்கின்றனவென்று வேதமோதினவர்கள் சொல்லுகின்றனர். அதனாலேதான் தவத்திலிருக்கும் ஞானிகள் மாம்ஸம் தின்பதில்லை. இராஜனே! மாம்ஸபக்ஷணத்திலுள்ள தோஷங்களைச் சொல்லுகிறேன் கேள்: தன் புத்திரனுடைய மாம்ஸம் போன்றதாகவே தெரிந்தும் ஆசையினாலறிவு கெட்டு மாம்ஸத்தைத் தின்னும் மனிதன் அதமனாக நினைக்கப்படுகிறான். தாய் தந்தையர்கள் புணர்வதனால் புத்ரனானவன் தன் வசமில்லாமற் பிறப்பதுபோல ஹிம்ஸையைச் செய்பவன் தன் ஸ்வாதீனமில்லாமலே பாபஜன்மமெடுப்பது மிகவும் நிச்சயம். நாவில் எப்போது உணர்ச்சி தெரிகிறதோ அப்போது மனத்தில் ஆசையுண் டாகிறதென்பது சாஸ்திரங்களின் நிச்சயம். உருசி காண்பதனாலன்றோ ஆசையுண்டாகிறது. பாகம் செய்யப்பட்ட பொருள்கள் நன்றாகச் சமைந்தும், சமையாமலும், உப்பிருந்தும், இல்லாமலுமிருப்பதற்குத் தக்கபடி மனம் அவற்றில் பிரவிருததிக்கிறது. மாம்ஸம் தின்னும் புத்திகெட்ட மனிதர்கள், பேரிகைகள் மிருதங்கங்கள் இவற்றின் ஒலி களையும், தந்திகளில் நிரம்பின ஸ்வரங்களையும், எப்படி அனுபவிப்பர். அயலாருடைய தனங்களையும் தானியங்களையும் கெடுப்பவரும் (இல் லாததைத்) தூஷிப்பவரும் மாம்ஸததை சிலாகிப்பவரும் எக்காலத்தி லும் ஸ்வர்க்கத்தினின்று வெளிப்படுத்தப்படுகின்றவர்; மாமிசத்தின் சுவையில் ஆசைமேற்கொண்டவர்கள் அதன் உபயோகத்தை வேண் டித் தாங்கள் நினையாமலும், தங்களுக்கு யாரும் சொல்லாமலும், தாங் கள் இதற்கு முன் அனுபவியாமலும் இருககும் மாம்சத்தைச் சிலா கிக்கின்றனர். மாம்சத்தைச் சிலாகிப்பது மட்டுமே ஹிம்ஸைக்குச் சமமான பாபமுள்ளது. நீறாவதும், மலமாவதும், புழுவாவதும் எதற்கு நிச்சயமான முடிவுகளோ அந்தத் தேகத்தை மற்றவற்றை ஹிம்ஸித் துக் காப்பாற்றுவதை வித்வான் எப்படிச் செய்யலாம். பல நல்ல மனிதர்கள் தம் மாமிசங்களினால் பிறர் மாமிசங்களைக் காப்பாற்றி உயிர்விட்டு ஸ்வர்க்கம் போயினர். மஹாராஜனே, இவ்வாறு நாலு காரணங்களால் அஹிம்ஸை சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாத் தர்மங்களாலும் அனுஸரிக்கப்பட்ட அந்த அஹிம்ஸையை உனக்குச் சொன்னேன் என்றார்.

அநுசாஸன—177-வது அத்—627 பக்கம்—13-வது வரி

'மாம்ஸந் தின்னுமலும், ஒன்றையுங் கொல்லாமலும், பிறரால் கொல்விக்காமலும் இருப்பவன் எல்லாப் பிராணிகளுக்கும் அன்பன்' என்று ஸ்வாயம்புவமனு சொன்னார்.

ஆச்வமேத—94-வது அதி—24 பக்த ரிஷிகள் அகஸ்தியரைப் பார்த்தது

'பிரபுவே! உம்மால் ஹிம்ஸையில்லாத புத்தியானது நன்கு விரும்பப்பட்டது. யாகங்களில் இந்த அஹிம்ஸையை நீர் எப்பொழுதும் சொல்லும்' என்று சொன்னார்கள்.

முண்டகோபநிஷத்

𑌪𑍍𑌲𑌵𑌾𑌹𑍍𑌯𑌤𑍇𑌅𑌦𑍃𑌢𑌾𑌯𑌜𑍍𑌞𑌰𑍂𑌪𑌾
𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑍋𑌕𑍍𑌤𑌮𑌵𑌰𑌂𑌯𑍇𑌷𑍁𑌕𑌰𑍍𑌮 ।
𑌏𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌯𑍇𑌽𑌭𑌿𑌨𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿𑌮𑍂𑌢𑌾𑌃
𑌜𑌰𑌾𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂𑌤𑍇𑌪𑍁𑌨𑌰𑍇𑌵𑌾𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿 ॥

(யாகரூபமான இவைகள் உறுதியில்லாத கப்பல்கள். அவைகள் ரித்விக்குக்கள் முதலிய 18 பேர்களும் தாழ்ந்த கர்மாவும் சொல்லப்பட்டிருக்கின்றன. எந்த மூடர்கள் இவற்றைச் சிறந்தவைகளென்று கொண்டாடுகிறார்களோ அவர்கள் ஜராமரணங்களைத் திரும்பவுமே அடைகிறார்கள்.)

மநுஸ்மிருதி—5-வது அத்யாயம்

சுலோகம் (46) எவன் ஜந்துக்களைக் கட்டாமலும், கொல்லாமலும், வருத்தப்படுத்தாமலும் இருக்கிறானோ அவன் ஸகலமித்திரனாக ஸகல ஸுகத்தையும் அநுபவிக்கிறான்.

(48) ஜந்துக்களை ஹிம்ஸை செய்யாமல் ஒருபோதும் மாம்ஸம் உண்டாகாது. ஜந்துக்களைக் கொன்றால் ஸ்வர்க்காதி லோகம் கிடைக்காது. ஆகையால் மாம்ஸத்தை நீக்கவேண்டியது.

(53) எவன் நூறு வருஷம் வரையில் வருஷந்தோறும் அஸ்வமேதயாகம் செய்கிறானோ, எவன் மாம்ஸத்தைச் சாகும் அளவும் நீக்குகிறானோ இவ்விருவருக்கும் புண்ணிய பலன் சரிதான்.

யாஸ்கர் நிருக்தி

அஹிம்ஸாயாகம் செய்பவர்கள் உத்தரமார்க்கத்தில் (=உயர்ந்த வழியில்) சென்று மோக்ஷத்தை அடைகிறார்கள். ஹிம்ஸையைக் கைப்

பற்றி வித்தையை விட்டவர்கள் வேதோக்த காரியங்களை நெடுங்காலம் செய்து வந்தாலும் தூமாதிமார்க்கத்தில் சென்று ஜனன மரணத்தில் உழலுகிறார்கள்.

வேதாந்த தேசிகர்.

[illegible]

(= என்னைப் போன்றவன் ஹிம்ஸையுள்ள யாகங்களால் எவ்விதம் ஈஸ்வரனைத் திருப்தி அடையச் செய்யத் தகுதியுள்ளவன்? தூங்கும்போதும், விழித்திருக்கும்போதும் கேசவரையே பூஜித்துக் கொண்டிருக்கிற மஹாத்மாவான அவனுக்கு ஹிம்ஸா ரூபமான யாகங்களால் ஆகவேண்டுவது என்ன?)



# APPENDIX - C

## சிவஞானசித்தியார்

## பரபக்ஷம் — நிகண்டவாதம்

### ஞானப்பிரகாசர் உரை

### நிகண்டவாதம்

1. வாச மாமலர சோகு பேணிமறை நீதி யோடுமலை யுந்தவத்
தாசை யாலுடைய கன்று மாசினைய டைந்தில் வாழ்தரு மறத்தினிற்
பாச மானது தவிர்ந்து பண்டிபட வுண்டு பாயினொடு பீலிமேல்
நேச மாயவை தரித்து ளோர்களி னிகண்ட வாதியை நிகழ்த்துவாம்.

*(இ - ள்) நறு நாற்றத்தையும வண்டையுமுடைய மலர் செறிந்த வசோகுவிருக்ஷத்தைப்பேணி, வேதவொழுக்கந்துடன் மாறுபட்ட தவத்திலே விரும்பி, புடவை போகட்டுச் சரீரத்து மாசடைந்து இல்லறத்துப் பாசமான ஸ்திரீபுத்திராதிகளினுட னுறவுநீங்கி, வயிறிடம்பட உண்டு, பாயினொடு பீலியிடத்துப் பிரியமாயவை தரித்துள்ளவர்களில் நிகண்டவாதி யென்று மாசீவகரென்று மிருவகையருளர். இதில் நிகண்டவாதியை யறிவியாநின்றோ மென்றவாறு.*

*கிரண்டமானது = உடையாம். நிக்கிரண்டம் = உடையில்லாமை, அமணனென்றதெனக் கொள்க. *ஆசீவகர்க்குடையுளவாம். 'மறைநீதியொடு மலையுந்தவம் எக்ஞாதி கருமங் கொள்ளாமையாலுங் கர்த்திருவாதஞ் சொல்லாமையாலும் பஸ்மருத்திராக்ஷதாரணமில்லாமையாலுமெனக் கொள்க.*

2. ஈறி லாதன வநந்த ஞானமுத லெண்கு ணங்களொடு மொண்குண
மாறி லாதமதி மேவு சீதமென வுன்னி வானவர் வணங்கவே

---

*This is in conflict with the following statement by Jnanaprakasa, about 'Ajivikas.'

*'திகம்பரமொப்பினும் அநேகாந்தவாதிகளாகிய நிக்கிரந்தரல்லாத ஆசீவகரென்க' என்றார் ஞானப்பிரகாசர்.*

வேறு லாவுகுண ஞான மாவரணி யாதி யெட்டினையும் விட்டசீ
ரேறு பான்மையுடை நீடுவோழருக னெங்க ளுக்கிறைவ னேன்றனன்.

(இ - ள்) முடிவற்றவனந்தஞான முதலாகச் சொல்லப்பட்ட எட்டுக் குணங்களாகிய நற்குணங்கள் வேறுபாடில்லாத சந்திரனுங் குளிர்ச்சியும் போலப் பொருந்தியிருப்பானாய், தேவர்கள் தொழ வேறுபாடாய் வழங்கும் ஞானவரணாதி யெட்டையும் விட்ட சிறப்பை மேலீடாகவுடையனாய், நித்தியனாய அருகத் பரமேட்டியே எங்களுக்குச் சுவாமியாவா னென்றவாறு.

அனந்தஞானமுத லெண்குணமாவன. அனந்தஞானம், அனந்த தெரிசனம், அனநதவீரியம், அனந்தசுகம், நிர்நாமம், நிர்கோத்ரம், நிராயுஷ்யம், ஸம்யக்த்வபாவம் இவை யெட்டாம். ஞானவரணாதி யெட்டாவன : ஞானவரணியம், தெரிசனாவரணியம், வேதநீயம், மோஹநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம் என. சீரேறுபான்மையு முடையவனென்றது—நின்மலனாய், ஸர்வஜ்ஞனாய், தேவர்களால் நிர்மிதமாகிய சிங்காதனமும், பிரபாமண்டலமும், சர்வ பரிமளமும், சமஸ்தஜீவன்கட்கும் மித்திரபாவமும், சந்தோஷப் பிரவிருத்தியும், பதினான்கதிசயமும், சுவர்க்காவதரணம், மந்தராபிஷேகம், மகாப்பிரஸ்தானம், கேவலோத்பத்தி, பரிநிர்வாணம் என்னும் பஞ்சகல்யாண சகிதனுமாகி, அற்புத சகிதனுமாகி, அற்புத மகிமையுடையவனாகியுள்ளானென்றதெனக் கொள்க.

3. கருவிகண் படுதுடக் கொழிந்து வருகால மூன்றினிகழ் காரியம்
பெருகநின்றொரு கணத்திலே யுணர்பெருந்தவக் கடவுள் பீடினொன்
மருவிநின்று வழிபட்டவர்க்கு மலைவுற்றவர்க்கு மனமோத்திடுங்
குரிசிலெங்களிறையென்றுபின்னுநிகழ்குற்றமின்மையது கூறுவான்.

(இ - ள்) கருவிகளிடத்துண்டாகிய பெநதனங்கள் நீங்கினவனாய்ப் பூதபவிஷ்ய வர்த்தமானமாகிய மூன்று காலத்தினும் வழங்குமியல்புகளெல்லாம் மிகவு நின்று ஒரு கணத்திலே யறிவானா யிருக்கிற பெரிய தபசியாகிய கர்த்தாவாய்ப் பெருமையிற் பொருந்தி நின்று வழிபட்டவர்க்கும் விருத்தரா யுள்ளவர்க்கும் மனமொத்திருப்பானா யிருக்கிற தலைவனே யெங்கள் சுவாமி யென்றும் வேறுமவனுடைய குற்ற மில்லாமையைச் சொல்லுவா னென்றவாறு.

'கருவிகண் படுதுடக் கொழிந்'தென்பது-பாஹ்யந்தாக்ஷாயங்களை நீங்கி யென்றதெனக் கொள்க. 'காலமூன்றின்....பெருந்தவக் கடவு'

ளென்றது - 'ஜைத்ரூலோக்யம் ஸகலம் திரிகால விஷயம் ஸாலோக மாலோகிதம் ஸாக்ஷாத்யேநயதாச்வயம் கரதலே பேகாந்ரயம் ஸாங் குலி ராகத்வேஷ பயாநகம் மயாந்தகஜராலோல தவிலோ பாதயோ நாலம்யத்ப தலங்கநாய ஸமஹாமேதேவோ மயாவந்த்யதே' இதி வச னுத் கொள்க. 'பின்னு நிகழ்குற்ற மின்மையற கூறுவா'ரென்றது - பதினெண்குற்ற மொழிந்தவரே யதுவிட்டவ ரெனக் கொள்க. இவை சகலாப்த லக்ஷணம்.

4. பசித்த ருகபய செற்றமோடு வகைமோக சிந்தனை பழித்தனோய்
நசித்தல் வேர்விஞேடு கேதமோடுமதம் வேண்டலின் டதிசயித்தலும்
புசிப்பு வந்திடு பிறப்புறக்க மிவைவிட்டோரட்ட குணபூதனுய் [ன்.
வசித்த வன்னுலகின்மே லிருந்தொருசொலி கலனுக்கருளு மென்றன

(இ - ள்) பசித்தலு முஷ்ணமும் பயமும் வெறுப்பும் பிரியமும் மோகமும் வெகு சிந்தனையும் நரையும் நோயும் நசிக்கையும் வேர்ப்பு மிளைப்பும் மதமும் இரந்து கொள்கையும் அதிசயமும் புசிப்பும் பிறப்பு முறக்கமுமாகிய பதினெண் குற்றமும் நீங்கி யனந்த ஞானுதியெண் குணத் தன்மையுடையவனு யிருநதாப்நான வருநேலொகாஹூ்த்தே யிருந்து ஒரு வார்த்தை யிகலாக்தற்கு வருளிய விதனுமே யுலகத்தை யிரக்ஷியு மென்று ரென்றவாறு.

'உலகின் மேலிருந்து சொல் இகலனுக்கருளு' மென்றது பொன்னெயில் வட்டத்திருந்த *சித்த பரமேட்டியைச் சென்று விகலாப்தராமமம் பகவன்'? என்று கேட்க, முரசுதாக்க சத்தம் இளம்பிறைபோல வொருசுந்நம் பஞ்சாஸ்திமய (காய)மென்று சொல்லியது கொண்டு விசாரிந்நானெனக் கொள்க. இராகமின்றி யிருப்ப ஹெயோபா தேயதத்துவ தேசங் கூடுமோ வென்னில் கடிப் பிணுலறையப் பட்டுப் பிறிதினை யபேக்ஷியாது முழங்கா நின்ற பட கத் தொனி போலவும், வழிகேட்க ராகமின்றி வழிகாட்டுமானியல்பு போலவுஞ் சொல்லப்பட்ட தெனக் கொள்க. "அரசரு மமரரு மாவ ணர் வினவலின், வரைவில் பிறர்களு மனநிலை மகிழ்வெய்த, வுரை பல வகையினு முறுபொருளுணர்வோர், முரசென வதிருமே முனைவரன் மொழியே." இது அவனுடைய நீலகேசி.†

*According to Jaina tradition, it is 'Arhat Parameshti' and not Siddha Parameshti that propounds this Agama for the benefit of the world.

†நீலகேசி - செய் - 454.

5. அந்த வாய் மொழியினு லவன் சரணமாதி யோக முதலானநூ
லிந்த மாநில மயங்கிடாத வகையிங்கியம் பினனிதன் பொருள்
வந்த காலமுயிர் தன்மதன் மியறமற்றும் விண்மருவு புற்கலம்
பந்தம் வீடிஞேட நாதியா யிவைபடைப்ப தின்றியுள பத்துமே.

(இ - ள்) *அந்தச் சகலத்தரால் சொல்லப்பட்ட 'பஞ்சாஸ்தி (காய) மய'மென்னும் வார்த்தை கொண்டு அவனது சரணமென்று வழிபடும் பூர்வாகமம், அங்காகமம, வெகுசுருதி முதலாகிய சாத்திரங்களை இந்த லோகம் மயங்காதபடி விகலாப்த்தர் சொல்லப்ப பட்டது. இதனிற் பொருள் காலமுஞ் சீவனுந் தன்மாத்தியு மதன்மாத்தியமும், புண்ணியமும் பாவமும், ஆகாசமும் புற்கலமும், பெந்தமு மோக்ஷமும் என்று வழங்கும் பத்துமனுதி யொருவராற் படைக்கப்பட்டதல்ல வென்றவாறு: இதுக்கு அவர்கள் வசனம், *"எனக் கேட்டாங் கெடுததுரைப்பா னிந்திரர்கள் தொழப் படுவான், றனக்காயத் தருமமுங்....காலங் கனப்பாடி லாகாய முயிருருவும் புண்ணியமே, நினைக் குங்காற் பாவமே கட்டுவீடென நிறுத்தி" இது நீலகேசி. இதிற் காலமாவது சமயப்பிற சமயமாகிய ஆவடிகையும் பிராணனும், ஸ்தோகமும், பலமும் நாடிகையும் முகூர்த்தமும், திவசமும் பக்ஷமு மாசமுமிருதுவு மயனமுஞ் சம்வற்சரமும் யுகமுமிவை முதலான கற்பாந்தமாகச் சொல்லப்பட்ட பேதமும் பூதபவிஷ்யத் வர்த்தமான விகற்பத்தது. உயிராவது ஞானதெரிசன ஹிதக்கிரியா சைதன்ய லக்ஷணத்ததாகிய பதார்த்தம் பிண்ட ஜீவன், ஸ்வரூபஜீவன், சுத்தஜீவனென மூன்று வகைப்படும். ஆத்மாவை விடாத குணம் பத்து. அஃதாவது அஸ்தித்துவம், ஞாத்ருத்வம், திருஷ்டத்துவம், கர்த்திருத்துவம், போக்த்ருத்துவம், அநிரூக்ஷ்மத்துவம், அவகாஹநத்துவம், அகுருலகுத்துவம், அமூர்த்தித்துவம், அசங்கியாதப் பிரதேசத்துவம் என்னுமஸ்தகுபாவை வயயொபலம சைதன்னியோபயோகம் சைதன்னிய ஸம்ஸ்காரம் ஸ்வரூபவெதிரேக தன்மமாம் பதினென்றுமாம். கிராஹ்ய சரீரபரிணமப்ரமாணுதி நின்ற பஞ்சேந்திரிய மனோவாக்காய ஸ்வாசமாகியவற்றுல் ஜீவியாநிற்பன சீவனுகும். தன்மாத்திகாயமாவது: சலசரமமநங்கட்குச் சலம் போலக் கதிபரிணுமோன்முக.......சலக்கிதைமிடத்தே வாசிக்கத் திரவிய ஞானபூபிருதியான பூபிருதியென புண்ணியமுமென அவற்றுள் பாவ புண்ணியஞ் சத்தவித

*நீ. கே. 288.

மாகும். காருண்ணியப பிரசன்ன பாவகுணானுராக பிரசஸ்த பிரவிருத்தித்த பொதுபபிரயோகம் ஞானப்பிரவிருத்தி தியானப் பிரவிருத்தி என. திரவிய புண்ணியமென்பது புரோக்ஷா காருண்ணியாதி சுபபரிணாம பரிணிதமாகிய சாதவேதநீய ஹாஸ்தாதி புருஷவேத வேதாயுஷ்யம் பஷ்டயுஷதிமமமெமஙகிரந்தி பிரவிருத்தி என சுபந்நக்யோசை கடிரத்திரமென்னும புண்ணிய கன்ம சுகந்தமாகும். பாப:—துவேதாபவதி: பாவபாவமுந திரவியபாபமுமென. கததிற ப்ருஹூபூதனம் சததவிதமாகும். அகாருண்ணியம அப்பிரசன்ன பாவம அகுணானுராகம் அப்பிரசத்த பூவிருத்தி அநரோனப்ரயோகம் அக்ஞானப் பிரவிருத்தி அசமத்தியான பிரவிருத்தியென தத்துவ தீயம் அகாருண்ணிய அசுப்பரிணாம பரிணமிதமாகிய ஞானாவரண தெரிசனாவரணமும் அசாதவேதநீய ஹாஸ்யாதி புருஷவேத பஞ்ச மோஹநீயமும நரகாயுஷ்ய திரயாயுஷ்யமும் நரகதிசந்தியாத்யசுப நாமமும் நிசைகோத்திரமு மந்தராயமென்னும் பாபகன்மஸ்கந்தமாகும். விண்ணென்றது ஜீவாதி பதார்த்தாவகாசதான லக்ஷணத்ததாகிய வதித்துவாந்த பிரதேசவாதி ஸ்வரூபானமை வயதன்மசகிதமாகிய அக்ஞானதத்துவாதி பிரவிருத்திய நனுமிதமாகி நின்ற பதார்த்தமாம். புற்கலமாவது: பரிசரசகநதவர்ண லக்ஷணத்ததாயுந் திரவிய பாவ விகற்ப பூரணகலன சுபாவத்ததாயும் பாமாணுக்கடாமெ ஸ்நிக்த ஸ்வரூப பரிகுணங்கள் காரணமாகப் பாப்பரி சமயந்தத்து விஷய போக்யோபகரண திரவியமாகும். பந்தமாவது ஞானாவரணீயாதிமா. ஞானாவரணீயம் பஞ்சபிரகாரமாம். அது மதிக்ஞானாவரணம் ஸ்ரீ சுருதிக் ஞானாவரணம் அவதிக் ஞானாவரணம் மனப்பரியாயக் ஞானாவரணம் கேவலக் ஞானாவரண மென. தெரிசனாவரணமென்பது ஸப்த விதமாகும. சக்ஷு தெரிசனாவரணம் அசக்ஷு தெரிசனாவரணம் அவதி தெரிசனா வரணம் கைவல்ய தெரிசனாவரணம் நித்தரா பிரசலை நித்திரா நித்திரா பிரசலை ஸ்தானகெந்தி என. 'வேதநீய'ந்துவித பேதத்தது: சாதவேத நீயம் அசாத வேத நீயம் என. மோகநீயம்துவி விகற்பத்தது. தரிசன மோகநீயம் சாரித்ரமோஹநீயம் என. தத்ர பிரதமம் மித்தியாதத்துவப் பிரகிருதியாகும். துவிதீயம் துவப்பிரகாரத்தது பாஹ்ய கஷாயம் மநோ கஷாயம். ஆயுஷ்யஞ் சதுர் பேதமாகும் மனுஷ்யாயுஷ்யம், தேவாயுஷ்யம், திரியகாயுஷ்யம், நரகா யுஷ்யம் என. நாம கன்ம சத்து வாரிம்சத் விகற்பமாகும். இவை விரிவிற் கண்டு கொள்க. வீரியாந்தராயம் ஷட்பிரகாரமாம். மனு பரிய

பெந்த மென்பது அமிருத விஷவீரிய சத்திபோலப் புண்ணிய பாவங்கட்குச் சுக துக்க பல தேசசத்தி மத்பெந்தமாகும். தூவபெநத மென்பது ஆசங்காரம்விட்டு நீங்காத ஸ்வரூபத்தால் நிரந்தர பெந்தமாகும. அதூவ பெந்த மென்பது விட்டு விட்டுப் பெந்திக்கும் ஸ்வரூபத்தால் சாநதா பந்தமாகும். இது பந்தம். மோக்ஷ மிரண்டு பிரகாரம்: விகற்ப மோக்ஷம் சகல மோக்ஷ மென. விகற்ப மோக்ஷஞ் சததுவாரி கன்மலி முத்தமாகும். சகல மோக்ஷம் அஷ்ட கன்மமும் விட்டு அஷ்ட குணத்தையு முடைத்தாய் இருக்குமென கொள்க.

இனி நிற்றலொடு தலையாதியாக அவை யென்றுடைய தந்தமாக இநதப் பொருள் பத்துந் தொகுத்துரைக்கின்ருர்.

6. நிற்றலோடு தலைபோத லன்மையை நிகழ்த்து நீடுவெதிரேகமு
முற்ற தாமிவை கணத்திலே மருவி யுள்ளவா புரியுமாறு தான்
கற்ற காலமள வெய்தி வாழுமுயிர் காயமேவி நிறைவானதே
பேற்று வேறு வருதன்மை நேரறிவு பெற்ற தாகியுள பேசிலே.

(இ - ள்) முற்படச் சொல்லப்பட்ட தச பதார்த்தமுஞ் சொல்லுகிருர்: நிற்பனவு மோடுதலு மீள்தலு மன்னு வயமும் நிகழ்த்தப்படா நிற்கிற வெதிரேகமும் பொருந்தி க்ஷணத்திலே கூடிப் பிரிகை யுள தாகும் வழியாம் கல்வியும் காலமுமளவையுங் கொண்டு வழங்கு மான்மாவின்றி யசரீரத்தைப் பொருந்திக் கரும் பினிரதங் கரும் புள்ளமட்டு நின்ருற் போலப் பெற்று நிற்கும் வேறு வரு தன்மையாகிய வறிவொழியத் தெரிசனக் கிரியா சைதன்யங்களையு முளவாஞ் சொல்லி லென்றவாறு. வெதிரேகம் - பதார்த்த விளக்க மென்பது கருத்து.

7. பரந்து மீது தருமாத்தி காய மழிவித்த நித்தமது பண்ணிடு
நிரந்து கீழ தருமாத்தி காயமது நித்தமாய் மிக நிறுத்திடும்
புரந்த புண்ணிய மிதற்கு நன்மை புகல் பாவமானவது தீமையே
தரும்பொருட் கிடமதாகும் வானமிகு புற்கலன் களவை சாற்றுவாம்.

(இ - ள்) மேலோங்கும் பரந்து தன்மாத்தி காயமானது பொருள்களை யழிவித்தலாகிய வனிந்தத்தையுஞ் செய்விக்கும் பொருந்தித் தாட்சியை யுடையவ தன்மாத்தி காயமானது நித்தமாக்கி நிறுத்துவதாம். இரக்ஷிக்கப்படாநிற்கிற புண்ணிய நன்மைகளைத் தரும் பாவமானது தீமைகளைத் தரும் பொருட்கிடமாகும் வான்புற்கலன்களானவை மேலே சொல்லாநின்ரே மென்றவாறு.

8. எணுமோன் றுடையவாகி யெங்குமணு வாயிரும்பு கன்மரங்களும்
பூணுமங்குரு வேலாமு மாகுமிவை புற்கலப்பொருள்க ளென்னலாங்
காணுமங் கறுவகைத் தொழிற்களவை கட்டுவிட்ட நெறிகன்மமேன்
மாண நின்றுவரு மாறிமாறி முன்வகைந்த துண்டுவிட மாட்சியே.

(இ - ள்) வலி பொருந்து தலைபுடையவாய் எவ்விடத்து மணுக்களாகி நிறைந்து இரும்புங் கல்லு மரமுமாம் பொன் வெள்ளி செம்பு முதலான வுருக்களுமா மிவை வாய்க்கிய பொருளாய்ப் புற்கலமாம் காணப்படா நிற்கிற வுழவு தொழில் வரைவு வாணிபம் வித்தை சிற்பம் ஆகிய அறுவகைத் தொழிலின் மட்டுகளாகியது பெந்தம். இத்தை விட்ட நெறியாகியது பத்தும் நின்று மேலுள்ள சேஷ கன்மங்கள் மாறி மாறி வரும் வகை யநதச் சோறுண்டு செல்லுகிரமம் போல வனுபவித்து விட முத்தனு மென்றவாறு. ஜைமினுகமத்துப் பிரமாண மாவது அவருடைய நீலகேசியின்படி,* "காண்டலுமல்லதெம்மளவை காண்டன்முன், பூண்டவைம் பொறிமனம் அவதி புண்ணிய, மாண்டகு மனப்பரி யாயங் கேவல, நாண்டகு மிவைய ருள்ளு நண்ணிலுய்" எ-து காண்டல்-பிரத்தியக்ஷம் அல்லது பரோக்ஷம். இவ்விரண்டுமே பொருள்களை யளக்கு மளவை. அவற்றுள் பிரத்தியக்ஷ மிந்திரியப் பிரத்தியக்ஷ மானதப்பிரத்தியக்ஷம் அவதிப் பிரத்தியக்ஷம் மனப்பரி யாயப் பிரத்தியக்ஷம் எனவாம். இதில் இந்திரியப் பிரத்தியக்ஷமாவது கண் முதலாகிய இந்திரியங்களால் நிலமுதலாகிய புறப்பொருள் பற்றிப் பிறக்கும் ஞானம். மானதப் பிரத்தியக்ஷமாவது சுகாதிஸ்வரூபம் விஷயமாகும் ஸ்மரணக் ஞானங்களுடைய ஸ்வரூப விஷயமாகவும் பிறக்கும் ஞானம். அவதிப் பிரத்தியக்ஷமாவது அவதிக்ஞானவரணீய மந்தராய மென்னுங் கன்மங்களுடைய க்ஷயோபசமத்தால் ரூபித் திரவ்யம் பற்றி விளங்கத் தான் மிக்குப் பிறக்கும் ஞானம். மனப்பரி யாயப் பிரத்தியக்ஷமானது மனத்தால் பிறர் மனத்து நினைந்த பொருளைப்பற்றிப் பெருகிய விளக்கத்ததாகிப் பிறக்கு ஞானம். கேவலப் பிரத்தியக்ஷமாவது க்ஞானுவரணீயம் தெரிசனு வரணீயம் மோகநீய மந்தராய மென்னு மகாதி கன்மங்களொழிவறக் கெட்ட வழிப் பிறப்பதாதி ஜீவாதி சகல பதார்த்தங்களையும், நிகழ்ச்சிகளையும் க்ஷணத்தே சாக்ஷாத்கரிக்கின்ற 'அருகபரமேஸ்வர'னது திவ்யக்ஞானம் கன்மங்களது நீக்கத்துக் கண் ஆன்மாவின்கட் பிறக்கும் விசுத்தி

* நீலகேசி செ. 118.

பரோக்ஷ பிரமாணம். அவன் நீலகேசியிற் சொன்னபடி,* "நினைவு மீண்டுணர்வூக நேர்தரும், புனைவு சேரனுமை பொய்யின்மை மெய்யுரை, முனைவர் தம்மாகம மொழியும் ஆகுமென், றினையன தாழ்ச்சியி லளவை ஐந்துமே" நினைவு=ஸ்மரணம். மீண்டுணர்வு பிரத்தியபிக் ஞானம், ஊகம் தர்க்கம் புனைவு சேரனுமை யெனப்படுவது அனுமானம். பொய் நீங்கிய மெய்யாகிய ஆப்த வாக்கியம் ஆகமமெனப் பரோக்ஷப் பிரமாண மைந்தென்றவாறு. அபரோக்ஷம் பரோக்ஷமென விரண்டாகும். பேசுவன விவை விரிக்கிற் பெருகும். பார்க்க வேண்டுகில் நீலகேசியிற் கண்டு கொள்க.

நிகண்டவாதி மதம் முற்றும்.



* நீலகேசி செ. 119.

# செய்யுள் முதற்குறிப்பு

எண் : செய்யுளெண்

செய்யுள் முதற்குறிப்பு முற்றும்.



# அரும்பொருளகராதியும் விசேஷக் குறிப்பும்

எண் : பக்க எண்

அறுவகைக்கதி - விலங்கு, பேய், நரக, தேவ, பிரம, மக்கள் கதிகள் 180
Gatis are six according to Buddhists.
1. Nirayo - hell.
2. Tirachanayoni - the lower animals.
3. Pettivisaya - the preta world.
4. Manussa - Man.
5. Deva - gods.
6. Asurankayo - Asuras.
These are the six kinds of rebirths possible in Sawsara.

அறுவை - துணி 198
அறை - (தான வெல்லுதற்கரிதென்று) சொல்லும், 18; ஒலிக்கும் 55
அறைகீறி - குழிபறித்தது; ஆவது: பிணக்குழி பறித்தென்க 55
அறைதும் - சொல்லுதும் 185
அறைந்த 361
அறைந்தாய் - அறிவுறுத்தினாய் 58
அறைந்து - முழங்கி 58
அன்மையார் - அல்லாதவர்; பிறசமயக் கோட்பாடுடையவர் 58
அனகள் 365
அநியதம் - அநித்யம் 157
அஸ்திநாஸ்தி - ஒருபொருள் ஸ்வத்ரவியாதி நான்கினால் உண்டென்றும் பரத்ரவியாதி நான்கினால் இல்லையென்றும் கூறப்படும். The obvious truth is explained in Stanza 398 - and its commentary. 167
அஷ்டகபிண்டம் - வர்ண, கந்த, ரஸ, ஸ்பரிசமும், நான்கு பூதமும் கூடியது 195
அஷ்டகம் - Stanza 485. 204
அஷ்டமஹாப்ராதிஹார்யம் - ஸமவசரணத்தில் அர்ஹத்பரமேஷ்டிக்குத் தேவேந்திரனால் ஆக்கப்பட்ட சிறப்புகள்: 1. அசோகவிருக்ஷம்; 2. சுரபுஷ்பவருஷ்டி; 3. ஸிம்மாஸநம்; 4. சத்திரத்திரயம்; 5. பாமண்டலம்; 6. திவ்யத்வனி; 7. சாமரம்; 8. தேவதுந்துபி என எட்டு 58
அஷ்டஸமயங்கள் 49
அஷ்டாங்கம் - (ஸம்யக்தரிசனத்தின்பாலது) 50
ஆக்கம் - படைப்பு 296
ஆக்கமும் பேர்ச்சியும் - படைப்பும் அழிப்பும் 296
ஆக்கிய - கட்டிய 21
ஆக - மேடால 53
ஆகமம் - அருகன் நூலுரை 39
ஆகி - ஆகமுள்ளான் 111
ஆகுலம் - குற்றம் 234
ஆக்கு - ஆகவேண்டிய முறை, 286
ஆசி - முதலன் 25
ஆசீவகர் - நிகம்பரத மொழிபிறைம் அநேகாந்தவாதிகளாகிய நிர்க்கிரந்த ரல்லர் ஆசீவகர் 275
ஆசீவகன் - தொழில் செய்து ஜீவிக்கின்றனன்; மேலிய ஆசீவி, தொழிலுடைமையால். 'தொழில் — கர்ப்ப வியாபாரம் முதலியன' வென்றார் உரையாசிரியர் 280
ஆசும் - பிழைபடும் 22
ஆசௌசம் - தீண்டாமை, சூதகம் 136
ஆட்சி - ஆளுங்கருத்து 225
ஆட்டிறேன் - (சொற்போரால்) அலைத்தான் 314
ஆட்டுடையாள் 34
விலாஸினி - A dancing girl.
ஆட்டொருகால் - ஆண்டிலொருகால் 130
ஆடல்-கூத்து, 18; அலைதல் 307
ஆடி - விளையாடி 26
ஆடு - அசையும், 26; ஆவன 32
ஆண்டலை - ஆண்டலைப்புள் 20
ஆணம் - அன்பு; நேயம் 155
ஆணை - ஆட்சி 19
ஆத்த 259
ஆத்தன் - தலைவன்; 'ஆத்தன்' என்பது முதல் நீண்டது 11
ஆத்தாவது 269
ஆதம் - அறியாமை 354
ஆதரம் - அன்பு 199

இவட்காலம் - இக்காலம் ; நிகழ் காலம் 102
இவுளி - குதிரை 19
இழவு - பெற்றதை இழத்தல் 52
இழிதகவு - இழிவு 283
இழுக்கு - குற்றம் 7, 59
இழுது - நெய், 30 ; நெய்யின் உறைவு 283
இழுதை - அறிவின்மை, 234; பொருந்தாதது ; குற்றமுள்ளது 260
இழுதைமை 260
இளகுவர் - இளமை பெறுவர் 17
இற்றவர் - இறுதியுற்றவர் ; இறந்தவரென்க 55
இற்று - இத்தன்மைத்து 208
இறந்தாய் - கடந்தாய் 57
இறந்தார்க்கும் - சென்ற காலத்தவர்க்கும் 102
இறப்ப - மிக 28, 61, 265
இறப்பறிதல் - அழிவறிதல் 74
இறு - முரிகின்ற 18
இறுகி - வலித்து 24
இறுங்கு-சோளத்திலோர் இனம்; காக்காச்சோளமென்ப 269
இறுத்திட்டாள் - முறித்திட்டாள் 61
இறுதி - சாவு, 35; கொலை 80
இறுமின் - நிறுத்துமின் ; விடைகூறுமின் ; விடைகூறி நிறுத்துமின் 272
இறுவரை - கடுவெயிலால் முரிகின்ற மூங்கில் 18
இறைஞ்சினாள் - வணங்கினாள் 53
இறைமகன் - அரசன் 60, 61
இறையிலி - தீர்வை அல்லது வரியின்றி அநுபவிக்கப் படும் மான்ய நிலம் 3
இறைவர்-தலைவர் ; இங்கு ஆப்தர் 70
இன்குரலார் - இசை பாடுவோர் ; கின்னரர் 30
இன்றும் - இன்மையும் 236
இன்ன - இவ்வியல்பின 75
இன்னதனை - இவ்வளவு 108
இன்னா - துன்பம் 54
இனம் - கூட்டம் 17
இனமலர்-ஒன்றற்கொன்று இசைவான மலர்கள் 27
இனிதா-இனிதாக ; இது கடைக்குறை 56
இனிதினின் - நன்றாக 61
இனியன - இன்பந்தருவன; இன்சுவையுடையன 17
இனைபவளை - வருந்துகின்றவளை 30
இக்ஷுதண்டம் - கருப்பங்கழி 111
ஈக - முன்னிலை அசைச்சொல். 283
ஈங்கை - ஈங்கையென்னுங் கொடி 20
ஈட்டம் - கூட்டம் 19
ஈடு - பெருமை 314
ஈண்டிநின்ற - தொடர்ந்துநின்ற 223
ஈண்டிய - உறுதிபெற்ற 25
ஈண்டி வந்து - கூடிவந்து 20
ஈண்டைப் புலால் - அங்காடிப் புலால்; பலவிடங்களினின்றும் வந்து ஒருங்கீண்டிய புலால் என்பது 198
ஈந்து - ஈச்சமரம் 284
ஈப்பவும் - கொடுப்பவும் 138
ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகு அடுக்கு 20
ஈர் இருள் - மிக்க இருள் ; இஃது எழுவகை நரகங்களுள் இருளிருள் நரகமென்னும் ஒருவகை நரகம் 31
ஈர் இழுது - இறுகியொழுகுநெய் 30
ஈர்கி - உறைந்து 283
ஈர்ங் குவள்ளை - ஈர்ங் குவளை ; குளிர்ச்சிபொருந்திய குவளை 186
ஈர்ப்பன - பிய்த்திழுப்பன 20
ஈரவும் - அரியவும் 146
ஈவன் - தலைகொடுத்தான் 80
ஈழம் - ஓர் தேசம். 238
ஈனும் - தரும் 17
உகுநை-இது நெற்பயிருக்குவரும் ஒருவகைப் பிணியின் பெயர் 151
உகும் - கெடும் 118
உகைவதூஉம் - எழும்புவதும் 164
உச்சேதம் - நாசம் 273
உஞற்றலின் - முயன்று செய்தலின் 124
உடக்கும் - உடங்கும்; ஒருங்கும் 280

ஒலியிற்றால்-வெளுத்தலுடையது 100
ஒழி - விடு 65
ஒழிவற - முழுதும் 50
ஒழிவின்மையான் - இடைவிடாமையான் 68
ஒழிவு - குறைவு ; ஒழிவின்றி - குறைவின்றி 72
ஒழுக்கம் - இங்கு நல்லொழுக்கம் 36
ஒழுக்கு - ஒழுக்கம் 236
ஒறறுரை - இசைவான பேச்சு 257
ஒற்றைப் பெண் உரையாடுதல் - தனியான பெண்ணொருத்தியுடன் காமக் குறிப்பெழ உரையாடுதல் 227
ஒறுக்கவும் - தண்டிக்கவும் 33
ஒனற - ஒருமிக்க 57
ஒன்றி - இணங்கி 220
ஒன்றுதலால் - சேர்தலால் 76
ஒன்றும்-பொருந்தும்,34; சிறிதும் 54
ஒன்றுவியேன 350
ஓக்கம் - உயரம், 57; உயர்வு 267
ஓங்கி - மிகுந்து 18
ஓசனை - நாறகாதத்தளவு ; ஏறக்குறைய பதநுக்கல் 31, 167
ஓட்டு - ஓட்டம் 324
ஓட்டும் - ஓடுதலும் 284
ஓதகி - ஓநதி 322
ஓத்திடம் - வேதம் ஓதுமிடம் 336
ஓத்துடையாய்க்கு - ஓதலுடையாய்க்கு 166
ஓதநுரை - நூலுரை 87, 324
ஓதலில் - நீங்குதலில்லாத 188
ஓதி - மயிர் 233
ஓதிஞானி- அவதிக்ஞானமுடைய முனி 26
ஓதிநாணம் - முக்காலங்களிலும் தொலைவிலும் நடக்கும் நிகழ்ச்சிகளையறியும் அறிவு ; இதனை 'அவதி ஞானம்' என்ப. ஐவகை ஞானங்களில் ஒன்று ; மதி, ச்ருதி, அவதி, மனபர்யய, கேவலம் என ஞானம் ஐவகை 33
ஓதிநூர்க்கும்-ஓதிப்பயின்றூர்க்கும் 80
ஓபாதி - ஒப்ப ; ஒருதன்மையாக 137
ஓம்படுத்து - இணங்கச்செய்து 335
ஓம்பி - அருள்செய்து 129
ஓம்பினை - பாதுகாத்தனையாய் 27
ஓர ஏற்றால் - ஒரே வெட்டால் 186
ஓர் கிழமை ஒருதலையுரிமை; ஓரம 79
ஓர்த்தல் - நினைத்தல் 4
ஓர்தல் - அறிதல் ; இங்கு ஞானம் 36
ஓர்ப்பவன் - ஆராய்ந்துணர்பவன் 310
ஓர்ப்பித்து, 97 ; கட்டி யென்னும் பொருட்டு
ஓர்ப்பியாதும் - ஆராயாதும் 280
ஓர்ப்பினை - ஞானமுடைமையை 54
ஓர்ப்பு - நயம் 102
ஓரலன் - கருதிலனா 79
ஓராதான் - எண்ணிப்பாராதான் 65
ஓரார் - நினையார் 34
ஓரி - நரி 20
ஓரும் மதிப்பிடும், 31; பரிணமிக்கும் 301
ஓருமில்லாள் - ஒருத்தருமில்லாள் 91
ஓல 267
ஓலகுளவி 267
ஓவல் - அழிவில்லாத 121
ஓவினை - கெடுதற்கேதுவான தீவினை 34
ஓவு - அழிவு 25
ஓவியரும் மடவன்னிலை யாளிகர் 138
கச்சாரம் - கப்பலுக்கு நடுநகல் 102
கட்டம் - துன்பம் 142
கடம் - மலைச்சார்பு 335
கடக்கிரியை 3
கடி - மிக்க 98
கடிகிற்றிலர் - நீக்கிறால்லர் 138
கடிகைநு - பிச்சைப் பாத்திரம் 356
கடிதாக - விரைவாக 86
கடிதும் - கண்டிப்போம் 22
கடியும் - வெல்லும் 103
கடியனை - நீக்குவனை 195
கடுக்க - கடுமையாக 228
கடுக - விரைவாக 97
கடுத்த - விரைந்தடுத்த 5
கடுநகையை - கொடிய குற்றம் 195
கண்டிகை - மீன் பிடிக்குங் காலத்து அடிக்கும் பறை 197

4. ஸ்யாதவக்தவ்யம்
5. ஸ்யாதஸ்தி அவக்தவ்யம்
6. ஸ்யாந்நாஸ்தியவக்தவ்யம்
7. ஸ்யாதஸ்தி நாஸ்தியவக்தவ்யம்.

These seven modes of predication are possible with reference to a single object of reality from diffirent aspects : from the point of its own substance, place, time and from the point of alien substance place, time etc. It is not possible to combine both these aspects in a single statement and hence "அவக்தவ்யம்" அஸ்தி, நாஸ்தி அவக்தவ்யம்-are primary Bangas. The others are derivative ones.

பங்கு - முடவன் - ஆத்மனுக்கு உவமை - நிஷ்கிரியனாதலில். குருடன் பிரகிருதிக்கு உவமை - அசேதனமாதலில். இவ்விரண்டும் கூடி மனுஷ்யனும் 306

பஞ்ச அணுக்கள் - ஆஜீவகரால் கொள்ளப்பட்ட 5 அணுக்கள் மூர்த்த திரவியங்களாம் 277

பஞ்சபரிவர்த்தனை - ஸம்ஸாரத்தில் உண்டாகும் வேறுபாடுகள் 1

பஞ்சஸ்கந்தம்-ரூபஸ்கந்தம், வேதனாஸ்கந்தம், விக்ஞானஸ்கந்தம், ஸம்ஜ்ஞா ஸ்கந்தம், ஸம்ஸ்கார ஸ்கந்தம் என. பௌத்த தரிசனத்தில் இவ்வைந்தும் மூலப் பொருளாம் 62

பஞ்சாங்கம் (கொலையின்) - 541-ம் செய்யுளின் உரையிற் காண்க 4

பஞ்சாநுத்தரம் 31

பட்டாங்கு - உண்மை ; 'நிகழ்ந்த படி' என்பது பொருள் 225

படம் - போர்வை 201

படலம் - மேகபடலம் 316

படிறு - வஞ்சனை 98

படிமையது - உருவுடையது 98

படிவம் - தவக்கோலம் 118

படிவம் நிற்றல் 118

படுத்துண்ணும் - 'கெடுக்கின்ற' என்னும் பொருட்டு 261

படுமுடை - இயல்பாக இறந்த சிற்றுயிர்களின் முடை நாற்ற முள்ள ஊன் 129

பண்டி - வயிறு ; இங்கு உணவை உணர்த்திற்று 102

பண்ணிகாரம் - தின்பண்டம் 121

பதங்கப் புகை - தசாங்கப் புகை 98

பதக - பாவியே, 228 ; 303

பதநம் - இருகு உண்கலம் 126

பதினமே விருதவம் - பன்னிரு தவம் :—பாஹ்யதபஸ் 6 : அநசனம், அவமோதர்யம், விருத்தி பரிசங்கியானம், ரஸபரித்தியாகம், விவிக்த சய்யாசனம், காயக்லேசம். அப்யந்தர தபஸ் 6 : ப்ராயச்சித்தம், விநயம், வையாவ்ருத்யம், ஸ்வாத்தியாயம், வ்யுத்ஸர்க்கம், தியானம் என. Vide - Appendix A for fur- ther details. 21

பப்பியர் - பவ்வியர் 29

பப்பியா - மோக்ஷத்துக்குத் தகுதி பெறக்கூடிய ஆன்மாக்கள் ; பவ்வியர் 29

பயத்தது - பயனுள்ளது 164

பயநி - பிரகிருதி 289

பயந்தவன் - கொடுத்தவன் 196

பயம் - பயன், 107 ; பிரமாணம் 138

பாக்கும் - மிகும் 255

பாசமையர் - பாசமயர் 274

பாராசரன் - சாங்கியவாதிகளின் தலைவன் 297

பரிக்கிரகம் - தனக்கென்று சேர்த்து வைக்கப்பட்டவை : க்ஷேத்ரம், வீடு, பொன், வெள்ளி, தனம், தான்யம், தாஸி, தாஸர் முதலியவை. இவைகளின்மேல் உண்டாகும் பற்று கர்மபந்தமாம். ஆதலின் இவற்றைக் கூடிய அளவு சுருக்குதல். பஞ்சாணுவிரதங்களில்